**(இ-ள்.)** எந்தப் பிரஹ்மம் தனது ஸ்மரண மாத்திரத்தால் இவ்வதிகாரிகளின் சர்வ அசுபங்களை நிவிருத்தி செய்வதும், சர்வ சுபங்களை விஸ்தாரஞ் செய்வது மாகின்றதோ, அந்தப் பிரஹ்மத்தை வேதமுணர்ந்தவர்கள் மங்கல ரூபமாக அறிகின்றார்கள்.

## இன்னுமொரு ஸ்மிருதி.

4\. 𑌹𑌰𑌿𑌰𑍍𑌹𑌰𑌤𑌿 𑌪𑌾𑌪𑌾𑌨𑌿 𑌦𑍁𑌷𑍍𑌟𑌚𑌿𑌤𑍍𑌤𑍈𑌰𑌪𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃।
𑌅𑌨𑌿𑌚𑍍𑌛𑌯𑌾𑌪𑌿 𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑍋 𑌦𑌹𑌤𑍍𑌯𑍇𑌵 𑌹𑌿 𑌪𑌾𑌵𑌕𑌃॥

**(இ-ள்.)** இச்சை யின்றி ஸ்பரிசிக்கப்படினும் அக்கினி வெம்மையே செய்வதுபோல, துஷ்டசித்தமுடையவர்களும் ஸ்மரணஞ்செய்ய ஹரியானவர் அவர்களது பாவங்களை நாசமே செய்கின்றார்.

இவை முதலிய ஸ்மிருதி வசனங்கள் அப்பரமாத்மாவின் ஸ்மரண ரூபமான தத்துவாநுசந்தானத்தினிடத்து மங்கலமே கூறியுள்ளன. ஆகலின் பிரஹ்மாஹம் என்னும் தத்துவாநுசந்தானத்தில் மங்கலத்தன்மை சம்பவிக்கின்றது.

**சங்கை:**—'பிரஹ்மாஹம்' என்னும் வசனத்தாற் கூறப்பட்டுள்ள பிரஹ்ம ஆத்மாக்களின் ஏகத்வம் சம்பவியாது. ஏனெனின் ப்ரஹ்மம் ஜீவாத்மாவாகிய விரண்டும் ஒன்றற்கொன்று விரோதமான தருமங்களாற் பொருந்தியுள்ளன. எப்பதார்த்தங்கள் பரஸ்பர விருத்த தருமங்கள் உடையனவோ, அப்பதார்த்தங்கட்கு ஏகத்வம் உண்டாகா. எங்ஙனம் உஷ்ண ஸ்பரிசமுடைய அக்கினிக்கும், சீதஸ்பரிசமுடைய பனிக்கட்டிக்கும் ஏகத்வம் உண்டாகாதோ, அங்ஙனம் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் ஏகத்வம் சம்பவியாது.

𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌤𑍍. என்பது முதலிய சுருதி ஸ்மிருதி வசனங்களால அந்தப் பிரஹ்மம் ஜகத்தின்கற்பனைக்கு அதிஷ்டான வடிவமாயும், சருவஜ்ஞவடிவமாயும் அறியப்படுகின்றது.

𑌅𑌨𑍀𑌶𑌯𑌾 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌮𑍁𑌹𑍍𑌯𑌮𑌾𑌨𑌃. (ஸ்வதந்திரமா யிராததனால் மயக்கங் கொண்டு வருந்துகின்றான்) இது முதலிய சுருதி ஸ்மிருதி வசனங்களால் ஜீவாத்மா அந்தப்பிரஹ்மத்தினும் விபரீதமான அற்பஜ்ஞத்வ முதலிய தருமமுடையதாக அறியப்படுகின்றது. அன்றியும் 'யான் பிரஹ்மமன்று' என்னும் பிரத்தியக்ஷ அனுபவம் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வனுபவமும் ஜீவப்பிரஹ்மத்தின் பேதத்தினையே சித்தஞ் செய்கின்றது. ஆகலின் 'பிரஹ்மாஹம்' என்னும் வசனத்தாற்சொல்லப்பட்ட ஜீவப்பிரஹ்மத்தின் ஏகத்வம் சம்பவியாது என்று வாதி ஆசங்கிக்க யாம் கூறுதும்:—

**சமாதானம்:**—𑌮𑌯𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌂. 𑌇𑌤𑌿. யானாகிய அந்தக்கரண உபலக்ஷிதமான சாக்ஷி ஆத்மாவில் மலை ஆறு முதல் பிரம்மாண்ட பரியந்தம் வேறுபாடுள்ள எல்லா வுலகமும் கற்பிதமெனப்படும் அத்தியஸ்தமாம். ஈண்டு இது தாற்பரியம். அஹம் சப்த வாச்சியார்த்தனான ஜீவனுக்கு, ப்ரஹ்ம சப்த

வாச்சியார்த்தத்தோடு விலக்ஷணத் தன்மை உளதாயினும், அவ் வஹம் சப்த லக்ஷியார்த்தமான அந்தக்கரண முதலியவைகளின் சாக்ஷி பிரத்தியக் ஆத்மா யாதோ, அந்தப் பிரத்தியக் ஆத்மாவிற்கு மாயா உபலக்ஷிதமான பிரஹ்மத்தோடு நாம மாத்திரமே பேதம்; வாஸ்தவத்தில் அவ்விருலக்ஷியார்த்தங்கட்கும் அபேதமே. ஆகலின் பிரஹ்மத்தினிடத்து எங்ஙனம் ஜகத் கற்பனையின் அதிஷ்டானத்தன்மை உளதோ,அங்ஙனம் பிரத்தியக் ஆத்மாவினிடத்தும் ஜகத் கற்பனையின் அதிஷ்டானத்தன்மை உளது. முற்கூற்று விரோதமில்லை யாதலால் அவ்விருலக்ஷியார்த்தங்கட்கும் ஏகத்வம் சம்பவிக்கும. இவ்வார்த்தை சுருதியிலுங் கூறப்பட்டிருக்கின்றது.

**சுருதி**:—𑌮𑌯𑍍𑌯𑍇𑌵 𑌸𑌕𑌲𑌂 𑌜𑌾𑌤𑌂 𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 । 𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌲𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌯𑌮𑌸𑍍𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ (இ-ள்.) இச்சர்வ ஜகத்தும் யானாகிய பிரத்தியக்ஆத்மாவினிடத்தே உண்டாகின்றதும், என்னிடத்தே இச்சர்வஜகத்திருப்பதும் என்னிடத்தே இச்சர்வ ஜகத்தும் லயபாவத்தை அடைவதுமாகின்றது. ஆகலின் ப்ரஹ்மத்தைப்போன்று சர்வ ஜகத் கற்பனைக்கும் அதிஷ்டானமாவதால் பிரத்யக் ஆத்மாவாகிய யான் அத்விதிய ப்ரஹ்மமாகவே இருக்கின்றேன். இச்சுருதி அந்தக்கரண உபலக்ஷிதமான பிரத்யக் சாக்ஷி ஆத்மாவில் சர்வஜகத்தின் கற்பனையைக்காட்டி, அந்தப் பிரத்யக் ஆத்மாவிற்குப் பிரஹ்மத்தோடு அபேதத்தையே உணர்த்துகின்றது.ஆகலின் 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌹𑌮𑍍 (யான் பிரஹ்மம்) என்னும் வசனத்தால் நூலாசிரியர் எந்த ஜீவாத்மபிரஹ்மத்தின் அபேதத்தைக்கூறியுள்ளாரோ, அது சர்வப்பிரகாரத்தானும் அவிருத்தம்.

அன்றியும், 𑌮𑌯𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌮𑍍. (என்னிடத்தில் இவ்வெல்லா வுலகும் கற்பிதம்) என்னும் வசனத்தால் நூலாசிரியர் பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மையுங் குறிப்பித்தார். அந்தப் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மை அநேக சுருதிகளாற் பெறப்படுவதுடன் அனுமானப்பிரமாணத்தானும் சித்தமாம். அவ்வனுமானத்தின் ஆகாரம் இதுவாம்.

𑌵𑍍𑌯𑌾𑌵𑌹𑌾𑌰𑌿𑌕𑌃 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌂 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾, 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑌜𑌤𑌵𑌤𑍍. இவ்வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தியா யோக்யம், திருசியமாவதால், எப்பதார்த்தம் திருசியமாமோ அப்பதார்த்தம் மித்தையே, கிளிஞ்சலில் காணப்படும் வெள்ளி திருசியமாவதால் மித்தையேயாவதுபோலும். அன்றியும் பேதவாதி முன்'யான்பிரஹ்மமன்று' என்னும் எந்த ஜீவப்பிரஹ்மபேதக் கிராஹ்யத்தைப் பிரத்தியக்ஷமென்று' கூறினனே, அவ்வாதியைக்கேட்கவேண்டியதாவது, நும துபிரத்தியக்ஷம் அந்தக்கரணாதி விசிஷ்ட ஆத்மாவில் பிரஹ்மத்தின் பேதத்தைக் கிரகிக்கின்றதா ? அல்லது சுத்த ஆத்மாவில் பிரஹ்மத்தின் பேதத்தைக் கிரகிக்கின்றதா? அவ்வாதி முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் அது எமக்கும் இஷ்டம்,அதாவது அவ்விசிஷ்ட ஆத்மாவிற்கு பிரஹ்மத்தோடு அபேதம் யாமும் அங்கீகரிப்பதில்லை. அவ்வாதி இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுசம்பவியாது. ஏனெனின் சுத்தஆத்மா அதீந்திரியம்,அஃதாவது இந்திரியஜன்னிய

ஞானத்திற்கு விஷயமன்று. அங்ஙனமாய சுத்த ஆத்மாவைக் கிரகித்தற்பொருட்டு சக்ஷு முதலிய இந்திரியங்களின் பிரவிருத்தி ஓர்போதும் உண்டாகாது. பேதத்தின் தர்மியான சுத்த ஆத்மா இந்திரியங்களாற் கிரகணமில்லாதபோது, அந்தச் சுத்தஆத்மாவை ஆசிரயித்துள்ள ப்ரஹ்மத்தின்பேதம்இந்திரியங்களால் யாங்ஙன் கிரகணமாகும்?கிரகித்தில் கூடாது. தர்மியினதும்பிரதியோகியினதும் ஞானம் இல்லாமல் பேதத்தின்ஞானம் உண்டாகாது;தர்மிப்பிரதியோகிகளின் ஞானம் உண்டாகியேபேதத்தின்ஞானம் உண்டாகின்றது. எங்ஙனம் 'கடம்படமன்று'என்னும் பிரதீதியா(தோற்றத்தா)ல் கடத்திற் பிரதீதியான படத்தினது பேதத்திற்கு அக்கடமேதர்மியாம்,அப்படம் பிரதியோகியாம். அக்கடமாகிய தர்மியினதும், படமாகிய பிரதியோகியினதும் ஞானம் உண்டாகியே அக்கடத்தில் படத்தினது பேதத்தின்ஞான முண்டாகின்றதோ,அங்ஙனமே நீவிர் சுத்தஆத்மாவில் அங்கிகரித்துள்ள பிரஹ்மத்தின் பேதத்திற்கும்,அச்சுத்த ஆத்மாவே தர்மியாதல் வேண்டும். அந்தப் பிரஹ்மம், பிரதியோகியாதல் வேண்டும். அத்தர்மிப் பிரதியோகிகளின் ஞானமில்லாமல் அந்தப் பேதத்தின் ஞானமுண்டாகாது. அந்தப்பேதத்திற்கு அச்சுத்த ஆத்மரூப தர்மியும், பிரஹ்மரூப பிரதியோகியுமாகிய விரண்டும் அதீந்திரியங்கள்.அத்தர்மிப்பிரதியோகிகளின் பிரத்தியக்ஷமின்றி அப்பேதத்தின் பிரத்தியக்ஷம் யாங்ஙனமுண்டாகும்? உண்டாகாது. ஆகலின் ஜீவப்பிரஹ்ம பேதத்தை கிரகிப்பது பிரத்தியக்ஷப்பிரமாணமாமென்னும் வாதியின் கூற்று கேவலம் மனோரதமாத்திரமாம். அன்றியும், விசாரத்தாற்காணினே எந்தப் பேதத்திற்கும் யாண்டும் ஸ்திதி சம்பவியாது. ஏனெனின், எவ்வாதி அப்பேதத்தை அங்கிகரித்தனனோ, அவ்வாதியைக்கேட்கவேண்டியதிஃதேயாம். அப்பேதம் அபின்ன தர்மியில் இருக்கின்றதா? அல்லது பின்னதர்மியில் இருக்கின்றதா? ஈண்டுப் பேதரகிதம் அபின்னமுமம், பேதமுடையது பின்னமு மாம். அவ்வாதி முதற்பக்ஷத்தை அங்கிகரிக்கின் வியாகாத தோஷம்பிராப்தமாவது ஒன்று. ஏனெனின் பரஸ்பர விருத்த தருமங்கள் ஓர் அதிகரணத்தில் சமுச்சயமாத (கூடுத)லே வியாகாத மெனப்படும். ஈண்டுப் பிரசங்கத்தில் (தொடர்பாட்டில்) பேதரகிதத்தன்மை பேதமுமாமிரண்டும் பரஸ்பரம் விருத்த தருமங்கள்; அஃதாவது, யாண்டு பேதமிருக்கின்றதோ, ஆண்டு பேதரகிதத்தன்மை இராது. யாண்டு பேதரகிதத்தன்மை யுண்டோ, ஆண்டு பேதமிராது. ஒரே அதிகரணத்தில் ஒன்றற்கொன்று விரோதமான தருமங்களின் சமுச்சயம் (கலப்பு) ஒப்புவதில் அந்த வியாகாததோஷம் தெளிவாகக் காணப்படுகின்றது. பேதரகித தர்மியில் பேதத்தைக் கவருவதாகிய பிரத்தியக்ஷ ஞானத்தில் பிரம(மயக்க)த்தன்மை பிராப்தமாவது மற்றொன்று.ஆதலின் அபின்ன தர்மியில் பேதத்தின் இருப்பு சமபவியாது. அவ்விரு தோஷங்களை நீக்கும்பொருட்டு அவ்வாதி அந்தப்பேதம் பின்னதர்மியில் இருக்கின்றதென்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கிகரிக்கின் அவ்வாதியைக்கேட்டல் இதுவாம்.

அப்பேதம் தன்னாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியில் தான் (அப்பேதம்) இருக்கின்றதா ? அல்லது, பிறிதோர்பேதத்தாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மி

யில் அப்பேதமிருக்கின்றதா? அவ்வாதி முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் ஆத்மாசிரயதோஷம் பிராப்தமாகும். தனது உற்பத்தியில் தனது அபேக்ஷை, அல்லது தனது ஸ்திதியில் தனது அபேக்ஷை, அல்லது தனது ஞானத்தில் தனது அபேக்ஷை ஆத்மாசிரியமாம். ஈண்டுப் பிரசங்கத்தில் அந்தப்பேத விசிஷ்ட தர்மியின்கண் அந்தப்பேதத்தின் ஸ்திதியை யொப்புவதில், தனது ஸ்திதியில் தனது அபேக்ஷையாகிய ஆத்மாசிரயதோஷம் தெளிவாகவே காணப்படுகின்றது. ஆதலின் அப்பேத விசிஷ்டதர்மியின்கண் அப்பேதம் இருத்தல் சம்பவியாது. அவ்வாத்மாசிரயதோஷத்தை நிவிருத்திசெய்யும் பொருட்டு அவ்வாதி பிறிதோர் பேதத்தாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியின்கண் அப்பேத மிருக்கிறதென்னும் இரண்டாம் பக்ஷத்தை அங்கீகரிக்கின், அவ்வாதியை இது கேட்டல் வேண்டும். அவ்விரண்டாம் பேதமும் அபின்னதர்மியில் இருக்கின்றதா? அல்லது பின்னதர்மியில் இருக்கின்றதா? அவ்வாதி முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் முன்போன்று மீண்டும் வியாகாததோஷம் பிராப்தமாகும்; அவ்வியாகாத தோஷத்தை நிவிருத்திசெய்வதற்காக அவ்வாதி இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அவ்வாதியைக்கேட்டல் இதுவாம். அவ்விரண்டாவது பேதமும் தன்னாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியின்கண் தான் இருக்கின்றதா? அல்லது அம்முதற்பேதத்தாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியின்கண் அவ்விரண்டாம்பேத மிருக்கின்றதா? அல்லது ஓர் மூன்றும் பேதத்தாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியின்கண் அவ்விரண்டாம்பேத மிருக்கின்றதா? ஆண்டு முதற்பக்ஷத்திலோ முன்போன்று மீண்டும் ஆத்மாசிரயதோஷம் பிராப்தமாகும். இரண்டாம் பக்ஷத்தில்அன்யோன்யாசிரயதோஷம்பிராப்தமாகும். இரண்டு பதார்த்தங்கட்குத் தமது உற்பத்தியில் அல்லது தமது ஸ்திதியில் அல்லது தமது ஞானத்திலுள்ள பரஸ்பர அபேக்ஷைக்குப்பெயர் அன்யோன்யாசிரயம். ஈண்டுப் பிரசங்கத்தில் முதற் பேதத்திற்குத் தனது ஸ்திதியின்பொருட்டு இரண்டாவது பேதத்தின் அபேக்ஷையுண்டாகின்றது. அவ்விரண்டாம் பேதத்திற்குத் தனது ஸ்திதியின்பொருட்டு முதற்பேதத்தின் அபேக்ஷை யுண்டாகின்றது; ஆகலின் முதற்பேத விசிஷ்ட தர்மியில் அவ்விரண்டாவது பேதத்தின் ஸ்திதியை யொப்புவதில் அவ்வன்யோன்யாசிரயதோஷம் ஸ்பஷ்டமாகவே பிரதீதி யாகின்றது. அன்றியும் அவ்வன்யோன்யாசிரயதோஷத்தை நிவிருத்திசெய்யும் பொருட்டு அவ்வாதி மூன்றுவது பக்ஷத்தை யங்கீகரிக்கின், அதாவது ஓர் மூன்றுவது பேதத்தாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியில் அவ்விரண்டாவதுபேதம் இருக்கின்றதென்னும் மூன்றுவது பக்ஷத்தை அவ்வாதி அங்கீகரிக்கின், அவரை இது கேட்டல்வேண்டும். அம்மூன்றும்பேதமும் அபின்னதர்மியில் இருக்கின்றதா? அல்லது பின்னதர்மியில் இருக்கின்றதா? முதற்பக்ஷத்திலோ முன்போன்று மீண்டும் வியாகாததோஷம் பிராப்தமாகும். அத்தோஷ நிவிருத்தியின் பொருட்டு அவ்வாதி இரண்டாவது பின்னபக்ஷத்தை அங்கீகரிப்பனாயின் அவ்வாதியைக்கேட்டல் இதுவாம். அம்மூன்றுவது பேதமும் தன்னாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியில் தான் இருக்கின்றதா? அல்லது அவ்விரண்டாவது பேதத்தாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியில் அம்மூன்றும்பேதமிருக்கின்றதா? அல்லது அம்முதற்பேதத்தாற் பின்னஞ்செய்யப்

ட்ட தர்மியில் அம்மூன்ருவது பேதமிருக்கின்றதா? அல்லது ஓர் நான்காவது பேதத்தாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியில் அம் மூன்ருவதுபேத மிருக்கின்றதா? முதற்பக்ஷத்திலோ முன்போன்று மீண்டும் ஆத்மாசிரயதோஷம் பிராப்தமாகும். இரண்டாவது பக்ஷத்திலும் முன்போன்றுமீண்டும் அன்யோன்யாசிரயதோஷம் பிராப்தமாகும். மூன்ருவது பக்ஷத்தில் சக்கிரிகாதோஷம் பிராப்தமாகும். ஏனெனின் முதலாவதை அபேக்ஷித்த இரண்டாவதும், அவ்விரண்டாவதை அபேக்ஷித்த மூன்ருவதும், அம்மூன்ருவது முதலியவைகட்கு மீண்டும் அம்முதலாவதை அபேக்ஷித்தல் சக்கிரிகை எனப்படும். ஈண்டுப்பிரசங்கத்தில் அம்முதற்பேதத்திற்குத் தனது ஸ்திதியில் இரண்டாவதுபேதத்தின் அபேக்ஷையும், அவ்விரண்டாவது பேதத்திற்குத் தனது ஸ்திதியில் மூன்ருவது பேதத்தின் அபேக்ஷையும், அம்மூன்ருவது பேதத்திற்குத் தனது ஸ்திதியில் மீண்டும் அம்முதலாவது பேதத்தின் அபேக்ஷையுமாம். இவ்வாறே நான்காவது ஐந்தாவது முதலியவைகளிலும் மீண்டும் முதலாவது அபேக்ஷயாற் சக்கிரிகாதோஷப் பிராப்தியை யறிக. அச்சக்கிரிகாதோஷ நிவிருத்தியின் பொருட்டு அவ்வாதி நான்காவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதாவது அம் மூன்ருவதுபேதம் ஓர் நான்காவது பேதத்தாற் பின்னஞ்செய்யப்பட்ட தர்மியில் இருக்கின்றதென்னும் நான்காவதுபக்ஷம் அங்கீகரிக்கின் அனவஸ்தாதோஷம் பிராப்தமாகும். ஏனெனின் அந்நான்காவது பேதமும் முற்கூறிய வியாகாத, ஆத்மாசிரய, அன்யோன்யாசிரய, சக்கிரிகை முதலிய தோஷங்களினது பிராப்தியின் பயத்தால் அபின்ன தர்மியிலாவது, ஸ்வவிசிஷ்டதர்மியிலாவது, மூன்ருவது பேதவிசிஷ்டதர்மியிலாவது, முதலாவது பேதவிசிஷ்டதர்மியிலாவது இராது; ஆனுல் ஓர் ஐந்தாவது பேத விசிஷ்ட தர்மியினிடத்தே இருப்பதாகும். அவ்வைந்தாவது பேதமும், பின்னுெரு ஆருவது பேதவிசிஷ்டதர்மியினிடத்தே இருப்பதாகும். இவ்வாறு பின்பின் பேதங்களின் தாரையை (தொடர்ச்சி) யொப்புவதில் அனவஸ்தாதோஷம்(வரம்பின்மை) பிராப்த மாகும். முடிவில்லாமல் முன்முன் உள்ளவைகட்குப் பின்பின் உள்ளவைகளின் அபேக்ஷ அனவஸ்தை எனப்படும். வியாகாதம், ஆத்மாசிரயம், அன்யோன்யாசிரயம், சக்கிரிகை, அனவஸ்தை என்னும் தோஷங்களின் சமஸ்கிருத லக்ஷணம் நியாயப்பிரகாசத்தின் ஆருவது பரிச்சேதத்தின் தர்க்கநிருபணத்தில் யாம் விஸ்தாரமாய்க் கூறி யிருக்கின்ருேம். அவைகளே அறிய வேட்கையுள்ளார் ஆங்கு அறிக. இவ்வாற்ருன் ஜீவப்பிரமங்களின் பேதம் சம்பவியாது. ஆகவே 'பிரஹ்மாஹம்' என்னும் வசனத்தால் அத்தத்துவாநுசந்தானமாகிய மங்கலம் சம்பவிக்கும்.

**சங்கை:**—'பிரஹ்மாஹம்' என்னும் தத்துவாநுசந்தான வடிவமான மங்கலத்தானே கிரந்தம் முட்டின்றி முடிவாகின்றது. நூலாசிரியர் 𑌶𑍍𑌰𑍀𑌗𑍁𑌰𑍁𑌂 𑌪𑍍𑌰𑌣𑍌𑌮𑌿 (குருவை நமஸ்கரிக்கின்றேன்) என்னும் வசனத்தால் மீண்டும் குருவின் நமஸ்காரம் செய்தல் எற்றிற்கு?

**சமாதானம்:**—புருஷனுக்கு அத் தத்துவாநுசந்தானம் பிரஹ்மவேத்தா குருவின் பக்தியில்லாமல் பிராப்தமாகாது; குருவின் பக்தியிற்ருன் அத்தத்து

வாநு சந்தானம் பிராப்தமாகின்றது. இவ்வார்த்தை சுருதியிலும் கூறப்பட்டிருக்கின்றது.

### சுருதி.

𑌯𑌸𑍍𑌯𑌦𑍇𑌵𑍇𑌪𑌰𑌾𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌯𑌥𑌾𑌦𑍇𑌵𑍇𑌤𑌥𑌾𑌗𑍁𑌰𑍌 ।
𑌤𑌸𑍍𑌯𑍈𑌤𑍇𑌕𑌥𑌿𑌤𑌾𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑍍𑌤𑍇𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃॥

**(இ-ள்.)** எவ்வதிகாரிக்குப் பரமாத்ம தேவனிடத்துப் பரமபக்தியும் அப்பரமாத்ம தேவனிடத்துப் பரமபக்தி யுண்டாகின்றதுபோல பிரஹ்மவேத்தா குருவினிடத்துப் பரமபக்தியும் எப்போதுண்டாகின்றதோ, அப்போது மஹாத்மாவான அவ்வதிகாரிக்கு இவ்வேதாந்தத்திற் பிரதி பாதித்துள்ள ஜீவப் பிரஹ்மத்தின் ஏகத்துவ முதலிய அர்த்தங்கள் புத்தியிற்பிரகாச முடையனவாகின்றன; குருபக்தி யில்லாதவனுக்கு வேதாந்தத்திற் பிரதி பாதித்துள்ள அர்த்தங்கள் எக்காலத்திலும் பிரகாசமுடையனவாகா. இச்சுருதியானது அக்குருபக்தி அத்தத்துவாநுசந்தானத்திற்கு அந்தரங்க சாதனமாந்தன்மையைக் கூறியுளது. இக்காரணத்தானே நூலாசிரியர் அக்குருவின் நமஸ்கார வடிவான பத்தியை ஈண்டுச்செய்தனர். இது முதற் சுலோகத்தின் வியாக்கியானம்.

இனி இரண்டாவது சுலோகத்தின் பொருளை நிரூபிப்பாம். தேகம் நானன்று. சுரோத்திரம், வாக்கு, முதலிய இந்திரியங்களும் நானன்று. புத்தியும் நானன்று, அத்தியாச மூலமும் நானன்று, சத்திய ஆனந்த சிதாத்மாவாயும், மாயாசாக்ஷியாயுமுள்ள பரப்பிரஹ்மமேயான்.

## உ. இரண்டாவது சுலோகத்தின் பொருளை விரிவாக நிரூபித்தல்.

முதற் சுலோகத்தில் 'பிரஹ்மாஹம்' என்னும் வசனத்தால் அநுசந்தானஞ்செய்யப்பட்ட பிரஹ்மாத்ம தத்துவத்தினையே இவ்விரண்டாவது சுலோகத்தில் அஹம்சப்தார்த்தத்தின் விவேசன பூர்வகமாக, இஷ்டதேவதையின் வாசகமாகிய கிருஷ்ண சப்தத்தாற்கூறி மீண்டும் அநுசந்தானஞ் செய்கின்றார். தேஹோநாஹமிதி (யான் தேகமன்று) சொப்பனத்தில் இத்தூலதேகம் பிரதீதியாவதின்று; யானே அச்சொப்பனத்திலும் சாக்ஷிவடிவமாகப் பிரகாசமுடையவனா யிருக்கின்றேன். ஆகலின் யான் தூலதேகமன்று.

## ௩. தூலதேகம் ஆத்மாவன்றேன்பதிற் சங்கை சமாதானம்.

**சங்கை:—**யான் பருத்தவன், யான் இளைத்தவன், யான் மனிதன் என்னுமனுபவம் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வனுபவத்தால் இத்தூல தேகமே ஆத்மாவெனச் சித்திக்கின்றது. ஏனெனின் எல்லா சாஸ்திரக்காரரது மதத்தில் அஹம் சப்தத்திற்கு அர்த்தமும், அஹம் பிரதீதிக்கு விஷயமும் ஆத்மாவேயாம். கூறிய முறைப்படி அவ்வஹம் பிரதீதிக்கு விஷயமாந் தன்மையானது தூலத்தன்மை, மெலிவுத்தன்மை, மனிதத்தன்மை முதலிய தர்ம்ம விசிஷ்டமான தூல தேகத்தினிடத்தே பிரதீதியாகின்றது; அத்தூலதேகத்திற்கு

வேறாக எவ்வாதமாவும் காணப்படுவதின்று. அன்றியும்சொப்பனத்திலும் 'யான் பருத்தவன்' என்னும் அனுபவம் யாவருக்கு முண்டாகின்றது. ஆகலின் இத் தூல தேகமே ஆத்மாவாம்.

**சமாதானம்:**—இத்தூல சரீரத்தின் உற்பத்தியும் நாசமும் யாவருக்கும் பிரத்தியட்சமாகக் காணப்படுகின்றது. எவ்வஸ்து உற்பத்தி நாசமுடையதோ, அவ்வஸ்து அனாத்மாவேயாம். எங்ஙனம் கடமுதலிய வஸ்துக்கள் உற்பத்தி நாசமுடையதாதலால் அனாத்மாவேயாமோ,அங்ஙனமே இத்தூல சரீரமும் உற்பத்தி நாசமுடையதனால் அநாத்மாவேயாம். அல்லது இத்தூல சரீரத்தினையே ஆத்மாவாக அங்கீகரிக்கின் கிருதநாச (செய்தவற்றின் நாசம்), அகிருதாப் யாகம (செய்யாதவற்றினடைவு) மாகிய விரண்டு தோஷங்கள் பிராப்தமாகும். செய்யப்பட்ட புண்ணிய பாப கர்மங்கட்குச் சுகதுக்கமாய பயன்களின் நுகர்ச்சியன்றியே நாசமாதலைக் கிருதநாசமெனப்படும். செய்யப்படாத புண்ணிய பாப கர்மங்கட்குச் சுகதுக்கமாகிய பயன்களின் பிராபதியை அகிருதாப்பியாகம் எனப்படும். இத்தூல தேகத்தினையே ஆத்மாவென அங்கீகரிக்கின் இத் தேக மாகிய ஆத்மா நாசமாக அத்தேகத்திற்கு வேறான போக்தாவா மாத்மாவின் அபாவத்தான் அத்தேகத்தாற் செய்யப்பட்ட புண்ணிய பாபகர்மங்கட்குப் பலபோக மன்றியே நாசமுண்டாகும்; இப்போது புதிதாயுண்டானதேக மாகிய ஆத்மா முன் எப்புண்ணியபாப கருமமும் இயற்றியதன்று. அதற்கும் ஜன்மகாலந் தொடுத்தே சுகதுக்கமாகிய பலத்தின் பிராப்தியோ உண்டாகின்றது. அப்பலத்தின் பிராப்தி அப்புண்ணியபாவ கர்மமன்றியே உண்டானதாக ஒப்பவேண்டும். செய்யப்பட்ட கர்மத்திற்குப் பலபோகமன்றி நாசமும், செய்யப்படாத கர்மத்திற்குப் பலப் பிராப்தியும் ஒப்புதல் சர்வ சாஸ்திரங்கட்கும் விருத்தம். பிராயச்சித்தாதிகளானும், தத்துவஞானத்தானும், அப்புண்ணிய பாவ கர்மங்கட்குப் பலபோகமன்றியே நாசம் சாஸ்திரத்திற் கூறப்பட்டுளது எனினும், அச்சாஸ்திரத்திற்கூறிய பிராயச்சித்த முதலிய உபாயங்களன்றியும், பலபோக மன்றியும் கருமங்கள் நாசமாதலைக் கிருதநாசமெனப்படும். ஆகலின் இத்தூலதேகம் ஆத்மாவன்று.

அன்றியும் அத்தேகாத்மவாதி இத்தூலதேக ஆத்மாவில் யான் பருத்தவன், யான் இளைத்தவன் என்பது முதலிய எந்தப் பிரத்தியட்ச அனுபவத்தைக் கூறினனோ, அது லோஹித:ஸ்படிக: (படிகம் செம்மை) என்னும் அனுபவத்தைப்போன்று பிரம (மயக்க) வடிவமாம். அஃதாவது எங்ஙனம் 'படிகம் செம்மை' என்னும் அனுபவம் செம்மைத்தன்மையில்லாத வெண்மைப்படிகத்தில், அச்செம்மைத்தன்மையை விஷயஞ்செய்வதாய்ப் பிரமரூபமாமோ, அங்ஙனமே கூறிய வவ்வனுபவமும் பருமன், இளைப்பு முதலிய வடிவமில்லாத ஆத்மாவில் பருமன், இளைப்பு முதலிய வடிவங்களை விஷயஞ்செய்வதாய்ப் பிரமரூபமேயாம். ஆகலின் கூறிய அவ்வனுபவம் அத்தூலதேக ஆத்மாவைத்துணியவல்லதன்று. எக்காரணத்தானெனின், யதார்த்த அனுபவமே அர்த்தத்திற்குச் சாதகமாகின்றது. அல்லது இத்தூலதேகத்திற்கு வேறாக எவ்வாத்மாவும் காணப்படுவதின்று

என்று அத்தேகாத்மவாதி கூறிய அக்கூற்றும் அசங்கதம். * ஏனெனின் எனது தேகம் வியாதியுடையது, எனது தேகம் வியாதியுடையதன்று என்னுமனுபவம் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வனுபவத்தால் தேகத்தின் திருஷ்டாவான சாக்ஷி யாத்மா, அத்தேகத்திற்கு வேருகவே சித்திக்கின்றது. சுருதி, ஸ்மிருதி, இதிகாசம், புராணம், யுக்தி, ஆன்ருேர்களது அனுபவம் என்னும் எல்லாப் பிரமாணங்களானும் ஆத்மா இத்தூலதேகத்திற்கு வேருகவே சித்தமாகின்றது. அங்ஙனமாய அநேகப் பிரமாணங்களாற் பெறப்பட்ட ஆத்மாவின் நிஷேதம் சம்பவியாது. அன்றியும் அத்தேகாத்மவாதி சொப்பனத்திலும் 'யான் பருத்தவன்' என்னும் எவ்வனுபவத்தால் தூலதேகத்தின் சித்தியைக் கூறினனே, அதுவும் அசங்கதம். ஏனெனின் யான் பருத்தவன் என்று சொப்பனத்தில் எவ்வனுபவம் உண்டாகின்றதோ அவ்வனுபவம் ஜாக்கிரதாவஸ்தையில் யான் பருத்தவன் என்னும் அனுபவத்தாலுண்டான சம்ஸ்காரத்தாற் ருேன்றியதாகலின் அச்சொப்பனத்தின் அனுபவம் சாக்கிரத்தின் தூலதேகத்தை விஷயஞ் செய்வதன்று; அவ்வனுபவம் சொப்பனத்தின் வாசனுமயமான சரீரத்தையே விஷயஞ்செய்வதாம். ஓர்கால் அச்சொப்பனத்தின் அனுபவம் சாக்கிரத தூலதேகத்தையே விஷயஞ் செய்வதாமாயின் காசியிற்றுயின்ற புருஷன் சொப்பனத்தில் இராமராற்கட்டப்பட்ட சேதுவில் இராமநாதனை அனுபவஞ்செய்தவனுய் எப்போது ஜாக்கிரத்தை அடைகின்றனனே, அப்போது அப்புருஷன் அவ்விராமசேதுவின் கண்ணே இருத்தல் வேண்டும்; காசியின் கண்ணிருக்கப்படாது, அங்ஙனம் காண்டலின் நிகழ்ச்சியின்று. ஆகலின் சொப்பனத்தில் இத்தூல சரீரம் இன்மையே யாகின்றது. ஆனல் ஆத்மாவோ அச்சொப்பனத்திலும் அச்சொப்பன பதார்த்தங்களின் திருஷ்டாசாக்ஷி வடிவமாக அனுபவமாகின்றது. இதனல் 'யான் தூல தேகமன்று' என்று கூறிய அர்த்தம் சம்பவமாம்.

## இந்திரியம் ஆத்மா வன்றென்பதிற் சங்கை சமாதானம்.

4. **சங்கை:**—முற்கூறிய தோஷங்களால் தூலதேகத்திற்கு ஆத்மத் தன்மை உண்டாகாதாயினும் சக்ஷுமுதலிய விந்திரியங்களே ஆத்மாவாம். ஏனெனின், நான் குருடன், நான் மூகை, என்னு மனுபவம் உலகத்தில் காணப்படுகின்றது. அவ்வனுபவத்தால் குருட்டுத் தன்மை, மூகைத்தன்மை முதலிய தர்ம விசிஷ்டமான சக்ஷு முதலிய விந்திரியங்களினிடத்தே ஆத்மத் தன்மை சித்தமாம். அன்றியும் வேதத்திலும் பிராணனுக்கும் இந்திரியங்கட்கும் தத்தம் உயர்வில் ஒன்றற்கொன்று சம்வாதம் கூறப்பட்டிருக்கின்றது. அப்பரஸ்பர சம்வாதம் சேதனங்கட்கேயுண்டாகும்; ஜடபதார்த்தங்கட்கு உண்டாகாது. சேதனம் ஆத்மாவேயாம். அப்பிராண சம்வாத சுருதியினனும் சட்சுவாதி இந்திரியங்களே ஆத்மாவெனச் சித்திக்கின்றது. ஆகலின் அவ்விந்திரியமே ஆத்மாவாம்.

---

* எனது என்னும் மமதைக்கு விஷயமாவதால் - என் வீடு என் ஆடை என்பன போலும்.

**சமாதானம்:**—எங்ஙனம் தூலதேகம் ஆத்மாவன்றோ, அங்ஙனம் அச் சட்சு முதலிய விந்திரியங்களும் ஆத்மாவன்று. ஏனெனின் சட்சு விந்திரியத் தால் நான் உருவத்தைக் காண்கின்றேன், சுரோத்திரேந்திரியத்தால் நான் சப்தத்தைக் கேட்கின்றேன் என்னுமனுபவம் யாவருக்கு முண்டாகின்றது. அவ்வனுபவத்தால் அச்சட்சுவாதி யிந்திரியங்கட்குத் தரிச னுதிக்கிரியைக ளைக் குறித்துக் கரணத்தன்மையே பெறப்படுகின்றது. எப்பதார்த்தங்கள் கிரி யையைக் குறித்துக் கரணமாகின்றனவோ அப்பதார்த்தங்கள் அனுத்மாவே யாம். எங்ஙனம் வெட்டுதற்கிரியைக் குறித்துக் கரணமாவதால் கோடரி முதலியவைகள் அனுத்மாவேயாகின்றனவோ, அங்ஙனம் தர்சனுதி கிரியைக ளைக் குறித்துக்கரணமாவதால் அச்சட்சுவாதி இந்திரியங்களும் அனுத்மாவே யாகின்றன. இவ்வாற்றுன் இவ்வனுமானம் உரைப்படுகின்றது இந்த்ரியாணி அநாத்மா, கரணத்வாத், குடாரவத் (இந்திரியங்கள் ஆத்மாவன்று, கரணமாவ தால், கோடரி போலும்). வெட்டுதல் முதலிய கிரியைக்குப் புருஷன் கர்த்தா வாதல் போல அவ்விந்திரி யாத்மவாதி அவ்விந்திரியமாகிய ஆத்மாவே அத்தரி சனுதி கிரியைகட்குக் கர்த்தாவென அங்கீகரிக்கவேண்டும். அது முற்றும் விரோ தம். ஏனெனின் உலகத்தில் எப்பதார்த்தம் எக்கிரியைக்குக் கரணமாகின்ற தோ, அப்பதார்த்தம் அக்கிரியைக்குக் கர்த்தாவாவதின்று. அன்றியும் எப் பதார்த்தம் எக்கிரியைக்குக் கர்த்தாவாகின்றதோ, அப்பதார்த்தம் அக்கிரி யைக்குக் கரணமாவதின்று; ஆனல் அக்கரணமும் கர்த்தாவும் பின்ன பின்ன மே. எங்ஙனம்: வெட்டுதலாகிய கிரியைக்குக் கரணமாகிய கோடரிக்குக் கர்த் தாத்தன்மையின்றோ, அவ்வெட்டுதலாகிய கிரியைக்குக் கர்த்தாவாகிய புருஷனு க்கும் கரணத்தன்மையின்று; ஆனல் அக்கோடரியாகிய கரணமும், புருஷனு கிய கர்த்தாவும் பின்ன பின்னமே. அச்சட்சுவாதி யிந்திரியங்கட்குத் தரி சனுதிக் (காண்டல் முதலிய) கிரியையின் கரணத்தன்மையோ முற்கூறிய வனுபவத்தாற் சித்தமேயாம். ஆகலின் ஓரே சட்சுவாதி இந்திரியத்திற்கு ஓரே தரிசனுதிக்கிரியைக்குக் கரணத் தன்மையும், கர்த்தாத் தன்மையு மொப்புதல் பிரத்தியட்சப் பிரமாணத்திற்கு விருத்தம். இக்காரணத்தினுனும் அவ்விந்திரி யங்கள் ஆத்மாவன்று. அன்றியும் எவ்வாதி இந்திரியங்களையே ஆத்மாவென வொப்பினனே,அவ்வாதியின் மதத்தில் ஓரே சரீரத்தில் சட்சு சுரோத்திர முத லியனவாகிய அநேக ஆத்மாக்கள் சித்தமாகும். அச்சட்சு சுரோத்திர முதலிய சர்வ விந்திரியங்களும் ஓரே பதார்த்தத்தைக் கிரகிக்கமாட்டா; ஆனல் உருவம் சப்தமுதலிய வேறு வேறு பொருள்களையே கிரகிக்கின்றன. ஆகலின் கிழக்குத் திசையிலுள்ள உருவத்தினது தரிசனத்தின் (காட்சியின்) பொருட்டு சட்சு விந் திரியம் இச்சரீரத்தை அக்கிழக்குத் திசையின்கண் இழுக்கவேண்டும். மேற்குத் திசையின்கண்ணுள்ள சப்தத்தைக் கேட்கும்பொருட்டுச் சுரோத்திரேந்திரியம் இச்சரீரத்தை அம்மேற்குத் திசையின் கண் இழுக்கவேண்டும். இவ்வாறு பிற துவக்கு முதலிய விந்திரியங்களும், அதனதன் தெற்கு முதலிய திசைகளிலுள்ள ஸ்பரிச முதலியவைகளைக் கிரகித்தற் பொருட்டு இச்சரீரத்தை அதனதன் தெ ற்கு முதலிய திசைகளின்கண் இழுக்க வேண்டும். ஆகலின் அநேக கஜங்களால்

இழுக்கப்பட்ட கதலி விருட்சம் சீக்கிரமே நாசத்தை யடைகின்றதுபோல ஒன்றற்கொன்று விரோதமான கருத்துடைய சட்சு முதலிய விந்திரியங்க ளால் அதனதன் திசையின் கண் இழுக்கப்பட்டதாய் இச்சரீரமும் நாசத்தை யடைய வேண்டும். இக்காரணத்தானும் அவ்விந்திரியங்கள் ஆத்மாவன்று. அன்றியும் ஒரே சரீரத்தில் இந்திரியமாகிய அநேக ஆத்மாக்களை ஒப்பிடினே; முன் உருவத்தைக் கண்ட யானே இப்போது ஸ்பரிசத்தைக் கவர்கின்றேன் என்னும் அனுபவத்திற்கும் பாதமுண்டாகும். ஏனெனில் இவ்வனுபவம் உரு வத்தின் திருஷ்டா ஆத்மாவினதும், பரிசத்தின் கர்த்தா ஆத்மாவினதும் ஏகத் துவத்தையே விஷயஞ்செய்கின்றது. நுமதுமதத்தில் அச்சக்ஷு விந்திரியமான ஆத்மாவுந் துவக்கிந்திரியமான ஆத்மாவும் ஒன்றன்றாகலின் உமது மதத்திற் கூறிய அவ்வனுபவத்திற்கு மித்தியாத் தன்மையாகிய பாதமுண்டாகும்.

அன்றியும் அவ்விந்திரியாத்மவாதி இந்திரியங்களின் சேதனத் தன்மையில் எந்தப்பிராண சம்வாதத்தைப் பிரமாணமாய்க் கூறினனே, அச்சம்வாதமோ அவ்விந்திரியங்களின் அபிமான தேவதைகளை விஷயஞ் செய்வதாம்; இந்திரி யங்களை விஷயஞ்செய்வதன்று. ஆகலின் அச்சம்வாதத்தானும் இந்திரியங்கட்கு ஆத்மத்தன்மை சித்தியாது. தூலதேகத்தைப்போன்று சக்ஷுமுதலிய விந்திரி யங்கட்கும் உற்பத்தி நாசங்களு முண்டாகின்றன. அங்ஙனமாய உற்பத்தி நாசமுடைய இந்திரியங்களை ஆத்மாவென ஒப்பிடின் முற்கூறிய தூலதேகத் தைப்போன்று ஈண்டும் கிருதநாச அகிருதாப்யாகம மென்னுமிருதோஷங்கள் அடையப்படும். இக்காரணத்தினானும் இந்திரியங்கள் ஆத்மாவன்று. நான் குரு டன் நான் மூகை என்னும் அனுபவமோ படிகம் செம்மை என்னும் அனுபவத் தினைப்போன்று பிரமவடிவமாம். ஆகலின் அவ்வனுபவத்தானும் அவ்விந்திரியங் கட்கு ஆத்மத்தன்மை சித்தமாகாது. 'என்கண்மந்த திருஷ்டியுடையது' என் பது முதலிய அனுபவத்தால் அச்சக்ஷு முதலிய விந்திரியங்களின் திருஷ்டாவா கியவாத்மா அச்சக்ஷு முதலிய விந்திரியங்களினும் பின்னமாகவே கானப்படு கின்றது. சுருதி, ஸ்மிருதி, இதிகாசம், புராணம் என்பது முதலியவைகளாலும் ஆத்மா அவ்விந்திரியங்களினும் வேறாகவே கூறப்படுகின்றது. ஆகலின் அச் சக்ஷுமுதலிய விந்திரியங்கள் ஆத்மாவன்று.

### 5. பிராணன் ஆத்மாவன் றேன்பதிற் சங்கை சமாதானம்.

**சங்கை:**—கூறிய தோஷங்களால் இந்திரியங்கட்கு ஆத்மத்தன்மை உண் டாகாதாகுக; எனினும், பிராணனே ஆத்மாவாம். ஏனெனில், பசிதாகமுடை யேன் யான், என்னும் யாவரது அனுபவமும் பசி தாக தர்ம்ம விசிஷ்ட மான பிராணனுக்கே ஆத்மத்தன்மை சித்தி செய்கின்றது. அல்லாமலும் அந்யோந்தர ஆத்மா ப்ராணமய: (வேறொருவனாய் அவனுக்கு உள்ளிருப்பவனான பிராணமயன்) என்னும் சுருதியும் பிராணனே ஆத்மாவெனக் கூறியுளது. சொ ப்பன சுழுப்திகளில் அவ்விந்திரியங்கட்கு இலயமுண்டாகியும் அப்பிராணன் இருக்கின்றது; ஆகலின் அப்பிராணனே ஆத்மாவாம்.

**சமாதானம்:**—வாயுவின் விகாரமாவதான் அப்பிராணனும் வெளியே யுள்ள வாயுவைப்போன்று ஆத்மாவன்று. பசிதாக முடையவன் யான் என்னும் அநுபவமோ படிகம் செம்மை, என்னும் அநுபவத்தினைப் போன்று பிரம வடிவமாம். ஆகலின் அவ்வநுபவத்தானும் பிராணனுக்கு ஆத்மத்தன்மை சித்தியாது. பிராணனது ஆத்மத் தன்மையில் நீ கூறிய சுருதிக்குப் பிராணனுக்கு ஆத்மத்தன்மையைப் போதிப்பதில் தாற்பரியமின்று. ஆனல் முமுட்சுக்களுக்குச் சோபானக்கிரமத்தால் (படிப்படியாக) சுத்த ஆத்மாவை அறிவிப்பதிலேயே தாற்பரியமாம். ஓர்கால் அச்சுருதிக்குப் பிராணனது ஆத்மத்தன்மையிலேயே தாற்பரியமாமாயின் அந்யோऽந்தர ஆத்மா மநோமய: (வேறொருவனாய் அவனுக்கு உள்ளிருப்பவனான மனோமயன்) என்னுஞ் சுருதி அப்பிராணனுக்கும் உள்ளான வேறு மனோமயனுக்கு ஆத்மத் தன்மையைக் கூறியது அசங்கதமாகும். இச்சுருதிகட்குச் சுத்த ஆத்மாவை அறிவிப்பதின் கண்ணே தாற்பரிய முளவென்னும் பிரகாரத்தை ஆத்மபுராணத்தின் பத்தாவது அத்தியாயத்தில் யாம் விரிவாய்க் கூறியிருக்கின்றோம். அஃதை ஆங்கு அறிக. ஆகலின் அந்தப்பிராணனும் ஆத்மாவன்று. கூறிய இவ்வெல்லா அபிப்பிராயத்தையும் மனதில் வைத்து கிரந்தக்கர்த்தா ச்ரோத்ர வாகாதிகா நி நாஹம் இதி. (இ-ள்.) சுரோத்திரம்வாக்கு முதலியவைகளும் நானன்று என்று கூறுகின்றார். ஈண்டு சுரோத்திர இந்திரியத்தாற் சக்ஷு முதலிய எல்லா ஞானேந்திரியங்களையுங் கிரகிக்க வேண்டும். வாக்கு இந்திரியத்தாற் கைகால் முதலிய எல்லா கர்மேந்திரியங்களையுங் கிரகிக்கவேண்டும். முதலிய என்னும் பதத்தான் வாயுவாகிய முக்கியப் பிராணனைக் கிரகிக்க வேண்டும். இதனல் இவ்வர்த்தம் துணியப்படுகின்றது. சுரோத்திர முதலிய ஐந்து ஞானேந்திரியங்களும் வாக்கு முதலிய ஐந்து கர்மேந்திரியங்களும் ஐந்து பிராணன்களும் நானன்று. எக்காரணத்தானெனிற் சொப்பன சுழுப்தி அவஸ்தைகளில் அவ்விந்திரியப் பிராணன்கள் இலயமாகியும் நானாகிய ஆத்மாவோ அச்சொப்பன சுழுப்திகளிலும் திருஷ்டாசாக்ஷி வடிவமாக இருக்கின்றேன். சொப்பன சுழுப்திகளில் மற்றையர்களது திருஷ்டியினல் அப்பிராணன் காணப்பட்டாலும், துயின்ற அப்புருஷனது திருஷ்டியால் அப்பிராணன் ஆண்டு காணப்படுவதில்லை. ஆகலின் சொப்பன சுழுப்திகளில் அப்பிராணனது இலயம் கூறப்பட்டது.

### 6. அந்தக் கரணம் ஆத்மா வன்றேன்பதிற் சங்கை சமாதானம்.

**சங்கை:**—கூறிய தோஷங்களால் அவ்விந்திரியங்கட்கும் பிராணனுக்கும் ஆத்மத்தன்மை இன்றாகுக; எனினும் விஞ்ஞானமே (புத்தியே) ஆத்மாவாம். ஏனெனின் யான் கர்த்தா யான்போக்தா என்னும் யாவரது அநுபவமும் கர்த்திருத்வ போக்திருத்வ தர்ம விசிஷ்டமான விஞ்ஞானத்திற்கே ஆத்மத்தன்மையைச் சித்திசெய்கின்றது. மேலும் அந்யோऽந்தர ஆத்மா விஜ்ஞாநமய: (வேறொருவனாய் அவனுக்கு உள்ளிருப்பவனான விஞ்ஞானமயன்) என்னும் சுருதியும் அவ்விஞ்ஞானத்தினையே ஆத்மாவாகக் கூறியுளது. ஆகலின் அவ்விஞ்ஞானமே ஆத்மாவாம் என்னும் ஆசங்கை யுண்டாக புத்திர் நாஹம் இதி. (இ-ள்.) நான்

புத்தியுமன்று என்று கூறப்பட்டது. ஈண்டு புத்தி என்னுஞ்சப்தத்தால் அந்தக் கரணவிருத்தியைக் கிரகிக்க வேண்டும். அப்புத்தியை அந்தக் கரணத்திற்கு உப லக்ஷணமாக (இலக்கணையாற் கொள்வதாக) வும் அறிக. இதனல் இவ்வர்த்தம் பெறப்படுகின்றது. நான் அந்தக்கரணமும், அந்தக்கரண விருத்தியுமாகிய இர ண்டுமென்று. ஏனெனின் சுருதியில் ஆகாசமுதலிய பூதங்களின் சத்வ அம்சங்க ளினின்றும் அந்தக்கரணத்தின் உற்பத்தி கூறப்பட்டிருக்கின்றது. பூதங்களின் விகாரமாவதான் அவ்வந்தக்கரணம், கடமுதலியவைகளைப்போன்று ஜடமே யாம். சுழுப்தியில் அவ்வந்தக்கரணத்தின் இலயமே காணப்படுகின்றது. எது இலயமுடையதோ அது ஆத்மாவாகாது, ஆகலின் அவ்வந்தக்கரணம் ஆத்மா வன்று. நான் கர்த்தா நான் போக்தா என்னும் அனுபவமோ 'படிகம் செம் மை' என்னும் அனுபவத்தைப்போன்று பிரமவடிவமாம். ஆகலின் அவ்வனு பவத்தானும் அந்தக்கரணத்திற்கு ஆத்மத்தன்மை சித்தியாது. ௮நெ்யாஂ தராத்மா விஜ்ஞாநமயஃ (வேருெருவனுய் அவனுக்கு உள்ளிருப்பவனுன விஞ்ஞா னமயன்) என்னும் சுருதிக்கும் அவ்விஞ்ஞானமயனது ஆத்மத்தன்மையில் தா ற்பரியமின்று. எக்காரணத்தானெனின் ௮நெ்யாஂதராத்மாநந்தமயஃ (வேருெரு வனுய் அவனுக்கு உள்ளிருப்பவனுன ஆனந்தமயன்) என்னும் சுருதி அவ்விஞ் ஞான மயத்திற்கும் உள்ளேயுள்ள வேறு ஆனந்த மயத்தினையே ஆத்மாவெனக் கூறியுளது. ஆகலின் அச்சுருதியினுனும் அவ்விஞ்ஞான மயனுக்கு ஆத்மத்தன் மை சித்தியாது; ஆகலின் அந்தக்கரணமும், அந்தக்கரண விருத்தியும் ஆத்மா வாகா. இங்ஙனங்கூறியதான் மனேமயகோசத்திற்கும் ஆத்மத்தன்மை கண் டனஞ் செய்யப்பட்டது; புத்தியைப்போன்று அம்மனமும் அவ்வந்தக்கரண விருத்தியேயாம் என்பதனுல்.

## 7. அஞ்ஞானம் ஆத்மாவன்றேன்பதிற் சங்கை சமாதானம்.

**சங்கை:**—கூறிய தோஷங்களால் அவ்விஞ்ஞான மயத்திற்கு ஆத்மத்த ன்மையில்லையாயினும் எல்லா அத்தியாசங்கட்குக் காரணமும், ஆனந்தமய சப் தத்தின் வாச்சியார்த்தமுமாகிய, அஞ்ஞானமே ஆத்மாவாம். ஏனெனின் ௮ஜ்ஞொஹம் (நான் அஞ்ஞன்) என்னும் அனுபவம் அவ்வஞ்ஞானத்திற்கே ஆத் மத் தன்மையைச் சித்தஞ் செய்கிறது. ௮நெ்யாஂதராத்மாநந்தமயஃ, (வேருெரு வனுய் அவனுக்கு உள்ளிருப்பவனுன ஆனந்த மயன்) என்னும் சுருதியும் அவ்வானந்த மயத்தினையே ஆத்மாவெனக் கூறியிருக்கின்றது. என்னுஞ் சங்கை யுண்டாக ௮ய்யாஸமூலம்_நாஹமிதி, நான் அத்தியாசத்திற்கு மூல(காரண)மு மன்று என்று கூறப்பட்டது. ஈண்டு அத்தர்ம ரகித பதார்த்தத்தில் அத்தர்ம முடைமைப் புத்தியாகிய விபர்யயம் மித்தியா ஞானமென்று கூறப்படுகின்றது; அதற்கே அத்தியாசமென்று பெயர். ஆத்மத் தன்மைத் தர்ம்மரகிதமான தேகே ந்திரியாதிகளில்,ஆத்மத்தன்மை புத்தியும்,இரஜதத்தன்மை ரகிதமான சுத்தியில் இரஜத்தன்மைப் புத்தியும் அத்தியாச மாதல்போனும். இவ்வத்தியாசத்தினை இரண்டாவது பரிச்சேதத்தில் விரிவாய்க் கூறப்படும். அவ்வத்தியாசத்திற்கு மூ லமெனப்படும் காரணமாகிய அஞ்ஞானமும் யானன்று. ஏனெனின் அவ்வஞ்

ஞானம் மகாவாக்கியத்தாற் றேன்றும் ஞானத்தால் நிவிருத்தியாவதும் தேக முதலியவற்றைப்போல ஜடமுமாம். சமாதி அவத்தையில் தத்துவமுணர்ந்தவர்கட்கு அவ்வஞ்ஞானம் தோற்றுகிறதில்லை. ஆகலின் அவ்வஞ்ஞானமும் ஆத்மாவன்று. யான் அஞ்ஞன் (அஞ்ஞானி) என்னும் அநுபவமோ லொஹிதஃ ஸ்ஃபிகஃ (படிகம் செம்மை) என்னும் அநுபவம்போல பிரமவடிவமாம், ஆகலின் அவ்வநுபவத்தானும் அஞ்ஞானத்திற்கு ஆத்மவடிவத்தன்மை சித்தியாது. ஌ஹ வுஃஷூ ஌திஷா (பிரஹ்மம் எஞ்சி நின்றது) என்னும் சுருதி அவ்வானந்தமயகோசத்தினும் வேறான அவ்வானந்தமயகோசத்திற்கு அதிஷ்டானமாகியும் சாக்ஷியுமாகிய ஆத்மாவைப் பிரதிபாதிக்கின்றது, ஆகலின் அநெ ஌ாஹ ஌ாத்மா ஆநந்ஷமயஃ (வேறொருவனாய் அவனுக்கு உள்ளிருப்பவனான ஆத்மா ஆனந்தமயன்) என்னும் சுருதிக்கு அவ்வானந்த மயனது ஆத்மத்தன்மையில் கருத்தன்று, அச்சுருதியினானும் அவ்வானந்த மயத்திற்கு ஆத்மத்தன்மை சித்தியாது, ஆகலின் அவ்வஞ்ஞானமும் ஆத்மாவன்று. ஆண்டு சரீரம் இந்திரியம் பிராணன் மனம் புத்தி என்பவற்றை முறையாக ஆத்மாவென ஒப்பும் வாதிகளது மதங்களில் விரிவாய்க் கூறுதலும் கண்டித்தலும் நியாயப் பிரகாசத்தின் இரண்டாவது பரிச்சேதத்தில் யாம் நிரூபித்திருக்கின்றேம், ஆகலின் அம்மதங்கள் ஈண்டு சுருக்கமாய் நிரூபிக்கப்பட்டன.

**சங்கை:**—முற்கூறிய முறைப்படி தேகேந்திரியாதிகளை ஆத்மாவென நீவிர் அங்கிகரியாதபோது, நும்மதத்தில் ஆத்மாவென்பதியாது? எவ்வாத்மாவிற்கு அஹம் பிரஹ்மாஸ்மி என்று பிரஹ்ம வடிவத்தன்மை நீவிர் அநுபவஞ்செய்கின்றீர் என்னும் ஆசங்கையுண்டாக 'சத்தியம்' என்று சொல்லப்படுகின்றது. அஞ்ஞானத்திற்கும், அவ்வஞ்ஞானகாரியத்திற்கும் சாக்ஷியாதோ அஃதே எமது மதத்தில் ஆத்மா, அச்சாக்ஷி ஆத்மாவே நான் என்பதாக அநுபவிக்கப்படுகின்றது. அச்சாக்ஷி ஆத்மாவிற்கே அஹம்பிரஹ்மாஸ்மி என்பதாக பிரஹ்ம வடிவத்தன்மையை நாம் அநுபவிக்கின்றேம்.

**சங்கை:**—அந்தச்சாக்ஷி ஆத்மாவில் எந்த பிரஹ்ம வடிவத்தன்மையை நீவிர் அநுபவிக்கின்றீரோ அந்தப்பிரஹ்மம் யாது? என்னும் ஆசங்கை நிகழ க்ருஷ்ணவா ஹமஸ்மி (கிருஷ்ணராகிய பரப்பிரஹ்மம் யான்) என்று சொல்லப்படுகின்றது. கிருஷ்ணரே பரப்பிரஹ்மம் என்னுமிடத்து ஸ்மிருதி. க்ருஷிர்-பூவாசகஃ ஶப்தோ ணஶ்ச நிர்வ்ருதி வாசகஃ। தயோரைக்யம் பரம் ப்ரஹ்ம க்ருஷ்ண இத்யபிதீயதே ॥ (இ-ள்.) கிருஷ் என்னும் சப்தம் சத்தையின் வாசகமும் ண என்னும் சப்தம் ஆனந்தத்தின் வாசகமுமாம். அச்சத்தா ஆனந்தமாகிய இரண்டுகளின் ஏகத்வம் பரப்பிரஹ்மம். அப்பரப்பிரஹ்மமே கிருஷ்ணரென்னும் நாமத்தாற் சொல்லப்படுகின்றது. இந்த ஸ்மிருதி பரப்பிரஹ்மத்தினையே கிருஷ்ண நாமத்தாற் கூறிற்று. ஆகலின் கிருஷ்ணரேயான் என்னும் வசனத்திற்கு பிரஹ்மமேயான் என்னும் பொருள் பெறப்பட்டது. ஈண்டுகருத்திஃதாகும். தத்த்வமஸ்யாதி வாக்ய ப்ரவிஶ்ய கநக ஜீவ நாத்மா ஸமப்ரவிஶ்ய நாம ரூபே வ்யாகரவாணி। ஸஞ்ச ஜஹ ப்ரவிஷ்டம் வாஜேந்த்ரஃ ॥

(இ-ள்.) அப்பரமாத்மதேவர் இச்சகத்தை ஏற்படுத்தி, தானே அச்சகத்திற் பிரவேசஞ்செய்தார். இந்தவெனது ஜீவவடிவமாக ஜகத்திற் பிரவேசஞ்செய்து பரமாத்மாவாகிய நான் நாமரூபங்களைவெளிப்படுத்துவேனாக. அப்பரமாத்மாவே இச்சங்காதங்களில் நகங்களின் நுனிப்பாகம் வரையில் பிரவேசஞ்செய்தார் என்பதுமுதலிய சுருதிகள் இப்பொருளைக் கூறியுள்ளன. வாஸ்தவமாக ஜன்ம மரணமுதலிய சர்வ விகாரங்களில்லாததும் நித்திய சுத்த புத்த முக்த சுவபாவமுமாகிய ஆத்மா அநாதி அநிர்வசநீய மாயாசக்தியால் ஆகாயமுதல் தூல சரீரம் வரையுமுள்ள சர்வ ஜகத்தையும் உற்பத்திசெய்து மீண்டும் அச்சகத்திற் பிரவேசித்து அச்சகத்திற்கு சாக்ஷியாயினும், அவிவேகத்தால் அச்சகத்தின் தருமங்களைத் தன்னிடத்தில் ஆரோபித்துக்கொண்டு நான் கர்த்தா நான் போக்தா நான் மனிதன் நான் பிராஹ்மணன் என்று சம்சாரத்தை அனுபவிக்கின்றது. அவ்வாத்மாவே ஓர் பூர்வ புண்ணிய கருமத்தின் பிரபாவத்தால் சாதன சம்பன்னனாகி சுருதி ஆசாரியப் பிரசாதத்தால் விவேகத்தை யடைந்தபோது, அவ்விவேகத்தால் அக்கர்த்திருத்வ போக்திருத்வ முதலிய சம்சாரத்தை ஒழித்தும், தனது சொரூப சாட்சாத்காரத்தால் அம்மாயையை நாசஞ்செய்தும் தனது பரமாநந்த சொரூபத்தை அனுபவிக்கின்றது. இதனால் இச்சாட்சி ஆத்மாவின் பிரஹ்ம வடிவத்தன்மையில் ஓர் விரோதமுமில்லை. இப்பொருளையே பின்னரும் தெளிவாய் நிரூபிக்கப்படும்.

## அ பிரஹ்மத்தின் சொரூப தடஸ்தலட்சணங்களை நிரூபித்தல்.

இனிதனது ஆத்மவடிவமாக சாட்சாத்கரிக்கத்தக்க பிரஹ்மத்தின் சொரூபதடஸ்தலட்சணங்களை நிரூபிப்பாம். ஸத்யாநந்தரூபஞ்சித்ரூபம் மாயா ஸாக்ஷி (இ-ள்.) அந்தப்பிரஹ்மம் சத்தியரூபமும், ஆனந்தரூபமும், சிதாத்மரூபமும், மாயாசாக்ஷியுமாம். ஈண்டு மாயாசாட்சி என்னும் பதத்தால் பிரஹ்மத்தின் தடஸ்தலட்சணம் சொல்லப்பட்டது. ஜகத்திற்கு உபாதான காரணமாகிய மாயையை எது நேராகப்பிரகாசிக்கின்றதோ அது மாயாசாக்ஷி எனப்படும். இம்மாயையின் சொரூபம் பின்னர் கூறப்படும். சத்தியமுதலிய பதங்களால் பிரஹ்மத்தின் சொரூபலக்ஷணஞ் சொல்லப்பட்டது. முக்காலத்திலும் பாதிக்கப்படாதது யாதோ அது சத்தியமெனப்படும். நிரதிசயசுகவடிவமாவது யாதோ அது ஆனந்த மெனப்படும். ஞானவடிவமாவது யாதோ அது சிதாத்மாவெனப்படும். இவ்வாறாகிய சத்திய ஆனந்தசிதாத்மா பிரஹ்மமேயாம். ஈண்டு பிரஹ்மத்தினிடத்துப் பிராந்தியாற் பெறப்பட்ட மித்தியாவத்துவின் தாதான்மியம் சத்தியமென்னும் விசேஷணத்தால் தவிர்க்கப்பட்டது. பிரஹ்மத்தினிடத்துப் பிராந்தியாற் பிராப்தமான துக்கமும் அத்துக்க சாதனங்களினதும் தாதான்மியம் ஆனந்தமென்னும் விசேஷணத்தால் நீக்கப்பட்டன. பிரஹ்மத்தினிடத்துப் பிராந்தியாலடையப்பட்ட ஜடத்தின் தாதான்மியம் சிதாத்மா வென்னும் விசேஷணத்தால் நிவிருத்திக்கப்பட்டது. இதனால் துணியப்பட்டபொருளாவது சத்தியவடிவமாவதால் பிரஹ்மம் மித்தியாவஸ்து வன்று, ஆனந்தவடிவமாவதால் பிரஹ்மம் துக்கமும் அதன் சாதனமுமன்று, சிதாத்மாவடிவமாவதால் பிரஹ்மம் ஜடவடிவமன்று. அத்தகைய சச்சிதானந்த சொரூப சர்வத்திற்கும்

சாக்ஷியாகிய பரமாத்மாயான். ஏனெனின் தத்துவமசி அஹம்பிரஹ்மாஸ்மி என்னுந்தொடக்கத்துச் சுருதிவசனங்கள் இந்த ஜிவாத்மாவினை பிரஹ்மவடிவமாகவே சொல்லியுள்ளன. இஃது இரண்டாவது சுலோகத்தின் வியாக்கியானமாம்.

### கூ. மங்கலம் செய்யத்தக்கதன் றென்பதிற் சங்கை.

சங்கை:—முன் இரண்டு சுலோகங்களால் யான் பிரஹ்மம் எனத்தத்துவாநுசந்தானமாகிய மங்கலம் செய்யப்பட்டது. நூலாரம்பத்தில் மங்கலம் செய்வது தகுதியன்று. ஏனெனின் எதைச்செய்வதில் ஓர் பிரமாணமும்,எதைச் செய்வதற்கு ஓர் பயனும் உளதோ அதுவே செய்யத்தகுதியாம்; ஆனால் மங்கலம் செய்வதில் ஓர் பிரமாணமும் ஓர்பயனுமில்லை. அவை காட்டப்படுகின்றன. அம்மங்கலாசரணத்தில் பிரத்தியட்சப்பிரமாணமோ சம்பவியாது. ஏனெனின் அம்மங்கலாசரணத்தின் கர்த்தவ்வியத்தன்மை தர்மாதர்மங்களைப்போல அதீந்திரியம். அவ்வதீந்திரியப் பொருளில் இந்திரியவடிவ பிரத்தியட்சப் பிரமாணம் சம்பவியாது. அல்லது நாத்திகர் முதலியோரது நூற்களிலும் மங்கலாசரணமன்றியே நூன் முடிவுகாணப்படுகின்றது. சிலநூற்கட்கோ மங்கலமியற்றியும் முடிவுகாணப்படவில்லை. இவ்வியதிரேகவியபிசாரஞானமும் அன்வயவியபிசாரஞானமும் அம்மங்கலத்தில் நூன்முடிவுக்குக்காரணமாந் தன்மையின் ஞானத்திற்குத்தடைகளாம், ஆகலின் அம்மங்கலத்தில் நூன் முடிவின் காரணத்தன்மை பிரத்தியட்சப் பிரமாணத்தால் அறிதல் கூடாது. அன்றியும் அம்மங்கலாசரணத்தில் அனுமானப்பிரமாணமும் சம்பவியாது. ஏனெனின் எவ்வேது எச்சாத்தியத்தின் வியாப்தியுடையதோ, அவ்வேதுவே அச்சாத்தியத்தைச் சித்திசெய்கின்றது. எப்படி வன்னியாகிய சாத்தியத்தின் வியாப்தியுடையதால் தூமமாகிய ஏது அவ்வன்னியாகிய சாத்தியத்தைச் சித்திசெய்கின்றதோ, அப்படி அம்மங்கலத்தின் கர்த்தவ்வியத்தன்மையாகிய சாத்தியத்தின் வியாப்தியுடைய ஓர் ஏதுவாகிய இலிங்கமுமில்லை.

அவ்வேதுவாகிய இலிங்கமன்றி அனுமானம் நிகழாது. அன்றியும் அம்மங்கலாசரணத்தில் வேதமாகிய சப்தமும் பிரமாணமன்று. ஏனெனின் அம்மங்கலாசரணத்தின் கர்த்தவ்வியத்தை உணர்த்தும் ஓர்வேதவாக்கியமும் இக்காலத்தில் பிரத்தியட்சமாகக் காணப்படவில்லை. அன்றியும் அம்மங்கலாசரணத்தில் அர்த்தாபத்திப் பிரமாணமும் சம்பவியாது. ஏனெனின் ஓர் கால் அம்மங்கலாசரணமன்றியே நூன் முடிவு உண்டாகா விடின் அந்நூன் முடிவு அம்மங்கலாசரணமன்றிச் சம்பவியாததாய் அம்மங்கலாசரணத்தின் கற்பனைசெய்யப்படும். பகலில் உண்ணாதவனுக்குப் பருமை இராத்திரிபோஜனமன்றிச் சம்பவியாததாய் அவ்விராத்திரி போஜனத்தின் கற்பனைசெய்யப்படுகின்றது போலும். ஆனால் நூன் முடிவு மங்கலாசரணமன்றியே காணப்படுகின்றது. ஆகலின் அம்மங்கலாசரணத்தில் அர்த்தாபத்திப் பிரமாணமும் சம்பவியாது. அல்லது அம்மங்கலாசரணத்தில் ஓர் பிரமாணமுமில்லாததுபோல அம்மங்கலாசரணத்திற்கு ஓர் பயனும் காணப்படவில்லை. நூன் முடிவோ அம்மங்கலாசரணமன்றியும் காணப்படுகின்றது. ஆகலின் அந்நூன் முடிவும் அம்மங்கலாசரணத்திற்குப் பயனன்று.

எதுவன்றி ஓர் போதும் எது உண்டாகாதோ அதுவே அதற்குப்பயன். அன்றியும் எவனிடத்து இயல்பாய்ப் பெறப்பட்ட விக்கினங் (இடையூறு)களின் அத்தியந்தாபாவமுளதோ அவனிடத்து அம்மங்கலாசரணம் செய்யப்படினும் அம்மங்கலாசரணம் விக்கினத் தொம்சத்தையுண்டாக்குவதில்லை. ஆகலின் அவ்விக்கினத்தொம்சமும் அம்மங்கலாசரணத்திற்குப் பயனன்று. எது உண்டாக எது அவசியமாமோ அதுவே அதற்குப்பயன். நூன் முடிவு விக்கினங்களின் தொம்சம் ஆகிய இரண்டிற்கு வேருகமங்கலாசரணத்திற்குப் பிறிதோர்பயன் சாஸ்த்திரக்காரர்கள் ஒப்பினரில்லை. ஆகலின் பிரமாணம் பயன் என்னும் இரண்டுமின்மையால் அம்மங்கலாசரணம் செய்யத்தக்கதன்று.

## கo. மங்கலாசரணம் செய்யத்தக்கதென்னும் சமாதானம்.

**சமாதானம்:**—நூற்றுவக்கத்தில் அம்மங்கலாசரணம் அவசியம் செய்யத்தக்கதென்பதில் அம்மங்கலாசரணத்தில் வாதியால்பிரமாணத்தின் அபாவம் சொல்லப்பட்டது. அது நலமன்று. ஏனெனின், நிர்விக்ந ஸமாப்தி காமோ மங்கள மாசரேத் (விக்கினமில்லாமல் முற்றுப்பெறவிரும்புவோன் காப்பியற்றுக). என்னும் சுருதியே அம்மங்கலாசரணத்திற் பிரமாணம். இக்காலத்தில் ஓர்வேத சாகையிலும் இச்சுருதி பிரத்தியட்சமாய்க் காணப்படாவிட்டாலும், ஆன்ருேரொழுக்கமாகிய ஏதுவால் அச்சுருதி அநுமிக்கப்படுகின்றது. அச்சுருதியமைந்ததோர் வேதசாகை நஷ்டமாய் விட்டதாகலின் இக்காலத்தில் அச்சுருதி பிரத்தியட்சமாய்க் காணப்படவில்லை என்று கற்பிக்கப்படுகின்றது. அவ்வனுமானத்தின் ஆகாரம் வருமாறு. மங்களம் வேத போதித தாஷ்டஸாதநம் அலௌகீகாவகீத ஶிஷ்டா சாரவிஷயத்வாத், தர்ஶாதிவத் (இ-ள்.) மங்கலம் வேதத்தால்போதிக்கப்பட்ட இடையூறின்றி முடிவதாகிய இஷ்டத்திற்கு உபாயமாயுள்ளது, உலகநடையும் பழிப்புமல்லாத ஆன்ருேரொழுக்கமாதலால், யாது உலகநடையும் பழிப்புமல்லாத ஆன்ருேரொழுக்கமோ அது வேதத்தால் போதிக்கப்பட்ட இஷ்டத்திற்கு உபாயமேயாம். உலகநடையும் பழிப்புமல்லாத ஆன்ருேரொழுக்கமாகிய தரிசபூர்ணமாச கருமங்களைப்போலும். எங்ஙனம் தரிசபூர்ணமாசகருமங்கள் தர்ஶபூர்ண[?]மாஸாப்யாம் ஸ்வர்க்காமோ யஜேத (சொர்க்கம் விரும்புவோன் தரிசபூர்ணமாசகருமங்களால் யஜிக்கக்கடவன்) என்னும் வேதவாக்கியத்தால் போதிக்கப்பட்ட சுவர்க்கமாகிய விருப்பத்திற்கு உபாயமாமோ, அங்ஙனம் இம்மங்கலமும் உலகநடையும் பழிப்புமல்லாத பெரியோர்கள் ஒழுக்கமாகலின் வேதத்தாற் போதிக்கப்பட்ட இடையூறின்றி முடிவதாகிய இஷ்டத்திற்கு உபாயமென்பது அவசியமாகும். ஈண்டு மங்கலம் பட்சம், வேதத்தாற் போதிக்கப்பட்ட இஷ்ட அர்த்தத்திற்கு உபாயம் சாத்தியம், உலகநடையும் பழிப்புமல்லாத ஆன்ருேரொழுக்கம் ஏது, தரிசபூரணமாசாதி கருமங்கள் திருஷ்டாந்தம். இவ்வனுமானத்தின் முறையைப்பின்னரும் அறிந்துகொள்க. பிரத்தியட்சமுதலிய பிரமாணங்களும், அநுமானத்திற்கு அங்கமாகிய பட்சதிருஷ்டாந்தமுதலியவற்றின் இலக்கணமும் இரண்டாவது பரிச்சேதத்திற்கூறப்படும். ஈண்டு ஏதுவிலுள்ள உலகநடையல்லாத, பழிப்பற்ற, ஆன்ருேர் என்னும் மூன்று

பதங்கட்குப் பொருள்களிவையாம்:—சாஸ்திரத்தின் கட்டளையன்றியே கேவலம் இராகத்தாற் பிராப்தமான உண்டி முதலியன இலௌகிகம் (உலகநடை) அவ்வுலகவியவகாரத்திற்கு வேறானது அலௌகிகம் (உலகநடையல்லாதது) எனப்படும். நரகமுதலிய வலிவுள்ள அநிஷ்டத்தை உண்டாக்காததாய் சொர்க்கமுதலியவான இஷ்டத்திற்குச் சாதனமான ஒழுக்கம் அவிகீதம் (பழிப்பல்லாதது) எனப்படும். வேதங்களைப் பிரமாணமாகக் கொள்ளுவோர் ஆன்றோர் எனப்படுவார். இவ்வகை அனுமானத்தாற் பெறப்பட்ட முற்கூறியசுருதிப்பிரமாணத்தினலே அம்மங்கலத்திற்கு இடையூறின்றி முடிவதற்குக் காரணத்தன்மைநிச்சயமாகின்றது. மங்கலாசரணமன்றியே நூன் முடிவுகாணப்படும் என்னும்நாத்திகர் முதலியோரிடத்தும் நூன்முடிவாகிய காரியத்தால் ஜன்மாந்தரத்தின் மங்கலாசரணம் அனுமிக்கப்படுகின்றது. ஜன்மாந்தரத்தின் மங்கலாசரணமே நூன் முடிவுக்குக்காரணம், ஆதலால் முற்சொல்லிய வியதிரேக வியபிசாரம் சம்பவியாது. மங்கலம் செய்யப்படினும் நூன் முடியாவிடத்து நூலாசிரியனிடத்து இடையூறுகளின் மிகுதிப்பாட்டை அறிதல் வேண்டும்,அல்லது மிக்கவலியுடையதோர் இடையூற்றை அறிதல் வேண்டும். மிக்க இடையூறுகளின் நிவிருத்தியும், மிகவலிவான இடையூறின் நிவிருத்தியும் பலமங்கலங்களாலும், மிகவலிவானதோர் மங்கலத்தினலும் உண்டாம். இவ்விதமாக இடையூற்றை நிவிருத்திக்கும் மங்கலம் அந்நூற்களிடத்தில்லை, ஆகையால் முற்சொல்லிய அன்வயவியபிசாரமும் ஈண்டுபிராப்தமாகாது. இவ்வாறு அம்மங்கலாசரணத்தில் சொல்லிய சுருதிப்பிரமாணமும், இடையூறின்றி முடிவதாகியபயனும் சம்பவிக்க நூற்றுவக்கத்தில் அம்மங்கலாசரணம் அவசியம் செய்யத்தக்கது. சில நூலாசிரியரோ நூன் முடிவுக்குத்தடையாய இடையூறுகளின் தொம்சமே அம்மங்கலாசரணத்திற்குப்பயனெனக் கொள்ளுகின்றனர். இம்மங்கலவாதத்தின் விரிவான நிரூபணம் நியாயப்பிரகாசத்தின் முதற்பரிச்சேதத்தில் நம்மால் செய்யப்பட்டிருக்கின்றது, ஆகையால் இங்கு சுருக்கமாய் நிரூபிக்கப்பட்டது. அதிகமாக அறியவிரும்புவோர் ஆண்டு அறிந்து கொள்ளுக.

## நூலாரம்பம்.

---

ஸ்ரீமத் சங்கராசாரியரருளிய பாஷியத்துடன் கூடிய ஸ்ரீவியாசபகவானருளிய சூத்திரங்களின் தொகுதியாயது சாரீரக மீமாம்சாசாத்திரம். அதன்கண் அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா என்னும் முதற் சூத்திரத்தால் விவேகமுதலிய சதுட்டய சாதன சம்பத்தியின் பிறகு அதிகாரிகளை நோக்கி பிரஹ்ம ஞானத்தின் இச்சை விதிக்கப்பட்டுளது. விசாரஞ் செய்யப்பட்ட தத்துவமசியாதி வாக்கியங்களாற் றோன்றியதும் ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவத்தை விஷயஞ் செய்வதுமான அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் பயனுகிய ஞானமே அவ்விச்சைக்கு விஷயம். மோட்சத்திற்கு ஏதுவாகிய ஞானம் தத்துவம் பதார்த்த ஞானத்தின் அதினமாம். ஏனெனிற் பதார்த்த ஞானமில்லாதவனுக்கு வாக்கியார்த்த ஞானமுண்டாகாது; பதார்த்த ஞானமுடையவனுக்கே அவ்வாக்கியார்த்த ஞானமுண்டாகும். அவ்வாக்கியார்த்த ஞானத்திற்கு ஏதுவாகிய

பதார்த்த ஞானமும் தத்துவம் பதார்த்தவிசாரத்தின் அதினமாம். அத்தத்துவம் பதார்த்த விசாரத்தானன்றி அப்பதார்த்த ஞானம் நிகழாது. ஆதலால் முற்சொல்லிய சூத்திரம் அர்த்தத்தால் அவ்விசாரத்திற் கர்த்தவ்வியத்தையே விதித்துளது. அஃதாவது சாதன சதுட்டய சம்பத்தியின் பிறகு அதிகாரி பிரஹ்ம விசாரஞ் செய்தல் வேண்டும் என்பது அச்சூத்திரத்திற்குப் பொருளெனப் பெறப்படுகின்றது.

## கஉ. இருவகை பிரஹ்ம விசாரத்தின் நிரூபணம்.

அவ்விசாரமும் இருவகைத்து. ஒன்று பிரதான விசாரம், மற்றொன்று சஹகாரி விசாரம். அஹம்பிரஹ்மாஸ்மி என்னும் வாக்கியார்த்த ஞானத்தால்அடைவதற்கு மிகவும் விரும்பப்படுவதால் பிரஹ்மம் பிரதானமாம். அங்ஙனமாய பிரதான பிரஹ்மத்தின் விசாரம் யாதோ அது பிரதான விசாரம் எனப்படும். அந்தப் பிரஹ்மத்தின் விசாரம் சமன்வய முதலிய விசாரத்தானன்றி சம்பவியாது. ஆகையால் சமன்வயம், அவிரோதம், சாதனம், பலம் என்னும் நான்கின் விசாரம் யாதோ அது சஹகாரி விசாரமெனப்படும். உபநிஷத்தாகிய வேதாந்தங்களிலுள்ள வாக்கியங்களுக்கு பிரஹ்மாத்மாக்களின் அபேதத்தைக் கூறுவதாகிய கருத்திற்கு சமன்வய மெனப்படும். அச்சமன்வயத்தின் விசாரம் சாரீரகமீமாம்சாசாத்திரத்தின் முதல் அத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது. சுருதிக்கு விரோத மாயவழி ஸ்மிருதியாதிகளும், பிரத்தியட்சாதி பிரமாணங்களும் ஆபாசமாவதால் அவ்வேதாந்த சமன்வயத்திற்கு ஸ்மிருதி பிரத்தியட்ச முதலிய வேறு பிரமாணங்களோடுள்ள விரோதமில்லாமை அவிரோத மெனப்படும். அவ்வவிரோதத்தின் விசாரமும் சாரீரகமீமாம்சாசாத்திரத்தின் இரண்டாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது. ஞானத்தை அடைவதற்கான உபாயங்கள் சாதனங்க ளெனப்படும். அச்சாதனமும் அந்தரங்க பகிரங்க பேதத்தால் இருவகைப்படும். அவ்விருவகைச் சாதனங்களின் விசாரம் அச்சாரீரகமீமாம்சா சாஸ்திரத்தின் மூன்றாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது. அச்சாதனங்களால் அடையத்தக்க பொருள் பலமெனப்படும். அப்பலமும் பரம் அபரம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்து. அவ்விருவகைப் பல விசாரம் அச்சாரீரகமீமாம்சாசாத்திரத்தின் நான்காவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது. இவ்வாறான சமன்வய முதலிய நான்கின் விசாரம் சஹகாரி விசார மென்பர். அச்சாதனங்களுள் தத்துவமசியாதி மகா வாக்கியங்களினது அர்த்தத்தின் விசாரம் பிரஹ்மஞானத்திற்கு அந்தரங்க சாதனமாம். அவ்வாக்கியார்த்த விசாரத்திற்கு தத்துவம்பதார்த்த விசாரம் சஹகாரியாம். ஆதலால் அத்தத்துவம் பதார்த்தங்களின் விசாரமும் பிரஹ்மஞானத்திற்கு அந்தரங்கசாதனமேயாம். இக்காரணம் பற்றியே இந்நூலின் ஆதியில் முதல் அத்தத்துவம் பதார்த்தங்களின் விசாரமே நிரூபிக்கப்படுகின்றது. தாற்பரிய மிதுவாம்:—சதுட்டய சாதன சம்பன்ன அதிகாரிக்கு மோட்சப் பிராப்தி தத்துவமசியாதி மகா வாக்கியார்த்த ஞானத்தானே உண்டாகின்றது. அவ்வாக்கியார்த்த ஞானப்பிராப்தி தத்துவம் பதார்த்த ஞானத்தானே உண்டாகின்றது. அப்பதார்த்த ஞானப்பிராப்தி தத்துவம் பதார்த்தங்களின்

விசாரத்தானே யுண்டாகின்றது. ஆதலால் அத்தத்துவம் பதார்த்த விசாரம் முமூட்சுக்கள் அவசியம் செய்ய வேண்டும்.

**சங்கை:**—உலகத்திலும் சாத்திரத்திலும் சுகப்பிராப்தியும் துக்க நிவிருத்தியுமே புருஷார்த்தமாகக் காணப்படுகின்றது. அப்புருஷார்த்தமே சம்பாதிக்கத்தக்கது. அத்தத்துவம் பதார்த்த ஞானமோ சுகப்பிராப்தியும் துக்க நிவிருத்தியு மன்று, புருஷார்த்த மல்லாததால் அப்பதார்த்த ஞானம் சம்பாதிக்கத் தக்கதன்று.

**சமாதானம்:**—அப்பதார்த்த ஞானத்திற்குச் சொரூபமாகப் புருஷார்த்த மில்லை யாயினும் அப்புருஷார்த்தத்திற்குச் சாதனம் மகா வாக்கியார்த்த ஞானமாம். அவ்வாக்கியார்த்த ஞானத்திற்கு அப்பதார்த்த ஞானம் ஏதுவாம். ஆதலால் அவ்வாக்கியார்த்த ஞானவாயிலாகப் புருஷார்த்தத்திற்குச் சாதனமாவதால் பதார்த்தஞானம் அவசியம் சம்பாதிக்கத்தக்கது.

## ௧௫. தத்துவம் பதங்களின் வாக்கியார்த்தஞானத்தில் சங்கை சமாதானங்கள்.

**சங்கை:**—எந்த மோக்ஷத்தின் பொருட்டு நீவிர் தத்துவம் பதார்த்தத்தை நிரூபிக்கின்றீரோ அந்த மோக்ஷம் யாது? அஞ்ஞான நிவிருத்தி என்பது மோக்ஷமா? பிரஹ்மபாவ மென்பது மோக்ஷமா? முதற்பட்சம் அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின் அவ்வஞ்ஞான நிவிருத்தியாகிய மோக்ஷம் பிரஹ்ம சொரூபத்தினும் வேறே யாகும். அதனுல் ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம (சஜாதி விஜாதி சுவகதபேத மில்லாதது பிரஹ்மம்) என்னும் சுருதிக்கு முரணாகும். பிரஹ்மத்தை விட வேருகப் பிறிதோர் பாவபதார்த்த மில்லை, அவ்வஞ்ஞான நிவிருத்தி அபாவரூபம்; அஃதிருக்க பிரஹ்மத்தின் அத்துவதியத் தன்மை நிவிருத்தியாகாது என்னும் பாவாத்துவைதபரத்துவத்தால் (அத்துவிதம் உள்ளது என்னும் மேன்மையால்) அச்சுருதிக்கு முரணில்லையாயினும் பிரஹ்மத்தை விட வேருன பாவ அபாவமாகிய சர்வ பிரபஞ்சத்தையும் நிஷேதிக்கும் அத்துவைதபதத்தைச் சுருக்கிக் கேவலம் பாவ பதார்த்தங்களின் நிஷேதபரத்வம் ஒப்புவதில் ஓர் பிரமாணமுமில்லை. அன்றியும் நும்மதத்தில் பிரஹ்மத்தை விட வேருன சர்வ பதார்த்தங்களும் கற்பிதமாகவே கொள்ளப்பட்டிருக்கின்றது. பிரஹ்மத்தை விட வேருவதால் அவ்வவித்தியா நிவிருத்தியும் கற்பிதமேயாம். எப்பதார்த்தம் கற்பிதமாகின்றதோ அது சுக்திரஜதம்போல மித்தையே. ஆகையால் அவ்வவித்தியா நிவிருத்தியாகிய மோக்ஷத்திற்கும் கற்பிதத் தன்மையால் அநித்தத்தன்மையே அடையப்படும். அன்றியும் நும்மதத்தில் அவ்வவித்தையும் கற்பிதமாகவே கொள்ளப்பட்டிருக்கின்றது. கற்பிதவஸ்துவின் அபாவமும் கற்பிதமே, ஆகையால் அக்கற்பித அவித்தையின் நிவிருத்தியும் கற்பிதமேயாகும், கற்பித வஸ்துவிற்குச் சத்தியத்தன்மை சம்பவியாது. இக்காரணத்தானும் அவ்வவித்தியா நிவிருத்தியாகிய மோக்ஷத்திற்கு அநித்யத் தன்மையே பிராப்தமாம். மோக்ஷம் அநித்யமெனல் நுமக்கு இஷ்டமன்று. ஏனெனின் எல்லா மோக்ஷவாதிகளாலும் மோக்ஷம் நித்தியமாகவே கொள்ளப்பட்டிருக்கின்றது.

ஓர் மோக்ஷவாதியும் மோக்ஷத்தை அநித்தியமென ஒப்புவதில்லை. ஒருகால் மோட்சமும் அநித்தியமாயின் முக்தர்கட்கு மீண்டும் பிறப்பு உண்டாதல்வேண்டும். 𑌨 𑌸 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇, 𑌯𑌦𑍍𑌗𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌮 (முக்தன் மீண்டும் வருவதில்லை, எதை யடைந்து மீண்டும் திரும்ப மாட்டார்களோ அது எனது மேலான இடம்) என்கிற தொடக்கத்து சுருதி ஸ்மிருதிகளால் முக்தர்களுக்கு புனரோற்பத்தி நிஷேதிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் அவித்தையின் நிவிருத்தி மோக்ஷமெனல் சம்பவியாது. பிரஹ்மபாவம் மோக்ஷமென்னும் இரண்டாவது பட்சத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், பிரஹ்மபாவம் அநாதியாவதால் நித்திய சித்தம் (எப்போது முள்ளது). எப்பதார்த்தம் நித்திய சித்தமோ அது ஓர் சாதனத்தாலும் சாதிக்கப்படுவதன்று. அநித்திய பதார்த்தமே சாதனத்தால் சாதிக்கப்படுவது. ஆகையால் பிரஹ்மபாவமாகிய மோக்ஷம் ஆத்ம ஞானத்தால் சாதிக்கப்படுமெனல் கூடாது. ஆனல் நீவிர் மோக்ஷம் ஆத்மஞானத்தால் சாதிக்கப்படுமெனக் கொண்டிருக்கின்றீர், ஆகையால் பிரஹ்மபாவமும் மோக்ஷமாதல் சம்பவியாது. இவ்வாறு மோக்ஷம் சொல்லொணுததாகவே மோக்ஷத்திற்குச் சாதனமாகிய மகாவாக்கியார்த்த ஞானம் பயனுடையதாதலும் சொல்ல முடியாதது.

சமாதானம்:—நமது மதத்தில் அவித்தையின் நிவிருத்தியே மோக்ஷம், அவ்வவித்தையின் நிவிருத்திபிரஹ்மத்தைவிட வேறன்று; மற்று அதிஷ்டான பிரஹ்மவடிவமே. ஏனெனின் கற்பிதவஸ்துவின் அபாவம் அதிஷ்டானத்தைவிடவேறன்று. எப்படி கற்பிதசர்ப்பம் இரஜதம் முதலியவைகளின் அபாவம் ரஜ்ஜு சுக்திமுதலிய அதிஷ்டானத்தைவிட வேருகாது; மற்று அதிஷ்டானவடிவமே. யாமோ, அப்படி கற்பித அவித்தியா நிவிருத்தியும் அதிஷ்டான பிரஹ்ம வடிவமே.

சங்கை:—அவ்வவித்தையின் நிவிருத்தியாகிய மோக்ஷத்தை பிரஹ்மவடிவமெனக் கொண்டால் பிரஹ்மவடிவ மோக்ஷம் ஞானத்தால் சாதிக்கப்படுமெனல் முடியாததாகும்; ஆனல் நீவிர் மோக்ஷம் ஞானத்தால் சாதிக்கப்படுமெனக்கொண்டிருக்கின்றீர்.

சமாதானம்:—ஞானத்தால் மோக்ஷம் சாதிக்கப்படுமென்னு மிடத்து சாதிக்கப்படும் என்னும் சத்தத்தால் உண்டாவது என்பது எமக்குக்கருத்தன்று, அதாவது ஞானத்தால் மோக்ஷம் உண்டாகும் என்பது எமது கருத்தன்று. எக்காரணத்தானெனின் அநாதி சித்தமாவதால் பிரஹ்மபாவத்தின் உற்பத்தியே சம்பவியாது; மற்று சாதிக்கப்படுமென்னும் சத்தத்தால் எமக்கு அபிவியக்தி (வெளிப்படுதல்) மாத்திரம் கருத்து, அதாவது ஞானத்தால் மோட்சம் வெளிப்படும் என்பது மாத்திரம் எமது கருத்து. அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் ஞானத்தால் துவைதபிரமத்தின் நிவிருத்தியும் அகண்ட ஏகரச ஆனந்தத்தின் ஸ்பூரத்தியு (விளக்கமு)மே மோக்ஷத்தின் வெளிப்படுதலாம், ஆகையால் அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் வாக்கியார்த்த ஞானம் மோக்ஷத்திற்குச் சாதனமெனல் சம்பவிக்கும். அப்படிப்பட்ட வாக்கியார்த்த ஞானம் தத்துவம் பதார்த்தங்களின் ஞானத்தாற்றான் உண்டாகும், அப்பதார்த்தஞானம் தத்துவம்

பதார்த்த நிரூபணத்தாற்றுனே உண்டாகும், ஆகையால் முதல் தத்பதார்த்தம் நிரூபிக்கபபடுகின்றது.

## கச. தத்பதார்த்த நிரூபணம்.

அசாதாரண தர்மமாகிய இலக்கணமும்,பிரத்தியட்சமுதலிய பிரமாமாண ங்களுமாகிய இரண்டுகளானே பொருள் துணியப்படுகின்றது.இலக்கணப்பிரமா ணங்களன்றி பொருள் துணியப்படுகின்றதில்லை என்னும் நியாயத்தை அங்கீகரி த்து முதலில் அத்ததப்பதார்த்தத்தின் இலக்கணம் கூறப்படுகின்றது. பிரஹ்ம மாகிய தத்பதார்த்தத்தின் இலக்கணம் இருவகைப்படும். ஒன்று தடத்தலட்ச ணம், மற்றொன்று சொரூபலட்சணம். காஃா விதக்கெவஸதிவ ்ா வதஃகஂதட ஷு லக்ஷணஂ (இ-ள்.)எவ்விலக்கணம் தனது லட்சியத்தில் ஒரு போதிருப்பதாய் த்தனது லட்சியத்தைப் பிறபதார்த்தங்களினும் வேறு பிரிக்கின்றதோ அவ்வில க்கணம் தடத்தலட்சணமெனப்படும். பிருதிவிக்குக் கந்தமுடைமை இலக்கணம் தடத்த இலக்கணமாதல் போலவாம். மகாப்பிரளயத்தில் எல்லாகாரியங்களும் நாசமுறுகின்றன,ஆகையால் நையாயிகரது மதத்தில் அக்கந்தகுணம் மகாப்பிர ளயத்தில் பரமாணுவாகிய பிருதிவியில் இராது. மேலும்நையாயிகரது மதத்தில் எக்கணத்தில் திரவியம் உண்டாகின்றதோ அக்கணத்தில் அத்திரவியத்தினிடத் து உருவமுதலிய குணங்கள் உண்டாகா; மற்று இரண்டாவது கணத்தில் அவ் வுருவமுதலிய குணங்கள் உண்டாகின்றன. முதற் கணத்தில் அத்திரவியம்நிர்க் குணமாகவே உண்டாகின்றது. இப்பொருளின் யுக்தியோ நியாயப்பிரகாசத் தின் இரண்டாவது பரிச்சேதத்தின் முதலில் விரிவாக நிரூபித்திருக்கின்றோம். ஆங்கு அறிந்துகொள்ளுக. பிருதிவியின் உற்பத்திக்கணத்திலும் அக்கந்தகுணம் அப்பிருதிவியினிடத்து இராது; ஆனால் இடைக்காலத்தே அக்கந்தகுணம் அப் பிருதிவியினிடத்திருக்கும், ஆகையால் அக்கந்தகுணம் ஓர் போதையதாம். அன் றியும் அக்கந்தகுணம் தனது ஆசிரியமாகிய பிருதிவியைப் பிறஜலமுதலிய பதா ர்த்தங்களினும் வேறு பிரிப்பதுமாம், இதனுல் ஓர் போதையதாதலாலும், வேறு பிரிப்பதாலும், கந்தமுடைமை பிருதிவியின் தடத்த இலக்கணமே யாம். இவ்வாறு தத்பதார்த்தமாகிய பிரஹ்மத்திற்கும் ஸ்ரு ஷ்டி ஸிதி லயகாரணக்ஂ (சிருட்டி திதி லயங்களின் காரண முடைமை) என்பது தடத்த லட்சணமாம். ஈண்டு சிருட்டி சத்தத்தால் ஜகத்தை ஆக்கலும், திதி சத்தத்தால் ஜகத் தைக் காத்தலும், இலய சத்தத்தால் ஜகத்தை அழித்தலும் கொள்ளவே ண்டும். ஜகத்தின் ஆக்கல் அழித்தல் காத்தலாகிய காரணமுடைமை பிரஹ் மத்தினிடத்து எப்போது மிராது; ஆனல் மாயைக்கு அதிஷ்டானமாகிய காலத் திற்றுனே இருக்கும், ஆகையால் அச்சிருட்டி திதி லயங்களின் காரணமுடை மை ஓர் போதையதாம். சாங்கிய நையாயிகர் முதலியோர் ஜகத்திற்குக் கார ணமாகக் கற்பிக்கும் பிரதானம் பரமாணு முதலியவற்றினும் அவ்விலக்கிய பிரஹ்மத்தை வேறு பிரிப்பதுமாம், ஆகையால் வேறுபடுத்துவதுமாம். இவ் வாறு ஓர் போதையதாதலாலும்,வேறு படுத்துவதாலும் சிருட்டி திதி லயங்களி ன் காரணமுடைமை பிரஹ்மத்தின் தடத்தலட்சணம் எனப்படுகின்றது. இனி அவ்விலக்கணத்திலுள்ள பதங்களின் பயன் கூறப்படும். இலய காரணமுடை

மை என்னும் இம்மாத்திரமே பிரஹ்மத்தின் தடத்தலக்ஷணமெனக் கொண்டால் பிரஹ்மத்திற்குக் கேவலம் ஜகத்தின் உபாதானகாரணத்தன்மையே பெறப்படும். ஏனெனின், எக்காரியம் எக்காரணத்தில் இலயமாகின்றதோ அக்காரியத்திற்கு அக்காரணம் கேவலம் உபாதானகாரணமேயாகக் காணப்படுகின்றது. எப்படி கடத்தின் லயத்திற்குக் காரணமாகிய மண் அக்கடத்திற்குக் கேவலம் உபாதானகாரணமே யாகின்றதோ; நிமித்தகாரணமாகின்றதில்லையோ, அப்படி பிரஹ்மத்தைவிட வேருக ஜகத்திற்கு ஓர் நிமித்தகாரணம் அங்கீகரிக்கவேண்டும், அதனுல் ஸஜாதீயவிஜாதீயஸ்வகதபேதரஹிதம் (பிரஹ்மம் சுசாதி விசாதி சுவகதபேத மற்றது) என்னுஞ் சுருதிக்கு விரோதமாகும், அந்தத்தோஷத்தை நீக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் திதி காரணமுடைமை சொல்லப்பட்டது. அல்லது 'திதி லயங்களின் காரணமுடைமை' என்னுமிம் மாத்திரமே பிரஹ்மத்தின் தடத்தலக்ஷணமெனின் கடத்தின் உற்பத்திக்குத்தண்ட முதலியவைகள் நிமித்தகாரணமாவதுபோல பிரஹ்மத்தைவிட வேருக ஜகத்திற்கு ஓர் நிமித்தகாரணம் வேண்டும்; வேண்டவே மீண்டும் அவ்வத்துவித சுருதி விரோதப்படும். அக்குற்றத்தைத் தவிர்த்தற்பொருட்டு அவ்விலக்கணத்தில் சிருட்டியின் காரணமுடைமை சொல்லப்பட்டது. அல்லது 'சிருட்டி திதிகளின் காரணமுடைமை' என்னுமிம் மாத்திரமே பிரஹ்மத்தின் தடத்தலக்ஷணமெனின் குலாலன் கடத்திற்கு நிமித்தகாரணமாவதுபோல பிரஹ்மமும் ஜகத்திற்குக்கேவலம் நிமித்தகாரணமேயாகும், உபாதான காரணம் வேறென்றேயாகும், அதனுல் வேதாந்த சித்தாந்தம் முரண்படும். ஆகையால் அக்குற்றத்தை நீக்குவான் கருதி அவ்விலக்கணத்தில் இலய காரணமுடைமை கூறப்பட்டது. இவ்வகையாக சிருட்டி திதி லயமென்னும் முக்காரண முடைமையாகிய தடத்த லக்ஷணங் கூறுவதால் பிரஹ்மம் ஜகத்திற்கு அபின்ன நிமித்த உபாதான காரண மென்பது பெறப்படும். அதாவது பிரஹ்மம் ஒன்றே ஜகத்திற்கு உபாதானகாரணமும், நிமித்தகாரணமுமாம். இப்படிச் சொல்லுவதால் பிரஹ்மத்தின் தடத்த லக்ஷணம் இது வென்பது பெறப்பட்டது. ஜகத்கர்த்ருத்வே ஸதி ஜகதுபாதாநத்வம் (இ-ள்.) ஜகத்தின் கர்த்திருத் தன்மையோடு ஜகத்தின் உபாதானத் தன்மை என்பதுவே பிரஹ்மத்தின் தடத்த லக்ஷணம். 'ஜகத்தின் உபாதானத்தன்மை' என்பது மாத்திரமே பிரஹ்மத்தின் தடத்த லக்ஷணமெனின் மாயையினிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், சுத்தப் பிரஹ்மத்திற்கோ ஜகத்தின் உபாதானத் தன்மையில்லை; மற்று மாயா விசிஷ்ட பிரஹ்மத்திற்கே ஜகத்தின் உபாதானத் தன்மையுண்டு. விசிஷ்டத்திலிருக்கும் தருமம் விசேணத்தின் கண்ணும் அவசிய மிருக்கும். ஆகையால் பிரஹ்மத்தின் விசேஷணமாகிய மாயைக்கு ஜகத்தின் உபாதான காரணத்தன்மை அவசியமுண்டாகும். மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத் (மாயையினை ஜகத்திற்குக் காரணமான பிரகிருதி என்று அறிய வேண்டும்) என்னும் சுருதியும் மாயையினை ஜகத்திற்கு உபாதான காரணமெனச் சொல்லியுளது. ஆதலால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்கவேண்டி அவ்விலக்கணத்தில் 'ஜகத்தின் கர்த்திருத் தன்மை' சொல்லப்பட்டது. காரியத்தினது உபாதானத்தின் அபரோக்ஷ ஞானமும், அக்காரியத்தைச் செய்யும் இச்சையும், அவ்விச்சையாற் றோன்றும் முயற்சி

எனப்படும் கிருதியும் ஆகிய மூன்றையும் உடையவனே கர்த்தாவெனப்படுவான். குலாலன் முதலியோர் இச்சை ஞான முயற்சியுடையோராதலால் கடமுதலிய காரியங்கட்குக் கர்த்தாவென்று சொல்லப்படுவார் போலும். இவ்வகையான கர்த்தாத் தன்மை சேதனத்தினிடத்தே நிகழும்; ஜடமான மாயையினிடத்து நிகழாது. ஆகையால் 'ஜகத்தின் கர்த்திருத்தன்மை' கூறுவதால் மாயையினிடத்து மேற்சொல்லிய இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது 'ஜகத்தின் கர்த்திருத்தன்மை' மாத்திரமே பிரஹ்மத்தின் தடத்த லக்ஷணமெனின் நையாயிகர் ஜகத்திற்குக் கேவலம் கர்த்தாவாகவே ஒப்பியுள்ள ஈஸ்வரனிடத்து முற்சொல்லிய இலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவிருத்திக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் ஜகத்தின் 'உபாதானத் தன்மை' சொல்லப்பட்டது. நையாயிகர் பரமாணுக்களை ஜகத்திற்கு உபாதானமாகக் கொண்டுள்ளார், ஈஸ்வரனை ஜகத்திற்குக் கர்த்தாவாகக் கொண்டுள்ளார். இவ்வாறு நையாயிகரால் ஜகத்தின் உபாதானமும் கர்த்தாவும் வேறாகவே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஆனால் நம்சித்தாந்திலோ பிரஹ்மம் ஜகத்திற்கு அபின்ன நிமித்தோபாதான காரணமெனக் கொண்டிருக்கின்றோம். ஜகத்தின் 'உபாதானத் தன்மை' சொல்லுவதால் நையாயிகர் ஒப்பியுள்ள ஈஸ்வரனிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—அவ்வதிவியாப்தியுடைய இலக்கணமும் தனது இலக்ஷியத்தின் பெறுதியை ஏன் செய்யாது?

## கரு. அதிவியாப்தி முதலிய தோஷங்களின் இலக்கணங் கூறுதல்.

சமாதானம்:—இலக்கணத்திற்கு அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவம் என்னும் மூன்று தோஷங்களுண்டு. அம்மூன்று தோஷங்களுள் ஒரு தோஷமாவது எவ்விலக்கணத்தி லிருக்கின்றதோ அவ்விலக்கணம் துஷ்டமெனப்படும். அத்துஷ்ட லக்ஷணத்தால் இலக்ஷியம் பெறுவது கூடாது. எவ்விலக்கணம் அம்மூன்று தோஷங்களில்லாததோ, அவ்விலக்கணம் துஷ்டமல்லாதது எனப்படும். துஷ்டமல்லாத இலக்கணத்தாற்றானே இலக்கியத்தின் பெறுதியுண்டாம். ஆதலால் இலக்கணத்தினிடத்து பதங்களைப்புகுத்தி அவ்வதிவியாப்தி முதலிய தோஷங்களை அவசியம் நிவிருத்தி செய்யவேண்டும். எவ்விலக்கணம் தன் இலக்கியத்தின் கண்ணிருப்பதாய் இலக்கியமல்லாததன் கண்ணுமிருப்பதாமோ அவ்விலக்கணம் அதிவியாப்தி தோஷமுடையது. அது 'கோடுடையது ஆ' என்னுமிலக்கணம் ஆவாகிய இலக்கியத்தின்கண்ணிருப்பதாய் எருமை ஆடு முதலியவான இலக்கியமல்லாதவைகளின்கண்ணுமிருப்பது போலவாம். ஆகையால்'கோடுடைமை' யாகிய இலக்கணம் அதிவியாப்திக் குற்றமுடையது. எவ்விலக்கணம் தனது இலக்கியத்தின் ஏகதேசத்திருக்குமோ, அவ்விலக்கணம் அவ்வியாப்திக் குற்றமுடையது. அது 'கபிலநிறமுடையது ஆ,' என்னுமிலக்கணம் சில ஆக்களினிடத்தினிருக்கின்றது எல்லா ஆக்களினிடத்திராதது போலவாம். ஆகையால் 'கபிலத்தன்மை' இலக்கணம் அவ்வியாப்திக்குற்றமுடையது. எவ்விலக்கணம் தனது இலக்கியமாத்திரத்தினிடத்துங்கூட இருப்பதில்லையோ, அவ்வி

லக்கணம் அசம்பவக் குற்றமுடையது. அது 'ஒற்றைக் குளம்புடையது ஆ' என்னுமிலக்கணம் ஓர் ஆவினிடத்து மிராதது போலவாம். ஆகையால் 'ஒற்றைக் குளம்புடைமை' என்னு மிலக்கணம் அசம்பவக் குற்றமுடையது. எப்பதார்த் தத்திற்கு எவ்விலக்கணஞ் செய்யப்படுகின்றதோ, அவ்விலக்கணத்திற்கு அப் பதார்த்தம் இலக்கியமெனப்படும். அதிவியாப்தி முதலியவெல்லாக் குற்றங்களு மில்லாததால் முற்சொல்லிய பிரஹ்மத்தின் தடத்த லக்ஷணம் நலமானது.

## கசூ. பிரஹ்மம் ஜகத்திற்கு அபின்னநிமித்த உபாதானம் என்பதிற் சங்கை சமாதானங்கள்.

**சங்கை:—**பிரஹ்மம் ஒன்றற்கே ஜகத்தின் உபதானத் தன்மையும், கர்த் தாத் தன்மையும் சம்பவியாது. ஏனெனின், உலகத்தில் அவ்வாறு காணப்படுவ தில்லை. கடத்தின் கர்த்தாவாகிய குலாலன் அக்கடத்திற்கு உபாதான காரண மாக மாட்டான், அக்கடத்திற்கு உபாதானகாரணமாகிய மட்டிரளும் அக்கடத் திற்குக் கர்த்தாவாகா; ஆனல் அம்மட்டிரள் அக்கடத்திற்கு உபாதான காரணமே, குலாலன் அக்கடத்திற்குக் கர்த்தாவே. இவ்வாறு கடமுதலிய காரி யங்களினிடத்து உபாதான காரணமும், கர்த்தாவும் பேதமாகவே காணப்படுகி ன்றன. காணப்படும் பொருளை ஒட்டியே காணப்படாத பொருள் கற்பிக்கப்படு கின்றது. காணப்படும் பொருளுக்கு மாருகக் காணப்படாத பொருளின் கற் பனை உண்டாகாது. பிரஹ்மம் ஒன்றே ஜகத்திற்கு உபாதானமும், கர்த்தாவு மாம் என்று ஒப்புதலும் காணப்படாத பொருளின் கற்பனையாம். அது காணப் படும் பொருளையன்றி எவ்வாறு நிகழும்; நிகழாது. காண்டலுக்கு விரோத மாவதால் பிரஹ்மம் ஒன்றே ஜகத்துக்கு உபாதானமும், கர்த்தாவுமாம் என்று ஒப்புதல் நன்றல்ல. மற்றும் ஈஸ்வரனை ஜகத்திற்கு கர்த்தா வெனவும், அவ்வீஸ் வரனை விட வேருன பரமாணு முதலியவைகளை அச்சகத்திற்கு உபாதான கா ரணமென்றுங் கொள்ளவேண்டும். இவ்வர்த்தத்தில் காண்டலுக்கு விரோத முண்டாகாது. கடமுதலிய காரியங்களில் உபாதான கர்த்தாக்களின் பேதம் யாவருக்கும் பிரசித்தமே. இப்படி சொல்லுவதால் இவ்வனுமானம் பெறப் படுகின்றது. உஉ௦ ஜமஜஹி௩ நிஜிதொவா ஊாநகஂ, காஈ ஃஜாகுவாக, வடிாஜிவக (இ-ள்.) இச்சகத்து உபாதான காரணத்தையும், கர்த்தாவாகிய நிமித்தகார ணத்தையும் வேருகவுடையது, காரியமாவதால், கடமுதலிய காரியங்களைப் போலும்.

அல்லது பிரஹ்மத்தை ஜகத்திற்கு அபின்ன நிமித்த உபாதான காரண மாக நாம் கற்பிப்பதில்லை. ஆனல் தமெைக்ஷத ஬ஹுஸ ஸ்ரா௦ ஹஜா யெய (அநேக வடிவங்களாவேமாக என்று சங்கற்பித்தது) என்னும் மறையே அப் பொருளை உணர்த்துகின்றது என்று நீவிர் சொல்லின் அது சம்பவியாது. ஏனெனின், முற்சொல்லிய முறைப்படி காணப்படும் பொருளுக்கு மாருக அம் மறைக்கு அவ்வாறுகூறிய பொருள் பொருந்தாது; மற்றும் வேறு பொருளே பொருந்தும். ஆகையால் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் அபின்ன நிமித்த உபா தானத்தன்மை சம்பவியாது.

சமாதானம்:—தடைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய (இ-ள்.) அப்பரமாத்மதேவன் அநேக வடிவங்களாவேமாக என்று சங்கற்பித்தார். அப்பரமாத்மதேவன் அநேக வடிவங்களாய் உற்பவிப்பேனுக என்றும் இச்சித்தார். இச்சுருதியால் ஒரே பிரஹ்மத்திற்கு பல வடிவங்களாகும் இச்சை சொல்லப்பட்டிருக்கின்றது. அவ்விச்சை சேதனத்தினதே தருமமாம்; ஜடத்தின் தர்மமாகாது, ஆகையால் அச்சுருதியின் வலியால் சேதனப் பிரஹ்மத்திற்கே ஜகத்தின் உபாதானத் தன்மையும், கர்த்தாத் தன்மையும் நிச்சயிக்கப்படுகின்றன. தாற்பரியத்தை நிச்சயிக்கும் உபக்கிரம உபசம்ஹார முதலிய ஆறு இலிங்கங்களால் சர்வ வேதாந்த வாக்கியங்களுக்கும் அத்துவிதீய பிரஹ்மத்தினிடத்தே தாற்பரியம் நிச்சயிக்கப்படுகின்றது. ஆதலால் முற்சொல்லிய அனுமானத்தால் அச்சுருதியின் அர்த்தம் பாதிக்கப்பட முடியாது; ஆனுல் அச்சுருதிக்கு விரோதப்பட அந்தப் பிரத்தியக்ஷ அனுமான முதலியவைகளே ஆபாசத் தன்மை யடையும். உபக்கிரம முதலிய ஆறு லிங்கங்களின் சொரூபம் பிறகு இரண்டாவது பரிச்சேதத்தில் சொல்லப்படும். அல்லது உலகத்தில் ஓர் காரணத்தையும் காரியத்திற்கு அபின்ன நிமித்த உபாதானமாகக் காணப்படவில்லை, ஆகையால் ஜகத்தின் உபாதான காரணத்திற்கும், நிமித்த காரணத்திற்கும்வேற்றுமையே அங்கீகரிக்க வேண்டும் என்று வாதியால் முற்சொல்லப்பட்டது, அது அசங்கதம். ஏனெனின், உலகத்திலும் சிலந்தி முதலிய ஜந்துக்களுக்கு தம்மாற் செய்யப்பட்ட நூலாகிய காரியத்திற்கு அபின்ன நிமித்த உபாதான காரணத் தன்மையே காணப்படுகின்றது. அதாவது அச்சிலந்தி, நூலாகிய காரியத்திற்குத் தானே உபாதான காரணமும் தானே கர்த்தாவாகிய நிமித்த காரணமுமாகின்றது. அல்லது நையாயிகரது மதத்தில் கடஈஸ்வரர்களாகிய இரண்டின் சையோக சம்பந்தம் சமவாய சம்பந்தமாக அக்கட ஈஸ்வரர்களிரண்டினிடத்து முண்டாகின்றது, ஈஸ்வரன் அச்சையோகத்திற்கு உபாதான காரணனும் காரியமாத்திரத்திற்கு நிமித்தகாரணனுமாவன். ஆகையால் அச்சையோகமாகிய காரியத்திற்கு அவ்வீஸ்வரன் நிமித்த காரணன்; இவ்வாறு நையாயிகர் எங்ஙனம் சையோகமாகிய காரியத்திற்கு ஈஸ்வரனுக்கு அபின்ன நிமித்த உபாதானத் தன்மை அங்கீகரிக்கின்றனரோ, அங்ஙனம் நமது சித்தாந்திலும் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் அபின்ன நிமித்தஉபாதான காரணத்தன்மை அங்கீகரிக்கின்றோம், ஆதலால் முற்சொன்னபடி காண்டலுக்கு விரோதம் பிராப்தமாகாது. இதனுல் ஜகத்தின் அபின்ன நிமித்த உபாதான காரணத் தன்மை பிரஹ்மத்தின் தடத்த லக்ஷணம் பொருந்து மென்பது பெறப்பட்டது.

சங்கை:—அஃதோர் பிரமாணத்தால் பிரஹ்மத்தினிடத்து ஜகத்தின் காரணத்தன்மை சித்திக்கும்போது பிரஹ்மத்தின் தடத்தலக்ஷணம் சம்பவிக்கும். காரணத்தன்மை சித்திப்பதன்றி முற்சொல்லிய லக்ஷணம் சம்பவியாது.

சமாதானம்:—பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உற்பத்தி திதி லயங்களின் காரணத்தன்மை சாட்சாத் சுருதிப்பிரமாணத்தானும், வியாசபகவானது சூத்திரத்தானும் பெறப்படும். சுருதி. யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே யேந ஜா

தாநி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபிஸம் விஶந்தி (இ-ள்.) எந்தப்பிரஹ்மத்தினின்றும் இவ்வெல்லா பூதங்கள் உண்டாகின்றனவோ, உண்டான இவ்வெல்லா பூதங்கள் எந்தப்பிரஹ்மத்தால் ஜீவனத்தை அடைகின்றனவோ, நாசத்தை அடைந்த இவ்வெல்லா பூதங்கள் எந்தப்பிரஹ்மத்தினிடத்து இலயபாவத்தை அடைகின்றனவோ. **சூத்திரம்.** ஜந்மாத்யஸ்ய யத: (இ-ள்.) எந்தச்சர்வஞ்ஞ சர்வசக்தியுடைய காரணத்தினின்றும் இவ்வாகாய முதலிய பிரபஞ்சத்தின் ஜன்ம திதி லயங்கள் உண்டாகின்றவோ அதுவே பிரஹ்மம். இதுகாறும் பிரஹ்மத்தின் தடத்த லக்ஷணம் நிரூபிக்கப்பட்டது. தடத்தலக்ஷணத்தின் ஞான முண்டாகியும் பிரஹ்மத்தினது சொரூபலக்ஷணத்தின் ஞானம் உண்டாகாதவரைக்கும் உள்ளபடிக்கான சொரூபத்துடன் அந்தபிரஹ்மம் அறியப்படுவதில்லை. ஆகையால் இனி தத்பதார்த்த பிரஹ்மத்தின் சொரூபலக்ஷணம் சொல்லப்படும்.

## கள. தத்பதார்த்தத்தின் சோரூபலக்ஷணம்.

தத்பதார்த்த பிரஹ்மத்தின் சொரூபலட்சணம். ஸ்வரூபம் ஸத் வ்யாவர்த்தகம் ஸ்வரூப லக்ஷணம் (இ-ள்.) எவ்விலக்கணம் தனது லக்ஷியத்தின் சொரூபமயமாயிருந்து தனது லக்ஷியத்தை மற்றபதார்த்தங்களினின்றும் வேறு பிரிக்குமோ, அவ்விலக்கணம் சொரூபலக்ஷணமெனப்படும். அதுபிருதிவிக்குப்பிருதிவித்தன்மை சொரூபலட்சணமாதல் போலவாம். ஜாதி வியக்தியாகிய இரண்டுகளுக்கும் சித்தாந்தத்தில் தாதான்மியமே அங்கீகரிப்பட்டுளது, ஆகையால் பிருதிவித்தன்மைஜாதிக்கும் பிருதிவியின் வியக்தியோடு தாதான்மியமேயுளது. பிருதிவித்தன்மை ஜாதி அப்பிருதிவியின் சொரூபமயமாய் அப்பிருதிவியை ஜலமுதலிய மற்ற பதார்த்தங்களினின்றும் வேறு பிரிக்கின்றது, ஆகையால் பிருதிவித்தன்மை ஜாதி எங்ஙனம் அப்பிருதிவியின் சொரூபலட்சணமாமோ, அங்ஙனமே சத்தியம் ஞானம் ஆனந்தம் என்னும் மூன்றும் பிரஹ்மத்தின் சொரூபலட்சணமாம். அச்சத்திய முதலிய மூன்றும் பிரஹ்மத்தின் சொரூபமயமாய்ப் பிரஹ்மத்தை அசத் ஜடதுக்கமான ஜகத்தினின்றும் வேறு பிரிக்கின்றது, ஆகையால் அச்சத்திய முதலியவைகளினிடத்துப் பிரஹ்மத்தின் சொரூபலட்சணத்தன்மை சம்பவிக்கின்றது.

**சங்கை:**—சத்திய முதலியவற்றை பிரஹ்மத்தின் சொரூபமெனக்கொண்டால் அச்சத்தியாதிகளினிடத்து பிரஹ்மத்தின் லக்ஷணத்தன்மையும், பிரஹ்மத்தினிடத்து அச்சத்தியாதி லக்ஷணங்களின் லக்ஷியத்தன்மையும் உண்டாகாதாகும். எக்காரணத்தானெனின், இலக்ஷிய லக்ஷணபாவங்கள் பேதத்தின் வசமேயாகின்றன; அபேதத்தில் இலட்சிய லக்ஷணபாவங்கள் உண்டாகா. ஓர்கால் அபேதத்திலும் இலக்ஷிய லக்ஷணபாவங்கள் உண்டாகுமாயின் பிருதிவியும் பிருதிவிக்கு இலக்கணமாதல் வேண்டும், அவ்வண்ணமே பிரஹ்மமும் பிரஹ்மத்திற்கு இலக்கணமாதல் வேண்டும்.

**சமாதானம்:**—அச்சத்திய முதலியன வாஸ்தவமாகப் பிரஹ்மத்தின் சொரூபமே; ஆயினும் அச்சத்திய முதலிய வற்றில் பிரஹ்மத்தின் கற்பிதபேதம்

யாம் அங்கீகரிக்கின்றோம். அக்கற்பிதபேதத்தை யங்கீகரிப்பதனுனே பிரஹ்மத்திற்கும் சத்திய முதலியவைகட்கும் இலக்ஷிய லக்ஷணபாவங்கள் சம்பிவிக்கின்றன. இவ்வார்த்தை முதியோருங் கூறியிருக்கின்றனர். ஆநந்தோ விஷயாநுபவோ நித்யத்வம் சேதி ஸந்தி யே| தர்மா அப்ருதக்த்வேபி ப்ருதகிவாவபாஸந்த இதி (இ-ள்.) ஆனந்தம், ஞானம் நித்தியத்வமென்னும் மூன்று தருமங்கள் பிரஹ்மத்தினவாம், அம் மூன்று தருமங்கள் வாஸ்தவமாக பிரஹ்மத்தைவிட வேருகாதனவாயிருந்தும் வேருனவைகள்போலத் தோன்றுகின்றன.

சங்கை:—அச்சத்திய முதலிய தருமங்கள் வாஸ்தவமாகப் பிரஹ்மத்தைவிடவேறல்லாதவைகளேயாயின் அச்சத்திய முதலியவைகள் பிரஹ்மத்தைவிட வேருக யாதுகாரணத்தால் தோற்றுகின்றன?

சமாதானம்:—அந்தக்கரணமும், அவ்வந்தக்கரண தருமமுமாகிய உபாதிகளின் வசத்தால் அச்சத்திய முதலியவைகளுக்குப் பிரஹ்மத்தைவிட வேருகத் தோற்றுதல் கூடும். அதுகாட்டப்படுகின்றது. பாத அபாவ விசிஷ்டசைதன்யம் சத்திய பதத்தின் வாச்சியார்த்தம். விருத்தியவச்சின்ன சைதன்யம் ஞானபதத்தின் வாச்சியார்த்தம், பிரீதிமுதலிய விருத்தியவச்சின்ன சைதன்யம் ஆனந்த பதத்தின் வாச்சியார்த்தம், ஆகையால் அச்சத்தியமுதலியவைகட்கும் பிரஹ்மத்திற்கும் வாஸ்த்தவமாகப் பேதமில்லையாயினும் உபாதிபானுய பேதமிருக்கவே இலக்ஷிய லக்ஷணபாவங்கள் சம்பவிக்கின்றன. அச்சத்திய முதலியன பாகத்தியாக லக்ஷணையால் அகண்டப்பிரஹ்மத்தையே போதிக்கின்றன. ஆகையால் அவ்விலக்கணவாக்கியத்தால் சத்திய முதலியவைகட்கும் பிரஹ்மத்திற்கும் குணகுணிபாவம் சித்தியாது. அச்சத்திய முதலியவைகளினது வாச்சியார்த்த பேதம் முன் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் அச்சத்திய முதலிய பதங்களினிடத்து பரியாயத்தன்மையு முண்டாகாது. இனி அவ்விலக்கணவாக்கியத்திலுள்ள சத்திய முதலியவைகளின் பயன் சொல்லப்படும். 'சத்தியம் பிரஹ்மம்' என்னு மிவ்வளவே பிரஹ்மத்தின் சொரூபலக்ஷணமெனின் நையாயிகர் அங்கீகரித்துள்ள சத்தாஜாதியினிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும், அன்றியும் இலக்ஷிய பிரஹ்மத்திற்கு ஜடத்தன்மை பிராப்தமாகும். அத்தோஷத்தை நிவிருத்திக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் ஞானம் என்னும் பதம் சொல்லப்பட்டது. அச்சத்தா ஜாதியினிடத்து ஞானமாகிய தன்மையில்லை, ஆகையால் அச்சத்தா ஜாதியினிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது, பிரஹ்மத்தினிடத்து ஜடத்தன்மையும் உண்டாகாது. அல்லது 'ஞானம் பிரஹ்மம்' என்னுமிம்மட்டே பிரஹ்மத்தின் லக்ஷணமெனின் நையாயிகரால் அங்கீகரிக்கப்பட்டுள்ள ஆத்மாவின் ஞான குணத்தினிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும், அன்றியும் இலக்ஷிய பிரஹ்மத்திற்கு அநித்தத் தன்மையும், அபுருஷார்த்தத் தன்மையும் அடையப்படும். அத்தோஷத்தை நீக்கும்பொருட்டு அவ்விலக்கணத்தில் 'ஆனந்தம்' என்னும் பதம் சொல்லப்பட்டது. அந்த ஞானகுணத்தில் ஆனந்தவடிவத்தன்மையில்லை, ஆகையால் ஞானகுணத்தில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தியும்

அவ்விலக்ஷிய பிரஹ்மத்திற்கு அபுருஷார்த்தத் தன்மையுமுண்டாகா. அல்லது 'ஆனந்தம் பிரஹ்மம்' என்னுமிவைகளே பிரஹ்மத்தின் லக்ஷணமெனின், விஷய ஜன்ய சுகத்தில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தியும், இலக்ஷிய பிரஹ்மத்திற்கு ஜடத்தன்மையும் பிராப்தமாகும். அத்தோஷத்தை விலக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் 'ஞானம்' என்னும் பதம் சொல்லப்பட்டது. அவ்விஷய சுகத்தில் ஞானவடிவத்தன்மையில்லை, ஆகையால் அதனிடத்து அதிவியாப்தியும், இலக்ஷிய பிரஹ்மத்திற்கு ஜடத்தன்மையுமுண்டாகா. மேலும் அவ்விலக்ஷியப் பிரஹ்மத்தினிடத்து அநித்தத்தன்மை நீக்கும் பொருட்டு 'சத்தியம்' என்னும் பதம் சொல்லப்பட்டது. இவ்வாருகிய பயனுடைமையால் அச்சத்திய முதலிய மூன்று பதங்கள் பொருளுடையனவாம். இதனல் சத்தியம் ஞானம் ஆனந்தம் என்னும் மூன்று தருமங்களும் சேர்ந்து பிரஹ்மத்தின் சொரூபலக்ஷணங்களாகின்றன.

சங்கை:—பிரஹ்மத்தின் சத்தியாதி வடிவத்தன்மை ஓர்பிரமாணத்தாற் பெறப்பட்டவழி அச்சத்திய முதலியவற்றிற்கு பிரஹ்மத்தின் சொரூபலக்ஷணத்தன்மை சித்திக்கும். அந்தப்பிரமாணம் யாது?

சமாதானம்:—பிரஹ்மத்தின் சச்சிதானந்தத்தன்மையில் சாட்சாத்சுருதியும் வியாசபகவானது சூத்திரமும் பிரமாணங்கள். சுருதி. ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம ஆநந்தோ ப்ரஹ்ம (இ-ள்.) பிரஹ்மம் சத்தியம் ஞானம் அனந்தம் ஆனந்தம். ஈண்டு அந்தம் என்பது பரிச்சேதத்திற்காம். அஃது எதன்கண் இல்லையோ அது அனந்தமெனப்படும். அஃதாவது தேசபரிச்சேதம் காலபரிச்சேதம் வஸ்துபரிச்சேதமாகிய மூன்று பரிச்சேதமென்னுமந்தமற்றது யாதோஅதுஅனந்தமெனப்படும். அப்படிப்பட்ட அனந்தத்தன்மை பிரஹ்மத்தின் பாலேயுண்டு. இவ்வார்த்தை வேறுசாஸ்த்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். நவ்யாபித்வாத் தேசதோ(அ)ந்தோ நித்யத்வாந்நாபி காலத: நவஸ்துதோ(அ)பி ஸர்வாத்ம்யாதாநந்த்யம் ப்ரஹ்மணி த்ரிதா (இ-ள்.) பிரஹ்மம் சர்வதேசத்திலும் வியாபகம், ஆகையால் பிரஹ்மத்திற்கு தேசத்தானந்தமில்லை. பிரஹ்மம் நித்தியம், ஆகையால் பிரஹ்மத்திற்குக் காலத்தானும் அந்தமில்லை. பிரஹ்மம் சர்வாத்மவடிவம், ஆகையால் பிரஹ்மத்திற்கு வஸ்துவானும் அந்தமில்லை. இவ்வாறு பிரஹ்மத்தினிடத்து மூவகையான அநந்தத் தன்மையுண்டு. வியாச சூத்திரம் ஆநந்தாதய: ப்ரதாநஸ்ய (இ-ள்.) ஆநந்தம் சத்தியம் ஞானம் என்னுந் தொடக்கத்துக் குணங்கள் பிரஹ்மத்தின் சொரூபமயமாய்ப் பிரஹ்மத்தை உணர்த்துவனவாம், ஆகையால் நிர்க்குணப் பிரஹ்மத்தியானத்தின் பொருட்டு அவ்வாநந்தாதி குணங்கள் வேதத்தின் எல்லா சாகைகளிலும் உபசம்ஹாரஞ் செய்யத்தக்கன. இவைகளைக்கூறிய சுருதி சூத்திரங்களால் பிரஹ்மத்திற்குச் சத்திய ஞானதி வடிவத்தன்மை சித்திக்கின்றது. இதனல் அச்சத்திய ஞானதிகளிடத்து பிரஹ்மத்தின் சொரூபலக்ஷணம் பொருந்தும்.

சங்கை:—இச்சொரூப லக்ஷணம் சம்பவிக்கினும் முற்சொல்லிய ஜகத்தின் உற்பத்தி திதி லயங்களின் காரணத்தன்மையாகிய பிரஹ்மத்தின் தடத்த லக்ஷ

ணம் சம்பவியாது, ஏனெனின், பிரஹ்மத்திற்கு நீவிர் ஜகத்தின் உபாதான காரணம் நிமித்த காரணங்கள் ஒப்புகின்றீர், அவற்றுள் முதன்மையான உபாதான காரணத்தன்மையே பிரஹ்மத்திற்குச் சம்பவியாது. ஏனெனின், அவ்வுபாதான காரணம் ஆரம்பகம், பரிணாமி, விவர்த்தோதிஷ்டானம் என்னும் பேதத்தால் மூவகைப்படும். அம்மூன்றனுள் பிரஹ்மத்திற்கு எவ்வுபாதான காரணம் நீவிர் ஒப்புகின்றீர்? உமது மதத்தில் பிரஹ்மம் ஓரே அத்துவிதீயடிவமாகையால் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் ஆரம்பகத் தன்மை சம்பவியாது. ஒன்றொடொன்று கூடிய அநேக திரவியங்களுக்கே ஆரம்பகத் தன்மையுண்டு. அது நையாயிகரது மதத்தில் ஒன்றற்கொன்று சையோகமுடைய வனேகபரமாணுக்களுக்குஜகத்தின் ஆரம்பகத் தன்மையுண்டாவது போலவாம். 𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌚𑍇𑌤𑌾𑌃 𑌕𑍇𑌵𑌲𑍋 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌶𑍍𑌚 । 𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌂 𑌅𑌵𑌿𑌕𑌾𑌰𑍋𑌽𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇, (ஆத்மா சாக்ஷி, சித்து, கேவலம், நிர்க்குணம், நிஷ்களம், நிஷ்கிரியம், சாந்தம், விகாரமற்ற தென்று சொல்லப்படுகின்றது) என்பதாதி சுருதி ஸ்மிருதிகளால் பிரஹ்மத்திற்கு நிர்க்குணம் நிஷ்கிரியம் நிரவயவம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் பிரஹ்மத்திற்கு பரிணாமி யுபாதானத்தன்மையும் சம்பவியாது. ஏனெனின், குணக்கிரியைகளுடைய சாவயவமான பால் முதலியவைகளே தயிர் முதலிய பரிணாமங்களை யடைகின்றன. மூன்றாவது விவர்த்தோதிஷ்டானத் தன்மையாகிய உபாதானத் தன்மையும் பிரஹ்மத்திற்குச் சம்பவியாது. ஏனெனின், கடம் இருக்கின்றது படம் இருக்கின்றது என்னும் கடபட முதலிய பிரபஞ்சம் யாவருக்கும் சத்தியமாகவே அனுபவமாகின்றது. அப்படிப்பட்ட சத்தியப் பிரபஞ்சத்திற்குப் பிரஹ்மத்தின் விவர்த்தத்தன்மையால் மித்தியாத்தன்மை கற்பிப்பதில் ஓர் பிரமாணமுமில்லை. பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மையன்றி பிரஹ்மத்திற்கு விவர்த்தோதிஷ்டானத் தன்மை சம்பவியாது. ஆகையால் முற்சொல்லிய மூவகைப்பட்ட உபாதானத் தன்மையுள் ஓர் வகையான உபாதானத் தன்மையும் பிரஹ்மத்திற்குச் சம்பவியாது.

அல்லது, பிரஹ்மத்திற்கு ஜகத்தின் கர்த்தாத் தன்மையும் சம்பவியாது. ஏனெனின், காரியத்தின் உற்பத்திக்கு அநுகூலமான ஞானம் இச்சை பிரயத்தினம் என்னும் மூன்றையுமுடையவனே கர்த்தாவென்று முன் சொல்லப்பட்டிருக்கின்றது. பிரஹ்மத்தின் ஞான இச்சாப்பிரயத்தனங்கள் மூன்றும் நித்தமா? அநித்தமா? நித்தமெனின் சர்வகாலத்திலும் ஜகத்து உற்பத்தி யாதல் வேண்டும்; ஓர் காலத்திலும் ஜகத்தின் பிரளயம் உண்டாதல் கூடாது, அதனால் பிரளயத்தைக் கூறுவதாகிய சாஸ்த்திரத்திற்கு விரோத முண்டாகும். ஞானமுதலியவைகள் அநித்தமெனின் ஜகத்தைப்போல ஞானமுதலியவைகள் காரியமே யாகும், இதனால் ஞானமுதலியவைகளுக்குப் பிரஹ்மத்தை ஆசிரயிக்குந் தன்மை உண்டாகாதாகும். எக்காரணத்தானெனின், பிரஹ்மத்திற்குப் பரிணாம மின்மையே முற்சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வாறு பிரஹ்மத்தினிடத்து உபாதானத்தன்மையும் கர்த்தாத்தன்மையும் சம்பவியாதாகவே அபின்ன நிமித்த உபாதான காரணத்தன்மையும் சம்பவியாது. ஆகையால் முற் சொல்லப்பட்ட ஜகத்தின் உற்பத்தி திதி லயங்களின் காரணத் தன்மையாகிய பிரஹ்

மத்தின் தடத்த லக்ஷணம் அசங்கதம். காரணமன்றி காரிய முண்டாகாது, ஆகையால் இச்சகத்தாகிய காரியத்திற்கும் பிரஹ்மத்தை விட வேறுனதோர் காரணம் ஒப்பவேண்டும். அப்படிப்பட்ட காரணம் சத்துவ ரஜ தம மென்னும் முக்குணவடிவப் பிரதானமாம். அந்தப் பிரதானத்தினின்றே மகதத்துவ முத லிய முறையாக இச்சகத்து உண்டாகின்றது. பரிணாமியாவதால் பிரதானத் திற்கு ஜகத்தின் உற்பத்தி முதலியவைகளின் காரணத்தன்மை சம்பவிக்கின் றது. ஆத்மாவாகிய புருடனே அசங்கன் நிர்விகாரன், ஆகையால் அப்புருடனி டத்து ஜகத்தின் காரணத்தன்மை சம்பவியாது. இவ்வாறுகிய ஆசங்கையைச்செ ய்யும் சாங்கியோரைக்கண்டிக்கும் பொருட்டு முற்கூறிய தத்பதார்த்தம் பிரிக்க ப்படுகின்றது. அத்தத்பதத்தின் அர்த்தம் இருவகைத்து. ஒன்று வாச்சியார்த் தம், மற்றொன்று இலக்ஷியார்த்தம். பதத்தின் சக்திவிருத்தியாலறியப்படும் அர்த்தம் வாச்சியார்த்தமெனப்படும். பதத்தின் இலட்சணு விருத்தியாலறியப் படும் அர்த்தம் இலட்சியார்த்தமெனப்படும். சக்தி இலக்ஷணைகளின் சொரூ பம் பின்னர் மூன்றுவது பரிச்சேதத்தில் சொல்லப்படும். மாயாவுபகித சைதன் யம் தத்பதத்தின் வாச்சியார்த்தமும் மாயாரகித சுத்தசைதன்யம் தத்பதத்தின் இலட்சியார்த்தமுமாம். ஈண்டு கருத்திது:—மாயாரகிதமான நிர்விகார சுத்தப் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதானத்தன்மை சமபவியாது, எனினும் * மாயோ பகிதமான பிரஹ்மத்திற்கு உபாதானத்தன்மை சம்பவிக்கும். அவ்வுபாதான த்தன்மையும் ஆரம்பகத்தன்மை அல்லது பரிணாமித்தன்மைகளன்று; மற்று விவர்த்தோதிட்டானத் தன்மையாம். அதிட்டான வத்துவின் வாஸ்த்தவமல் லாத வேற்று வடிவம் விவர்த்தமெனப்படும். எப்படி இரஜ்ஜு சுக்தி முதலிய வதி ஷ்டானங்களின் வாஸ்த்தவமல்லாத சர்ப்பரஜத முதலியன வேற்று வடிவங்க ளோ, அப்படி பிரஹ்மத்திற்கும் இச்சகத்து வாஸ்த்தவமல்லாத வேற்றுவடிவ மாம். அத்தகைய ஜகத்திற்கான விவர்த்தோ திஷ்டானத்தன்மை அம்மாயா வுபகித பிரஹ்மத்திற்குச் சம்பவிக்கின்றது.

அல்லது, கடமுளது படமுளது என்னுந்தொடக்கத்து அநுபவங்களால் ஜகத்தின் சத்தியத்தன்மையே பெறப்படுகின்றது. ஆகையால் பிரஹ்மத்தின் வி வர்த்தத்தன்மையால் ஜகத்தினிடத்து மித்தியாத்தன்மை சம்பவியாது, என்று வாதியால் முன்னேசொல்லப்பட்டது. அஃதும் அசங்கதம். ஏனெனின், அவ்வ நுபவம் அக்கடபடாதிகளினுள்ள அதிட்டானத்தின் சத்தியத்தன்மையையே விஷயஞ் செய்வதாம்; கடாதிகளின் சத்தியத்தன்மையை விஷயஞ்செய்வத ன்று. ஆகையால் அவ்வநுபவம் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மைக்குப் பாதக மன்று. அன்றியும், நெஹநா நாஸ்தி கிஂசந (ஈண்டுபலவென்பது சிறிதுமில்லை) என்னுஞ் சுருதி பிரஹ்மத்தைவிடவேறுன சர்வப்பிரபஞ்சத்தை நிஷேதிக்கின் றது, ஆகையால் பிரபஞ்சத்திற்கு சுதவஃ சத்தை சம்பவியாது. வாதியால் ஜக த்தின் மித்தியாத்தன்மையில் பிரமாணமின்மை கூறப்பட்டதும் அசங்கதம். எக்காரணத்தானெனின், வாசாரஂஹணஂ விகாரோ நாமதெயஂ (பெயர்விகா ரம் வாக்கை ஆரம்பமாக உடையது) என்னுஞ் சுருதியே நேராக ஜகத்தின்மித்

* மாயையை விசேஷணமாயுடைய தென்பது பொருள்.

5

தியாத்தன்மை சொல்லுகின்றது. அல்லது, பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதானத்தன்மை அவசியமொப்பவேண்டும். ஏனெனின், யத்ப்ரயந்த்யபிஸம் விஸந்தி (எதனிடத்தில் இலயமாகின்றதோ) என்னுஞ் சுருதி அந்தப் பிரஹ்மத்தினிடத்தே ஜகத்தின் லயம் சொல்லியிருக்கின்றது. எக்காரியம் எக்காரணத்தில் இலயமாகின்றதோ, அக்காரியத்திற்கு அக்காரணம் உபாதானமேயாம். எங்ஙனம் கடமுதலிய காரியங்கள் மண் முதலிய காரணங்களினிடத்தே இலயமாகின்றன வாகையால் அக்கடமுதலிய காரியங்களுக்கு மண் முதலிய காரணங்கள் உபாதானங்களேயாகக் காணப்படுகின்றனவோ, அங்ஙனம் சுருதி பிரதிபாதித்துள்ள ஜகத்தின் லயத்திற்கு ஆதாரமாவதால் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதானத்தன்மை அவசிய மொப்பவேண்டும். அல்லது பஹுஸ்யாம் ப்ரஜாயெய (அநேக வடிவங்களாவே மாக) என்னுஞ்சுருதியால் பிரஹ்மத்திற்கு அநேகமாதல் சொல்லப்பட்டிருக்கின்றது. அன்றியும் உலகத்தில் மண் முதலிய உபாதான காரணங்கட்கே கடசராவமுதலியவான அநேகத்தன்மை காணப்படுகின்றது இக்காரணம் பற்றியும் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதானததன்மை சம்பவிக்கின்றது. அல்லது சாங்கியவாதியால் பிரதானத்திற்கு ஜகத்தின் உபாதானத்தன்மை யொப்பப்பட்டிருக்கின்றது, அது பொருந்தாது. ஏனெனின், அப்பிரதானம் ஜகத்திற்கு உபாதானகாரணம் என்னும் அர்த்தத்தில் ஓர் பிரமாணமுமில்லை. அதாவது ஓர் சுருதியிலும் திரிகுணாத்மகப் பிரதானத்தை ஜகத்திற்கு உபாதானமாகச் சொல்லப்படவில்லை; ஆனால் ஆத்மந: ஆகாஶ: ஸம்பூத: (ஆத்மாவினின்றும் ஆகாயமுண்டாயிற்று)என்னுந்தொடக்கத்து எல்லாச்சுருதிகளிலும் சேதன பிரஹ்மத்திற்கே ஜகத்தின் உபாதானத்தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது. இச்சுருதியால் ஆத்மாவிற்கே ஜகத்தின் உபாதானத்தன்மை காணப்படுகின்றது; பிரஹ்மத்திற்கு உபாதானத்தன்மை காணப்படவில்லையாயினும், தத்ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிஶத் (அதைப்படைத்து அதிற் பிரவேசித்தார்) என்பனமுதலிய சுருதிகளில் பிரஹ்மத்திற்கே ஜீவவடிவாக ஜகத்திற்பிரவேசஞ் சொல்லப்பட்டிருக்கின்றது, ஆகையால் இவ்வாத்மா பிரஹ்மத்தை விடவேறல்ல; பிரஹ்மமே ஆத்மா. ஆகையால் இவ்வாத்மா ஜகத்திற்கு உபாதானகாரண மென்பதாலும் பிரஹ்மத்திற்கே உபாதானத்தன்மை பெறப்படுகின்றது. அல்லது ததைக்ஷத ஸோऽகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயெய(அனேக வடிவமாவேமென்று சங்கற்பித்தது அது இச்சித்தது) என்பனமுதலிய சுருதிகளில் அநேகவடிவமாகுங் காரணத்திலுள்ள சங்கற்பத்தின் கர்த்தாத்தன்மையும், இச்சையின் கர்த்தாத்தன்மையும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளாலும் பிரஹ்மத்திற்கே உபாதானத்தன்மை பெறப்படுகின்றது. பிரதானத்திற்கு உபாதானத்தன்மை பெறமுடியாது. ஏனெனின், அச்சங்கற்ப இச்சைகளின் கர்த்தாத்தன்மை சேதனத்தினதே தருமங்கள்; ஜடத்தின் தருமங்களாகா. உமது பிரதானமும் ஜடமாகையால் பிரதானத்தினிடத்து சங்கற்ப இச்சைகளின் கர்த்தாத்தன்மை சம்பவியாது. அதனால் பிரஹ்மத்திற்கே ஜகத்தின் உபாதானத் தன்மையுண்டு; பிரதானத்திற்கில்லை என்பது பெறப்பட்டது.

அல்லது மாயாவுபகித பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதானத்தன்மை சம்பவிப்பதுபோல ஜகத்தின் கர்த்தாத்தன்மையும் அம்மாயாவுபகித பிரஹ்மத்திற்கே சம்பவிக்கின்றதென்பது முன் சொல்லபபட்டது. மாயாவுபகித ஈஸ்வரனது ஞான இச்சாப் பிரயத்தினங்களாகிய மூன்றும் தோன்றுவனவும் அழிவனவுமாம், அப்படிப்பட்ட ஞான இச்சாப்பிரயத்தினங்கட்கு இடமாதல் நிர்விகாரமான சுத்த பிரஹ்மத்திற்குச் சம்பவியாதாயினும் அவைகள் அம்மாயாவுபகித பிரஹ்மத்திற்கு இடமாதல் சம்பவிக்கின்றது. எக்காரணத்தானெனின், அம்மாயாவுபகித பிரஹ்மத்திற்கே சர்வஜகத்தின் விவர்த்தோதிஷ்டானத் தன்மையுண்டு, ஆகையால் முற்கூறிய தோஷம் பிராப்தமாகாது. இதனுல் முற்சொன்ன அபின்னநிமித்த உபாதானகாரணத்தன்மை பிரஹ்மத்திற்குத் தடஸ்தலக்ஷணம் பொருந்து மென்பது பெறப்பட்டது.

**சங்கை:**—மாயையாலுபகிதமான பிரஹ்மம் ஜகத்திற்குக்காரணம் என்புழி அம்மாயையாது வஸ்து? அதாவது அம்மாயையின் சொரூபம் இலக்ஷணம் பிரமாணமென்னு மூன்றும் நிரூபிக்கமுடியாது. ஆகையால் அம்மாயை ஓர் வஸ்த்து வல்ல.

## கஅ. மாயையின் சோரூப இலக்ஷண பிரமாண சங்கை சமாதானங்கள்.

இனி அம்மாயையின் சொரூபம் இலக்ஷணம் பிரமாணம்என்னும் மூன்றும் சம்பவியாதென்பதை முறையாக நிரூபிக்கப்படும். அம்மாயை சத்தியமா? மித்தையா? முதற் சத்தியபட்சத்திலும் அம்மாயை பிரஹ்மத்தைவிட பின்னமா? அபின்னமா? முதற் பின்னபட்ச மொப்பிடின் வனக ஒேவா ஆிதீயம் ஸ்ரூஹ (சுசாதி விசாதி சுவகதபேதமற்றது பிரஹ்மம்) என்னுஞ் சுருதிக்கு விரோதமாகும். ஏனெனின், இச்சுருதி பிரஹ்மத்தை அத்துவிதீயமெனக் கூறுகின்றது. பிரஹ்மத்திற்குப் பின்னமான மாயைசத்தியமாயிருக்கவே பிரஹ்மத்திற்கு அத்துவிதீயத்தன்மை சம்பவியாது. அல்லது, ஈஸஂ மொந ஹிஸஜெதெ (அசங்கம் ஒன்றேடும் சம்பந்தமில்லாதது) என்னுந்தொடக்கத்து சுருதிகளில் பிரஹ்மம் அசங்கமென்று கூறப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட அசங்க பிரஹ்மத்திற்கு ஒன்றனேடும் சம்பந்தம் சம்பவியாது; அச்சம்பந்தமன்றி பிரஹ்மத்தினிடத்து மாயாவுபகிதத்தன்மையே சம்பவியாது. அல்லது,பிரஹ்மத்திற்கு மாயையோடு யாது சம்பந்தமுளது, சையோகசம்பந்தமா?சமவாய சம்பந்தமா? தாதான்மிய சம்பந்தமா? பேதாபேதசம்பந்தமா? முதற்சையோகபட்சம் சம்பவியாது. ஏனெனின், அச்சையோகம் அவ்வியாப்ய விருத்தியாவதால் சாவயவதிரவியங்களினதே தருமங்களாகின்றன. அது பக்ஷிக்குமரத்தோடுள்ள சையோகம் போலவாம். அச்சையோகம் மரமுழுவது மிராது; ஆனுல் அம்மரத்தின் கிளையாகிய ஓரிடத்திற்றனே அச்சையோகம் இருக்கின்றது; வேர் முதலிய இடங்களிலில்லை, ஆகையால் அச்சையோகம் அவ்வியாப்ய விருத்தியாம். இக்காரணம் பற்றியே சையோகம் அப்பக்ஷிமரமுதலிய சாவயவதிரவியங்களினதே தருமங்களாம் பிரஹ்மமோ நிரவயவம்,ஆகையால் பிரஹ்மத்திற்கு மாயையோடு

சையோகசம்பந்தம் சம்பவியாது. இரண்டாவது சமவாயபட்சமும் சம்பவியாது. எக்காரணத்தானெனின், அச்சமவாய சம்பந்தம் நமது மதத்தில் அங்கீகரிப்படுவதில்லை. குண குணி, வினை வினைமுதல், சாதி வடிவு, சினை முதல் என்பவற்றிற்கே சமவாய சம்பந்தம் உண்டாகின்றன. அக்குண குணி முதலியன பிரஹ்ம மாயைகளினிடத்தில்லை, ஆகையால் பிரஹ்மத்திற்கு மாயையோடு அச்சமவாய சம்பந்தம் சம்பவியாது. மூன்றாவது தாதான்மிய பட்சமும் சம்பவியாது. ஏனெனின், பேதரகித பதார்த்தங்கட்கே அத்தாதான்மிய முண்டு. பிரஹ்மம் மாயை என்னு மிரண்டும் ஒன்றற்கொன்று பேதமுடையன, ஆகையால் அவ்விரண்டிற்கும் ஒன்றற்கொன்று தாதான்மியம் சம்பவியாது. நான்காவது பேதா பேதபட்சமும் சம்பவியாது. ஏனெனின், பேத அபேதமிரண்டும் ஒன்றற்கொன்று முரணுதல் பற்றி ஓர் அதிகரணத்தில் இரா. இவ்வாறு பிரஹ்மத்திற்கு மாயையோடு சம்பந்தம் நிரூபிக்கப்படாதாகவே பிரஹ்மத்தினிடத்து மாயாவுபகிதத்தன்மை சம்பவியாது. அம்மாயை பிரஹ்மத்தோடு அபின்னம் என்னும் இரண்டாவது பட்சத்தை அங்கீகரிக்கின் அஃதும் சம்பவியாது. ஏனெனின், பிரஹ்மமோ சேதனம் மாயை ஜடம் ஜடசேதனங்கட்கு அபேதம் சம்வியாது. அன்றியும் மாயை மித்தை என்னும் ஆதி அத்துவிதீயபட்சம் அங்கீகரிக்கின் அஃதும் சம்பவியாது. ஏனெனின், மாயை மித்தையாகவே அம்மாயா விசிஷ்ட ஈஸ்வரனுக்கும் மித்தியாத்தன்மை பிராப்தமாகும். ஈஸ்வரனும் மித்தையெனக்கொண்டால் ஈஸ்வரனது ஞானத்தால் மோக்ஷப்பிராப்தியைச் சொல்லுவதான மோக்ஷசாஸ்திரமே அப்பிரமாணமாகும். எக்காரணத்தானெனின், மித்தியாவஸ்துவின் ஞானத்தால் மோக்ஷப்பிராப்தி சம்பவியாது. இவ்வாற்றால் அம்மாயையின் சொரூபம் நிரூபிக்கப்படாததாம். அம்மாயை நிரூபிக்கப்படாதாகவே அம்மாயையின் இலக்கணமும் நிரூபிக்கமுடியாததேயாம். ஏனெனின், தர்மி உளதாகியே அதன் தர்மங்கள் விசாரிக்கப்படுகின்றன. தர்மியே நிரூபிக்க முடியாதபோது அத்தர்மியின் அசாதாரணதர்மமான இலக்கணமோ நிரூபிக்க முற்றும் முடியாததாம். மாயை நிரூபிக்கமுடியாதாகவே அம்மாயையிற் பிரமாணமும் நிரூபிக்கமுடியாததேயாம். எக்காரணத்தானெனின், விஷயமன்றி ஓர் பிரமாணமும் பிரவிருத்தியாது. இவ்வாறு சொரூபம், இலக்கணம், பிரமாணம் என்னும் மூன்றுடன் மாயை நிரூபிக்கமுடியாதாகவே அம்மாயாவுபகித சைதன்யத்திற்கு தத்பதத்தின் வாச்சியார்த்தத்தன்மை சம்பவியாது, என்னும் ஆசங்கை அடையப்பட இனி சொரூபம், இலக்கணம், பிரமாணம் என்னும் மூன்றோடு மாயையை நிரூபிக்கும் பொருட்டு முதல் அதன் உபோற்காதத்தால் திருஷ்டாந்தத்துடன் பரமாத்மாவினிடத்து சாமானியமாக அத்தியாசம் நிரூபிக்கப்படுகின்றது. பின்னே சொல்லத்தகுந்த பொருளை புத்தியில் வைத்துக்கொண்டு அப்பொருள் சித்திக்கும் பொருட்டு முன்னே வேறு பொருள் சொல்லுதல் உபோற்காதமெனப்படும்.

### ௧௧. பரமாத்மாவினிடத்து சாமானியமாக அத்தியாசங் கூறுதல்.

எப்படி சுக்தி ரஜ்ஜு முதலியவற்றில் இரஜதசர்ப்பாதிகள் கற்பிதங்களாகின்றனவோ, அப்படி சேதனத்தில் அசேதனம் கற்பிதமாகின்றது.

சங்கை:—சேதனத்தில் அசேதனம் கற்பிதமென்னும் பொருளில் பிரமாணம் யாது?

சமாதானம்:—இப்பொருளில் சுருதார்த்தாபத்தியே பிரமாணம். கேட்ட வாக்கியார்த்தம் பொருந்தாதாகவே வேறு அர்த்தம் கற்பித்தல் சுருதார் (கேள்வியரு) த்தாபத்தி எனப்படும். அஃது சொல்லப்படுகின்றது. 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑍇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂, 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌏𑌵𑍇𑌦𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂, 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌃 (ஈதெல்லாம் இவ்வாத்மா, இவையாவும் ஆத்மாவே, இவையாவும் பிரஹ்மமே, இவ்விஸ்வம்புருஷனே, இவையாவும் பிரஹ்மமன்றோ, எல்லாம் வாசுதேவனே, இவையனைத்தும் புராணரான நாராயணர்) என்னுந்தொடக்கத்துப் பல சுருதி ஸ்மிருதிவாக்கியங்களில் சேதனத்திற்கு வேறாக அசேதனத்தின் அபாவமே பிரதிபாதிக்கப் பட்டிருக்கின்றது. முற்சொல்லிய சுருதி வசனங்களில் 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 (இவ்யாவும்) என்னும் வசனத்தாலோ பிரத்தியட்சாதிய பிரமாணங்களாற் பெறப்பட்ட இவ்வாகாசமுதலிய ஜடமான ஜகத்து சொல்லப்பட்டிருக்கின்றது. ஆத்மா, பிரஹ்மம், புருஷன், வாசுதேவன், நாராயணர் என்னும் சப்தங்களால் அத்துவிதீயமும், சர்வத்திற்குச் சாக்ஷியும், பிரத்தியக் ரூபமுமான பரமாத்மாசொல்லப்பட்டிருக்கின்றது. முதற் சுருதியிலுள்ளபிரபஞ்சத்தின் வாசகமாகிய ஈதெல்லாம் என்னும் சப்தமும்,பரமாத்மாவின் வாசகமான ஆத்மாவென்னும் சப்தமுமாகிய விரண்டு சப்தங்கட்கும் சாமானாதி கரண்யம் (ஒரு நிலைக்களம்) தோற்றுகின்றது. ஜடஜகத்திற்கும் சேதன ஆத்மாவிற்கும் வாஸ்தவத்தில் ஏகதன்மை சம்பவியாது. ஆகையால் சேதன அசேதனங்கட்கு அபேதத்தைச் சொல்லுதலாகிய முக்கிய சாமானாதிகரண்யமோ அவ்விடத்து சம்பவியாது; ஆனால் எப்படி 𑌯𑍋𑌽𑌯𑌂 𑌚𑍋𑌰𑌃 𑌸𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌃 (எக்கள்வன் உண்டோ அவன் இக்கட்டை) என்னும் வசனத்தில் கள்வன் கட்டை என்னுமிருசப்தங்கட்கும் பாத சாமானாதிகரண்யமுண்டோ, அப்படி முற்சொல்லிய சுருதிகளில் 'ஆத்மா' 'யாவும்' என்னும் இரண்டு பதங்கட்கும் பாத சாமானாதிகரண்யமேயிருக்கின்றது. அஃதாவது திருஷ்டாந்த வாக்கியத்திலுள்ள கள்வன் கட்டை என்னுமிருபதங்களின் சாமானாதிகரண்யத்தால் கட்டைக்கு வேறாகக்கள்வனது அபாவம் காணப்படுவதுபோல, தார்ஷ்டாந்திக சுருதிவாக்கியங்களிலும் ஆத்மா எல்லாம் என்னுமிருபதங்களின் சாமானாதிகரண்யத்தால் ஆத்மாவிற்கு வேறாகச்சர்வ ஜடஜகத்தின் அபாவமேகாணப்படுகின்றது. இதனால் பிரபஞ்சாபாவமுடையது ஆத்மா என்னும் போதம் அச்சுருதிவாக்கியங்களால் நிகழ்கின்றது. ஜடப்பிரபஞ்சம் பிரஹ்மத்தினிடத்துக் கற்பிதமெனக்கொண்டபோது அச்சடப் பிரபஞ்சத்தின் அபாவம் சம்பவிக்கும். பிரபஞ்சம் கற்பிதமாதலன்றி அப்பிரபஞ்சத்தின் அபாவம் சம்பவியாது. ஆகையால் அச்சுருதி சொல்லிய ஜடப்பிரபஞ்சத்தின் அபாவம் தனது பிரதியோகியாகிய ஜடப்பிரபஞ்சத்தின் கற்பிதத்தன்மையன்றி பொருந்தாதாகவே அச்சடப்பிரபஞ்சத்தின் கற்பிதத்தன்மையைக் கற்பிக்கின்றது. இவ்வாறான சுருதார்த்தா பத்தியினாற்றான் சேதனத்தினிடத்து அசேதனத்தின் கற்பிதத்தன்மை நிச்சயமாகின்றது. இவ்

வகையான பொருளை முற்சொல்லிய மற்ற சுருதி ஸ்மிருதிவசனங்கட்கும் அறிந்து கொள்ளவேண்டும்.

**சங்கை:**—முன்னே சேதனத்தினிடத்து அசேதனம் கற்பிதமெனப்பட்டது. ஆண்டு சேதனம் யாதுவஸ்து? அசேதனம் யாது வஸ்து?

**சமாதானம்:**—நித்திய சுத்த புத்த முக்த சத்திய பரமானந்த அத்வயமாகிய பிரஹ்மம் சேதனமெனப்படும். அஞ்ஞான முதலான ஜடசமூகங்கள்யாவும் அசேதனமெனப்படும்.

## உ௦. பிரஹ்ம விசேஷணங்களின் பயன் பிரமாணங்களைக் கூறுதல்.

இனி பிரஹ்மத்தின் நித்தியமுதலிய ஏழுவிசேஷணங்களின் பயனும் அவற்றில் சுருதிப்பிரமாணமும் சொல்லப்படுகின்றன. பிரஹ்மத்தினிடத்து உண்மையில் ஓர் அநாத்மவஸ்துவின் தாதான்மியமு மில்லையாயினும் மயக்கத்தால் அந்தப் பிரஹ்மத்தினிடத்து அநாத்மவஸ்துவின் தாதான்மியம் தோன்றுகின்றது. மயக்கத்தாற் பெறப்பட்ட தாதான்மியத்தை நித்திய முதலிய விசேஷணங்கள் நீக்குகின்றன. அவற்றுள் காரியப்பிரசஞ்பத்தின் தாதான்மியத்தை **'நித்திய'** மென்னும் விசேஷணம் நீக்குகின்றது. பிரஹ்மத்தின் நித்தியத் தன்மை ஆகாஶ வத்ஸர்வ கத ஶ்ச நித்ய: (ஆகாயம்போல எங்கும் நிறைந்தவன் நித்தியன்) என்னுந்தொடக்கத்து சுருதிப்பிரமாணங்களானே பெறப்படும். அக்காரியப்பிரபஞ்சத்தினது தர்மங்களின் தாதான்மியத்தை **'சுத்த'** மென்னும் விசேஷணம் நீக்குகின்றது. பிரஹ்மத்தின் சுத்தத்தன்மை அஸ்நா விரம் ஶுத்த மபாப வித்தம் (நரம்பற்றது சுத்தம் பாபமில்லாதது) என்பதாதி சுருதிப் பிரமாணங்களானே சித்தமாம். இராகத்துவேஷ முதலிய விகாரங்களில்லாமையே பிரஹ்மத்தினிடத்து சுத்தத்தன்மையாம். காரணமயமான அஞ்ஞானத்தின் தாதான்மியத்தை **'புத்த'** மென்னும் விசேஷணம் நிவிருத்திக்கின்றது. எப்போதும் ஏகரசஞான வடிவத்தன்மை புத்தத்தன்மை எனப்படும். பிரஹ்மத்தின் புத்தத்தன்மை ப்ரஜ்ஞாந கந: (பிரஞ்ஞானகனன்) என்பன முதலிய சுருதிப்பிரமாணங்களானே சித்தமாம். அஞ்ஞானத்தாலாய ஆவரண முதலியவைகளின் தாதான்மியத்தை **'முக்த'** மென்னும் விசேஷணம் நீக்குகின்றது. பந்தரகிதத்தன்மை முக்தத் தன்மை எனப்படும். பிரஹ்மத்தின் முக்தத்தன்மை விமுக்தஶ்ச விமுச்யதே (முக்தன் விடுபடுகின்றான்) என்பன முதலிய சுருதிப்பிரமாணங்களானே பெறப்படும். மித்தியாத்தன்மையை **'சத்திய'**மென்னும் விசேஷணம் நிவிருத்திக்கின்றது. முக்காலத்திலும் பாதமாகாதது சத்தியமெனப்படும். பிரஹ்மத்தின் சத்தியத்தன்மை ஸத்யம் ஜ்ஞாந மநந்தம் ப்ரஹ்ம, ஸதேவ ஸோம்யேத மக்ர ஆஸீத் (பிரஹ்மம் சத்யம் ஞானம் அநந்தம், ஏசௌமிய! இது முன் சத்தாகவேயிருந்தது) என்னுந்தொடக்கத்து சுருதிப்பிரமாணங்களானே சித்தமாம். **'ஆநந்த'** மென்னும் விசேஷணம் பிரஹ்மத்தின் புருஷார்த்தத் தன்மையைச் சொல்லுகின்றது பிரஹ்மத்தின் ஆநந்தவடிவத்தன்மை ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத், விஜ்ஞாந மாநந்தம் ப்ரஹ்ம (ஆநந்தம் பிரஹ்மமென்று அறிதல்வேண்டும், விஞ்ஞா

ஞநந்தமாயுள்ளது பிரஹ்மம்) என்பன முதலிய சுருதிப்பிரமாணங்களானே சித்தமாம். **'அத்வய'** மென்னும் விசேஷணம் பிரஹ்மத்தின் அகண்ட ஏகரசத் தன்மையைச் சொல்லுகின்றது. துவைதமில்லாதது அத்வயமெனப்படும். அதாவது பேதவாதிகளால் கற்பிக்கப்படும் ஐவகைப் பேதங்களற்றது அத்வய மெனப்படும். அவ்வைவகைப் பேதங்களாவன:—ஜீவர்களின் பரஸ்பரபேதம், ஜீவ ஈஸ்வரரிரண்டின் பரஸ்பரபேதம் 2, கடாதிஜடபதார்த்தங்களின் பரஸ்பரபேதம் 3, ஈஸ்வரனுக்கும் ஜடஜகத்திற்கும் பரஸ்பரபேதம் 4, ஜீவனுக்கும் ஜடஜகத்திற்கும் பரஸ்பரபேதம் 5, இவ்வாறு ஜீவேஸ்வரர் முதலிய பிரதியோகிகளின் பேதத்தால் அப்பேதங்கள் ஐவகையினவாம். அவ்வெல்லாப் பேதங்களுங் கற்பிதமாகையால் அவ்வைவகைப் பேதரகிதத் தன்மை பிரஹ்மத்தினிடத்துச் சம்பவிக்கின்றது. அல்லது சஜாதீயபேதம் 1, விஜாதீயபேதம் 2, சுவகத பேதம் 3, என்னும் மூன்று பேதங்களற்றது அத்வய மெனப்படும். பிரஹ்மத்தின் அத்வயத்தன்மை ஏகமேவா த்விதீயம் (பிரஹ்மம் சுசாதி விசாதி சுவகத பேதங்களற்றது) என்னுந் தொடக்கத்து சுருதிப் பிரமாணங்களானே பெறப்படும்.

சங்கை:—முன்னே அஞ்ஞான முதலிய ஜடக்கூட்டங்கள் அசேதன மெனப்பட்டன. ஆண்டு அவ்வஞ்ஞானத்தின் சொரூபம் யாது? இலக்கணம் யாது? பிரமாணம் யாது? என்னும் ஆசங்கை நிகழ இனி முறையாக அவ்வஞ்ஞானத்தின் சொரூபம் இலக்கணம் பிரமாணம் சொல்லப்படும்.

## உக. அஞ்ஞானத்தின் சொரூப இலக்கண பிரமாணங்கள் கூறுதல்.

அவ்வஞ்ஞானம் திரிகுணாத்மகம். அதாவது சத்வ ரஜ தமமென்னும் முக்குணங்களே ஆன்மா எனப்படும் சொரூபமாயுடையது திரிகுணாத்மக அஞ்ஞானம். அவ்வஞ்ஞானத்தின் காரியமாகிய ஜகத்தினிடத்து சுக துக்க மோக வடிவத் தன்மைகள் பிரத்தியட்சமாய்த் தோற்றுகின்றன. அச்சுகமுதலிய மூன்றும் முறைப்படி சத்துவமுதலிய முக்குணங்களின் பரிணாமங்களே யாம். காரணத்திற்குச் சமான வியல்புடையது காரியம். ஆகையால் ஜகத்தாகிய காரியத்தில் திரிகுணத் தன்மையைக் கண்டு காரணமாகிய அஞ்ஞானத்தினிடத்தும் அத்திரிகுணத்தன்மை கற்பிக்கப்படுகின்றது. அஜா மேகாம் லோஹித சுக்ல க்ருஷ்ணாம் (பிறப்பில்லது ஒன்று சத்வ ரஜ தமமான முக்குணமுடையது) என்னுஞ் சுருதியும் அவ்வஞ்ஞானத்தைத் திரிகுணமெனச் சொல்லியுளது. இவ்வாற்றுல் அஞ்ஞானத்தின் சொரூபம் சொல்லப்பட்டது.

இனி அவ்வஞ்ஞானத்தின் இலக்கணம் சொல்லப்படுகின்றது. ஸதஸத்விலக்ஷணம் அஜ்ஞானம் (இ-ள்.) சத்ய பதார்த்தத்தினும் அசத்ய பதார்த்தத்தினும் விலட்சணமாவது யாதோ அது அஞ்ஞானமெனப்படும். அதாவது சத்தியமாகவும் அசத்தியமாகவும் நிரூபிக்க முடியாதது அஞ்ஞான மெனப்படும். அஞ்ஞானம் சத்தியமெனக் கொண்டால் சத்தியமாகிய பிரஹ்மத்தைப்போல அவ்வஞ்ஞானம் நாசமாகாமல் இருக்க வேண்டும்; ஆனல் பிரஹ்மஞானத்தால் அவ்வஞ்ஞானம் நாசமாய் விடுகின்றது. ஆகையால் அவ்வஞ்ஞானம் சத்தியமாகவும்

நிரூபிக்க முடியாது. அவ்வஞ்ஞானம் அசத்தியமெனக் கொண்டால் அசத்தியமான மலடி மகனைப்போல அவ்வஞ்ஞானம் பிரத்தியட்சமாகக் கூடாது; ஆனால் அவ்வஞ்ஞானமோ 'நான் பிரஹ்மத்தை அறிகிலேன்' என்னும் பிரத்தியட்ச அனுபவத்திற்கு விஷயமாகியே தோற்றுகின்றது. ஆகையால் அவ்வஞ்ஞானம் அசத்தியமாகவும் நிரூபிக்கமுடியாது. இக்காரணம் பற்றி அவ்வஞ்ஞானம் அநிர்வசனிய மென்பர். 'அசத்விலக்ஷணம் அஞ்ஞானம்' என்னுமிம் மாத்திரமே அஞ்ஞானத்திற்கு இலக்கணமெனின் மலடி மைந்தன் முதலிய அசத்திய பதார்த்தங்களை விட விலக்ஷணமான சத்திய பிரஹ்மத்தினிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் 'சத்விலட்சணம்' எனப்பட்டது. பிரஹ்மம் சத்தினும் விலக்ஷணமன்று, ஆகையால் அதனிடத்து அதிவியாப்தி யுண்டாகாது. 'சத்விலட்சணம் அஞ்ஞானம்' என்னுமிம் மாத்திரமே அஞ்ஞானத்திற்கு இலக்கணமெனின் சத்திய பிரஹ்மத்தைவிட விலக்ஷணமான மலடி மகன் முதலிய அசத்திய பதார்த்தங்களினிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்கும்பொருட்டு அவ்விலக்கணத்தில் 'அசத்விலக்ஷணம்' எனப்பட்டது. அம்மலடி மகன் முதலியன அசத்தினும் விலக்ஷணமன்று, ஆகையால் அவற்றினிடத்து அதிவியாப்தி யுண்டாகாது. வாஸ்தவமாய் விசாரித்துப் பார்த்தாலோ 'சத்விலக்ஷணம் அஞ்ஞானம்' என்னு மிம்மாத்திரமே அஞ்ஞானத்திற்கு இலக்கணமெனல்போதும், அசத்தென்னும் பதம் வீணே யாம். ஏனெனின், அசத்வஸ்து ஒன்று உளதாயின் அதற்கு அசத்துத் தன்மை சம்பவியாதாகும். அசத் வஸ்துவே யாதுமில்லையானல் எதனிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வஞ்ஞானத்தின் இலக்கணத்தில் 'அசத்விலக்ஷணம்' என்னும் எப்பதங்கள் நூலாசிரியர் தந்தனரோ அவை கேவலம் சீடர்களின் புத்தி விருத்திக்காகக் கொடுக்கப்பட்டன.

சங்கை:—அஞ்ஞானம் எங்ஙனம் சத்விலக்ஷணமோ, அங்ஙனம் இக்காரியப் பிரபஞ்சமும் சத்விலக்ஷணமே. ஆகையால் காரியப் பிரபஞ்சத்தினிடத்து அவ்வஞ்ஞானத்தின் இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது.

சமாதானம்:—அவ்விலக்கணத்தில் அநாதி என்னும் பதத்தைச் சொல்லுவதால் அதிவியாப்தி யுண்டாகாது. அதாவது 'சத்விலக்ஷணமநாதி அஞ்ஞானம்' என்பது அஞ்ஞானத்தின் இலக்கணம். காரியப்பிரபஞ்சத்தில் அநாதித் தன்மையில்லையாகையால் பிரபஞ்சத்தினிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—இப்படிக்கூறிய இலக்கணத்திற்கும் ஜீவ ஈஸ்வரரிடத்து அதிவியாப்தியே யுண்டாகின்றது. ஏனெனின், ஜீவ ஈஸ்வரர்கள் கற்பிதர்களாவதால் சத்தினும் விலக்ஷணரும் அநாதியுமாவர். ஜீவெ ஶாவாஹா வெஸஂகரொதி (ஜீவ ஈசர்களை ஆபாசமாகச் செய்கிறது) என்னுஞ் சுருதி வசனத்தாலும் ஊயா ஹாவெஸ ஜீவெ ஶௗ கரொ தீதி ஶ ௵தகவதஃ। கஷீதாவெவ ஜீவெஶௗ

தாஹ்ராம ஸர்வம் வ்ருகல்பிதம் (மாயை ஆபாசமாக ஜீவ ஈசர்களைச் செய்கிறது என்று கேட்டிருப்பதால் கற்பிக்கப்பட்ட ஜீவ ஈசர்களாலே எல்லாம் கற்பிக்கப் பட்டது) என்னும் வித்தியாரணிய சுவாமிகளது வசனத்தாலும் ஜீவ ஈஸ்வர ரிடத்துக் கற்பிதத் தன்மையே பெறப்படுகின்றது. அன்றியும் ஜீவெ ஶளவ விஶுஜா விஞிஹாஶஸ்து தயொஅநு யொ:। கவித்யா தஞ்வொ யொகாஶ: ஷட் ஸாக உநா உய: (இ-ள்.) ஜீவன் 1, ஈஸ்வரன் 2, சுத்தசைதன்யம் 3, அவை களின் பரஸ்பரபேதம் 4, அவித்தை 5, அவ்வவித்தைக்குச் சேதனத்தோடுள்ள சம்பந்தம் 6, என்னும் ஆறு பதார்த்தங்கள் நமது மதத்தில் அநாதி. இந்த சா ம்பிரதாயமுள்ள வசனத்தால் ஜீவ ஈஸ்வரரிடத்து அநாதித் தன்மை பெறப்படு கின்றது, ஆகையால் ஜீவ ஈஸ்வரரிடத்து முற்சொன்ன இலக்கணத்தின் அதி வியாப்தி வஜ்ரலேபமாம்.

சமாதானம்:—அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்கும் பொருட்டு அவ்விலக் கணத்தில் ஞான நிவிர்த்யம் (ஞானத்தால் நீங்குந் தன்மை யுடையது) என்று நாம் சொல்லுகின்றோம். யதொ ஜ்ஞாந உஜ்ஞாந மெவ நிவத்துகம்(எது ஞான மோ அது அஞ்ஞானத்தையே போக்கடிக்கின்றது) என்னும் வசனத்தால் ஸ்ரீ பஞ்சபாதிகாசாரியர் ஞானத்தாற் கேவலம் அஞ்ஞானமாத்திரத்தின் நிவிருத்தி யே சொல்லி யிருக்கின்றார்; பிறவற்றின் நிவிருத்தியைச் சொல்லவில்லை. ஜீவ ஈஸ்வரர் முதலிய பாவனைகளின் நீக்கமோ அவ்வஞ்ஞானத்தின் நீக்கத்தினனே யாகின்றதாகையால் ஜீவஈஸ்வரரிடத்து ஞானத்தால் நீக்கப்படுந் தன்மையில்லை. ஆதலால் ஜீவ ஈஸ்வரரிடத்து முற்சொன்ன இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இதனல் அவ்வஞ்ஞானத்திற்கு ஸதி லக்ஷண உநாதி ஜ்ஞாந நிவ த்யும் கஜ்ஞாநம் (சத்துக்கு விலட்சணமும் அநாதியும் ஞானத்தால் நீக்கப்படு வதுமானது அஞ்ஞானம்) என்னு மிலக்கணம் பெறப்பட்டது.

அல்லது கநா உ ருவா உாநம் ஜ்ஞாந நிவத்யும் கஜ்ஞாநம் (அநாதியாயும் உபாதானமாயும் ஞானத்தால் நீக்கப்படுவதாயு முள்ளது அஞ்ஞானம்) என் னும் இரண்டாவது இலக்கணத்தை அஞ்ஞானத்திற்குச் சொல்லுக. இவ்விலக் கணத்தில் அநாதிப் பிராகபாவத்தில் அதிவியாப்தியை நீக்கவேண்டி 'உபாதான ம்' என்னும் பதம் சொல்லப்பட்டது. கடமுதலிய காரியங்கட்கு உபாதானகார ணமாகிய மண் முதலியவற்றில் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு அநாதி எ ன்னும் பதம் சொல்லப்பட்டது. அநாதியும் விவர்த்த உபாதானமுமாகிய பிரஹ் மத்தினிடத்து அதிவியாப்தியை நீக்கும்பொருட்டு ஞானத்தால் நீக்கப்படுவது எனப்பட்டது. இங்கு அஞ்ஞானத்தில் பரிணும உபாதானத்தன்மையே கொ ள்ளவேண்டும். சில வாதிகள் ஞானத்தின் அபாவத்தையே அஞ்ஞான மென் கின்றார்கள். அவர்களைக் கண்டிக்கும் பொருட்டு சித்தாந்தத்தில் அவ்வஞ்ஞா னத்தைப் பாவவடிவமா (உள்ளதா)க ஒப்பப்பட்டிருக்கின்றது. இனி அஞ்ஞா னத்தில் பிரமாணம் சொல்லப்படுகின்றது. கஹம் ப்ரஹ்ம நஜாநாமி (நான் பிர ஹ்மத்தை அறிகிலேன்) என்பதாக அஞ்ஞானத்தை விஷயஞ்செய்யும் பிரத்தி யட்ச அநுபவம் எல்லாருக்கும் உண்டாகின்றது. ஆகையால் அவ்வஞ்ஞானத்

தில் இப்பிரத்தியட்சப் பிரமாணம் ஒன்று. இரண்டாவது சுருதி ஸ்மிருதிகளும் பிரமாணங்கள். சுருதி. 𑌤𑍇 𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑌾𑌨𑍁𑌗𑌤𑌾 𑌅𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌦𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌶𑌕𑍍𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌨𑌿𑌗𑍂𑌢𑌾𑌮𑍍 (இ-ள்.) காலம், சுவபாவம் முதலிய காரணங்களில் பலவகைப்பட்ட குற்றங்களை விசாரித்து ஜகத்தின் காரணம் நிச்சயிக்க வேண்டி பிரஹ்மத்தியானத்திலொருப்பாட்டுடைய பிரஹ்மவேத்தாக்கள் தனது சத்துவமுதலிய குணங்களுடன் மறைந்துள்ள அஞ்ஞான சக்தியாகிய தேவாத்ம சக்தியையே ஜகத்திற்குக் காரணமாகக் கண்டார்கள். இச்சுருதியின் பொருள் ஆத்மபுராணத்தின் எட்டாவது அத்தியாயத்தில் விரிவாய்ச் சொல்லப்பட்டுளது. ஸ்மிருதி. 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑍇𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃। 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌤𑍁 𑌤𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌨𑌾𑌶𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 (இ - ள்.) எந்த ஜீவர்களுடைய ஞானம் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டதாமோ, அந்த ஜீவர்கள் அஞ்ஞானத்தாலாகிய ஆவரணத்தால் சம்சாரத்தையே அடைகின்றார்கள். எந்த ஜீவர்களுக்கு அவ்வஞ்ஞானம் குருசாத்திரங்களின் பிரசாதத்தாலுண்டாகிய ஞானத்தால் நீங்கினதோ, அவர்கட்கு அகம்பிரமாஸ்மி என்னும் ஞானம் பிரத்தியகபின்ன பிரஹ்மத்தைப் பிரகாசஞ் செய்கின்றது. இக்கீதாஸ்மிருதியும் அவ்வஞ்ஞானத்திற் பிரமாணம்.

அன்றியும் இந்த ஸ்மிருதியில் அஞ்ஞானத்திற்கு பிரஹ்மத்தின் சொரூபத்தை மறைக்குந்தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது. பாவபதார்த்தத்திற்றான் மறைக்குந்தன்மை நிகழும்; அபாவபதார்த்தத்தில் நிகழாது. ஆகையால் ஞானபாவத்தை அஞ்ஞானமென்றேற்பவோரான நையாயிகர்களும் இந்த ஸ்மிருதி வசனத்திற்கு விரோதமாவதால் அவ்வஞ்ஞானத்தை பாவ வடிவமாகவே வொப்பவேண்டும். இதனுல் அக்கீதாவசனம் அஞ்ஞானத்தின் பாவவடிவத்தன்மையிலும் பிரமாணமாம். அன்றியும் இக்கீதாவசனத்தில் ஞானத்தால் அஞ்ஞானத்தின் நாசம் சொல்லப்பட்டுளது, அதனுல் திரிகுணான்மகமும், அசேதனமும், சுவதந்திரமும், பாரமார்த்திகமும், பரிணுமியும், நித்தியமுமான பிரதானம் யாதோ அதுவே அஞ்ஞானமென்னும் சாங்கியரது மதமும் கண்டிக்கப்பட்டதாக அறிந்து கொள்ள வேண்டும். உலகத்தில் அசேதனமான தேர் முதலானவைகட்குச் சேதனனது அதீனமாகவே பிரவிருத்தி காணப்படுகின்றது; சுவதந்திரமான பிரவிருத்தி காணப்படவில்லை, ஆகையால் பிரதானத்தை அசேதனமெனக் கொண்டு மறுபடியும் சுவதந்திரமெனக் கொள்ளுதலும் முற்றும் விருத்தம். உலகத்தில் பரிணுமியான பால் முதலியன சாவயவமாவதால் அநித்தியத்தன்மையே காணப்படுகின்றதாகையால் பிரதானத்தைப் பரிணுமியெனக் கொண்டு மீண்டும் நித்தியமெனக் கொள்ளுதலும் முற்றுந்தவறு. இதனுல் அச்சாங்கியமதம் நலமன்று. இதுகாறும் அஞ்ஞானத்தின் சொரூபம், இலக்கணம், பிரமாணம் சொல்லப்பட்டன.

## உஉ. அஞ்ஞானத்தின் பிரிவைச் சொல்லுதல்.

இனி அவ்வஞ்ஞானத்தின் பிரிவு சொல்லப்படுகின்றது. முற்சொன்ன அஞ்ஞானம் மாயை 1, அவித்தை 2, என்னும் வேறுபாட்டால் இருவகைத்து. சுத்

தசத்துவகுணப் பிரதானமாகி அவ்வஞ்ஞானம் மாயை யெனப்படும். மலின சத்துவகுணப் பிரதானமாகி அவ்வஞ்ஞானம் அவித்தையெனப்படும். இரஜோதமோ குணங்களால் * திரஸ்காரத்தை யடையாத சத்துவகுணம் சுத்தமெனப்படும். இரஜோதமோ குணங்களால் திரஸ்காரத்தையடைந்த சத்துவகுணம் மலினமெனப்படும். இவ்வாறு ஓரே அஞ்ஞானம் சத்துவகுணத்தின் சுத்தியால் மாயையும், சத்துவகுணத்தின் மலினத்தால் அவித்தையுமாம். சுருதி. ஊயாவாவிஃ௱ாவ ஸ்வய ஔவ ஹவதி (இ-ள்.) மூலப்பிரகிருதியாகிய அஞ்ஞானம் தானே மாயையும் அவித்தையுமாகின்றது. மாயை அவித்தை என்னு மிருவுபாதிகளால் அவ்வொரே சைதன்யம் ஜீவஈஸ்வரரென்னும் பேதத்தால் இருவகைப்படும். அம்மாயையிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யம் ஈஸ்வரனெனப்படும், அவித்தையிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யம் ஜீவனெனப்படும். சுருதி. ஜீவெ ஶாவாஹா வெஸ் கவொதி (இ-ள்.) அவ்வஞ்ஞானம் தன்னிடத்துற்ற ஆபாசத்தால் ஜீவ ஈஸ்வரரென்னு மிரண்டையுஞ் செய்கின்றது.

சில நூலாசிரியரோ மாயை அவித்தைகளுக்கு இவ்வகையான பேதத்தைச் சொல்லுகின்றூர்கள். அவ்வஞ்ஞானத்திற்கு இருவித சக்தி யுண்டு. ஒன்று ஞானசக்தி, மற்றென்று கிரியாசக்தி. காரியத்தை யுண்டுபண்ணும் காரணத்தினுள்ள சாமர்த்தியம் சக்தியெனப்படும். அதிலும் ஞானத்தை யுண்டுபண்ணுஞ் சக்தி ஞானசக்தி யெனப்படும், கிரியையை யுண்டுபண்ணுஞ் சக்தி கிரியாசக்தி யெனப்படும். இரஜதமமென்னு மிரு குணங்களால்*அபிபவத்தையடையாதசத்துவகுணம் ஞானசக்தி யெனப்படும். ஸத்வாத் ஸஂஜாயதெ ஜ்ஞாநஂ (சத்துவகுணத்தினின்றும் ஞானம் உண்டாகின்றது) என்னும் வசனத்தால் கீதையில் ஸ்ரீபகவானுலும் சத்துவகுணத்தினின்றும் ஞானத்தினுற்பத்தி அருளிச் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகையால் அச்சத்துவகுணத்தின் ஞானசக்தித் தன்மையில் அக்கீதா வசனமே பிரமாணம். சத்துவகுணத்தால் அபிபவத்தை யடைந்த ரஜதமமென்னு மிருகுணங்கள் கிரியாசக்தி எனப்படும். அக்கிரியாசக்தியும் இருவகைத்து. ஒன்று ஆவரண சக்தி, மற்றென்று விட்சேபசக்தி. ஆவரணத்தை (மறைப்பை) யுண்டுபண்ணும் சக்தியை ஆவரணசக்தி என்றும், விட்சேப (தோற்ற)த்தை யுண்டுபண்ணுஞ் சக்தியை விட்சேபசக்தி என்றுஞ் சொல்லப்படும். சத்துவ ரஜ என்னு மிருகுணங்களால் அபிபவமடையாத தமோகுணம் ஆவரண சக்தி யெனப்படும். இவ்வார்த்தை பகவான் பாஷியக்காரரும் சொல்லியிருக்கின்றூர். பாஷியவசனம்:—க்ருஷ்ணஂ தமஃ ஆவரணாத்மகத்வாத் (இ-ள்.) அஜாமேகாஂலோஹித ஶுக்ல க்ருஷ்ணாஂ (பிறப்பில்லது ஏகம் செம்மை (ரஜ) வெண்மை (சத்வ) கறுமை (தம) வடிவினது) என்னும் மந்திரத்திலுள்ள கறுமைச் சொல் தமோகுணத்தின் வாசகம். அதன்படி தமோகுணம் கறுமைவடிவினது மறைக்குந் தன்மையிருப்பதால். இப்படி ஸ்ரீபாஷியக்காரரால் தமோ குணத்திற்கு ஆவரணகத்தன்மை முற்சொன்ன சுருதியின் உரையில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் அத்தமோ குணத்தில் ஆவரணசக்தித் தன்மைகூடும். ஆவ

* திரஸ்காரம்-அமிழ்த்தல், தாழ்த்தல், கீழமரச்செய்தல், இகழ்ச்சி.

* அபிபவம்-அடக்கம், ஒடுக்கம், கீழ்ப்படுத்தல்.

ரண சக்தியின் சொரூபம் சொல்லப்பட்டது. இனி ஆவரண சக்தியின் இலக்கணஞ் சொல்லப்படுகின்றது. நாஸ்தி நபா காஸ தெ ஐதி வ்யவஹாரஹேதுஃ ஆவரண ஶக்திஃ (இ-ள்.) பிரஹ்மமில்லை, விளங்கவில்லை என்னும் வியவகாரத்திற்குக் காரணமானது ஆவரணசக்தி எனப்படும். இப்படியே முற்சொன்ன ஞானசக்திக்கும் அஸ்தி ப்ரகாஸதெ ஐதி வ்யவஹார காரணம் ஜ்ஞாநஶக்திஃ (இருக்கிறது, விளங்குகிறது என்னும் விவகாரத்திற்குக் காரணமானது ஞான சக்தி) என்னும் இலக்கணம் அறிதல் வேண்டும். இவ்வாவரண சக்தியின் இலக்கணம் ஸ்ரீவித்யாரண்ய சுவாமிகளாலும் சொல்லப்படுகின்றது. நஹாதி நாஸ்தி கூடஸ்த ஐத்யாவாதந ஶவ்ருத்திஃ (இ - ள்.) கூடம் (கொல்லன்பட்டடை) போல நிர்விகாரமாயிருப்பது கூடஸ்தமெனப்படும், அப்படிப்பட்டது பரமாத்மதேவன். அப்பரமாத்மா இல்லை, விளங்கவில்லை என்னும் வியவகாரத்திற்குக் காரணமானது ஆவரண சக்தியெனப்படும்.

இனி விட்சேபசக்தி சொல்லப்படுகின்றது. தமம் சத்வமென்னு மிருகுணங்களால அபிபவத்தை யடைந்த ரஜோகுணம் விட்சேப சக்தி யெனப்படும். ரஜஸோ லோஹ ஏவச (ரஜோகுணத்தினின்றும் உலோபமேவுண்டாகின்றது) என்னும் கீதாவசனத்தில் ரஜோகுணத்தினின்றும் உலோப முதலியவற்றின் உற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. உலோபம், மதம், மற்சர முதலியவைகட்கு விட்சேபத்தின் காரணத்தன்மை பிரசித்தமே. ஆதலால் முற்கூறிய விட்சேப சக்தியில் அக்கீதாவாக்கியமே பிரமாணம்.

இனி அவ்விட்சேப சக்தியின் இலக்கணஞ் சொல்லப்படுகின்றது. ஆகாஶாதி ப்ரபஞ்சொத்பத்தி ஹேதுஃ விக்ஷேபஶக்திஃ (இ-ள்.) ஆகாசமுதலிய பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமாகிய சக்திவிட்சேப சக்தியெனப்படும். இவ்விட்சேப சக்தியினிலக்கணம் ஆசாரியர்களாலும் சொல்லப்பட்டிருக்கின்றது. விக்ஷேப ஶக்திர்லிங்காதி ப்ரஹ்மாண்டாந்த ஜகத்ஸ்ருஜேத் (இ-ள்.) சமஷ்டி வியஷ்டி வடிவான லிங்கசரீரமுதல் பதினன்கு புவன பிரம்மாண்டவரையிலுள்ள சர்வஜகத்தையும் அவ்விட்சேபசக்தியே உண்டாக்குகின்றது. இதனுற் பெறப்பட்டதாவது முற்சொன்ன அஞ்ஞானமே முற்சொன்ன ஆவரணசக்திப் பிரதானமாய் அவித்தை என்றும், முற்சொன்ன விட்சேபாதி சக்திப்பிரதானமாய் மாயை யென்றுஞ்சொல்லப்படும்.

சங்கை:—ஆவரண சக்திப் பிரதானமான அஞ்ஞானம் மாயையாகவும், விட்சேபாதிசக்திப் பிரதானமான அஞ்ஞானம் அவித்தையாகவும் ஏன் ஆகா?

சமாதானம்:—சாஸ்திர முணர்ந்தோரால் மாயைக்கும், அவித்தைக்கும் இவ்விலக்கணங்கள் சொல்லப்படுகின்றன. ஸ்வாஶ்ரயா ஽வ்யாமொஹ கரீ மாயா (இ-ள்.) தனது ஆசிரயத்திற்கு எது வியாமோகத்தை விளைவிக்கின்றதில்லையோ அது மாயையெனப்படும், ஸ்வாஶ்ரய வ்யாமொஹ கரீ அவித்யா (இ-ள்.) தனது ஆசிரயத்திற்கு எது வியாமோகத்தை விளைவிக்கின்றதோ அது அவித்தை யெனப்படும். அவ்வாவரணசக்திக்கே மோகத்தை விளைவிக்குந்தன்மையிரு

ப்பதால் ஆவரணசக்திப்பிரதானமான அஞ்ஞானத்தை அவித்தை யெனப் படும்; மாயையெனப்படுவதில்லை. விட்சேபாதிசக்திக்கு மோகத்தை விளைவிக்குந் தன்மையில்லாமையால் அவ்விட்சேபாதி சக்திப் பிரதானமான அஞ்ஞானத்தை மாயை யெனப்படும்; அவித்தை யெனப்படுவதில்லை. விட்சேபாதி என்னும் ஆதிசப்தத்தால் முற்கூறிய ஞானசக்தியையுங் கொள்ளவேண்டும். இவ்வாறாக மாயை அவித்தைகளின் பேதம் ஸ்மிருதியிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்மிருதி. தாத ்ரு விஃ்ராம் விதகாம் ஹ ்ருதி யஹி ஙிவெ ஶிதெ । யொமீ ஊயா ஐஜெ யாய தமெஹ விஃ்ராதூநெ நஃஃ (இ-ள்.) இருதயத்தில் எந்தப் பரமாத்மாவின் சாட்சாத்கார முண்டாகவே பிரஹ்மவேத்தா யோகியானவன் ஆவரணசக்திப் பிரதான அஞ்ஞானமாகிய அவித்தையையும், விட்சேபசக்திப் பிரதான அஞ்ஞானமாகிய மாயையையும் நாசஞ்செய்கின்றானோ, அந்த ஞான சொரூபமான அப்பிரமேய பிரஹ்மத்தை நமஸ்கரிக்கின்றேன்.

## உ௬. மாயை அவித்தைகளினது பிரிவின்பயனைக் கூறுதல்.

இனிமாயை அவித்தைகளின் பிரிவைச் சொன்னதற்குப்பயன் சொல்லப்படுகின்றது. முற்கூறிய மாயையா லுபகிதமான சைதன்யமாகிய அம்மாயாவுபகித சைதன்யம் ஈஸ்வரனென்றும், ஜகத்காரணரென்றும், அந்தர்யாமியென்றுஞ்சொல்லப்படும். ஆண்டு ஊஷ ஊவெ-ூ ஹூஃ (இவர் சர்வேஸ்வரர்) என்னுஞ் சுருதி அம்மாயாவுபகித சைதன்யத்தை ஈஸ்வரனென்றும், ஊஷொஂ ஸஜய-ாமி (இவர் அந்தர்யாமி) என்னுஞ் சுருதி அவரை அந்தர்யாமியென்றும், ஊஷொயொநிஃ ஊவ-ூஸ ்ரு (இவர் எல்லாவற்றிற்குங் காரணர்)என்னுஞ் சுருதி அவரைச் சர்வகாரணரென்றுஞ் சொல்லியிருக்கின்றது. அம்மாயாவுபகித சைதன்யத்தின் ஈஸ்வரத்தன்மையிலும், அந்தர்யாமித்தன்மையிலும், ஜகத்காரணத்தன்மையிலும் முற்கூறிய சுருதிகளே பிரமாணங்கள். மாயாவுபகித சைதன்யமே தத்பதத்தின் வாச்சியார்த்தம். முற்கூறிய அவித்தையா லுபகிதமான சைதன்யம் யாதோ அது ஜீவனென்றும்,பிராஞ்ஞனென்றுஞ் சொல்லப்படும்.அந்தஜீவனே துவம் பதத்தின் வாச்சியார்த்தம். ஈண்டு உபகிதசப்தத்தால் பிரதி பிம்பத்தைக்கொள்ளவேண்டும். அதாவது அம்மாயையிற் பிரதி பிம்பித்துள்ள சைதன்யம் ஈஸ்வரனென்றும்,அவித்தையிற் பிரதி பிம்பித்துள்ள சைதன்யம் ஜீவனென்றும் சொல்லப்படும். இவ்வார்த்தை ஸ்ரீவித்யாரணிய சுவாமிகளாலும் பஞ்சதசி என்னும் நூலில் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். தமொ ரஜஃ ஊகு ஶுணாவ ்ரகூதி ஜிவியா ஊஹா । ஊகு ஶுஜ ்ரு விஶுஜ ்ருாம் ஊயாஸவிஜெ ்ரு வதெஐதெ ॥ ஊயா ஜிம்பொவ ஶீக ்ரத ்ருகாம் ஊ ்ருாக ஊவ-ூஜ ஶுஹுஃ । கவிஃ ்ருாவ ஶு மஹு ந ்ருஹு வைதத் ்ருா ஃநெ கயா (இ - ள்.) சச்சிதானந்த பிரஹ்மத்தின் பிரதிபிம்பத்துடன் கூடியதும், சத்வரஜதமமென்னும் முக்குணமுமாகிய பிரகிருதி, மாயை அவித்தை யென்னும் வேறுபாட்டால் இருவகைத்து. சுத்த சத்துவகுணப் பிரதானத்தாலோ அந்தப் பிரகிருதி மாயை யென்றும், மலினசத்துவ குணப்பிரதானத்தால் அந்தப் பிரகிருதி அவித்தையென்றுஞ் சொல்லப்படுகின்றது (1) அம்மாயையிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யம் அம்மாயையைத் தன்

வசஞ்செய்து சர்வஞ்ஞனும் ஈஸ்வரனுமாகின்றது. அவித்தையிற் பிரதி பிம்பித்துள்ள சைதன்யம் ஜீவனெனப்படும், அந்த ஜீவசைதன்யம் அவ்வவித்தையின் வசமாகி அவ்வவித்தையின் விசித்திரத்தன்மையால் தானும் தேவர் மனிதர்முதலிய வடிவங்களால் பலவகையே யாகின்றது (2). இங்குக்கருத்திதுவாம்:—முற்கூறிய சுத்த சத்துவகுணப் பிரதானமானமாயை ஒன்றேயாகையால் அம்மாயையிற் பிரதிபிம்பித்துள்ள ஈஸ்வரசைதன்யமும் ஒன்றே. முற்சொல்லிய மலின சத்துவப் பிரதானமான அவித்தைஅம்மலினத்தன்மையின் விசித்திரத்தால் பலவகைப்படும். ஆகையால் அவ்வவித்தையிற் பிரதி பிம்பித்துள்ள சைதன்யமும் பலவகையே யாம். இதனால் முற்சொல்லிய பட்சத்தில் நாநா ஜீவர்களே பெறப்படுகின்றது.

இப்போது இப்பொருளில் சுருதிப்பிரமாணமுஞ் சொல்லப்படுகின்றது. அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத் தஸ்மிம்ஶ்சாந்யோ மாயயா ஸந்நிருத்த: । மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநந்து மஹேஶ்வரம் ॥ (இ-ள்.) மாயாவுபாதியுடைய பரமாத்மா சிருட்டியின் ஆதிகாலத்தில் ஆகாச முதல் பிரம்மாண்டம் அந்தமான ஜகத்தை வேதசப்தங்களால் உண்டு பண்ணினர், அதாவது அப்பரமாத்மா பூ: என்னும்வேதசப்தத்தை யுச்சரித்துப் பிருதிவியை யுண்டாக்கினர். இவ்வாறு ஆகாச முதலிய சப்தங்களையுச்சரித்து அவ்வாகாச முதலியவைகளையுமுண்டு பண்ணினர். இவ்வார்த்தை ஸ பூரிதி வ்யாஹரந் பூமிமஸ்ருஜத । வேதஶப்தேப்ய ஏவாதௌ நிர்மமே ஸ மஹேஶ்வர: ॥ (பூ என்று சொல்லி பூமியைச் சிருட்டித்தார், வேதசப்தங்களினின்றே ஆதியில் மஹேஸ்வர் நிருமித்தார்) என்னுந்தொடக்கத்து சுருதி ஸ்மிருதி வசனங்களில் மிகப்பிரசித்தம். அப்படியுண்டான ஜகத்தில் அவித்தையை யுபாதியாகவுடைய ஜீவன் முற்சொன்ன மாயையால் தேகாதிகளில் யான் எனதென்னும் அபிமானங்கொண்டு பந்தப்பட்டவனுகின்றான். மாயையை ஜகத்திற்கு உபாதான காரணமாகவும், அம்மாயையை உபாதியாகவுடைய சைதன்யத்தை ஜகத்கர்த்தா மஹேஸ்வரனுகவும் அறிதல் வேண்டும். ஈண்டு கருத்திது:—சுத்தப் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் காரணத்தன்மையில்லை; ஆனல் மாயோபாதிகரான பரமாத்மாவிற்கே ஜகத்தின் காரணத்தன்மையுண்டு. அப்பரமாத்மா அம்மாயோபாதியின் பிரதானத்தன்மையால் ஜகத்திற்கு உபாதானகாரணரும்,தனது சைதன்யவடிவத்தின் பிரதானத்தன்மையால் அந்த ஜகத்திற்கு கர்த்தாவாகிய நிமித்தகாரணருமாவர். முற்கூறிய இருமதங்களில் அஞ்ஞானம் ஒன்றாயினும் மாயை யவித்தைகளின்பேத சித்தியால் ஜீவ ஈஸ்வரர்களின் பேதமும், ஜீவர்களின் நாநாத்தன்மையுங் காட்டப்பட்டன.

## ௨௪. ஏகஜீவவாத நிரூபணம்.

இனி எந்த நூலாசிரியர் அஞ்ஞானத்தை யொன்றெனக்கொண்டும், மாயை யவித்தைகளின் பேதத்தைக்கொள்ளாமல் பிம்பப்பிரதிபிம்ப பாவத்தால் ஜீவஈஸ்வரரது பேதத்தையும், ஜீவனை ஏகமேயெனவு மொப்புகின்றாரோ அவர்களது மதம் கூறப்படுகின்றது. எப்படி ஒரே தேவதத்தனென்பவன் அடுதல் பாடுதலென்னுந் தொழிலாகிய நிமித்தங்களின் வேறுபாட்டால் அடுவோன்,

பாடுவோன் என்னுமிருபெயராற் சொல்லப்படுகின்றானே, அப்படி அஞ்ஞானம் ஒன்றே விட்சேப ஆவரணசக்திகளாகிய நிமித்தங்களின் வேறுபாட்டால் மாயை அவித்தை என்னுமிருபெயராற் சொல்லப்படுகின்றது. தாற்பரியமிதுவாம்:- அடுவோன் பாடுவோன் என்னுமிருசப்தங்கள் அவ்வொரே தேவதத்தனது வாசகங்களாம்; அவ்வாசக சப்தங்களின் வேறுபாட்டால் அத்தேவதத்தனுக்கு வேற்றுமை யுண்டாகாததுபோல மாயை யவித்தைகளென்னு மிருசப்தங்களும் அவ்வொரே அஞ்ஞானத்தின் வாசகங்கள்; அவ்வாசக சப்தங்களின் வேறுபாட்டால் அவ்வஞ்ஞானத்திற்குப் பேதம்சம்பவியாது. ஆகையால் மாயை யவித்தைகளுக்குப் பேதமில்லை. அப்படிப்பட்ட ஏக அஞ்ஞானமாகிய அவித்தையிலுள்ள சைதன்யத்தின் பிரதிபிம்பம் ஜீவனென்றும், அவித்தியோபகித பிம்பசைதன்யம் ஈஸ்வரனென்றுஞ் சொல்லப்படும். இவ்வாறு அம்மாயை யவித்தைகளின் பேதத்தை அங்கிகரியாமலும் பிம்பப்பிரதிபிம்ப பாவனைகளால், ஜீவ ஈஸ்வரர்களின் பேதம் கூடும். இவ்வார்த்தை ஸ்ரீ வியாசபகவானாலும் சொல்லப்பட்டிருக்கின்றது. சூத்திரம். சூஹாவ வனவவ (இ-ள்.) ஜலமுதலிய உபாதிகளில் சூரியசந்திராதிகளின் பிரதி பிம்பங்களுண்டாகிறதுபோல இந்த ஜீவனும் சைதன்யத்தின் பிரதிபிம்பமே.

சங்கை:—சூரியாதிகளின் பிரதி பிம்பத்திற்கு ஜலமுதலியவை உபாதிகளாதல்போல, ஜீவனாகிய பிரதிபிம்பத்திற்கும், பிம்ப பூதனான ஈஸ்வரனுக்கும் உபாதிகள் எவை? என்னு மாசங்கையுண்டாக, இனிமதபேதத்தால் ஜீவ ஈஸ்வர உபாதிகள் சொல்லப்படுகின்றன.

## உரு. சிலநூலாசிரியர் மதப்படி ஜீவவுபாதியாகிய அந்தக்கரணம் நானாவேனல் (முதற்பட்சம்)

சில நூலாசிரியரோ அந்தக்கரணத்தையே ஜீவனுக்குபாதியாகக் கொள்கின்றார்கள். ஏனெனின், அந்தக்கரண விசிஷ்ட சைதன்யத்தினிடத்தே நான் கர்த்தா, நான் போக்தாவென்னும் கர்த்திருத்துவ போக்திருத்துவ முதலிய சம்சாரம் அனுபவிக்கப்படுகின்றது. அன்றியும் காயெ-ா வாயி ரயம ஜீவః(இந்த ஜீவன்காரியோபாதியையுடையவன்) என்னுஞ் சுருதியும் அந்தக்கரணமாகிய காரியத்தையே ஜீவனுக்கு உபாதியாகச் சொல்லியிருக்கின்றது. ஆகையால் பிரதிபிம்பனாகிய ஜீவனுக்கு அந்தக் கரணமே உபாதி. அவ்வந்தக் கரணம் நானாவும், பரிச்சின்னமு மாகையால் அவ்வந்தக்கரணங்களிற் பிரதி பிம்பித்த ஜீவர்களும் நானாவும், பரிச்சின்னருமாவர்.

## உசு. சில நூலாசிரியர் மதப்படி ஜீவவுபாதியாகிய அஞ்ஞானம் நானாவேனல் (இரண்டாவது பட்சம்).

சில நூலாசிரியர் கூறுவதாவது, அவ்வந்தக்கரணம் அஞ்ஞானத்தின் காரியமாவதால் சுவதந்திரமில்லது, அவ்வந்தக்கரணத்தில் பிம்பப்பிரதி பிம்பவடிவத்தால் ஜீவபரமாத்மாக்களின் பேதம் சம்பவியாது,ஆகையால் அந்தக்கரணம் ஜீவனுக்கு உபாதியன்று;ஆனல் சுவதந்திரமாவதால் அஞ்ஞானமே ஜீவனுக்குஉபாதியாம். ஜீவனது உபாதியாகிய அவ்வஞ்ஞானமும் ஒன்றன்று; பலவேயாம். அவ்

வஞ்ஞானமாகிய உபாதியின் நாநாத்தன்மையால் அவ்வஞ்ஞானத்திற் பிரதி பிம்பித்த ஜீவர்களும் நாநாவேயாவர். பிரஹ்மத்தினிடத்து ஆரோபித மாதல் பற்றி அவ்வஞ்ஞானம் பரிச்சின்னம். ஆகையால் அவ்வஞ்ஞானத்திற் பிரதி பிம்பித்த ஜீவர்களும் பரிச்சின்னரும், பரஸ்பரம் பேதமுடையாருமாவர். இத னுல் புண்ணிய பாபகருமத்திற்குச் சுகதுக்கமாகிய பலத்தின் வியதிகரமுண்டா காது. ஒருவன் சுகி அல்லது துக்கியாக யாவருக்கும் அச்சுகதுக்கங்கள் பிராப் தமாதல் கருமபலவியதிகர மெனப்படும். அஃது எப்படி ஏகஜீவ பட்சத்திற் பிராப்தமோ, அப்படி இந்த நாநாஜீவபட்சத்திற் பிராப்தமாகாது. ஆகையால் பல அஞ்ஞானமே பிம்பனுன ஈஸ்வரனுக்கும் பிரதிபிம்பராகிய ஜீவர்கட்கும் பரஸ்பரபேதத்தை விளைவிக்கும் உபாதிகள். இவ்வாறு அந்த வியாசசூத்திரத் திற்குப் பொருளாக நாநா ஜீவவாதிகளது மதத்தில் பெறப்படும்.

## உஎ. சில நூலாசிரியர் மதப்படி ஜீவவுபாதியாகிய அஞ்ஞானம் ஏகம் எனல் (மூன்ருவது பட்சம்).

சில நூலாசிரியாரோ இது கூறுகின்றனர்:—ஜீவேஸ்வரர்கட்குபேதத்தைச் செய்வதாகிய உபாதி சுவதந்திரமாதல்பற்றி அஞ்ஞானமே, அவ்வஞ்ஞானமும் பலவன்று; ஆனுல் ஏகமே. அவ்வேக அஞ்ஞானத்திலுள்ள சைதன்யத்தின் பிரதிபிம்பனுகிய ஜீவனும் அவ்வஞ்ஞானமாகிய வுபாதியின் ஏகத்தன்மையால் ஏகனும், அபரிச்சின்னனுமாவன். அஜா மேகாம் லோஹிதஶுக்லக்ருஷ்ணாம் (பிறப்பி லது ஏகம் சத்வ ரஜோதமோகுண வடிவினது) என்னுஞ் சுருதியே அவ்வஞ் ஞானத்தின் ஏகத்தன்மையிற் பிரமாணம். மற்றும் இந்த்ரோ மாயாபி꞉ புரு ரூப ஈயதே (பிரஹ்மம் மாயைகளினுலநேக உருவமுடையதானது) என் னுஞ் சுருதியில் சொல்லப்பட்ட மாயைகளின் அநேகத் தன்மையாதோ அது மாயையாகிய அஞ்ஞானத்தினது சக்திகளின் அநேகத்தன்மை அல்லது சத்வ முதலிய குணங்களின் அநேகத் தன்மையை எடுத்துச் சொல்லப்பட்டது. இத னுல் அச்சுருதிக்கும் விரோதமாகாது. அஜோஹ்யேகோ ஜுஷமாணோ(அ)நு ஶேதே (பிறப்பற்ற ஏகனேயான ஜீவன் அவித்தையை யநுசரித்து துயின்ற வன்போல மூடப்பட்ட ஞானநேத்திரங்களுடையவனுகின்றுன் பிறகு அதையே சேவித்து சம்சாரியாகின்றுன்) என்னுஞ் சுருதி ஜீவனது ஏகத்தன்மையிற் பிர மாணமாம். அப்படியே ஆபாஸ ஏவ ச (ஆபாசன்தான்) என்னுஞ் சூத்திரப்படி ஒருமை வசனத்தால் சூத்திரக்காரராலும் ஜீவனது ஏகத்தன்மையே சொல்லப் பட்டிருக்கின்றது. ஆகையால் ஜீவன் ஏகனே என்ன ஒப்பவேண்டும்.

சங்கை:—ஜீவன் ஏகனென ஒப்பிடில் நுமது மதத்தில் பந்தமோக்ஷங்க ளின் வியவஸ்தை (பாகுபாடு) யாங்ஙன முண்டாகும்? அஃதாவது தத்துவஞா னத்தால் சில ஜீவர்கள் முக்தராகின்றுர்கள், ஞானத்தின் அப்பிராப்தியால் சில ஜீவர்கள் பத்தர்களாகின்றுர்கள். இவ்வாறுன பந்தமோக்ஷங்களின் வியவஸ் தை நாநா ஜீவபட்சத்தில் சம்பவிப்பதுபோல ஏக ஜீவபட்சத்தில் அந்த விய வஸ்தை சம்பவியாது.

சமாதானம்:—அஞ்ஞானமும் ஜீவனும் ஏகமாயினும், அவ்வேக அஞ்ஞானத்தின் காரியமாகிய அந்தக் கரணங்கள் பல. அந்தக்கரண விசிஷ்டசைதன்யத்திற்குப் பிரமாதாவென்றுபெயர். அவ்வந்தக் கரணங்கள் நானா வாகப் பிரமாதாக்களும் நானாவாகவே யாவர். தத்துவஞானத்தால் ஒரு பிரமாதா முக்தனுயினும் தத்துவஞானமில்லாத மற்ற பிரமாதாக்கள் பத்தர்களேயாவர். இவ்வாறு பிரமாதாக்களின் பேதத்தை அங்கீகரிப்பதால் அவ்வேக ஜீவபட்சத்திலும் பந்த மோக்ஷங்களின் வியவஸ்தை பொருந்தும்.

சங்கை:—ஏக ஜீவவாதிகளாகிய நும் மதத்தில் மோக்ஷம்யாது வஸ்து? அவித்தையி னிவிருத்தியே மோக்ஷமெனக் கூறின், அதனிடத்தும், இவ்விசாரஞ் செய்தல் வேண்டும். காரிய அவித்தையி னிவிருத்திமோக்ஷமா? மூலாவித்தையி னிவிருத்திமோக்ஷமா? முதற்பட்சமோ சம்பவியாது. ஏனெனின், தேகாதிகளில் ஆத்மத்தன்மை முதலிய புத்தியாகிய பிராந்தி ஞானம் காரியாவித்தையெனப்படும், அவ்வெல்லாப் பிராந்தி ஞானத்தி னிவிருத்தியே சம்பவியாது. மூலாவித்தையிருக்கவே மீண்டும் பிராந்தி ஞானங்களினுற்பத்தி அவசியமுண்டாகும், சொற்பபிராந்தி ஞானத்தினிவிருத்திக்குப் புருஷார்த்தத்தன்மையேயின்றாகையால் அக்காரியாவித்தையி னிவிருத்திக்கு மோக்ஷத்தன்மை சம்பவியாது.

அஞ்ஞானத்தின் ஆவரணசக்தி அவித்தை எனப்படும். அவ்வாவரணசக்தியாகிய அவித்தை பலவாம். எந்தப்பிரமாதாவிற்குத் தத்துவஞான முண்டாகின்றதோ, அந்தப்பிரமாதாவிற்குத் தனது சம்சாரத்திற் கேதுவாகிய அவ்வவித்தியா நிவிருத்தியே முக்தியாம். எந்தப்பிரமாதாவிற்கு அத்தத்துவ ஞான முண்டாகவில்லையோ,அந்தப் பிரமாதாவிற்கு அவ்வவித்தையிருக்கவே பந்தமாம்.இவ்வாற்றல் அவ்வேக ஜீவபட்சத்திலும் பந்தமோக்ஷங்களின் வியவஸ்தை சம்பவிக்குமென்றிங்ஙனங் கூறின், அக்கூற்றுஞ் சம்பவியாது. ஏனெனின், அவ்வவித்தையை பல வெனக்கொண்டு, பந்தத்திற்கும் ஏதுவாகக்கொண்டால் அவ்வவித்தையினுஸ்ரயமாகிய ஜீவர்கட்கும் பேதமே கொள்ளவேண்டும், அதனுல் நுமது மதத்திலும் நானா ஜீவவாதமே பிராப்தமாகும், அஃது நுமக்கும் விருப்பமன்று. அல்லது, மூலாவித்தையி னிவிருத்திமோக்ஷமாமெனும் இரண்டாவது பட்சமங்கீகரிக்கின், அஃதுஞ் சம்பவியாது. ஏனெனின், தத்துவஞானத்தால் அவ்வேக மூலாவித்தை நீங்கிவிட எல்லோருக்கும் முக்தியுண்டாதல் வேண்டும். ஜீவன் ஏகன் என்னும் பட்சத்தில் தான் எல்லோருக்கும் முக்தியுண்டாதல் வேண்டும் என்று கூறுதலே விருத்தமெனக்கூறின், அக்கூற்றும் பொருந்தாது. ஏனெனின், நுமதுமதத்தில் முன்தோன்றின சுகர்வாமதேவாதிகளுக்கு முக்தி அங்கீகாரமா? இன்று? முதற்பட்சம் அங்கீகரிக்கின் அச்சுகர்வாமதேவாதிகளுக்குத் தத்துவஞானத்தால் அவ்வேக மூலாவித்தை நீங்கிவிட நம்மனோர்க்கு இப்போது சம்சாரம் தோற்றுதல் கூடாது. இரண்டாவது பட்சம் அங்கீகரிக்கின் அச்சுகர்வாம தேவாதிகளது முக்தியைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரம் அப்பிரமாணமாகும். அச்சுகர்வாமதேவாதி மஹான்கட்கே முக்தியுண்டாகாதபோது நம் போலிகட்கு முக்தியையடைய ஆசை எப்படியுண்டாகும்?

அல்லது, யாவ தயிகாா ஃவஹ்வி திராயி காரி காணாம். (அதிகாரமடைந்தவருக்கு அதிகாரமுள்ள வரையில் இருப்புளது) என்னுஞ் சூத்திரத்தின் வியாக்கியானத்தில் பகவான் பாஷியக்காரரால் இங்ஙனஞ்சொல்லப்பட்டிருக்கிறது:—உபாசனையால் இந்திராதி பதங்களைப்பெற்ற அதிகாரிகளுக்கு ஓர் வரசாப முதலிய நிமித்தங்களின் வசத்தால் மறுபிறப் படையப்படினும் அது தத்துவ ஞானத்திற்குத் தடையாகாது, ஆகையால் அவ்வதிகாரிகளுக்கு அவ்விந்திராதிய அதிகாரத்தின் முடிவில்மோக்ஷம் அவசிய முண்டாகின்றது, இவ்வெல்லாக்கூற்றும் அவ்வேக ஜீவபட்சத்தில் பொய்யேயாகும்.

அல்லது, பிரத்தியகபின்ன பிரஹ்மத்தின் சாட்சாத்காரமுடைய பிரஹ்மவேத்தாவானவர் தனது சீடர்களுக்கு அந்தப்பிரஹ்மத்தை உபதேசிக்கின்றார் என்னும் வார்த்தை சுருதி ஸ்மிருதிகளிற் பிரசித்தம். சுருதி. தவி ஜ்ஞாநாய ஸ ஸமிகாாணிஃ ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம். (இ-ள்.) பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பொருட்டு அதிகாரிகள் கையிற் சிறிது பூசைக்குரியவைகளைக்கொண்டு சுரோத்திரிய பிரஹ்மநிஷ்ட குருவினருகிற் செல்லவேண்டும். ஸ்மிருதி. உவ தெக்ஷ்யந்தி தெ ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்ஶிநஃ (இ-ள்.) தத்துவமுணர்ந்த ஞானிகள் உனக்கு ஞானத்தையுபதேசிப்பார்கள். ஏகஜீவபட்சத்தில் சாட்சாத்காரமுடைய குருவேயில்லையாகையால் குருசீடர்களின் வேற்றுமையே சம்பவியாது. அவ்வேற்றுமையில்லையாகவே ஒருவருக்கும் மோக்ஷம் பிராப்தமாகாதாகும். அல்லது, அவ்வேகஜீவபட்சத்தில் வேதத்தின் கருமகாண்டத்திற்கும் ஞானகாண்டத்திற்கும் வெவ்வேறு அதிகாரிகள் சம்பவிக்கமாட்டார்கள்; அதிகாரிகளில்லாமையால் கருமஞானகாண்டங்கட்கும் அப்பிரமாணத்தன்மையே பிராப்தமாகும், ஆகையால் அஞ்ஞானமும் ஏகமே, அவ்வஞ்ஞானவுபகிதஜீவனும் ஏகனே என்னும் ஏகஜீவபட்சம் நலமன்று.

சமாதானம்:—அஜாமேகாம் லோஹிதஶுக்லக்ருஷ்ணாம். (பிறப்பில்லாதது ஏகம் சத்வ ரஜதமோ குணத்தொகுதியாயது) என்னுந்தொடக்கத்து சுருதிகளிலும் அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் மம மாயா துரத்யயா (அஞ்ஞானத்தால் ஞானம் மறைக்கப்பட்டது, எனது மாயைவெல்லமுடியாதது) என்னுந்தொடக்கத்து ஸ்மிருதிகளிலும் அவ்வஞ்ஞானத்தின் ஏகத்தன்மையே துணியப்படுகின்றது, ஆகையால் அவ்வஞ்ஞானம் ஏகமென்றே கொள்ளவேண்டும். அவ்வஞ்ஞானத்திற்கு ஏகத்தன்மைபெறப்படவே அவ்வஞ்ஞானவுபகித ஜீவனும் ஏகனென்றேகொள்ளவேண்டும். அவ்வேக ஜீவபட்சத்தில் சொப்பன திருஷ்டாந்தத்தால் பந்தமோக்ஷமுதலிய எல்லாவேற்றுமைகளுங்கூடும், அது சொல்லப்படுகின்றது:—சொப்பனவத்தையில் இச்சொப்பனத்தைக் காண்பவன் தனது பிராந்தியாற் கற்பிக்கப்பட்ட அனேக பிரமாதாக்களுள் சிலபிரமாதாக்களுக்குப் பந்தத்தையும் சிலபிரமாதாக்களுக்கு முத்தியையுங்காண்கின்றான். அப்பந்தமோக்ஷங்களின் தரிசனத்தால் சொப்பனங்காண்பவனுக்கு எப்படி அப்பந்தமோக்ஷங்கள் உண்டாகாவோ, அப்படி ஜகத் அவஸ்தையிலும் அவ்வேக ஜீவனாற் கற்பிக்கப்பட்ட அனேகபிரமாதாக்களுள் சிலர் பத்தர்களும் சிலர் முக்தர்களுமாகின்றார்கள், அவர்களுடைய பந்தமோக்ஷ தரிசனத்தால் அவ்வேக ஜீவனுக்கு அப்

பந்தமோக்ஷங்கள் உண்டாகா; ஆகையால் அவ்வேக ஜீவபட்சத்தில் பந்தமோக்ஷங்களின் வேற்றுமையுங்கூடும். இவ்வாறான சொப்பன திருஷ்டாந்தத்தால் குருசிடர் முதலிய எல்லாவேற்றுமைகளையு மறிந்து கொள்ளவேண்டும். இதனால் இவ்வேக ஜீவபட்சத்தில் முற்சொன்ன குற்றம்வராது. அன்றியும் அவ்வேக ஜீவனிடத்து அந்தக் கரணவிசிஷ்ட அனேக பிரமாதாக்கள் கற்பிதர்கள், அவருள் சில பிரமாதாக்கள் சுகிகளும், சிலபிரமாதாக்கள் துக்கிகளுமாவர், இவ்வாற்றால் சுக துக்கங்களின் வேற்றுமையுங்கூடும், ஆண்டு பிரதிபிம்பத்தன்மை தர்ம விசிஷ்ட சைதன்யம் ஜீவனென்றும், பிம்பத்தன்மை தர்மவிசிஷ்டசைதன்யம் ஈஸ்வரனென்றுங் கூறிய பட்சத்தில் அந்தக் கரணமுதலிய உபாதியானய தோஷங்கள் பிரதிபிம்பனுகிய ஜீவனிடத்தேயிருக்கின்றன; பிம்பபூதனான ஈஸ்வரனிடத்திருப்பதில்லை. ஏனெனின், அவ்வுபாதிகள் பிரதிபிம்பத்தின் பட்சபாதிகள்; பிம்பத்தின் பட்சபாதிகளன்று, எங்ஙனமெனின், ஜலமுதலிய உபாதிகளின் சலனமுதலிய தருமங்கள் பிரதிபிம்பத்தின் கண்ணே தோற்றுகின்றன; பிம்பத்தின்கண் தோற்றுகிறதில்லை.

சங்கை:—அஞ்ஞான முதலியவைகளிலுள்ள சைதன்னியத்தின் பிரதிபிம்பம் ஜீவனென்று முன்சொல்லப்பட்டது. அது பொருந்தாது. ஏனெனின், உருவமுடைய வஸ்துக்களுக்கே பிரதிபிம்பமுண்டாகின்றது;உருவமில்லாத வஸ்துக்களுக்குப் பிரதிபிம்பமுண்டாகாது. அதுஉருவமுடைய சூரியசந்திராதிகளுக்கு ஜலமுதலியவற்றிற் பிரதிபிம்பமுண்டாகின்றது போலவாம். பிரஹ்மமோ உருவமுதலிய குணங்களில்லாத தாகையால் அந்தப்பிரஹ்மத்திற்கு அஞ்ஞானத்திற் பிரதிபிம்பமே சம்பவியாது. உருவமில்லாத ஆகாயத்திற்கு ஜலத்திற் பிரதிபிம்பமுண்டாகின்றதுபோல உருவமில்லாத பிரஹ்மத்திற்கும் அஞ்ஞானத்திற் பிரதிபிம்பம் சம்பவிக்குமென்று கூறினும் அது பொருந்தாது. ஏனெனின், உருவமில்லாததால் அவ்வாகாயத்திற்கு ஜலமுதலிய வற்றிற் பிரதிபிம்பம் சம்பவியாது; மற்று அவ்வாகாயத்தை ஆசிரயித்துள்ள மேகம், ஒளி, நக்ஷத்திரமுதலிய உருவுடைப் பதார்த்தங்களுக்கே ஜலமுதலியவைகளிற் பிரதிபிம்பம் விழுகின்றது. ஜலமுதலியவைகளில் ஆகாயத்தின் பிரதிபிம்பம் உண்டு என்னும் அநுபவம் மயக்கமேயாம். ஆகையால் பிம்பப்பிரதிபிம்ப வடிவத்தால் பிரஹ்மத்திற்கு ஜீவஈஸ்வரரின் வேற்றுமை முன்சொன்னது பொருந்தாது.

சமாதானம்:—உருவமுடைய பொருள்களுக்கே பிரதிபிம்பமுண்டாகுமென்னும் நியமம் எங்கும் பொருந்தாது; ஆனல் சிலவிடத்து உருவமில்லாதபொருள்களுக்கும் பிரதிபிம்பம் பார்க்கப்படுகின்றது. உருவமுதலியகுணங்கள் உருவமில்லன, ஆயினும் செவ்வரத்தம் புட்பமுதலியவைகளின் செம்மைமுதலிய உருவங்களுக்கு ஸ்படிக முதலியவைகளினிடத்துப் பிரதிபிம்பம் பிரத்தியட்சமாய்ப் பார்க்கப்படுகின்றது.

உருவமில்லாத திரவியத்திற்குப் பிரதிபிம்ப முண்டாகாதென்னும் நியமம் நாமுங்கொள்ளுகின்றேமெனின் அவ்வுருவமுதலிய குணங்கள் திரவியவடிவமன்று, ஆகையால் அவ்வுருவமுதலியவைகட்குப் பிரதிபிம்பமுண்டாயினும் முற்சொல்லிய நியமத்திற்குக் கேடுண்டாகாது. இங்ஙனங்கூறுவதும் பொருந்தாது.

*: என்று இங்ஙனங் கூறினும்

எக்காரணத்தானெனின், உருவமில்லாத ஆகாயதிரவியத்திற்கும் ஜலமுதலிய வைகளிற் பிரதிபிம்பம் பார்க்கப்படுகின்றது; ஆங்கு கருமையும் பரப்பு முடைய தான பாகியஆகாயம் தோற்றுகின்றதுபோல கிணறு குள முதலிய சொற்ப ஜலத்தினிடத்தும் அக்கருமையும் பரப்புமுடைய ஆகாயம் தோற்றுகின்றது. அச்சொற்பஜலத்தில் உண்மையாகவோ பரப்புமுதலியவைகளையுடைய ஆகாய மில்லை. ஆகையால் ஜலத்தினிடத்து விளங்குமவ்வாகாயம் புறத்தேயுள்ள ஆகா யத்தின் பிரதிபிம்பமாகவே கொள்ளுதலாகும். இந்த ஜலமுதலியவற்றில் இவ் வாகாயத்தினதே பிரதிபிம்பமென்னும் அநுபவம் யாவருக்குமுண்டாகின்றது. அவ்வநுபவத்திற்கு ஓர் பாதகமுமில்லையாகையால் அவ்வநுபவத்திற்கு மயக்கத்த ன்மையுஞ் சம்பவியாது; விரோதிஞானமாகிய பாதகமிருந்தாற்றான் அநுபவத் திற்கு மயக்கமுண்டாகும். எங்ஙனம் 'இது வெள்ளியன்று' என்னும் விரோதி ஞானமாகிய பாதகமிருக்கவே கிளிஞ்சலில் 'இது வெள்ளி' என்னும் அநுபவத் திற்கு மயக்கமுண்டாகின்றதோ, அங்ஙனம் இது ஆகாயத்தின் பிரதிபிம்பமன்று என்னும் விரோதிஞானமாகிய பாதகம் ஆங்கில்லை. ஆகையால் முற்சொல்லிய அநுபவம் மயக்கமன்று. இவ்வாறு உருவரகித ஆகாயத்திரவியத்தின் பிரதி பிம்பம் பெறப்படவே பிரஹ்மத்திற்கும் பிம்பப் பிரதிபிம்ப வடிவத்தால் ஜீவஈஸ் வரரின் வேற்றுமை கூடும்.

உருவமில்லாத திரவியத்திற்குப் பிரதிபிம்பமுண்டாகா தென்னும் அர்த்த த்தில் உமக்கு ஆக்கிரக மிருந்தாலோ யாம் சித்தாந்தி பிரஹ்மத்தைத் திரவிய மென வொப்புவதில்லை. ஏனெனின், நையாயிகர்களால் குணத்தினாஸ்ரயத்தையும் சமவாயிகாரணத்தையுமே திரவியமென்று கொள்ளப்பட்டிருக்கின்றது. ஸாக்ஷீ சேதா: கேவலோ நிர்குணஶ்ச (சித்தும் கேவலமும் நிர்க்குணமுமானது சாட்சி) என்னுஞ் சுருதி பிரஹ்மத்தை நிர்க்குணமென்று சொல்லியிருக்கின்றது. பிரஹ் மத்திற்குக் குணங்களினாஸ்ரயத்தன்மை சம்பவியாது. சமவாய மங்கீகரியாமை யால் பிரஹ்மத்திற்கு சமவாயிகாரணத் தன்மையுஞ் சம்பவியாது. ஆகையால் உருவமில்லாத உருவமுதலிய குணங்களைப்போல பிரஹ்மத்திற்குப் பிரதிபிம்ப மொப்புவதில் ஓர் விரோதமுமில்லை. அல்லது அஞ்ஞானத்தில் பிரஹ்மத்தின் பிரதிபிம்ப மங்கீகரிக்கா விட்டாலும் இவ்வாறான ஜீவ ஈஸ்வரரின் வேற்றுமை கூடும். அஞ்ஞானமாகிய அவித்தையோடு விசிஷ்டமான சைதன்யம் ஜீவனென் றும், அவ்வவித்தையா லுபகிதமான சைதன்யம் ஈஸ்வரனென்றுஞ் சொல்லப் படும். இவ்வார்த்தை பூர்வாசாரியர்களாலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோ கம். பிம்பத்வம் ப்ரதிபிம்பத்வம் யதா ஸூர்யே கல்பிதம், ஜீவத்வ மீஶ்வரத்வஞ்ச ததா ப்ரஹ்மணி கல்பிதம் (இ-ள்.) சூரியனிடத்து பிம்பத்தன்மையும் பிரதிபிம் பத் தன்மையுங் கற்பிதமாவதுபோல பிரஹ்மத்தினிடத்து ஜீவ ஈஸ்வரத்தன்மை கள் கற்பிதம்.

## உஅ. சில நூலாசிரியர்மதப்படி நாநா அஞ்ஞானங்களின் அநுசாரமாக ஜீவ ஈஸ்வரவிபாகவர்ணனம் (நான்காவது பட்சம்).

சில நூலாசிரியரோ நாநா அஞ்ஞானங்களை அங்கீகரித்து இவ்வாறாக ஜீவ ஈஸ்வரரின் வேற்றுமை சொல்லுகின்றார்கள். பலமரங்களின் கூட்டத்தை வன

மென்றும் அவ்வனத்தைச் சமஷ்டியென்றும் தனிமரத்தை வியஷ்டி என்றும் கூறுவதுபோல நாநா அஞ்ஞானங்களின் கூட்டத்தைச் சமஷ்டியென்றும் தனி அஞ்ஞானத்தை வியஷ்டி யென்றுங் கூறுவர். ஆண்டு அச்சமஷ்டி அஞ்ஞான வுபகித சைதன்யம் ஈஸ்வரனென்றும் வியஷ்டி அஞ்ஞானவுபகித சைதன்யம் ஜீவனென்றுங் கூறுவர். அவ்வஞ்ஞானங்கள் நாநாவாகையால் ஜீவர்களும் நாநாவாவர். இம்மதமுடையாரது கருத்திதுவாம். சுருதி ஸ்மிருதியாதிய சாஸ்திரங்களில் சுகர்வாமதேவர் முதலியோர்க்கு மோக்ஷம் சொல்லப்பட்டிருக்கின்றது; ஆனால் நாம் போலிய ஜீவர்கட்கு இக்காலத்தில் சம்சாரம் தோற்றுகின்றது. ஒவ்வொருவரிடத்தும் அஹம் அஜ்ஞ: ந ஜாநாமி (நான் அஞ்ஞானி அறிகிலேன்) என்று வெவ்வேறு அஞ்ஞானத்தை விஷயஞ்செய்யும் அநுபவமும் நிகழ்கின்றது. இந்த்ரோ மாயாபி: புரு ரூப ஈயதே (ஈசுரன் மாயைகளினலே அநேக உருவங்களுடையவரானர்) என்னுஞ் சுருதியிலும் அம்மாயையாகிய அஞ்ஞானத்திற்கு நாநாத்தன்மையே சொல்லப்பட்டுளது. இச் சுருதியிலுள்ள மாயையென்னும் பதத்தின் முக்கியார்த்தத்தை விட்டு மாயயையின் சக்திகளிலாவது சத்துவமுதலிய குணங்களிலாவது அம்மாயைப் பதத்திற்கு லட்சணைசெய்வதில் ஓர் பிரமாணமுமில்லை. ஆகையால் அவ்வஞ்ஞானங்கள் நாநாவாகவே கொள்ளத்தக்கனவாம். அஜாமேகாம் (பிறப்பற்றது ஏகம்) என்னுந்தொடக்கத்து சுருதி ஸ்மிருதிகளில் அஞ்ஞானத்திற்கு ஏகத்தன்மை சொல்லப்பட்டுளது, அஃதோ அவ்வஞ்ஞான சமூகத்தின் ஏகத்துவத்தை எடுத்துச்சொன்னதாம். ஆகையால் அச்சுருதி ஸ்மிருதிவசனங்களுக்கும் விரோதமுண்டாகாது. இவ்வாறு அஞ்ஞானத்தின் நாநாத்தன்மையால் ஜீவர்களின் நாநாத்தன்மை பெறப்படவே எந்த ஜீவனுக்கு பிரஹ்ம சாட்சாத்காரம் பிராப்தமாகின்றதோ அந்த ஜீவனுக்கே தனது அஞ்ஞானத்தின் நிவிருத்தியாகிய மோக்ஷமுண்டாகின்றது. பிரஹ்மசாட்சாத்கார மில்லாதவர்கட்குத் தத்தம் அஞ்ஞானவயத்தால் சம்சாரமாகிய பந்தமேயிருக்கின்றது. இவ்வாறுகிய பந்த மோக்ஷங்களின் பாகுபாடும் இந்நாநா ஜீவபட்சத்தில் செவ்வனே சம்பவிக்கின்றது; அவ்வேக அஞ்ஞான ஏகஜீவபட்சத்தில் அப்பந்தமோக்ஷங்களின் பாகுபாடு சம்பவியாது.

சங்கை:—அஞ்ஞானத்தின் வேறுபாட்டால் ஜீவர்களின் பேதமங்கீகரிக்கின் ஜீவ ஜீவர்கட்குப் பிரபஞ்சத்தின் பேதமேயுண்டாகும். ஓர்கால் இப்பொருளில் உமக்கு விருப்பமிருந்தால் எக்கடம் உம்மால் அநுபவிக்கப்பட்டதோ அதேகடம் நம்மாலும் அநுபவிக்கப் பட்டதென்னும் கடமுதலிய பிரபஞ்சத்தின் ஏகத்தன்மையை விஷயஞ்செய்யும் பிரத்திய பிஞ்ஞைக்கு விரோதம் பிராப்தமாகும். எக்காரணத்தானெனின், ஒருவனது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட பிரபஞ்சம் மற்றொருவனுக்குப் பிரத்தியட்சமாகாது. பாதகமில்லையாகவே பிரத்திய பிஞ்ஞைக்கும் மயக்கத் தன்மையுஞ் சம்பவியாது. ஓரே பரமேஸ்வரர் சர்வஜகத்திற்கு உற்பத்தி ஸ்திதி லயங்களின் காரணர் என்னும் எல்லா சாஸ்திரங்களின் சித்தாந்தத்திற்கும் விரோத முண்டாகும். அல்லது, இங்ஙனங்கூறிய தோஷத்தை நிவிருத்திக்கும்பொருட்டு சமஷ்டி அஞ்ஞான உபகித சைதன்ய

மாகிய ஈஸ்வரனல் ஏற்படுத்தப்பட்ட இப்பிரபஞ்சம் ஜீவர்களெல்லோருக்கும் பொதுவென வொப்பிடினே மோக்ஷமின்மை யுண்டாகும், அஃதாவது ஒரு ஜீவனுக்கும் மோக்ஷமுண்டாகாது. அது சொல்லப்படுகின்றது. நிர்க்குணப் பிரஹ்மபாவத்தின் பிராப்தி மோக்ஷமெனப்படும். நாநாஅஞ்ஞான பட்சத்தில் ஒரு ஜீவனது தத்துவஞானத்தால் ஒரு அஞ்ஞானம் நீங்கிடினும் மற்றெல்லா அஞ்ஞானங்களின் நீக்க முண்டாகாது. அவ்வஞ்ஞானங்களிருக்கவே ஈஸ்வரனுக்கும் ஜகத்திற்கும் பாதகமுண்டாகா. அஞ்ஞானம் ஈஸ்வரன் ஜகத்து இவைகளிருக்கவே பிரஹ்மத்தினிடத்து நிர்க்குணத் தன்மையே சம்பவியாது. ஆகையால் நிர்க்குணப் பிரஹ்மத்தின் பிராப்தியாகிய மோக்ஷம் ஒரு ஜீவனுக்கு முண்டாகாதாகும்.

அல்லது சித்தாந்தத்தில் அத்துவிதீய பிரஹ்மத்தின் ஞானத்தானேமோக்ஷமொப்பப்பட்டுளது. அவ்வத்துவிதீய பிரஹ்மத்தின் ஞானம் நாநாஜீவபட்சத்தில் சம்பவியாது. எக்காரணத்தானெனின்,ஞானத்திலும் முக்தர்களைவிட வேறுன மற்ற ஜீவர்களும் ஈஸ்வரனும் அஞ்ஞானமும் ஜகத்தும் இருப்பனவேயாகின்றன. அவைகளால் பிரஹ்மம் அத்துவிதீயமேயாம். இக்காரணம் பற்றியும் ஒரு ஜீவனுக்கும் மோக்ஷமுண்டாகாதாகும்.

அல்லது, சுருதி ஸ்மிருதியாகிய சாஸ்திரங்களின் பிரமாணங்கொண்டு ஓர்கால் யாதோ ஒருவகையாக ஞானத்தால் மோக்ஷப்பிராப்தி சொல்லப்படினும் அது சகுண பிரஹ்மத்தின் பிராப்தியே மோக்ஷமாகச் சித்திக்கும்; நிர்க்குணப் பிரஹ்மத்தின் பிராப்திக்கு மோக்ஷத்தன்மை சித்தியாது. அது முற்றும் அநிஷ்டம். ஏனெனின், 𑌅𑌨𑌨𑍍𑌤𑌰𑍋𑌽𑌬𑌾𑌹𑍍𑌯𑌃 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌘𑌨 𑌏𑌵 । 𑌅𑌸𑍍𑌥𑍂𑌲𑌮𑌨𑌣𑍍𑌵𑌹𑍍𑌰𑌸𑍍𑌵𑌮𑌦𑍀𑌰𑍍𑌘𑌮𑍍 । 𑌯𑌤𑍍𑌰 𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑍈𑌵𑌾𑌭𑍂𑌤𑍍 𑌤𑌤𑍍𑌕𑍇𑌨 𑌕𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍 (உள்ளிலாதது வெளியிலாதது எல்லாமானது பிரஞ்ஞானகனமே, பருமை மெலிவு நெடில் குறில் அல்லாதது, இவனுக்கு ஈதெல்லாம் எப்போது ஆன்மவுருவாமோ அப்போது எதனல் எதைப் பார்ப்பான்) என்பதாதி சுருதிகளில் நிர்க்குணப் பிரஹ்மத்திற்கே மோக்ஷவடிவம் சொல்லப்பட்டிருக்கின்றது. அவ்வெல்லா சுருதிகளுக்கும் விரோதமுண்டாகும். ஆகையால் நாநா அஞ்ஞானங்களை யங்கீகரித்து நாநா ஜீவர்களை யொப்புதல் தகுதியல்ல.

சமாதானம்:—அஞ்ஞானத்தின் பேதத்தால் ஜீவர்களின் பேதம் அவசியமொப்பவேண்டும். இல்லாவிடின் பந்தமோக்ஷசாஸ்திரம் பிரமாணமாகாது. இந்நாநா ஜீவபட்சத்தில் தனித்தனி ஜீவர்கட்கு பிரபஞ்சத்தின் பேதம் முன் சொல்லப்பட்டது, அது நமக்கும் உடன்பாடே, அஃதாவது ஒவ்வொரு ஜீவர்கட்கும் பிரபஞ்சம் பின்னம் பின்னமே. ஆனல் பிரபஞ்சத்தின் நாநாத் தன்மையில் பிரத்திய பிஞ்ஞையின் விரோதம் முன் சொல்லப்பட்டது. அது பொருந்தாதது. எக்காரணத்தானெனின், பிரத்திய பிஞ்ஞை மயக்கமேயாம். அது காட்டப்படுகின்றது. ஓரே சுக்தியில் பதின்மருக்கு வெள்ளிப் பிரமமுண்டாகின்ற விடத்து ஒவ்வொருவரது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட அவ்வெள்ளிகள் வெவ்வேறே ஒருவெள்ளியன்று. ஓர்கால் அப்பதின்மரது பிரமத்துக்கும் ஓரே வெள்ளி

விஷயமானால் ஒருவனுக்கு அச்சுத்தியாகிய அதிஷ்டானத்தின் ஞானத்தால் வெள்ளிப்பிரமம் நீங்கிவிட அதிஷ்டான ஞானமில்லாத மற்றவர்கட்கு அவ்வெள்ளி காணப்படாதிருக்க வேண்டும்; ஆனால் மற்றவர்கட்கோ அவ்வெள்ளி காணப்படுகின்றது. ஆகையால் அவ்வெள்ளிகள் ஒன்றன்று; ஆனால் அப்பதின்மருக்கு தனித்தனி அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட பத்துவெள்ளிகள் ஆண்டுஉற்பத்தியாகின்றன. ஒருவனது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட வெள்ளி வேறொருவனுக்குப் பிரத்தியட்சமாகாது; என்றாலும் அப்பதின்மருக்கு ஓர் பிரசங்கத்தை யொட்டி எவ்வெள்ளி உம்மால் அநுபவிக்கப்பட்டதோ அதே வெள்ளி நம்மாலும் அநுபவிக்கப்பட்டதென்னும் மயக்கமாகிய பிரத்திய பிஞ்ஞை உண்டாகின்றதுபோல பிரசங்கத்திலும் தனித்தனி ஜீவரது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட பிரபஞ்சத்திற்குப் பேதமுண்டானாலும்,அங்ஙனமே ஒருவனது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட பிரபஞ்சம் வேறொருவனுக்கு அப்பிரத்தியட்சமானாலும் எக்கடம் உம்மால் அநுபவிக்கப்பட்டதோ அதேகடம் நம்மாலும் அநுபவிக்கப்பட்டதென்னும் மயக்கமாகிய பிரத்திய பிஞ்ஞைநிகழும். ஆகையால் ஜீவ ஜீவரைக்குறித்து பிரபஞ்சபேத மொப்புவதில் பிரத்திய பிஞ்ஞைக்கு விரோதமுண்டாகாது.

அல்லது, ஜீவர்கள் நானாவாயிடினும் சமஷ்டி அஞ்ஞானவுபகித சைதன்யரான ஈஸ்வரனாலாக்கப்பட்ட இப்பிரபஞ்சம் அவ்வெல்லா ஜீவர்கட்கும் ஒரே சாதாரணமாம். ஆகையால் முற்சொன்ன பிரத்தியபிஞ்ஞைக்கும், ஒரே பரமேஸ்வரர் சர்வஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயகாரணரென்னும் எல்லா சாஸ்திர சித்தாந்தத்திற்கும் விரோதங்களுண்டாகாது.அங்ஙனமே ஜீவ ஜீவருக்குப், பிரபஞ்சபேதத்தை யொப்புவதிற் கற்பிக்கப்பட்ட கௌரவதோஷமும் இப்போது பிராப்தமாகாது. சுருதி ஆசாரியர தருளாலுண்டான 'யான் பிரஹ்ம' மென்னும் பிரஹ்மஞானத்தாலும் இவ்வதிகாரிகட்குத் தத்தம் அஞ்ஞானம் நீங்கவே அவ்வஞ்ஞானத்தின் காரியமாகிய லிங்கசரீராதிகளின் நீக்கத்தால் நிர்க்குணப் பிரஹ்மபாவப் பிராப்தியாகிய மோக்ஷமுங் கைகூடும்.

சங்கை:—நானா ஜீவபட்சத்தில் முக்தர்களைவிட வேறான மற்ற ஜீவர்களும், ஈஸ்வரனும், ஜகத்தும் உள்ளனவே. ஆகையால் நான் முக்தன் இந்த மற்ற ஜீவர்கள்பெத்தர், இது வேறுபிரபஞ்சம், இவர் வேறு ஈஸ்வரர், என்பதானபேததிருஷ்டி அம்முக்தனுக்கு அவசிய முண்டாகும். அந்தப்பேத திருஷ்டியிருக்கவே அத்துவிதிய பிரஹ்ம சாட்சாத்காரமேயுண்டாகாது. அந்தச் சாட்சாத்காரமில்லையாகவே நிர்க்குணபிரஹ்ம வடிவப்பிராப்தியாகிய மோக்ஷமே சம்பவியாது.

சமாதானம்:—இதம் ஸர்வம் யதயமாத்மா வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் மாயாமாத்ரமிதம் த்வைதம் அத்வைதம் பரமார்த்த: (ஈதெல்லாம் இவ்வான்மாவே, விகாரமானது வாக்கையாரம்பகமாயுடைய பெயர் மாத்திரமே, இவ்விருவிதமாகத் தோற்றுவதுமாயா மாத்திரமே உண்மையில் ஒன்றே) என்னுந் தொடக்கத்துச் சுருதிகளை விசாரித்து அதிகாரிகளால் அஞ்ஞானமுதலிய வெல்லா ஜடப்பிரபஞ்சம் பிரஹ்மத்தினிடத்துக் கற்பிதமென்னும் நிச்சயத்

தால் மித்தியாத்தன்மையே துணியப்படுகின்றது. மித்தையானபொருள் துவைதபாவம் விளைவிக்காதாகையால் அதிகாரிகளுக்கு அத்துவிதீய பிரஹ்மசாட்சாத்காரம் சம்பவிக்கும். அந்தச் சாட்சாத்காரத்தால் வித்வானுக்கும் பிரஹ்மவடிவப்பிராப்தியாகிய மோக்ஷம் சம்பவிக்கும்.

சங்கை:—இந்நாநா ஜீவபட்சத்தில் ஆத்மஞானத்தால் தன் அஞ்ஞானம் நீங்கிடினும் மற்ற ஜீவர்களது அஞ்ஞான மிருக்கவே பிரஹ்மத்தினிடத்து ஈஸ்வரத்தன்மையின் நிவிருத்தி நிகழாதாகும், ஆகையால் இப்புருடனுக்கு ஞானத்தால் சகுணப் பிரஹ்மவடிவமே பிராப்தமாகும்.

சமாதானம்:—உலகத்திலும் ஒருபொருளின் ஞானத்தால் மற்றொருபொருள் பிராப்தமாகாது. எவ்வண்ணம் கிளிஞ்சிலின் ஞானத்தால் இப்புருடனுக்கு வெள்ளி அடையப்படாமல் அக்கிளிஞ்சலே அடையப்படுகின்றதோ, அவ்வண்ணம் குருசாஸ்திரங்களின் உபதேசத்தால் இவ்வதிகாரிக்கு நிர்க்குணப் பிரஹ்மஞானமே உண்டானது; சகுணப்பிரஹ்ம ஞானமுண்டாகவில்லை. நிர்க்குணப் பிரஹ்மஞானத்தால் தத்துவமுணர்ந்தவனுக்கு நிர்க்குணப் பிரஹ்மமேயடையப்படும்; மாயாமயசகுணப் பிரஹ்மமடையப் படுவதில்லை. எங்ஙனம் சுக்தியில் ஒருவனுக்கு வெள்ளிப் பிராந்தியுண்டாகுங்காலத்திலும் விசேஷமுணரும் மற்றொருவனுக்கு அச்சுக்தியின் ஞானத்தால் சுக்தியே பிராப்தமாம்;வெள்ளி பிராப்தமாகாது.எக்காரணத்தாலெனின்,சுக்தியில் உண்மையாக வெள்ளியில்லை.எங்ஙனம் ஒருவனது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட வெள்ளி மற்றொருவனது பிரத்தியட்ச ஞானத்திற்கு விஷயமாகிறதில்லையோ,அங்ஙனமே மற்ற அஞ்ஞானிகளுக்கு தத்தம் அஞ்ஞான வயத்தால் பிரஹ்மத்தினிடத்து ஜீவ ஈஸ்வர ஜகத்தாகிய மயக்கமிருக்குங்காலத்தும் சுருதி ஆசாரியர்களதருளால் விசேஷதர்சியாகிய மற்றொருவனுக்கு நான் பிரஹ்மம் என்னும் அத்துவிதீய பிரஹ்மத்தின் சாட்சாத்காரத்தால் ஆனந்த ஏகரச அத்துவிதீய நிர்விசேஷ பிரஹ்மமே யடையப்படுகின்றது; சகுண ஈஸ்வரனடையப் படுவதில்லை. எக்காரணத்தாலெனின், சகுண ஈஸ்வரர் மாயாமயமாதல் பற்றி நிர்க்குண பிரஹ்மத்தைவிட வேறன்று. மயக்கத்தாற் கண்டபொருள்கள் உண்மையாகா. மயக்கத்தாற் கண்டசுத்தி வெள்ளி வாஸ்தவமாக எப்படிஅச்சுக்தியினிடத்தில்லையோ, அப்படி அவ்வத்துவிதீய நிர்க்குணப் பிரஹ்மத்தினிடத்து மயக்கத்தாற் கற்பிக்கப்பட்ட ஜீவ ஈஸ்வர ஜகத்பாவங்களும் உண்மையாகப் பிரஹ்மத்தினிடத்தில்லை. ஆகையால் இந்நாநா ஜீவபட்சத்தில் எல்லா ஜீவர்கட்கும் சாதாரண அல்லது அசாதாரணப் பிரபஞ்சங்களங்கீகரிக்கப்படினும் நிர்க்குண பிரஹ்மவடிவப் பிராப்தியாகிய மோக்ஷங் கூடும்.

## உ௬. சில நூலாசிரியர் மதப்படி ஜீவ ஈஸ்வர விபாகவர்ணனம் (ஐந்தாவது பட்சம்).

சில நூலாசிரியரோ ஜீவஈஸ்வரரின் விபாகம் இவ்வாறு கூறுகின்றார்கள். முற்கூறிய சர்வ ஜகத்திற்குக் காரணமாகிய அஞ்ஞான வுபகித சைதன்யம் அதாவது அஞ்ஞானத்திற் பிரதிபிம்பசைதன்யம் ஈஸ்வரனெனப்படும். அவ்வஞ்

ஞானத்தின் காரியமாகிய அந்தக்கரண வுபகித சைதன்யம் அதாவது அந்தக் கரணத்திற் பிரதிபிம்பித்தசைதன்யம் ஜீவனெனப்படும். சுருதி. காயோ-ுவாயி ரயஂஜீவஃ காரணொவாயிரீஶ்வரஃ (இ-ள்.) அந்தக்கரணமாகிய காரியோபாதியை யுடைய சைதன்னியம் ஜீவனென்றும், அஞ்ஞானமாகிய காரணோபாதியையுடை யசைதன்னியம் ஈஸ்வரனென்றுஞ் சொல்லப்படும். அல்லது, ஸ்வமபீதொ ஹவதி (தன்னையு மடைந்தவனுகின்றான்) என்னுஞ் சுருதியால் ஜீவனுக்குச் சுழுத்தியில் பிரஹ்மத்தினிடத்து ஔபாதிகலயம் அதாவது உபாதியின் லயத்தோடுங்கூடிய லயம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆண்டு அந்தக்கரணம் ஜீவனுக்கு உபாதி யெனக் கொண்டால் அவ்வந்தக்கரணமாகிய உபாதியின் லயத்தால் ஜீவனுக்கு ஔபாதிகலயஞ் சம்பவிக்கும்; மற்றும் ஜீவனுக்கு அவித்தை உபாதியெனக்கொ ண்டாலோ சுழுத்தியில் அவ்வவித்தைக்கு லயமுண்டாகின்றதில்லை. ஆகையால் சுழுத்தியில் ஜீவனுக்கு ஔபாதிகலயஞ் சொல்லுவதாகிய அச்சுருதி வசனம் அசங்கதமாகும். இதனால் அச்சுருதி வசனத்தாலும் அந்தக்கரணமே ஜீவனுக்கு உபாதியென்பது சித்திக்கின்றது. இப்பட்சத்திலும் அந்தக்கரணமாகிய உபாதி களின் நாநாத் தன்மையாலும், பரிச்சின்னத் தன்மையாலும் ஜீவர்களும் நாநா வாகவும் பரிச்சின்னருமாவர்.

ஜீவ ஈஸ்வர சொரூப நிர்ணயத்தில் முற்சொன்ன ஐந்துபட்சங்களுள் மாயா வுபகித சைதன்யம் ஜகத்காரணரான ஈஸ்வரரென்னும் அர்த்தத்தில் அவ்வெல் லா நூலாசிரியருக்கும் சம்மதம். அஃதாவது அஞ்ஞானத்தின் ஏகத்தன்மை நாநாத்தன்மைகளால் அல்லது அந்தக்கரணங்களின் நாநாத்தன்மையால் ஜீவ னது ஏகத்தன்மை நாநாத்தன்மைகளில் நூலாசிரியர்கட்கு விவாதமுண்டானு லும் மாயாவுபகித சைதன்னியம் ஈஸ்வரனென்னு மர்த்தத்தில் ஒரு நூலாசிரி யருக்கும் விவாதமில்லை.

சங்கை:—ஈஸ்வரனிடத்து விவாதமில்லையானுலும் ஜீவனது ஏகத்தன்மை நாநாத் தன்மைகளில் நூலாசிரியர்களுக்குப் பரஸ்பரவிவாதம் காணப்படுவதால் அப்பட்சங்களுள் எப்பட்சம் கொள்ளத்தக்கது? எப்பட்சம் தள்ளத்தக்கது?

சமாதானம்:—எல்லாவழக்குகளும் மாயாமய மாவதால் அவ்வெல்லாப் பட் சங்களுங் கொள்ளத்தக்கனவும் தள்ளத்தக்கனவுமாம்.

சங்கை:—அவ்வெல்லாப் பட்சங்களும் தள்ளத்தக்கன வானபோது அவ் வெல்லாப் பட்சங்களையுந்தள்ளுதலே உசிதம்; எப்பட்சமுங்கொள்ளத் தக்க தன்று.

சமாதானம்:—அத்தியாரோபம் அபவாதமென்னு மிரண்டினுனே அத்துவி தீய பிரஹ்மத்தின் ஞானமுண்டாகின்றது; அத்தியாரோப அபவாதங்களன்றி பிரஹ்மஞான முண்டாகாது. உண்மையாகத்துவைதப் பிரபஞ்சமில்லாத பிரஹ் மத்தினிடத்துத் துவைதப் பிரபஞ்சத்தின் ஆரோபம் அத்தியாரோபமெனப்ப டும். நெஹ நாநாஸ்திகிஂசந (ஈண்டுபலவென்பது சிறிதுமில்லை) என்னுந்தொட க்கத்துச் சுருதிகளால் ஆரோபிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் நிஷேதம் அபவாத மெனப்படும். அவ்வத்தியாரோப அபவாதங்களைப் பெறும் பொருட்டு அவ்வெ

ல்லாப்பட்சங்களுங் கொள்ளத்தக்கனவே. ஆனால் அதன்கண்ணும் இத்துணை விசேஷமுண்டு. முற்சொன்ன ஜீவனது ஏகத்தன்மைப் பட்சத்திலாவது நாநாத் தன்மைப் பட்சத்திலாவது எந்தப்பட்சம் எந்த முமூட்சுவின் மனதிற்கு பாவப் படுமோ, அந்த முமூட்சு அந்தப்பட்சத்தை யங்கீகரித்துப் பிரத்தியகாத்மாவை விவேசனஞ்செய்து அதாவது அன்னமயமுதலிய ஐங்கோசங்களினின்றும் ஆத்மாவை வேறுபடுத்தி அந்தப் பிரத்தியகாத்மாவின் பிரஹ்மவடிவத்தன்மை யைச் சாட்சாத்கரிக்கவேண்டும், அதாவது அஹம் பிரஹ்மமென்னும் சாட்சாத் காரத்தைச் சம்பாதிக்கவேண்டும், பிரஹ்ம சாட்சாத்காரத்தைச் சம்பாதிக்கா மல் ஜீவனது ஏகத்தன்மை நாநாத் தன்மைகளில் கேவலம் விவாத மாத்திரஞ் செய்தலடாது. எக்காரணத்தானெனின், எல்லாமதங்களிலுங் குற்றமுங் குண மும் சமானமே. கருத்திது:—முமூட்சுக்களுக்குப் பிரத்தியகாத்மாவின் போதம் எவ்வகையானுண்டாகுமோ, அவ்வகையே முமூட்சுக்கள் சம்பாதிக்கத் தக்கது. அஃதே சாஸ்திரத்தின் அர்த்தம். இவ்வார்த்தை ஸ்ரீவார்த்திகாசாரியராலும்சொ ல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். யயா யயா ஹவெத்பூஂஸாஂ வ்யுத்பத்திஃப்ரத்யகாத்மநி। ஸாஸைவ ப்ரக்ரியெஹஸ்யாத்ஸாத்வீ ஸாவாநவஸ்திதா (இ-ள்) அதிகாரிகளுக்கு எவ்வெப் பிரக்கிரியையால் பிரத்தியகாத்மாவை விஷயஞ்செய் யும்போத முண்டாகுமோ, அவ்வப்பிரக்கிரியையே இவ்வேதாந்த சாஸ்திரத் தில் குற்றமில்லாததும் குணமானது மாக அறியவேண்டும்.

## ௩௦. உபாதான கர்த்திருத் தன்மைகளால் ஈஸ்வரன் ஜகத் காரணரெனல்.

சங்கை:—மாயாவுபகித தத்பதார்த்த ஈஸ்வரன் ஜகத்தின் ஜன்மாதிகளுக் குக் காரணரென்று முற்சொல்லப்பட்டது. அக்காரணமும் உபாதானத்தன் மையாலும் கர்த்திருத் தன்மையாலும் இருவகைப்படும். ஆண்டு அவ்வீஸ்வரனு க்கு எவ்வடிவாக உபாதானத்தன்மையும் எவ்வடிவாக கர்த்தாத்தன்மையு மிரு க்கின்றன என்னுமாசங்கையுண்டாக, இப்போது அவ்விருவகைப்பட்ட காரண ங்களும் முறைப்படி நிரூபிக்கப்படுகின்றன.

அவ்வீஸ்வரன் ஞானசக்தியுடைய அஞ்ஞானவுபகித சொரூபமாகவோ ஜகத்திற்குக் கர்த்தாவாவன். ஈண்டுதாற்பரியமிது:—ஞானசக்தியுடைய அஞ் ஞானமாகிய உபாதியானன்றிச் சுத்தப்பிரஹ்மத்திற்கு அசங்கத்தன்மையால் கர்த்தாத்தன்மை சம்பவியாது. ஏனெனின், காரியத்தின் உபாதான காரணத்தை விஷயஞ்செய்யும் அபரோட்ச ஞானமும், இச்சையென்னும் சிகீர்ஷையும், முய ற்சியென்னும் கிருதியுமாகிய மூன்று முடையவனே கர்த்தாவெனப்படுவான். இங்ஙனம் கர்த்தாவின் இலக்கணம் முற்சொல்லப்பட்டிருக்கின்றது. இப்படிப் பட்ட கர்த்தாத்தன்மை சுத்தப்பிரஹ்மத்தினிடத்து சம்பவியாது. எக்காரணத் தானெனின், அஸஂகொஹ்யயஂ புருஷஃ। அஸஂகொநஹி ஸஜ்ஜதெ (இப் புருஷன் அசங்கனன்றோ, அசங்கன் சம்பந்திக்கின்றதில்லை) என்பது முதலிய சுருதிகளால் பிரஹ்மத்திற்கு அசங்கத்தன்மையே அறியப்படுகின்றது. அப்படி ப்பட்ட அசங்கப் பிரஹ்மத்தினிடத்து அந்த ஞான இச்சைக் கிருதி சம்பவியா; அவ்வஞ்ஞானவுபகித ஈஸ்வரனிடத்தோ ஞான இச்சைப் பிரயத்தினம் சம்பவி

க்கு மாகையால் முற்சொன்ன ஈஸ்வரனுக்கே ஜகத்தின் கர்த்தாத்தன்மை சித்திக்கின்றது. அஃதே ஈஸ்வரன், விட்சேபமுதலிய சக்தியுடைய அஞ்ஞான உபகிதத்தால் ஜகத்திற்கு உபாதான காரணனுவன். அஞ்ஞானத்தின் ஞானசக்தி ஆவரணசக்தி விட்சேபசக்தியென்னும் மூன்றின் சொரூபம் முன் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அவைகளை இங்கும் அறிந்துகொள்ளவேண்டும். இவ்வாறு ஒரே(மாயாவிசிஷ்டப்) பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதானத்தன்மையும் கர்த்தாத்தன்மையும் பொருந்தும். ஆண்டு திருஷ்டாந்தம்:—சிலந்திப்பூச்சி நூலையுண்டாக்குகின்றது, அந்நூலாகியகாரியத்திற்கு அச்சிலந்தி எங்ஙனம் தனது சரீரத்தினபேட்சையால் உபாதானகாரணமும் தனது சேதனத்தன்மையால் கர்த்தாவாகிய நிமித்தகாரணமு மாகின்றதோ, அங்ஙனமே முற்சொன்ன முறைப்படி அவ் ஏக பிரஹ்மம் ஜகத்திற்கு உபாதானகாரணமும், கர்த்தாவாகிய நிமித்தகாரணமுமாகின்றது.

சங்கை:—அவ் ஏக பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதானத் தன்மையும் நிமித்தத்தன்மையு முண்டென்னும் அர்த்தத்தில் பிரமாணம் யாது?

சமாதானம்:—பிரஹ்மத்தினிடத்து அபிந்ந நிமித்த உபாதானத்தன்மை சாட்சாத் சுருதிப் பிரமாணத்தானே பெறப்படும். சுருதி. 𑌯𑌥𑍋𑌰𑍍𑌣𑌨𑌾𑌭𑌿𑌃 𑌸𑍃𑌜𑌤𑍇 𑌗𑍃𑌹𑍍𑌣𑌤𑍇 𑌚 । 𑌯𑌥𑌾 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌮𑍍 𑌓𑌷𑌧𑌯𑌃 𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌥𑌾 𑌸𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌤𑍍𑌕𑍇𑌶𑌲𑍋𑌮𑌾𑌨𑌿 𑌤𑌥𑌾𑌽𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌸𑌂𑌭𑌵𑌤𑍀𑌹 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍍 । 𑌯𑌥𑌾𑌽𑌗𑍍𑌨𑍇𑌃 𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌾 𑌵𑌿𑌸𑍍𑌫𑍁𑌲𑌿𑌙𑍍𑌗𑌾 𑌵𑍍𑌯𑍁𑌚𑍍𑌚𑌰𑌨𑍍𑌤𑌿 𑌏𑌵𑌮𑍇𑌵𑌾𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌃 । 𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌵𑌿𑌶𑍍𑌵𑌕𑍃𑌤𑍍𑌸𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾 (இ - ள்.) எப்படி சிலந்திப்பூச்சி தன்னிடத்தினின்றும் நூற்களையுண்டாக்குவதும், தன்னிடத்தே அந்நூற்களை லயஞ்செய்துக் கொள்வது மாகின்றதோ, அப்படி பிரஹ்மமும் தன்னிடத்தினின்றே இந்தஜகத்தை உற்பத்திசெய்வதும் தன்னிடத்தேலயஞ் செய்துக்கொள்வது மாகின்றது. எப்படி பிருதிவியினின்றும் பலவகைப்பட்ட ஔஷதங்களுண்டாகின்றனவோ, எப்படி புருடனிடத்தினின்றும் கேசலோமங் (மயிர்) கள் உண்டாகின்றனவோ, அப்படி அக்ஷரப்பிரஹ்மத்தினின்றும் இவ்விஸ்வ முற்பன்னமாகின்றது. அன்றியும் எப்படி எரிதழலினின்றும் சிறிய தீப்பொறிகளுண்டாகின்றனவோ, அப்படி இவ்வாத்மாவினின்றும் சருவப்பிராணன்களு முற்பத்தியாகின்றன. எப்பரமேஸ்வரர் சருவஞ்ஞரோ அப்பரமேஸ்வரரே விஸ்வத்தைச் செய்பவர், அப்பரமேஸ்வரரே சர்வத்திற்குங் கர்த்தா— இவை முதலிய வநேக சுருதிகள் பிரஹ்மத்தை ஜகத்திற்கு அபின்ன நிமித்த உபாதானகாரணமென்று சொல்லியிருக்கின்றன.

அன்றியும், 𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 (நான் எல்லாவற்றிற்குங் காரணன் என்னுலே எல்லாம் பிரவிருத்திக்கின்றன) என்னுந் தொடக்கத்து ஸ்மிருதிகளும் முற்சொன்ன அர்த்தத்தையே சொல்லியிருக்கின்றன. ஆகையால் ஒரே பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதான கர்த்தாத்தன்மைகள் சம்பவிக்கும். அல்லது, முற்சொன்ன ஈஸ்வரனை சருவஞ்ஞனென்று கொள்ளாவிடின் அவ்வீஸ்வரனுக்குச்சர்வஜகத்தின் கர்த்தாத்தன்மையே சம்பவியாதாகும். ஆனல் முற்சொன்ன சுருதிகள் அவ்வீஸ்வரனைச் சருவஜகத்திற்குங் கர்த்

தாவாகச் சொல்லியிருக்கின்றன வரனிகயால் அவ்வீஸ்வரனைச் சருவஞ்ஞனென்று அவசியமொப்பவேண்டும். அவ்வீஸ்வரனது சருவஞ்ஞத்தன்மை சுருதிப் பிரமாணத்தாலும் பெறப்படும். சுருதி. யஃஸர்வஜ்ஞஃ ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தபஃ (இ-ள்.) எந்த ஈஸ்வரன் சருவஞ்ஞனோ அதாவது சாமானியமாகச் சருவஜகத்தையு மறிபவனோ, எந்த ஈஸ்வரன் சர்வவித்தோ அதாவது விசேஷமாகச் சருவஜகத்தையு மறிபவனோ, எந்த ஈஸ்வரனுக்குச்சர்வஜகத்தையும்விஷயஞ்செய்யும் ஞானமே தவமோ—அப்படிப்பட்ட சருவஞ்ஞ ஈஸ்வரனுக்குச் சருவஜகத்தின் கர்த்தாத்தன்மை பொருந்தும்.

## ௩௧. பிரம்மவிஷ்ணு ருத்திரர்களுக்குப் பேதமின்மை கூறுதல்.

சங்கை:—புராணாதிகளிலோ பிரம்மவிஷ்ணு மஹேசரென்னும் மூவர்களினின்றே ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இங்கு மாயாவுபகித பரமேஸ்வரனிடத்தினின்றே ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்கள் உம்மால் சொல்லப்பட்டன வாகையால் அப்புராணாதி வசனங்களுக்கு விரோதம் அடையப்படும்.

சமாதானம்:—மாயாவுபகித பரமேஸ்வரனே பிரம்மவிஷ்ணு மஹேசரென்னும் மூன்று உருவங்களை அடைகிறானெனச் சொல்லப்படுகின்றது:—முற்சொன்ன மாயையிற் றங்கியுள்ள நிரதிசய சத்துவகுணம் அப்பரமேஸ்வரனது இச்சையால் லோகாநுக்கிரகத்தின் பொருட்டு பிரம்ம விஷ்ணு மஹேசரென்னும் மும் மூர்த்தியாகாரமான பரிணாமத்தையடைகின்றது. தண்ட கமண்டலத்தைத் தரிப்பவரான சதுர்முக மூர்த்தியாலுபகிதமாய் அப்பரமேஸ்வரர் ஜகத்தைச் சிருஷ்டிக்கும் பிரம்மாவாகின்றார். சங்கு சக்கரம் கதை பத்மமென்னும் நான்கையுங் கரத்திலுடைய சதுர்ப்புஜ மூர்த்தியாலுபகிதமாய் அப்பரமேஸ்வரர் ஜகத்தைப் பாலிக்கும் விஷ்ணுவாகின்றார். திரிநேத்திர முடையவரும் திரிசூலத்தைக் கையிலுடையவரான மூர்த்தியாலுபகிதமாய் அப்பரமேஸ்வரர் ஜகத்சம்ஹாரகர்த்தா மஹேஸ்வ ராகின்றார். இவ்வாறு அவ்வொருபரமேஸ்வரரே பிரம்ம விஷ்ணு மஹேச வடிவங்களாகின்றார். சுருதி. ஸ ப்ரஹ்மா ஸ ஶிவஃ ஸேந்த்ரஃ ஸோऽக்ஷரஃ பரமஃ ஸ்வராட் ஸ ஏவ விஷ்ணுஃ (இ-ள்.) அம்மாயாவுபகித பரமேஸ்வரரே பிரம்மா, சிவன், இந்திரன், விஷ்ணு வடிவராகின்றார். அல்லது இப்பொருள் வித்வான்களான பூர்வாசாரியர்களாலும் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். ஏகைவ மூர்த்திர் பிபிதே த்ரிதா ஸா ஸாமாந்யமேஷாம் ப்ரதமாவரத்வம் விஷ்ணோர் ஹரஸ் தஸ்ய ஹரிஃ கதாசித் வேதாஸ் தயோஸ் தாவபி தாதுராத்யௌ. (இ-ள்.) ஓரே பரமேஸ்வரமூர்த்தி பிரம்மா விஷ்ணு மஹேசரென்னும் மூவகைப்பட்ட பேதத்தை யடைகின்றார். இம்மூவரும் முன்னும் பின்னும் சமானரேயாவர். ஓர் காலத்திலோ விஷ்ணுவிற்கு மகேசர் ஆதியாவர், ஓர்காலத்தில் அம்மகேசருக்கு விஷ்ணு ஆதியாவர், ஓர்காலத்தில் விஷ்ணு மகேசரிருவருக்கும் பிரம்மா ஆதியாவர்; ஓர்காலத்தில் அவ்விருவரும் பிரம்மாவிற்கு ஆதியாவர்-பிரம்மா விஷ்ணு சிவனென்னும் மூத்தேவர்களும் அதிகாரிகளால் தங்கள் தங்கள் பக்தியநுசாரமாக உபாசிக்கத்தக்கவர்.

சில நூலாசிரியரோ இங்ஙனஞ் சொல்லுகின்றார்கள்:—ஜகத்தைச்சிருட்டிக்கும் ஹிரணியகர்ப்பரான பிரம்மா ஈஸ்வரனன்று; ஆனால் ஜீவவிசேஷரும், அந்தர்யாமியாகிய பரமேஸ்வரனால் ஆவிஷ்டரும், சமஷ்டி லிங்கசரீராபிமானியும், சத்தியலோகத்தில் வாசத்தையுடையவருமாவர். அப்படிப்பட்ட ஹிரணியகர்ப்பருக்குஜீவத்தன்மை ஸ வை ஶரீரீ ப்ரதம:(அவனன்றோ முதலாவது சரீரி)என்னுந்தொடக்கத்துச் சுருதிப்பிரமாணத்தானேபெறப்படும்.சிவன் விஷ்ணுவென்னுமிரு மூர்த்திகள் மாயையின் சுத்த சத்துவகுணப் பரிணாமமாவதால் ஈஸ்வரராவர். இவ்வார்த்தை மகா பாரதத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். ருத்ரோ நாராயணஶ்சைவ ஸத்வமேகம் த்விதா க்ருதம் । லோகே சரதி கௌந்தேய வ்யக்திஸ்தம் ஸர்வகர்மஸு (இ-ள்.) ஓ கௌந்தேயா! அப்பரமேஸ்வரனால் தன் மாயையின் சுத்த சத்துவகுண மொன்றே உருத்திர நாராயணரென்னு மிருவகையாகச்செய்யப்படுகின்றது—அவ்விருவருள்ளும் விஷ்ணுவின் பக்தியோ மோக்ஷத்திற்கு அந்தரங்கசாதனமும், சிவாதிகளின் பக்தியோ சொற்ப மறைப்போடுங்கூடி மோக்ஷத்திற்குச் சாதனமுமாகின்றது. எக்காரணத்தாலெனின், சத்துவகுணத்தை நடத்துந் தன்மை விஷ்ணுவிற்கே யுண்டு இவ்வார்த்தை புராணத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆரோக்யம் பாஸ்கராதிச்சேத் ஶ்ரியமிச்சேத் ஹுதாஶநாத் । ஜ்ஞாநம் மஹேஶ்வராதிச்சேத் மோக்ஷமிச்சேஜ்ஜநார்தநாத். (இ-ள்.) இப்புருஷன் சூரியதேவனிடத்தினின்றும் ஆரோக்யத்தை விரும்புக, அதாவது ஆரோக்யத்தை யடையும் பொருட்டு சூரியதேவனை யுபாசிக்கவேண்டும். இவ்வாறான அர்த்தம் பின்னருமறிக. அக்கினி தேவனிடத்தினின்றும் சம்பத்தை விரும்புக, மகேஸ்வரனிடத்தினின்றும் ஞானத்தை விரும்புக, விஷ்ணுவினிடத்தினின்றும் மோக்ஷத்தை விரும்புக.

இங்கு சில சைவமதமுடையார் இங்ஙனங்கூறுகின்றார்கள்:—சந்திரனைச் சிரபூஷணமாயுடையவரும், நீலகண்டரும், திரிநயனரும், உமாசகிதருமாகிய சுத்த சத்துவ மூர்த்தியானுபகிதமான மாயாவுபகித பரமேஸ்வரர் பரமசிவன். அப்பரமசிவனே முமுட்சுக்களால் உபாசிக்க யோக்கியர். சுருதி. உமாஸஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஶாந்தம் । த்யாத்வா முநிர்கச்சதி பூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் (இ-ள்.) எந்தப் பரமசிவன் உமாசகிதனும், பரமேஸ்வரனும், சமர்த்தனும், திரிலோசனமுடையவனும், நீலகண்டனும், மிகச்சாந்த சுவபாவனுமானவனோ அப்பரமசிவனைத் தியானஞ்செய்து, மாயையின் சம்பந்தத்தால் சருவபூதங்கட்குக் காரணமும், சருவத்திற்குஞ் சாட்சியும், வாஸ்தவத்தில் அஞ்ஞானமாகிய தமத்தை விட மேலானதுமான பரப்பிரஹ்மத்தை முமுட்சு அடைகின்றான்—அப்பரமசிவனுக்கே பிரம்மா விஷ்ணு சிவனென்னு மூவர்களும் விபூதிகளாவர். ஸ ப்ரஹ்மா ஸ ஶிவ: ஸேந்த்ர: ஸோऽக்ஷர: பரம: ஸ்வராட், அவரே பிரம்மா அவரே சிவன் அவரே இந்திரன், அவரே அக்ஷரன், அவரே விஷ்ணு) என்னுந் தொடக்கத்துச் சுருதிகள் பிரம்மா விஷ்ணு சிவனென்னு மூவர்களேயும் அப்பரமசிவனது

விபூதிகளாகவே சொல்லியிருக்கின்றன. அப்படியே புராணத்திலும் இவ்வார்த்தை சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். 𑌯𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌯𑌾 𑌜𑌗𑌤𑍍𑌸𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌿𑌃 𑌪𑌾𑌲𑌕𑍋 𑌹𑌰𑌿𑌃। 𑌸𑌂𑌹𑌰𑍍𑌤𑌾 𑌕𑌾𑌲𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌖𑍍𑌯𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈 𑌪𑌿𑌨𑌾𑌕𑌿𑌨𑍇 (இ-ள்) எந்தப் பரமசிவனது கட்டளையால் பிரம்மா ஜகத்தை உற்பத்தி செய்கின்றாரோ விஷ்ணுபரிபாலனஞ் செய்கின்றாரோ, காலருத்திரர் சம்ஹாரஞ் செய்கின்றாரோ அந்தப் பரமசிவனை நமஸ்கரிக்கின்றேன்.

சில வைஷ்ணவமதமுடையார் இங்ஙனங் கூறுகின்றார்கள்:—சங்கு சக்கரம் கதை பத்மமென்னும் நான்கையுங் கரத்திலுடையவரும் லட்சுமி சகிதமாய் விளங்குவோருமான நிரதிசய சத்துவமூர்த்தியானுபகிதமான மாயாவுபகித பரமாத்மாவே பரமவாசுதேவர். அப்பரமவாசுதேவரே முமூட்சுக்களால் உபாசிக்கத் தக்கவர். பிரம்மா விஷ்ணு சிவனென்னு மூவரும் அப்பரம வாசுதேவரது விபூதிகளேயாவர். 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌸 𑌶𑌿𑌵𑌃 𑌸𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 𑌸𑍋𑌽𑌕𑍍𑌷𑌰𑌃 𑌪𑌰𑌮𑌃 𑌸𑍍𑌵𑌰𑌾𑌟𑍍 (பிரம்மா அவரே, சிவன் அவரே, இந்திரன் அவரே அக்ஷரனும் மேலான *ஸ்வராட்டும் அவரே) என்னுந் தொடக்கத்துச் சுருதிகளும் பிரம்மாதிகள் மூவரும்அப்பரமவாசுதேவரதுவிபூதிகளாகவேசொல்லியிருக்கின்றன. 𑌤𑌮𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑌮𑍃𑌤 𑌇𑌹 𑌭𑌵𑌤𑌿 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇𑌽𑌯𑌨𑌾𑌯 (அவனை இப்படி அறிந்தவன் இங்கே முக்தனாகின்றான் மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை) என்பது முதலிய சுருதிகளும் 𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌿𑌚𑍍𑌛𑍇𑌜𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌾𑌤𑍍 (விஷ்ணுவினிடமிருந்து மோக்ஷத்தை விரும்புவாராக) என்பது முதலிய புராணவசனங்களும் அப்பரமவாசுதேவரது தியானத்தானே மோக்ஷப்பிராப்தி சொல்லியிருக்கின்றன. அப்பரமவாசுதேவரே முமூட்சுக்களால் தியானிக்கத்தக்கவர்.

இரணிய கருப்பமதமுடையாரோ இங்ஙனங் கூறுகின்றார்கள்:—இரணிய கருப்பரே மாயா உபகித பரமேஸ்வரர். அவ்விரணிய கருப்பரது பரமேஸ்வரத் தன்மையில் பல சுருதி ஸ்மிருதிப்பிரமாணங்களிருக்கின்றன வாகையால் அவ்விரணியகருப்பரே முமூட்சுக்களால் உபாசிக்கத்தக்கவர். முன்னே சைவர்களாலும் வைஷ்ணவர்களாலும் பிரம்ம விஷ்ணு மகேசரென்னும் மும்மூர்த்திகளுக்கு வேறாக ஓர்பரமசிவனும், பரமவாசுதேவனும் கற்பிக்கப்பட்டன; ஆனால் அவர்களினிடத்து ஓர் பிரமாணமுங் காணப்படவில்லை. அவர்கள் அவ்வர்த்தம் பெறும்பொருட்டு 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌸 𑌶𑌿𑌵𑌃 𑌸𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 (அவரே பிரம்மா அவரே சிவன் அவரே இந்திரன்) என்னுந் தொடக்கத்து எச்சுருதிவசனங்கள்பிரமாணமாய்ச் சொல்லப்பட்டனவோ அவைகள் அம்மாயாவுபகித பரமேஸ்வரனையே சொல்லுகின்றன; அவ்வசனங்களுக்கு மும்மூர்த்திகளை விட வேறான அப்பரமசிவனிடத்திலாவது, பரம வாசுதேவனிடத்திலாவது பிரமாணத்தன்மை சம்பவியாது. ஆகையால் அம்மாயாவுபகித பரமேஸ்வரரே பிரம்மா விஷ்ணு மகேசரென மூவுருவங்களை யடைகின்றார். இக்காரணத்தால் அம்மூவுருவங்களும் சமானமென்று முறசொன்ன மதமே முமூட்சுக்களால் ஆசிரயிக்கத்தக்கது.

* ஸ்வாஸ் - செய்பிரகாசன், சர்வாதிபதி.

## ௫௨. மாயாவுபகித பரமேஸ்வரரிடத்தினின்றும் ஆகாயமுதலிய ஜகத்தின் உற்பத்திக்கிரமங் கூறுதல்.

முன் மாயாவுபகிதமான தத்பதார்த்த பிரஹ்மத்திற்கு ஜகத்தின்உற்பத்தி ஸ்திதி லயங்களின் காரணமாகிய தடஸ்தலக்ஷணம் சொல்லப்பட்டது. இப்போது அவ்விலக்கணத்தைத் தெளிவாக்கும் பொருட்டு அம்மாயாவுபகித பரமேஸ்வரனிடத்தினின்றும் ஆகாசமுதலிய ஜகத்தின் உற்பத்திக்கிரமம் சொல்லப்படுகின்றது. உண்டாகவேண்டிய பிராணிகளின் புண்ணிய பாப கருமங்களோடு கூடிய முற்சொன்ன விட்சேபமுதலிய சக்திப்பிரதானமான மாயாவுபகித ஈஸ்வரன் முதலில் 'இந்தஜகத்து இப்போதுண்டாகத் தகுதியானது' என்று சங்கற்பித்தான். அச்சங்கற்பவிசிஷ்ட ஈஸ்வரனிடத்தினின்றும் முதலில் ஆகாசமுண்டாயிற்று, அவ்வாகாசத்தினின்றும் வாயுஉண்டாயிற்று, அவ்வாயுவினின்றும் அக்நியுண்டாயிற்று, அவ்வக்நியினின்றும் ஜலமுண்டாயிற்று; அந்தஜலத்தினின்றும்பிருதிவியுண்டாயிற்று. சுருதி. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌨 𑌆𑌕𑌾𑌶𑌃 𑌸𑌂𑌭𑍂𑌤𑌃 𑌆𑌕𑌾𑌶𑌾𑌦𑍍𑌵𑌾𑌯𑍁𑌃 𑌵𑌾𑌯𑍋𑌰𑌗𑍍𑌨𑌿𑌃 𑌅𑌗𑍍𑌨𑍇𑌰𑌾𑌪𑌃 𑌅𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 (இ-ள்) அம்மாயா வுபகித பிரஹ்மத்தினின்று ஆகாசமும், அவ்வாகாசத்தினின்று வாயுவும், வாயுவினின்று அக்நியும், அக்நியினின்று ஜலமும், ஜலத்தினின்று பிருதிவியு முண்டாயின.

சங்கை:—அசேதனமும் கல்பிதமுமான ஆகாசமுதலிய பூதங்களுக்கு வாயுமுதலிய பூதங்களின் உபாதானகாரணத் தன்மை எப்படி சம்பவிக்கும்?

சமாதானம்:—இங்கு ஆகாசாதிகளுக்கு வாயுவாதிகளின் உபாதானத் தன்மை கருத்தல்ல; ஆனல் ஆகாசாதிகளின் உபகித சைதன்யத்திற்கே வாயு முதலியவற்றின்உபாதானத்தன்மை கருத்து; அதாவது ஆகாச வுபகிதசைதன்யத்தினின்றும் வாயு உண்டாயிற்று. அவ்வாயு வுபகித சைதன்யத்தினின்றும் அக்நியுண்டாயிற்று. அவ்வக்நியுபகித சைதன்யத்தினின்றும் ஜலமுண்டாயிற்று. அந்த ஜலவுபகித சைதன்யத்தி னின்றும் பிருதிவி யுண்டாயிற்று. இவ்வாறு அவ்வவ்வுபாதியுடைய சைதன்யமே எங்குங் காரணமாகின்றது. ஓர் கால் கல்பித அசேதனமே காரணமெனக் கொண்டால் சேதனமானபிரஹ்மத்திற்குச் சர்வஜகத்தின் காரணத்தைச் சொல்லும் சுருதிக்கு விரோத முண்டாகும். தாற்பரிய மிது:—மாயையானது காரணப்பிரஹ்மத்திற்கு உபாதியாவதால் எப்படி அதற்கு ஆகாசமுதலிய பிரபஞ்சத்தின் காரணத்தன்மையுண்டோ, அப்படி ஆகாசமுதலிய வைகளும் அக்காரணப் பிரஹ்மத்திற்கு உபாதியாவதனுனே அவைகட்கும் வாயு முதலியவற்றின் காரணத்தன்மை யுண்டு; சுவதந்திரமாகவல்ல.

## ௫௩-நையாயிகமதப்படி ஜகத்துற்பத்தி கூறுதல்.

இங்கு வைசேஷிக சாஸ்திரமுடையார் இவ்வாறு சொல்லுகின்றூர்கள். திரவியம் 1. குணம் 2. கருமம் 3. சாமானியம் 4. விசேஷம் 5. சமவாயம் 6. அபாவம் 7. எனப் பதார்த்தங்கள் ஏழே. குணமுதலிய பதார்த்தங்கள் திரவியத்தின் பரதந்திரங்களே. எல்லாபாவ காரியங்களும் சமவாயிகாரணம், அசமவாயி

காரணம், நிமித்தகாரணமென மூன்று காரணங்களாற் றோன்றுகின்றன. தோன்றிய திரவியம், தோன்றிய குண கருமமென மூன்றும் பாவகாரிய மென்பர். சமவாயி காரணத்தன்மை திரவிய பாதார்த்தமொன்றினிடத்தே யுண்டு; குண கருமாதிகளிடத்தில்லை. அசமவாயிகாரணத் தன்மை குண கரும மென்னு மிரு பதார்த்தங்களினிடத்தே யுண்டு; வேறு பதார்த்தங்களினிடத்தி ராது. நிமித்தகாரணத்தன்மையோ திரவிய முதலிய வெல்லா பதார்த்தங்களினி டத்து முண்டு. பிருதிவி 1. ஜலம் 2. தேயு 3. வாயு 4. ஆகாசம் 5. காலம் 6. திக்கு 7. ஆத்மா 8. மனம் 9 என்னும் ஒன்பதும் திரவியங்களெனன்பர். பிருதிவி முதலிய நான்கு திரவியங்களின் பரமாணுக்களும், ஆகாசமுதலிய வைந்து திர வியங்களுமாகிய வெல்லாம் நித்திய திரவியமென்றும் நிரவயவமென்றும் சொல் வர். அப்பரமாணுக்களினின்று முண்டான துவியணுகமுதல் பிரம்மாண்ட வரையிலுமுள்ள எல்லாகாரியத்திரவியங்களும் அநித்திய திரவியங்களென்றும், அவயவிகளென்றும் சொல்வர். சிருஷ்டியின் ஆதிகாலத்தில் பரமேஸ்வர னது இச்சையால் அப்பரமாணுக்களினிடத்துக்கிரியையுண்டாகின்றது, அதன் பிறகு இரண்டிரண்டு பரமாணுக்களுக்குச் சையோக முண்டாகின்றது. அச்சை யோகத்துடன் கூடிய இருபரமாணுக்களினின்றும் முதலில் துவியணுக மாகிய காரியமுண்டாகின்றது. அத்துவியணுகமாகியகாரியத்திற்கு அவ்விருபரமாணுக் கள் சமவாயிகாரணம். அவ்விருபரமாணுக்களின் சையோகம் அசமவாயிகா ரணம். ஈஸ்வர இச்சைமுதலியன நிமித்தகாரணம். இவ்வாறு பின்திரியணுக மு தலிய காரியங்களுக்கும் சமவாயிகாரண முதலியவற்றை அறிந்து கொள்ளவே ண்டும். இவ்வாறே அத்துவியணுகமாகிய காரியத்தி னுற்பத்திக்குப் பிறகு புநர் க்கிரியையோடு சையுக்தமான முத்துவியணுகங்களினின்றும் திரியணுகமாகிய காரிய முண்டாகின்றது, அதன்பிறகு புநர்க்கிரியையோடு சையுக்தமான நான்கு திரியணுகங்களினின்றும் சதுரணுகமாகிய காரிய முண்டாகின்றது. இவ்வாறான முறைப்படி இம்மகாபிருதிவி மகாஜலம், மகாதேயு மகாவாயு உண்டாகின்றன. ஆகையால் அப்பரமாணுக்களே சருவஜகத்திற்கு உபாதான காரணம்; அம்மா யாவுபகித பிரஹ்மம் ஜகத்திற்கு உபாதான காரணமன்று என்று வைசேஷிக சாஸ்திரமுடையார் ஒப்பியிருக்கின்றார்கள். இவ்வைசேஷிக சாஸ்திரக்காரரது மதம் நியாயப்பிரகாசநூலில் நம்மால் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அறியவிரும்புவோர் ஆங்கு அறிக.

இவ்வைசேஷிக மதமும் நலமன்று. ஏனெனின், சக்தி சாதிருசிய முதலிய பல பதார்த்தங்களிருந்தும் பதார்த்தம் ஏழேயாகுமென்னும்அவ்வைசேஷிகரது பிரதிஞ்ஞை அசங்கதம். மணிமந்திர முதலியவைகள் சமீபத்திலிருந்தால் வஹ்நி யினின்றும் எரித்தலாகிய காரியமுண்டாகின்றதில்லை. அம்மணிமந்திரங்கள் தூர த்திலிருந்தால் அவ்வஹ்நிதகிக்கின்றது; அதனால்அவ்வஹ்நியினிடத்துளரித்தலுக்கு அநுகூலமான சக்தியின் நாசமும் உற்பத்தியும் அவசியம் ஒப்பவேண்டியதாகு ம். அதாவது அம்மணி மந்திராதிகளிருக்கவே எரித்தலுக் கநுகூலமான சக்தி நஷ்டமாய் விடுகின்றது, அம்மணி மந்திராதிகளே விலக்குவதால் அச்சக்தி மீண் டு முண்டாகின்றது. ஆகையால் அவ்வஹ்நியினிடத்து எரித்தலுக்கநுகூலமான

சக்தி அவசியமொப்பவேண்டும். இப்படி மண் முதலிய வெல்லாக்காரணங்களி லும் தத்தம் கடமுதலிய காரியங்களுக் கநுகூலமான சக்தியிருக்கின்றது. அச் சக்தி அத்திரவிய முதலிய வேழ்பதார்த்தங்களைவிட வேறு பதார்த்தமே.

வைசேஷிகர்முற்சொல்லியவிடத்து மணிமந்திரமுதலிய தடைகளின் அபாவ மே(பிரஜ்வலிதஅக்நியின்)எரித்தலுக்குக் காரணமாகக் கொள்ளுகின்றார்கள். அ வர்கூற்று சுருதிசூத்திரங்களுக்குமுரணுவதால் அசங்கதம். சுருதி. கூம ஷேஸகஃ ஸஜாயெத (இ-ள்) அபாவமாகிய அசத்தினின்றும்சத்காரியத்தி னுற்பத்தி ஒரு போதும் நிகழாது. சூத்திரம். நாஸ தொऽஜ்ருஷ்கூாக (இ-ள்)அபாவமாகிய அச த்தினின்றும்காரியோற்பத்தி சரியன்று. எக்காரணத்தாலெனின்,உலகத்தில் அ சத்தான நரசிருங்க(மனிதக்கோடு)முதலியவைகளினின்றும் ஓர் காரியத்தினுற்ப த்தியுங்காணப்படவில்லை;ஆனால் சத்தான மண் முதலியவைகளினின்றே கடமுத லிய காரியங்களினுற்பத்தி காணப்படுகின்றது. இதனால் தடையி னபாவத்தை க்காரியத்திற்குக் காரணமென்றொப்புதல் இச்சுருதி சூத்திரங்களுக்கு முரணுவ தால் அசங்கதம்.

இவ்வாறே 'சந்திரனைப் போன்றதுமுகம்' என்னுந் தொடக்கத்து அநுப வத்தால் முக முதலியவற்றில் சந்திரன் முதலியவற்றின் சாதிருசியம்(ஒப்புமை) பெறப்படுகின்றது. இதனால் அச்சாதிருசியமும் சக்தியைப்போல அத்திரவிய முதலிய வேழ்பதார்த்தங்களைவிட வேறுபதார்த்தமே. இச்சக்தி சாதிருசியங் களின் விரிவான நிருபணம் நியாயப்பிரகாசத்தின் நான்காவது பரிச்சேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அவைகளை ஆங்கு அறிக. இவ்வாறு சக்தி சாதி ருசிய முதலிய அதிக பதார்த்தங்களிருக்க பதார்த்தம் எழே என்னும் வை சேஷகர்கூற்று அசங்கதம்.

அன்றியும், அந்தகாரமாகிய பத்தாந்திரவிய மிருக்க திரவியம் ஒன்பதே என்று அவர் சொல்லுதலும் அசங்கதம். 'காரிருள் சலிக்கின்றது' என்று பி ரத்தியட்சமாகத் தோன்றுவதால் அவ்வந்தகாரமாகிய இருளினிடத்துக் கரு மையுருவமும் சலனக்கிரியையும் பெறப்படுகின்றன. குணக்கிரியைகளுக்கு ஆ சிரயம் திரவியமேயாகையால் அவ்வந்தகாரத்திற்குத் திரவியத்தன்மை சம்ப விக்கின்றது. வைசேஷிகர் அவ்விருளை ஆலோக (வெளிச்ச)த்தின் அபாவமாக ஒப்பியிருக்கின்றார்கள். அவர்கள் சொல்லுவது அசங்கதம். ஏனெனின், யாது யாது அபாவமோ அதுவது பிரதியோகி (எதிர்மறை)யின் அபேட்சையோடுங் கூடிய தோற்றத்திற்கே விஷயம்; பிரதியோகியின் அபேட்சையில்லாத தோ ற்றத்திற்கு விஷயமாக ஒரு அபாவமுமாகின்றதில்லை. அது கடாபாவம் படா பாவம் என்பது முதலிய அபாவங்கள் கடம்பட முதலிய பிரதியோகிகளின் அ பேட்சையோடுங்கூடிய தோற்றத்திற்கே விஷயமாதற் போலாம். இவ்விருள் ஆலோகமாகிய பிரதியோகியின் அபேட்சையோடுங்கூடிய தோற்றத்திற்கு விஷயமன்றாகையால் அவ்விருளை வெளிச்சத்தின் அபாவமாக ஒப்புவதில் ஒரு பிரமாணமுமில்லை; ஆனால் முற்சொன்ன யுக்தியால் அவ்விருள் தசமத்திரவிய மென்றே கொள்ளல்வேண்டும். அந்தகாரத்திற்குத் திரவியத்தன்மையும், ஆ லோக அபாவத்தன்மையும் நியாயப்பிரகாசத்தின் இரண்டாவது பரிச்சேதத்

தின் ஈற்றில் விரிவாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அவற்றை ஆங்கு அறிந்து கொள்ளுக.

அன்றியும், வைசேஷிகர்களால் ஆத்மாவையும் ஞானமுதலிய குணங்களுக்கு ஆசிரயமாவதாலும் சமவாயிகாரணமாவதாலும் திரவியமாகவே கொள்ளப்பட்டிருக்கின்றது. அப்படி அவர்கள் சொல்லுவதும் அசங்கதம். ஏனெனின், சுருதி ஸ்மிருதி வித்வான்களின் அநுபவமென்னும் மூன்றுகளாலும் ஆத்மாவிற்கு நிர்குணத்தன்மையும் சச்சிதானந்தத்தன்மையுமே நிச்சயிக்கப்பட்டிருக்கின்றன. ஸாக்ஷீசேதா கேவலோ நிர்குணஶ்ச (சாட்சியானது சித்தும் கேவலமும் நிர்க்குணமுமாம்) என்னுஞ் சுருதியோ அவ்வாத்மா நிர்க்குணமென்று சொல்லியிருக்கின்றது. ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம, ஆநந்தோ ப்ரஹ்ம (பிரஹ்மம் சத்யமும் ஞானமும் அநந்தமுமானது, பிரஹ்மம் ஆநந்தமானது) என்னுஞ் சுருதி அவ்வாத்மாவைச் சச்சிதானந்தமாகச் சொல்லியிருக்கின்றது. ஆகையால் ஆத்மா திரவியமன்று. ஆத்மாதிரவியமல்லாததால் குணமுதலியவைகளைப்போல பரதந்திரமாகுமென்று வைசேஷிகர் சொல்லின், அஃதும் அசங்கதம். ஏனெனின், சுருதிஸ்மிருதிகளில் ஆத்மாவையே சர்வகற்பனைகளுக்கும் அதிஷ்டானமென்றும், சர்வப்பிரேரகமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட ஆத்மாவை திரவியமல்லாததால் பரதந்திரமென்று சொல்லுதல் அச்சுருதி ஸ்மிருதிவாக்கியங்களுக்கு விருத்தமாம். திரவியமல்லாவிட்டாலும் அவ்வாத்மா சர்வத்திற்கும் அதிஷ்டானமாவதாலும் சர்வப் பிரேரகமாவதாலும் சுவதந்திரமே. இக்காரணத்தானும் திரவியமொன்பதே என்னும் அவரதுபிரதிஞ்ஞை அசங்கதம்.

அன்றியும், அவ்வைசேஷிகர்களால் ஆகாசமுதலிய அநேக நித்தியபதார்த்தங்கள் ஒப்பப்பட்டிருக்கின்றன. அவர்களது கற்பனையும் சுருதிக்கு விரோதமாவதால் அசங்கதம். எக்காரணத்தானெனின், சுருதியானது பிரஹ்மத்தைவிடவேறான சர்வஜகத்தும் அநித்தியமென்றே சொல்லியிருக்கின்றது. சுருதி. அதோऽந்யதார்த்தம்। மாயா மாத்ரம் இதம் த்வைதம் அத்வைதம் பரமார்த்தத: (இ-ள்) பிரஹ்மத்தை விடவேறான சர்வஜகத்தும் ஆர்த்தமெனப்படும் மித்தையாம். இச்சர்வதுவைதப்பிரபஞ்சம் மாயாமாத்திரம் அதாவது மித்தை; அத்வைதப்பிரஹ்மமே பரமார்த்த சத்தியம். அல்லது, ஆத்மந ஆகாஶ: ஸம்பூத:, தந்மநோऽஸ்ருஜத (ஆத்மாவினிடமிருந்து ஆகாசமுண்டாயிற்று, அம்மனதையுண்டாக்கினர்) என்னுஞ்சுருதிகளில் ஆகாசத்திற்கும் மனதிற்கும் பிரஹ்மத்தினின்று முற்பத்திசொல்லப்பட்டிருக்கின்றது. ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு: (பிறந்ததற்கு அழிவுண்டென்பது நிச்சயம்) என்னும் வசனத்தால் ஸ்ரீபகவானாலும் உற்பத்தியுடைய பதார்த்தத்திற்கு நியமமாக நாசஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. உற்பத்தி நாசமுடையதால் ஆகாசமுதலியவைகள் அநித்தியமேயாகும். அன்றியும், அவ்வைசேஷிகர்களால் பரமாணுக்களுக்கு நிரவயவமும் நித்தியமுமொப்பப்பட்டிருக்கின்றன. அஃதும் அசங்கதம். ஏனெனின், உலகத்தில் எவ்வெப்பதார்த்தங்கள் உருவமுதலிய குணமுடையனவும் பரிச்சின்னமுமாகி

ன்றனவோ, அவ்வப்பதார்த்தங்கள் சாவயவமும், அநித்தியமுமேயாகின்றன. கடபடமுதலிய பதார்த்தங்களைப்போல அப்பரமாணுக்களும் உமதுமதத்தில் உருவமுதலிய குணமுடையனவும் பரிச்சின்னமுமாம். ஆகையால் அப்பரமாணுக்களும் கடமுதலியவைகளைப்போல சாவயவமும் அநித்தியமுமேயாகும்.

அன்றியும், பரமாணுக்களைச் சாவயவ மென்றொப்புவதில் வைசேஷிகர்களால் அநவஸ்தாதோஷத்தின் பிராப்தி சொல்லப்பட்டிருக்கின்றது. அஃதும் அசங்கதம். எக்காரணத்தாலெனின், ஈஸ்வரனாகிய பரமகாரணனிடத்தே அவயவத்தொடர்ச்சியின் முடிவுசம்பவிக்கின்றது. அல்லது, சூட்சும பூதங்களுக்கு வேறாகப் பரமாணுக்களுண்டென்பதில் ஒரு பிரமாணமுமில்லை; ஆனால் சூட்சும பூதங்களையே பரமாணுக்களெனப்படும். அச்சூட்சுமபூதங்களினுற்பத்தி முற்சொன்ன முறைப்படி ஈஸ்வரனிடத்தினின்றேயாகின்றது. இக்காரணத்தானும் அப்பரமாணுக்கள் சாவயவமென்றும், அநித்தியமென்றுமே சித்திக்கின்றன. அன்றியும், அவ்வைசேஷிகர்களால் சையுக்தமான (சையோகத்துடன்கூடிய) இரு பரமாணுக்களினின்றும், துவியணுகத்தினுற்பத்தி சொல்லப்பட்டது. அஃதும் பொருந்தாது. ஏனெனின், அவ்வைசேஷிகர்களால் பரமாணுக்களை நிரவயவ மென்றொப்பப்பட்டிருக்கின்றது. சையோகத்திற்கு அவ்வியாப்பிய விருத்தியு மொப்பப்பட்டிருக்கின்றது. எத்திரவியத்தில் சையோகமிருக்கின்றதோ, அத்திரவியத்திலேயே அச்சையோகத்தின் அபாவமுமிருக்கின்றது. அது ஓரே விருட்சத்தின் கிளையில் பட்சியின் சையோகமும் வேரில் அச்சையோகத்தினபாவமுமிருக்கின்றது போலாம். இஃதே அச்சையோகத்திலுள்ள அவ்வியாப்பியவிருத்தியாம். அச்சையோகம் சாவயவதிரவியங்களுக்கே சம்பவிக்கின்றது; நிரவயவதிரவியங்களுக்கு அச்சையோகம் சம்பவியாது. வைசேஷிகர்களால் அப்பரமாணுக்கள் நிரவயவமென்றே ஒப்பப்பட்டிருப்பதால் அப்பரமாணுக்களின் சையோகம் பொருந்தாது. ஆகவே அப்பரமாணுக்களினின்றும் துவியணுகத்தினுற்பத்தி சொல்லுவது முற்றும் முரண்.

அன்றியும், யெ꞉நா ஶ்ருதம் ஶ்ருதம் ஹவதி (எதனாற் கேட்காதது கேட்கப்பட்டதாகின்றதோ) என்னுந் தொடக்கத்துச் சுருதியால் காரணப்பிரஹ்ம மொன்றன் ஞானத்தால் சர்வஞானங்களின் பிரதிஞ்ஞை செய்யப்பட்டிருக்கின்றது. அந்தப்பிரதிஞ்ஞை பிரஹ்மத்தினும் வேறான பரமாணு முதலியவற்றை அநாதியென்றும், நித்தியமென்று மொப்புமிடத்து பாதிக்கப்படுவதாகும். ஓர்கால் அந்தப்பிரதிஞ்ஞை பாதிக்கப்படுவதானாலோ அந்தப்பிரதிஞ்ஞைக்குப் பிறகு மண் முதலிய திருஷ்டாந்தங்களைக் கொண்டு காரியத்திற்குக் காரணத்தினும் பிறழ்ச்சியில்லாமையாகிய துணிவால் பிரதிஞ்ஞை செய்துக் கூறிய அநர்த்தம் அநர்த்தமாகும். இதனால் பிரஹ்மத்தைவிட வேறான சர்வ ஜகத்தும் பிரஹ்மத்தினின்று முண்டாகின்றது, அந்தப்பிரஹ்மத்தினிடத்தே லயமாகின்றது என்பது பெறப்பட்டது.

## ௩௪. சாங்கியமதப்படி ஜகத்துற்பத்தி கூறுதல்.

இங்கு சாங்கிய சாஸ்திரமுடையாரோ திரிகுணாத்மகமாகியபிரதானத்தினின்றே மகதத்துவமுதலிய கிரமத்தால் ஜகத்தினுற்பத்தி யொப்பியிருக்கின்

றூர்கள். இச்சாங்கிய மதம் பிறகு தெளிவாகும். இச்சாங்கிய மதமும் நல மன்று. ஏனெனின், அச்சாங்கியர்களால் பிரதானத்தை ஜடம் நித்தியம் சுவ தந்திரமென் றெப்பப்பட்டிருக்கின்றது. அந்தப் பிரதானமே ஜகத்காரண மென்னும் அர்த்தத்தில் ஓர்பிரமாணமுமில்லை. மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத் । அஜா மேகாம் லோஹித ஶுக்ல க்ருஷ்ணாம் பஹ்வீ: ப்ரஜா: ஸ்ருஜமானாம் ஸரூபா: (மாயையை ஜகத்திற்குக் காரணமான பிரகிருதி என்றறியவேண்டும். பிறப்பில்லாததும் சத்வ ரஜ தமோ குணத்தொகுதியானதும் அநேகப்பிரஜை களை யுண்டுபண்ணுஞ்சொரூபமுமாயுள்ளது மாயை) என்னுந் தொடக்கத்துச் சுருதிகள் சித்தாந்த சம்மதமான மாயையினையே ஜகத்திற்குக் காரணமென்று சொல்லியிருக்கின்றன; அந்தப் பிரதானத்தைச் சொல்லவில்லை. ஆகையால் அந்தப்பிரதானத்திற்குஜகத்தின் உபாதான காரணத்தன்மை பொருந்தாது.

**சங்கை :**—பிரதானம் கபிலஸ்மிருதியாற் பெறப்படுகின்ற தாகையால் அந் தப்பிரதானத்திற்குப் பிரமாணமில்லையென்று சொல்வது சரியல்ல.

**சமாதானம்:**—சுருதிக்கு விரோதமான அக்கபிலஸ்மிருதி பிரமாணமா காது. சுருதியை மூலமாகவுடைய ஸ்மிருதியே பிரமாணம்; சுருதிக்கு விரோ தமான ஸ்மிருதி பிரமாணமல்ல. ஆகையால் மாயாவுபகித பிரஹ்மத்தினின்றே ஆகாசமுதலிய கிரமத்தால் பிரபஞ்சமுற்பத்தியாகின்றதென்று முற்சொல்லிய சித்தாந்த மதமே எல்லாரும் அங்கிகரிக்கவேண்டும்.

### ௩௫. சூட்சுமசரீர ஸ்தூலபூதங்களினுற்பத்தி கூறுதல்.

இனி முற்சொன்ன ஆகாசமுதலிய ஐம்பூதங்களினின்றும் சூட்சுமசரீரங் களினதும் ஸ்தூலபூதங்களினது முற்பத்திவகை சொல்லப்படுகின்றது. ஈஸ் வரனுக் குபாதியாக முற்கூறிய மாயை சத்வரஜதமமென்னு முக்குணவடிவமா னது. காரணத்தின்குணமே காரியத்தின்குணங்களை ஆரம்பிப்பது. ஆகையால் அம்மாயையின் காரியமாகிய ஆகாசமுதலிய வைம்பூதங்களும் சத்வரஜதம மென்னுமுக்குணவடிவமே. அவ்வாகாசமுதலியவைம்பூதங்கள் பிரத்தியட்ச வியவகாரத்திற்கு யோக்கியமாயில்லாததால் சூட்சுமமெனப்படும். பஞ்சீகரண மில்லாததால் அபஞ்சீகிருத மெனப்படும். அப்படிப்பட்ட அபஞ்சீகிருத சூட்சும பூதங்களினின்றும் பதினேழுலிங்கமாகிய சூட்சுமசரீர முண்டானது. அப்பதினேழுலிங்கங்கள் இவையாம்:—ஞானேந்திரியமைந்து, கர்மேந்திரியமை ந்து, பிராணனைந்து, மனம், புத்தி. சுரோத்திரம் 1. துவக்கு 2. சட்சு 3. இர சனை 4. கிராணம் 5. என்னுமைந்து இந்திரியங்கள் ஞானத்திற்குச் சாத னமாவதால் ஞானேந்திரிய மெனப்படும். வாக்கு 1. பாணி 2. பாதம் 3. பாயு 4. உபஸ்தம் 5. என்னுமைந்து இந்திரியங்கள் கிரியைக்குச் சாதனமாவதால் கர்மேந்திரியமெனப்படும். சப்தஞானத்திற்குச் சாதனமான இந்திரியம் சுரோ த்திரம், ஸ்பரிச ஞானத்திற்குச் சாதனமான இந்திரியம் துவக்கு, உருவ ஞானத்திற்குச் சாதனமான இந்திரியம் சட்சு, இரச ஞானத்திற்குச் சாதன மான இந்திரியம் இரசனை, கந்த ஞானத்திற்குச் சாதனமான இந்திரியம் கிரா ணமெனப்படும். வசனிக்குங் கிரியைக்குச் சாதனமான இந்திரியம் வாக்கு, ஏற்

றற் கிரியைக்குச் சாதனமான இந்திரியம் பாணி, செல்லுங் கிரியைக்குச் சாதனமான இந்திரியம் பாதம், விடுதற் கிரியைக்குச் சாதனமான இந்திரியம் பாயு, சுகக்கிரியைக்குச் சாதனமான இந்திரியம் உபஸ்தமெனப்படும். மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னும் பேதத்தால் அந்தக்கரணம் நால்வகைப்படினும் இங்கு மனதினிடத்துச் சித்தமும் புத்தியினிடத்துஅகங்காரமு மடங்கியதென்றெண்ணி மனம் புத்தி யென்னு மிரண்டுகளே கிரகிக்கப்பட்டன.

இனி அவ்வாகாச முதலிய வைம்பூதங்களினின்றும் பதினேழு லிங்கங்களினுற்பத்திக்கிரமஞ் சொல்லப்படுகின்றது. ஸத்வாத்ஸம் ஜாயதே ஜ்ஞாநம் (சத்துவத்தினின்றும் ஞானமுண்டாகின்றது) என்னும் கீதாவசனத்தில் சத்துவகுணத்தினின்றும் ஞானோற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. சுரோத்திர முதலிய வைந்து ஞானேந்திரியங்களில் முற்சொல்லிய முறைப்படி ஞானத்திற்குச் சாதனமாகுந் தன்மை தெளிவாகவே யிருக்கின்றதாகையால் கலப்புறாத அவ்வாகாச முதலியவைம் பூதங்களின் சாத்விக அம்சத்தினின்றும் சுரோத்திர முதலிய வைந்து ஞானேந்திரியங்களுண்டாகின்றன. ஆகாசத்தின் சாத்துவிக அம்சத்தினின்று சுரோத்திரேந்திரியமும், வாயுவின் சாத்துவிக அம்சத்தினின்று துவக்கிந்திரியமும், தேயுவின் சாத்துவிக அம்சத்தினின்று சட்சு இந்திரியமும், ஜலத்தின் சாத்துவிக அம்சத்தினின்று இரசனேந்திரியமும், பிருதிவியின் சாத்துவிக அம்சத்தினின்று கிராணேந்திரியமு முண்டாகின்றன.

**சங்கை:**—சுரோத்திர முதலிய வைந்து இந்திரியங்கள் முற்கூறியமுறைப்படி ஆகாச முதலிய வைம்பூதங்களினின்று முற்பத்தியாகின்றன வென்னும் வார்த்தை அறியப்படுவதெப்படி ?

**சமாதானம்:**—சப்த ஸ்பரிச ரூப ரச கந்த மென்னு மைந்து குணங்களுள் எக்குணத்தை எவ்விந்திரியம் கிரகிக்கின்றதோ அவ்விந்திரியம்அக்குணமுடையதென்பது நியமம். எப்படி சுரோத்திரேந்திரியம் சப்த குணத்தைக் கிரகிப்பதாகையால்அச்சுரோத்திரேந்திரியம்சப்தகுணமுடையதேயாகுமோ,அப்படி துவக்கு முதலிய இந்திரியங்களும் ஸ்பரிசமுதலிய குணங்களைக் கிரகிப்பனவாகையால் அவ்வத்துவக்குமுதலியஇந்திரியங்களும்அவ்வஸ்பரிசமுதலியகுணமுடையவனேயாகும். அவ்வச்சப்தமுதலிய குணமுடைய திரவியங்கள் ஆகாசமுதலியனவாகுமென்பதுபிரசித்தம்.இவ்வாறான யுக்தியால் அச்சுரோத்திர முதலிய இந்திரியங்களுக்குமுறையாக அவ்வாகாச முதலியபூதங்களின்காரியத்தன்மையே பெறப்படுகின்றது. ஒருகால் சுரோத்திர முதலிய இந்திரியங்கள் ஆகாச முதலிய பூதங்களின் காரியங்களொன்றெப்பாவிடின் அச்சுரோத்திராதி இந்திரியங்களினிடத்துச் சப்தமுதலிய குணங்களைக்கிரகிக்குந்தன்மையேயுண்டாகாதாகும். அன்றியும் கேவலம் இந்தயுக்தியினாலே சுரோத்திர முதலிய இந்திரியங்களினிடத்து ஆகாசமுதலிய பூதங்களின் காரியத்தன்மை பெறப்படுதலன்றிச்சுருதிப் பிரமாணத்தானும்பெறப்படும். சுருதி. ஶ்ரோத்ரமாகாஶே வாயௌ த்வக் அக்நௌ சக்ஷுரப்ஸு ஜிஹ்வா ப்ருதிவ்யாம் க்ராணம் (ஆகாயத்திற் செவியும்வாயுவில் மெய்யும் அக்கினியிற் கண்ணும் அப்பில் நாவும் பிருதிவியில் மூக்கும்

என்னுஞ் சுருதியில் ஆகாச முதலிய பூதங்களின் சாத்துவிக அம்சத்தினின்று முறையாகச் சுரோத்திர முதலிய வைந்து ஞானேந்திரியங்களினுற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது: ஆகையால் ஆகாச முதலிய பூதங்களின் சாத்துவிக அம்சத்தினின்றும் சுரோத்திர முதலியவைந்து ஞானேந்திரியங்களினுற்பத்தி யொப்புதல் சுருதியுக்திகளாற்பெறப்படுகின்றது.

அவ்வாகாச முதலிய வைம்பூதங்களின் கலப்புற்ற சாத்துவிக அம்சங்களினின்றும் அந்தக்கரண முற்பத்தியாகின்றது. அவ்வந்தக்கரணம் சுரோத்திர முதலியவைந்திந்திரியங்கள் வாயிலாக அச்சப்த முதலிய வைங்குணங்களைக் கிரகிக்கின்றது. ஆகையால் அந்தக்கரணம் அவ்வாகாச முதலிய ஐம்பூதங்களின் கலப்புற்ற சாத்துவிக அம்சங்களின் காரியமென்று அவசிய மொப்பவேண்டும். ஒருகால் அந்தக்கரணம் அவ்வைம்பூதங்களின் காரியமென்றொப்பாவிடின் அவ்வந்தக்கரணத்திற்குச் சப்த முதலிய குணங்களைக் கிரகிக்குந் தன்மையே பொருந்தாதாகும். இங்கு சாங்கிய சாஸ்திரமுடையார் இப்படி சொல்லுகின்றார்கள். அவ்வந்தக்கரணம் புத்தி 1. அஹங்காரம் 2. மனம் 3. என்னும் வேறுபாட்டால் மூவகைப்படும். மூலப்பிரகிருதியினின்றும் புத்தி யுற்பத்தியாகின்றது. மஹதத்துவம் புத்தி எனப்படும். அம்மஹதத்துமென்னும் புத்தியினின்றும் அஹங்கார முற்பத்தியாகின்றது. அவ்வஹங்காரம் சத்வ ரஜ தம மென்னு முக்குணங்களின் பேதத்தால் சாத்துவிகம் ராஜசம் தாமசமென்று மூவகையாகின்றன. சாத்துவிக அஹங்காரத்தினின்றும் சுரோத்திர முதலியவைந்து ஞானேந்திரியங்களும் வாக்கு முதலியவைந்து கர்மேந்திரியங்களும் மனமொன்றுமாகப் பதினொரு இந்திரியங்களுற்பத்தியாகின்றன. தாமச அஹங்காரத்தினின்றும் சப்தம் 1. ஸ்பரிசம் 2. உருவம் 3. இரசம் 4. கந்தம் 5. என்னுமைந்து தன்மாத்திரைகளுற்பத்தியாகின்றன. இராஜச அஹங்காரம் அவ்விரு அஹங்காரங்களைப் பிரவிருத்திக்கச் செய்வதால் கேவலம் சஹகாரி மாத்திரமாகின்றது. அவ்வைந்துதன்மாத்திரைகளினின்று முறையாக ஆகாசம் 1. வாயு 2. அக்நி 3. ஜலம் 4. பிருதிவி 5. என்னுமைந்துமகாபூதங்களுற்பத்தியாகின்றன. இவ்வார்த்தை சாங்கிய தத்துவகௌமுதியிலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். மூலப்ரக்ருதிரவிக்ருதிர்மஹதாத்யா: ப்ரக்ருதி விக்ருதய: ஸப்த ஷோடஶகஸ்து விகாரோ ந ப்ரக்ருதிர்ந விக்ருதி: புருஷ: (இ-ள்.) சத்வ ரஜ தமமென்னு முக்குணங்களின் சாம்ய (சமமான) அவஸ்தைக்குப் பிரதானமென்று பெயர். அந்தப் பிரதானம் ஜகத்திற்கு மூலகாரணமாவதால் மூலப்பிரகிருதி எனப்படுகின்றது. மூலப்பிரகிருதி எதற்கும் விகிருதியாகின்றதில்லை. ஈண்டும், எல்லாவிடத்தும் பிரகிருதி சப்தத்தால் பரிணாமி உபாதான காரணமும், விகிருதி சப்தத்தால் காரியமுங் கிரகிக்கவேண்டும். மஹதத்துவம் அஹங்காரம் ஐந்து தன்மாத்திரைகளுமானவேழும் பிரகிருதியும் விகிருதியுமாகின்றன. மஹதத்துவமானது மூலப்பிரகிருதியை நோக்க விகிருதியும் அஹங்காரத்தை நோக்கப் பிரகிருதியுமாகின்றது. அவ்வஹங்காரமும் மஹதத்துவத்தை நோக்க விகிருதியும் இந்திரிய தன்மாத்திரைகளை நோக்கப் பிரகிருதியுமாகின்றது. இப்படி

யே அவ்வைந்து தன்மாத்திரைகளும் அஹங்காரத்தை நோக்க விகிருதியும் பஞ்ச பூதங்களை நோக்கப் பிரகிருதியுமாகின்றன. மேற்சொன்ன பதினொரு இந்திரியங்களும் ஐந்து மகா பூதங்களுமாகிய பதினாறும் விகிருதிகளே; ஒன்றுக்கும் பிரகிருதியாகாது. அசங்கனுவதால் புருஷன் பிரகிருதியுமல்ல விகிருதியுமல்ல—. இச்சாங்கிய மதத்தின் விஸ்தார நிரூபணம் நியாயப் பிரகாசநூலின் இரண்டாவது பரிச்சேதத்தின் ஆத்ம நிரூபணத்தில் நம்மால் சொல்லப்பட்டிருக்கின்றது. அதனை ஆங்கு அறிந்துகொள்ளுக. இச்சாங்கிய மதமும் சுருதி சூத்திரங்களுக்கு விரோதமாவதால் அசங்கதம். ஏனெனின்,பிரஹ்ம சூத்திரக் காரரான ஸ்ரீவியாசபகவானால் ஈக்ஷதேர் நாஶப்தம் என்னுந்தொடக்கத்துச்சூத்திரங்களால்பிரதானகாரண வாதம் கண்டிக்கப்பட்டேயிருக்கின்றது. இச்சூத்திரத்திற் கிது பொருள்:—வைதிக சப்தத்தாற் சொல்லப்படாததால் பிரமாண மில்லாததாகிய பிரதானம் ஜகத்திற்குக் காரணமல்ல. எக்காரணத்தாலெனின், ததைக்ஷத பஹு ஸ்யாம் (அநேகமாவேமென்று அவர் சங்கற்பித்தார்) என்னுஞ் சுருதியால் ஜகத்காரணத்தினிடத்து ஞானமாகிய ஈட்சணம் (சங்கற்பம்) சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வீட்சணம் சேதனத்தினிடத்தே சம்பவிக்கும்; ஜடப்பிரதானத்தினிடத்துச் சம்பவியாதாகையால் அந்தப் பிரதான காரணவாதம் அசங்கதம். அல்லது, அந்நமயம் ஹி ஸோம்ய மந: ஆபோமய: ப்ராண: தேஜோமயீ வாக் (சௌமியனே ! அன்னமயம் மனமும், ஜலமயம் பிராணனும், தேயுவின்மயம் வாக்குமாகும்) என்னுஞ் சுருதியாலும் ஶ்ரோத்ரம் ஆகாஶே வாயௌ த்வக் (ஆகாயத்திற் சுரோத்திரமும் வாயுவில் துவக்குமாகும்) என்று முற்சொல்லிய சுருதியாலும் அந்தக் கரணம் பிராணன் இந்திரியமென்னு மூன்றினிடத்துப் பூதங்களின் காரியத்தன்மையே நிச்சயிக்கப்படுகின்றது. ஆனால் சாங்கியர் அவைகளைப் பூதகாரியமென்றொப்பினரில்லை யாகையாலும் அச்சாங்கியமதம் சுருதிப்பிரமாணத்திற்கு விருத்தம்.

**சங்கை:**—உமது வேதாந்த மதத்திலும் பிரஹ்மம் அசங்கம். அப்படிப்பட்ட அசங்கப் பிரஹ்மத்தினிடத்து அவ்வீட்சண பூருவகமாக ஜகத்தின் உபாதான காரணத்தன்மை யொப்புதல் முற்றும் விருத்தம். விருத்தமான பொருளைச் சுருதியும் எப்படி எடுத்துச்சொல்லும் ?

**சமாதானம்:**—சுத்தப்பிரஹ்மம் அசங்கமாவதால் ஜகத்திற் குபாதான காரணமென்பது பொருந்தா தென்றாலும் மாயா வுபகித பிரஹ்மத்திற்கு அவ்வுபாதானத் தன்மை பொருந்தும். சுருதியாலும் மாயாவுபகித பிரஹ்மத்திற்கே ஜகத்தின் உபாதானத் தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வார்த்தை முன்னரே விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஈண்டு நையாயிகர் மனதை நிரவயவமென்றும், அணுவென்றும், நித்தியமென்று மொப்பியிருக்கின்றார்கள். நையாயிகரது மதம் நியாயப்பிரகாசத்தில் மன நிரூபணத்தில் விரிவாய்ச்சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த நையாயிகரது மதமும் சுருதிக்கு விரோதமாவதால் அசங்கதம். ஏனெனின், மனதை நித்தியமென் றொப்பினாலோ ஏகமேவா த்விதீயம் ப்ரஹ்ம (சஜாதிய விஜாதிய சுவகதபேத மில்லாதது பிரஹ்மம்) மெ

ன்னுஞ் சுருதிக்கு முரணுவது ஒன்று, மற்றொன்று ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்த்ரியாணி ச, தந்மநோऽகுருத (இவரிடத்தினின்று பிராணனும் மனதும் இந்திரியங்களு முண்டாயின, அம்மனதை உண்டாக்கினார்) என்னுந் தொடக்கத்துச் சுருதிகளில் மனதிற்கு உற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. யாது பாவகாரியமோ அது அநித்தியமே. கடபட முதலியவைகள்பாவகாரியமாவதால் அநித்தியமாதல்போல, பாவகாரியமாவதால் அம்மனதும் அநித்தியமேயாகும்.

அன்றியும், நையாயிகர்களால் மனம் மூர்த்தத்திரவியமென்றொப்பப்பட்டிருக்கின்றது. யாதுயாது மூர்த்தத்திரவியமோ அதுவது பரிச்சின்னமேயாகும். யாது யாது பரிச்சின்னமோ அதுவது சாவயவமே யாகும், யாது யாது சாவயவமோ அதுவது அநித்தியமே யாகும். இவ்வாறான நியமம் கடபட முதலிய மூர்த்தத்திரவியங்களினிடத்துக் காணப்படுகின்றது. மூர்தத்திரவியமாகையால் அம்மனதும் சாவயவமும் அநித்தியமுமேயாகும். அன்றியும், நையாயிகர்களால் மனம் அணுவெனவும், அம்மனதின் சையோகத்தால் ஆத்மாவினிடத்துச் சுகதுக்கமுதலிய வற்றினுற்பத்தியுமொப்பப் பட்டிருக்கின்றன. அவையும் அசங்கதம். ஏனெனின், அணுவாகிய மனதின் சையோகத்தாற் றோன்றிய அச்சுகமும் ஓர் அணுப்பிரதேசத்தின் கண்ணே யிருக்கும்; அங்கமுழுவதும் வியாபித்திருக்கலாகாது. குளிர்ந்த கங்கை நீரிற் படிந்தவனுக்கு அங்கமுழுவதும், பரவிய சுகத்தின் அநுபவமுண்டாகின்ற தாகையால் அம்மனம் அணுவல்ல. அல்லது, எனக்குப் பாதத்திற் பீடை, சிரத்திற் சுகமென்று ஓரே காலத்தில் சுகதுக்கங்களின் அநுபவமுண்டாகின்றது. அஃதும் நையாயிகமதத்தில் அசங்கதமாகும். எக்காரணத்தானெனின், அணுமனதிற்கு ஒரு காலத்தில் பாதசிர மிரண்டுகளோடு சையோகம் சம்பவியாது. பூதங்களின் காரியமாகிய மனதினிடத்து விபுத்தன்மையும், விபு மனதிற்கு விபுவாத்மாவினோடு சையோகமும் சம்பவியா. இப்படிக் கூறியயுக்திகளால் மனதின் விபுத்தன்மையுங் கண்டிக்கப்பட்டதெனவறிக. மீமாம்சகர் மனதை விபுவென்றொப்புகின்றார்கள். மனதின் விபுத்தன்மையின் பிரதிபாதனமும் நையாயிக ரீதிப்படி அதன் கண்டனமும் நியாயப்பிர காசத்தின் துவிதீயபரிச்சேதத்தில் மனநிரூபணத்தில் விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆங்கு அறிக. இதனுல் ஆகாசமுதலிய பஞ்சபூதங்களின் கலப்புற்ற சாத்துவிக அம்சங்களினின்றும் அவ்வந்தக்கரணம் உற்பத்தியாகின்றதும், சாவயவமென்பது மாகிய சித்தாந்தம் பெறப்பட்டது.

அவ்வந்தக்கரணம் சங்கல்பம் நிச்சயம் அபிமானம் ஸ்மரண மென்னும் நான்கு விருத்திகளின் பேதத்தால் மனம் 1. புத்தி 2. அஹங்காரம் 3. சித்தம் 4. என்று நான்கு வகைப்படும். சங்கல்ப விருத்தியுடைய அந்தக்கரணம் மனமென்றும், நிச்சய விருத்தியுடைய அந்தக் கரணம் புத்தியென்றும், அபிமான விருத்தியுடைய அந்தக்கரணம் அஹங்கார மென்றும், ஸ்மரண விருத்தியுடைய அந்தக் கரணம் சித்தமென்றுஞ் சொல்லப்படும். இனி கர்மேந்திரியங்களினுற்பத்தி வகை சொல்லப்படுகின்றது. மேற்சொன்ன ஆகாச முதலிய பஞ்சபூதங்களுக்கு ஒன்றற் கொன்று கலப்புண்டாகாத ராஜச அம்சங்களினி

ன்றும் கர்மேந்திரியங்களுண்டாகின்றன. ஆகாசத்தின் ராஜச அம்சத்தினின்றும் வாக்கிந்திரிய முண்டாகின்றது. வாயுவின் ராஜச அம்சத்தினின்றும் ஹஸ்தேந்திரிய முண்டாகின்றது. தேயுவின் ராஜச அம்சத்தினின்றும் பாதேந்திரியமுண்டாகின்றது. ஜலத்தின் ராஜச அம்சத்தினின்றும் பாயுவிந்திரிய முண்டாகின்றது. பிருதிவியின் ராஜச அம்சத்தினின்றும்உபஸ்தேந்திரிய முண்டாகின்றது. ஈண்டு சிற்சில நூலாசிரியர்ஜலத்தின் ராஜச அம்சத்தினின்று உபஸ்தேந்திரியமும் பிருதிவியின் ராஜச அம்சத்தினின்று பாயுவிந்திரியமு முண்டானதாக ஒப்பியிருக்கின்றார்கள். கஷிநாவஃ ப்ரதிஷிதாஉதி ரெதஸி (எதில் ஜலங்கள் நிலைபெற்றுள்ளனவென ரேதசில்) என்னுஞ் சுருதியில் ஜலங்களின் ஸ்திதி ரேதசில் என்று சொல்லப்பட்டிருக்கின்றதாகையால் உபஸ்தேந்திரியம் ஜலத்தினின்றே யுற்பத்தியானதென்றொப்புதல் நலம்.

இனிபிராணன்களினுற்பத்தி சொல்லப்படுகின்றது. மேற்சொன்ன ஆகாசமுதலிய பஞ்சபூதங்களின் கலப்புற்ற ராஜச அம்சங்களினின்றும் பிராணனுண்டாகின்றது. அந்தப் பிராணனும் தொழில் வேறுபாட்டாலும் இட வேறுபாட்டாலும் பிராணன் 1. அபானன் 2. வியானன் 3 உதானன் 4. சமானன் 5. என்று ஐவகைப்படும். எப்போதும் மேற்செல்லுதலையுடைய வாயு பிராணனெனப்படும். உதானவாயுவும் மேற் செல்லுதலையுடைய தானாலும் அவ்வுதானன் மரணகாலத்தில் மாத்திரம் மேற்செல்லுதலையுடையது; எப்போதும் மேற்செல்லுதலையுடைய தன்று. ஆனால் இந்தப் பிராணனோ எப்போதும் மேற்செல்லுதலையுடைய தாகையால் பிராணனது இலக்கணத்திற்கு உதானனிடத்து அதிவியாப்தி யுண்டாகாது. அந்தப் பிராணன் நாசி முதல் நாபிவரையிலுள்ள விடங்களிலிருப்பது. வாயுஃப்ராணொ ஹுக்ஷா நாஸிகெ ப்ராவிஶஃ (வாயுவே பிராண உருவனாய் மூக்கினுள்ளே பிரவேசித்தார்) என்னும் ஐதரேய சுருதி வாக்கியத்தால் பிராணனுக்கு நாசிமுதலிய விடங்களிலே ஸ்திதிசொல்லப் பட்டிருக்கின்றது. கீழ்ச்செல்லுதலுடைய வாயு அபானனெனப்படும். அவ்வபானன் நாபிமுதல் பாயு பரியந்தமுள்ள விடங்களிலிருப்பது. ம்ருத்யுரபாநொ ஹுக்ஷா நா஭ிம் ப்ராவிஶஃ (இயமன் அபான உருவனாய் நாபியிற் பிரவேசித்தார்) என்னுஞ் சுருதியால் அவ்வபானனுக்கு நாபிமுதலிய விடங்களிலே ஸ்திதி சொல்லப் பட்டிருக்கின்றது. எல்லாப் புறங்களிலுஞ் செல்லுதலையுடைய வாயு வியானனெனப்படும். அந்தவியான வாயு சரீரமுழுவது மிருக்கின்றது. மரணகாலத்தில் மேற்செல்லுதலையுடைய வாயு உதானனெனப்படும். அவ்வுதான வாயு கண்டஸ்தானத்திலிருக்கின்றது. உண்ணப்பட்ட அன்னத்தையும் பருகப்பட்ட ஜலத்தையும் ஸ்தூலம் மத்திமம் சூட்சுமமென்னு மூன்று பகுதிகளை அவ்வவ்விடங்களில் அடையச்செய்யும் வாயு சமானனெனப்படும். மலமூத்திரங்களுக் கேதுவாகிய அன்னஜலங்களின் ஸ்தூலப்பகுதியைச் சரீரத்தினின்றும் வெளியிற்றள்ளும் பொருட்டு அச்சமான வாயு அபானனில் அடைவிக்கின்றது. தசை ரத்தங்களுக்கேதுவாகிய அன்னஜலங்களின் மத்திமப் பகுதியை நாடிவாயிலாக எல்லா அங்கங்களில் அடைவிக்கின்றது. மனம் பிராணனென்னு மிரண்டுகளை உபகரிப்

பதாகிய அன்னஜலங்களின் சூட்சுமப்பகுதியை அம்மனதினிடத்து அடைவிக்கின்றது, இக்காரணத்தாற்றான் சுருதியில் மனம் அன்னமயமெனப் பட்டிருக்கின்றது, பிராணன் ஜலமயமெனப் பட்டிருக்கின்றது. இச்சமான வாயுவும் சரீர முழுவதுமிருக்கின்றது. சில நூற்களில் இச்சமானனுக்கு நாபிஸ்தானமென ப்பட்டிருக்கின்றது. அஃது முக்கியததன்மையாற் சொல்லப்பட்டது. அதாவது அச்சமான வாயுவிற்கு முக்கியஸ்தானம் நாபியாம். இங்கு சிலசாஸ்திர முடையார் நாகன் 1. கூர்மன் 2. கிருகரன் 3. தேவதத்தன் 4. தனஞ்சயன் 5. என்னுமைந்து வாயுக்களைச் சேர்த்துப் பிராணன் பத்துவிதமென்கின்றார்கள்.

வாந்தியைச் செய்விப்பதாகிய வாயு நாகனெனப்படும். நேத்திரங்களை இமைப்பித்தலாகிய வாயு கூர்மனெனப்படும். தும்மலைச் செய்விப்பதாகிய வாயு கிருகரனெனப்படும். கொட்டாவியைச் செய்விப்பதாகிய வாயு தேவதத்தனெனப்படும். உடலைப் போஷிப்பதாகிய வாயு தனஞ்சயனெனப்படும். முற்சொன்ன பிராணன் முதலியவைந்து வாயுக்களினின்றும் நாகன் முதலியவைந்து வாயுக்களை வேறாகவொப்புவதில் கௌரவதோஷம் அடையப்படுவது ஒன்று. நாகனாதிய அவ்வைந்து வாயுக்களில் சுருதியாதிய பிரமாணங்களில்லாமை மற்றொன்று. ஆகையால் வேதாந்த நூற்களில் நாகன் முதலியவைந்துகளும் அப்பிராணாதிகளில் அடங்கிய தென்றெப்பி பிராணன்கள் ஐந்தே என்று சொல்லப்பட்டிருக்கின்றன.

இனிமேற் சொன்ன இந்திரிய அந்தக்கரணங்களின் தேவதைகள்சொல்லப் படுகின்றன. சுரோத்திரம் 1. துவக்கு 2. சட்சு 3. ரசனை 4. கிராணம் 5. என்னுமைந்து ஞானேந்திரியங்களுக்கு முறையாகத் திக்கு 1. வாயு 2. ஆதித்தன் 3. வருணன் 4. அஸ்விநி 5. எனத்தேவதைகளைந்து. இங்கு சில நூற்களில் கிராணத்திற்குப் பிருதிவி தேவதையாகவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

வாக்கு 1. பாணி 2. பாதம் 3. பாயு 4. உபஸ்தம் 5. என்னுமைந்து கர்மேந்திரியங்களுக்கு முறையாக வன்னி 1. இந்திரன் 2. உபேந்திரன் 3. மிருத்யு 4. பிரஜாபதி 5. என்னு மைந்து தேவதைகள். மனம் 1. புத்தி 2. அஹங்காரம் 3. சித்தம் 4. என்னும் நான்கு அந்தக்கரணங்களுக்கு முறையாகச் சந்திரன் 1. சதுர்முகன் 2. சங்கரன் 3. அச்சுதன் 4. என்னும் நான்கு தேவதைகள்.

சங்கை:—சுரோத்திர முதலிய விந்திரியங்களுக்குத் திக்கு முதலியன அதிஷ்டாதா தேவதைக ளென்பதிற் பிரமாணம் யாது?

சமாதானம்:—ஜாபால உபநிஷத்தில் ஶ்ரோத்ரமத்யாத்மம் ஶ்ரோதவ்யமதிபூதம் திஶஸ்தத்ராதிதைவதம் (சுரோத்திரம் அத்தியான்மம், சப்தம் அதிபூதம், ஆண்டுத்திக்கு அதிதெய்வம்) என்னுந் தொடக்கத்து வசனங்களால் ஞான கர்மேந்திரியங்களுக்கும் அந்தக்கரணத்திற்கும் மேற்சொன்ன சர்வ தேவதைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் அவ்விந்திரியவந்தக் கரணங்களுக்கு அதிஷ்டாதா தேவதைகள் சுருதிப் பிரமாணத்தானே பெறப்படுகின்றன.

அல்லது, அவ்வதிஷ்டாதா தேவதைகள் கேவலம் சுருதிப்பிரமாணத்தாற்று னே பெறப்படுவதன்றி அனுமானப் பிரமாணத்தானும் பெறப்படும். அது காட்டப்படுகின்றது. இவ்வுலகத்தில் அசேதன காரண மானவை எவையோ அவை சேதனத்தை யாசிரயிப்பனவாகியே காரியத்தை யுண்டாக்குகின்றன. எப்படி மண் அசேதன காரணமாவதால் சேதனனுனகுலாலனை ஆசிரயிப்பதாகியே கடமுதலிய காரியங்களை உற்பத்தி செய்கின்றதோ, அப்படி அவ்விந்திரியங்களும் அசேதன காரணங்களாவதால் சேதனமான தேவதைகளை யாசிரயிப்பனவாகியே தத்தம் காரியங்களை யுண்டாக்குகின்றன.

சங்கை:—ஜீவ சேதனமே அவ்வெல்லா இந்திரியங்களுக்கும் அதிஷ்டாதாவாகும்; ஜீவ சேதனத்தை விடவேறுன மற்ற அதிஷ்டாதா தேவதைகளை யொப்புதல் வீண்.

சமாதானம்:—ஜீவசேதனம் இந்திரியங்களைப் பிரேரிப்ப (ஏவுப) வனென்று கொண்டால் அச் ஜீவசேதனம் தனக்கு அனுகூலமான பொருளினிடத்தே அவ்விந்திரியங்களைப்பிரேரிப்பதாகும்; பிரதி கூலமான பொருளினிடத்துப் பிரேரிப்பதல்லவாகும், அப்படி காணப்படுவதில்லை. ஆனுல் ஜீவசேதனத்திற்குப் பிரதிகூலமாகச் சத்துருவைப் பார்த்தலும் தீநாற்ற முதலியவைகளின் ஞானமும் சட்சு கிராண முதலிய விந்திரியங்க ளுண்டாக்குகின்றன. இதனுலறியப்படுவதி யாதெனின், ஜீவசேதனம் அவ்விந்திரியங்களைப் பிரேரிப்பதன்று; ஆனுல் மேற்சொன்ன தேவதைகளே பிரேரிப்பனவாம். அத்தேவதைகள் ஜீவனது பாப கருமத்தின் வசப்படி பிரதி கூலப் பொருளினிடத்தும் அவ்விந்திரியங்களைப் பிரேரிக்கின்றன.

இதுவரைக்கும் பதினேழு லிங்கமாகிய சூட்சும சரீரம் சொல்லப்பட்டது. இப்போது தைத்திரிய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற காரிய காரணமாகிய அன்னமய முதலியவைங்கோசங்களுக்கும் ஸ்தூல சூட்சும காரணமென்னு முச்சரீரங்களில் அடக்கஞ் சொல்லப்படுகின்றது.

## ௩௬. அன்னமயமுதலிய வைங்கோசங்களைச்சுருக்கிக் கூறுதல்.

அன்னமயம் 1. பிராணமயம் 2. மனுேமயம். 3. விஞ்ஞானமயம் 4. ஆனந்தமய மென்னு மைந்தும் ஆத்மாவை மறைப்பதால் கோசங்களெனப்படும். பின்னே கூறப்படும் ஸ்தூல சரீரம் அன்னமய கோசமெனப்படும். அவ்வன்னமய கோசமும் காரிய காரண வேறுபாட்டால் இருவகைத்து. நம் போலிய ஜீவர்களின் வியஷ்டித் தூலசரீரம் காரியமாகிய அன்னமயகோசம். விராட்டின் சமஷ்டி ஸ்தூலசரீரம் காரணமாகிய அன்னமய கோசம். இவ்வாறு பின்னுள்ள பிராணமய முதலிய கோசங்களுக்கும் வியஷ்டிசமஷ்டிகளால் காரிய காரண வடிவமறிந்துகொள்ளல் வேண்டும். முற்சொன்ன பதினேழு லிங்கமாகிய சூட்சும சரீரம் பிராணமய மனுேமய விஞ்ஞானமய மென்னு முக்கோசங்களாம். மேற்சொன்ன வாக்காதிய ஐந்துகருமேந்திரியங்களுடன் கூடிய பிராணன் பிராணமய கோச மெனப்படும். மேற்சொன்ன சுரோத்திராதியவைந்து ஞானேந்திரியங்களுடன் கூடிய மனம்மனுேமய கோசமெனப்படும். அந்தஞானேந்தி

ரியங்களுடன்கூடிய புத்தி விஞ்ஞானமய கோசமெனப்படும். இவ்விஞ்ஞானமய கோசமே ஆத்மாவின் கர்த்தாத் தன்மைக்கு உபாதி, அதாவது வாஸ்தவத்தில் ஆத்மா அகர்த்தாவாயினும் இவ்விஞ்ஞானமய கோசவிசிஷ்டனுய்க்கர்த்தா வெனப்படுகின்றான். சுருதி. விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே கர்மாணி தநுதேபிச (இ-ள்) இவ்விஞ்ஞானமயவுபாதியுடைய ஜீவாத்மாவே எக்ஞத்தையும் சர்வகருமங்களையும் செய்கின்றான்.

இனி ஐந்தாவது ஆனந்தமய கோசத்தைச்சொல்லும் பொருட்டு முதலில் அந்தக்கரணத்தினது சாத்துவிக விருத்தியின் பிரிவுசொல்லப்படுகின்றது. முற்சொன்ன அந்தக் கரணத்தின் சாத்துவிக விருத்தி இருவகைத்து. ஒன்று நிச்சய விருத்தி, மற்றொன்று சுகாகார விருத்தி, நிச்சய விருத்தியுடைய வந்தக்கரணம் புத்தி எனப்படும். புத்தி விஞ்ஞானமய கோசமாவதால் அந்தப் புத்தியையுபாதியாயுடைய ஜீவாத்மா கர்த்தா ஞாதா பிரமாதா வெனப்படுகின்றான். இரண்டாவதான சுகாகார விருத்தியுடைய வந்தக்கரணம் ஆத்மாவின் போக்தாத்தன்மைக்கு உபாதி, அஃதாவது வாஸ்தவத்தில் ஆத்மா அபோக்தாவாயினும் அச்சுகாகார விருத்தியுடைய வந்தக்கரணத்தோடு விசிஷ்டனுய்ப் போக்தாவெனப்படுகின்றான். அச்சுகாகார விருத்திகள் தைத்திரிய உபநிஷத்தில் பிரியம் மோதம் பிரமோதமென்னும் பெயராற் சொல்லப்படுகின்றன. இஷ்டவஸ்துவைப் பார்ப்பதாலுண்டாகும் சுகம் பிரியமெனப்படும். இஷ்டவஸ்துவையடைவதாலுண்டாகும் சுகம் மோதமெனப்படும். இஷ்டவஸ்துவை யனுபவிப்பதாலுண்டாகும் சுகம் பிரமோதமெனப்படும். போக்தாத் தன்மைக்குபாதியாகிய வந்தக்கரணமே அஞ்ஞானம் வரைக்கும் ஆனந்தமய கோசமெனப்படுகின்றது. அவ்வானந்தமய கோசமாகிய வுபாதியுடைய சேதன ஆத்மா போக்தாவெனப்படுகின்றது. சில நூலாசிரியர் கேவலம் அஞ்ஞானத்தையே ஆனந்தமய கோசமென்கிறார்கள். இவ்வானந்தமயகோசம் காரணசரீரத்தில் அடங்கியது. இவ்வைந்து கோசங்களின் விஸ்தார நிரூபணம் ஆத்ம புராணத்தின் பத்தாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆங்கு அறிக.

இனி சூட்சும சரீரத்தின் பிரிவு சொல்லப்படுகின்றது. அப்பதினேழிலிங்கமாகிய சூட்சும சரீரம் சமஷ்டி வியஷ்டிபேதங்களால் இருவகைப்படும். முற்சொல்லிய அபஞ்சீகிருத ஆகாசமுதலிய ஐம்பூதங்களும் அப்பூதங்களின் காரியமான இந்திரிய வந்தக்கரண பிராணனாகிய பதினேழிலிங்கங்களுமான எல்லாஞ் சேர்ந்து சமஷ்டி சூட்சும சரீரமெனப்படும். அச்சமஷ்டி சூட்சும சரீரமாகிய வுபாதியுடைய சைதன்யம் ஹிரணியகர்ப்பன் பிராணன் சூத்திராத்மா என்னும் பெயர்களாற் சொல்லப்படுகின்றது. சமஷ்டி சூட்சும சரீரம் ஞானசக்தியுடைய வந்தக்கரண ஞானேந்திரியங்களோடு பொருந்தியதால் ஞானசக்தியுடையது, இக்காரணம் பற்றி அச்சரீர உபகிதசைதன்யம் ஹிரணிய கர்ப்பனெனப்படும். சமஷ்டி சூட்சும சரீரம் கிரியாசக்தியுடைய பிராணகர்மேந்திரியங்களோடு பொருந்தியதால் கிரியாசக்தியுடையது, இக்காரணம் பற்றி அச்சரீர உபகிதசைதன்யம் பிராணனெனப்படும். ஆடையிலுள்ள நூல்போல அச்சமஷ்டி சூட்சும சரீரம் பிரம்மாண்ட முழுவதும் வியாபகம், இக்காரணம் பற்றி

அச்சரீர உபகிதசைதன்யம் சூத்திராத்மா வெனப்படும். அல்லது, முற்சொன்ன அபஞ்சீகிருதமான ஐந்து பூதங்களை விட வேறாகவேயொன்று எங்கும் வியாபகமான லிங்கசரீரம் உற்பத்தியாகின்றது. அவ்விலிங்க சரீரமே சமஷ்டியெனப்படும். அச்சமஷ்டி லிங்கசரீர உபகிதசைதன்யம் ஹிரணியகர்ப்பனெனப்படும்.

## ௫௭. சமஷ்டி வியஷ்டிகளின் இலக்கணங் கூறுதல்.

இனித் தொடர்பாட்டால் சமஷ்டி வியஷ்டிகளின் இலக்கணங்கள் சொல்லப்படுகின்றன. நையாயிகரது மதத்தில்கோத்தன்மைச்ஜாதிஎல்லாக்கோவியக்திகளிலும் எப்படி அநுசூதமா(உள்ளீடா)யிருக்கின்றதோ, அப்படி எல்லாவியஷ்டி வியக்திகளிலும் உள்ளீடாயிருப்பது சமஷ்டி எனப்படும். பிரமாணம். தெஹ்ய: ஸ2 ஹவஸ்த்ஏத்ரும் ஷிம்ஹம் ஸவப்ராத்ககம் 2ஹஸ (இ-ள்.) அவ்வபஞ்சீகிருத பஞ்சபூதங்களினின்றும் எங்கும் வியாபகமான சூத்திராத்மா வெனப் பெயரிய சமஷ்டி-சூட்சும சரீரமுண்டானது. அச்சமஷ்டி சூட்சும சரீரம் பரமாத்மாவை உணர்த்துவதால் லிங்கம் (குறி) எனப்படும். இச்சமஷ்டி சூட்சும சரீரத்தைச் சாங்கிய சாஸ்திரமுடையார் மஹதத்துவமென்று சொல்லுகின்றார்கள்—. இங்கு சில நூலாசிரியர்கள் இது சொல்லுகின்றார்கள். அநேகமரங்களின் கூட்டம் வனமெனப்படுதல்போல எல்லாவியஷ்டி லிங்கசரீரங்களின் கூட்டம் சமஷ்டியெனப்படும். ஓரோர் மரத்தைப்போல ஓரோர் லிங்கசரீரம் வியஷ்டியெனப்படும். ஒருகோவியக்தி மற்ற கோவியக்திகளில் உள்ளீடாயிராமல் எப்படி அவைகளைவிட வேறாகுமோ, அப்படி ஒருலிங்க சரீரம் மற்ற லிங்கசரீரங்களில் உள்ளீடாயிராமல் அவைகளைவிட வேறாயிருக்கின்றது. இப்படி வேறாயிருத்தலே அவ்விலிங்க சரீரத்தின் கண்ணுள்ள வியஷ்டித்தன்மையாம். அவ்வியஷ்டிலிங்க சரீரவுபகிதமான சைதன்யம் தைஜசனெனப்படுகின்றது. தேஜோவிகாரமாகிய வந்தக்கரண உபகிதமாவதால் சைதன்யம் தைஜசனெனப்படும். கடத்தன்மை முதலிய ஜாதிக்கும் கடமுதலியவியக்திக்கும் தாதான்மியமுண்டாகின்றதுபோல அச்சமஷ்டிலிங்க சரீரத்திற்கும் வியஷ்டிலிங்க சரீரத்திற்குந் தாதான்மியமுண்டு. அச்சமஷ்டி வியஷ்டிலிங்க சரீரமாகிய விரண்டுபாதிகட்குத்தாதான்மியமுள தாகவே அவ்வுபகித சூத்திராத்மா தைஜசரிருவருக்கும் தாதான்மியமேயுண்டு. ஷிநுகெவஸத்ய் ஷிநு ஸத்ா கக்ஷம் தாஷாத்ம்யம் (இ-ள்) எப்பதார்த்தங்கள் வியவகார திருஷ்டியால் ஒன்றற்கொன்று வேறாயினும் வாஸ்தவத்தில் ஒரு சத்தையுடையன வாகின்றனவோ அப்பதார்த்தங்களுக்குத் தாதான்மிய சம்பந்தமுண்டு. அது நூல் ஆடை முதலியவைகளுக்கும் குணகுணி முதலியவைகளுக்கும் தாதான்மிய சம்பந்த மிருத்தற்போலும். ஹிரணிய கர்ப்பனது அபேத உபாசனையால் இப்புருஷனுக்கு அவ்விரணிய கர்ப்பவடிவத்தை யடைவதாகிய பயனுண்டாகின்றது. இக்காரணம் பற்றி இங்கு சமஷ்டி வியஷ்டி சூட்சும சரீரங்களாகிய உபாதிகளின் தாதான்மியத்தைச் சொல்லுவதுடன் அவ்விரணிய கருப்ப தைஜசரிருவருக்குந் தாதான்மியஞ் சொல்லப்பட்டது. ஆகையால் அங்ஙனஞ் சொன்னது நிஷ்பயனன்று.

## ௩அ. சமவாயத்திற் சங்கை சமாதானங்கள்.

சங்கை:—நையாயிகரால் ஜாதி வியக்திகளிரண்டிற்குந் தாதான்மிய சம்பந்தம் அங்கிகரிக்கப் படவில்லை; ஆனால் சமவாய சம்பந்தமே அங்கிகரிக்கப் பட்டிருக்கின்றது. ஆகையால் ஜாதி வியக்திகளின்தாதான்மிய திருஷ்டாந்தத்தால் சமஷ்டி வியஷ்டிகட்குத் தாதான்மிய மொப்புதல் முற்றும் விருத்தம்.

சமாதானம்:—இலட்சணப் பிரமாணங்களிரண்டினனே வஸ்துவின் சித்தியுண்டாகின்ற தென்பது சாஸ்திரக்காரர்களின் நியமம். சமவாயத்திற் கோர் லட்சணமும் பிரமாணமும் பொருந்தாதாகையால் அச்சமவாயம் அங்கிகரிக்கத்தக்கதன்று.

சங்கை:—நித்ய ஸம்பந்த: ஸமவாய: (இ-ள்) நித்திய மாகிய சம்பந்தம் சமவாய மெனப்படும். சமவாயத்திற்கு இலட்சணமும் இருக்கின்றது, சமவாயத்தினிடத்துப் பிரத்தியட்சமுதலிய பிரமாணங்களு மிருக்கின்றன. ஆகையால் அச்சமவாயத்திற்கு இலட்சணப் பிரமாணங்களில்லையென்று சொல்லுதல் நலமன்று.

சமாதானம்:—ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம (பிரஹ்மம் இரண்டற்ற ஒன்றே) என்னுந்தொடக்கத்துச் சுருதிகளால் பிரஹ்மம் அத்துவிதீயமெனப் படுகின்றது. பிரஹ்மத்தின் அத்துவிதீயத்தன்மை சமவாயம் நித்தியமென்றொப்புவதிற் சம்பவியாது. ஆகையால் அவ்வத்துவித சுருதிக்கு விரோதப்படுவதால் அச்சமவாயத்திற்கு நித்தியத்தன்மை சம்பவியாது.

சங்கை:—உமது மதத்திலும் அஞ்ஞானமும், அவ்வஞ்ஞானத்திற்குச் சேதனத்தோடுள்ள சம்பந்தமுதலிய பதார்த்தங்கள் அநாதியென்றும் பாவ (உண்மை) வடிவங்களென்று மொப்பப்பட்டிருக்கின்றன. எப்பதார்த்தங்கள் அநாதி பாவ வடிவங்களாமோ அப்பதார்த்தங்கள் நித்தியமே யாகையால் அவ்வஞ்ஞானமுதலிய நித்திய பதார்த்தங்களிருக்கவே அந்தப்பிரஹ்மத்திற்கு அத்துவிதீயத்தன்மை எங்ஙனம் பொருந்தும் ?

சமாதானம்:—வேதாந்த சித்தாந்தத்தில் அவ்வஞ்ஞான முதலியன பிரஹ்மத்தினிடத்து அத்தியஸ்தமென்றொப்பப் பட்டிருக்கின்றன, இக்காரணம் பற்றி அவ்வதிஷ்டானப் பிரஹ்மத்தைவிட அவ்வஞ்ஞான முதலியவைகள் பின்ன சத்தையுடையனவன்று. ஆகையால் அவ்வஞ்ஞான முதலியவைகளிருக்கினும் பிரஹ்மத்திற்குஅத்துவிதீயத்தன்மை பொருந்தும். அவ்வஞ்ஞானமுதலியவைகள் அநாதிபாவங்களானாலும் பிரஹ்மத்தினிடத்து ஆரோபிக்கப்பட்டன வாகையால் பிரஹ்மஞானத்தால் அவ்வஞ்ஞான முதலியவைகள் நீங்கிவிடுகின்றன. ஆரோபிக்கப்படாத அநாதிபாவ பதார்த்தங்களே நித்தியம். ஆரோபிக்கப்படாத அநாதி பாவத்தன்மை ஏக அதிஷ்டான பிரஹ்மத்தின் பாலேயுண்டு; அவ்வஞ்ஞான முதலியவைகளினிடத்தில்லை. உமது சமவாயத்தைப்போல அவ்வஞ்ஞான முதலியவைகளும் அநித்தியமே யாகையால் 'நித்திய சம்பந்தம் சமவாயம்' என்னும் சமவாயத்தின் இலக்கணம் பொருந்தாது.

அல்லது, யுக்தியால் விசாரித்துப்பார்த்தாலும் அச்சமவாயத்தின் சொரூபம் சித்தியாது. ஆங்கு நையாயிகராகிய உம்மால்குணகுணிக்கும்,கிரியை(வினை) கிரியையுடைய (வினை மு) தற்கும், அவயவ (சினை) அவயவி (முதனு) க்கும், ஜாதிவியக்திக்கும், விசேஷத்திற்கும் நித்திய திரவியங்கட்கும் சமவாய சம்பந்தம் அங்கிகரிக்கப்பட்டிருக்கின்றது. அச்சமவாயம் குணகுணி முதலிய தனது சம்பந்திகளை விட பின்னமா? அபின்னமா? முதற் பின்னபட்ச மங்கிகரிக்கின் அதன் கண்ணும் இது சொல்லுதல்வேண்டும். சமவாயம் அச்சம்பந்திகளினிடத்து எந்த சம்பந்தத்தாலிருக்கின்றது. சையோக சம்பந்தத்தாலிருக்கின்றதா? சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றதா? அல்லது வேறோர் சம்பந்தத்தாலிருக்கின்றதா? முதற் சையோகபட்சம் சம்பவியாது. ஏனெனின், இரண்டுதிரவியங்களுக்கே சையோக சம்பந்த முண்டு, அச்சமவாயம் திரவியமன்று. அப்படியே குண கர்ம முதலியனவும் திரவியமன்று. ஆகையால் சமவாயத்திற்கு அச்சம்பந்திகளினிடத்துச் சையோக சம்பந்தத்தாலிருப்பது பொருந்தாது. அச்சமவாயம் தனது சம்பந்திகளினிடத்துச் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றதென்னு மிரண்டாவது பட்சமங்கிகரிக்கின் ஆத்மாசிரயம் 1. அன்யோன்யாசிரயம் 2. சக்கிரிகை 3. அனவஸ்தை 4. என்னும் நான்கு தூஷணங்களடையப்படும். அவைகள் சொல்லப்படுகின்றன:—அச்சமவாயம் எச்சமவாயத்தால் தனது சம்பந்திகளிலிருக்கின்றதோ அச்சமவாயம் சமவாயத்திற்கு அபின்னமா? பின்னமா? அபின்ன மென்றால் ஆத்மாசிரய தோஷம் அடையப்படும். ஆண்டு அச்சமவாயத்திற்குத் தனது ஸ்திதியில் தனது அபேட்சையாகுமிஃதே ஆத்மாசிரயதோஷம். அச்சமவாயம் பின்ன மென்றால் இரண்டாவது சமவாயமும் முதற் சமவாயத்தைப்போலத் தனது சம்பந்திகளில் எச்சமவாயத்தாலிருக்கும்? அவ்விரண்டாவது சமவாயம் தன்னாலே தானிருப்பதானல் முன்போல மீண்டும் ஆத்மாசிரய (தன்னைப் பற்றுதல்) தோஷம் அடையப்படும்.அவ்விரண்டாவது சமவாயம் முதற்சமவாயத்தாலிருப்பதானல் அன்யோன்யாசிரய (ஒன்றினை யொன்று பற்றுதல்) தோஷம் அடையப்படும். முதற்சமவாயம் இரண்டாவது சமவாயத்தாலிருத்தலும், அவ்விரண்டாவது சமவாயமோ முதற் சமவாயத்தாலிருத்தலுமென்பதே அன்யோன்யாசிரய தோஷம். இவ்வன்யோன் யாசிரய தோஷத்தை நீக்கும் பொருட்டு அவ்விரண்டாவது சமவாயம் பிறிதோர் மூன்றாவது சமவாயத்தாலிருக்கின்றதென்று கொண்டால் அம்மூன்றாவது சமவாயமும் தன்னாற்றானிருந்தால் முன்போல மறுபடியும் ஆத்மாசிரயதோஷமும், இரண்டாவது சமவாயத்தாலிருந்தால் முன்போல மறுபடியும் அன்யோன்யாசிரய தோஷமும், மூன்றாவது சமவாயம் முதற் சமவாயத்தாலிருந்தால் சக்கிரிகைத்(சக்கரம் போற் சுழற்றுதல்)தோஷமும் அடையப்படும். முதற்சமவாயத்திற்குத் தனது ஸ்திதியின் பொருட்டு இரண்டாவது சமவாயத்தி னபேட்சையும், அவ்விரண்டாவது சமவாயத்திற்குத் தனது ஸ்திதியின் பொருட்டு மூன்றாவது சமவாயத்தினபேட்சையும், அம்மூன்றாவது சமவாயத்திற்குத் தனது ஸ்திதியின் பொருட்டு மறுபடியும் அம்முதற் சமவாயத்தின் அபேட்சையாகுமிஃதே சக்கிரிகாதோஷம். அச்சக்கிரிகைத் தோஷத்தை நீக்குவதற்காக அம்மூன்றாவது சமவாயத்தினது ஸ்திதியின் பொருட்டு நான்கா

வது சமவாயமும் அந்நான்காவதன் ஸ்திதியின் பொருட்டு ஐந்தாவது சமவாய முமாக,இவ்வாறு முடிவில்லாத சமவாயங்களின் தொடர்ச்சியைக் கொண்டால் அனவஸ்த்தா (வரம்பின்மை) தோஷ மடையப்படும். இதனால் அச்சமவாயம் தனது சம்பந்திகளினிடத்துச் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றதென்னு மிர ண்டாவது பக்ஷம்பொருந்தாது.

அச்சமவாயம் வேறோர் சம்பந்தத்தாலிருக்கின்ற தென்னு மூன்றாவது பக்ஷமங்கீகரித்தால், அஃதும் பொருந்தாது. ஏனெனின், சையோகம் சமவாய மென்னு மிருசம்பந்தங்களை விட வேறான தோர் மூன்றாவது சம்பந்தம் உம் மால் நிரூபிக்க முடியாது. அச்சமவாயம் சொரூப சம்பந்தமாகவிருக்கின்ற தெ ன்று சொன்னாலும்; அஃதும் பொருந்தாது. எக்காரணத்தாலெனின், சொரூப சம்பந்தத்தில் ஓர் பிரமாணமுமில்லை. ஒருகால் நீங்கள் அச்சொரூப சம்பந்தத் தைக் கொண்டால் குணகுணி முதலியவைகளுக்கு எந்தச் சமவாய சம்பந் தம் உம்மால் ஒப்பப்பட்டிருக்கின்றதோ அவைகளுக்கும் சொரூப சம்பந் தமே சம்பவிக்கக்கூடும். இதனால் சமயவாயமே பெறப்படாத தாகும்.

சமவாயம் தனது சம்பந்திகட்கு அபின்ன மென்னும் பழைய இரண் டாவது பக்ஷ மங்கீகரித்தால்; அஃதும் பொருந்தாது. ஏனெனின்,நையாயிகரா கிய உம்மால் சமவாயம்,குணகுணி முதலிய பதார்த்தங்களை விட வேறு பதார் த்தமாகவே கொள்ளப்பட்டிருக்கின்றதால் உமது சித்தாந்தத்திற்கும் கேடுண் டாகும். ஆகையால் ஒரு வகையாலும் அச்சமவாயத்திற்குச் சொரூபம் சித்தி யாது.

அல்லது, பிரமாண மில்லாமையாலும் அச்சமவாயம் பெறமுடியாது. அச் சமவாயத்தினிடத்துப் பிரத்தியக்ஷப் பிரமாணமும் பொருந்தாது. எக்கார ணத்தாலெனின், உம்மால் அந்தச்சமவாயம் அதீந்திரிய மென்றே கொள்ளப் பட்டிருக்கின்றது. அதீந்திரிய (புலனறிவுக் கெட்டா)ப் பொருளில் இந்திரிய வடிவ பிரத்தியக்ஷப் பிரமாணஞ் செல்லாது. ஘டே ரூபம் ஸமவேதம் (கடத்தில் உருவம் சமவேதம்) என்று சமவாயத்தை விஷயஞ் செய்யும் தோற் றம் கேவலம் உம்மாற்றான் கற்பிக்கப்பட்டிருக்கின்றது. சர்வ சாஸ்திர முடை யாருக்கும் அத்தோற்றம் சம்மதமன்று. ஆகையால் அந்தத் தோற்றம் பிரமாண மேயல்ல. இவ்வாறே ஏதுவாகிய லிங்கமில்லாமையால் அச்சமவாயத்தில் அநு மானப் பிரமாணமும் பொருந்தாது.

சங்கை:—ரூபீ ஘ட இதி விஶிஷ்ட பு³த்³தி⁴: விஶேஷண விஶேஷ்ய ஸம்ப³ந்த⁴ விஷயா,விஶிஷ்டபு³த்³தி⁴த்வாத்,த³ண்டீ³ புருஷ இதி பு³த்³தி⁴வத். (இ - ள்) உருவமுடையது கட மென்னும் விசிஷ்ட புத்தி (ஞானம்) உருவ விசேஷணத் தினதும் கட விசேஷியத்தினதுஞ் சம்பந்தத்தை விஷயஞ் செய்கின்றது, விசி ஷ்ட புத்தியாவதால், உலகத்தில் எதெது விசிஷ்ட புத்தியோ அதது விசேஷண விசேஷிய மென்னு மிருசம்பந்தங்களை அவசியம் விஷயஞ் செய்கின்றது, தண்டீ புருஷன் என்னும் விசிஷ்ட புத்தி தண்டமாகிய விசேஷணத்தினதும் புருஷனா கிய விசேஷியத்தினதும் சையோக சம்பந்தத்தை எப்படி விஷயஞ் செய்கின்

றதோ, அப்படி உருவமுடையது கட மென்னும் விசிஷ்ட புத்தியும் உருவகுண மாகிய விசேஷணத்தினதும் கடமாகிய விசேஷியத்தினதும் சமவாய சம்பந்தத்தையே விஷயஞ் செய்கின்றது. இவ்வாறுகிய அநுமானப் பிரமாணமிருக்க அச் சமவாயத்தினிடத்து அநுமானப்பிரமாண மில்லையென்று சொல்லுதல் நல மன்று.

சமாதானம்:—முற்சொன்ன முறைப்படி அச்சமவாயத்தின் சொரூபமே பெறமுடியாது. இவ்வநுமானத்தால் உருவகடங்களுக்குத் தாதான்மிய சம்பந்தமே சித்திக்கும்; சமவாய சம்பந்தம் சித்தியாது. இப்படி இலட்சப்பிரமாணங்களால் நிரூபிக்கமுடியாதது பற்றி அச்சமவாயம் பெறமுடியாது. அச்சமவாயம் பெறப்படாதாகவே ஜாதி வியக்திகட்குத் தாதான்மிய சம்பந்தமே பெறப்படும். ஜாதி வியக்திகளின் தாதான்மிய திருஷ்டாந்தத்தால் சமஷ்டி வியஷ்டி சூட்சும சரீரங்களின் தாதான்மியம் பொருந்தும்.

இங்கு சில நையாயிகர் அச்சமவாயத்தை அதீந்திரிய மென்றொப்பியிருக்கின்றார்கள். சில நையாயிகர் அச்சமவாயத்தைப் பிரத்தியட்ச மென்றொப்பியிருக்கின்றார்கள். சில நையாயிகர் அச்சமவாயத்தை ஒன்றென்றும் சில நையாயிகர் பலவென்று மொப்பி யிருக்கின்றார்கள். அவ்வெல்லா நையாயிகரது மதங்கள் நியாயப் பிரகாசத்தின் நான்காவது பரிச்சேதத்தின் சமயவாய நிரூபணத்தில் விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. அறிய விரும்புகிறவர்கள் ஆங்கு அறிந்து கொள்ளுக.

சங்கை:—முன் உம்மால் சமஷ்டி சூட்சும சரீரத்திற்கும் வியஷ்டி சூட்சுமசரீரத்திற்கும் தாதான்மியம் சொல்லப்பட்டது. அது பொருந்தாது. ஏனெனின், காரியத்திற்குத் தனது உபாதான காரணத்தோடு தாதான்மியமுண்டு. அது ஆடையாகிய காரியத்திற்குத் தனது நூலாகிய உபாதான காரணத்தோடு தாதான்மிய முண்டாதற் போலாம். வியஷ்டி சூட்சும சரீரத்திற்கு அச்சமஷ்டி சூட்சும சரீரம் உபாதானமன்று; ஆனால் மேற்சொல்லியபடி ஆகாச முதலிய ஐம்பூதங்களே உபாதானமாகையால் சமஷ்டி வியஷ்டி சூட்சும சரீரங்களுக்குத் தாதான்மியங் கூறுதல் நலமன்று.

சமாதானம்:—வியஷ்டி சூட்சும சரீரத்திற் குபாதானமாகிய அபஞ்சீகிருத சூட்சும பூதங்களே சமஷ்டி சூட்சும சரீரத்திலடங்கியிருக்கின்ற தாகையால் அச்சமஷ்டி சூட்சும சரீரத்தில் வியஷ்டி சூட்சும சரீரத்திற்குபாதான காரணத் தன்மை சம்பவிக்கும். உபாதான உபாதேய பாவங்கள் சம்பவிக்கவே அவ்விரண்டற்கும் தாதான்மியமுஞ் சம்பவிக்கும்.

## ௩௯. சூட்சும சரீரத்தைப் புரியஷ்டவடிவமாகச் சொல்லுதல்.

இப்போது மேற்சொன்ன சூட்சும சரீரத்தைப்புரியஷ்டகமாகச்சொல்லப் படுகின்றது. முற்சொன்ன சூட்சும சரீரமே அவித்தை 1. காமம் 2. கர்மம் 3. என்னு மிம்மூன்றுடன் கூடியதாய்ப் புரியஷ்டகமென்று சொல்லப்படுகின்றது. அஷ்டபுரிகளின் கூட்டத்திற்குப் புரியஷ்டகமென்றபெயர், அவ்வஷ்டபுரிகளாவன:—ஐந்து ஞானேந்திரியங்கள் 1. ஐந்துகர்மேந்திரியங்கள் 2. நான்கு அந்தக்

கரணங்கள் 3. ஐந்து பிராணன்கள் 4. ஐந்து சூட்சும பூதங்கள் 5. அவித்தை 6. காமம் 7. கர்மம் 8—இந்திரியம் அந்தக்கரணம் பிராணன் ஐம்பூதம் என்பவற்றை முற்சொல்லப்பட்டிருக்கின்றன. அவித்தை காமம் கர்மமென்னு மூன்றும் இனி சொல்லப்படுகின்றன. அவித்தையென்னுஞ் சப்தத்தால் காரிய அவித்தையைக் கொள்ளல்வேண்டும்;ஒன்றினிடத்து வேற்றுப்புத்தியைக் காரியாவித்தை எனப் படும். அக்காரியாவித்தையும் நான்கு விதம். நித்தியமல்லாததில் நித்தியபுத்தி 1. சுசியல்லாததில் சுசிபுத்தி 2. சுகமல்லாததில் சுகபுத்தி 3. ஆத்மாவல்லாததில் ஆத்மபுத்தி 4. கரும உபாசனைகளுக்குப் பயனுவதால் நித்தியமல்லாதனவான சுவர்க்கம் பிரம்மலோக முதலியவைகளினிடத்துள்ள நித்தியபுத்தி முதலாவது அவித்தையெனப்படும். மலமூத்திராதிகளோடு நிறைந்திருப்பதால் சுசியல்லாத னவான தன் சரீரத்திலும் ஸ்திரீ புத்திராதிகளது சரீரங்களிலும் சுசிபுத்தி இர ண்டாவது அவித்தையெனப்படும். பீடையாகிய துக்கத்தில் சுகபுத்தியும், அச் சுகத்திற்குச் சாதனங்களான பிரம்ம ஹத்தி சுராபான முதலியவைகளிலுள்ள சுகசாதனபுத்தி மூன்றாவது அவித்தை யெனப்படும். ஆத்மா வல்லாதனவாகிய தேகேந்திரியாதிகளில் நான் என்னுமாத்ம புத்தி நான்காவது அவித்தையெனப் படும். இவ்வஸ்து நமக்குக் கிடைக்கவேண்டுமென்னு மந்தக்கரண விருத்தி விசே ஷம் ராகமெனப்படும் அந்தராகமே காமம். கர்மமோ சஞ்சிதம் 1. ஆகாமியம் 2. பிராரப்தம் 3 என்னும் பேதத்தால் மூவகைப்படும். அம்மூவகைக் கர்மமே விகி தம் 1. நிஷித்தம் 2. என்னும் பேதத்தால் மீண்டு மிருவகைப்படும். சுருதி ஸ்மி ருதியாகிய சாஸ்திரங்கள் எக்கருமத்தைச்செய்ய விதித்திருக்கின்றனவோ அக்கர்மம் விகிதமெனப்படும். அவைசந்தியாவந்தனம் அக்கினி ஹோத்திர முத லிய கர்மங்களைப்போலும். சுருதி ஸ்மிருதியாகிய சாஸ்திரங்கள் எக்கர்மத்தை விலக்கியிருக்கின்றனவோ அக்கர்மம் நிஷித்தமெனப்படும். அவைபிரம்ம ஹத்தி சுராபானமுதலிய கர்மங்களைப்போலும் விகித கர்மங்களிலிருந்துபுருஷனிடத்து தரும (அற) முண்டாகின்றது. நிஷித்தகர்மங்களிலிருந்து அதர்ம (பாப) முண் டாகின்றது. தர்மாதர்மங்களையே சாஸ்திரத்தில் அதிருஷ்டம் அபூர்வமெனப் பட்டிருக்கின்றன. தர்மமாகிய அதிருஷ்டம் புருஷனுக்குச் சுகமாகிய பயனை அளிக்கின்றது, அதர்மமாகிய அதிருஷ்டம் புருஷனுக்குத் துக்கமாகிய பயனை விளைவிக்கின்றது.

## ௪௦. கருமங்களின் பேதம் சொல்லுதல்.

இனி சஞ்சிதம் ஆகாமியம் பிராரப்தமென்னுமூன்றின் சொரூபம்சொல்லப் படுகின்றது. முற்பிறப்பில்அல்லது இப்பிறப்பிற் செய்யப்பட்டஎக்கர்மம்தன்பய னைக்கொடுக்காமல் கேவலம் அதிருஷ்டமாகவே யிருக்கின்றதோ அக்கர்மம் சஞ் சிதமெனப்படும். தத்துவஞானத்திற்குப் பிறகு செய்யப்பட்ட கர்மம் ஆகாமிய மெனப்படும். சஞ்சித கர்மத்தினின்றும் புறம்போந்து எக்கர்மம் இவ்வர்த்தமா ன சரீரத்தை ஆரம்பிப்பதாகின்றதோ, அக்கர்மம் பிராரப்தமெனப்படும்.

இப்போது தொடர்ச்சி பற்றி அக்கர்மங்களின் நாசஞ்சொல்லப் படுகின் றது. சஞ்சித ஆகாமியமென்னுமிரண்டுகர்மங்கள் பயனை அனுபவிப்பதாலாவது விரோதமான கர்மத்தாலாவது, பிரஹ்ம ஞானத்தாலாவது நாசமாகின்றன.

கிரியையாகிய கர்மம் பயனை அனுபவிப்பதல்லாமல் தானே நாசமாய் விடுவதா னாலும் இக்குக் கர்மசப்தத்தால் அக்கர்மத் தாற்றோன்றும் தர்ம அதர்மமாகிய வதிருஷ்டம் கொள்ளல்வேண்டும். அவ்வதிருஷ்டம் அனுபவித்தல் முதலிய வற்றி னாலே நாசமாகின்றது. பிராரப்தகர்மமோ கேவலம் பயனை நுகர்வதாற்றான் நாச மாகின்றது; தத்துவஞானத்தாலாவது விரோதமான கர்மத்தாலாவது நாசமா காது. ஃவஶ்யமெவ ஹொக்தவ்யம் க்ரூதம் கம்ம ஶுஹாஶுஹம்। நாஹுக்தம் க்ஷீயதெ கம்ம கல்பகொடிஶதைரவி (இ-ள்.) புருஷனாற் செய்யப்பட்ட சுபகர்மமாவது அசுபகர்மமாவது அவசிய மனுபவிக்கப்படுகின்றது, நூறுகோ டிகற்பங்களானாலும் அனுபவிப்பதன்றி அக்கர்மங்கள்நாசமாகா—என்னுந்தொ டக்கத்து வசனங்கள் போகத்தால் அக்கர்மத்தின் நாசஞ் சொல்லியிருக்கி ன்றன. ப்ராயஶ்சித்தைரவெதெ்யநொயடு ஜாநக்ரூதம் ஹவெக (இ-ள்.) அஞ்ஞானத்தாற் செய்யப்பட்ட பாபம் பிராயச்சித்தங்களால் நீங்குகின்றது, என்னுந்தொடக்கத்து வசனங்கள் பிராயச்சித்தமாகிய விரோதி கர்மத்தாலும் அப்பாபகர்மத்தின் நாசஞ்சொல்லுகின்றன. இதன் கண் இத்துணை விசேஷ முண்டு. பாபகர்மங்கள் பிராயச்சித்தமாகிய விரோதிகர்மத்தால் நாசமாகின்றன, புண்ணியகர்மங்களும் கர்மநாச நதியின் ஜலத்தைப்பரிசித்தல் முதலிய விரோதி கர்மத்தால் நாசமாகின்றன. க்ஷீயந்தெ வாஸ்ய கம்மாணி தஸ்மிந் த்ருஷ்டெவராவரெ। ஜ்ஞாநாக்நிஃ ஸவ்வ கம்மாணி ஹஸ்மஸாத்குருதெ தயா। (இ-ள்.)ஃஹம் ஸ்ராஸ்மி (நான் பிரஹ்ம) மென்னும் பிரஹ்ம சாட்சாத்காரமுண்டாக வித்வா னுக்குப் பிராரப்தகர்மங்களைவிட வேறான எல்லா கர்மங்களும நாசமாகின்றன. ஞானமாகிய அக்கினி சர்வகர்மங்களையும் பொடிபடுத்துகின்றது, என்னுந்தொட க்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்கள் பிரஹ்ம ஞானத்தாலும் அக்கர்மங்களின் நாசஞ்சொல்லியிருக்கின்றன. ப்ராரப்யம் ஹொமதொ நஶ்யெக। ஹொமெ நக்வி தஶெரக்ஷ வயிக்வா ஸா வஜ்யதெ (இ-ள்.) பிராரப்தகர்மம் கேவலம் போ கத்தாற்றான் நிவிருத்தியாகின்றது. வித்வான் பயன் நுகர்ச்சியால் பிராரப்தகர் மங்களை நாசஞ்செய்து சரீரம் விழுந்த பிறகு நிர்விசேஷ பிரஹ்ம வடிவத்தை அடைகின்றான். இதுமுதலிய வசனங்கள் பிராரப்தகருமத்திற்குக் கேவலம் போ கத்தானே நாசஞ்சொல்லுகின்றன. ஆகையால் அனுபவித்தல் முதலியவைக ளால் கருமத்தின் நாசம் முற்சொன்ன சுருதி ஸ்மிருதியாதிய பிரமாணங்களா னே பெறப்படும்.

சங்கை:—சஞ்சிதகர்மங்கள் பிராயச்சித்தத்தாலாவது தத்துவஞானத்தா லாவது நாசமாகுக; ஆனல் தத்துவஞானத்திற்குப் பிறகு செய்யப்பட்ட ஆகா மியகர்மங்கட்கு அத்தத்துவஞானத்தால் நாசம் எங்ஙனம் சம்பவிக்கும்?

சமாதானம்:—பிரஹ்மஞானத்தின் பிரபாவத்தால் ஞானியைஅவ்வாகாமிய கர்மங்கள் பற்ற மாட்டா. இக்காரணத்தால் அவ்வாகாமியகர்மங்கள்தத்துவவே த்தாவிற்குப் பயனையுண்டாக்கா தென்பதே அவ்வாகாமிய கர்மங்களின்நாசமெ ன்றறியவேண்டும். இவ்வார்த்தை ஸ்ரீ வியாசபகவானாலும் பிரஹ்ம சூத்திரத்தில் சொல்லப் பட்டிருக்கின்றது. சூத்திரம். தஃயிமெ உத்தர வூவ்வயொ ரஶ்லெஷவிநாஶெள

ஶ்லேஷ விநாஶௌ தத்வ்யபதேஶாத் (இ-ள்.) பிரஹ்ம சாட்சாத்காரமுண்டாக ஞானிக்கு முன்னுள்ள சஞ்சித பாபகர்மங்கள் நாசமாய் விட்டன. ஞானத்திற்குப்பிறகு செய்யப்பட்ட ஆகாமியபாபங்கள் ஞானியைப்பற்றவேமாட்டா. இவ்விருவார்த்தைகள் சுருதியிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. தத்யதேஷீகாதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேதைவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே (இ-ள்) முஞ்சியின் இஷீகையி(நடுத்தண்டி)லுள்ள பஞ்சு அக்கினியை யடைந்த சீக்கிரமே எப்படி தக்தமாய் விடுகின்றதோ,அப்படி இவ்வித்வானது முன்னிருந்த சர்வசஞ்சித பாபகர்மங்கள் பிரஹ்ம ஞானமாகிய அக்கினியால் சீக்கிரமே தக்தமாய் விடுகின்றன. இச்சுருதி தத்துவவேத்தாவிற்கு முன்னுள்ள சஞ்சித பாபகருமங்களின் நாசத்தைச் சொல்லுகின்றது. யதா புஷ்கரபலாஶ ஆபோ ந ஶ்லிஷ்யந்த ஏவம் விதி பாபம் கர்ம ந ஶ்லிஷ்யதே (இ-ள்) ஜலத்திலுள்ள தாமரையிலையை அச்சலம் எப்படி ஒட்டுவதில்லையோ, அப்படி வித்வானைப் பாபகர்மங்களொட்ட மாட்டா. இச்சுருதி வித்வானை ஆகாமிய பாபகர்மங்களொட்டுவதில்லையென்பதைச் சொல்லுகின்றது. மேற்சொன்ன சூத்திரத்திலும் சுருதியிலுமுள்ள பாபசப்தம், புண்ணியத்திற்கும் உபலட்சணமாக அறிந்துகொள்ளுக. எக்காரணத்தானெனின், ஸுஹ்ருத: ஸாது க்ருத்யம் த்விஷந்த: பாப க்ருத்யம் (நல்ல இருதய முடையவர்கள் புண்ணிய கர்மத்தையும் துவேஷிப்பவர்கள் பாபகர்மத்தையும்)என்னுஞ் சுருதியில் தத்துவவேத்தாவின் ஆகாமியபுண்ணியகர்மங்களைச் சேவைசெய்யும் பக்தர்களடைகின்றார்களென்றும்,பாபகர்மத்தைத்துவேஷிக்கும் நிந்தகர்களடைகின்றார்களென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. இதனால் பாபசப்தத்திற்குப் புண்ணிய பாபமென்னு மிரண்டையுங் கொள்ளுதல் தகுதி.

அன்றியும், பிரஹ்ம சாட்சாத்காரத்தால்வித்வானுக்குக் கர்மங்கள் மாத்திரமே நாசமாகிறதில்லை;ஆனால் அவித்தை முதலிய பஞ்சகிலேசங்களும்நாசமாகின்றன. யோகசாஸ்திரத்தில் அவித்தை 1. அஸ்மிதை 2. ராகம் 3. துவேஷம் 4. அபினிவேசம் 5. என்று பஞ்சகிலேசங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. காரிய அவித்தை, காரண அவித்தையென்று அவித்தை இருவகைப்படும். அவ்விருவகை அவித்தைகள் முற்சொல்லப் பட்டிருக்கின்றன. அஹங்காரத்திற்குக்காரணமாகிய சூட்சும அவஸ்தை அஸ்மிதை எனப்படும். இந்த அஸ்மிதையினையே சாங்கியமதமுடையாரும் யோகமதமுடையாரும் மஹதத்துவமென்று சொல்லுகின்றார்கள். ஆனால் வேதாந்த சாஸ்திரத்தில் அவ்வஸ்மிதை சாமானிய அஹங்காரமென்று சொல்லப்படுகின்றது. இவ்வஸ்து எமக்குக் கிடைக்குக என்னுமந்தக் கரண விருத்திவிசேஷம் ராகமெனப்படும். குரோதமென்பது துவேஷத்திறகாம். யான் எனதென்றுகொள்ளப்பட்டதேக முதலியபதார்த்தங்களின் தியாகத்தைச் சகியாமை அபினிவேசமெனப்படும். இப்பஞ்சகிலேசங்களின் விஸ்தார நிருபணம் ஆத்மபுராணத்தின் எட்டாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அவைகளை ஆங்கு அறிந்துகொள்ளுக. இப்பஞ்சகிலேசங்களும் பிரஹ்மஞானத்தானே நிவிருத்தியாகின்றன, ஸ்மிருதி. ஜ்ஞாத்வா தேவம் ஸர்வ

வ்ர தெஸவ-ஃ வாமெஶஃ (இ-ள்.) இவ்வதிகாரி சுவயம் பிரகாசமாகிய பிரஹ்மத்தை 'நான் பிரஹ்மம்'என்று சாட்சாத்கரித்து அவித்தை முதலிய பஞ்சகிலேசங்களாகிய பாசங்களினின்றும் விடுபடுகின்றான். இதுகாறும் சூட்சும சரீரத்தின் உற்பத்தி வகை சொல்லப்பட்டது.

## சக. ஸ்தூல பூதங்களினுற்பத்தி சொல்லுதல்.

இனி ஸ்தூல பூதங்களினுற்பத்தி வகை சொல்லப்படுகின்றது. பஞ்சீகரண வடிவத்தை யடைந்துள்ள பஞ்ச பூதங்கள் ஸ்தூல பூதங்களெனப் படுகின்றன. அத்தூல பூதங்கள் மேற்சொன்ன அபஞ்சீகிருதபஞ்சபூதங்களின் தாமசக் கூற்றினின்று முண்டாகின்றன. அப்பஞ்ச பூதங்களின் பஞ்சீகரணம் இவ்வகையாம்:—தமக்கூற்றுப் பிரதானமாகிய முற்சொன்ன ஐந்து சூட்சும பூதங்களில் ஒரோர் பூதத்தை முதலிற் சமானமாக இரண்டிரண்டு கூறு செய்க. அவ்விரு கூறுகளில் ஒரோர் கூறைத்தனியே வைத்து இரண்டாவது கூறை மீண்டும் நன் நான்கு கூறுகள் செய்க. அந்நந்நான்கு கூறுகளை முறைப்படி இரண்டாவதான நான்கு பூதங்களின் அரைக் கூறுகளுடன் கலத்தல் பஞ்சீகரணமாம். எப்படியெனின்:—ஆகாசத்தைச் சமமாக இரு கூறுகளாக்கி அவ்விரண்டனுள் ஒரு கூறை வேறுவைத்து அவ்விரண்டாவது கூறை மீண்டும் நான்கு கூறுகளாக்கி அந்நான்கு கூறுகளில் முதற்கூறை வாயுவிலும் இரண்டாவது கூறைத்தேயுவிலும் மூன்றாவது கூறை ஜலத்திலும் நான்காவது கூறைப் பிருதிவியிலும் கலக்கப்பட்டது. இப்படியே வாயுவைச் சரிவிரு கூறுகளாக்கி ஒரு கூறைத் தனியே வைத்து மறு கூறை நான்கு கூறுகளாக்கி அதில் முதற்கூறை ஆகாயத்திலும், இரண்டாவது கூறைத் தேயுவிலும், மூன்றாவது கூறை ஜலத்திலும், நான்காவது கூறைப்பிருதிவியிலும் சேர்க்கப்பட்டது. இப்படியே தேயுமுதலிய மூன்று பூதங்களினு மறிந்து கொள்ளல் வேண்டும். இவ்வாற்றால் ஆகாய முதலிய வைம் பூதங்களின் அரை அரைக் கூறுகளோ தமதெனவும் மற்ற அரை அரைக்கூறுகள் வாயு முதலிய நான்கு பூதங்களின் மயமெனவும் பெறப்படுகின்றன.

சில நூலாசிரியரோ ஒரோர் பூதத்தை விஷமமாக இரண்டிர்ண்டு கூறுசெய்து, அஃதாவது ஒரு கூறை நாற் கூறுவடிவாகவும் மறுகூறை ஒருகூறுவடிவாகவுஞ் செய்து அவ்வொரு கூறாகிய அற்பக்கூறை மீண்டும் ஐந்து பகுதி செய்து அவ்வைந்து பூதங்களில் முறைப்படி ஒரோர் பகுதியைச் சேர்த்தல் பஞ்சீகரணமென்றொப்பியிருக்கின்றார்கள். இப்பஞ்சீகரண வகை ஆத்ம புராணத்தின் பதினோராவது அத்தியாயத்தில் தெளிவாய் எழுதப்பட்டிருக்கின்றது. அதனை ஆங்கு அறிந்து கொள்ளுக.

இவ்விடத்தில் வாசஸ்பதி மிசிரரது மதமிது:—சாந்தோக்கிய உபநிஷத்தில் தேயு ஜலம் பிருதிவியென்னு மூன்று பூதங்களினுற்பத்தியைச் சொல்லி தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதெமெகைகம் கரவாணி (அம்மூன்றையு மொன்றாகக் கலக்கின்றேன்) என்னுஞ் சுருதியால் அத்தேயுவாதிய மூன்றுபூதங்களுக்குத் திரிவிருத்கரணமே (மூன்றா யமைந்தது) சொல்லப்பட்டிருக்கின்றது. தேயுவொன்றினைச் சரிவிரு கூறுகளாக்கி அவ்விரு கூறுகளுள் ஒன்றைத் தனியேவை

த்து மற்ற கூறை மீண்டு மிருகூறுகளாக்கி அவ்விரு கூறுகளில் ஒரு கூறை ஜலத்திலும் மற்றொரு கூறைப் பிருதிவியிலுஞ் சேர்க்கப்பட்டது. இவ்வாறே ஜலத்திலும் பிருதிவியிலு மறிந்து கொள்ளுக. இதற்குத் திரிவிருத்கரணமென்று பெயர். இந்தத் திரிவிருத்கரணத்தில் மேற்சொன்ன சுருதியும் வியாசபகவானது சூத்திரமும் பிரமாணம்.

முற்சொன்ன பஞ்சீகரணத்தில் ஓர் சுருதி சூத்திரப் பிரமாணமு மில்லையாகையால் அப்பஞ்சீகரணத்தைச் சொல்லுதல் நலமன்று. ஆசாரியரோ இப்படி சொல்லியிருக்கின்றார்:—தைத்திரிய சுருதியில் ஆகாச முதலிய பஞ்சபூதங்களினுற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. அச்சுருதியின் விரோதத்தை நீக்கும் பொருட்டுச் சாந்தோக்கிய சுருதியிலும் ஆகாச வாயுக்களின் உற்பத்திக்குப் பிறகே தேயுவாதிய முப்பூதங்களினுற்பத்தி கொள்ளல்வேண்டும். சாந்தோக்கிய சுருதியிலும் வியாச சூத்திரத்திலும் எநதத் திரிவிருத்கரணம் சொல்லப்பட்டதோ அந்தத் திருவிருத்கரணம் பஞ்சீகரணத்திற்கும் உபலட்சணமாம். ஓர்கால் அப்பஞ்சீகரணத்தை யொப்பாவிடின் ஆகாசவாயுக்களின் குணங்களான சப்த ஸ்பரிசங்கள் பிருதிவி முதலியவற்றில் தோற்றலாகாது; ஆனால் பிருதிவி முதலியவற்றில் சப்த ஸ்பரிச குணங்கள் தோற்றுகின்றன. ஆகையால் பிராமாணிக மாவதால் பஞ்சீகரணம் அவசிய மங்கீகரிக்கவேண்டும்.

சங்கை:—முற்சொன்ன பஞ்சீகரணப்படி சர்வ பூதங்களுக்கு மொரேவடிவ மங்கீகரித்தால் இது பிருதிவி இது ஜலமென்னும் விசேஷ வியவகாரம் சம்வியாதாகும்.

சமாதானம்:—பஞ்சீகரண முண்டாகியும் அப் பிருதிவியாதி பூதங்களில் தத்தங் கூறுகள் அதிகம், இதர பூதங்களின் கூறுகள் சொற்பம். அவ்வதிக கூறுகளைக் கொண்டே இது பிருதிவி இது ஜலமென்னும் விசேஷ வியவகாரம் நிகழ்கின்றது. ஆகையால் அப்பஞ்சீகரணத்தை யொப்புவதிலும் விசேஷ வியவகாரம் சம்பவிக்கும். இவ்வேற்றுமை யினையே வைஶேஷ்யாத்து தத்வாதஸ்தத்வாத: (விசேஷமிருப்பதால் அவ்வாதம்) என்னுஞ் சூத்திரத்தில் ஸ்ரீ வியாசபகவானும் ஸ்ரீ பாஷியக்காரராலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

இனி மேற்சொன்ன பஞ்சீகரணத்திற்குப் பிரயோஜனஞ் சொல்லப்படுகின்றது. இவ்வாறு அவ்வாகாச முதலிய வைம்பூதங்களுக்குப் பஞ்சீகரண முண்டான பிறகு பஞ்சீகரிக்கப்பட்ட ஆகாசத்தினிடத்தோ சப்தகுணமொன்று வெளிப்பட்டது. பஞ்சீகரிக்கப்பட்ட வாயுவினிடத்து சப்த ஸ்பரிசமென்னு மிரு குணங்கள் வெளிப்பட்டன. பஞ்சீகரிக்கப்பட்ட தேயுவினிடத்து சப்த ஸ்பரிச ரூபமென்னு முக்குணங்கள் வெளிப்பட்டன. பஞ்சீகரிக்கப்பட்ட ஜலத்தில்சப்த ஸ்பரிச ரூப ரச மென்னும் நான்குகுணங்கள் வெளிப்பட்டன. பஞ்சீகரிக்கபட்ட பிருதிவியினிடத்து சப்த ஸ்பரிச ரூப ரச கந்த மென்னு மைந்து குணங்கள் வெளிப்பட்டன. சப்த முதலிய வைந்து குணங்கள் முறையாகப் பஞ்சீகரிக்கப்படாத ஆகாச முதலிய பூதங்களினிடத்திருந்தன வென்றாலும் அவ்வபஞ்சீகிருத பூதங்களினிடத்துச் சப்த முதலிய குணங்கள் பிரத்தியட்ச யோக்கியமா

யில்லை. பஞ்சீகரண முண்டான பிறகு பஞ்சீகரிக்கப்பட்ட பூதங்களினிடத்து அச்சப்தாதி குணங்கள் பிரத்தியட்ச யோக்கியமாயின. இஃதே அச்சப்த பூத லியவைகளில் வெளிப்படுந் தன்மையாம். அவ்வைந்து குணங்களிலும் ஓரோர் பூதத்தின் ஓரோர்குணமே அசாதாரண மென்றறிய வேண்டும். மற்றகுணங்களை காரணங்களினின்று மடையப்பட்டன வென்றறிய வேண்டும். அது பிருதிவியில் தனதசாதாரண குணம் கந்த மொன்றும் சப்த முதலிய மற்ற நான்குகுணங்கள் ஆகாச முதலிய காரணங்களின் குணங்கள் போலவாம். இப்படியே ஜல முதலியவைகளிலு மறிந்து கொள்ளல் வேண்டும்.

பஞ்சீகரிக்கப்பட்ட பிருதிவி முதலிய பூதங்களினின்றும் பிரம்மாண்டமும் அந்தப் பிரமாண்டத்திலடங்கிய மேலேழ்உலகங்களும் கீழேழ்உலகங்களுமாகிய பதினன்கு உலகங்களுண்டாயின. பிரம்மாண்டமாகிய விராட் புருஷனிடத்தினின்றும் மநுசதரூபரென்னு மிருவருற்பத்தியானர்கள். அவ்விருவர்களினின்றும் மனிதர் முதலியோரது சிருஷ்டி யுண்டானது. எவ்வகையாக அவ்விராட் புருஷனிடத்தினின்றும் மனுசதரூபரதுற்பத்தியும், அம்மநுசதரூபரிடத்தினின்றும் மனிதர் முதலியோரது சிருஷ்டியு முண்டானதோ அவ்வகை ஆத்ம புராணத்தின் நான்காவது அத்தியாயத்தில் விரிவாய் நிரூபிக்கப்பட் டிருக்கின்றது. ஆங்கு அறிந்து கொள்க.

## சஉ. ஸ்தூல சரீரத்தினுற்பத்தியும் பிரிவுங் கூறுதல்.

பிரம்மாண்டத்தி லடங்கியதான பஞ்சீகரிக்கப்பட்ட பிருதிவியினின்றும் நெல் யவ முதலிய வோஷதிக ளுற்பத்தியாயின. அவ்வோஷதிகளி னின்றும் அன்ன முண்டானது.அவ்வன்னத்தை ஸ்திரீ புருஷர்களுண்ணப்புருஷசரீரத்தில் அவ்வன்னம் ரேதஸ் என்னும் சுக்கிலமாகிய பரிணமத்தை யடைந்தது, ஸ்திரீ சரீரத்தில் அவ்வன்னம் சோணிதமாகிய பரிணமத்தை யடைந்தது. ஆண்டுப் புருஷ வீரியம் சுக்லமும் ஸ்திரீ வீரியம் சோணிதமு மெனப்படும். பிதா மாதாக்களின் சுக்ல சோணிதங்களினின்றும் மனிதர் முதலியோரது ஸ்தூல சரீரங்களுண்டாயின. அத்தூல சரீரமும் ஜராயுஜம் 1. அண்டஜம் 2 சுவேதஜம் 3 உற்பிஜம் 4. என்னும் பேதத்தால் நான்கு வகைப்படும். மாதாவி னுதரத்தில் கர்ப்பத்தை மறைக்குந் தோல் விசேஷம் ஜராயு வெனப்படும். அந்த ஜராயு வினின்று முண்டாகும் சரீரங்கள் ஜராயுஜ மெனப்படும். அவை மனிதர் பசு குதிரை ஆடு முதலிய சரீரங்களைப் போலவாம். அண்டத்தினின்று முண்டாகும் சரீரங்கள் அண்டஜ மெனப்படும். அவை பறவை பாம்பு முதலிய சரீரங்களைப் போலவாம். உஷ்ண விசேஷமாகிய வியர்வையினின்று முண்டாகும் சரீரங்கள் சுவேதஜ மெனப்படும். அவை பேன், கொசுகு, மூட்டுப்பூச்சி, புழு முதலியவைகளைப் போலும். பூமியைப் பிளந்து கொண்டு தத்தம் விதைகளினின்று முண்டாகும் சரீரங்கள் உற்பிஜ மெனப்படும். அவை மரம், கொடி, புல் முதலிய சரீரங்களைப் போலும். மனிதர் முதலியோரது சரீரங்களைப்போல மரம் கொடி முதலியவைகளும் ஜீவாத்மாவின் சரீரங்களே. இவ்வார்த்தை நியாயப்பிரகாசத்தின் இரண்டாவது பரிச்சேதத்தில் பிருதிவி நிருபணத்தில் விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது அதனை ஆங்கு அறிந்து கொள்ளுக.

இனித் தூல சரீரத்தின் பேதம் வேறுவகையாகச் சொல்லப்படுகின்றது. மேற்சொன்ன அத்தூல சரீரம் சமஷ்டி 1. வியஷ்டி 2. என்னும் பேதத்தால் மீண்டும் இருவகைப்படும். முற்சொன்ன பஞ்சிகிருத பஞ்சமகா பூதங்களும், அப்பூதங்களின் காரியமான பிரம்மாண்டமும், அந்தப் பிரமாண்டத்திற்குள்ள டங்கிய காரியங்களுமாகிய வெல்லாஞ்சேர்ந்து சமஷ்டித் தூலசரீரமெனப்படும். அல்லது அநேக கோவியக்திகளில் கோத்தன்மைச்சாதி உள்ளீடா யிருப்பது போல, எச்சரீரம் சர்வவியஷ்டித் தூலவியக்திகளி லுள்ளீடாயும் பஞ்சிகிருத பஞ்சமகாபூதங்களின் காரியமாயும்,சர்வப் பிரம்மாண்ட வடிவாயும்,வியாபகமா யுமிருக்கின்றதோ அச்சரீரம் சமஷ்டித் தூலசரீர மெனப்படும். அல்லது அநேக மரங்களின் கூட்டம், எப்படி வனமெனப்படுமோ அப்படி சர்வவியஷ்டித் தூல சரீரங்களின்கூட்டம் சமஷ்டித்தூலசரீர மெனப்படும்.அப்படிப்பட்ட சமஷ்டித் தூலசரீரத்தா லுபகிதமான சைதன்யம் விராட்டு வைஸ்வானர னென்னு மிரு பெயர்களாற் சொல்லப்படுகின்றது. பலவகைப்பட்ட பிரகாச முடையதால் அதனை விராட்டென்பர். சர்வ நரர்களி னபிமானியாவதால் அதனை வைஸ்வா னர னென்பர். ஒரு கோவியக்தியை விட மற்றொரு கோவியக்தி வேறாயிருப்பது போல ஒன்றற்கொன்று வேறுபாடுள்ள தனித்தனி தூலசரீரம் வியஷ்டித் தூல சரீரமெனப்படும். அவ்வியஷ்டித் தூலசரீரத்தா லுபகிதமான சைதன்யம் விஸ்வ னென்னும் பெயராற் சொல்லப்படுகின்றது. அச்சைதன்யம் சூட்சும சரீரத்தை விடாமலே தூலசரீரத்திற் பிரவேசிக்கின்றது, இக்காரணம் பற்றி அதனை விஸ்வ னெனப்படும். எப்படி கட முதலிய வியக்திக்கும் கடத்தன்மை ஜாதிக்கும் ஒன் றற்கொன்று தாதான்மியமுண்டாகின்றதோ, அப்படி இச்சமஷ்டித் தூலசரீரத் திற்கும் வியஷ்டித்தூல சரீரத்திற்கும் ஒன்றற் கொன்று தாதான்மியமே யுண்டு. அவ்விருவுபாதிகளுக்குந் தாதான்மிய முண்டாகவே வைஸ்வானரவிஸ்வரென்னு மிரு உபகித சைதன்யங்களுக்குந் தாதான்மியமேயுண்டு சமஷ்டித்தூல சரீரத் திலடங்கியதான பஞ்சிகிருதபஞ்சபூதங்களின் காரியத்தன்மை இவ்வியஷ்டித் தூல சரீரத்திலுமுண்டு. உபாதான காரணத்திற்கும் உபாதேய காரியத்திற்கும் ஒன்றற் கொன்று தாதான்மியம் உலகத்தில் வெளிப்படையே,இதனால் அவ்விரு தூலசரீரங்களுக்குந் தாதான்மியம் பொருந்தும். இவ்விஸ்வ னென்னும் ஜீவன் எப்போது நான் வைஸ்வானரன் என்று அபேதமாய் உபாசிக்கின்றானோ, அப் போது அவ்வைஸ்வானரனது சாட்சாத்காரத்தால் இந்த ஜீவன் அவ்வைஸ்வா னரனது ஆனந்தத்தைப்பெறுகின்றான் ஆகையால் அவ்வைஸ்வானரனது தாதா ன்மியத்தைச் சொல்லுதல் நிட்பலனன்று; ஆனால் மேற்சொன்ன பயனைப் பெ றுவதற்கு ஏதுவாவதால் சபலம்.

அல்லது, இவ்வதிகாரி முதலில் சுருதி சொன்னபடி விஸ்வ வைஸ்வானரர், தைஜச சூத்திராத்மா, பிராஞ்ஞ ஈஸ்வரராகிய வெல்லாருடைய சொரூபங்க ளையு மறியவேண்டும். அதன் பிறகு முதலில் 'வைஸ்வானரன் நான்' என்று விஸ்வனை வைஸ்வானரனாகச் சிந்திக்கவேண்டும். அதன் பிறகு 'நான் சூத்திரா த்மா' வென்று தைஜசனைச் சூத்திராத்மாவாகச் சிந்திக்கவேண்டும். அதன் பிறகு 'நான் ஈஸ்வர' னென்று பிராஞ்ஞனை ஈஸ்வரனாகச் சிந்திக்கவேண்டும்.

அதன் பிறகு சமஷ்டி வியஷ்டியாகிய ஸ்தூல சூட்சும காரணோபாதிகளுடையதும் ஓங்கார வாச்சியமுமாகிய பரப்பிரஹ்மம் யானென்று ஆத்மாவை சர்வாத்மவடிவமாகச் சிந்திக்கவேண்டும். அதன் பிறகு மனதிற்கு ஏகாக்கிரதை யுண்டாகவே அதிகாரியானவன் சர்வ ஜகத்தையும் ஸ்தூல சூட்சும முதலிய கிரமமாக அகண்ட ஏகரச ஆனந்தமாகிய நிர்விசேஷ பரப்பிரஹ்மத்தில் லயஞ் செய்யவேண்டும். அஃதாவது ஸ்தூலத்தை சூட்சுமத்தில் லயஞ் செய்ய வேண்டும். சூட்சுமத்தைக் காரணத்தில் லயஞ் செய்யவேண்டும். அக்காரணத்தைப் பரப்பிரஹ்மத்தில் லயஞ் செய்யவேண்டும். அதன் பிறகு ஏகாக்கிரப்பட்ட மனதால் நான் அகண்ட ஏகரச பிரஹ்மாநந்த ரூபனென்று தன்னாத்மாவைச்சாட்சாத்கரிக்கவேண்டும். இங்ஙனமான அபிப்பிராயத்தாற்றான் முன்னே சமஷ்டி வியஷ்டி உபாதிகளின் தாதான்மியத்தைச் சொல்லி அவ்வுபகித சைதன்யங்களுக்குந் தாதான்மியஞ் சொல்லப்பட்டது. ஆகையால் அத் தாதான்மியத்தைச் சொன்னது நிஷ்பலனன்று; ஆனல் மேற்சொன்னபடி ஆத்ம சாட்சாத்காரமாகிய பயனுக்கு ஏதுவாவதால் சபலம். இவ்வார்த்தை வேறு நூற்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். ஸாயி காலாத் ாமேவம் விவிஞ்யாகி வு யதூதஃ। ஞுஃஸுஸுஸு ஸுஃ ஸாதவுஂ விஶாதுநி விலாவயெகு (இ-ள்) இவ்வதிகாரி சமாதிக்குப் பூருவகாலத்தில் மேற்சொன்ன முறையாக விஸ்வ வைஸ்வாநரனாதி அபேதசிந்தனையால் மிக்க முயற்சியோடு சர்வ ஜகத்தையும் ஸ்தூல சூட்சுமாதி கிரமப்படி சேதன ஆத்மாவினிடத்து லயஞ் செய்யவேண்டும். அன்றியும்,இப்பொருள் கற்பதருகாரரான ஆசாரியராலுஞ்சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். நிவிஶெஷஂ வாஂ ஹ ஸாக்ஷாகதுஂ உநீஶாஃ। யெஜ ஷெz நுகுஂவு ஸவிஶெஷ நிரூ வணெஃ॥ வஶீ கூதெ உநவெஷாஂ ஸஹாணஂ ஹ ஶீஜநாஸ। தஜெவா விஹு வெதா க்ஷாஜவெதொவாயி கூஜு॥ (இ-ள்) நிர்விசேஷ பரப்பிரஹ்மத்தைச் சாட்சாத்கரிப்பதில் வல்லவரல்லாதவரான மந்தர்களுக்குச் சவிசேஷ பிரஹ்மத்தைச் சொல்லுவதனானே குருசாஸ்திரங்கள் அனுக்கிரகித்திருக்கின்றன. அச்சகுணப் பிரஹ்மோபாசனையால் அவர்களது ஏகாக்கிரப்பட்ட மனதினிடத்து சர்வவுபாதிகளற்ற நிர்விசேஷ பிரஹ்மமானஅஃதே சாட்சாத்தாகஆவிர்ப்பவிக்கின்றது.அன்றியும், இப்பொருளில் சுருதிப்பிரமாணமுமுளது. சுருதி. ஶஷ ஸவெஷு ஹெதெ ஷூ மூஜொதா நவ காஶதெ। ஊஶ்ஜ தெகூஜ யா வுஜ்யா ஸூக்ஷ்யா ஸூக்ஷஜஶிஹிஃ (இ-ள்) இவ்வாத்மா சர்வ பூதங்களிலிருப்பதாயினுங் கூடமாவதால் அதாவது அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருப்பதால் சர்வப் பிராணிகளுக்குந் தோற்றுவதில்லை; ஆனல் விசாரத்தால் மிகச் சூட்சுமமான புத்தியானே சூட்சும தரிசிகளால் அவ்வாத்மா சாட்சாத்கரிக்கப்படுகின்றது.

சங்கை:—உம்மால் ஸ்தூல சூட்சும காரணமென்னு மூன்று வியஷ்டிச் சரீரங்களுக்கு முறையாக அபிமானி விஸ்வ தைஜச பிராஞ்ஞரென மூன்று ஜீவர்கள் முற் சொல்லப்பட்டனர். அம்மூன்று ஜீவர்களும் சுவதந்திரர்களா? அல்லது அம்மூன்றும் ஓரே சைதன்யத்தின் அவஸ்தா விசேஷங்களா? முதற் சுவ

தந்திர பட்சமங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், ஒருகால்அம்மூன்று ஜீவர்களும் சுவதந்திரரானல் அவர்களுக்கு ஒன்றற்கொன்று பேதம் அவசிய முண்டாகும். இதனுல் சுழுப்தியவஸ்தையில் பிராஞ்ஞனென்னும் ஜீவனுல் அநுபவிக்கப்பட்ட சுக முதலிய பதார்த்தங்களும், சொப்பன வஸ்தையில் தைஜசனென்னும் ஜீவனுல் அநுபவிக்கப்பட்ட யானை தேர் முதலான பதார்த் தங்களுமாகியவைகளின் ஸ்மரணம் (நினைவு) ஜாக்கிராவஸ்தையில் விஸ்வனென் னும் ஜீவனுக்குண்டாகலாகாது. எக்காரணத்தானெனின், ஒருவனுலநுபவிக்கப் பட்ட பதார்த்தங்கள் வேறொருவனது ஸ்மரணத்திற்கு வரா. ஒருகால் ஒரு வனுலநுபவிக்கப்பட்ட பதார்த்தங்கள் மற்றொருவனது ஸ்மரணத்துக்கு வரு மானல் சைத்திரனென்பவனுலநுபவிக்கப்பட்ட பதார்த்தங்கள் மைத்திரனென் பவனது ஸ்மரணத்துக்கும் வரவேண்டும்.

சமாதானம்:—விஸ்வ தைஜச பிராஞ்ஞரென்னு மூன்று ஜீவர்கள் சுவதந்திரர் களல்லர். ஆனல் அம்மூன்றும் ஓரேபிரத்தியக் ஆத்மாவின் அவஸ்தா விசேஷங் கள். ஆகையால் அந்த ஸ்மரணம் பொருந்தாதாகிய குற்றம் அடையப்படமாட் டாது. எவ்வகையாக அவ்விஸ்வன் முதலிய மூன்றும் ஓரே ஜீவாத்மாவின் அவஸ்தாவிசேஷங்களோ அவ்வகை சொல்லப்படுகின்றது:—அந்த ஓரே ஜீவாத் மா ஜாக்கிராவஸ்தையில் வியஷ்டித்தூலசரீரம் சூட்சுமசரீரம் காரணுவித்தை என்னு மூன்றின் அபிமானியாய் விஸ்வனென்னும் பெயராற் சொல்லப்படுகின் ருன். அஃதே ஜீவாத்மா சொப்பனுவஸ்தையில் சூட்சும சரீரம் காரணுவித்தை யென்னு மிரண்டினபிமானியாய்த் தைஜச னென்னும் பெயராற் சொல்லப்படு கின்ருன். அஃதே ஜீவாத்மா சுழுப்தி யவஸ்தையில் காரணுவித்தை யென்னு மொன்றினபிமானியாய்ப் பிராஞ்ஞனென்னும் பெயராற்சொல்லப்படுகின்ருன். அஃதே ஜீவாத்மா சமாதியவஸ்தையில் ஸ்தூல சூட்சும காரண மென்னு முச் சரீரங்களினபிமான மற்றவனுய்ச் சுத்த பரமாத்மவடிவனுகின்ருன்.

இத்த ஜீவாத்மா ஒரு ஸ்தூல சரீரமாத்திரத்தின் அபிமானத்தானே விஸ் வனென்னும் பெயரையும், ஒரு சூட்சும சரீரமாத்திரத்தினபிமானத்தானே தைஜசனென்னும் பெயரையு மடைகின்ருன், எனினும், இங்குத் தூலசூட் சுமகாரண மென்னு மூன்று சரீரங்களினபிமானத்தால் ஜீவாத்மாவிற்கு விஸ் வனென்னும் பெயரும் சூட்சுமகாரண மென்னு மிரண்டு சரீரங்களினபிமானத் தால் தைஜசனென்னும் பெயரும் சொல்லப்பட்டவை எவையோ அவை துவம் பதார்த்த சோதனத்திலுபயோக முள்ளதாகிய அன்வய (உடன்பாடு) வியதி ரேகங் (எதிர் மறை) களை உணர்த்தும் பொருட்டுச் சொல்லப்பட்டன. அவ் வன்வய வியதிரேகங்களாவன:— ஜாக்கிராவஸ்தையிலோ ஸ்தூல சூட்சும காரண மென்னு மூன்று சரீரங்களுக்குச் சாட்சியாக ஆத்மா விளங்குகின் றது. சொப்பன வஸ்தையில் சூட்சும காரண மென்னு மிரண்டு சரீரங்களுக் குச் சாட்சியாக ஆத்மா விளங்குகின்றது. சுழுப்தி யவஸ்தையில் அவித்தையா கிய வொரு காரண சரீரத்திற்குச் சாட்சியாய் ஆத்மாவிளங்குகின்றது. சமா தியவஸ்தையிலோ சுத்த சொப் பிரகாச சைதன்ய வடிவாக அவ்வாத்மா விள ங்குகின்றது. இஃதே அவ்வாத்மாவிற்கு ஜாக்கிர சொப்பன சுழுப்தி சமாதி

யென்னும் நான்கு அவஸ்தைகளிலுள்ள அன்வயம். சொப்பனுவஸ்தையில் ஜாக்கிரத்தின் ஸ்தூலசரீரம் விளங்குவதில்லை. சுழுப்தியவஸ்தையில்சொப்பனத்தின் சூட்சும சரீரம் விளங்குவதில்லை. சமாதியவஸ்தையில் சுழுப்தியின் காரண சரீரம் விளங்குவதில்லை. இதுதான் ஸ்தூல சூட்சுமகாரண மென்னு மூன்று சரீரங்களிலுள்ளவியதிரேகம். எல்லாஅநாத்மாகார விருத்திகளுமற்றதா யுள்ள சித்தத்தின் கேவல ஆத்மாகார அவஸ்தை சமாதி எனப்படும். அந்த சமாதியவஸ்தையில் புருஷனுக்குத் தேக முதலிய சர்வ பதார்த்தங்களினபிமானம் நீங்கி விடுகின்றதாகையால் அச்சமாதியவஸ்தையில் அத்தூல முதலிய மூன்று சரீரங்களுக்கும் வியதிரேகமேயுண்டு. சமாதி யவஸ்தையில் இந்த ஜீவன் எல்லா அபிமானங்களு மற்றவனுயிருப்பதால் சுத்த பரமாத்ம வடிவனே யாகின்றான். யாது யாது வியாவிருத்தமோ (வியதிரேக முள்ளதோ) அதது அநாத்மாவே, யாது எங்கும் அன்விதமோ (அன்வய முள்ளதோ) அது ஆத்மாவே என்னும் நிச்சயம் துவம் பதார்த்த சோதன மெனப்படும். அத்துவம் பதார்த்த சோதனம் மேற்சொன்ன அன்வயவியதிரேகங்களானே பெறப்படும்.

## ௪௯. ஜீவாத்மாவின் ஜாக்கிர சொப்பன சுழுப்தி மூர்ச்சை மரண மேன்னு மைந்தவஸ்தைகளைக் கூறுதல்.

இனி மேற்சொன்ன ஜீவாத்மாவின் ஜாக்கிர 1. சொப்பன 2. சுழுப்தி 3. மூர்ச்சை 4. மரணம் 5. என்னு மைந்தவஸ்தைகள் சொல்லப்படுகின்றன. மேற்சொல்லியுள்ள சுரோத்திர முதலிய விந்திரியங்களின் அதிஷ்டாதா தேவதைகளான திக்கு முதலிய தேவதைகளால் அனுக்கிரகிக்கப்பட்டு, சுரோத்திர முதலிய விந்திரியங்களால் சப்த முதலிய விஷயங்களின் அநுபவம் இப்புருஷனுக்கு எவ்வவஸ்தையில் நிகழ்கின்றதோ அவ்வவஸ்தை ஜாக்கிராவஸ்தையெனப்படும். ஜாக்கிராவஸ்தையில் சுக துக்கமாகிய போகத்தைப் பயப்பனவான புண்ணிய பாபகர்மங்களுக்கு உபராமமு (ஓய்வு)ம், சுரோத்திராதி இந்திரியங்களுக்கு உபராமமுமுண்டாகவும் ஜாக்கிரத்தின் அநுபவத்தாற்றோன்றும் சம்ஸ்காரங்களால் இப்புருஷனுக்கு எவ்வவஸ்தையில் சப்த முதலிய விஷயங்களும் அவற்றின் ஞானமும் உற்பத்தியாகின்றனவோ, அவ்வவஸ்தை சொப்பனுவஸ்தையெனப்படும். எவ்வவஸ்தையில் ஜாக்கிர சொப்பன மிரண்டிற்கும் போகத்தைத் தருவதான கர்மங்களின் உபராமத் தன்மையால் ஸ்தூல சூட்சும சரீரங்களினபிமானம் நீங்குதல் வாயிலாகச் சர்வ விசேஷ ஞானங்களின் உபராமத் தன்மையாகிய, புத்தியின் காரண அஞ்ஞானமாக நிலைத்தலுண்டோ அவ்வவஸ்தை சுழுப்தியவஸ்தை யெனப்படும். * முற்கரத்தாலடித்தலாதிய நிமித்தத்தாற் றோன்றும் துன்பத்தால் எவ்வவஸ்தையில் இப்புருஷனுக்குச் சர்வவிசேஷ ஞானங்களின் உபராம முண்டாகின்றதோ அவ்வவஸ்தை மூர்ச்சாவஸ்தை யெனப்படும். இம்மூர்ச்சாவஸ்தை ஜாக்கிர முதலிய அவஸ்தைகளைவிட வேறுபட்ட அவஸ்தையாம்.

இவ்வார்த்தை ஸ்ரீ வியாசபகவானுலும் முக்தேऽர்த்தஸம்பத்தி: பரிசேஷாத். என்னுஞ் சூத்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. இச்சூத்திரத்திற்கு

* முற்கரம் - ஓராயுதம், சம்மட்டி, படைக்கலம்.

இதுபொருள்:—முற்கரத்தாலடித்தல் முதலிய நிமித்தத்தால் இப்புருஷனுக்கு எம்மூர்ச்சை யுண்டாகின்றதோ அம்மூர்ச்சை ஜாக்கிர முதலிய நான்கவஸ்தைகளுள் ஓர் அவஸ்தையிலடங்கியதா? அல்லது அந்நான்கவஸ்தைகளைவிட வோர் பின்ன அவஸ்தையா? என்னும் சம்சயத்திற்குப் பிறகு "சுருதி ஸ்மிருதியாதிகளில் இந்த ஜீவாத்மாவிற்கு ஜாக்கிரமுதலிய நான்கவஸ்தைகளே சொல்லப்பட்டுள்ளன, அவைகளுக்குப் பின்னமாக மூர்ச்சாவஸ்தை சொல்லப்படவில்லை, ஆகையால் அம்மூர்ச்சை ஜாக்கிர முதலியவவஸ்தைகளிலே யடங்கியது. அவற்றுள்ளும் விசேஷ ஞானங்களின் உபராமத்தன்மை சுழுப்தியிலும் மூர்ச்சையிலும் சமானம், ஆகையால் அம்மூர்ச்சை சுழுப்தியிலே அடங்கியது; அச்சுழுப்தியை விட மூர்ச்சை பின்ன அவஸ்தை யன்று" என்னும் வாதியின் பூர்வபட்சம் அடையப்பட்டது. இவ்வாறான பூர்வபட்சம் அடையப்படவே மேற்சொன்ன சூத்திரத்தால் ஸ்ரீ வியாசபகவானால் இச்சித்தாந்தம் செய்யப்பட்டது. மூர்ச்சாவஸ்தை ஜாக்கிர முதலிய நான்கவஸ்தைகளைவிட பின்ன அவஸ்தை. ஜாக்கிர சொப்பனவஸ்தைகளில் விசேஷஞானங்களின் அபாவமில்லை; மூர்ச்சாவஸ்தையிலோ எல்லா விசேஷஞானங்களின் அபாவமுண்டு, இக்காரணம்பற்றி மூர்ச்சாவஸ்தை ஜாக்கிர சொப்பனவஸ்தைகளிலடங்கியதன்று. மரண அவஸ்தைக்குப் பிறகு புருஷனுக்குப் புநருத்தானமில்லை; மூர்ச்சாவஸ்தைக்குப் பிறகோ புருஷனுக்குப் புநருத்தானமுண்டு. இக்காரணத்தால் மூர்ச்சாவஸ்தை அம்மரணவஸ்தையிலு மடங்கியதன்று. மேலும் சுழுப்தி யடைந்தவனுக்கு முகம் பிரசன்னமாயும், சரீரம் நடுக்கமில்லாமலு மிருக்கின்றது. மூர்ச்சையடைந்தவனது முகம் விகார முடையதாயும், சரீரம் நடுக்கத்துடன் கூடியதாயு மிருக்கின்றது, இக்காரணத்தால் அம்மூர்ச்சை சுழுப்தியவஸ்தையிலு மடங்கியதன்று; ஆனால் பரிசேஷத்தால் (ஒழிபால்) மூர்ச்சை அந்த ஜாக்கிர முதலிய நான்கவஸ்தைகளினும் பின்ன அவஸ்தை யென்றே சித்திக்கின்றது.

மேற்சொன்னபடி சுழுப்திக்கும் மூர்ச்சைக்கும் ஒன்றற்கொன்று வேறுபாட்டிருக்கினும் எல்லா விசேஷ ஞானங்களின் அபாவம் இரண்டிலும் துல்யமே, இக்காரணம்பற்றி மூர்ச்சை அர்த்த (பாதி) சுழுப்தி யெனப் படுகின்றது. இச்சரீரத்திற்குப் போகத்தைத் தருவதான கருமங்களின் நிவிருத்தியால் சாமானியம் விசேஷமாகிய விருவகைத் தேகாபிமானமும் நீங்கிவிட; வரக்கடவதான தேவர் முதலிய சரீரங்களடையும் வரையிலுமுள்ள முற்சொன்ன பதினேழு தத்துவங்களின் பிண்டீபாவ வவஸ்தை யாதோ அது மரணவஸ்தை யெனப்படும். இங்குக் கருத்திது:—தேகாபிமானம் சாமானியம் விசேஷமென்னும் பேதத்தால் இருவகைப்படும். சுழுப்தியில் விசேஷதேகாபிமானம் நீங்கிடினும் புருஷனுக்குச் சாமானிய தேகாபிமான மிருக்கின்றது. அத்தேகாபிமானத்தினாற்றான் புருஷன் சுழுப்தியினின்று மெழுகின்றான். ஒருகால் புருஷனுக்குச் சுழுப்தியில் அச்சாமானிய தேகாபிமானமுமில்லையாயின் மரணவஸ்தையுடையவன் மறுபடியுமெழாததுபோல இப்புருஷனுக்கு சுழுப்தியினின்றும் எழுதலுண்டாகாது; எழுதலாகிய யேதுவால் புருஷனுக்குச் சுழுப்தியில் அச்சாமானிய தேகாபிமானம் அநுமிக்கப்படுகின்றது. ஜாக்கிரா வஸ்தையிலும் சொப்

பஞ வஸ்தையிலும் புருஷனுக்கு நான் மனிதன் நான் பிராமணன் என்னும் விசேஷதேகாபிமானமிருக்கின்றது; மரணவஸ்தையில் புருஷனுக்கு அவ்விரு வகைத் தேகாபிமானமும் நீங்கிவிடுகின்றன.

இங்குச் சில நூலாசிரியரோ அம்மரணவஸ்தையை மூர்ச்சாவஸ்தையி னும் வேறுபட்ட அவஸ்தையாக வொப்புவதில்லை; ஆனால் அம்மரணவஸ்தை மூர்ச்சாவஸ்தையி னிடத்தே அடங்கியதென்றொப்புகின்றார்கள். மூர்ச்சை யடைந்தவனுக்கு ஒருகால் இத்தேகத்தில் போகத்தைத் தருவதான கருமங் கள் எஞ்சியிருந்தால் அம்மூர்ச்சையினின்றும் இப்புருஷனுக்குப் புநருத்தான முண்டாகின்றது. ஒருகால் அக்கர்மங்கள் இல்லையானல் புருஷனுக்கு மரணமே யுண்டாகின்றது. ஆகையால் மரணவஸ்தை அம்மூர்ச்சாவஸ்தையிலடங்கியதே.

அல்லது விஸ்வ தைஜச பிராஞ்ஞ ரென்னு மூன்றும் எப்படி ஒரே ஜீவாத் மாவின் அவஸ்தா விசேஷங்களோ, அப்படி வைஸ்வாநர ஹிரண்யகர்ப்ப ஈஸ்வரரென்னு மூன்றும் ஒரே பரமாத்மாவின் அவஸ்தா விசேஷங்கள். ஒரே பரமாத்ம தேவன் சமஷ்டித் தூலசரீரமும் சூட்சுமசரீரமும் அவ்விரண்டிற் குங் காரணமான மாயையுமாகிய மூன்றோடுபகிதமாய் வைஸ்வாநர னென்னும் பெயராற் சொல்லப்படுகின்றான். அதேபரமாத்மதேவன் சமஷ்டிச் சூட்சும சரீ ரமும் அதற்குக் காரணமான மாயையுமாகிய விரண்டினோ டுபகிதமாய் ஹிர ணிய கர்ப்பனென்னும் பெயராற் சொல்லப்படுகின்றான். அதே பரமாத்ம தே வன் கேவலம் மாயை யொன்றனோ டுபகிதமாய் ஈஸ்வரனென்னும் பெயராற் சொல்லப்படுகின்றான்.

## ௪௪. சகுணப்பிரஹ்மோ பாசனையின் பயன் சொல்லுதல்.

இனி வைஸ்வாநர ஹிரணியகர்ப்ப ஈஸ்வர ரென்னுமூவர்களி னுபாச னையின் பயன் சொல்லப்படுகின்றது. ஜீவன் 'நானே வைஸ்வாநரன்' என்று அவ் வைஸ்வாநரனது அபேத உபாசனையைச் செய்கின்றபோது இந்த ஜீவனுக்கு அவ்வைஸ்வாநர வடிவத்தை யடையும் பயனுண்டாகின்றது. இந்த ஜீவன் 'நா னே ஹிரணிய கர்ப்பன்' என்று அவ்விரணிய கர்ப்பனது அபேத உபாசனை யைச் செய்கின்றபோது இந்தஜீவனுக்கு அவ்விரணிய கர்ப்ப வடிவத்தையடை யும் பயனுண்டாகின்றது. ஜீவன் 'நானே ஈஸ்வரன்' என்று அவ்வீஸ்வரனது அபேத உபாசனையைச் செய்கின்றபோது இந்த ஜீவனுக்கு அவ்வீஸ்வர வடி வத்தையடையும் பயனுண்டாகின்றது. இவ்வபேத உபாசனை சாஸ்திரத்தில் அஹங்கிரக உபாசனை எனப்படும்.

**சங்கை:**—வைஸ்வாநர ஹிரணியகர்ப்ப ஈஸ்வரரென்னு மூன்றும் ஒரேபர மாத்மாவின் அவஸ்தா விசேஷங்கள் என்று நீர் சொல்லுவதால் அவைகளி னிடத்து ஈஸ்வரத் தன்மையே சித்திக்கின்றது; அது சம்பவியாது. ஏனெனின், யொ ऽஶநாயா பிபாஸெ ஶோகம் மோஹம் ஜரா ம்ருத்யு மத்யேதி (பசி தா கம் சோகம் மோகம் ஜரை மரணம் இவைகளையெல்லாம் எவன்கடக்கின்றானோ) என்னுஞ் சுருதி ஈஸ்வரனைப் பசி தாகம் சோகம் மோகம் ஜரை மரணமுதலிய வெல்லாத் தருமங்களு மற்றவனாகச் சொல்லுகின்றது. வைஸ்வாநர ஹிரணிய

கர்ப்ப ரென்னு மிருவர்களிடத்தோ சுருதியானது பசி பயம் பிறப்பு இறப்பு பந்தம் மோட்சம் என்பன முதலிய தர்மங்கள் சொல்லியிருக்கின்றது. அவ்வெல்லாத்தருமங்களும் ஜீவனுக்கே பிரசித்தம். இரணிய கர்ப்பன் விராட்டென்னும் புத்திரனை உற்பத்தி செய்து பசியுடையவனாய் அவ்விராட் டென்னும் புத்திரனைப் புசிக்க முயன்றான். அதைப்பார்த்து பயமுள்ளவனாய் அவ்விராட்டு 'பாண' என்னுஞ் சப்தத்தைச் செய்தான். இவ்வாறாகிய பசி பய முதலிய ஜீவ தர்மங்கள் ஆத்மபுராணத்தின் நான்காவது அத்தியாயத்தில் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் அவ்வைஸ்வாநர ஹிரணியகர்ப்பரிடத்து ஈஸ்வரத்தன்மை பொருந்தாது; ஆனால் ஜீவத்தன்மையே பொருந்தும்.

சமாதானம்:—பல சுருதி ஸ்மிருதியாதிகளில் அவ்வைஸ்வாநர ஹிரணிய கர்ப்பர்களுக்கு ஈஸ்வரத்தன்மையே சொல்லப்பட்டிருக்கின்றது. சில சுருதி ஸ்மிருதிகளில் அவ்வைஸ்வாநர ஹிரணியகர்ப்பருக்கு எந்த ஜன்ம முதலிய தருமங்கள் பிரதிபாதிக்கப் பட்டனவோ, அவை இவ்வதிகாரிக்கு அநித்தியமுதலிய தோஷ திருஷ்டிகொண்டு அவ்விரணிய கர்ப்ப முதலிய பதங்களில் வைராக்கியத்தை யடையும் பொருட்டுச் சொல்லப்பட்டிருக்கின்றன. வைஸ்வாநர ஹிரணியகர்ப்பரது ஜீவத்தன்மையில் அவ்வசனங்களுக்குக் கருத்தன்று. ஒருகால் சுருதி பிரதிபாதித்துள்ள பசி பய முதலிய ஜீவதர்மங்களின் சம்பந்தத்தால் அவ்வைஸ்வாநர ஹிரணிய கர்ப்பரை ஜீவரென்றுரைப்பினால் ஜீவனிடத்துப் பிரசித்தமான இச்சையாதிய தர்மங்களை ஈஸ்வரனிடத்துப் பிரதிபாதிப்பனவான ஸோ ऽகாமயத தமைக்ஷத ஸ ऽகுருத (அவர் விரும்பினார் அவர் சங்கற்பித்தார் அவர் மனதைச் செய்தார்) என்னுந் தொடக்கத்துச் சுருதிகளால் அவ்வீஸ்வரனும் ஜீவனாகவே வேண்டும். இதனால் அவ்வைஸ்வாநர ஹிரணியகர்ப்பர்கள் ஈஸ்வரரே; ஜீவரல்ல ரென்பது பெறப்பட்டது.

எவன் அவ்வீஸ்வரனது அபேத உபாசனையைச் செய்கின்றானோ அவன் அவ்வீஸ்வர வடிவத்தையே பெறுகின்றான், என்று சொன்ன உபாசனையின் பயன் சுருதி ஸ்மிருதிகளிலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. சுருதி. தம் யதா யதோபாஸதே ததேவ பவதி (இ-ள்) அதிகாரி அப்பரமாத்மாவை எவ்வெவ் வைஸ்வாநர முதலிய வடிவமாக உபாசிக்கின்றானோ அவ்வதிகாரி அவ்வவ் வுருவத்தோடுங் கூடிய பரமேஸ்வர வடிவத்தையே பெறுகின்றான். இவ்வுபாசனையின் பயன் ஸ்ரீ சதாசிவனாலும் இரகுநாதனுக்குச் சொல்லப்படுகின்றது. சுலோகம் யேநா காரேண யே மர்த்யா மாமேவைகமுபாஸதே। தேநா காரேண தேப்யோ ऽஹம் ப்ரஸந்நோ வாஞ்சிதம் ததே (இ-ள்) ஜீவர்கள் ஒரே பரமேஸ்வரனாகிய என்னை எவ்வெவ் வாகாரமாக உபாசிக்கின்றனரோ அவ்வவ்வாகாரமாக நான் பரமேஸ்வரன் பிரசன்னனாய் அவ்வுபாசகருக்கு அவர் விரும்பிய பொருளை அளிக்கின்றேன். இவ்வர்த்தமே ஸ்ரீகிருஷ்ணபகவானாலும் கீதையில் யம் யம் வாபி ஸ்மரந் பாவம் த்யஜத்யந்தே களேபரம்। தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவபாவித: (கௌந்தேயா! சதா அவ்வத்தேவதைகளை விஷயஞ் செய்யும் பாவனையுடையவனாய் இவன் மரணகாலத்தில் எவ்வெத் தேவதா

விசேஷங்களை ஸ்மரித்துக் கொண்டு இச்சடலத்தை விடுகின்றானோ அவன் அவ்வத் தேவதா வடிவங்களையே பெறுகின்றான்) என்னும் சுலோகத்தாற் சொல்லப்பட்டிருக்கின்றது.

சங்கை:—மேற்சொன்னபடி பாவனையின் உயர்வால் ஈஸ்வர சாட்சாத்கார முடையவனுக்கு அவ்வீஸ்வர வடிவத்தை யடையும் பயனுண்டாகுக: ஆனால் மந்த பாவனையுள்ள உபாசகனுக்கு எப்படிப்பட்ட பயன் பிராப்தமாகும்?

சமாதானம்:—பாவனையின் மந்தத்தன்மையால் இப்புருஷனுக்கு முற்சொன்ன பயன் பிரப்தமாகாது; ஆனால் அம்மந்த பாவனையின் ஏற்றக்குறைவால் அவ்வுபாசகனுக்குச்சார்ஷ்டி 1. சாரூப்யம் 2. சாமீப்யம் 3. சாலோக்யம் 4. என்னும் நால்வகைப்பட்ட பயன் பிராப்தமாகின்றன. தனது மனித வடிவத்தை மறத்தல் பூருவகமாக அவ்வுபாஸ்யதெய்வ வடிவத்தை யடைவது யாதோ அதுவே அப்பாவனையில் உயர்வும், தனது மனித வடிவத்தின் சொற்ப நினைவு பூருவகமாய் அவ்வுபாஸ்ய தெய்வ வடிவத்தை யடைவதுயாதோ அதுவே அப்பாவனையில் மந்தமுமாம். ஜகத்தினுற்பத்தி முதலிய வியாபாரங்களை விட்டுப் பரமேஸ்வரனுக்குச் சமானமான ஐஸ்வர்யமும் போகங்களு மடைதல் சார்ஷ்டியெனப்படும். உபாசகனுக்கு அவ்வீஸ்வரனுக்குச் சமான உருவப் பிராப்தி சாரூப்ய மெனப்படும். அவ்வீஸ்வரனது சமீபத்திருத்தல் சாமீப்ய மெனப்படும். அவ்வீஸ்வரனது உலகத்திருத்தல் சாலோக்ய மெனப்படும். இவ்வகையான நான்கு பயன்களை அம்மந்த பாவனையின் ஏற்றக் குறைவால் அவ்வுபாசகன் அடைகின்றான். சுருதி. ஸாஷ்டிஃ ஸாயுஜ்யம் ஸலோகதாம் ஜயதி (இ-ள்) இவ்வுபாசகன் அப்பாவனையின் தாரதம்மியத்தால் இரணிய கர்ப்பனது சாயுஜ்ய சாலோக்யாதிகளைப் பெறுகின்றான்.

முன் தத்பதார்த்தத்தின் வாச்சியார்த்தத்தைச் சொல்லும் பிரசங்கத்தால் சகுணப் பிரஹ்மோ பாசகர்களுக்கு அவ்வுபாசனையால் அவ்வச்சகுண பிரஹ்மப்பிராப்தியாகிய பயன் சொல்லப்பட்டது.

## சரு. நிர்க்குணப் பிரஹ்மோ பாசனையின் பயன் சொல்லுதல்.

இனி நிர்க்குணப் பிரஹ்மத்தை உபாசிப்பவர்களுக்கு நிர்க்குணப் பிரஹ்மத்தின் பிராப்தியாகிய பயன்சொல்லப்படுகின்றது. எவர்கள் விவேக முதலிய நான்கு சாதனங்களுடன் கூடினவரும் மந்தபுத்தி யுடைமையால் வேதாந்த சாஸ்திரவிசாரத்தில் வல்லவரல்லாதவராயும், நிர்க்குணப் பிரஹ்மத்தை யறியவிச்சையுடையவராயு மிருக்கின்றார்களோ, அவர்கள் சுரோத்திரிய பிரஹ்மநிஷ்ட குருவின் முகத்தினின்றும் நிர்க்குணப் பிரஹ்மத்தின் சொரூபத்தை நிச்சயித்து ஸ்தூல சூட்சும காரண மானவெல்லா உபாதிகளற்றதும் சச்சிதானந்த சொரூபமுமாகிய நிர்க்குணப் பிரஹ்மம் நான் என்று நிர்க்குணப் பிரஹ்மத்தை யுபாசிக்க வேண்டும். அந்த நிர்க்குணப் பிரஹ்மத்தின் உபாசனையால் அதிகாரிக்கு இச்சரீரத்தின் ஜீவித அவஸ்தையிலாவது, மரணவஸ்தையிலாவது, பிரம்மலோகத்திலாவது நிர்க்குணப் பிரஹ்மத்தின் சாட்சாத்கார முண்டாய் அந்த நிர்க்குணப் பிரஹ்ம வடிவப் பிரா

ப்தியாகிய பயனுண்டாகின்றது. மணியின்னொளியில் மணிபுத்தி கொண்டுமுயன்றவனுக்கு அம்மணியை யடையும்பயனுண்டாவதுபோல நிதித்தியாசனமாகிய நிர்க்குணப் பிரஹ்மோபாசனையால் இவ்வதிகாரிக்கு அந்த நிர்க்குணப் பிரஹ்மப் பிராப்தியாகிய பயனுண்டாகின்றது. சுருதி. ஜ்ஞாநப்ரஸாதேந விசுத்தஸத்வஸ்ததஸ்து தம் பச்யதே நிஷ்கலம் த்யாயமாந: (இ-ள்) நிர்க்குணப்பிரஹ்மோபாசனையால் மிகச்சுத்தமடைந்த சித்தமுடையவன் அதைத்தியானிப்பவனாய் அந்தநிர்க்குணப்பிரஹ்மத்தை சாட்சாத்கரிக்கின்றான். விசாரத்தில் சாமர்த்திய மில்லாதவர்கள் பிரஹ்ம வேத்தா குருவின் முகத்தினின்றும் நிர்க்குணப் பிரஹ்மத்தின் சொரூபத்தைப் பரோட்சமாக நிச்சயித்து நானே நிர்க்குணப் பிரஹ்மமென்று அந்த நிர்க்குணப் பிரஹ்மத்தை யுபாசிக்க வேண்டும். அவ்வுபாசனையால் அவர்களுக்கு நிர்க்குணப்பிரஹ்ம சாட்சாத்கார முண்டாகின்றது. இவ்வர்த்தம் ஸ்ரீ பகவானாலும் கீதையில் அர்ச்சுனனுக்குச் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். அந்யே த்வேவமஜாநந்த: ச்ருத்வாந்யேப்ய உபாஸதே। தே(அ)பி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ச்ருதிபராயணா: (இ-ள்) எவர்கள் மந்த புத்தியுடைமையால் தாம் வேதாந்த சாஸ்திர விசாரஞ் செய்வதிற் சமர்த்தரல்லரோ, அவர்கள் பிரஹ்மவேத்தா குருவின் முகத்தினின்றும் நிர்க்குணப் பிரஹ்மத்தின் சொரூபத்தைச் சிரவணஞ் செய்து எப்போது அஹம் பிரஹ்மாஸ்மி என்று தியானஞ்செய்கின்றார்களோ அப்போது அவ்வுபாசகர்களும் அந்த நிர்க்குணப் பிரஹ்மத்தின் சாட்சாத் காரத்தால் அஞ்ஞானமாகிய மிருத்யுவை அவசியம் நாசஞ்செய்கின்றார்கள்—. தே(அ)பி சாதிதரந்த்யேவ (அவ்வுபாசகர்களும் மிருத்யுவை அவசியம் நாசஞ் செய்கின்றார்கள்) என்னும் வசனத்திலுள்ள உம்மைச் சப்தத்தால் ஸ்ரீ பகவானால் இக் கைமுதிக நியாயங் குறிப்பிடப்பட்டது. விசாரத்தில் ஆற்றலற்ற மந்தபுத்தியுள்ளவர்களும் நிர்க்குணப் பிரஹ்மோபாசனையால் அவ்வஞ்ஞானத்தை நாசஞ் செய்கின்றபோது விசாரத்தில் ஆற்றலுள்ளவர்கள் அவ்வஞ்ஞானத்தை நாசஞ் செய்கின்றார்களென்று சொல்லுவானேன்? இதனாற் பெறப்பட்ட பொருளாவது:—ஞானகாண்டத்திற்சொல்லப்பட்டிருக்கின்ற சகுண உபாசனை அல்லது நிர்க்குண உபாசனையாகியவெல்லா உபாசனைகளுக்கும் சித்தத்தின் ஏகாக்கிரதை வாயிலாகப் பிரஹ்ம சாட்சாத்காரமே முக்கிய பயன், பிரம்மலோக முதலியவைகளோ அவ்வுபாசனைகளுக்கு அவாந்திரபயன்; முக்கிய பயனன்று. இக்காரணம் பற்றியே பிரஹ்மசூத்திரகர்த்தாவாகிய ஸ்ரீவியாசபகவானாலும் அவ்வுபாசனைகளை ஞானகாண்டத்தினிடத்தே விசாரஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

முன் மாயாவுபகித தத்பதார்த்த பிரஹ்மத்திற்கு ஜகத்தின் ஜன்மாதிகளுக்குக் காரணமாகுந் தன்மையாகிய தடஸ்த லட்சணஞ் சொல்லப்பட்டது. அஃதே தடஸ்த லட்சணம் பிரஹ்மத்தினின்று மாயை வாயிலாகச் சூட்சுமஸ்தூலப் பிரபஞ்சோற்பத்தியைச் சொல்லி இதுவரையிலும் சித்தஞ் செய்யப்பட்டது. இது அத்தியாரோப மெனப்படும். அது வெனும்பாவ மில்லாத வஸ்துவில் அது வெனும்புத்தி அத்தியாரோப மெனப்படும். அது பிரசங்கத்தில்

வாஸ்தவமாக ஜகத்பாவ மில்லாத பிரஹ்மத்தில் ஜகத்புத்தி அத்தியாரோப மெனப்படுதல் போலவாம். அத்தியாரோபம் அபவாத மென்னு மிரண்டுகளா லேயிவ்வதிகாரிகளுக்கு குரு சாஸ்திரங்கள் நிர்க்குணப் பிரஹ்மத்தை யுபதே சிக்கின்றன. ஆகையால் இப்போது பிரஹ்மத்தினிடத்து ஆரோபிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் அபவாதம் சொல்லப்படுகின்றது.

## சசு. பிரஹ்மத்தினிடத்து ஆரோபித பிரபஞ்சத்தின் அபவாதங் கூறுதல்.

எவ்வதிஷ்டானத்தில் எவ்வஸ்து முக்காலத்திலு மில்லையாயினும் பிராந்தி யாற் றோற்றுகின்றதோ அவ்வதிஷ்டானத்தில் அவ்வஸ்துவின் அபாவ நிச்ச யம் அபவாதமாம். சுக்தியாதிகளில் பிராந்தியாற் றோற்றும் இரஜத முதலிய வைகளை அச்சுக்தி முதலியவற்றில் இது ரஜதமல்ல;ஆனால் சுக்தியே யென்னும் அபாவ நிச்சயம் எப்படி அபவாதமோ, அப்படி அதிஷ்டானப் பிரஹ்மத்தில் பிராந்தியாற் றோற்றிய மேற்சொன்ன மாயை முதலிய பிரபஞ்சத்தை அவ் வதிஷ்டானப் பிரஹ்மத்தில் இப்பிரபஞ்சம் முக்காலத்திலு மில்லை யென்னும் அபாவ நிச்சயம் பிரபஞ்சத்தின் அபவாதமாம். இவ்வபவாதத்தை சாஸ்திரத் தில் பாதமென்றும் விலாபனமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. எவ்வதி ஷ்டானத்தில் எவ்வஸ்து பிரதீதி யாகின்றதோ, அவ்வதிஷ்டானத்தில் அவ் வஸ்துவின் முக்காலத்தைய அத்தியந்தாபாவ நிச்சயம் சாஸ்திரத்தில் பாதமெனப்படும். அந்தப் பாதம் சாஸ்திரீயம் 1. யௌக்திகம் 2. பிராத்தி யட்சிகம் 3. என்னும் பேதத்தால் மூவகைப்படும். ஆதாத ஆதேஶா நேதி நேதி। நேஹநாநாஸ்தி கிஂசந (பிறகு இல்லை யில்லை யென்று வற்புறுத்த லால், ஈண்டு நாநா வானவை சிறிது மில்லை) என்னுந் தொடக்கத்துச் சாஸ்தி ரங்களால் அதிஷ்டானப் பிரஹ்மத்தி னிடத்து சர்வப் பிரபஞ்சாபாவத்தின் நிச்சயம் சாஸ்திரீயபாதமெனப்படும். எப்படி மண்ணாகிய உபாதான காரணத் தை விட வேறாகக் கடமாகிய காரியத்தின் அபாவமே நிச்சயிக்கப்படுகின்ற தோ, அப்படி சர்வப் பிரபஞ்சத்திற்கும் அபின்ன நிமித்தோபாதான காரண மான பிரஹ்மத்தைவிட வேறான சர்வப் பிரபஞ்ச அபாவ நிச்சயங்கொண்டுஅத் திருசியப் பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மை நிச்சயத்தால் பிரஹ்மாத்மமாத் திர நிச்சயம் யாதோ அது யௌக்திகபாதமெனப்படும். அஹம் பிரஹ்மாஸ்மி தத்துவமசி முதலிய மகா வாக்கிய ஜன்ய சாட்சாத்காரத்தால் காரியப் பிர பஞ்சத்தோடுங் கூடிய அஞ்ஞான நிவிருத்தி யாதோ அது பிராத்தி யட்சிக பாத மெனப்படும். மேற்சொன்ன யௌக்திகபாதத்தின் கிரமமிது:—ஸ்தூல சரீரமுதல் பிரம்மாண்ட பரியந்தமுள்ள ஸ்தூலப் பிரபஞ்சங்களெல்லாம் பஞ்சீ கிருத ஸ்தூல பூதங்களின் காரியம். ஆகையால் ஸ்தூலப் பிரபஞ்சத்தை அத் தூல பூதங்களில் லயஞ்செய்ய வேண்டும்; அதாவது ஸ்தூல பூதங்களை விட அத்தூலப் பிரபஞ்சம் பின்னமன்று என்னும் நிச்சயம் இவ்வதிகாரி செய்ய வேண்டும். அதன் பிறகு அத்தூல பூதங்களையும் சமஷ்டி வியஷ்டிகளான வெ ல்லா சூட்சும சரீரங்களையும் தம் காரணமாகிய அபஞ்சீகிருத பஞ்ச சூட்சும பூதங்களில் லயஞ்செய்ய வேண்டும், அதாவது தூலபூதமும் சமஷ்டி வியஷ்டி

சூட்சுமசரீரமும் அச்சூட்சும பூதங்களின் காரியங்களாவதால் அவைகளுக்கு வேறன்று என்று நிச்சயஞ் செய்ய வேண்டும். முன்னே எந்தவெந்த சூட்சும பூதங்களின் சாத்விக முதலிய கூறுகளினின்றும் எவ்வெவ்விந்திரிய முதலிய காரியங்களினுற்பத்தி சொல்லப்பட்டதோ, அவ்வக்காரியங்களை அவ்வப்பூதங்களின் சாத்விக முதலிய கூறுகளினிடத்தே லயஞ்செய்ய வேண்டும்.

தாற்பரிய மிது:—தூலபூதங்களை சூட்சுமபூதங்களின் தாமசக் கூற்றில் லயஞ்செய்ய வேண்டும். ஞானேந்திரிய அந்தக்கரணங்களை சூட்சும பூதங்களின் சாத்விகக் கூற்றில் லயஞ் செய்யவேண்டும். கர்மேந்திரியப் பிராணன்களை அச்சூட்சும பூதங்களின் இராஜசக்கூற்றில் லயஞ்செய்ய வேண்டும். அந்தச் சூட்சும பூதங்களையும் தத்தம் காரணத்தில் லயஞ்செய்ய வேண்டும். ஆண்டுப் பிருதிவியை ஜலத்திலும், ஜலத்தைத் தேயுவிலும், தேயுவை வாயுவிலும், வாயுவை ஆகாசத்திலும் ஆகாசத்தை அஞ்ஞானத்திலும் அவ்வஞ்ஞானத்தைச் சைதன்ய மாத்திரத்திலும் லயஞ் செய்ய வேண்டும். இங்கு தாற்பரியமிது:—யாது காரியமோ அதற்குத் தன் உபாதான காரணத்தைவிட வேற்றுச் சத்தையில்லை, ஆகையால் உபாதான காரணத்தைவிட காரியம் வேறல்ல வென்று நிச்சயித்து அக்காரியத்தை மறத்தல் வாயிலாகக் காரணமொன்றினை விஷயஞ் செய்யும் நினைவுயாதோ அதுவே அக்காரியத்திற்குக் காரணத்தில் விலாபனமாம். சர்வப் பிரபஞ்சத்திற்கும் ப்ரமகாரணம் பிரஹ்மம், ஆகையால் சர்வப் பிரபஞ்சத்தையும் மறந்து பிரஹ்ம மொன்றை விஷயஞ் செய்யும் ஸ்மரணம் யாதோ அதுவே பிரஹ்மத்தினிடத்துச் சர்வப் பிரபஞ்சத்தின் விலாபனமாம். இதனையே வேதாந்த சாஸ்திரத்தில் யௌக்திக பாத மென்பர். இதே யௌக்திக பாதம் விஷ்ணு புராணத்திலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம்· जगत्प्रतिष्ठा देवर्षे पृथिव्यप्सु प्रलीयते । तेजस्यापः प्रलीयन्ते तेजो वायौ प्रलीयते॥ वायुश्च लीयते व्योम्नि तच्चाव्यक्ते प्रलीयते । अव्यक्तं पुरुषे ब्रह्मन्निष्कले संप्रलीयते ॥ (இ-ள்) நாரதரே! ஜகத்திற்கு ஆதார பூதமான பிருதிவி ஜலத்தில் லயமாகின்றது, ஜலம் தேயுவில் லயமாகின்றது, அத்தேயுவும் வாவுவில்லயமாகின்றது, அவ்வாயுவும் ஆகாசத்தில் லயமாகின்றது, அவ்வாகாசம் அவ்வியக்தத்தில் லயமாகின்றது, மாயையாகிய அவ்வியக்தமும் பரமாத்மாவில் லயமாகின்றது.—மேற்சொன்ன யௌக்திக பாதமே வார்த்திகக்காரராலும் अकारं पुरुषं विश्वमुकारे प्रविलापयेत् । उकारं तैजसं सूक्ष्मं मकारे प्रविलापयेत् । मकारं कारणं प्राज्ञं चिदात्मनि विलापयेत्. (அகாரவுருவனன விஸ்வனை உகாரத்தில் அடக்குக உகாரவுருவனையும் சூட்சுமனையுமிருக்கும் தைஜசனை மகாரத்தில் அடக்குக மகாரவுருவனும் காரணவுருவனுமான பிராஞ்ஞனை சிதான்மாவில் அடக்குக) என்னுந் தொடக்கத்து வசனங்களாற் சொல்லப்பட்டிருக்கின்றன.

அன்றியும், மேற்சொன்னஅத்தியாரோபம்அபவாதமென்னுமிரண்டுகளால் தத்துவம்பதார்த்தசோதன (விவேசன) மும் பெறப்படுகின்றது. அச்சோதன

த்தின் வகைகாட்டப்படுகின்றது:—சமஷ்டி ஸ்தூலசரீரம்சமஷ்டிசூட்சுமசரீரம் மாயை 1. முறையாக வம்மூன்றோடு பேகிதமான வைஸ்வாநர சூத்திராத்மா ஈஸ்வரன் 2. அவ்வெல்லா வற்றிற்கும் அதிஷ்டானமாகிய உபாதியற்ற அகண்ட சைதன்யம் 3. ஆகிய மூன்றும் ஒழுகக்காய்ச்சிய இரும்புருண்டைபோல ஒரு வடிவாகத் தோற்றுவனவாய்த் தத்பதத்தின் வாச்சியார்த்தமாகின்றன. சமஷ்டி ஸ்தூலசரீரமும் சூட்சும சரீரமும் மாயையுமாகிய வெல்லாவற்றினும் அன்வய வியதிரேகங்களால் வேறாக நிச்சயிக்கப்பட்டதான அகண்டசைதன்யம்தத்பதத்தின் லட்சியார்த்தமாகின்றது. தத்பதார்த்த சோதனைக்கு உபாயபூதமான அன்வயவியதிரேகங்கள் இவ்வகையாகின்றன:—பஞ்சீகரிக்கப்பட்ட தூலப்பிரபஞ்சத்தின் திதிகாலத்திலோ அப்பரமாத்மா தூலப் பிரபஞ்சத்திற்குச் சாட்சியாகவிருக்கின்றது. பஞ்சீகரணத்திற்கு முன்னோ அப்பரமாத்மா சூட்சுமபூதங்களுக்கும் அவற்றின்காரியங்களுக்கும் சாட்சியாக விருக்கின்றது. அவ்வாகாசமுதலிய சூட்சும பூதங்களினுற்பத்திக்கு முன் பிரளயகாலத்திலோ அப்பரமாத்மா மாயைக்குச் சாட்சியாக விருக்கின்றது. தத்துவஞானத்தால் அம் மாயையாகிய அஞ்ஞானம் நீங்கிடவும் போகத்தாற் பிராரப்தகர்மம் நாசமாகவும் இந்தஜீவனது வர்த்தமான சரீரம் விழுந்த பிறகு விதேக முத்தியவஸ்தையில் அப்பரமாத்மா அகண்ட சொப்பிரகாச சைதன்யமாக விருக்கின்றது. இதுவே தத்பதார்த்தமாகிய பரமாத்மாவின் அந்வயம்.

சமஷ்டி ஸ்தூல சரீரம் பஞ்சீகரணத்திற்கு முன் விளங்குவதில்லை. சமஷ்டி சூட்சும சரீரம் ஆகாசமுதலிய பூதங்களினுற்பத்திக்குமுன்விளங்குவதில்லை. மாயை முத்தியவஸ்தையில் விளங்குவதில்லை. இதுவே அச்சமஷ்டித்தூலசரீரத்தினதும் சமஷ்டி சூட்சும சரீரத்தினதும் மாயையினதும் வியதிரேகம். இவ்வாறான அந்வய வியதிரேகங்களாற் சோதிக்கப்பட்ட தத்பதார்த்தமாகிய காரிய சகிதமாயா சம்பந்தமில்லாத அகண்ட சச்சிதானந்த சொரூப பரமாத்மா தத்பதத்தின் லட்சியார்த்தமாகின்றது.

## ௪எ. துவம் பதார்த்த சோதனஞ் சொல்லுதல்.

இனி துவம் பதார்த்தசோதனஞ் சொல்லப்படுகின்றது. வியஷ்டித் தூல சரீரம் வியஷ்டிச் சூட்சும சரீரம் அவ்விரண்டற்குங் காரணமாகியஅவித்தை 1. முறையாக வம்மூன்று சரீரங்களோ பேகிதமான விஸ்வதைஜசப் பிராஞ்ஞர் 2. அவ்வெல்லாவற்றிற்கு மாதாரமாகிய உபாதியற்ற பிரத்தியக் சைதன்யம் 3. ஆகிய மூன்றும் தப்தலோஹபிண்டம் (ஒழுகக்காய்ச்சிய இரும்புருண்டை) போல ஒருவடிவாகத் தோற்றுவனவாய்த்துவம்பதவாச்சியார்த்த மாகின்றன. அந்வய வியதிரேகங்களால் தூல சூட்சும காரணமென்னு மூன்று சரீரங்களினும் வேறுசெய்யப்பட்டதானசச்சிதானந்த சொரூப பிரத்யக்சைதன்யம் துவம்பதத்தின் லட்சியார்த்தமாகின்றது. துவம் பதார்த்த சோதனத்தினுபயோகமுள்ள தாகிய அந்வய வியதிரேகங்கள் முற்சொல்லப் பட்டிருக்கின்றன. அவை ஈண்டு மறிந்து கொள்ளுக. இனிசோதிக்கப்பட்ட அத்தத்துவம் பதார்த்தங்கட்கு அபேதமான மஹாவாக்கியார்த்தம் சொல்லப்படுகின்றது. முற்சொல்லப்பட்ட தத்பதத்தின் லட்சியார்த்தமான சுத்த சைதன்யமும் துவம்

பதத்தின் லட்சியார்த்தமான சுத்த சைதன்யமுமாகிய விருலட்சியார்த்தங்களை யுங் கிரகித்து அச்சம்பந்தங்களோடுங் கூடித் தத்துவமசியாதி மகாவாக்கியங்கள் இலட்சணாவிருத்தியால் அகண்டார்த்தத்தைப் போதிப்பனவாகின்றன. ஆண்டுச் சாமானாதிகரண்யம் 1. விசேஷணவிசேஷியபாவம் 2. இலட்சிய லட்சணபாவம் 3. என்னும் மூன்று சம்பந்தங்களும் அம்மகா வாக்கியத்திற்குச் சஹகாரி(துணை)களாயிருக்கின்றன. தத்துவமசி என்னும்வாக்கியத்திலுள்ள தத் துவம் என்னுமிரண்டு பதங்களுக்கும் ஒன்றற்கொன்று சாமானாதிகரண்ய சம்பந்தமுண்டு. அவ்விரண்டு பதங்களின் அர்த்தங்களுக்கு ஒன்றற்கொன்று விசேஷண விசேஷியபாவ சம்பந்தமுண்டு. அவ்விரண்டு பதங்களுக்காவது அவ்விரண்டு அர்த்தங்களுக்காவது அகண்ட சைதன்யத்தோடு இலட்சிய லட்சணபாவ சம்பந்தமுண்டு.

### ௪அ. சாமானாதிகரண்ய, விசேஷண விசேஷிய பாவ, லட்சிய லட்சண பாவ சம்பந்தங்களைக் கூறுதல்.

இனி இம்மூன்றுசம்பந்தங்கள் திருஷ்டாந்தங்களுடன் தெளிவாக்கப்படுகின்றன. பிந்ந ப்ரவ்ருத்தி நிமித்தாநாம் ஶப்தாநாம் ஏகஸ்மிந்நர்த்தே வ்ருத்திஃ ஸாமாநாதிகரண்யம் (இ-ள்.) வெவ்வேறு பிரவிருத்திகளுக்கான நிமித்தங்களையுடைய சப்தங்களுக்குப் பொருள்ஒன்றின்கண் நிகழ்தல் யாதோ, அதுவே அப்பதங்களொன்றற்கொன்றுள்ள சாமானாதிகரண்ய சம்பந்தமாம். எப்படியெனின், ஸோऽயம் தேவதத்தஃ (இ-ள்.) முன் உன்னால் எந்தத்தேவதத்தனென்னும் புருஷன் பார்க்கப்பட்டானோ அவன் இந்தத் தேவதத்தன். இவ்வாக்கியத்திலுள்ள அவன் என்னுஞ் சப்தமோ அத்தேசகால விசிஷ்ட (கூடிய) தேவதத்தனது வாசகமும், இவன் என்னுஞ் சப்தம் இத்தேசகால விசிஷ்ட தேவதத்தனது வாசகமுமாகின்றன. அவ்வொரே தேவதத்தனிடத்து அவன் என்னுஞ் சப்தத்தின் பிரவிருத்திக்கோ அத்தேசகால விசிஷ்டத்தன்மை நிமித்தமும், இவன் என்னுஞ் சப்தத்தின் பிரவிருத்திக்கு இத்தேசகால விசிஷ்டத்தன்மை நிமித்தமுமாம். அவன் இவன் என்னுமிரண்டு சப்தங்கள் பாகத்தியாக லட்சணையால் அத்தேசகால விசிஷ்டத்தன்மை அம்சத்தையும், இத்தேசகால விசிஷ்டத்தன்மை அம்சத்தையும் விட்டு அவ்வொரே தேவதத்த பிண்டத்தை உணர்த்துகின்றன. இதுவே அவன் இவன் என்னுமிரண்டு சப்தங்களுக் கொன்றற்கொன்றுள்ள சாமானாதிகரண்ய சம்பந்தமாம்.

அன்றியும், 'அவன் இத்தேவதத்தன்' என்று கூறிய வாக்கியத்தினிடத்தே அவன் என்னுஞ் சப்தத்தின் அர்த்தமாகிய அத்தேசகால விசிஷ்டமும், இவன் என்னுஞ் சப்தத்தின் அர்த்தமாகிய இத்தேசகால விசிஷ்டமும் ஆகிய அவ்விரண்டு அர்த்தங்கட்கும் ஒன்றற்கொன்றுள்ள பேதத்தை நிவிருத்திசெய்வதாகிய விசேஷண விசேஷ்ய பாவசம்பந்தமுண்டு. ஆண்டு 'அவன்' 'இவன்' என்னும் வாக்கியப் பிரயோகத்தினிடத்தோ அவன் சப்தத்தின் அர்த்தம் விசேஷ்யமும், இவன் சப்தத்தின் அர்த்தம் விசேஷணமுமாம். 'இவன்' 'அவன்'என்னும் வாக்கியப் பிரயோகத்தினிடத்தோ இவன் சப்தத்தின் அர்த்தம் விசேஷ்யமும், அவ

ன் சப்தத்தின் அர்த்தம் விசேஷணமுமாம். ஸோऽயம்தேவதத்த: (அவன் இத் தேவதத்தன்) என்னும் வாக்கியத்திலுள்ள 'அவன் இவன்' என்னும் இரண்டு சப் தங்களின் பாகத்தியாக இலட்சணையால் அத்தேசகால விசிஷ்டத்தன்மை, இத் தேசகால விசிஷ்டத்தன்மைகளாகிய இரண்டு விரோதி அம்சங்கள் விடப்பட்டு விரோதமல்லாத தேவதத்தபிண்ட மாத்திரத்தின் போதம் அவ்வாக்கியத்தானு ண்டாகின்றது. ஆகையால் அத்தேவபிண்ட மாத்திரமே அவன் இவன் என்னும் வாக்கியத்தின் இலட்சியார்த்தமாம். அங்ஙனமாய வாக்கியார்த்தமாகிய இலட் சியதேவதத்தனோடு அவன் இவன் என்னும் இருபதங்கட்கும், முற்கூறிய அவற் றின் அர்த்தங்கட்கும் இலட்சிய லட்சணபாவ சம்பந்தமுண்டு. ஆண்டு அறிவிப் பது இலட்சணமும், அறியத்தக்க பொருள் இலட்சியமுமாம். அவன் இவன் என்னும் இரண்டு பதங்களால் அல்லது அவைகளின் அர்த்தத்தால் அத்தேவ தத்தபிண்டம் அறியப்படுவதா மாகலின் அப்பதங்களும் அர்த்தங்களும் இலட் சணங்களாம். அத்தேவதத்தபிண்டம் இலட்சியமாம்.

இனி தத்துவமசி (அது நீ) முதலிய மகாவாக்கியங்களினிடத்து அம்மூன் று சம்பந்தங்களும் பொருத்தப்படுகின்றன. தத்துவமசி என்னும் மகாவாக்கிய த்திலுள்ள தத்பதமோ பரோட்சத்தன்மை சர்வஞ்ஞத்தன்மை முதலிய தர்ம விசிஷ்ட ஈஸ்வரசைதன்யத்தினது வாசகம்,துவம்பதம்அபரோட்சத்தன்மை அ ற்பஞ்ஞத்தன்மை முதலிய தர்மவிசிஷ்ட ஜீவசைதன்யத்தினது வாசகம். பரோ ட்சத்தன்மை முதலிய தர்மவிசிஷ்டத்தன்மையோ தத்பதத்தின்பிரவிருத்திக்கு நிமித்தமும், அபரோட்சத்தன்மை முதலிய தர்மவிசிஷ்டத்தன்மை துவம்பதத் தின் பிரவிருத்திக்கு நிமித்தமுமாம். ஆகையால் தத்துவம் பதங்களின் பிரவிரு த்திக்கு நிமித்தம் வெவ்வேறு. தத்துவம் என்னும் இருபதங்கள் பாகத்தியாக ல ட்சணையால் ஏக அகண்டசைதன்னியத்தை போதிப்பனவாகின்றன. இஃதே அத்தத்துவம் பதங்களுக்கு ஒன்றற் கொன்றுள்ள சாமானாதிகரணிய சம்பந்த மாம். தத்பதார்த்தமாகிய ஈஸ்வர சைதன்னியத்திற்கும் துவம் பதார்த்த மா கிய ஜீவ சைதன்னியத்திற்கும் ஒன்றற் கொன்று பேதப்பிரமத்தைப் போக்கு வதான விசேஷண விசேஷிய பாவ சம்பந்த முண்டு. தத்துவமசி (அது நீ) யென்னும் வாக்கியப் பிரயோகத்தினிடத்தோ அத்தத் பதார்த்தம் விசேஷிய மும் துவம் பதார்த்தம் விசேஷணமுமாகின்றன. துவம் தத்சி (நீ அது) என் னும் வாக்கியப் பிரயோகத்தினிடத்தோ துவம் பதார்த்தம் விசேஷியமும் தத்பதார்த்தம் விசேஷணமுமாகின்றன. இவ்வாறு தத்துவம் பதார்த்த மிரண் டிற்கும் ஒன்றற் கொன்று அபேதமாக விசேஷண விசேஷிய பாவனை செய் வதால் அவ்விரண்டிற்கு முள்ள பேதமயக்கம் நீங்கி விடுகின்றது. தத்துவ மென்னு மிரு பதங்கட்கும், அவ்விரு பதங்களின் அர்த்தமாகிய ஈஸ்வர ஜீவர் கட்கும் வாக்கியார்த்தமாகிய அகண்ட சைதன்யத்தோடு இலட்சிய லட்சண பாவ சம்பந்த முண்டு. தத்துவம் பதங்களும் அப்பதங்களின் அர்த்தமும், பரோட்சத் தன்மை அபரோட்சத்தன்மை முதலிய விரோத அம்சங்களைப் போக்கி விரோத மில்லாத அகண்ட சைதன்னிய மாத்திரத்தையே உணர்த்து வனவாகின்றன. இதனுல் அப்பதங்களினிடத்தும் அவைகளின் அர்த்தங்களி

னிடத்தும் இலட்சணத் தன்மையும்அகண்ட சைதன்னியத்தினிடத்து இல ட்சியத் தன்மையு முண்டு. இங்ஙனங் கூறிய மூன்று சம்பந்தங்களே வேறு நூற்களில் ஸாமா நாயி கரண்யஂச விஶேஷண விஶேஷ்யதா। லக்ஷ்ய லக்ஷணபாவஶ்ச பதார்த்த ப்ரத்யகாத்மநாம் (தத்துவம் பதார்த்தங்கட்கும் பிரத்திய காத்மாவிற்கும் சாமானாதி கரண்யம் விசேஷண விசேஷியத்தன் மை இலட்சிய லட்சண பாவமுள்ளன) என்னுஞ் சுலோகத்தாற் கூறப்பட் டுள்ளன.

சங்கை:—பிற வேதாந்த நூற்களில் தத்துவமசி முதலிய வாக்கியங்கட் குப் பாகத்தியாக லட்சணையால் அகண்ட சைதன்யம் அறிவிக்கப்பட்டிருக்கி ன்றது. ஈண்டு நீவிர் இலட்சிய லட்சண பாவ சம்பந்தத்தால் அகண்டசைதன் யத்தின் போதங் கூறுகின்றீர். ஆதலால் அந்நூற்களோடு இந்நூற்கு விரோத முண்டாகும்.

சமாதானம்:—இலட்சிய லட்சண பாவமும் பாகத்தியாக லட்சணையுமா கிய விரண்டிற்கும் நாம மாத்திரத்தாற் பேதம்; அர்த்தத்தாற் பேத மின்று. ஆதலால் அவை விரோதப்படா. இக்கருத்தால் வாக்கிய விருத்தி என்னும் நூலி னிடத்து ஆசாரியரவர்களால் தத்துவமசி முதலிய வாக்கியங்களுக்குப் பாகத் தியாக லட்சணையால் அகண்டார்த்தத்தின் போதங் கூறியருளினர். சுலோகம். தத்வமஸ்யாதி வாக்யஂ ச தாதாத்ம்ய ப்ரதி பாதநே। லக்ஷ்யௌ தத்வம்பதார்த்தௌ த்வா வுபாதாய ப்ரவர்த்ததே. (இ-ள்) தத்துவமசி முதலிய வாக்கியங் கள் தத்துவம் பதங்களின் லட்சியார்த்தங்களைக் கொண்டே அகண்ட சொரூ பத்தைச் சொல்லுவதில் ஊக்க முடையனவாகின்றன.

அன்றியும், உலகில் எங்ஙனம் 'கடத்தைக் கொண்டுவா' 'நீலோற்பலம்' என்னுந் தொடக்கத்து வாக்கியங்கள் பதார்த்தங்களின் சம்சர்க்கத்தை அல் லது விசிஷ்டார்த்தத்தைப் போதிப்பனவாகின்றனவோ, அங்ஙனம் தத்துவ மசி முதலிய வாக்கியங்கள் சம்பந்தமாகிய சம்சர்க்கத்தை அல்லது விசிஷ்டார் த்தைப் போதிப்பன வன்று; ஆனால் ஏக அகண்டப் பிரஹ்ம சொரூபத்தை யே போதிப்பனவாகின்றன. இவ்வார்த்தையும் ஆசாரியரவர்களால் அவ்வாக் கிய விருத்தியிற் கூறப்பட்டிருக்கின்றது. சுலோகம். ஸஂஸர்கோ வா விஶி ஷ்டோ வா வாக்யார்த்தோ நாத்ர ஸம்மத:। அகண்டைகரஸத்வேந வாக்யார்த்தோ விதுஷாம் மத: (இ-ள்) வேதாந்த சாஸ்திரத்திலுள்ள தத்துவமசி முத லிய வாக்கியங்கட்குச் சம்சர்க்கவாக்கியார்த்தமாவது விசிஷ்டவாக்கியார்த்த மாவது சம்மதமன்று; ஆனல் அகண்ட ஏகரசப் பிரஹ்மமே வாக்கியார்த்த மாக வித்வான்களுக்குச் சம்மதம்.

சங்கை:—'நான் ஈஸ்வரனன்று' என்னும் யாவரது பிரத்தியட்சம் ஜீவ ஈஸ்வர்களின் பேதத்தையே விஷயஞ் செய்கின்றது. இன்னும் த்வா ஸுபர் ணா ஸயுஜா ஸகாயா (இரண்டு பறவைகள் சேர்ந்து நண்பர்கள்) என்ப தாதி சுருதிகளும் ஜீவேஸ்வர பேதமே பிரதிபாதிக்கின்றன. ஆகையால் பிரத்தி

யட்சம் சுருதி இவைகட்கு முரணுன அகண்டப் பொருளை அம்மகாவாக்கியங்கள் எங்ஙனம் பிரதிபாதிக்கும்?

**சமாதானம்:**—தத்துவமசி, அஹம் பிரஹ்மாஸ்மி, அயமாத்மா பிரஹ்மம் பிரஞ்ஞானம் பிரஹ்ம மென்னுந் தொடக்கத்துப் பல சுருதிகளில் ஜீவ ஈஸ்வரர்களின் அபேதமே கூறப்பட்டிருக்கின்றது. இச்சுருதிகட்கு முரண் படுவதால் முற்கூறிய பிரத்தியட்சம் மயக்கவடிவினதேயாம். சந்திரனைச் சொற்பவளவுள்ளவனுக் விஷயீகரிக்கும் அனைவரது பிரத்தியட்சம் எங்ஙனம் அச்சந்திரனுக்கு மகத் பரிமாணங்கூறும் ஜோதிட சாஸ்திரத்திற்கு முரண் படுவதனுல் மயக்கவடிவினதேயாகுமோ, அங்ஙனம் பேதத்தை விஷயீகரிக்கும் பிரத்தியட்சமும் அவ்வபேதத்தைக் கூறுஞ் சுருதிக்கு மாறுபடுவதனுல் மயக்கவடிவினதேயாம்.

அன்றியும், அவ்வாதி ஜீவாத்மாவினிடத்து ஈஸ்வரனது எந்தப்பேத மங்கீகரித்தனனே, அந்தப் பேதம் தர்மா தர்மங்களைப் போன்று பிரத்தியட்ச யோக்கியமேயன்று. ஏனெனின், சட்சு முதலிய புற விந்திரியங்களினுனே புறவுருவ முதலியவற்றின் பிரத்தியட்சமே யுண்டாகின்றது; ஆத்மாவாவது ஆத்மாவிலுள்ள தர்மங்களாவது அச்சட்சு முதலிய விந்திரியங்கட்குப் பிரத்தியட்சமாகாது. ஆதலால் அந்தப் பேதம் சட்சு முதலிய விந்திரியங்கட்குப் பிரத்தியட்ச மெனல் பொருந்தாது. மனதின் கண்ணே இந்திரியத்தன்மையே நிகழாதாதலால் மனதினுலும் அந்தப் பேதத்தின் பிரத்தியட்சம் பொருந்தாது. பேதத்தைச் சாட்சி பாஸ்யமென்றெப்பிடின் சொப்பன பதார்த்தங்களைப் போன்று அந்தப்பேதங் காணப்படவே வேண்டும். அப்படிப்பட்ட பேதப் பிரதீதியை விஷயஞ் செய்யும் பிரத்தியட்சத்தால் அபேதத்தைப் போதிக்கும் சுருதிக்கு பாதம் சம்பவியாது; ஆனுல் அதற்கு மாருக அச்சுருதியினுல் அந்தப் பிரத்தியட்சத்திற்கே பாதம் சம்பவிக்கும். இதனுல் பிரத்தியட்சமாக ஜீவேஸ்வரர்களின்பேதம் பெறுவது முடியாது. த்வா ஸுபர்ணா (இரண்டு பறவைகள்) என்பது முதலிய சுருதிகட்கு ஜீவ ஈஸ்வர பேதத்திற் ருற்பரியமின்று. மற்று, உலக சித்தமான பேதத்தை எடுத்துரைப்பதால் அச்சுருதிக்கு அகண்டப் பிரஹ்மத்தினிடத்தே தாற்பரியமாம். ஏனெனின், எப்பொருளின் ஞானம் விரும்பிய பயனை யளிப்பதும், எப்பொருள் பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களாலறியப்படாதாகுமோ, அப்பொருளினிடத்தே சுருதிக்குத் தாற்பரிய மாகின்றது. ஜீவப் பிரஹ்மங்களின் பேதம் அறியப்படாத தன்று, மற்று சாஸ்திர சம்ஸ்கார மில்லாதவர்கட்கும் 'நான் ஈஸ்வரனன்று' என்பது அறியப்பட்டதே யாகின்றது. பேத ஞானத்தால் விரும்பியதோர் பயனைப் பெறுதலுங்கூடாது. அதற்கு மாருக ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பஶ்யதி (எவன் ஈண்டுப் பலவாய்ப் பார்க்கின்றுனே, அவன் மிருத்யுவால் மரணமே பெறுவான்) என்னுஞ் சுருதி பேத நோக்குடையவனுக்கு மீண்டும் மீண்டும் பிறப்பிறப்புக்களின் பிராப்தியே கூறியுள்ளது.

அன்றியும், அத யோ(அ)ந்யாம் தேவதாமுபாஸ்தே அந்யோ(அ)ஸாவந்யோ(அ)ஹமஸ்மீதி ந ஸ வேத யதா பஶு: (எவன் அன்னிய மாகத் தேவதையை

யுபாசிக்கின்றானே அவன் அன்னியந்தான் யான் அவனல்லன் என்னும் ஞானத்தைப் பெறுவான் பசுப்போல) என்னுஞ் சுருதி பேதங்காண்பவனைப் பசுவிற்குச் சமானமாகக் கூறியுளது. இதனால் அச்சுருதிக்கு ஜீவப் பிரஹ்ம பேதத்தினிடத்துத் தாற்பரியமில்லை; ஆனால் அகண்டப் பிரஹ்மத்தினிடத்தே தாற்பரியமாம். ஆண்டு அவ்வகண்டப் பிரஹ்மம் பிரத்தியட்ச முதலிய பிரமாணங்கட்கு விஷயமன்றாதலால் அறியப்படாததுமாம். 𑌤𑌰𑌤𑌿 𑌶𑍋𑌕𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍। 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑌰𑌮𑍍। 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍇𑌦 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌭𑌵𑌤𑌿 (ஆத்மாவை யறிந்தவன் சோகத்தைக் கடக்கின்றான், பிரஹ்மத்தை யறிந்தவன் பரத்தை யடைகின்றான், பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமேயாகின்றான்) என்னுந் தொடக்கத்துச் சுருதிகள் அகண்டப் பிரஹ்மத்தின் ஞானத்திற்கு அநர்த்த நிவிருத்தி, பரமானந்தப் பிராப்தியாகிய பயன் கூறியிருக்கின்றன. அதனால் அச்சுருதிகட்கு அவ்வகண்டப் பிரஹ்மத்திற்றான் தாற்பரிய முண்டென்பது பெறப்பட்டது.

சங்கை:—அகண்டப் பிரஹ்மமே மகாவாக்கியங்களுக்குப் பொருளென முன்னர் நீவிர் கூறியுள்ளீர். ஆண்டுப்பிரஹ்மத்தினிடத்து அகண்டத்தன்மை யாது ? என்னு மாசங்கையுண்டாக,

## சகூ. மதபேதத்தால் அகண்டத்தன்மையின் நிரூபணம்.

இனி மதவேறு பாட்டால் அவ்வகண்டத்தன்மை நிரூபிக்கப்படுகின்றது. 𑌵𑌿𑌜𑌾𑌤𑍀𑌯𑌸𑌜𑌾𑌤𑍀𑌯𑌸𑍍𑌵𑌗𑌤𑌭𑍇𑌦𑌶𑍂𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌵𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 (இ-ள்.) விஜாதீய பேதம் 1. சஜாதீய பேதம் 2. சுவகதபேதம் 3 என்னு மூன்று பேதரகிதமே பிரஹ்மத்தினிடத்துள்ள அகண்டத்தன்மையாம். இனி பிரஹ்மத்தினிடத்து அம்மூன்று பேதங்களினின்மை காணவேண்டி முதலில் அநாத்மவஸ்துக்களினிடத்து அம்மூன்று பேதங்கள் காட்டப்படுகின்றன.

விலட்சண ஜாதியுடைய பொருள்களுக்குள்ள பாஸ்பரபேதம் விஜாதீய பேதமெனப்படும். அது தருக்களினுள்ள கடபட்முதலிய பொருள்களின் பேதமும், கடபடமுதலியவைகளில் அத்தருக்களின் பேதமும் விஜாதீய மாதற்போலாம். சமான ஜாதியுடைய பொருள்களுக்குள்ள பாஸ்பரபேதம் சஜாதீய பேதமெனப்படும். அது அரசவிருட்சத்திற்கும், எலுமிச்சை விருட்சத்திற்குமுள்ள பேதமும், எலுமிச்சை விருட்சத்திற்கும் அவ்வரச விருட்சத்திற்குமுள்ள பேதமும் சஜாதீய மாதற்போலாம். விருட்சத்திலுள்ள இலை பூ கிளைமுதலிய வற்றின் பேதமும் அவ்விலை முதலிய வற்றில் விருட்சத்தினது பேதமும் சுவகதபேதமெனப்படும்.

இவ்வாறு அநாத்மப்பொருள்கள் யாவும் முற்கூறிய முப்பேதங்களுடையனவேயாம்; பிரஹ்மத்தினிடத்து மேற்கூறிய மூவிதபேதங்களுள் ஒருவிதபேதமும் பொருந்தாது. அவைகாட்டப் படுகின்றன:—பிரஹ்மத்திற்கு வேறாகவோர் வஸ்து சத்தியமாயிருந்துழிப் பிரஹ்மத்தினிடத்து விஜாதீய பேதம் நிகழும். பிரஹ்மத்தைவிட வேறானதோர் வஸ்து சத்திய மன்று. மற்று, அவித்

தையோடு காரியப்பிரபஞ்சம் யாவும் அதிஷ்டானப் பிரஹ்மத்தினிடத்துக் கற்பித மாவதால்மித்தையே, இதனால் பிரஹ்மத்தினிடத்து விஜாதீய பேதம்பொருந்தாது. பிரஹ்மத்திற்குச் சஜாதீயமாகப்பிறிதோர் பொருளிருந்துழிப்பிரஹ்மத்தினிடத்துச் சஜாதீயபேதம் நிகழும்; பிரஹ்மத்திற்குச் சஜாதீயமாகப் பிறிதோர் பொருளில்லை. ஜீவன், பிரஹ்மத்திற்குச் சஜாதீயன் என்று கூறின், அக்கூற்றும் பொருந்தாது. ஏனெனின், तत्त्वमसि । अहं ब्रह्मास्मि । अयमात्मा ब्रह्म । क्षेत्रज्ञं चापि मां विद्धि (அதுநீ, யான் பிரஹ்மம், இவ்வான்மா பிரஹ்மம், ஜீவான்மாவையும் யானாக வறிதி) என்னுந் தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதிகளால் ஜீவப்பிரஹ்ம மிரண்டிற்கும் அத்தியந்தம் ஏகத்துவங் கூறப்பட்டிருக்கின்றது. சஜாதீயத் தன்மையோ பின்னவஸ்து விலுண்டாகும்; அபின்னவஸ்துவில் சஜாதீயத் தன்மையுண்டாகாது இதனால் பிரஹ்மத்தினிடத்துச் சஜாதீய பேதமும் பொருந்தாது. பிரஹ்மத்தினிடத்துச் சினை, குணம், தொழில், ஜாதி, சம்பந்தம் என்னுமைந்தனுள் யாதாவதொன்றிருந்துழிப் பிரஹ்மத்தினிடத்துச் சுவகதபேதம் நிகழும். மற்று, அவ்வைந்தனுள் ஒருதர்மமும் பிரஹ்மத்தினிடத்தில்லை. எக்காரணத்தாலெனின், निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनम् । साक्षी चेताः केवलो निर्गुणश्च । असङ्गो ह्ययं पुरुषः । नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः (நிட்களம் நிட்கிரியம் சாந்தம் வதைக்கமுடியாதது நிரஞ்சனம், சாக்ஷி சித்து கேவலம் நிர்க்குணம், இப்புருஷன் அசங்கனே, நித்தியன் வியாபகன் ஸ்தாணு அசலன் சநாதநன்) என்பதாதி சுருதி ஸ்மிருதிகளால் பிரஹ்மத்தினிடத்து அச்சினை முதலிய வைந்தும் நிஷேதிக்கப் பட்டிருக்கின்றன. இதனால் பிரஹ்மத்தினிடத்துச் சுவகதபேதமும் பொருந்தாது. அங்ஙனமான முற்கூறிய மூன்றுபேதரகிதத்தன்மையே பிரஹ்மத்தினிடத்து அகண்டத்தன்மையாம்.

ஆண்டுச் சுவகதபேத மொன்றில்லாத்தன்மை அகண்டத் தன்மையெனின் சாங்கியரது ஆத்மாவினிடத்து அவ்வகண்டத் தன்மையின் இலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். எக்காரணத்தாலெனின், அச்சாங்கிய மதமுடையாரும் ஆத்மாவைச் சினை குணம் தொழில் ஜாதி சம்பந்த மென்னுமைந்து மில்லதாகவே யொப்பியிருக்கின்றனர். அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் சஜாதீயபேதரகிதத்தன்மை கூறப்பட்டது. சாங்கிய சாஸ்திரமுடையார் ஆத்மா நாநாவாக வொப்பியிருக்கின்றனர். அவர் மதத்தில் ஆத்மா சஜாதீய பேதரகிதமன்று; ஆனால் சஜாதீயபேத முடையதே, இதனால் அவ்வாத்மாவினிடத்து அதிவியாப்தியுண்டாகாது. அல்லது, சஜாதீயம் சுவகதமென்னுமிரண்டு பேதங்களுமில்லாததே அகண்டமெனின் ஆகாசத்தினிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது. ஏனெனின், ஆகாசம் ஏகமாவதால் சஜாதீயபேதமில்லாததும், சினையற்றதும்தொழிலற்றதுமாவதால்சுவகதபேதமில்லாததுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்குவதற்காக அவ்விலக்கணத்தில் விஜாதீயபேத ரகிதத்தன்மை கூறப்பட்டது. அவ்வாகாசம் விஜாதீயபேத மில்லாததன்று; ஆனால் பிருதிவி முதலிய விஜாதீயப் பொருள்களின் பேதமுடையதேயாம். ஆதலால் அவ்வாகாசத்தில் அவ்விலக்கணத்திற்கு

அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது, விஜாதீயபேத மொன்றில்லாத் தன்மை அகண்டத் தன்மையெனின் பிரஹ்மத்தினிடத்துச் சஜாதீய சுவகதமென்னு மிரண்டு பேதங்களடையப்படும். அதனால் ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம (சஜாதீய விஜாதீய சுவகதபேதமற்றது பிரஹ்மம்)என்னுஞ் சுருதிக்கு விரோதமுண்டாகும். அச்சுருதிவிரோதம் நீக்கும்பொருட்டு அவ்விலக்கணத்தில் சஜாதீயபேதரகிதத் தன்மை கூறப்பட்டது. பிரஹ்மத்தினிடத்து ஏகரசத்வம் துணிய வேண்டிச் சுவகத பேதரகிதத்தன்மை கூறப்பட்டது. அல்லது, அவ்வகண்டத் தன்மைக்கு இவ்விலக்கணங் கூறுக:— த்ரவ்ய வ்ருத்தி ஸாமாந்ய ப்ரதியோகித்வம் (இ-ள்) தேசபரிச்சேதம் 1. காலபரிச்சேதம் 2. வஸ்துபரிச்சேதம் 3. என்னு மூன்று பரிச்சேதமில்லாத் தன்மை பிரஹ்மத்தினிடத்து அகண்டத் தன்மையாம்.

## ௫௦. காலதேசவஸ்து பரிச்சேதங்கள் கூறுதல்.

இனி பிரஹ்மத்தினிடத்து மூன்று பரிச்சேதங்களில்லாத் தன்மை காண்பிக்கும் பொருட்டு முதற்கண் அநாத்மவஸ்துக்களினிடத்து அம்மூன்று பரிச்சேதங்கள் காட்டப்படுகின்றன. அத்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகித்தன்மை தேசபரிச்சேத மெனப்படும். அது, கடத்தன்மை முதலிய தர்மங்கட்குப் படமுதலிய வற்றிலத்தியந்தா பாவமுளது; அவ்வத்தியந்தா பாவத்திற்குப் பிரதியோகித்தன்மை அக்கடத்தன்மைமுதலியதர்மங்களிலுளதாதற்போலாம். இதுவே அக்கடத்தன்மை முதலிய தர்மங்களிலுள்ள தேசபரிச்சேதமாம். பிராகபாவப் பிரத்தொம்சா பாவங்களுக்குப் பிரதியோகித்தன்மை காலபரிச்சேத மெனப்படும். அது, கடம் தனது உற்பத்திக்குப் பூர்வம் தனது உபாதான காரணமாகிய கபாலங்களிலுள்ள பிராகபாவத்தைப் போலவும், தனது நாசத்திற்குப் பிறகு அக்கபாலங்களிலுள்ள பிரத்தொம்சா பாவத்தைப் போலவுமாம். பிராகபாவப் பிரத்தொம்சா பாவங்களுக்குப் பிரதியோகித் தன்மை அக்கடத்தின் கண்ணிருக்கின்றது. இதுவே அக்கடத்திலுள்ள காலபரிச்சேதமாம். அன்யோன்யா பாவத்திற்குப் பிரதியோகித் தன்மை வஸ்து பரிச்சேதமெனப்படும். அதுகடத்தின் பேதம் படத்திலும் படத்தின் பேதம் கடத்திலுமிருத்தற்போலாம். இதுவே அக்கடபட முதலியவைகளிலுள்ள வஸ்து பரிச்சேதமாம். இவ்வாறு அநாத்ம பதார்த்தங்கள் யாவும் முற்கூறிய மூன்று பரிச்சேதங்களுடையனவே.

பிரஹ்மத்தினிடத்து முற்கூறிய மூன்று பரிச்சேதங்களுள் ஒருவகைப்பரிச்சேதமுமில்லை. அது காட்டப்படுகின்றது. ஆண்டு ஆகாசவத் ஸர்வகதஸ்ச நித்ய: மஹதோ மஹீயாந் (ஆகாயம்போல் எங்கும் பரந்த நித்தியன், பெரிதிலும் பெரியோன்) என்னுந்தொடக்கத்துச் சுருதிகள் பிரஹ்மத்தை விபுவெனக் கூறியுள்ளன. விபுத்திரவியத்திற்கு ஓரிடத்தும் அத்தியந்தா பாவமுண்டாகாது. ஆகையால் பிரஹ்மத்தினிடத்து தேசபரிச்சேதம் சம்பவியாது. ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம। நஜாயதே ம்ரியதே வா கதாசித் (பிரஹ்மம் சத்திய ஞானமனந்தம், ஒருபோதும்பிறப்பதுமில்லை மரிப்பதுமில்லை)என்னுந்தொடக்கத்துச் சுருதிகள்

பிரஹ்மத்தை உற்பத்தி நாசங்களில்லாத நித்தியமென்று கூறியிருக்கின்றன. நித்திய வஸ்துவிற்குப் பிராகபாவப் பிரத்தொம்சா பாவங்களுண்டாகா. ஆதலால் பிரஹ்மத்தினிடத்து காலபரிச்சேதமும் சம்பவியாது. அன்றியும் சொப்பன பதார்த்தங்களைப் போன்று சர்வஜகத்தும் பிரஹ்மத்தினிடத்து ஆரோபிக்கப் படுவதால் மித்தையாம். ஆரோபிக்கப்பட்ட மித்தியாவஸ்து அதிஷ்டானத்தினும் பின்னசத்தையுடைய தாகாது. ஆதலால் அதிஷ்டானப் பிரஹ்மமே சர்வ ஜகத்திற்கும் ஆத்மவடிவமாம், இக்காரணத்தால் பிரஹ்மத்தினிடத்து வஸ்து பரிச்சேதமும் சம்பவியாது. சுருதி. வேதாஹ மேதம் அஜரம் புராணம் ஸர்வாத்மாநம் ஸர்வகதம் விபுத்வாத் (இ-ள்) எந்தப் பிரஹ்மம் மூப்பில்லாததும், புராணமும், சர்வாத்மவடிவமும், விபுவாவதால் எங்கு முள்ளது மாகுமோ, அப்படிப்பட்ட பிரஹ்மத்தை அபரோட்சமாக வறிகின்றேன்.

கற்பதருவென்னும் நூற்கு ஆசிரியராகிய ஆசாரியரோ அவ்வகண்டத்தன்மைக்கு இவ்விலக்கணங் கூறியுள்ளார். அபர்யாயாநேக சப்தப்ரகாச்யத்வே ஸதி அவிசிஷ்டத்வம் அகண்டத்வம் (இ-ள்.) அபரியாயமும் அநேகமுமாகிய சப்தங்களால் எவ்வஸ்து பிரகாசிக்கப்படுவதாயும் விசிஷ்டபாவ மில்லாததாயுமிருக்கின்றதோ அவ்வஸ்து அகண்டமாம், என்று அவர்கூறியிருக்கின்றனர். 'தத்துவமசி, அகம் பிரஹ்மாஸ்மி' என்பன முதலிய மகாவாக்கியங்களிலுள்ள தத்துவ முதலியசப்தங்கள் வாச்சியார்த்தத்தின் வேறுபாட்டால் அபரியாயமும் அநேகமுமாம். அங்ஙனமான சப்தங்களால் பிரஹ்மம் பிரகாசிக்கப்படுவதும், விசிஷ்டபாவ மில்லாததுமாம். இதுவே பிரஹ்மத்தினிடத்துள்ள அகண்டத்தன்மையாம். ஆண்டுக் 'கடம் கலசம்' என்னும் அநேக சப்தங்களால் கடம் பிரகாசிக்கப்படுவதாயினும் அச்சப்தங்கள் அபரியாய மன்று; ஆனால் * பரியாயமேயாம். 'நீல முற்பலம்' என்னும் அபரியாய அநேக சப்தங்களால் உற்பலம் பிரகாசிக்கப்படுவதாயினும் அது விசிஷ்டபாவ மில்லாததன்று; ஆனால் நீலகுண விசிஷ்டமேயாம். ஆதலால் கடம் நீலோற்பல முதலியவற்றில் அவ்வகண்டதன்மையின் இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ (எவனை வாக்குச் சொல்லமுடியவில்லையோ, எவனை மனமும் அடைய முடியவில்லையோ) என்பனமுதலிய சுருதிகள் பிரஹ்மத்தை மனோவாக்குகளுக்கு விஷயமல்லாததெனக் கூறியுள்ளன. ஆதலால் பிரஹ்மத்தினிடத்து நேராகச்சப்தத்தாற் பிரகாசிக்கப்படுந்தன்மை சம்பவியாது, எனினும், வாச்சியார்த்தமாகிய மாயை யந்தக்கரணங்கள் வாயிலாக இலட்சணா விருத்தியால் பிரஹ்மத்தினிடத்துச் சப்தத்தாற் பிரகாசிக்கப் படுந்தன்மை சம்பவிக்கின்றது. ஒருகால் இலட்சணா விருத்தியாலும் பிரஹ்மத்தினிடத்துச் சப்தத்தாற் பிரகாசிக்கப் படுந்தன்மை யொப்பாவிடின் தம் த்வௌபநிஷதம் புருஷம் ப்ருச்சாமி (இ-ள்.) உபநிஷத்தாகிய சப்தப்பிரமாணத்தா லறியத்தக்கதான அப்பரமாத்மாவின் சொரூபத்தை யான்உம்மை வினவுகின்றேன்—என்னுஞ் சுருதிக்கு விரோதமடையப்படும். ஆதலால் தத்துவமசி முதலிய மகாவாக்கியங்கள்

* பரியாயம்-ஒருபொருள் குறித்தமறுசொல், அஃதில்லது அபரியாயம்.

தத்துவம் பதங்களின் இலட்சியார்த்தத்தைக் கொண்டே அவ்வகண்டசொருபப் பிரதிபாதனத்திற் பிரவிருத்தமுடையன வென்னும் அர்த்தம் எல்லாக்குற்றங்களுமற்றதாம்.

சங்கை:—முற்கூறிய முறைப்படி தத்துவமசி முதலிய வாக்கியங்கள் அவ்வகண்டார்த்தத்தைப்போதிப்பனவாகுக: ஆனுல் அவ்வகண்டார்த்த உணர்வால் அதிகாரிகட்குப் பயன்யாது ?

சமாதானம்:—சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குரு எப்போது இவ்வதிகாரியை நோக்கித் தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களை உபதேசிக்கின்ருரோ, அப்போதே இவ்வதிகாரிக்குப் பாகத்தியாக லட்சணையால் மாயையந்தக்கரண முதலிய வாச்சியபாகங்களை விடுதல் வாயிலாக அகண்டப் பிரஹ்மத்தின் ஞான முண்டாகின்றது. அஃதாவது 'அகம் பிரஹ்மாஸ்மி (நான் பிரஹ்மம்)' 'பிரஹ்மைவாஹ மஸ்மி (பிரஹ்மம் நான்)' என்றிவ்வாறு பரஸ்பர அபேதத்தை விஷயஞ்செய்யும் அபரோட்ச ஞான முண்டாகின்றது. ஆண்டு 'அகம் பிரஹ்மாஸ்மி' என்னும் விருத்தியோ அகம் பதத்திற்கு அர்த்தமாகிய பிரத்தியக் ஆத்மாவினிடத்துப் பிரஹ்மத்தின் அபேதத்தை விஷயஞ் செய்வதாம். 'பிரஹ்மைவாஹமஸ்மி' என்னும் விருத்தியோ பிரஹ்மத்தினிடத்துப் பிரத்தியக் ஆத்மாவின் அபேதத்தை விஷயஞ் செய்வதாம். அகம் பதத்திற்கு அர்த்தமாகிய பிரத்தியக் சேதனத்தினிடத்து யாவருக்கும் அபரோட்சத் தன்மையும் ஆத்மத்தன்மையும் சித்தமாம். ஆனுல் எவரும்பிரஹ்மத்தைப் பரோட்சமெனவும் அநாத்மாவெனவு மொப்பியிருக்கின்ருர்கள். எப்போது பிரத்தியக் ஆத்மாவினிடத்துப் பிரஹ்மத்தின்அபேதத்தை விஷயஞ்செய்வதாகிய'அகம் பிரஹ்மாஸ்மி'என்னும் அபரோட்ச ஞான முண்டாகின்றதோ, அப்போதே அந்த ஞானத்தால் பிரஹ்மத்தின் பரோட்சத் தன்மையும், அநாத்மத்தன்மையும் நீங்கி விடுகின்றன. அன்றியும், ஜீவாத்மாவிற்கு யாவரும் பரிச்சின்னமும், பிரஹ்மமல்லா வடிவமு மொப்பியிருக்கின்றனர். எப்போது பிரஹ்மத்தினிடத்து ஜீவாத்மாவின் அபேதத்தை விஷயஞ்செய்வதாகிய 'பிரஹ்மைவாஹமஸ்மி' என்னும் அபரோட்ச ஞான முண்டாகின்றதோ, அப்போதே அந்த ஞானத்தால் ஜீவாத்மாவின் பரிச்சின்னத் தன்மையும் பிரஹ்மமல்லாத் தன்மையும் நீங்கிவிடுகின்றன. ஆதலால் அதிகாரி பிரஹ்மத்தினிடத்துப் பரோட்சத்தன்மை அநாத்மத்தன்மைச் சங்கைகளை நீக்கும் பொருட்டும், தனதாத்மாவினிடத்துப் பரிச்சின்னத்தன்மை பிரஹ்மமல்லாத்தன்மைச் சங்கைகளை நீக்கும் பொருட்டும், அகம் பிரஹ்மாஸ்மி பிரஹ்மைவாஹமஸ்மி என்றிவ்வாறு ஆத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் ஒன்றற்கொன்று அபேதம் நிச்சயித்தல் வேண்டும்.

இவ்வாறு தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களாலுண்டான அகண்டப் பிரஹ்மாகார அபரோட்ச விருத்தியாதோ, அந்த அபரோட்ச விருத்தியாகிய ஞானத்தால் காரியப்பிரபஞ்ச சகித அஞ்ஞானமாகிய அநர்த்த நிவிருத்தியும், இந்தப் பிரத்தியகாத்மா அகண்ட ஏகரச பிரஹ்மானந்தவடிவமாக நிலைத்தலு முண்டாகின்றன. சுருதி. தரதி ஶோகமாத்மவித் । ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ

ஷவதி (இ-ள்.) ஆத்ம சாட்சாத்காரமுடையவன் சர்வாநர்த்தமாகிய சோகத்தை நாசஞ்செய்கின்ருன். அகம் பிரஹ்மாஸ்மி என்று பிரஹ்மத்தைத்தனது ஆத்ம வடிவாக வுணரும் வித்வான் பிரஹ்ம வடிவனேயாகின்ருன்—என்னுந் தொடக்கத்துப் பலசுருதிகள் பிரஹ்மத்தை யறிந்தவனுக்குப் பிரஹ்ம சாட்சாத்காரத்தால் அஞ்ஞான நிவிருத்தியும் பிரஹ்மானந்தப் பிராப்தியுமாகிய பயன் கூறியுள்ளன.

இஃது ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ரா ஜகாசார்ய

ஸ்ரீ உத்தவானந்த கிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யன்

சித்கனனந்த கிரி சுவாமியாற் செய்யப்பட்ட

பிராகிருத தத்துவாநு சந்தானத்தின்

முதற் பரிச்சேதம் முற்றிற்று.

---




ஓம் ஸ்ரீ கணேசாயநம:, ஸ்ரீ குருப்யோநம:,
ஸ்ரீ காசீவிஸ்வேஸ்வராப்யாம் நம:, ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம:

# தத்துவாநுசந்தானம்

## இரண்டாவது பரிச்சேதம்

தத்துவமசி முதலிய வாக்கியங்களாலுண்டான அகண்டப் பிரஹ்மத்தை விஷயஞ்செய்யும் அபரோட்ச விருத்தியினால் அதிகாரிக்கு அஞ்ஞான நிவிருத்தியும் பரமானந்தப் பிராப்தியு முண்டாகின்றன வென்னும் வார்த்தை முன்னே முதற் பரிச்சேதத்தின் ஈற்றில் சொல்லப்பட்டது. அதன் கண் இந்த ஜிஞ்ஞாசை (அறியும் வேட்கை) உண்டாகின்றது:—அவ்விருத்தியின் சொரூபம்யாது ? அவ்விருத்தியினிடத்துப் பிரமாணம்யாது ? அவ்விருத்தி எவ்வகையாக உற்பத்தியாகின்றது ? அவ்விருத்தியினால் யாது பயன் பெறப்படுகின்றது ? என்னும் வேட்கையடையப்பட பிரமை அப்பிரமை யென்னும் வேறுபாட்டால் இருவகைப்பட்ட விருத்திகளைக் கூறக்கருதி முதற்கண் அவ்விருத்தியின் சாமான்ய லட்சணங் கூறப்படுகின்றது.

சங்கை:—பிரமாணத்தானே பிரமேயம் பெறப்படும், ஆதலால் நூலினிடத்து முதலிற் பிரமாணமே கூறி அதன் பின்னர் பிரமேயங் கூறுதல் வேண்டும். இக்காரணம் பற்றியே நியாய சாஸ்திரத்தில் முதலிற் பிரமாணங் கூறப்பட்டுப் பின்னர் பிரமேயங் கூறப்பட்டிருக்கின்றது. ஆனால் நீவிரோ முதற் பரிச்சேதத்தில் பிரஹ்மாத்மமாகிய பிரமேயங் கூறி இவ்விரண்டாவது பரிச்சேதத்திற் பிரமாணங் கூறுகின்றீர், ஆதலால் நுமது இக்கூற்று சர்வசாஸ்திரங்கட்கும் விருத்தம்.

சமாதானம்:—நியாயமுதலிய பிறசாஸ்திரங்களில் பிரமேயம் ஜடமானதால் அந்தப்பிரமேயம் பிரமாணத்தின் அதீனம (உரித்த)ாகவே பெறப்படுகின்றது. ஆகையால் அவ்வேறு சாஸ்திரங்களிலோ முதற்கண் பிரமேயங்கூறப்பட்டே பின்னர் பிரமேயங்கூறல் உசிதம்; இவ்வேதாந்த சாஸ்திரத்தின்கண்ணோ பிரமாணமுதலிய வெல்லா வியவகாரங்கட்கும் சாதகமான அத்துவிதீய ஆத்ம வடிவான சாட்சி சைதன்யமே பிரமேயம். ஆகையால் இவ்வேதாந்த சாஸ்திரத்தினிடத்து முதற்கண் சைதன்யமாகிய பிரமேயங்கூறப்பட்டே பின்னர் அந்தப்பிரமாண முதலியவற்றைக்கூறல் உசிதம்.

இவ்வார்த்தை சங்க்ஷேப சாரீரகமென்னும் நூற்கண்ஸ்ரீசர்வஞ்ஞ மகாமுனிவராலும் கூறப்பட்டிருக்கின்றது. சுலோகம். ஊநெந யோ வமதிஜு யாஜ

யுக்தஸ்ய ஜாட்யா அபிநிஷ் காம்ஜௌ ஜெயேத ஊநா வம திஷூ யாதா வெ டிாஜ வாசெ ருஷ ஜஸம் ஹிஜெயமு॥ (இ-ள்.) பூர்வமீமாம்சையில் தர்மமுதலிய வான பிரமேயம் ஜடமானதால் அந்தப்பிரமேயத்தின் பெறுதி பிரமாணத்தாற் கூடும்; வேதாந்தசாஸ்திரத்தில் பிரஹ்மாத்மமாகிய பிரமேயம் சேதனமான தால் அந்தப்பிரமேயத்தின் பெறுதி பிரமாணத்தாற் கூடாது; ஆனல் சேதனப் பிரமேயத்தினனே ஜடப்பிரமாணத்தின் பெறுதி தகுதியாம்.

## விருத்தியின் சாமானியலட்சணம்.

இனி அவ்விருத்தியின் சாமானியலட்சணங் கூறப்படுகின்றது. 'விஷய வெதந்யா ஹிவ்யம் ஜகொாஃஜ: கரணா ஜ்ஞாந யொ: வரிணாம விஶெஷ: வ்ருத்தி: (இ-ள்.) கடபடமுதலியவான விஷயங்களால் அவச்சின்னமான சைத ன்யம் விஷயசைதன்யமெனப்படும். அவ்விஷய சைதன்யத்தின் அபிவியஞ்சக மா (வெளிப்படுத்துவதா) கிய அந்தக்கரண அல்லது அஞ்ஞானத்தின் பரிணும விசேஷம் விருத்திஞானமெனப்படும். குரோதம் இச்சை சுகம் துக்க முதலிய வைகளும் அந்தக்கரணத்தின் பரிணுமங்களாகவும், ஆகாசமுதலியவைகள் அஞ் ஞானத்தின் பரிணுமங்களாகவும் உளவாஞலும் குரோதமுதலியவைகளில் அவ் விஷய சைதன்யத்தை வெளிப்படுத்துந்தன்மையில்லை. இதனுல் விஷய வெத ந்யா ஹிவ்யம் ஜக: (விஷயசைதன்யத்தை வெளிப்படுத்துவதாகிய) என்னும் பதங்களைக்கூறலால் குரோத முதலியவற்றில் அவ்விருத்தியின் லட்சணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. சட்சுமுதலிய விந்திரியங்களும் தம்மாற்றேன்றும் விருத்திவாயிலாக அவ்விஷய சைதன்யத்தை வெளிப்படுத்துவதேயாயிடினும் அச்சட்சு முதலிய விந்திரியங்கள் அந்தக்கரண அல்லது அஞ்ஞானத்தின் பரி ணுமங்களாகா; ஆனல் தேயுவாதிய பூதங்களின் பரிணுமங்களேயாம். இதனல் அந்தக்கரண அல்லது அஞ்ஞான பரிணுமமென்றலால் அச்சட்சு முதலிய விந் திரியங்களில் அவ்விருத்தியின் லட்சணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அதி வியாப்தி அவ்வியாப்தி அசம்பவம் என்னுமுக்குற்றங்களின் சொரூபம்முதற்பரி ச்சேதத்திற் கூறப்பட்டுளது. அவை இங்கேயும் அறிந்துகொள்க.

சங்கை:—முன்னே விருத்தியினிடத்து விஷயசைதன்யத்தின் அபிவியஞ் சகத்தன்மை கூறப்பட்டது, அவ்வபிவியஞ்சகத் தன்மையாவதியாது ? என்னு மாசங்கையுண்டாக, இப்போது அவ்வபிவியஞ்சகத் தன்மையின் இலக்கணங் கூறப்படுகின்றது. கவரொக்ஷ வ்யவஹாா ஜநகக்ஷம் கஹிவ்யம் ஜககூழ (இ-ள்.) 'இதுகடம்', 'இதுபடம்' என்னும் அபரோட்ச வியவகாரத்தையுண்டு பண்ணுந் தன்மையே அவ்விருத்திகளினிடத்து விஷயசைதன்யத்தின் அபிவியஞ்சகத் தன்மையாம்.

சங்கை:—சட்சுமுதலிய விந்திரியங்களாற்றேன்றும், அபரோட்ச விருத் திகளினிடத்தோ அவ்வபரோட்ச வியவகாரத்தை யுண்டுபண்ணுந்தன்மை நிக ழும்; ஆனல் அனுமான முதலிய பிரமாணங்களாற்றேன்றும் அனுமிதிமுதலிய பரோட்ச விருத்திகளினிடத்து அவ்வபரோட்ச வியவகாரத்தை யுண்டுபண்ணு

ந்தன்மை நிகழாது. எக்காரணத்தாலெனின், 'மலைநெருப்புடைத்து' என்னும் அனுமிதிக்குப்பிறகு 'இது நெருப்பு' என்னும் அபரோட்ச வியவகாரம் ஒருவருக்கு முண்டாகின்றதில்லை. ஆகையால் அனுமிதி முதலிய பரோட்சவிருத்திகளில் அவ்வபிவியஞ்சகத் தன்மையில்லாமையால் முற்கூறிய விருத்தியின் லட்சணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகின்றது.

இவ்வருசியுண்டாகவினி அவ்வபிவியஞ்சகத் தன்மை வேறுவகையாக நிர்வசனஞ் செய்யப்படுகின்றது. ஆவரண நிவர்த்தகத்வம் அபிவ்யஞ்ஜகத்வம் (இ-ள்.) அவ்விருத்திகளினிடத்து ஆவரணத்தை நீக்குந்தன்மையாதோ அதுவே அவ் விஷயசைதன்யத்தின் அபிவியஞ்சகத் தன்மையாம். அவ்வபிவியஞ்சகத் தன்மை அனுமிதிமுதலிய பரோட்ச விருத்திகளினுமுளது. ஆதலால் அப்பரோட்ச விருத்திகளில் மேற்கூறிய இலட்சணத்திற்கு அவ்வியாப்தி இல்லை. ஈண்டு இது அபிப்பிராயம்:—அஞ்ஞானத்தாலாக்கப்பட்ட ஆவரணம் இருவிதம். ஒன்று அசத்வாபாதக ஆவரணம், மற்றொன்று அபானுபாதக ஆவரணம். ஆண்டுக்கட முதலிய விஷயங்கள் நாஸ்தி (இல்லை) என்னும் வியவகாரத்திற்கு ஏதுவாகிய ஆவரணமோ அசத்வாபாதக ஆவரணமெனப்படும் நபாதி (விளங்கவில்லை) என்னும் வியவகாரத்திற்கு ஏதுவாகிய ஆவரணம் அபானுபாதக ஆவரணமெனப்படும். அபானுபாதக ஆவரணமோ அபரோட்ச ஞானத்தினுனே நிவிருத்தியாகின்றது; பரோட்சஞானத்தினுல் நிவிருத்தியாகின்றதில்லை. அசத்வாபாதக ஆவரணம் அனுமிதி முதலிய பரோட்ச ஞானங்களானும் நிவிருத்தியாகின்றது. எக்காரணத்தாலெனின், புகையாகிய ஏதுவின் உணர்வால் 'மலைநெருப்புடைத்து' என்னும் அனுமிதியுண்டாகு மிடத்தும், சாஸ்திரப் பிரமாணத்தால் சுவர்க்க முதலிய பரோட்சஞான முண்டாகு மிடத்தும், மலையின்கண் நெருப்பில்லை, சுவர்க்கமுதலியவையில்லை, என்னும்நாஸ்தி வியவகாரம் உண்டாகின்றதில்லை; ஆனுல் வன்னியுளது, சுவர்க்கமுளது என்னும் அஸ்தி (இருத்தல்) வியவகாரமுண்டாகின்றது, ஆகையால் அனுமிதி முதலிய பரோட்ச விருத்திகளிலும் அவ்வசத்வாபாதக ஆவரணத்தை நிவிருத்திக்குந்தன்மை யுளது.

அல்லது அஞ்ஞானத்தாலாக்கப்பட்ட ஆவரணம் இருவிதம். ஒன்று விஷயசைதன்யத்திலுள்ள ஆவரணம், மற்றொன்று பிரமாதா சைதன்யத்திலுள்ள ஆவரணம். விஷயசைதன்யத்திலுள்ள ஆவரணமோ அபரோட்ச ஞானத்தினுனே நிவிருத்தியாகின்றது, பிரமாதா சைதன்யத்திலுள்ள ஆவரணம் பரோட்ச ஞானத்தினுலும் நிவிருத்தியாகின்றது. ஆகையால் அவ்வனுமிதி முதலிய பரோட்ச விருத்திகளில் அவ்வாவரணத்தை நிவிருத்திக்குந் தன்மையாகிய அபிவியஞ்சகத் தன்மை பெறப்படும், ஆகவே முற்கூறிய விருத்தி லட்சணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகாது.

சங்கை:—சுகதுக்க முதலியவைகளை விஷயஞ்செய்யும் விருத்தி ஞானத்திலும், ஈசுரனது மாயா விருத்திஞானத்திலும் அவித்தியா விருத்தியாகிய பிரம (மயக்க) ஞானத்திலும் அவ்வாவரணத்தை நிவிருத்திக்குந் தன்மையின்றாகையால் அவ்விருத்திகளில் மேற்கூறிய லட்சணத்திற்கும் அவ்வியாப்தியே யுண்டாகும். இங்ஙனம் அருசி (இனிப்பின்மை) யுண்டாக,

இனி வேறுவகையாக அவ்வபிவியஞ்சகத் தன்மை கூறப்படுகின்றது. அஸ்தி வ்யவஹார ஜநகத்வம் அபிவ்யஞ்ஜகத்வம் (இ-ள்.) கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்னும் இருத்தல் வியவகாரத்தை யுண்டுபண்ணுந்தன்மையே அவ்விருத்திகளிலுள்ள விஷயசைதன்யத்தின் அபிவியஞ்சகத் தன்மையாம். இவ்வபிவியஞ்சகத் தன்மை அவ்வபரோட்ச விருத்திகளிலும், பரோட்ச விருத்திகளிலும், சுகதுக்கமுதலியவைகளை விஷயஞ்செய்யும் விருத்திகளிலும், ஈசுரனது மாயாவிருத்தியிலும்,பிரமவிருத்திகளிலுமாகிய வெல்லாவிடங்களிலும் இருக்கின்றது. இந்த லட்சணத்திற்கு ஒருவிருத்தியின் கண்ணும் அவ்வியாப்தியின்று.

சங்கை:—முன் நீவிர் விருத்திலட்சணத்தில் அந்தக்கரண அல்லது அஞ்ஞானத்தின் பரிணாமம் விருத்தியென்று கூறினீர், அதுபொருந்தாது, ஏனெனின் பூர்வரூப பரித்யாகேந ரூபாந்தராபத்தி: பரிணாம: (இ-ள்.) ஒருபொருள் தனது முன்வடிவம்விட்டு வேறுவடிவமடைதல் பரிணாமமெனப்படும். இதுதான் பரிணாமத்தின் லட்சணமாகக் கூறுதலாகும், உலகில் ஒருபொருளின் முன்னுருவமிருக்க அல்லது முன்னுருவம் நஷ்டமாக வேற்றுருவம் காணப்படாத காரணத்தால், அது (பரிணாம லட்சணம்) பொருந்தாது. அன்றியும் வேதாந்த சாஸ்திரத்தில் விவர்த்தவாதமே அங்கீகரிக்கப்பட்டுளது; பரிணாமவாத மங்கீகரிக்கப்படவில்லை. ஒருகால் அப்பரிணாமவாத மங்கீகரிக்கப்படின் சித்தாந்தத்திற்கு விரோதம் பிராப்தமாம், என்னுமாசங்கையுண்டாக,

## பரிணாம விவர்த்தங்களின் இலக்கணங் கூறுதல்.

இப்போது பரிணாம விவர்த்தங்களின் இலக்கணங்கள் கூறப்படுகின்றன. உபாதாந ஸம ஸத்தாக கார்யாபத்தி: பரிணாம:। உபாதாந விஷம ஸத்தாக கார்யாபத்தி: விவர்த்த: (இ-ள்.) உபாதான காரணத்திற்குச் சமானசத்தையுடைத்தாகிய வவ்வுபாதானத்தின் வேற்றுருவம் பரிணாமமெனப்படும். அது பாலின் பரிணாமம் தயிர்போலும். ஆண்டுப்பால் வியாவகாரிகசத்தை, தயிரும் வியாவகாரிகசத்தை. ஆகையால் பாலாகிய உபாதான காரணத்தின் சமானசத்தை யுடையது தயிர்; ஆனால் தயிரினிடத்துப் பாலின் வியவகாரம் நிகழ்வதில்லை. ஆகையால் தயிரானது பாலின் வேற்றுருவமே. இதனாற் தயிரினிடத்துப் பாலின் பரிணாமத்தன்மை பொருந்தும்.

உபாதானகாரணத்தினும் விஷம (வேற்றுச்) சத்தை யுடைத்தாகிய வவ்வுபாதானத்தின் வேற்றுருவம் விவர்த்தமெனப்படும். அது,இரஜ்ஜுவிற்காணப்பட்ட சர்ப்பம் ரஜ்ஜு அவச்சின்ன சைதன்யத்தின் விவர்த்தமாதல் போலாம்.ஆண்டுச் சைதன்யமோ பாரமார்த்திகசத்தை,கற்பித சர்ப்பம் பிராதிபாசிக சத்தையாகையால் சர்ப்பம், சைதன்யமாகிய உபாதான காரணத்தினும் விஷமசத்தையுடையதும், 'இது சர்ப்பம்' என்னும் வியவகாரத்திற்கு விஷயமாவதால் அச்சர்ப்பம் சைதன்யத்திற்கு வேற்றுருவமுமாம். இதனாற் கற்பித சர்ப்பத்தினிடத்துச் சைதன்யத்தின் விவர்த்தத்தன்மை பொருந்தும்.

'வேற்றுருவம் பரிணமம்' என்னும் இம்மாத்திரமே பரிணமத்திற்கு இலட்சணமானல் வேற்றுருவ விவர்த்தத்தில் பரிணமத்தின் லட்சணத்திற்கு அதிவியாப்தியுண்டாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை விலக்குவதற்காக அப்பரிணம லட்சணத்தினிடத்து 'உபாதானத்திற்குச் சமானசத்தை யுடைத்தாகிய' என்று கூறப்பட்டது. விவர்த்தமானது உபாதானத்திற்குச் சமானசத்தையுடைய தன்ருகையால் விவர்த்தத்தினிடத்து பரிணமத்தின் லட்சணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இவ்வாறே விவர்த்தலட்சணத்திலும் வேற்றுருவ பரிணமத்தின் அதிவியாப்தி தோஷத்தை விலக்குவதற்காக 'உபாதானத்தினும் விஷமசத்தை யுடைத்தாகிய' என்று கூறப்பட்டது. இங்ஙனம் பரிணமவிவர்த்தங்களுக்கு ஒன்றற்கொன்று வேற்றுமையுண்டு. அப்படியே ஈண்டுப்பிரசங்கத்தில் முற்சொன்ன விருத்தியும், அந்தக்கரண அஞ்ஞானமாகிய உபாதானகாரணங்களின் அபேட்சையாற் பரிணமமும் அதிஷ்டான சைதன்யத்தின் அபேட்சையால் விவர்த்தமுமாகின்றது. இதனுற் பரிணமத்திற்கு அப்பிரசித்தியும் சித்தாந்தத்திற்கு விரோதமு முண்டாகா.

சங்கை:—அந்தக்கரணம் நிரவயவ திரவியமாகையால் அவ்வந்தக்கரணத்திற்கு விருத்திவடிவான பரிணமம் நிகழாது. ஏனெனின், உலகத்தில் சாவயவமான பால்முதலியவைகட்கே தயிர் முதலிய பரிணமங் காணப்படுகின்றது. நிரவயவ திரவியத்திற்கு யாண்டும் பரிணமங் காணப்படவில்லை. ஒருகால் நிரவயவ திரவியத்திற்கும் பரிணம மொப்பிடின் அந்த நிரவயவ திரவியத்தின் சொரூபத்திற்கே நாசமுண்டாகும்.

சமாதானம்:—தந்மநோऽகுருத (இ-ள்.) பரமாத்மாமனதையுண்டுபண்ணினர்—என்றல் முதலியசுருதிகளில் மனமாகிய அந்தக்கரணத்திற்கு உற்பத்தி கூறப்பட்டுளது. எவ்வெத் திரவியங்கள் உற்பத்தியுடையனவோ அவ்வத்திரவியங்கள் பால் முதலியவைகளைப்போன்று சாவயவமேயாம். அந்தக்கரணம் சாவயவமாதலால் அதற்குப் பரிணமத்தன்மை நிகழும். அன்றியும் எப்படி அந்தக்கரணத்திற்குச் சாவயவத்தன்மை சுருதிப்பிரமாணத்தாற் பெறப்படுகின்றதோ, அப்படி விருத்தி ஞானத்திற்கு அந்தக்கரண தருமத்தன்மையும் சுருதிப்பிரமாணத்தானே பெறப்படுகின்றது. சுருதி. காம: ஸங்கல்போ விசிகித்ஸா ஶ்ரத்தாऽஶ்ரத்தா த்ருதிரத்ருதிர்ஹ்ரீர்தீர்பீரித்யேதத் ஸர்வம் மந ஏவ (இ-ள்.) இச்சை, சங்கற்பம், சம்ஸயம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், இலஜ்ஜை, விருத்திஞானம், பயம் இவையனைத்தும் மனத்தின் தர்மங்களே—இச்சுருதி இச்சை முதலியவைகளை அந்தக்கரணத்தின் தர்மங்களாகவே கூறுகின்றது.

சங்கை:—'நான் அறிகின்றேன்' 'நான் இச்சிக்கின்றேன்' என்னு மநுபவம் யாவருக்கு முண்டாகின்றது. அவ்வநுபவத்தால் ஞான இச்சை முதலியவைகள் ஆன்மாவின் தர்மங்களாகவே பெறப்படுகின்றன. அந்த ஞானம் இச்சை முதலியவைகளினிடத்து அந்தக்கரணத்தின் தருமத்தன்மை சம்பவியாது. ஒருகால் ஞான இச்சை முதலியவைகளை அந்தக்கரணத்தின் தருமங்களாக

வொப்பிடின், முற்சொன்ன அநுபவத்திற்கு விரோதமுண்டாகும்; ஆனல் இவ் (ஆன்மாவின் தரும)வநுபவத்திற்கு யாதொருபாதகமு மின்ருதலால் இவ்வநுபவத்தினிடத்து மலேவுமுண்டாகாது. ஞானம் இச்சை முதலியவைகள் மனமாகிய நிமித்தகாரணத்தாற் பிறக்கின்றனவாதலால் ஏதத்ஸர்வம் மந ஏவ (இவையாவும் மனமே)என்னுஞ் சுருதிக்கு அவ்விச்சை முதலியவையாவும் மனத்தானே தோன்றுவனவா மென்னும் பொருள் பொருந்தும். இதனல் அச்சுருதிவசனத்தானும் இச்சைஞான முதலியவைகள் அந்தக்கரண தருமங்களெனல் பெறப்படா.

சமாதானம்:—எங்ஙனம் வாஸ்தவத்தில் தகிக்குந்தன்மையில்லாத இரும்புருண்டையில் அக்னியின் தாதான்மிய சம்பந்தத்தால் இவ்விரும்புருண்டை தகிக்கின்றதென்னும் தாககர்த்திருத்வ வியவகாரமுண்டாகின்றதோ, அங்ஙனம் அந்தக்கரண ஆன்மாவாகிய விரண்டின் தாதான்மிய வத்தியாசத்தினனே 'நான் அறிகின்றேன்', 'நான் இச்சிக்கின்றேன்' என்னுந்தொடக்கத்து அநுபவங்களுண்டாகின்றன. அத்தியாசத்திற் பிரமாணம்யாது மின்றெனக்கூறின்; அங்ஙனங் கூறலடாது, எக்காரணத்தானெனின்,அவ்வத்தியாசத்திற் புருஷனுக்குத் தனது அநுபவமே பிரமாணமாதலால். அவ்வகை கூறப்படுகின்றது:— 'நான் அறிகின்றேன்' என்னு மநுபவம் யாவருக்கு முண்டாகின்றது. அவ்வநுபவத்தாற் புருஷனிடத்து ஞாதாத்தன்மை காணப்படுகின்றது. அந்த ஞாதாத்தன்மை அந்தக்கரண மாத்திரத்திற் சம்பவியாது. எக்காரணத்தானெனின்,அந்தக்கரணம் பூதங்களின் காரியமாவதால் ஜடம், ஜடத்தினிடத்தும் ஞாதாத்தன்மையுண்டெனின் கடமுதலியவைகளிலும் அந்த ஞாதாத்தன்மை யுண்டாதல் வேண்டும், அன்றியும் ஞாதாத்தன்மை கேவலம் ஆன்மாவினிடத்தும் சம்பவியாது. ஏனெனின், அஸங்கோ ஹ்யயம் புருஷ꞉। கேவலோ நிர்குண꞉। அவ்யக்தோऽயமசிந்த்யோऽயமவிகார்யோऽயமுச்யதே (அசங்கனன்றே இப்புருஷன், கேவலனும் நிர்க்குணனும், அவ்வியக்தனும் சிந்திக்கமுடியாதவனும், விகாரமற்றவனுமாக இவன் (ஆன்மா) கூறப்படுகின்ருன்) என்னுந்தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதிகளால் அவ்வான்மாவினிடத்து அசங்கத்தன்மையே யறியப்படுகின்றது. அத்தகைய அசங்க ஆன்மாவினிடத்து ஞாதாத்தன்மை நிகழாது. ஆதலால் 'நான்' என்னுந்தோற்றத்தால் ஆன்மாவினிடத்து அந்தக்கரணத்தின் அததியாரோபத்தினனும், 'நான் சேதனன்' என்னுந்தோற்றத்தால் அந்தக்கரணத்தினிடத்து ஆன்மாவினது தாதான்மியத்தின் அத்தியாரோபத்தினனும், ஆன்மாவினிடத்து அந்தக்கரணத்தின் இச்சை முதலிய தருமங்களினதும் அந்தக்காணத்தினிடத்து ஆன்மாவின் சத்திய முதலிய தருமங்களினதும் அத்தியாரோபத்தினனும், ஜீவன் 'நான் அறிகின்றேன்' என்று தன்னிடத்தில் ஞாதாத்தன்மையை யநுபவிக்கின்ருன். ஆகையால் அவ்வத்தியாசத்தில் ஜீவனது அநுபவமே பிரமாணம். இவ்வாருன அநுபவத்தாற் பெறப்பட்ட அத்தியாசத்தின் வயத்தானே அந்தக்கரணத்தின் தருமங்களான ஞானம் இச்சை முதலியவைகள் ஆன்மாவிற்ருேன்றுகின்றன. வாஸ்தவத்தில் அவை ஆன்மாவின் தருமங்களன்று.

ஈண்டு நையாயிகர் கூறுவதாவது:—ஆன்மாவோடு மனதின் சையோக முண்டாக, ஞானம் 1. முயற்சி 2. இன்பம் 3. துன்பம் 4. விருப்பு 5. வெறுப்பு 6. தர்மம் 7. அதர்மம் 8. வாசனை 9. ஆகிய விவ்வொன்பான் குணங்களும் ஆன்மாவினிடத்து உற்பன்னமாகின்றன. ஆகையால் அந்தஞான இச்சை முதலியன ஆன்மாவின் தர்மங்களேயாம். இந்நையாயிகரின் மதம் நியாயப்பிரகாசத்தின் மூன்றாவது பரிச்சேதத்தில் விரிவாய்க் கூறப்பட்டுளது.

அந்நையாயிகரின் மதம் நலமன்று. ஏனெனின், நையாயிகர்கள் ஆன்மாவைப் போன்று மனதையும் நிரவயவ திரவியமென் றுரைப்புகின்றார்கள். அப்படிப்பட்ட நிரவயவ மனத்திற்கு நிரவயவ வான்மாவினோடு சையோகமே பொருநதாது. எக்காரணத்தானெனின், நையாயிகர் அச்சையோகத்திற்கு அவ்வியாப்பியவிருத்தி யொப்புகின்றனர். ஆண்டு எவ்விரு திரவியங்கட்குச் சையோக முண்டாகின்றதோ, அவ்விரு திரவியங்கட்கு அற்பதேசத்தினிடத்தோ அச்சைய்யாக மிருக்கின்றது; மற்றிடத்தில் அச்சையோகத்தி னபாவ மிருக்கின்றது. இதுவே அச்சையோகத்தின் கண்ணுள்ள அவ்வியாப்பிய விருத்தியாம். அதெங்ஙனமெனின்:—மரத்தின் கிளையிலோ குரங்கின் சையோக மிருக்கின்றது; அம்மரத்தின் அடிப்புறத்தில் அச்சையோகத்தி னபாவமிருக்கின்றது. இவ்வாறு சையோக மனைத்தும் அவ்வியாப்பிய விருத்தியாம். அப்படிப்பட்ட அவ்வியாப்பிய விருத்தியாகிய சையோகம் மரம் குரங்குமுதலிய சாவயவத்திரவியங்கட்கே நிகழும். ஆன்ம மன முதலிய நிரவயவ திரவியங்கட்கு அச்சையோகம் நிகழாது. இதனால் ஆன்ம மனதுகளின் சையோகத்தால் ஆன்மாவின் கண் ஞானமுதலிய குணங்கள் உற்பத்தியாகின்றன வென்று நையாயிகர் கூறுதல் மித்தையே.

அன்றியும், ஞானம் விருப்ப முதலியவற்றை ஆன்மாவின் தர்மங்களென் றுரைப்பும் நையாயிகரால் அந்த ஞானம் விருப்ப முதலியவற்றிற்கு ஆன்மாவையே உபாதான காரணமாகக் கூறவேண்டியதாகும். அவ்விடத்து இது கேட்டல் வேண்டும்:—ஆன்மா ஆரம்பகத்தன்மை வடிவாக அந்த ஞானமுதலியவற்றிற்கு உபாதானமா? அல்லது, பரிணாமத்தன்மை வடிவாக உபாதானமா? நையாயிகர் முதற்பட்சமங்கிகரிக்கின், அது பொருந்தாது. ஏனெனின், அநேக திரவியங்களினிடத்தே ஆரம்பகத் தன்மையுண்டு. எங்ஙனம் அநேக பரமாணுக்களுக்கு ஜகத்தை யாரம்பிக்குந்தன்மை யிருக்கின்றது. மற்று, ஆன்மா ஏகமாகையால் அவ்வேக ஆன்மாவிற்கு ஞானம் விருப்ப முதலியவற்றின் ஆரம்பகத் தன்மை பொருந்தாமோ, அங்ஙனமே இரண்டாவது பரிணாம பட்சமும் பொருந்தாது. ஏனெனின், சாவயவமான பால் முதலியவற்றிற்கே தயிர் முதலிய பரிணாமம் காணப்படுகின்றன. நிரவயவமான திரவியங்கட்கு யாண்டும் பரிணாங் காணப்படவில்லை. ஆன்மாவும் நிரவயவ திரவியமாகலின் அவ்வான்மாவிற்கு ஞானம் விருப்ப முதலியவற்றின் பரிணாமி யுபாதானத்தன்மையும் பொருந்தாது. ஆன்மாவைச் சாவயவ திரவியமென்றுரைப்பிடின் கடமுதலியவைகளைப போன்று அவ்வான்மாவிற்கு அநித்தத் தன்மையே பிராப்தமாம். ஆகையால் ஞானம் விருப்ப முதலியவற்றை ஆன்மாவின் தர்மங்களென்னும் நையாயிகரின் மதம் நலமன்று.

அன்றியும், ஸாக்ஷீசேதா கேவலோ நிர்குணஶ்ச (ஆன்மாவானது சாட்சியும், சேதனமும் ஏகமும் நிர்க்குணமுமானது) என்னுஞ் சுருதி ஆன்மாவைச் சருவ குணங்களில்லாததாகக் கூறியுளது. இச்சுருதிக்கு விரோதமாவதாலும் அந்நையாயிகரின் மதம் நலமன்று. இதனால் ஞானம் விருப்ப முதலிய தர்மங்களனைத்தும் அந்தக்கரணத்தினதாகவே பெறப்பட்டன.

## விருத்தியின் பிரிவைக் கூறுதல்.

இது காறும் விருத்தியின் சொரூபம் நிரூபிக்கப்பட்டது. இனி அவ்விருத்தியின் பிரிவு கூறப்படுகின்றது. முற்சொன்ன விருத்தி பிரமை 1. அப்பிரமை 2. என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும். அவ்விரு விருத்திகளுள் முதலாவதான பிரமை விருத்தி கூறப்படுகின்றது. போதேந வ்ருத்தி: வ்ருத்தீஸ்த போதோவா ப்ரமா (இ-ள்.) சைதன்யத்திற்குப் பெயர் போதம். அச்சைதன்யமாகிய போதத்தாற் (ஊக) பிரகாசிக்கப்படும் விருத்தி பிரமை யெனப்படும் அல்லது, அவ்விருத்தியிற் (ஊக) பிரதிபிம்பித்துள்ள சைதன்யமாகிய போதம் பிரமை யெனப்படும். அந்தப் பிரமையும் ஈசுராசிரயம் 1. ஜீவாசிரயம் 2. என்னும் பேதத்தால் இருவகைப்படும். ஸர்காத்யகாலீந பாவிப்ரபஞ்ச விஷயாகார மாயா வ்ருத்தி வ்ருத்தி பிம்பிதா சித் ஈஶ்வராஶ்ரயா ப்ரமா (இ-ள்.) சிருட்டியின் ஆதிகாலத்தில் பின்னருண்டாகும் ஜகத்தை விஷயஞ்செய்வதாகிய மாயா விருத்தியைச் சுருதியில் 'ஈட்சணம்' என்னும் பெயராற் கூறப்பட்டுளது. அம்மாயா விருத்தியிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யம் ஈசுராசிரயப்பிரமையெனப்படும். ஆண்டுச் சுருதி. ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய (இ-ள்.) மாயா வுபகித பரமேசுவரர் சிருட்டின் ஆதிகாலத்தில் நான் அநேக உருவங்களாக உற்பன்னமாவே னென்று ஈட்சணஞ் செய்தார்.

இனி ஜீவாசிரயப்பிரமை கூறப்படுகின்றது. அநதிகதாபாதித விஷயாகாராந்த:கரண வ்ருத்தி வ்ருத்திபிம்பிதா சித் ஜீவாஶ்ரயா ப்ரமா (இ-ள்.) அனதிகதமெனப்படும் (அறியப்படாத) அதாவது போதத்தால் விஷயீகரிக்கப்படாதாயும், அபாதிதமெனப்படும் (பாதிக்கப்படாதாயுமுள்ள) விஷயாகாரமாகிய வந்தக்கரண விருத்தியிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யம் ஜீவாசிரயப் பிரமையெனப்படும். ஆண்டு விஷயாகாராந்த:கரண வ்ருத்தி வ்ருத்தி பிம்பிதா சித் ஜீவாஶ்ரயா ப்ரமா (விஷயாகாரமாகிய வந்தக்கரண விருத்தியிற் பிரதி பிம்பித்துள்ள சைதன்யம் ஜீவாசிரயப்பிரமை) எனல் மாத்திரமே அச்சீவாசிரயப் பிரமைக்கு இலக்கணமெனின் பிராந்தி ஞானத்தில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது. அவ்வதிவியாப்திக் குற்றம் நீக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் 'அபாதித' மென விஷயத்திற்கு விசேஷணங் கூறப்பட்டது. பிரமஞானத்தின் விஷயம் அபாதித மன்று. ஆனால், சுக்திரஜ்ஜு முதலிய வதிஷ்டான ஞானத்தால் பிரமத்திற்கு விஷயமாகிய இரஜதசர்ப்பாதிகளுக்குப் பாதமுண்டாகின்றது, ஆகையால் பிரமஞானத்தில் பிரமை இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. விவரணக்காரர் முதலிய சாம்பிரதாயமுள்ளாரது மதத்தில் அந்தப்பிரமஞானம் அவித்தியா விருத்திவடிவா மா

கையால்'அந்தக்கரணவிருத்தி' என்பதனுனே மயக்கஞானத்தில்முற்கூறிய இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது, அபாதிதமெனல் வீணேயாம், எனினும், உபாத்தியாயரது மதத்தில் பிரமஞானம் அந்தக்கரண விருத்திவடிவமாம். அவ்வுபாத்தியாயரது மதத்தில் 'அபாதித' மென்பதனுனே அந்தப் பிரமஞானத்தின் அதிவியாப்தி நீங்குகின்றது. ஆகையால் அபாதிதமெனல் சார்த்தகம். அன்றியும் முற்சொன்ன இலக்கணத்தில்'அனதிகத' மென்று கூருவிடின் அவ்விலக்கணத்திற்கு ஸ்மிருதி ஞானத்தில் அதிவியாப்தி யுண்டாகின்றது. ஏனெனின், யதார்த்த ஸ்மிருதி அபாதித மாதலால். அவ்வதி வியாப்திக்குற்றம் நீக்க வேண்டி அவ்விலக்கணத்தில் 'அனதிகத' மெனப்பட்டது. முன் அநுபவிக்கப் பட்ட பொருளினிடத்தே ஸ்மிருதி நிகழும். ஆகையால் அந்த ஸ்மிருதிக்குவிஷயம் முன் அறியப்படாததன்று; ஆனுல் அறியப்பட்டதே. இதனுல் 'அனதிகத' மென்று கூறலால் அந்த ஸ்மிருதியினிடத்து ஜீவாசிரயப் பிரமையின் இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—கூறிய விச்சீவாசிரயப் பிரமையின் இலக்கணம் எந்தப்பிரமையினிடத்தும் பொருந்தாது. ஆகையால் இவ்விலக்கணம் அசம்பவக் குற்றமுடையது.

சமாதானம்:—'அஹம் பிரஹ்மாஸ்மி' என்பதாதி மகாவாக்கியங்களாலுண்டான பிரஹ்ம ஆன்மாக்களின் ஏகத்தன்மையை விஷயஞ்செய்யும் அந்தக்கரண விருத்தியிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யமாகிய பிரமையினிடத்துமேற்கூறிய விலக்கணம் பொருந்தும், எக்காரணத்தானெனின், பிரஹ்ம ஆன்மாக்களின் ஏகத்துவம் அனதிகதமு (அறியப்படாதது)ம் அபாதிதமு (பாதிக்கப் படாதது) மாம், ஆகையால் முற்கூறிய விலக்கணம் அசம்பவக்குற்ற முடையதன்று.

சங்கை:—இவ்விலக்கணத்திற்கு 'இது கடம்', 'இது படம்' என்றல் முதலிய பிரமையில் அவ்வியாப்திமே யுண்டாகின்றது. ஏனெனின், அக்கடபட முதலிய சர்வப்பிரபஞ்சமும் பிரஹ்ம ஞானத்தினுல் பாதமாய் விடுகின்றன. ஆகையால் அக்கடபட முதலியவற்றில் அபாதிதத்தன்மையில்லை

சமாதானம்:—பிரஹ்ம ஞானத்தாற் பிரபஞ்சம் பாதமாகின்றது; ஆயினும், பிரஹ்மஞான முண்டாதற்கு முன்னே சம்சாரதசையில் பிரபஞ்சத்திற்குப் பாதமுண்டாகின்றதில்லை; ஆனுல் அந்தப் பிரபஞ்சமும் சம்சாரதசையில் அபாதிதமே, ஆகையால் அக்கடபடமுதலிய பிரபஞ்சத்தை விஷயஞ்செய்யும் பிரமையின்கண் முற்கூறிய விலக்கணத்திற்கு அவ்வியாப்தி யில்லை.

சங்கை:—அபாதித பதத்திற்கு இவ்வாறு பொருள் கொள்ளின் பிராந்தி ஞானத்திலும் அந்தப் பிரமையின் இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். எக்காரணத்தானெனின், பிராந்தி ஞானத்திற்கு விஷயமாகிய சுக்திரஜத முதலியனவும் பிராந்திகாலத்தில் அபாதிதமேயாகின்றன.

சமாதானம்:—அச்சுக்திரஜத முதலியன பிராந்தி காலத்தில் அபாதிதமானுலும் அறியப்படாதவைகளன்று, அதாவது அஞ்ஞாதசத்தை யுடையன

வன்று; ஆனால் ஞாதசத்தையுடையனவே. ஆகையால் பிராந்தி ஞானத்தில்முற் கூறிய பிரமை இலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

ஆண்டு ஞானத்திற்கு பூருவகாலத்தில் எவ்விஷயத்திற்குச் சத்தையுண்டோ அது அஞ்ஞாதசத்தை யெனப்படும். ஞானத்தின் சமகாலத்தில் எவ்விஷயத்திற்குச் சத்தையுண்டோ அது ஞாதசத்தை யெனப்படும்.

## பிரமாணத்தின் இலக்கணங் கூறுதல்.

இனி இத்தொடர்பானே பிரமாணத்தின் இலக்கணங் கூறப்படுகின்றது. ப்ரமா கரணம் ப்ரமாணம் (இ-ள்.) முற்கூறிய ஜீவாசிரிதப் பிரமையின் கரணம் பிரமாண மெனப்படும். எங்ஙனமெனின், 'இது கடம்' என்னும் பிரத்தியட்சப் பிரமைக்குச் சட்சு விந்திரியம் கரணம், ஆகையால் சட்சு விந்திரியம் பிரமாண மெனப்படும். இவ்வாறு அனுமான முதலிய பிரமாணங்களிலும் இவ்விலக்கணம் அறிதல்வேண்டும். ஆண்டுக் 'கரணம் பிரமாணம்' என்னு மிம்மட்டே பிரமாணத்திற்கு இலக்கணமெனின் வெட்டுதற் றொழிற்குக் கரணமாகிய கோடரியில் அந்தப்பிரமாண இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்திக் குற்றம் நீக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் 'பிரமை' என்னும் பதங் கூறப்பட்டது. அக்கோடரியினிடத்துப் பிரமை ஞானத்திற்குக் கரணத்தன்மையில்லை, ஆகையால் அக்கோடரியினிடத்து முற்கூறிய விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது 'பிரமை பிரமாணம்' எனல் மாத்திரமே பிரமாணத்திற்கு இலக்கணங்கூறி 'கரண' மெனும் பதங்கூறாவிடின் சட்சு முதலியவைகளினிடத்து இந்தப்பிரமாண இலக்கணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகும். எக்காரணத்தானெனின், அச்சட்சு முதலியவைகட்குத் திரவியத்தன்மை யுண்மையால் அவற்றிற்குப் பிரமை ஞானத்தன்மையில்லை. அவ்வவ்வியாப்திக் குற்றம் நீக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் 'கரண' மென்னும் பதங்கூறப்பட்டது. எக்காரணமானது நிகழக் காரியோற்பத்தியில் விலம்ப (தாமத) முண்டாகின்றதில்லையோ, அக்காரணம் கரணமெனப்படும்.

## ஜீவாசிரதப் பிரமையின் பிரவுகூறுதல்.

இனி ஜீவாசிரிதப்பிரமையின் பிரிவு கூறப்படுகின்றது. ஜீவாசிரிதப்பிரமை பாரமார்த்திகத்தினது 1. வியாவகாரிகத்தினது 2. என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும். அதிகாரிக்குத் தத்துவமசி முதலிய வாக்கியங்களாலுண்டாகிய 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் பிரமையாதோ, அது பாரமார்த்திகப் பிரமையெனப்படும். அப்பாரமார்த்திகப் பிரமை முன்னே நிரூபிக்கப்பட்டுளது. இன்னும் பின்னரும் சாப்திப்பிரமையின் நிருபணத்திற் கூறப்படும். கடபட முதலியவான பிரபஞ்சத்தை விஷயஞ்செய்யும் 'இது கடம்', 'இது படம்' என்றல் முதலிய பிரமை வியாவகாரிகப் பிரமையெனப்படும். அவ்வியாவகாரிகப்பிரமையும் பிரத்தியட்சம் 1. அனுமிதி 2. உவமிதி 3. சாப்தம் 4. அர்த்தாபத்தி 5. அபாவப்பிரமை 6. என்னும் பேதத்தால் அறுவிதம். அவ்வறுவிதப்பிரமையின் பேதத்தாற் பிரமைக்கரணமாகிய பிரமாணமும் பிரத்தியட்சம் 1 அனுமானம் 2. உவமானம் 3. சப்தம் 4. அர்த்தாபத்தி 5. அனுபலப்தி 6. என்னும் பேதத்தால் அறுவிதமேயாம்.

## பிரத்தியட்சப்பிரமையின் முதல் இலக்கணம்.

இனி அவ்வறுவகைப் பிரமைகளுள் முதன்மையான பிரத்தியட்சப்பிரமை நிரூபிக்கப்படுகின்றது. விஷய சைதந்யாபிந்ந ப்ரமாண சைதந்யம் ப்ரத்யக்ஷ ப்ரமா (இ-ள்.) விஷயசைதன்யத்தினும் வேறாகாத பிரமாண சைதன்யம் பிரத்தியட்சப் பிரமையெனப்படும். இனி இங்ஙனங் கூறிய பொருளைத் தெளிவாக்கும் பொருட்டு முதலில் உபாதியானுய அச்சைதன்யத்தின் பேதம் நிரூபிக்கப்படுகின்றது. அச்சைதன்யம் உண்மையில் ஏக அத்விதீய வடிவமாயினும் உபாதிபேதத்தால் அச்சைதன்யம் பிரமாதா சைதன்யம் 1. பிரமாண சைதன்யம் 2. விஷய (பிரமேய) சைதன்யம் 3. பல (பிரமா) சைதன்யம் 4. என்னும் வேறுபாட்டால் நால் வகைப்படும். அந்தக்கரண விசிஷ்டசைதன்யம் பிரமாதா சைதன்யமெனப்படும். அந்தக்கரண விருத்தியால் அவச்சின்னமான (அளவுபடுத்தப்பட்ட) சைதன்யம் பிரமாண சைதன்யமெனப்படும். கடமுதலிய விஷயங்களால் அவச்சின்னமான சைதன்யம் விஷயசைதன்ய மெனப்படும். கடமுதலிய விஷயங்களின் சமானுகாரத்தையடைந்த விருத்தியால் அபிவியக்த (வெளிப்பட்ட) சைதன்யம் பலசைதன்யமெனப்படும். இவ்வாறு அந்தக்கரணமுதலிய உபாதிகளின் பேதத்தால் அவ்வொரே சைதன்யம் நால்வகைப்படுகின்றது. ஆண்டு அவ்வுபாதிகளுக்கிது சுவபாவம்:—எதுபரியந்தம் அவ்வுபாதிகள் வெவ்வேறிடங்களிலுள்ளன வாகின்றனவோ, அதுபரியந்தமே அவ்வுபாதிகள் தம் உபகிதங்களை வேறுபடுத்துகின்றன. அவ்வுபாதிகள் ஓரிடத்திலுள்ளனவாகின்றபோது தம் உபகிதங்களை வேறுபடுத்துவதில்லை; ஆனல் அக்காலத்தில் அவ்வுபகிதங்கட்கு அபேதமே யுண்டாகின்றது. எங்ஙனம் மடத்திற்கு வெளியே கடமுளதாயின் அம்மட வுபகித ஆகாசத்திற்கும் கட வுபகித ஆகாசத்திற்கும் பேதமேயுண்டு; அம்மடத்திற்குள்ளே கடமுளதாயின் அம்மடாகாச கடாகாசமிரண்டிற்கும் அபேதமேயாகின்றதோ, அங்ஙனமே அந்தக்கரணம், விருத்தி, கடமுதலிய விஷயங்கள் ஆகிய மூன்று உபாதிகள் எதுபரியந்தம் வெவ்வேறிடங்களிலிருக்கின்றனவோ, அதுபரியந்தமே பிரமாதாசைதன்யம், பிரமாணசைதன்யம் விஷயசைதன்யமாகிய மூன்று சைதன்யங்கட்கும் பேதமுண்டாகின்றது. எப்போது நேத்திரமுதலிய விந்திரியங்கள் வாயிலாக அவ்வந்தக்கரணம் விருத்தி வடிவமாகப் புறம் போந்து கடமுதலிய விஷய விடங்களிற் செல்லுகின்றதோ, அப்போது அவ்வந்தக் கரணமுதலிய மூன்று பாதிகளும் ஓரே விடத்திலிருப்பதால் பிரமாதா முதலிய அம்மூன்று சைதன்யங்களுக்கும் அபேதமே யுண்டாகின்றது. இவ்வாறு விஷயாவச்சின்ன சைதன்யத்தோடு பிரமாண சைதன்யத்திற்குள்ள அபேதம் பிரத்தியட்சப்பிரமை யெனப்படும்.

## விருத்தியின் உற்பத்திவகை கூறுதல்.

இனி அவ்வபரோட்ச விருத்தியின் உற்பத்தி வகை திருஷ்டாந்தத்துடன் நிரூபிக்கப்படுகின்றது. எங்ஙனம் ஏரியின் ஜலம் ஓர்மடையினின்றும் புறம்போந்து வாய்க்கால் வழியாக வயலையடைந்து, முக்கோண அல்லது நாற்கோணமான அவ்வயலின் ஆகாரமெதுவோ, அவ்வாகாரமான பரிணமத்தையடைகின்

றது.எங்ஙனம்வாய்க்கால் வழியாக ஏரியின் ஜலத்திற்கும்,வயலின் ஜலத்திற்கும் அபேதமேயுண்டோ,அங்ஙனமேகடமுதலிய பொருள்களோடு நேத்திரமுதலிய விந்திரியங்களுக்குச் சம்பந்தமுண்டான பின்னர், அந்தக்கரணமும் சட்சு முதலிய விந்திரிய வாயிலாகப் பாகியவிஷயதேசத்திற் சென்று அக்கட முதலிய விஷயங்களின் சமானுகார பரிணாமமடைகின்றது. விஷயாகாரமான இவ்வந்தக் கரண பரிணாமம் விருத்தி யெனப்படும். அக்கடாகார விருத்தியினிடத்து அக் கடமுகலிய விஷயாவச்சின்ன சைதன்யம் பிரதிபலிக்கின்றது. அதாவது பிரதி பிம்பிக்கின்றது. எக்காலத்தில் அக்கடாகார விருத்தியின்கண் கடாவச்சின்ன சைதன்யம் பிரதி பலிக்கின்றதோ, அக்காலத்தில் அவ்விருத்தி, விஷயமென்னு மிரு வுபாதிகளும் ஓரிடத்திலிருப்பதால் பிரமாண சைதன்யத்திற்கு விஷய சைதன்யத்தோடு அபின்னமுண்டாகின்றது. இவ்வாற்றால் விஷய சைதன்யத் தினும் வேறாகாத பிரமாண சைதன்யம் பிரத்தியட்சப் பிரமை யெனப்படும். ப்ரமாணசைதந்யம் ப்ரத்யக்ஷ ப்ரமா (பிரமாண சைதன்யம் பிரத்தியட்சப் பிரமை) என்றது மாத்திரமே பிரத்தியட்சப் பிரமைக்கு இலக்கணமெனின்,அநுமிதிமுதலிய பரோட்சப்பிரமையில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்திக்குற்றம் நீக்குவதற்காக அவ்விலக்கணத்தில் விஷய சைதந்யாபிந்ந (விஷய சைதன்யத்தினும் வேறாகாத) எனப் பிரமாணத்திற்கு விசேஷணங் கூறப்பட்டது. அநுமிதி முதலிய பரோட்ச விருத்திகள் பாகிய விஷயவிடத்திற்குச்செல்லுவதில்லை ஆனால் சரீரத்திற்குள்ளே இருதயதேசத்திலேயே உண்டாகின்றன. பரோட்சஸ்தலத்தில் பிரமாணசைதன்யத்திற்கு அவ்விஷய சைதன்யத்தோடு அபேத முண்டாகாது. ஆதலால் அவ்வநுமிதி முதலிய பரோட்ச ஞானங்களில் பிரத்தியட்சப் பிரமையின் இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது விஷய சைதந்யாபிந்நம் வ்ருத்த்யவச்சிந்ந சைதந்யம் ப்ரத்யக்ஷ ப்ரமா (விஷய சைதன்யத்தினும்வேறாகாத விருத்தியவச்சின்ன சைதன்யம் பிரத்தியட்சப் பிரமை) எனல் மாத்திரமே பிரத்தியட்சப் பிரமைக்கு இலக்கணமெனின், பிரமப்பிரத்தியட்சத்தில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின், பிரம (மயக்க) ஸ்தலத்திலும் விஷயாவச்சின்ன சைதன்யத்தோடு விருத்தியவச்சின்ன சைதன்யத்திற்கு அபேதமே யுண்டாகின்றது. அவ்வதிவியாப்திக் குற்றம் நீங்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் 'பிரமாணசைதன்ய' மெனப்பட்டது. பிரமவிருத்தியவச்சின்ன சைதன்யத்தில் பிரமாண சைதன்யவடிவத் தன்மையின்றாகையால் அந்தப் பிரமப் பிரத்தியட்சத்தில், பிரத்தியட்சப் பிரமையினிலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—பிரமஞானத்திற்கு விஷயமாகிய இரஜத முதலியவற்றைப் பிரகாசிப்பிப்பதாகிய இதமாகார (இஃதெனும் வடிவ) அந்தக் கரணத்தின் விருத்தியவச்சின்ன சாட்சி சைதன்யமே, அவ்விஷய சைதன்யத்தினும் வேறாகாத பிரமாண சைதன்யவடிவமாம். ஆகையால் முற்கூறிய இலக்கணத்திற்குப் பிரமப் பிரத்தியட்சத்தில் அதிவியாப்தியே யுண்டாகின்றது.

சமாதானம்:—அவ்வதிவியாப்திக் குற்றம் விலகும் பொருட்டு அவ்விலக்கணத்தில் விஷயத்திற்கு அபாதித (பாதிக்கப்படாத) வென்னும் விசேஷணமும் எமக்குச்சம்மதமாம். பிரமப்பிரத்தியட்சத்திற்கு விஷயமாகிய இரஜத முதலியன பாதிக்கப்படாதனவன்று; ஆனால் சுத்தி முதலிய அதிஷ்டான ஞானத்தால் அவ்விரஜத முதலியன பாதிக்கப்பட்டனவாகின்றன. ஆகையால் பிரமப் பிரத்தியட்சத்தில் பிரத்தியட்சப் பிரமையி னிலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—கடாதிப் பிரபஞ்சம் பிரஹ்ம ஞானத்தாற் பாதிக்கப்படுகின்றமையால், அதற்கு பாதிக்கப்படாத்தன்மை சம்பவியாது. ஆகையால் 'இது கடம்' 'இது படம்' என்பதாதிப் பிரத்தியட்சப் பிரமையில் அவ்விலக்கணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும்.

சமாதானம்:—அவ்வபாதித பதத்தாற் சம்சார தசையில் அபாதிதத்தன்மையே கருத்தாம். கடபடமுதலிய பிரபஞ்சம், பிரஹ்மஞானத்திற்கு முன் சம்சார தசையில் அபாதிதமே. ஆகையால் அக்கடாதிப் பிரபஞ்சத்தை விஷப்படுத்தும் பிரத்தியட்சப் பிரமையில், அவ்விலக்கணத்திற்கு அவ்வியாப்தி யில்லை.

சங்கை:—யாண்டு புருஷனுக்குச் சுகதுக்கமாகிய ஏதுவின் ஞானத்தாற் றனது தர்மா தர்மங்களின் அனுமிதி ஞானமுண்டாகின்றதோ, அல்லது, நீ தர்மி (புண்ணியவான்) நீ அதர்மி(பாபி) என்னும் ஒருவனது வசனத்தாற் புருஷனுக்குத் தனது தர்மா தர்மங்களின் சாப்த ஞானமுண்டாகின்றதோ, ஆண்டு தர்மா தர்மமாகிய விஷயத்திற்கும், அனுமிதி சாப்தமாகிய விருத்திகட்கும் அந்தக்கரணமாகிய வொரு தேசத்திலிருப்புண்மையால், அவ்வுபகித சைதன்யங்கட்கும் அபேதமே யுண்டாகின்றது. சம்சார தசையில் அத் தர்மாதர்மங்கள் அபாதிதமேயாம். ஆகையால் பிரத்தியட்சப் பிரமையின் இலக்கணத்திற்கு அத்தர்மா தர்மங்களை விஷயப்படுத்தும் அனுமிதி சாப்தமாகிய பரோட்ச ஞானங்களில் அதிவியாப்தி யுண்டாகும்.

சமாதானம்:—முற்கூறிய விலக்கணத்தில் விஷயத்திற்கு 'யோக்கிய' மென்னும் விசேஷணமும் எமது கருத்தாம். தர்மா தர்மங்கள் பிரத்தியட்சயோக்யமன்று; ஆனால் அயோக்யமாம். ஆகையால் அத்தர்மா தர்மங்களை விஷயப்படுத்தும் அனுமிதி சாப்த ஞானங்களில் அந்தப்பிரத்தியட்சப்பிரமையி னிலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

இவ்வாறு தனது சுகமுதலியவைகளின் யதார்த்த ஸ்மிருதி ஞானத்தில்பிரத்தியட்சப்பிரமையி னிலக்கணத்தின் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தில் அவ்விஷயத்திற்கு 'வர்த்தமானம்' என்னும் விசேஷணமுங்கூறுதல்வேண்டும். அந்த ஸ்மிருதி ஞானத்தின் விஷயம் வர்த்தமான மன்றாகையால் ஸ்மிருதியில் முற்கூறிய விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இவ்வளவுங் கூறியதால் அபாதித வர்த்தமான யோக்ய விஷய சைதந்யாபிந்ந ப்ரமாண சைதந்யம் ப்ரத்யக்ஷ ப்ரமா (இ-ள்) சம்சாரதசையில் அபாதிதமும்

(பொய்யென்று நிச்சயிக்கப்படாதது) வர்த்தமானமும், (நிகழ் காலத்ததும்,) பிரத்தியட்சமும், (புலனறிவுக் கெட்டியதும்) யோக்யமு (தகுதியுடையது) மாகிய விஷயாவச்சின்ன (பொருளான்வரையப்பட்ட) சைதன்யத்திற்கு அபி ன்னமா (வேறாகாததா)ன பிரமாணசைதன்யம் பிரத்தியட்சப்பிரமை (காட்சி யறிவு) என்பதே அந்தப் பிரத்யக்ஷப்பிரமையின் இலக்கணமெனப்பட்டது.

## பிரத்தியட்சப் பிரமையின் இரண்டாவது இலக்கணம்.

அல்லது, அந்தப் பிரத்தியட்சப் பிரமையின் இரண்டாவது இலக்கண மாவது:—அபாதிதாபரோக்ஷார்த்த விஷய ஜ்ஞானம் ப்ரத்யக்ஷப்ரமா (இ-ள்) அபாதிதமாயும் அபரோட்சமாயுமுள்ள பொருளை விஷயப்படுத்தும் ஞானம் பிரத்தியட்சப் பிரமை யெனப்படும். இவ்விலக்கணத்தால் அப்பொருட்குப்பிரம ஞானத்தில் அதிவியாப்தியை நிவிர்த்திப்பதற்காக அபாதித மென்னும் விசே ஷணமும், அனுமிதி முதலிய பரோட்ச ஞானங்களில் அதிவியாப்தியை நிவிர் த்திப்பதற்காக அபரோட்சமென்னும் விசேஷணமும் கூறப்பட்டன. சாட்சி சைதன்யத்தோடு கடமுதலிய பொருள்களுக்குள்ள தாதான்மியம் யாதோ, அதுவே அக்கட முதலிய பொருள்களின் கண்ணுள்ள அபரோட்சத்தன்மை யாம்.

கடத்திற்குத் தன் அவச்சின்னமான பிரஹ்ம சைதன்யத்தினிடத்தே தா தான்மிய முண்டு; அந்தக்கரண உபஹித சாக்ஷிசைதன்யத்தினிடத்துத் தா தான்மிய மின்றெனினும், முற்கூறிய முறைப்படி அந்தக்கரண விருத்தி வெ ளிப்பட்ட காலத்தில், அக்கடாவச்சின்ன சைதன்யத்திற்கு அச்சாட்சிசைதன் யத்தோடு அபேதமேயுண்டு. ஆகையால் அக்கட முதலியவைகட்கு அச்சாட்சி சைதன்யத்தோடு தாதான்மிய முண்டாம்.

## பிரத்தியட்சப் பிரமையின் பயன் கூறுதல்.

மேற்கூறிய பிரத்தியட்சப் பிரமையில் இரண்டு அம்சங்கள் உள. ஒன்று அந்தக்கரண விருத்தி வடிவான அம்சம். மற்றொன்று சைதன்ய வடிவான அம்சம். விருத்தி யம்சத்தாற் கடாதி விஷயங்களின் ஆவரணம் நீங்குகின்றது. சைதன்ய அம்சத்தால் அஞ்ஞானம் நீங்குகின்றதென்பது நரசிம்மாஸ்ரம ஸ்வாமிகளின் மதமாம். ஆனால் மேற்கூறிய பிரத்தியட்சப் பிரமையினால் ஆவரண சக்தியோடு அஞ்ஞானமும் நீங்குகின்றன, அதன் பின்னர் அந்தக்கரண உப கித சைதன்யமாகிய சாட்சியால் கடமுதலிய விஷயங்களின் ஸ்புரண (விள க்க) முண்டாகின்றது என்பன ஆசாரியரபிமதமாம்.

## சாட்சியின் சொரூபங் கூறுதல்.

உதாஸீநவத் ஸதி போத்தா ஸாக்ஷீ (இ-ள்) விகாரமற்று உதாசினமாயிரு ந்து புத்தி முதலியவற்றைப் பிரகாசிப்பிக்குஞ் சைதன்யம் யாதோ, அஃதாவது பிரமாதா, பிரமாணம், பிரமேய முதலிய யாவையும் பிரகாசிப்பிக்கின்றதோ, அச்

சைதன்யம் சாட்சி யெனப்படும். உலகிலும் ஒருவரோடொருவர் வழக்கிடும் இருவரை விட வேறாயும், அவ்விருவரது வழக்கை நேராக வறிபவனும், உதாசீனன் அதாவது பட்சபாத மற்றவனுயு முள்ளவன் எவனோ, அவன் சாட்சியெனப்படுகின்றான். அவ்வாறே உதாசீனமாயிருந்து புத்தி முதலியவனைத்தையும் பிரகாசப்படுத்தும் சைதன்யம் யாதோ, அது சாட்சி யெனப்படும். ஆண்டு ஸொ஭ா ஸாக்ஷீ (அறிகின்றவன் சாட்சி) யெனல் மாத்திரமே அச்சாட்சிக்கு இலக்கணமாகக் கூறி அவ்விலக்கணத்தில் உதாஸீநவெஸதி (உதாசீனமாயிருந்து) என்று கூறுவிடின் வழக்கிடும் ஒவ்வொருவரிடத்திலும் அச்சாட்சித் தன்மையுண்டாதல் வேண்டும். ஏனெனின் தன்னுடையதும் பிறருடையதுமான வழக்கை யறியுந் தன்மை அவரிடத்து முண்மையால். ஆனால், அவர்களைச் சாட்சியென்று ஒருவருங் கூறார். ஆதலினன்றே, சாட்சிக்கு 'உதாசீனமாயிருந்து' என்னும் விசேஷணங் கூறப்பட்டது. வழக்கிடுபவரிடத்து உதாசீனத் தன்மையின்மையால் சாட்சி இலக்கணத்தின் அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது உதாஸீநஃ ஸாக்ஷீ (உதாசீனமாயுள்ளது சாட்சி) எனல் மாத்திரமே அச்சாட்சிக்கு இலக்கணமாகக் கூறி அவ்விலக்கணத்தில் ஸொ஭ா (அறிபவன்) என்னும் பதங் கூறுவிடின், வழக்கிடுமிடத்திலுள்ள ஸ்தம்ப முதலியனவும் உதாசீனமுடையனவாகையால், அந்த ஸ்தம்ப முதலியனவும் சாட்சியாதல் வேண்டும். ஆனால் அந்தஸ்தம்ப முதலியவற்றை யாரும் சாட்சியென்று கூறார். அதுபற்றி, அவ்விலக்கணத்தில் ஸொ஭ா (அறிபவன்) என்னும் பதங் கூறப்பட்டது. ஜடமான அத்தம்பாதிகளினிடத்து அறியுந் தன்மை யில்லை யாதலின் அவைகளினிடத்து அச்சாட்சியின் இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

அதுபோல் இவ்விடத்தும் கேவலம் அறியுந் தன்மையோ போக்தாவாகிய ஜீவனிடத்து முண்டு; ஆனால் ஜீவனிடத்து உதாசீனத்தன்மை யில்லை. கேவலம் உதாசீனத் தன்மையோ தேகம் இந்திரிய முதலிய ஜடபதார்த்தங்களினிடத்து முண்டாயினும் அவைகளினிடத்து அறியுந் தன்மையில்லை. ஆகையால் போக்தாவாகிய ஜீவனிடத்தும் தேகேந்திரிய முதலியவைகளினிடத்தும் சாட்சியின் இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இஃதே சாட்சியின் இலக்கணம். இதையே ஸாக்ஷீ செதா கெவலொ நிமு்ணஶ (சாட்சியானது சேதனமும் கேவலமும் நிர்க்குணமுமாம்) எனச் சுருதியுங் கூறும். இதன்கண் செதா (சேதனம்) என்னும் பதத்தால், அறியுந் தன்மையும், கெவல (கேவல) வென்னும் பதத்தால், உதாசீனமுங் கூறப்பட்டன. இதனுல் செதாஃ கெவலஃ ஸாக்ஷீ (சாட்சியானது சேதனமுங் கேவலமுமாம்) என்னும் சாட்சியின் இலக்கணம் பெறப்படுகின்றது. நையாயிகர் ஆன்மாவை ஞானமுதலியகுணங்களுடையதாகக்கூறுவர். அவர்கள் மதத்தைக் கண்டிக்கும் பொருட்டு அச்சுருதியால் ஆன்மாவிற்கு நிர்க்குணமும் அதன் கண்ணுள்ள உம்மையால் ஆன்மாவிற்கு நிஷ்கிரியமுங் கூறப்பட்டன, அதனுல் ஆன்மாவை மத்திம பரிமாணமுடையதாகவும், கிரியையுடையதாகவு மொப்புந் திகம்பரர்களது மதமுங் கண்டிக்கப்பட்டதென வறிக.

அன்றியும் இங்ஙனங்கூறிய சாட்சியின் சொரூபமே பஞ்சதசியின் நாடக தீபிகையில், ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளாலும் நிருத்த சாலையிலுள்ள * தீப திருஷ்டாந்தத்தால் நிரூபிக்கப்பட்டுளது. ஆகவே சாட்சியாற் கடமுதலிய விஷயங்களின் ஸ்புரணங்கூடும்.

## பிரத்தியட்சப் பிரமையின் பிரிவு கூறுதல்.

முன்னே பிரத்தியட்சப் பிரமை பயனுடன் கூறப்பட்டது. இனி பிரத்தியட்சப் பிரமையின் பிரிவு கூறப்படுகின்றது. முற்கூறிய பிரத்தியட்சப் பிரமை பாகியம், ஆந்தரமென்னும் வேறுபாட்டால் இருவகைத்து. புறப்பொருளை விஷயப்படுத்தும் பிரத்தியட்சப் பிரமை, பாகியப் பிரத்தியட்சப் பிரமை யெனப்படும். அகப்பொருளை விஷயப்படுத்தும் பிரத்தியட்சப் பிரமை ஆந்தரப் பிரத்தியட்சப் பிரமை யெனப்படும். அவ்விருவகைப் பிரமைகளுள் முதற்பாகியப் பிரத்தியட்சப் பிரமை சப்தம், ஸ்பரிசம், உருவம், இரசம், கந்தம், என்னுமைந்து விஷயங்களின் வேற்றுமையால் ஐவகையினதாம். அஃதாவது சப்தப் பிரமை, ஸ்பரிசப்பிரமை, உருவப்பிரமை, இரசப் பிரமை, கந்தப் பிரமை, என்றைந்து வகையாகப் பாகியப் பிரத்தியட்சப் பிரமை யுண்டாகின்றது. அவ்வைவகைப்பாகியப்பிரத்தியட்சப் பிரமைக்கு முறையே கரணமாவன சுரோத்திரம், துவக்கு, சட்சு, இரசனை (ஜிஹ்வா,) கிராணம் என்னுமைந்து ஞானேந்திரியங்களாம். இதனால் அவ்வைந்து ஞானேந்திரியங்களும் பாகியப் பிரத்தியட்சப் பிரமாண மெனப்படுகின்றன.

இரண்டாவது ஆந்தரப் பிரத்தியட்சப் பிரமையும் ஆன்மகோசரம், சுகாதிகோசரம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்து. ஆன்மாவை விஷயப்படுத்தும் பிரமை ஆன்மகோசர மெனப்படும். சுகதுக்க முதலியவற்றை விஷயப்படுத்தும் பிரமை சுகாதிகோசர மெனப்படும். அவ்வான்ம கோசரப் பிரமையும் விசிஷ்டான்ம விஷயம், சுத்தான்ம விஷயம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்து. நான் ஜீவன்என்னும் பிரமை விசிஷ்டான்மாவை விஷயப்படுத்துவது. அகம் பிரஹ்மாஸ்மி என்னும் பிரமை சுத்தான்மாவை விஷயப்படுத்துவது. நான் சுகி நான் துக்கி என்பதாதிப் பிரமை சுகதுக்க முதலியவற்றை விஷயப்படுத்துவது.

இனி ஆந்தரப் பிரத்தியட்சப் பிரமைக்குக் கரணங் கூறப்படுகின்றது. ஆந்தர இந்திரியமாகிய மனமே மேற்கூறிய ஆந்தரப் பிரத்தியட்சப் பிரமைக்குக் கரணம். ஏனெனின், புற உருவமுதலியவற்றின் சாட்சாத் காரத்திற்குக் கரணமாக, எப்படி சட்சு முதலிய விந்திரியங்கள் பெறப்படுகின்றனவோ, அப்படியே உள்ளேயுள்ள சுகதுக்க முதலியவற்றின் சாட்சாத்காரத்திற்குக் கரண

---

* 𑌨𑍃𑌤𑍍𑌯𑌶𑌾𑌲𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌦𑍀𑌪𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌂 𑌸𑌭𑍍𑌯𑌾𑌂𑌶𑍍𑌚 𑌨𑌰𑍍𑌤𑌕𑍀𑌮𑍍। 𑌦𑍀𑌪𑌯𑍇𑌦𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌤𑌦𑌭𑌾𑌵𑍇𑌽𑌪𑌿 𑌦𑍀𑌪𑍍𑌯𑌤𑍇 (நாட்டிய அரங்கத்திலுள்ள தீபமானது அரங்கத்தலைவனையும் நாட்டியக்காரர் யாவரையும் பிரகாசிப்பித்து, அத்தலைவன் முதலியோர்களில்லாத காலத்தும் அத்திபம் தானே பிரகாசிக்கின்றது.

மாக மனமாகிய உள்ளிந்திரியம் பெறப்படுகின்றது. ! சுகதுக்க முதலியவற்றிற்கு வியாவகாரிகத்தன்மை யிருத்தலால் அச்சுகதுக்க முதலியவற்றின் ஞானத்திற்கும் வியாவகாரிகத் தன்மையே பொருந்தும். இது வாசஸ்பதி மிசிரரது மதம்.

சங்கை:—விசிஷ்டான்மாவின் சாட்சாத்காரத்திற்கு அம்மனம் கரணமாயினும், சுத்தான்மாவின் சாட்சாத்காரத்திற்குக் கரணமாதல் பொருந்தாது. ஒருகால் சுத்தான்மாவின் சாட்சாத்காரத்திற்கும் அம்மனம்கரணமாகுமெனின், ஆன்மசாட்சாத்காரத்தில் மனதின்கரணத்தன்மையை விலக்கியுள்ள யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ யந்மநஸா ந மநுதே (வாக்கும் மனமும் எவனிடம் செல்லாமல் திரும்புகின்றனவோ, எதை மனத்தாற் சிந்திக்கமுடியாதோ) என்னுந் தொடக்கத்துச் சுருதிகளுக்கு முரண்வரும்.

சமாதானம்:—மநஸைவாநுத்ரஷ்டவ்ய: । த்ருச்யதே த்வக்ர்யயா புத்த்யா (மனத்தினாலேயே ஆன்மா பார்க்கக் கூடியது. சிறந்த புத்தியினாற் பார்க்கப்படும்.) என்னுந் தொடக்கத்துச் சுருதிகளால் அம்மனத்திற்கே சுத்தான்மசாட்சாத்காரத்தில் கரணத்தன்மை கூறப்பட்டுளது. இதனால் ஆன்மசாட்சாத்காரத்தில் மனத்திற்குக் கரணத்தன்மையை விலக்கியுள்ள அச்சுருதி, அசுத்தமனத்தைக் கூறியுளது. அதாவது அசுத்தமனத்தால் ஆன்மாவின் சாட்சாத்காரமுண்டாகாது. ஆகையால் 'மனத்தினாலேயே பார்க்கக் கூடியது' என்று கூறிய சுருதியாற் சுத்தமனத்திற்கே ஆன்மசாட்சாத்காரத்தின் கரணத்தன்மைபெறப்பட்டது.

சங்கை:—தம் த்வௌபநிஷதம் புருஷம் ப்ருச்சாமி (உபநிடதமொன்றிற்கே விஷயனாயிருக்கும் அப்புருஷனைப்பற்றி யும்மைக் கேட்கின்றேன்) என்னுஞ் சுருதியில் உபநிடத மென்னும் வசனத்தால் ஆன்மாவை உபநிஷத்தாகிய சப்தப் பிரமாணத்தாற் றோன்றும் ஞானத்திற்கு விஷயமாகக் கூறப்பட்டுளது. ஆனால் ஆன்மாவை மானதப்பிரத்தியட்சத்திற்கு விஷயமாகக் கொண்டால் இச்சுருதிக்கு முரண்வரும்.

சமாதானம்:—சாஸ்திரம் ஆசாரியராற் சமஸ்காரமடைந்த சுத்தமனத்திற்கே, நாம் பிரஹ்மசாட்சாத்காரத்தில் கரணம்உண்டென ஒப்புகின்றோமாகையால் அம்மனத்திற்கு உபநிடதமாகிய சாஸ்திரத்தினபேட்சை யிருத்தலால்அவ் உபநிடத சுருதிக்கு முரண்வராது. உபநிடதமாகிய சப்தத்திற்கு ஆன்மசாட்சாத்காரத்தில் கரணத்தன்மையில்லை; ஆனால் சுத்த மனத்திற்கே கரணத்தன்மையுண்டு. அன்றியும் விசிஷ்டான்மாவின் சாட்சாத்காரத்தில் மனம் கரணமெனல் துணிபேயாகையால், சுத்தான்மாவின் சாட்சாத்காரத்திலும் அம்மனமே கரணமென்றொப்புதல் வேண்டும். அம்மனத்திற்கு வேறாகவோர் கரணமுண்டெனின் கற்பனைக் கௌரவவதோஷ மடையப்படுவ தொன்று. அப்பொருளுக்குச் சாதகமாக வோர் பிரமாணமு மின்றாதல் மற்றொன்று. இவ்விரண்டுமுண்டாம். இதனால் ஆந்தரப்பிரத்தியட்சப் பிரமைக்கு அம்மனமே கரணம்,

## இம் (வாசஸ்பதி மிசிரரது) மதத்தைக் கண்டிக்கும் வழியானே ஆசாரியர்களின் மதவர்ணனம்.

மனம் இந்திரியமாயின் ஆந்தரப்பிரத்தியட்சப் பிரமைக்கு அம்மனங் கரணமெனல் கூடும்; ஆனல் அம்மனத்தினிடத்து இந்திரியத்தன்மையே நிகழாது. ஏனெனின் 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌾𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌾 𑌅𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌂 𑌮𑌨𑌃। 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃𑌪𑌰𑌂 𑌮𑌨𑌃 (இந்திரியங்களை விட பொருள்கள் சிறந்தன. அப்பொருள்களை விட மனம் சிறந்தது. இந்திரியங்களைக் காட்டிலும் மனம் சிறந்தது) என்னுந் தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதிகளில் அம்மனம் இந்திரியங்களைவிட வேருகக் கூறப்பட்டுளது. ஒருகால் அம்மனது இந்திரியமாயின் மேற்கூறிய சுருதி ஸ்மிருதிகள் அம்மனத்தை இந்திரியங்களை விட வேருகக் கூரு. இதனல் அம்மனம் இந்திரியமன்றென்பது நிச்சயம்.

அன்றியும், சுகதுக்க முதலியவைகளின் சாட்சாத்காரத்தில் அம்மனம் கரணமாயின், அம்மனம் இந்திரிய மெனல் பொருந்தும்; ஆனல் அம்மனத்திற்குக் கரணத்தன்மையே பொருந்தாது. ஏனெனின், எல்லா விருத்திகட்கும் உபாதானமாதல் அம்மனத்திற்கே யுண்டெனும் வார்த்தை முற்கூறப்பட்டுளது. ஆனல் எப்பொருள் எக்காரியத்திற்கு உபாதானகாரணமோ அப்பொருள் அக்காரியத்திற்குக் கரணமாகாது. எப்படி கடவடிவ காரியத்திற்கு உபாதான காரணமாகிய மண், அக்கடத்திற்குக் கரணமாகாமல் தண்டமுதலியனவே கரணமாகின்றனவோ, அப்படி எல்லா விருத்திகட்கும் உபாதான காரணமாகிய மனமும் அவ்விருத்திகட்குக் கரணமாதல் பொருந்தாது; பொருந்தாதாகவே அம்மனம் இந்திரியமென் றுரைப்புதல் வியர்த்தம்.

சங்கை:—மனம் இந்திரியமென்றுரைப்பாவிடின் உள் சுகதுக்க முதலியவைகளின் சாட்சாத்காரத்தில் அப்பிரமைத் தன்மையே பிராப்தமாகும்.

சமாதானம்:—சுகதுக்க முதலியவைகளின் சாட்சாத்காரம் ஓர் பிரமாணத்தாற் றேன்றுவதன்று, ஆகையால் அச்சாட்சாத்காரத்தினிடத்து அப்பிரமைத் தன்மை எமக்கு முடன்பாடே.

சங்கை:—சுகதுக்கமுதலியவைகளின் சாட்சாத்காரம் அப்பிரமையெனக்கொளின், அவ்வப்பிரமை ஞானத்திற்கு விஷயமான அச்சுகதுக்க மூதலியனவும் சுத்தி ரஜத முதலியவைகளைப் போன்று பிராதீதிக (தோற்றன் மாத்திர) மேயாகும்; அதாவது தன்னை விஷயப்படுத்தும் தோற்றத்திற்குச் சமகாலத்திலுள்ளதே யாகும். அதனற் சுகதுக்க முதலியவைகளினிடத்து வியாவகாரிகத் தன்மை இன்ரும.

சமாதானம்:—சுகதுக்கமுதலியவைகளின் சாட்சாத்காரம் அப்பிரமையே யாம். இக்காரணம் பற்றி, அந்தக்கரணமும் அதன் தர்மங்களாகிய சுகதுக்க முதலியனவும் சுத்திரஜதாதிகளைப் போன்று பிராதீதிகமே; வியாவகாரிகமன்று.

சங்கை:—சுகதுக்க முதலியவைகளைப் பிராதீதிக மெனக்கொளின், அவைகட்கு ஹர்ஷம்(புளகாங்கிதம்) சோகம் (முகவாட்டம்)முதலிய அர்த்தக்கிரியையை (பொருள்களுக்கான தொழிலை) யுண்டாக்குந் தன்மை நிகழலாகாது;வியாவகாரிக பதார்த்தமே அப்பொருள்களுக்கான தொழிலை யுண்டாக்குவது.

சமாதானம்:—வியாவகாரிகப் பொருள்களை யொப்பச் சிலவிடத்து பிராதீதிகப் பொருள்களும் அவ்வர்த்தக்கிரியையை யுண்டாக்குவனவாகின்றன. எப்படி பிராதீதிகமான சுத்திரஜத முதலியன புருஷனது பிரவிருத்தி(முயற்சி)யாகிய அர்த்தக்கிரியையை யுண்டாக்குவதும், பிராதீதிக ரஜ்ஜு சர்ப்பம் அச்சம், ஓட்ட முதலிய அர்த்தக் கிரியையை யுண்டாக்குவது மாகின்றனவோ; அப்படியே பிராதீதிக சுகதுக்க முதலியவைகட்கும் ஹர்ஷம் சோகம் முதலிய அர்த்தக்கிரியை யுண்டாக்குந் தன்மையுங் கூடும்.

சங்கை:—உள் சுகதுக்கமுதலியவைகளின்சாட்சாத்காரம் பிரமாணத்தாற் றோன்றுவதன்றாதலால்,எவ்வாறுஅப்பிரமையாமோ;அவ்வாறு உள்ளே ஆன்மாவின்சாட்சாத்காரமும் பிரமாணத்தாற் றோன்றுவதன்றாதலால்,அதற்கு அப்பிரமைத் தன்மையே பிராப்தமாம். ஒருகால் ஆன்மசாட்சாத்காரத்தின்கண்ணும் நீவிர் அப்பிரமைத் தன்மையே யங்கீகரிக்கின் அவ்வப்பிரமை ஞானத்திற்கு விஷயமாவதால் அவ்வான்மாவும் சுக துக்கமுதலியவைகளைப்போன்று பிராதீதிகமேயாகும்; ஆன்மாவின் பிராதீதிகத்தன்மை ஓர் ஆத்திக வாதிக்கும் இஷ்டமன்று. இதனால் அவ்வான்ம சாட்சாத்காரத்தின்கண் மனம் கரண மென்றெப்புதல் இன்றியமையாமையே.

சமாதானம்:—சுகதுக்கமுதலியவைகளின் சாட்சாத்காரம்போன்று ஆன்ம சாட்சாத்காரத்தின்கண் அப்பிரமைத் தன்மை கூறின், அது விசிஷ்டான்மாவின் சாட்சாத்காரத்திற்கு அப்பிரமைத் தன்மை கூறுகின்றீரா? அல்லது சுத்தான்மாவின் சாட்சாத்காரத்திற்கு அப்பிரமைத் தன்மை கூறுகின்றீரா? முதற் பட்சமங்கீகரிக்கின் அஃதெமக்குமிஷ்டம், அதாவது விசிஷ்டான்மாவின் சாட்சாத்காரத்திற்கு யாமும் அப்பிரமை வடிவமே யொப்புகின்றோம். இரண்டாவதுபட்சமங்கீகரிக்கின் அது பொருந்தாது. ஏனெனின், 'அஹம்பிரஹ்மாஸ்மி' என்னும் சுத்தான்மாவின் சாட்சாத்காரம் தத்துவமசி முதலிய வேதாந்த வாக்கியங்களாற் றோன்றுவதால் பிரத்தியட்சப் பிரமையே. ஆகையால் அச்சுத்தான்மாவின் சாட்சாத்காரத்தின்கண் அப்பிரமத்தன்மை பொருந்தாது.

சங்கை:—வாக்கியம் நியமமாகப் பரோட்சஞானத்தையே யுண்டாக்கும்; அபரோட்ச ஞானத்தை யுண்டாக்காது. ஆகையால் அவ்வேதாந்த வாக்கியத்தால் ஆன்மாவின் அபரோட்ச ஞானம் பொருந்தாது.

சமாதானம்:—சிலவிடத்துச் சப்தத்தானும் அபரோட்ச ஞானமே யுண்டாகின்றது. எப்படி 'நீ பத்தாமவன்' என்னும் வாக்கியத்தால் அவனுக்குத் தனது அபரோட்ச ஞானமே யுண்டாகின்றதோ, அப்படி தத்துவமசி முதலிய

வாக்கியங்களானும் இவ்வதிகாரிக்கு ஆன்மாவின் அபரோட்ச ஞானமே யுண்டாகின்றது. இவ்வார்த்தை பின்னர் சாப்திப் பிரமைபி னிரூபணத்திற் கூறப்படும்.

### பிரத்தியட்சப் பிரமையின் நிரூபணம்

முற்றிற்று.

---

# அநுமிதிப் பிரமை.

𑌲𑌿𑌙𑍍𑌗𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌨𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌅𑌨𑍁𑌮𑌿𑌤𑌿𑌃 (இ-ள்) இலிங்க ஞானத்தாற்றோன்றும் ஞானம் அநுமிதி யெனப்படும். அதெங்ஙனமெனின்; 𑌅𑌯𑌂 𑌪𑌰𑍍𑌵𑌤𑌃 𑌵𑌹𑍍𑌨𑌿𑌮𑌾𑌨𑍍, 𑌧𑍂𑌮𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌯𑍋 𑌯𑍋 𑌧𑍂𑌮𑌵𑌾𑌨𑍍 𑌸 𑌵𑌹𑍍𑌨𑌿𑌮𑌾𑌨𑍍, 𑌯𑌥𑌾 𑌮𑌹𑌾𑌨𑌸𑌃 (இ-ள்) இம்மலை நெருப்புடைத்து, புகையுடைமையால், எது எது புகையுடைத்து அதது நெருப்புடைத்தே; அடுக்களை போலும். இப்பிரசித்தானுமானத்தின்கண் மலை பட்சம், நெருப்பு சாத்தியம் (துணி பொருள்), புகை இலிங்கம் (ஏது), அடுக்களை திருஷ்டாந்தம். 'இம்மலை புகையுடையது' என்னும் இலிங்கஞானத்தாற் புருஷனுக்கு 'மலைநெருப்புடைத்து' என்னும் அநுமிதி ஞானமுண்டாகின்றது. ஆகையால் மேற்கூறிய அநுமிதியின் இலக்கணம் பொருந்தும்.

### அநுமிதியினிலக்கணத்தைச் சித்தாந்தத்திற்குப் பொருத்துதல்.

இனிச் சித்தாந்தத்தின்கண் அவ்வநுமிதியினிலக்கணம் பொருத்தப்படுகின்றது. 𑌜𑍀𑌵𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌭𑌿𑌨𑍍𑌨𑌃, 𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌲𑌕𑍍𑌷𑌣𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌤𑍍 (இ - ள்) ஜீவான்மா பிரஹ்மாபின்னன், சச்சிதானந்த வடிவனாதலால்; எது சச்சிதானந்த வடிவமோ அது பிரஹ்மாபின்னமே. எப்படி பிரஹ்மம் சச்சிதானந்த வடிவமாதலால் பிரஹ்மத்திற்கு அபின்னமோ, அப்படியே இச்சீவனும் சச்சிதானந்த வடிவனாதலால் பிரஹ்மத்திற்கு அபின்னனேயாகும். இவ்வனுமானத்தின்கண்ணும் ஜீவன் பட்சம், பிரஹ்மாபேதம் சாத்தியம், சச்சிதானந்த வடிவம் இலிங்கம், பிரஹ்மம் திருஷ்டாந்தம். 'இச்சீவன் சச்சிதானந்த வடிவன்' என்னும் இலிங்க ஞானத்திற்குப் பிறகு, அதிகாரிக்கு 'இச்சீவன் பிரஹ்மாபின்னன்' என்னும் அநுமிதி ஞானமுண்டாகின்றது. ஆகையால் முற்கூறிய அநுமிதியின் இலக்கணம் இங்கணும் பொருந்தும்.

### பட்சமுதலியவற்றின் சொரூபம்.

இனித் தொடர்ச்சிபற்றி பட்சமுதலியவைகளின் சொரூபங் கூறப்படும். அநுமிதி ஞானத்திற்கு முன், இப்புருடனுக்கு எப்பொருளின்கண் சாத்தியத்தின் சம்சய முண்டாகின்றதோ, அப்பொருள் பட்சமெனப்படும். எப்படியெனில்:—பிரசித்த அநுமானத்தினிடத்து 'மலைநெருப்புடைத்து' என்னும் அநுமிதிக்கு முன், இவனுக்கு அம்மலையின்கண் நெருப்பின் சம்சயமுளது. இதனால் அம்மலை மேற்கூறிய அநுமானத்திற் பட்சமெனப்படும். இவனுக்கு

அப்பட்சத்தின்கண் இலிங்க ஞானத்தால் எப்பொருளின் ஞானமுண்டாகின்றதோ, அப்பொருள் சாத்தியமெனப்படும். எப்படி யெனில்:—பிரசித்த அநுமானத்தினிடத்து இவனுக்கு மலையாகிய பட்சத்தின்கண் புகையாகியவிலிங்க ஞானத்தால் நெருப்பின் ஞானமுண்டாகின்றது; இதனால் அவ்வநுமானத்தினிடத்து நெருப்பு சாத்தியமெனப்படும். இவனுக்குச் சாத்தியம் இலிங்கமாகிய விரண்டும் எப்பொருளின்கண் துணியப்படுகின்றதோ, அப்பொருள் திருஷ்டாந்த மெனப்படும். அதெப்படி யெனில்:—பிரசித்த அநுமானத்தினிடத்து இவனுக்கு அடுக்களையின்கண் நெருப்பாகிய சாத்தியமும், புகையாகியவிலிங்கமும் துணியப்படுகின்றன. ஆகையால் மேற்கூறிய அநுமானத்தினிடத்து அவ்வடுக்களை திருஷ்டாந்த மெனப்படும்.

சங்கை:—அநுமிதி எவ்விலிங்க ஞானத்தாற்றோன்றுகின்றதோ அவ்விலிங்கத்தின் சொரூபம் யாது? என்னுமாசங்கை நிகழ, இனி அவ்விலிங்கத்தின் இலக்கணங் கூறப்படுகின்றது.

சாமாதானம்:—வ்யாப்த்யாஶ்ரயஃ லிங்கம் (இ-ள்) சாத்தியத்தின் வியாத்திக்கு ஆஸ்ரயம் யாதோ, அது இலிங்கமெனப்படும். எப்படியெனில்:—பிரசித்த அநுமானத்தினிடத்து நெருப்பாகிய சாத்தியத்தின் வியாத்திக்கு ஆஸ்ரயம் புகையாம். ஆகையால் அப்புகை இலிங்கமெனப்படும்.

சங்கை:—புகைமுதலியன எந்த வியாத்திக்கு ஆஸ்ரயமாய் இலிங்கமெனப்பட்டனவோ, அந்த வியாப்தியின் சொரூபம் யாது ? என்னுமாசங்கை நிகழ, இனி வியாத்தியின் சொரூபங்கூறப்படுகின்றது. ஸாதந ஸாத்யயோஃ ஸாமாநாதிகரண்யம் வ்யாப்திஃ (இ-ள்)சாதன சாத்திய மிரண்டும் வியபிசாரமின்றி ஓரிடத்திருத்தல் வியாத்தியெனப்படும். எப்படியெனில்:— பிரசித்த அநுமானத்தினிடத்து புகையாகிய சாதனமும், நெருப்பாகிய சாத்தியமும் வியபிசாரமின்றி ஓரிடத்திருக்கின்றன. அதாவது நெருப்பாகிய சாத்தியத்தை விட்டுப் புகையாகிய சாதனம் ஒருபோதும் தனியாகவிராது இஃதே அப்புகையின்கண்ணுள்ள நெருப்பின் வியாத்தியாம். ஆனால் நெருப்போ புகையை விட்டுத் தப்தாய பிண்டத்தின்கண்ணிருக்கின்றது; ஆகையால் அந்நெருப்பின்கண் புகைக்கு மேற்கூறிய வியாத்தியில்லை. இங்ஙனங்கூறிய வியாத்திக்கு ஆஸ்ரயமாவதால் புகை முதலிய சாதனங்கள் வியாப்பியமெனவும்,வியாத்தியை நிரூபித்தலால், நெருப்பு முதலிய சாத்தியங்கள் வியாபகமெனவும் படும். இலிங்கம் சாதனம், ஏது என்னு மூன்றுசப்தங்களும் ஒருபொருட் கிளவிகள்.

சங்கை:—இங்ஙனங்கூறிய வியாத்தியின் ஞானம் புருடனுக்கு எவ்வுபாயத்தானுண்டாகும் ?

சமாதானம்:—'எங்குப்புகை உளதோ அங்குத் தீ அவசியமுண்டு' என அடுக்களை முதலியவற்றில் அடுத்தடுத்துப் புகை தீக்களின் உடனிகழ்ச்சியைக் காண்டலானே இவனுக்குப் 'புகை தீயின் வியாப்பியம்' என்னும் வியாத்தி ஞானமுண்டாகின்றது. ஆனால் எந்தச் சாதனத்தின்கண், இச்சாதனம் சாத்தியாபாவ முடையதன்கண்ணுமுளது; என்னும் பிறழ்ச்சியுணர்

வுண்டாகின்றதோ, அச்சாதனத்தின்கண் உடனிகழ்ச்சிகண்டுழியும் அச் சாத்தியத்தின் வியாத்தி ஞானம் நிகழாது. எங்ஙனமெனில்:—'யாண்டுப் பார்த்திவத்வம் (பிருதிவிக்கூறின் தன்மை) ஆண்டு லோஹலேக்யத்வம்' என்னும் உடனிகழ்ச்சி கண்டுழியும், வைரமணிமுதலிய வற்றில் அவ்லோஹ லேக்யத்வ மில்லையாயினும் பார்த்திவத்தன்மை காணப்படுகின்றது. அவ்வுடனி கழ்ச்சிக் காட்சியால் பார்த்திவத் தன்மையின்கண் அவ்லோஹ லேக்யத்வத் தின் வியாத்தி ஞானமுண்டாகா தாகையால்,பிறழ்ச்சியுணர்வு வியாத்தி ஞான த்திற்குத் தடையாம். அத்தடையின்மையோடு கூடிய உடனிகழ்ச்சி யுணர்வே வியாத்தி ஞானத்திற்குக் காரணமாகின்றது. ஆண்டுக்கட்டை முதலிய பார்த் திவப் பொருள்களின்கண், இருப்பாணிகளால் எழுத்து முதலியவற்றை வ ரைதல் லோஹலேக்யத்வ மெனப்படும். இவ்வளவுங் கூறியதால் அவ்வனுமான த்திற்கு இவ்வகை பெறப்படுகின்றது:—அடுக்களை முதலியவற்றில் புகைதீக் களின் உடனிகழ்ச்சிக் காட்சியால் ஒருவனுக்கு 'புகை, வன்னியின் வியாத்தி யுடையது' என்னும் வியாத்தி ஞானமுண்டாகின்றது. அதன் பின்னர் ஒருகா லத்தில் மலையின் சமீபத்திற் சென்ற அவனுக்கு, அம்மலையின்கண் 'இம்மலை புகையுடைத்து' என்னும் புகையாகிய விலிங்கஞான முண்டாகின்றது அதன் பின்னர் முன் அநுபவித்துள்ள வியாத்தியின் சம்ஸ்காரம்உற்புத்தமாகின்றது (நினைவு நிகழ்கின்றது). அதன் பின்னர் அவனுக்கு 'இம்மலை நெருப்புடைத்து' என்னும் அனுமிதி ஞானமுண்டாகின்றது. அந்த வியாத்தி ஞானமே அவ் வனுமிதிப் பிரமைக்குக் கரணமாவதான் அனுமானப் பிரமாணமாம். வியாப்தி யின் உற்புத்த சம்ஸ்காரம் அக்கரணத்திற்கு அவாந்தர வியாபாரமாம். அவ் வனுமிதிப்பிரமை பயனும். அவ்விலிங்க ஞானம் சம்ஸ்காரங்களின் உற்போதக மாவதால் சஹகாரி (துணைக்) காரணமாம்.

## அனுமிதிப் பிரமையின் பிரிவு கூறுதல்.

இனி அவ்வனுமிதிப் பிரமையின் பிரிவு கூறப்படும். அவ்வனுமிதிப்பிரமை சுவார்த்த (தன் பொருட்டு) அனுமிதி, பரார்த்த (பிறர் பொருட்டு) அனுமிதி என்னும் வேறுபாட்டால் இருவகைத்து. ஆண்டுப்புருடனுக்குப் பிறனொருவன் உபதேசமில்லாமலேவியாத்திஞானம், இலிங்கஞானமுதலியவற்றானுண்டாகும் அனுமிதி யாதோ, அது சுவார்த்தானுமிதி யெனப்படும். அச்சுவார்த்தானுமிதி யின் வகை முன் நிரூபிக்கப்பட்டுள்ளது. இனி இரண்டாவது பரார்த்தானு மிதியின் வகை கூறப்படுகின்றது. முற்கூறிய வகைப்படி, தான் மலையின் கண் தீயைத்துணிந்து பிறனுக்கு அத்தீயைத் துணிவிப்பது யாதோ, அது பரார் த்தானுமிதி யெனப்படும். அப்பரார்த்தானுமிதி நியாயத்தாற் பெறப்படும் உறுப்புக்களின் கூட்டம் நியாயமெனப்படும். அவ்வனுமான வாக்கியத்தி னுள்ள பிரதிஞ்ஞை முதலியன உறுப்புக்களெனப்படும். நையாயிகரோ பிரதிஞ்ஞை, எது, உதாரணம், உபநயம், நிகமனம் என்னுமைந்து உறுப் புக்களின் கூட்டம் நியாயமென்பர். எங்ஙனமெனின், பிரசித்தானுமானத்தி னிடத்து 'மலை தீயுடைத்து' என்பது பிரதிஞ்ஞை. 'புகையுடைமையால்' என் பது எது. 'எது எது புகையுடைத்து அது அது தீயுடைத்து. அடுக்களை

போல' என்பது உதாரணம். 'இதுவும் அங்ஙனம்' அதாவது 'இம்மலை அடுக்களைபோல் புகையுடையது' என்பது உபநயம். 'ஆதலால் இங்ஙனம்' அதாவது புகையுடைமையால்'இம்மலை அடுக்களைபோலத் தீயுடைத்தே'என்பது நிகமனம். இப்பிரதிஞ்ஞை முதலிய ஐந்து உறுப்புக்களின் இலக்கணம் நியாயப் பிரகாசத்தின் ஆருவது பரிச்சேதத்தில் அநுமான நிரூபணத்திற் கூறியிருக்கின்றோம். அவற்றை ஆண்டு அறிந்துகொள்ளுக. இவ்வாருன பிரதிஞ்ஞை முதலிய ஐந்து உறுப்புக்களின் கூட்டமாகிய நியாயத்தாற் பிறனுக்கும் வியாத்தி, இலிங்க முதலியவற்றின் உணர்வுண்டாய்த் தீயின் அநுமிதியுண்டாகின்றது. இதனையே பரார்த்தாநுமிதி யெனப்படும்.

சித்தாந்தத்திலோ பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம் என்னு மூன்று உறுப்புக்களின் கூட்டம் நியாயமெனப்படும். அல்லது உதாரணம், உபநயம்,நிகமனம் என்னு மூன்று உறுப்புக்களின் கூட்டம் நியாயமெனப்படும். இந்நியாயத்தானே பிறனுக்கும் அநுமிதி ஞானத்தின்கண் உபயோகமுள்ள வியாத்தி முதலியவற்றின் உணர்வுண்டாகின்ற தாகையால், ஐந்து உறுப்புக்களை யொப்புதல் நிஷ்பயன். முன்னே 'மலை தீயுடைத்து' என்னும் இலௌகிக அநுமான வாக்கியத்தின்கண்ணுள்ள பிரதிஞ்ஞை முதலிய உறுப்புக்கள்காட்டப்பட்டன.

### வைதிக வாக்கியத்தின்கண் பிரதிஞ்ஞை முதலியவற்றைக் கூறுதல்.

இனி ஜீவப்பிரஹ்மத்தின் அபேதத்திற்குச் சாதகமானவைதீக அநுமான வாக்கியத்தின்கண்ணும், அந்தப் பிரதிஞ்ஞை முதலிய வுறுப்புக்கள் கூறப்படுகின்றன. ஜீவ: பரமாத்மநோ ந பித்யதே। ஸச்சிதாநந்தலக்ஷணத்வாத்। ய: ஸச்சிதாநந்தலக்ஷண: ஸ பரமாத்மநோ ந பித்யதே யதா பரமாத்மா। ததா சாயம்। தஸ்மாத்ததா (இ - ள்.) 'ஜீவன் பரமான்மாவைவிட வேறன்று' என்பது பிரதிஞ்ஞை. 'சச்சிதானந்த வடிவனனதால்' என்பது ஏது. 'எது சச்சிதானந்த வடிவமோ அது பரமான்மாவைவிட வேறன்று, பரமான்மாபோல' என்பது உதாரணம். 'ஜீவன் பரமான்மாவைப்போலச் சச்சிதானந்த வடிவன்' என்பது உபநயம். சச்சிதானந்த வடிவனனதால், இச்சீவன் அப்பரமான்மாவுக்கபின்னனே என்பது நிகமனம். இவ்வாருய பிரதிஞ்ஞை முதலிய மூவுறுப்புக்களின் அல்லது உதாரண முதலிய மூவுறுப்புக்களின் கூட்டமாகிய நியாயத்தால், அதிகாரிக்கு வியாத்தி, இலிங்க முதலியவைகளின் ஞானமுண்டாய் ஜீவப்பிரஹ்மாபேதத்தை விஷயப்படுத்தும் அநுமிதிப்பிரமை நிகழ்கின்றது.

சங்கை:—ஜீவான்மாவினிடத்து யாதாமொரு பிரமாணத்தால் சச்சிதானந்தத் தன்மை பெற்றுழி, அச்சச்சிதானந்தத் தன்மையாகிய வேதுவால் ஜீவனிடத்துப் பிரஹ்மாபேதம் பெறப்படும். ஆனல், ஜீவனது சச்சிதானந்தத் தன்மையில் ஓர்பிரமாணமு மின்றாகையால், அச்சச்சிதானந்தத் தன்மையாகிய வேது ஜீவனகிய பட்சத்தின்கண்ணிராமையால் * சொரூபாசித்தமென்னும் ஏதுப்போலி நிகழுமென்னு மாசங்கை யுண்டாம்.

---

* சொரூபா சித்தமாவது உருவாசித்தம். அஃதங்ஙனம் சத்தம் குணம், கண்ணுக்குப் புலனுதலின், ஈண்டுக்கட்புலனுதல் சத்தத்திற்கின்று, சத்தம் செவிக்குப் புலனுதலின்.

## ஜீவான்மாவினிடத்துச் சச்சிதானந்தத் தன்மை கூறுதல்.

இனி சுருதி, ஸ்மிருதி, யுக்தி, அநுபவமென்னும் நான்கினாலும் ஜீவான்மாவினிடத்துச் சச்சிதானந்தத் தன்மை துணியப்படுகின்றது. அவிநாஶீவா அரே ऽயமாத்மா । ஸத்யாத்மா நித்ய꞉ ஶுத்தோ பு³த்³த⁴꞉ (இ-ள்.) ஏ ! மைத்திரேயி ! இவ்வான்மா நாசமில்லாதது. இவ்வான்மா சத்தாமாத்திரம் நித்தியம் சுத்தம் ஞானசொரூபம்—என்னுந் தொடக்கத்துச் சுருதிகளால் இச்சீவான்மாவின் சத்தியத்தன்மை பெறப்படுகின்றது. நித்ய꞉ ஸர்வக³த꞉ ஸ்தா²ணுரசலோऽயம் ஸநாதந꞉ (இ-ள்.) இவ்வான்மா நித்தியம், எங்கும் வியாபகம், கூடஸ்தம், அசலம், சநாதனம்—என்பதாதி கீதா ஸ்மிருதி வசனங்களானும் ஜீவான்மாவின் சத்தியத்தன்மை பெறப்படுகின்றது. இச்சீவான்மா சத்திய மன்றாயின் கிருதநாசம் (செய்வினையழிவு) அக்ருதாப்யாகமம் (செய்யாவினையின் தோற்றம்) ஆகிய விருதோஷங்களடையப்படும். செய்யப்பட்ட புண்ணிய பாபகர்மங்கள் பயனுகர்ச்சியின்றி நாசமாதல் கிருதநாசமெனப்படும். முன் செய்யப்படாத கர்மங்கள் பயனுகர்ச்சிக்கு வருதல் அக்ருதாப்யாகம மெனப்படும், இத்தொடக்கத்து யுக்திகளானும் ஜீவான்மாவின் சத்தியத்தன்மை பெறப்படுகின்றது. அன்றியும் 'நான் இருக்கிறேன்' என்னுமநுபவத்தானும் அவ்வான்மாவின் சத்தியத்தன்மை பெறப்படுகின்றது. இதனால் அச்சீவான்மா சத்தியவடிவமேயாம். அத்ராயம் புருஷ꞉ ஸ்வயம் ஜ்யோதிர்ப⁴வதி । ஆத்மைவாஸ்ய ஜ்யோதிர்ப⁴வதி । யோऽயம்விஜ்ஞாநமய꞉ ப்ராணேஷு ஹ்ருத்³யந்தர்ஜ்யோதி꞉ புருஷ꞉ । தஸ்யைஷ விசக்ஷண꞉ ஸாக்ஷீ விஜ்ஞாதாஹம் ஸதா³ ஶிவ꞉ (இ-ள்.) இச்சொப்பனவஸ்தையின்கண் இவ்வான்மாவே சுயஞ்சோதியாம். அதாவது அச்சொப்பனவஸ்தையின்கண் சூரிய சந்திரர் முதலிய புறச்சோதிகளில்லையாயினும், அவ்வான்மவடிவ சோதியினாலே எல்லாவியவகாரங்களும் நிகழ்கின்றன. இக்கூட்டத்திற்கு ஆன்மாவே சோதியாம். இவ்வான்மா விஞ்ஞானமயம். நான் ஜாக்கிர சொப்பன சுழுத்தியென்னு மூன்றவஸ்தைகளில் முறையாக வுள்ள விஸ்வ, தைஜச, பிராஞ்ஞ ரென்னு மூன்று போக்தாக்களும், அவைகளின் ஸ்தூல சூட்சும முதலிய போக்யப்பொருள்களும், அந்தக்கரண, அல்லது அஞ்ஞான விருத்தியாகிய போகமுமாகிய வனைத்திற்கும் விலட்சணமான சின்மாத்திர சாட்சியாம். இத்தொடக்கத்துச் சுருதிகளால் ஜீவான்மாவின் சேதனத்தன்மை பெறப்படுகின்றது. யதா² ப்ரகாஶயத்யேக꞉ க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி꞉ । க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா² க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி பா⁴ரத (இ-ள்) அர்ச்சுனா ! எவ்வண்ணம் ஒரேசூர்யபகவான் இவ்வுலகமுழுவதும் பிரகாசிக்கின்றனனோ, அவ்வண்ணம் இவ்வான்மா இக்கூட்டமுழுவதும் பிரகாசிக்கின்றான். இத்தொடக்கத்து ஸ்மிருதிகளானும் ஜீவான்மாவின் சைதன்யத்தன்மை பெறப்படுகின்றது. ஒருகால் இவ்வான்மா சைதன்யவடிவ மன்றாயின் விளக்கமின்மையால் இச்சகத்தின்கண் அந்தத்தன்மை பிராப்தமாகுமென்பது முதலிய யுக்திகளானும், 'நான் அறிகின்றேன்' என்னு மநுபவத்தானும், ஜீவான்மாவின் சேதனத்தன்மை பெறப்படுகின்றது. இதனால் ஜீவான்மா சேதனவடிவமே.

யொவெஹஅூ தஜுவழ । கொஹெ) வாந)க்ஷஃ ப்ராண)ாசுயஷெ ஷ ஞகாஶ ஞநெஹா நஸ)ாகு । வஷஹெ) வாநநுயாதி (இ - ள்.) தேச கால வஸ்து பரிச்சேதரகிதமான ஆன்மா யாதோ, அது சுகரூபம். ஒருகால் ஆன்மா ஆனந்த மன்றுயின் அபான பிராண தேகேந்திரிய வியாபாரங்களை, எவன் செய்வான் ? ஒருவனும் செய்யமாட்டான். ஏனெனின், எல்லாருடைய ஜீவனமும் இன்ப பூருவகமே. மிகுந்த துன்பமடையுங்கால் உயிர்களின் பிரிதலே காணப்படுகின்றது. இது முதலிய சுருதிகளால் ஜீவான்மாவின் ஆனந்தத்தன்மை பெறப்படுகின்றது. அன்றியும் யொ॰ஜஃ ஸுவொ॰ஜ ரா஦ா ஷ்யொ॰ஜஜெ) அாதி ரெவயஃ (எவன் அகத்தில் சுகிப்பவனோ, அகத்தில் இரமிப்பவனோ, அகத்தில் சோதியாயுள்ளவனோ) என்னுந் தொடக்கத்துக் கீதா ஸ்மிருதி வசனங்களானும் ஜீவான்மாவின் ஆனந்தத்தன்மை பெறப்படுகின்றது. ஒருகால் இவ்வான்மா ஆனந்தவடிவமன்றுயின் யாவருக்கும் தமான்மாவின்கண் பரமப்பிரீதி யுண்டாகலாகாது. ஆனல் யாவருக்கும் தம்மான்மாவின்கண்ணே பரமப்பிரீதியே காணப்படுகின்றது. அன்றியும் சுழுத்தியினின்று மெழுந்தவனுக்கு 'நான் சுகமாயுறங்கினேன்' என்னும் நினைவுண்டாகின்றது. அநுபவத்தானன்றி நினைவுவராது. ஆகையால் சுழுத்தியின்கண் சுகாநுபவம் கற்பிக்கப்படுகின்றது. ஆண்டுச் சுழுத்தியின்கண் ஓர் விஷயத்தாலுண்டாகும் இன்பமோ இல்லை; ஆனல் தனது சொரூபவின்பமே யுண்டு. இவை முதலிய யுக்திகளானும் 'நான் ஒருபோதும் அப்பிரியனாகலாகாது' என்னு மநுபவத்தாலும், ஜீவான்மாவின் ஆனந்தத்தன்மை பெறப்படுகின்றது. இதனல் இச்சீவான்மா ஆனந்தவடிவமே. இவ்வாறு சுருதி, ஸ்மிருதி, யுக்தி, அநுபவமென்னும் நான்கானும் ஜீவான்மாவினிடத்துச் சச்சிதானந்தத்தன்மை பெறப்படுவதால் அந்த சச்சிதானந்தத் தன்மையாகிய வேது ஜீவான்ம பட்சத்தின்கண்ணிருப்பதால் சொரூபாசித்த மெனப்படும் ஏதுப்போலியின்றும்.

அல்லது, முற்கூறிய அனுமானத்தின்கண் பட்சமாகிய ஜீவான்மாவின் சச்சிதானந்தத்தன்மை எவ்வாறு சுருதியாதிய பிரமாணங்களாற் பெறப்படுமோ, அவ்வாறு திருஷ்டாந்தமாகிய பரமான்மாவின் சச்சிதானந்தத்தன்மையும் சுருதிப் பிரமாணத்தானே பெறப்படும். சுருதி. ஸத)ஂ ஜூாந உநஹஂ ப்ர ஹ ஞநெஹா ப்ர ஹ (இ-ள்.) பிரஹ்மம் சத்தியம் ஞானம், அளவுகடந்தது, ஆனந்தம்—இதனல் அச்சச்சிதானந்தமாகிய வேது பரமான்மாவாகிய திருஷ்டாந்தத்தின்கண்ணு மிருக்கின்றது. முற்கூறிய அனுமானத்தில் ஜீவான்மாவிற் கபின்னமான பிரஹ்மத்திற்குத் திருஷ்டாந்தம் பொருந்தாது, ஏனெனின், எங்கும் பட்சத்தைவிட வேறுகவே திருஷ்டாந்த மிருக்கும், எனினும், ஜீவப்பிரஹ்மங்கட்குக் கற்பிதபேத மொப்பிடின் பிரஹ்மத்திற்குத் திருஷ்டாந்தம் பொருந்தும். உண்மையாகவோ, ஜீவப்பிரஹ்மங்களுக் கபேதமே. ஜீவப்பிரஹ்மங்களினபேதம் முதற் பரிச்சேதத்தின்கண் பேதவாதத்தைக் கண்டிக்கும் வாயிலாக விரிவாய்க் கூறப்பட்டது.

சங்கை:—'நான் பிரஹ்ம' மென முற்கூறிய அனுமிதி யாவருக்கு முண்டாகின்றதா ? அல்லது யாதாமொருவனுக் குண்டாகின்றதா ?

சமாதானம்:—பிரஹ்மவேத்தா குருவின் முகத்தினின்றும் நம்பிக்கை விசுவாச பூர்வகமாக வேதாந்த சாஸ்திரத்தைக் கேட்டும், முதற்பரிச்சேதத்திற் கூறியபடி தத்துவம் பதார்த்தங்களின் சோதனையைச் செய்தும் எவன் இருக்கின்றானோ அவனுக்கே தன்னான்மாவின்கண் சச்சிதானந்தத் தன்மையாகிய வேதுவி னுணர்ச்சியால் 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் ஜீவப்பிரஹ்மா பேதத்தை விஷயப்படுத்தும் அநுமிதியுண்டாகின்றது. வேதாந்தக்கேள்வி முதலியவைகளில்லாதவனுக்கு அவ்வபேதத்தை விஷயப்படுத்தும் அநுமிதியுண்டாகாது.

சங்கை:—தம்கௌபநிஷதம் புருஷம் ப்ருச்சாமி (உபநிடதமொன்றிற்கே விஷயனாயிருக்கும் அப்புருஷனைக் கேட்கின்றேன்) என்னுஞ் சுருதியால் பிரஹ்மமானது கேவலம் உபநிடதமாகிய சப்தப்பிரமாணத்திற்கு விஷயமாகக் கூறப்பட்டுளது. ஒருகால் பிரஹ்மம் அநுமானப் பிரமாணத்திற்கு விஷயமாக வொப்பிடின் மேற்கூறிய சுருதிக்கு முரணும். ஆகையால் மேற்கூறிய அநுமானப் பிரமாணத்திற்கு பிரஹ்மம் விஷயமாகுமெனல் பொருந்தாது.

சமாதானம்:—பிரஹ்மத்தினிடத்து அநுமானம் சுவதந்திரமாகப் பிரமாணமன்று? அல்லது, வேதாந்தத்தைத் துணையாகக்கொண்டும் பிரமாணமன்று? முதற்பட்சமங்கீகரிக்கின் அது எமக்கும் விருப்பம். அதாவது புருஷனாற் கற்பிக்கப்பட்ட அநுமானப் பிரமாணம், புலன்களுக்கெட்டாத பிரஹ்மத்தினிடத்துப் பிரமாணமாதல் யாமுமொப்புவதில்லை. இரண்டாம் பட்சமங்கீகரிக்கின் அது பொருந்தாது. ஏனெனின், ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்ய: (ஆன்மாவன்றோ பார்க்கத்தக்கதும், சிரவண மனனஞ்செய்யத்தக்கதுமா யுள்ளது) என்னுஞ் சுருதியாலும் ச்ரோதவ்ய: ச்ருதிவாக்யேப்யோ மந்தவ்யஶ்சோபபத்திபி: (ஆன்மா சுருதிவாக்கியங்களாற் கேட்கத்தகுந்தது, உபபத்தி முதலிய யுக்திகளால் மனனஞ்செய்யத் தகுந்தது) என்னும் ஸ்மிருதியாலும், ஆன்ம சாட்சாத் காரத்தின் பொருட்டு மனனம் விதிக்கப்பட்டுளது. அநுமான முதலிய யுக்திகளைக்கொண்டு ஆன்ம விசாரஞ்செய்தல் மனனமெனப்படும். இவ்வாறு மனனத்திற்கு உபயோகமாவதால் அவ்வநுமானம் வேதாந்த சாஸ்திரத்திற்குத் துணையாக நிற்றல் எமக்கு முடன்பாடே. ஒருகால் அவ்வநுமானம் எல்லாவகையிலும் அப்பிரமாணமாகவே கொண்டால் சுருதி ஸ்மிருதிகளில் மனனம் விதித்தல் வீணும், அதனால் வேதாந்த சாஸ்திரத்திற்குத் துணையாக நிற்றலால் அவ்வநுமானம் பிரமாணமென்றவசிய மொப்பவேண்டும். இக்காரணத்தால் அஹம் ப்ரஹ்மாஸ்மி । அயமாத்மா ப்ரஹ்ம (நான் பிரஹ்மம், இவ்வான்மா பிரஹ்மம்) என்னுந்தொடக்கத்துச் சுருதிகளாற்றுணியப்பட்ட ஜீவப்பிரஹ்மங்களினபேதம் முற்கூறிய அநுமானத்தாற் பெற்றும். ஆண்டு வேதாந்த நூற்கள் எப்பொருளைப் பிரதிபாதிக்கின்றனவோ, அப்பொருளையே நிச்சயிக்கும் அநுமானம் அவ்வேதாந்த சாஸ்த்திரத்திற்குத் துணையெனப்படும்.

அன்றியும், நேஹ நாநாஸ்தி கிஞ்சந । வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் । ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம (இங்கு நாநாவானவை சிறிது மில்லை,

விகாரம் வாக்கை முதலாகவுடைய பெயர், இத்துவிதம் மாயாமாத்திரம்) என்னுந்தொடக்கத்துச் சுருதிகளால் பிரபஞ்ச மித்தியாத்தன்மை எங்ஙனம் பெறப்படுகின்றதோ, அங்ஙனமே அனுமானப் பிரமாணத்தானும் அம்மித்தியாத்தன்மை பெறப்படுகின்றது. அதுவருமாறு:—

## அனுமானப் பிரமாணத்தாற் பிரபஞ்ச மித்தியாத்தன்மை.

𑌵𑍍𑌯𑌾𑌵𑌹𑌾𑌰𑌿𑌕𑌪𑍍𑌰𑌪𑌂𑌚𑌃 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍। 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑍍𑌯𑌵𑌤𑍍 (இ-ள்) இவ்வாகாய முதலிய வியாவகாரிகப் பிரபஞ்சம், மித்தை. காணப்படுவதால், எப்பொருள் காணப்படுவதாமோ அப்பொருள் மித்தையே, அது இப்பி வெள்ளி காணப்படுவதால் மித்தையே யாவதுபோலும். இவ்வனுமானத்தால் இவ்வதிகாரிக்குப் பிரஹ்மத்தைவிடவேமுன சர்வப்பிரபஞ்சத்தின்கண்ணும், மித்தியாத்தன்மை அனுமிதியுண்டாகின்றது.

சங்கை:—இப்பிரபஞ்சத்தின்கண் மித்தியாத்தன்மை யென்பது யாது?

சமாதானம்:—சத் அசத் விலட்சண (வேறுபாடு) அநிர்வசனீயத்தன்மை யாதோ, அதுவே பிரபஞ்சத்தின்கண் மித்தியாத்தன்மை. பிரபஞ்சம் சத்தியமெனக்கொளின் பிரஹ்மத்தைப்போல பிரபஞ்சம் பாதிக்கப்படலாகாது. ஆனல் பிரஹ்ம சாட்சாத்காரத்தால் பிரபஞ்சம் பாதிக்கப்படுகின்றது, ஆகையால் பிரபஞ்சம் சத்தைப் பார்க்கினும் விலட்சணமானது. பிரபஞ்சம் அசத்தியமெனின்மாநுடர்கோடு, மலடிமகன் என்பனபோலப்பிரபஞ்சம்பிரத்தியட்சமாதல் கூடாது. ஆனல் பிரபஞ்சப் பிரத்தியட்சம் யாவருக்கு முண்டு, ஆகையால் பிரபஞ்சம் அசத்தினும் விலட்சணமே. சத் அசத் இரண்டிற்கும்ஒன்றற்கொன்று முரணுவதால் சத் அசத்தாகிய உபயமும் பிரபஞ்சத்தின்கண் நிகழா, இவ்வகையான அநிர்வசனீயத்தன்மையே பிரபஞ்சத்தின்கண்ணும் இப்பிவெள்ளியின்கண்ணுமுள்ள மித்தியாத்தன்மையாம்.

சங்கை:—எத்திருசியத்தன்மையின் ஏதுவால் பிரபஞ்சத்தின்கண் மித்தியாத்தன்மை துணியப்பட்டதோ, அத்திருசியத்தன்மை ஏது பிறழ்வதால் அசத் ஏதுவே; ஏனெனின், தரிசனத்திற்கு விஷயமானது திருசியம், விருத்தி ஞானம் தரிசனமெனப்படும். விருத்தி ஞானத்திற்கு விஷயமாகுந் திருசியத்தன்மை பிரஹ்மத்தின்கண்ணு முண்டு. ஆனல் பிரஹ்மத்தின்கண் மேற்கூறிய மித்தியாத்தன்மையாகிய சாத்தியமில்லை. இதனல் மித்தியாத்தன்மையாகிய சாத்தியாபாவமுடைய பிரஹ்மத்தின் கண்ணிருப்பதால் அத்திருசியத்தன்மை ஏது பிறழ்ச்சியே.

சமாதானம்:—மேற்கூறிய அனுமானத்தில் திருசியத்தன்மை சத்தத்தால் விருத்திஞானத்திற்கு விஷயமாகுந் திருசியத்தன்மை கருத்தன்று. ஆனல் அவ்விருத்தியின் கண்ணூருடமான பலசைதன்யத்திற்கு விஷயமாகுந் திருசியத்தன்மையே கருத்தாம். அந்தப்பிரஹ்மம் ஆவரண நிவர்த்தியின் பொருட்டு விருத்திக்கு விஷயமாயினும் சொப்பிரகாச மாவதால் அப்பலசைதன்யத்திற்கு விஷயமாருந்தன்மை அதனிடத்திலின்றும், இன்றாகவே அத்திருசியத்தன்மை

ஏது பிரஹ்மத்தின்கண் இல்லாமையால் பிறழ்ச்சிப்படுவதன்று. ஆனுல் சத் ஏதுவாம்.

இங்கு இது தாற்பரியம்:—ஒன்று சத் ஏது, மற்றென்று அசத் ஏது. சத் ஏதுவால் அவ்வச்சாத்தியங்களடையக்கூடும். அசத் ஏதுவால் அச்சாத்திய மடைதல் கூடாது. அவ்வசத் ஏதுவினையே துஷ்ட ஏதுவென்றும்,ஏதுப்போலி யென்றுங் கூறுவர். அவ்வேதுப் போலியும் சவ்வியபிசாரம் (பிறழ்வுடையது) விருத்தம் (மாறு கொள்வது) அசித்தம் (பேறில்லது) சற்பிரதிபக்கம் (மறுதலையுடையது) பாதிதம் (மறுப்புடையது) என்னும் வேறுபாட்டால் ஐவகைப் படும். முதற் சவ்வியபிசார (அநைகாந்திக) மும் சாதாரணம், அசாதாரணம், அநுபசங்காரி (முடிவுபெறுமை) என்னும் வேறுபாட்டால் மூவகைத்து. மூன்றுவதான அசித்தமும் சார்பசித்தம், உருவாசித்தம், வியாப்யத்தன்மையசித்தம் என்னும் வேறுபாட்டால் மூவகைப்படும். இவ்வைந்து ஏதுப் போலிகளின் இலக்கணமும் உதாரணமும் நியாயப்பிரகாசம் ஆறுவது பரிச்சேதம் அனுமான நிருபணத்தில் நம்மால் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. இங்குவிரிவஞ்சி விடுத்தாம். வேட்கையுடையார் ஆண்டறிந்து கொள்க.

ஈண்டு நையாயிகர் அவ்வனுமானம் கேவலாந்துவயி, கேவலவெதிரேகி,அந்நுவயவெதிரேகி என்னும் வேறுபாட்டால் மூவகைப்படுமென்பர்.எவ்வனுமானத்தின் சாத்தியத்திற்கு எங்கும் அத்தியந்தாபாவமில்லையோ, அவ்வனுமானம் கேவ்லாந்நுவயி (அந்நுவயத்தின் மாத்திரம் வியாத்தியுடையது). அது घटोऽभिधेयः प्रमेयत्वात् (கடம்,அபிதேயம் அதாவது பெயரிட்டுவழங்கற்பாலது, பிரமேயம் அதாவதுஅளவையான எக்கப்படுந்தன்மையால்)என்னுந் தொடக்கத்துஅனுமானம் போலும். ஈண்டு அபிதேயத்தன்மையாகிய சாத்தியத்திற்குஎங்கும் அத்தியந்தாபாவ மில்லை; ஆனுற் பதத்தின் வாச்சியத் தன்மையாகிய அபிதேயத் தன்மையும், பிரமை ஞானத்திற்கு விஷயமாகும் பிரமேயத்தன்மையும் எல்லாப் பொருள்களினு முண்டு. மேற்கூறிய அனுமானம் கேவலாந்நுவயி யெனப்படும். எவ்வனுமானத்தின் சாத்தியத்திற்கும் ஏதுவிற்கும் எங்கும் உடனிகழ்ச்சிக்காட்சி யுண்டாகாமல், அச்சாத்திய ஏதுக்களின் அபாவங்கட்கே வுடனிகழ்ச்சிக்காட்சி யுண்டாகின்றதோ, அவ்வனுமானம் கேவலவெதிரேகி (வெதிரேகத்தின் மாத்திரம் வியாத்தியுடையது)எனப்படும். அது पृथिवी इतरेभ्यो भिद्यते गन्धवत्त्वात् यन्नैवं तन्नैवं यथा जलादिः (பிருதிவி பிறவற்றின் வேறு, கந்த முடைமையால், எது பிறவற்றின் வேறன்றே, அது கந்தமுடைத்தன்று, ஜலமுதலியனபோல) என்னுந் தொடக்கத்து அனுமானம் போலும். ஈண்டுப் பிருதிவி ஜலமுதலிய பிறபொருள்களினும் வேறென்னும் சாத்தியத்திற்கும், கந்தமாகிய வேதுவிற்கும் அப்பிருதிவியாகிய பட்சத்தை விட்டு வேறெங்கும் உடனிகழ்ச்சி (ஒரு நிலைக்களத்திருத்தல்) இல்லை; ஆனுல் ஜலமுதலியவற்றில் அச்சாத்திய ஏதுக்களின் அபாவங்கட்கே உடனிகழ்ச்சியுண்டு ஆகையால் மேற்கூறிய அனுமானம் கேவலவெதிரேகி யெனப்படும். எவ்வனுமானத்தின் சாத்திய ஏதுக்களிரண்டிற்கும் அவற்றினபாவங்கட்கும் எங்கும் உடனிகழ்ச்சி காணப்படுகின்றதோ, அவ்வனுமானம் அந்நுவயவெதிரேகி

யெனப்படும். அது 𑌪𑌰𑍍𑌵𑌤𑍋 𑌵𑌹𑍍𑌨𑌿𑌮𑌾𑌨𑍍 𑌧𑍂𑌮𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 (மலை தீயுடைத்து, புகையுடைமையால்) என்னும் பிரசித்தானுமானம் போலும். இங்குத் தீயாகிய சாத்தியத்திற்கும், புகையாகிய ஏதுவிறகும் அடுக்களையின்கண் உடனிகழ்ச்சி காணப்படுகின்றது. அவ்விரண்டபாவத்தி னுடனிகழ்ச்சி நீர்நிலையிற் காணப்படுகின்றது. ஆகையால் இவ்வனுமானம் அந்நுவய வெதிரேகி (அந்நுவயத்தானும் வெதிரேகத்தானும் வியாத்தி யுடையது) எனப்படும். இம்மூவகை யனுமானங்களின் அகல நிரூபணம், நியாயப்பிரகாசம் ஆறுவது பரிச்சேதத்திற் கூறப்பட்டுளது.

இந்த நையாயிகரது மதம் நலமன்று. ஏனெனின் 𑌨𑍇𑌹 𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨 (இங்குநாநாவானவை சிறிது மில்லை) என்னுந் தொடக்கத்துச் சுருதிகள் பிரஹ்மத்தின்கண் சர்வப்பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவங் கூறியுள்ளன. பிரஹ்மத்தை விட வேறானதோர் பொருளின்கண் அத்தியந்தா பாவத்திற்குப் பிரதியோகி யாகாமையில்லை. ஆனல் சர்வ அநான்மப்பொருள்களும் அவ்வத்தியந்தாபாவப் பிரதியோகிகளேயாம். ஆகையால் அவ்வனுமானத்தினிடத்து கேவலாந்நுவயித் தன்மை பொருந்தாது. இவ்வாறே அக்கேவலவெதிரேகி அனுமானமும் பொருந்தாது. ஏனெனின், எப்பொருள்களுக்கு ஒன்றற்கொன்று வியாப்பிய வியாபக பாவமுண்டோ அப்பொருள்களுக்கே ஒன்றற்கொன்று சாதன சாத்தியபாவ முண்டென்பது நியமம். இந்நியமத்திற்குக் கேவல வெதிரேகியனுமானத்தின்கண் கேடுண்டாகின்றது. எக்காரணம்பற்றியெனின், முற்கூறிய கேவலவெதிரேகி யனுமானத்தின்கண் 'கந்தம்' 'பிறவற்றின் வேறு' என்னுமிரண்டிற்கும் சாதன சாத்திய பாவமொப்பப்பட்டுளது. 'பிறவற்றின்பேதாபாவமும்,' 'கந்தாபாவமு' மாகிய விரண்டிற்கும் வியாப்ய வியாபக பாவமுமொப்பப்பட்டுள்ளது. ஒருகால் ஒரு பொருளின் வியாத்தி ஞானத்தாற் பிற பொருளின் அனுமிதி யுண்டாவதாயின் மலையின்கண்ணுள்ள தீயின் வியாப்பியமான புகையினுணர்ச்சியால், நீரின்கண்ணும் அனுமிதி யுண்டாதல் வேண்டும், ஆகையால் அனுமானத்தினிடத்து கேவலவெதிரேகித் தன்மையும் பொருந்தாது. கேவலாந்நுவயியும் கேவலவெதிரேகியும் பொருந்தாதாகவே அவ்வனுமானத்தினிடத்து அன்வயவெதிரேகியும் பொருந்தாது. இதனல் வேதாந்த சித்தாந்தத்தில் அவ்வனுமானம் ஒரு அந்நுவியே யாகின்றது. முற்கூறப்பட்ட அந்நுவய வியாத்தியுடைய அனுமானம் அந்நுவயி யெனப்படும்.

சங்கை:—எவனுக்கு முற்கூறிய சாதன சாத்திய மிரண்டின் சாமானதிகரணியமாகிய அந்நுவய வியாத்திஞான முண்டாகாமல், சாத்தியபாவ சாதனபாவ மிரண்டிற்கும் சாமானதிகரணியமாகிய வெதிரேக வியாத்திஞான முண்டாகின்றதோ, அவனுக்கும் அவ்வெதிரேக வியாத்தியின் ஞானத்தால் சாத்தியத்தின் அனுமிதி யுண்டாகின்றது; அது உண்டாகலாகாது.

சமாதானம்:—அந்நுவய வியாத்தியின் ஞானமில்லாதவனுக்கு அவ்வெதிரேக வியாத்தியின் ஞானத்தால் சாத்தியத்தின் அனுமிதி யுண்டாகாது; ஆனல் அர்த்தாபத்திப் பிரமாணத்தாற்றான் அச்சாத்தியத்தின் பிரமையுண்டாகின்றது

அதெங்ஙனமெனின்:—பிருதிவி மாத்திரத்தின் கண்ணுள்ள கந்த குணம், அப்பிருதிவியின்கண் ஜலமுதலிய பிறபொருள்களின் பேதமின்றி நிகழாததாய் அப்பிருதிவியின்கண் பிறவற்றின்பேதம் கற்பிக்கப்படுகின்றது.

அனுமிதிப் பிரமை முற்றிற்று.

---

# உவமிதிப்பிரமை.

இனி மூன்றுவது உவமிதிப் பிரமை கூறப்படுகின்றது. ஸாத்³ருஶ்ய ப்ரமிதி: உபமிதி: (இ-ள்) சாதிருசியத்தை (ஒப்புமையை) விஷயப்படுத்தும் பிரமை உவமிதிப்பிரமை யெனப்படும். எங்ஙனமெனின்:—நகரத்தின்கண் கோ (பசு)ப்பிண்டத்தைப் பார்த்தவனும், கவயமெ (காட்டாவெ) ன்னும் விலங்கை யறிய விச்சையுடையவனுமாகிய ஒருவன், ஓர் வனவாசியைக் கண்டு கவயமெத்தன்மையது? என வினவ, அவ்வனவாசி அந்நகரவாசிக்கு 'கோவினை யொக்கும் கவயம்' எனக் கூற, அவ்வசனத்தைக் கேட்டு அந்நகரவாசி ஒரு காலத்தில் வனஞ் சென்றான். அவ்வனத்தின்கண் கவயபிண்டத்தைக் கண்ணுற்று இக்கவயம் கோவினை யொத்ததென்னும் ஞானம் அவனுக்குண்டாயிற்று. அதன் பின்னர் 'இக்கவயத்திற் கொப்ப நமது கோவுமுளது' என்னும் ஞானம் அவனுக்குண்டாயிற்று. இங்ஙனமான வறிவு உவமிதிப்பிரமை யெனப்படும்.

ஆண்டு அக்கவயத்தின் கண்ணுள்ள கோவின் சாதிருசிய ஞானமோ, உவமிதிப் பிரமைக்குக் கரணமாவதான் உவமானப் பிரமாணமாம். தனது கோவின் கண்ணுள்ள அக்கவயத்தின் சாதிருசியஞானம் உவமானப் பிரமாணத்திற்குப் பயனாகிய உவமிதிப்பிரமையாம். அவ்வுவமிதிப் பிரமைக்கு இவ்விலௌகிக உதாரணங் கூறப்பட்டது. இனி அவ்வுவமிதிக்கான வைதிக உதாரணங் கூறப்படுகின்றது. ஆகாயத்தின் அசங்கத் தன்மையையும், வியாபகத் தன்மையையும் நிச்சயித்தவனும், பிரஹ்மத்தின் அசங்க வியாபகத் தன்மைகளை யுணராதவனுமாகிய அதிகாரி, பிரஹ்ம வேத்தாகுருவை ஏ பகவன்! பிரஹ்மத்தின் சொரூபம் யாது? என வினவ, குருவானவர் அச்சீடனை நோக்கி 'ஆகாயம் போன்று பிரஹ்மம் அசங்கமும், வியாபகமுமாம்; என விடை கூறினர். அதன் பின்னர் அச்சீடன் ஏகாந்த ஸ்தானத்தில் விசாரஞ் செய்து தனது பிரஹ்ம வடிவ ஆன்மாவின்கண் அசங்கவியாபகத்தன்மைகளால் ஆகாயத்தின் சாதிருசியத்தை யநுபவித்தான், அதாவது ஆகாயம் போன்று அசங்கமும் வியாபகமுமான பிரஹ்மம் நான் என்னும் அநுபவம் அவ்வதிகாரிக்கு நிகழ்கின்றது.

சங்கை:—ஆகாயத்திற்குச் சாதிருசியமாக ஆன்மா அசங்கம் வியாபகமென்னு மர்தத்திற்குப் பிரமாணம் யாது?

சமாதானம்:—சுருதி, ஸ்மிருதி, ஆசாரிய வாக்கியமென்னு மூன்றனுமப்பொருள் பெறப்படுகின்றது. சுருதி ஆகாஶவத் ஸர்வக³தஶ்ச நித்ய: (இ-ள்.)

ஆன்மா ஆகாயம் போன்று எங்கும் வியாபகமும் நித்தியமுமானது. இச்சுருதிப் படி ஆன்மா ஆகாயம்போல வியாபகமெனப்பட்டது. யயா ஸவ்வ மதம் ஸௌக்ஷ்ம்யாதாகாஶம் நோபலிப்யதே । ஸவ்வத்ராவஸ்திதோ தேஹே தயாத்மா நோபலிப்யதே (இ-ள்) எங்குமுள்ளதாயினும் ஆகாயம் எவ்வாறு தனது அசங்க வியல்பான் ஒரு பொருளோடும் பற்றுடைய தன்றோ, அவ்வாறே இவ்வான்மா எல்லாத் தேகங்களின்கண்ணுள்ளதாயினும், தனது அசங்கவியல்பானே ஒரு பொருளோடும் பற்றுடையதாகாது. இக்கீதா ஸ்மிருதிப்படி ஆன்மா ஆகாயம் போல அசங்கமெனல் கூறப்பட்டது. ஊஸிஷு ஈ-லுவம் மமநோவமோ வரம் (ஆன்மா ஞானவடிவமும் ஆகாயத்திற்கு இணையானதும் மேலானதுமாம்) என்னும் வசனத்தால் ஆசாரியரவர்களாலும் ஆன்மா ஆகாயம் போல் வியாபகமெனப்பட்டது. இதனல் ஆகாயத்தின் சாதிருசியத்தால் ஆன்மாவின்கண் முற்கூறிய உவமிதியின் உதாரணம் பொருந்தும்.

அல்லது கிளிஞ்சில்வெள்ளி, சொப்பனப்பொருள்கள் முதலியவற்றில் மித்தியாத்தன்மை துணிவுகொண்டு ஆகாயமுதலிய பிரபஞ்சத்தின் சொரூபமறிய வேட்கையுடைய வதிகாரி, இப்பிரபஞ்சம் கிளிஞ்சில்வெள்ளி போன்று மித்தையா மென்னும் குருவசனங் கேட்டுத், தனியிடத்திலிருந்து இப்பிரபஞ்சத்தின்கண் கிளிஞ்சில் வெள்ளி முதலியவற்றின் மித்தியாத்தன்மையாகிய சாதிருசியத்தை அநுபவிக்கின்றான். அதாவது இவ்வாகாய முதலிய பிரபஞ்சம் கிளிஞ்சில்வெள்ளி முதலியன போல மித்தையேயென்னு மநுபவம் அவ்வதிகாரிக்கு நிகழ்கின்றது. இவ்வுவமிதியின் உதாரணமும் வேதாந்த சித்தாந்தத்திற்கு அநுகூலமாம்.

ஈண்டு நையாயிகரோ அக்கவயத்தின்கண்ணுள்ள கோவின் சாதிருசிய ஞானத்தின் பின்னர், கவயமானது கவயபதத்தின் வாச்சியம் (காட்டா) என்னும் ஞானத்தினையே உவமிதிப்பிரமை யென்றுரைப்புகின்றனர். அன்றியும் அவ்வுவமானம் சாதிருசிய விசிஷ்டபிண்ட ஞானம், வைதர்மிய விசிஷ்ட பிண்ட ஞானம், அசாதாரண தர்மவிசிஷ்ட பிண்டஞானம் என்னும் வேறுபாட்டால் மூவகைப்படு மென்று மொப்புகின்றனர். நையாயிகரது மதம் நியாயப் பிரகாசம் ஆறுவது பரிச்சேதத்தின்கண் விரிவாய்க் கூறப்பட்டுளது.

உவமதிப்பிரமை முற்றிற்று.

---

## சாப்திப்பிரமை.

நான்காவது, வாக்யகரணிகா ப்ரமா ஶாப்தீ ப்ரமா (இ-ள்) வாக்கியமாகிய கரணத்தாற்றோன்றும் பிரமை சாப்திப்பிரமை யெனப்படும். எங்ஙனமெனில்:—தத்துவமசி யென்னும் வைதிக வாக்கியத்தைக் கேட்டு, அதிகாரிக்கு 'அஹம்பிரஹ்மாஸ்மி' என்னும் பிரமை யுண்டாகின்றது. கடத்தைக் கொண்டுவா, ஆவைக்கொண்டுவா என்பதாதி இலௌகிக வாக்கியங்களைக் கேட்டு

கடம், ஆ முதலியவற்றைக் கொண்டுவருதலாகிய பிரமை யுண்டாகின்றது. இது சாப்திப் பிரமை யெனப்படும். எவ்வாக்கியத்தாற் சாப்திப்பிரமை யுண்டாகின்றதோ அவ்வாக்கியத்தின் இலக்கணங் கூறப்படுகின்றது. ஆகாங்க்ஷா யோக்யதா ஸந்நிதி ஸமேதபதஸமூஹ: வாக்யம் (இ-ள்) ஆகாங்க்ஷை (அவாய்நிலை) யோக்யதை (தகுதி) சந்நிதி (அண்மை) என்னுமுப் பதங்களின் கூட்டம் வாக்கியம் (தொடர்மொழி) எனப்படும். எங்ஙனமெனின்:—தத்துவமசி முதலிய வைதிக வாக்கியங்கள் தத், துவ முதலிய பதங்களின் கூட்டமும்; கடத்தைக் கொண்டுவா என்பது முதலிய இலௌகிக வாக்கியங்கள், கடம், கொண்டுவா முதலிய பதங்களின் கூட்டமுமாம். இனி எப்பதங்களின் கூட்டம் வாக்கியமெனப்படுமோ, அப்பதங்களின் இலக்கணம் கூறப்படுகின்றது. வர்ண ஸமூஹ: பதம் (இ-ள்) ககர முதலிய வெழுத்துக்களின் கூட்டம் பதமெனப்படும். அது கலச முதலிய பதங்கள் ககரமுதலிய வெழுத்துக்களின் கூட்டமாதல் போலவாம். அப்பதத்தின்கண்ணுள்ள ககர முதலிய வெழுத்துக்கள் ஒருணர்ச்சிக்கு விஷயமாதலெதுவோ, அதுவே அவற்றின்கண்ணுள்ள சமூக (கூட்ட) மாம்.

நையாயிகரது மதத்தில் அக்ககரமுதலிய வெழுத்துக்கள் சப்த வடிவமாவதால் க்ஷணிகம், அதாவது மூன்றுவது கணத்திலழிவுடையது. அவ்வெழுத்துக்களின் கூட்டமான பதமும், அப்பதங்களின் கூட்டமான வேதமும் க்ஷணிகங்களேயாம். ஆயினும் வேதாந்த சித்தாந்தத்தில் அவ்வெழுத்துக்கள் க்ஷணிகமன்று; ஆனல் ஆகாய முதலியவைகளைப் போன்று சிருட்டியின் ஆதிகாலத்தில் மாயாவுபகித ஈசுரனிடத்தினின்றும் அவ்வெழுத்துக்கள் உற்பத்தியாகின்றன. பிரளய காலத்தில் அவைகள் நாசமாகின்றன. இடையில் அவ்வெழுத்துக்களுக்கு உற்பத்தி நாசமில்லை. இக்காரணம்பற்றியே 'இது அந்தக்ககரம்' எனல் முதலிய பிரத்தியபிஞ்ஞைக்கும், பிரமாணத்தன்மை கூடும். அன்றியும் 'ககரம் தோன்றிற்று' 'ககரம் அழிந்தது' என்பவைகள் அக்ககர முதலிய வெழுத்துக்களின் உச்சாரணத்தினது உற்பத்தி நாசங்களையே விஷயப்படுத்துகின்றன. ககர முதலிய வெழுத்துக்களின் உற்பத்தி நாசங்களை விஷயப்படுத்துவதில்லை. ஆகையால் எழுத்து, பதம், வாக்கியம், வேதம் ஆகிய வனைத்தும் சப்த வடிவாவதால் க்ஷணிகமென்னும் நையாயிகரது மதம் அசங்கதமாம்.

மீமாம்சகரோ, எழுத்துக்களையும் அவ்வெழுத்துக்களின் கூட்டமாகிய வேதத்தையும் உற்பத்தி நாசங்களில்லாத நித்தியமென்றுரைப்புகின்றனர். அம் மீமாம்சகரது மதமும் அசங்கதமேயாம். ஏனெனின், ச²ந்தா³ம்ஸி ஜஜ்ஞிரே தஸ்மாத் யஜுஸ்தஸ்மாத³ஜாயத அஸ்ய மஹதோ பூ⁴தஸ்ய நிஃஶ்வஸிதமேதத்³ ருக்³வேதோ³ யஜுர்வேத³: (இவனிடத்தினின்றும் சந்த யாப்புகள் உண்டாயின. யஜுர் வேதமுமுண்டாயின. அசுவங்களுமுண்டாயின. இம்மகத்தான பூதத்தின் சுவாசமே இருக்குவேதம், யஜுர்வேதம்) என்பதாதி சுருதிகள் சிருட்டியின் ஆதிகாலத்தில் மாயாவுபகித ஈசுரனிடத்தினின்றும் வேதங்களினுற்பத்தி கூறுகின்றன. அன்றியும் அதஏவ ச நித்யத்வம் (ஆகையினாலே மறைகள் நித்

தியம்) என்னும் சூத்திரத்தின்கண் ஸ்ரீ வியாசபகவானல் வேதங்கட்குப் பிரளய பரியந்தம் நிலைத்தற்றன்மையாகிய நித்தியத்தன்மை கூறப்பட்டிருக்கின்றது. இதனுல் அம்மீமாம்சகரது மதமும் அசங்கதமேயாம்.

## ஆகாம்க்ஷை முதலியவற்றின் சொரூப நிரூபணம்.

முன்னே ஆகாம்க்ஷை, யோக்யதை, சந்நிதி என்னு மூன்றுடைய பதங்களின்கூட்டம் வாக்கியமெனப்பட்டது. அவற்றுள் முதன்மையான ஆகாம்க்ஷை (அவாய்நிலை) யின் சொரூபங் கூறப்படுகின்றது. யஸ்ய யேந விநா ந அந்வயாநுபவஸ்ய தத்ஸமபிவ்யாஹாரஸ் ஸாகாங்க்ஷா (இ-ள்) எப்பதத்திற்கு (தன்னை முடிக்கும்) எப்பதமின்றி அன்வயம்(கொண்டு கூட்டு) நிகழாதோ, அப்பதத்திற்கு அப் (தன்னை முடிக்கும்) பதத்தோடுள்ள சமபிவியாகாரம் ஆகாம்க்ஷை யெனப்படும். எங்ஙனமெனின், 'கடம் கொண்டுவா' என்னுந் தொடர்மொழியாற் கேட்போனுக்குக் கடத்தைக்கொண்டு வருதலான வுணர்வுண்டாகின்றது. அவ்வுணர்வு கேவலம் கடம் என்னும் சொல்லானும், கேவலம் கொண்டுவா என்னும் வினைச்சொல்லானு முண்டாகாது. ஆனல், அவ்விரு சொற்களுமுளதாகியே அவ்வுணர்வுண்டாகின்றது. இதனுற் கடபதத்திற்கு கொண்டுவா வென்னும் பதத்தோடும், கொண்டுவாவென்னும்சொற்குக் கடபதத்தோடும் சமபிவியாகாரமுண்டு. இஃதே அப்பதங்களொன்றற்கொன்றுள்ள ஆகாம்க்ஷையாம். சமபிவியாகார மென்பது, சமீபத்தன்மைக்காம். ஆகாம்க்ஷை எனல் இச்சையை. அவ்விச்சை சேதனத்தின் தர்மமே; ஜடப்பொருள்களின் தர்மமன்று. அன்றாயினும், அப்பதங்கள் தம்மை விஷயப்படுத்தும் ஆகாம்க்ஷையைக் கேட்போனுக்கு விளைவிக்கின்றன. இதனுல் அப்பதங்கட்கும் ஆகாம்க்ஷையுடைமை கூறப்பட்டது.

இனி யோக்யதை (தகுதி) கூறப்படுகின்றது. வாக்யார்த்தாபாதோ யோக்யதா (இ-ள்.) வாக்கியார்த்தத்தை வேறு பிரமாணத்தால் வாதிக்கப்படாமையே யோக்யதை யெனப்படும். எங்ஙனமெனின், 'கடம் கொண்டுவா' என்னும் வாக்கியார்த்தமாகிய கடத்தைக் கொண்டுவருதல் எதுவோ, அது பிரத்தியட்ச முதலியவோர் பிரமாணத்தானும் வாதிக்கப்படுவ தன்று. இதுவே அக்கட முதலிய பதங்களின்கண்ணுள்ள தகுதியாம்.

இனிச் சந்நிதி (அண்மை) கூறப்படுகின்றது. பதாநா மவிலம்பேநோச்சாரணம் ஸந்நிதி: (இ-ள்) பதங்கள் விலம்பமின்றி (ஒரு தொடராக விரவி) யுச்சரித்தல் சந்நிதியெனப்படும். எங்ஙனமெனின், 'கடம் கொண்டுவா வென்னுந் தொடர்மொழியின்கண் 'கடம்' என்னும் பதத்திற்குப்பின் விலம்பமின்றிக் 'கொண்டு வா' வென்னுஞ் சொற்களை யுச்சரித்தல் சந்நிதி யெனப்படும். இவ்வாறு ஆகாம்க்ஷை, யோக்யதை, சந்நிதி யென்னு மூன்று பதங்களின் கூட்டம் வாக்கியமெனப்படும்.

பதஸமூஹோ வாக்யம் (பதங்களின் கூட்டம் வாக்கியம்) என்பது மாத்திரமே வாக்கியத்திற்கு இலக்கணமெனின், யாமமுதலிய காலவிலம்பமா யுச்சரிக்கப்பட்ட கடமுதலிய பதங்களின் கூட்டத்தினிடத்து, அவ்வாக்கிய விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்திக் குற்றம் நீக்கும்

பொருட்டு அவ்விலக்கணத்தின்கண் சந்நிதிப்பதங்கள் வாக்கியமெனப்பட்டன. யாமத்திற்கு ஒன்ருக உச்சரிக்கப்பட்ட அக்கட முதலிய பதங்களினிடத்து, அவிலம்பமா யுச்சரித்தலாகிய சந்நிதியில்லை. ஆகையால் அப்பதங்களின் கூட்டத்தின்கண் அவ்வாக்கிய விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. ஸந்நிஹித பதஸமூஹ: வாக்யம் (சந்நிதிப் பதங்களின் கூட்டம் வாக்கியம்) எனல் மாத்திரமே அவ்வாக்கியத்திற் கிலக்கணமெனின் அக்நி நாஸிம் வெசு (இ-ள்.) மரங்களைத் தீயாற்றெளி—யென்னும் அப்பிரமாண வாக்கியத்தின் கண்ணும் அவ்வாக்கிய விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். முற்கூறிய சந்நிதி இப்பதங்களினிடத்து முளதாகலின். அவ் வதிவியாப்திக் குற்றம் நீக்கும் பொருட்டு அவ்விலக்கணத்தின்கண் அப்பதங்கட்கு யோக்யதை யென்னும் விசேஷணங் கூறப்பட்டது. தீயின்கண் தெளித்தற் கரணத்தன்மை பிரத்தியட்சப் பிரமாணத்தால் வாதிக்கப்படுவதாம். ஆகையால் அப்பதங்கள் மேற்கூறிய யோக்யதை யுடையனவன்று. இதனல் 'தீயாற்றெளி' என்னும் பதக்கூட்டத்தின்கண் அவ்வாக்கிய விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

அல்லது யோக்யதா ஸந்நிஹித பதஸமூஹ: வாக்யம் (தகுதி யண்மைகளுடைய பதங்களின் கூட்டம் வாக்கியம்) எனல் மாத்திரமே அவ்வாக்கியத்திற்கு இலக்கணமெனின் கௌரஶ்வ: புருஷோ ஹஸ்தீ (ஆ, குதிரை, புருதன், யானை) என்னும் பதக்கூட்டத்தின்கண் அவ்வாக்கிய விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். மேற்கூறிய அண்மையும், தகுதியும் இப்பதங்களினிடத்து முளதாகலின். அவ்வதிவியாப்திக் குற்றம் நீக்கும் பொருட்டு அப்பதங்கட்கு அவாய்நிலை யென்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆ, குதிரை முதலிய பதங்கள் ஒன்றற்கொன்று அவாய்நிலை யுடையனவன்று. இதனல் அப்பதக்கூட்டத்தின்கண் அவ்வாக்கிய விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

சங்கை:—இங்ஙனங்கூறிய வாக்கியம் சாப்திப் பிரமைக்குக் கரணமாயின் அவிற்பன்னர்கட்கும் அவ்வாக்கியத்தாற் சாப்திப் பிரமையுண்டாதல் வேண்டும். இங்கு இச்சொற்கு இது பொருள் என்னு மறிவில்லோர் அவிற்பன்னரெனப்படுவர்.

சமாதானம்:—வாக்கியம் சாப்திப் பிரமைக்குக் காரணமாதல் போல அவ்வாக்கியத்தின்கண்ணுள்ள பதங்களின் சங்கதிஞானமும் அச்சாப்திப் பிரமைக்குக் காரணமாம். அவிற்பன்னருக்கு அச்சங்கதியின் ஞானமின்ருகையால், அவ்வாக்கியங் கேட்டும் அவருக்கு வாக்கியார்த்தப்பிரமை யுண்டாகாது. ஈண்டுச் சாப்திப்பிரமை, வாக்கியார்த்தப்பிரமை, சாப்தபோதம் என்னு மூன்றும் ஒருபொருட் சொற்களே.

## சங்கதியின் சோரூபம்.

பத பதார்த்தயோ: ஸ்மார்ய ஸ்மாரக பாவஸம்பந்த: ஸங்கதி: (இ - ள்.) பதம், பதப்பொருள் என்னு மிரண்டிற்குமுள்ள நினைக்கப்படுவதும், நினைப்பூட்டு

வதுமாகிய சம்பந்தம் சங்கதியெனப்படும். அதெங்ஙனெனின்:—கடபதங்கேட்டப் புருடனுக்குக் கடமாகிய பொருளின் நினைவுண்டாகின்றது. கடபதமோ அந்த ஸ்மிருதியை யுண்டாக்குதலால் நினைப்பூட்டுவதெனப்படும். அக்கடமாகியபொருள் அந்த ஸ்மிருதிக்கு விஷயமாவதால் நினைக்கப்படுவதெனப்படும். இங்ஙனமான நினைப்பதும்,நினைப்பூட்டுவதுமாகிய தன்மை சங்கதியெனப்படும். இச்சங்கதியினையே நூலாசிரியர்கள் விருத்தியெனவுங் கூறுவர்.

அவ்விருத்தி யென்னுஞ் சங்கதி,சக்தி,இலக்கணை என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும். பிறநூற்களில் சக்தி, கௌணி, இலக்கணை, என்னும் வேறுபாட்டால் அவ்விருத்தி மூவகைப்படினும், ஈண்டு அக்கௌணி விருத்தி இலக்கணையின்கண்ணடங்கிய தெனக்கொண்டு அவ்விருத்தி இருவகைத்தெனப்பட்டது.

## சக்தி விருத்தியினிரூபணம்.

வத வதாயடீ யொவஹாவ வாவக ஹாவ ஸம்பஂயஃ ஶக்திஃ (இ-ள்.) பதம் பதார்த்தமென்னு மிரண்டிற்குமுள்ள வாச்சிய வாசகபாவ சம்பந்தம் சக்தியெனப்படும். அதெங்ஙனமெனின்:—கடபதம், கடமாகிய பொருள் இவ்விரண்டிற்கும் வாச்சிய வாசகபாவ சம்பந்தமுண்டு. ஆண்டுக்கடபதம் வாசகமும், கடமானபொருள் வாச்சியமுமாம். பதத்தாற்றோன்று முணர்வுக்கு விஷயம் வாச்சியமெனவும், பதார்த்த நினைப்பூட்டுவது வாசகமெனவும் கூறுவர். இச்சக்தியினைச் சாஸ்திரத்தில் முக்கிய விருத்தியெனப்படும்.

அம்முக்கிய விருத்தியாகிய சக்தியு (ஆற்றலு) ம் யோகம் (காரணம்) ரூடி (இடுகுறி) என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும். அவயவ ஶக்திஃ யொகஃ (இ-ள்.) பதத்தின் பகுதி விகுதிகளாகிய அவயவங்களின்கண்ணுள்ள பொருளையுணர்த்து மாற்றல் யோக சக்தியெனப்படும். அது அடுபவன் முதலிய பதங்கட்கு, அடுதல்வினைமுதற் பொருளின்கண் யோக சக்தியிருத்தற்போலாம். ஈண்டு 'அடு' வென்னும் தாதுவி (சொன் மூலத்தி) ற்குப் பிறகு 'அன்' என்னும் விகுதி வந்து அடுபவன் என்றாயது. அடுவென்னும் தாதுவிற்கு அடுதற்றொழிலி லாற்றலும், அன் விகுதிக்கு வினைமுதலி லாற்றலுமாம். அவ்விரண்டவயவங்களினாற்றலால், அடுதற்கர்த்தாவினுணர்வு நிகழ்கின்றது. இங்ஙனங் காரணவாற்றலுடைய அடுபவன் முதலிய பதங்கள் நூற்களினிடத்து யௌகிகபதமென்பர். ஸமுதாய ஶக்திஃ ரூடிஃ (இ-ள்.) பதத்தின் பகுதி விகுதிகளாய அவயவத்தொகுதியின்கண் பொருளுணர்த்து மொரு சக்தி ரூடிசக்தி, யெனப்படும். அது கடமுதலிய பதங்கட்குக் கலசமுதலிய பொருள்களின்கண்ணுள்ள ரூடி சக்திபோலும். இங்ஙனம் ரூடி சக்தி பதங்களை நூற்களினிடத்து ரூடபதமென்பர்.

ஈண்டு நையாயிகர் அச்சக்தி யோகம், ரூடி, யோகரூடி, யௌகிகரூடி என்னும் பேதத்தால் நால்வகைத்தென்பர். அவ்வாறே அச்சத்தியின்பதமும் யோகம், ரூடம், யோகாரூடம், யௌகிகரூடம், என்னும் பேதத்தால் நால்வகைத்தாமெனவுங் கூறுவர். பங்கய முதலிய பதங்கட்கு யோக ரூடமும், உற்பீஜ முதலிய பதங்கட்கு யௌகிகரூடமுங் கூறுவர். இந்நையாயிகரது மதம்

நியாயப்பிரகாசம் ஆறுவது பரிச்சேதம் சப்தப்பிரமாண நிருபணத்தில் விரிவாய்க் கூறலின் ஆங்கறிக.

## சக்தி ஞான நிருபணம்.

அச்சக்தியின் ஞானம் புருடனுக்கு வியவகார (வழக்க) த்தால் நிகழ்கின்றது. அதெங்ஙனமெனின்:—ஆசான், தந்தை முதலிய உத்தம முதியோராற் கூறும், 'கடம் கொண்டுவா' என்னும் வசனத்தைக்கேட்டுச் சீடன், மகன் முதலியவிடைப்பட்ட முதியோர் அக்கடம் கொணர்தற்பொருட்டு முயல்கின்றனர். அவ்வுத்தம முதியோர்களின் சமீபத்திலுள்ள வேர்இளைஞன் அவ்விடைப்பட்ட முதியோரின், போதல் வருதலாகிய முயற்சியை நோக்கி, அவரது ஞானத்தை இங்ஙனமனுமானிக்கின்றான். ஐயம் ப்ரவ்ருத்திঃ ஜ்ஞாந ஸாத்யா, ப்ரவ்ருத்திகவாக், மதீய ப்ரவ்ருத்திவக் (இ-ள்.) இவ்விடைப்பட்ட முதியோர் முயற்சியானது ஞானத்தாற்றோன்றியது; முயற்சிவடிவாவதால். எது எது முயற்சியோ அது வது ஞானத்தாற்றோன்றியதே. நம்முயற்சி இஷ்ட சாதன ஞானத்தாற் றோன்றுதல் போலாம்—இங்ஙன மவ்விளைஞன் அவ்விடைப்பட்ட முதியோர் முயலுந்தொழிற் கேதுவாகிய ஞானத்தையனுமானித்து, அதன் பின்னர் அந்தஞானத்தின்கண் அவ்வுத்தம முதியோர் வாக்கியத்தாற் றோன்றியதை அனுமானிக்கின்றான். அவ்வனுமானமாவது:—ஊஷம் ஜ்ஞாநம் வஷதவாக்ய ஜந்யம், வஷதவாக்யா ந்வயவ்ய திரேகாநுவிதாயிகவாக், ஊம்ஜந்ய மடாதிவக் (இ-ள்.) இவ்விடைப்பட்டோர் முயலுந் தொழிற்கேதுவாகியஞானம், கடம் கொண்டுவா வென்னு முத்தம முதியோரது வாக்கியத்தாற் றோன்றியது. இவ்வாக்கியம் உடன்பாடெதிர்மறைகளை அனுசரித்திருப்பதால். எப்பொருள்கள் எப்பொருள்களின்உடன்பாடெதிர்மறைகளின் அனுசரிப்புள்ளனவோ அப்பொருள்கள் அப்பொருள்களாற் றோன்றியனவே, எங்ஙனம் தண்டமிருக்கின் கடமாகிய காரியோற்பத்தியுண்டாம், அத்தண்ட மின்றேல் அக்கடகாரியோற்பத்தியின்றாம், இவ்வாறு உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் தண்டத்தை அனுசரித்துள்ளதே யாகையால் அக்கடம் தண்டத்தாற்றோன்றியதே யாமோ, அங்ஙனமே இவ்வுத்தம முதியோர்களது 'கடம் கொண்டுவா' வென்னும் வாக்கியத்தின் உடன்பாடெதிர்மறைகளி னனுசரிப்பினால் அவ்விடைப்பட்டோர் ஞானமும் இவ்வாக்கியத்தாற் றோன்றியதேயாம். இங்ஙனம் அவ்விளைஞனுக்கு இவ்விடைப்பட்டோர் ஞானத்தின்கண் 'கடம் கொண்டுவா' என்னும் வாக்கியத்தாற்றோன்றற்பாலதென வனுமானித்ததன் பின்னர், அவ்விடைப்பட்டோன் கடம் கொணரக்கண்டு அக்கடபதத்திற்கு அக்கடவியக்தியின்கண் சக்தியெனத்துணிந்தான். அதாவது 'கடம் கொண்டுவா' என்னுந் தொடர்மொழியின்கண்ணுள்ள கடபதத்திற்குக் கடவியக்தியிற் சக்தியென்று அவ்விளைஞனுக்குச் சக்தியின் ஞானமுண்டாயிற்று. இவ்வாறவ் விளைஞனுக்கு முதலில் முதியோர் வழக்கானே கடமுதலிய பதங்களின் சக்தியின் ஞானமுண்டாகின்றது, அதன்பின்னர் இலக்கணம், ஒப்புமை, நிகண்டு, பெரியர்வாய்ச்சொல், வாக்கியக்குறை, விவரணம், சித்தபதங்களின்சமீபத்தன்மை என்பவற்றானும் பதங்களின் சக்தி ஞானமுண்டாகின்றது. இலக்கண முதலியவற்றாற் பதங்களின் சக்தி ஞானம்

எவ்வகையுண்டாகின்றதோ, அவ்வகை நியாயப்பிரகாசம் ஆறுவது பரிச்சேதம் சத்தப்பிரமாண நிருபணத்தில் நம்மால் விரிவாய்க் கூறப்பட்டுளது, ஆங்குணர்க.

## மதபேதப்படி சக்தி விஷயார்த்த நிரூபணம்.

நையாயிகர் 'இப்பதத்தாற் கேட்போனுக்கு இப்பொருளுணர்த்துக' என்னும் ஈசுரேச்சையே சக்தியென்பர். நவீனநையாயிகரோ மேற்கூறியவகையாக ஜீவ இச்சையையும் சக்தியென்பர் கடமுதலிய பதங்கட்குச் சக்தி அக்கடமுதலிய பொருள்களினிடத்தேயாம். கடமுதலிய பொருள்களின் சம்பந்தமாகிய கூட்டத்தின்கண் அச்சக்தியில்லை. ஏனெனின், கடபதத்தைக்கேட்டலாற் கேட்போனுக்கு அக்கடமாகிய பொருளின் நினைவே நிகழும், அதன் கூட்ட நினைவு நிகழாது. 'கடம் கொண்டுவா' வெனல் முதலிய வாக்கியங்களின்கண்ணுள்ள அக்கடமுதலிய பதங்கட்கும் அவற்றின் பொருள்கட்கு மொன்றோடொன்று கூடுதலான வாக்கியார்த்த உணர்வு அக்கடமுதலிய பதங்களின் சமீபத்தானே நிகழ்வதனால், அக்கூட்டத்தின்கண் அக்கடமுதலிய பதங்கட்குச் சக்தியுண்டெனலாற் பயனின்றாம்.

மீமாஞ்சகர் இங்ஙனங்கூறுகின்றனர்:—கடமுதலிய பதங்கட்குக்கேவலம் கடமுதலிய பொருள்களினிடத்தே சக்தியில்லை. ஆனால் காரியான்வித (காரியத்தோடு கூடிய) கடாதிகளினிடத்தே கடமுதலிய பதங்கட்குச் சக்தியுண்டு. ஈண்டுப் புருடனது முயற்சியாகிய கிருதியால் முற்றுப்பெறுந்தொழில் காரியமும், அக்காரியத்தின் சம்பந்தமுடையது காரியான்விதமுமெனப்படும். எங்ஙனமெனின்:— 'கடம் கொண்டுவா' என்னுந் தொடர்மொழியின்கண் கடங் கொணர்தற்றொழில் புருடனது முயற்சியால் முற்றுப்பெறுதலாற் காரியமாம். அக்கொணர்தலாகிய காரியத்தின் சம்பந்தமுடையது கடமாம் இதனாலக்கடம் காரியான்வித மெனப்படும். அக்காரியான்வித கடத்தின்கண்ணே கடபதத்திற்குச் சக்தியுண்டாம். இவ்வாறே படமுதலிய பதங்கட்கும், அக்காரியான்வித படமுதலியவற்றின்கண்ணே சக்தி யென்றறிக. ஒருகால் கடமுதலிய பதங்கட்குக் காரியான்வித கடமுதலியவற்றிற் சக்தியொப்பாவிடின் கடமுதலிய பதார்த்தங்களின் கூட்டமாகிய வாக்கியார்த்தபோதம் உண்டாகலாகாது. அன்றியும் முற்கூறிய முறைப்படி இளைஞனுக்கு முதலிற் காரியான்வித கடாதிகளினிடத்தே கடாதி பதங்களின் சக்தி ஞானமுண்டானது; அதுவும் உண்டாகலாகாது. ஏனெனின், தொழில்முற்றுப்பெறு மென்னும் உணர்வே புருடனது முயற்சிக்கு ஏதுவாம். கேவலம் இஷ்டசாதனத்தின உணர்வு புருடனது முயற்சிக்கு ஏதுவன்று. சந்திரமண்டல முதலியவற்றில் இஷ்டசாதனத்தின் உணர்வு நிகழினும் புருடனுக்கு முயற்சியுண்டாகின்றதில்லை. நஞ்சுண்ணல், கிணற்றில் விழுதல் முதலியவற்றில் தொழில்முற்றப்பெறு மெனுமுணர்வு நிகழினும் புருடனுக்கு முயற்சியுண்டாகின்றதில்லை, எனினும், இஷ்டசாதனத்தினுணர்விற்குச் சமானகாலத்துள்ள தொழின்முற்றுப்பெறு மென்னுமுணர்வே புருடனது முயற்சிக்கு ஏதுவாம். நஞ்சுண்ணல் முதலியவற்றிற் புருடனுக்கு இஷ்டசாதனத்தின் ஞான மின்றாகையால் முயற்சி செல்லாது. ஏவல், விதி, வியங்கோள் முதலிய (வினைப்) பதங்கள் முயற்சியால் முற்றுப்பெறும் தொழி

வின் வாசகமாம். அப்பதங்களமைந்த வாக்கியமே பிரமாணவாக்கியம். அவை 'கடம் கொண்டுவா' என்னுந்தொடக்கத்து இலௌகிக வாக்கியங்களும், 'துறக்கம் விரும்புவோன் வேள்விபுரியக்கடவன்' என்னுந்தொடக்கத்து வைதிக வாக்கியங்கள் போலவாம். அவ்வேவல் முதலிய (வினைப்) பதங்களின்றிய வாக்கியங்கள் பிரமாணமாகா. அவை 'பூதலத்திற் குடம்' என்னுந்தொடக்கத்து இலௌகிக வாக்கியங்களும் 'தத்துவமசி' (அது நீ) என்னுந்தொடக்கத்து வைதிக வாக்கியங்களும் போலவாம்.

வேதாந்த சித்தாந்தியர் மதம் இஃது:—கடமுதலிய பதங்கட்குக் கேவலம் கடமுதலிய பொருள்களில், அல்லது காரியான்வித கடமுதலியவற்றிற் சக்தியின்று. இதரான்வித கடாதிகளினிடத்தே அக்கடமுதலிய பதங்கட்குச் சக்தியுண்டு. அவ்விளைஞனுக்கு முதலிற் காரியான்வித கடாதிகளினிடத்தே கடமுதலிய பதங்களின் சக்திஞானம் நிகழினும், பின்னர் கௌரவ (மிகை) க்குற்றத்தால், அக்காரியாம்சம் விடப்பட்டு, இதரான்வித கடாதிகளினிடத்தே அக்கடமுதலிய பதங்களின் சக்திஞானம் நிகழ்கின்றது. அவ்விதர பதார்த்தம் காரியமாயினும், அல்லது காரியத்தை விடவேறாயினுமாகுக. எப்படி 'கடம் கொண்டுவா' என்னும் காரியபர (தொழின் மேற்றாய) வாக்கியத்தால் மேற்காட்டியபடி சக்தி கவரப்பட்டதோ, அப்படியே வாந்ரு ஜாதஃ (உனக்கு மகன் பிறந்தான்) என்னுந்தொடக்கத்து சித்தார்த்தபர (நிகழ்ந்ததன் மேற்றாய) வாக்கியங்களானும் அச்சக்தி கவரப்படுகின்றது.

அதெங்ஙனமெனின்:—ஒருதனிகனுக்கு மகன் பிறந்தான். அம்மகன் என்னும் பதக்குறிப்பால் ஆடைகொண்டு செய்தியுரைப்போன் அத்தனிக னருகிற் சென்று அதை அவன் முன்வைத்து 'உனக்கு மகன் பிறந்தான்' எனக்கூறினனாக, அதைக்கேட்டு அத்தனிகன் அம்மகனது பிறப்பினுணர்வால் களிகூர்ந்தான். அக்களிப்பால் அவனது முகமலர்ந்தது. அதைக்கண்டு மகன் பதத்தின் சக்திஞானமில்லாத மற்றொருவன் அம்முகமலர்ச்சியாகிய வேதுவால் அத்தனிகனது களிப்பை அனுமானித்தான், அதன் பின்னர் அக்களிப்பின்கண் உணர்வுண்டாகுந் தன்மையை யனுமானித்தான், அதன் பின்னர் அவ்வுணர்வின்கண் உடன்பாடெதிர்மறைகளால் 'உனக்கு மகன் பிறந்தான்' என்னும் வாக்கியத் தோற்றத்தை யனுமானித்தான், அதன் பின்னர் உற்பவமான சிசுப்பிண்டத்தின்கண் அம்மகன் என்னும் பதத்திற்குச் சக்தியாமென்று நிச்சயித்தான். ஆகையாற் கடம் கொண்டுவா, துறக்கம் விரும்புவோன் வேட்க, என்றல்முதலிய காரியபர வாக்கியங்கள் பிரமாண மாதற்போல, பூதலத்திற் குடம், தத்துவமசி, முதலிய சித்தார்த்தபர வாக்கியங்களும் பிரமாணமேயாம்.

முற்கூறிய கடமுதலிய பதங்கட்குச் சக்தி கடத்தன்மைச்சாதியின்கண்ணதாம். கடமுதலிய வியக்திகளின் கண்ணின்றாம். ஓர்கால் அச்சக்தி கடமுதலிய வியக்திகளின்கண்ணதெனில் அக்கடமுதலிய வியக்திகள் எண்ணிறந்தன வாதலால் அச்சக்திகளும் எண்ணிறந்தனவாகவே யொப்புதல்வேண்டும். அன்றியும் எக்கட வியக்தியின்கண் கடபதத்தின் சக்திஞான முண்டானதோ, அவ்வியக்தியைவிட வேறான, கடத்தன்மையும் அக்கடபதத்தாற் போதமா

கின்றது: அதுவுமுண்டாகலாகாது. ஏனெனின், கடவியக்தியின்கண் அக்கட பதத்தின் சக்திஞான முண்டாகவில்லை, ஆனால் அக்கடத்தன்மைச்சாதி, சர்வ கடவியக்திகளினும் ஏகமாகையால் ஜாதியின்கண் சக்தியொப்புவதால் அச் சக்திக்கு முடிவின்மையும், பிறழ்ச்சிக்குற்றமு முண்டாகா. இதனாற் கடமுத லிய பதங்கட்குக் கடத்தன்மைச் சாதியின்கண்ணே சக்தி யொப்புதல் நலம்.

சங்கை:—கடமுதலிய பதங்கட்குக் கடத்தன்மைச் சாதியின்கண்ணே சக்தியெனில் 'கடம் கொண்டுவா' என்னும் வாக்கியத்தைக் கேட்டலாற் கே ட்போனுக்கு அக்கடபதத்தாற் கடத்தன்மைச்சாதியின் உணர்வே நிகழும், கடவியக்தியின் உணர்வு நிகழாது. ஆனால் அக்கடவியக்தியின் உணர்வன்றி அக்கடவியக்தியைக் கொணர்தலும் செல்லாது.

சமாதானம்:—கேட்போனுக்கு அக்கடபதத்தால் கடத்தன்மைச் சாதியின் உணர்வே யுண்டாகும்; ஆனால் அக்கடவியக்தியானன்றி அக்கடத்தன்மைச் சாதியைத் தனியாகக் கொணர்தலும் பொருந்தாது. ஆகையால் கேட்போ னுக்கு கடபதத்தின் ஆட்சேபத்தால்,அல்லது இலக்கணையால் அக்கடவியக்தி யின் உணர்வுண்டாகும், * சில நூலாசிரியர் சமானவிருத்திவேத்யத் தன்மை யை ஆட்சேபமென்பர், † சிலர் அனுமானத்தை ஆட்சேப மென்பர், § சிலர் அருத்தாபத்தியை ஆட்சேபமென்பர். அல்லது கடத்தன்மைச் சாதியோ

---

* குருமதத்தார் (சைமினி சூத்திரபாஷிய மதம்பற்றி வழிநூல் செய்த பிரபாகரரும் அவர் வழி வந்தாரும்) ஜாதி வியக்திகளிரண்டும் ஒரு உணர்விற்கு விஷயப்படுதல் சமான விருத்தி வேத்தியத்வ மென்பர். ஈண்டு ஜாதியை விஷயப்படுத்தும் உணர்வு அந்த ஜாதிக்கு ஆசிரயமாகிய வியக்தியையும் விஷயப்படுத்து மெனல் நியதம்; வியக்தியை விட்டுக் கேவ லம் ஜாதிமாத்திரத்தை அவ்வுணர்வு விஷயப்படுத்தாதெனல் கருத்தாம். இது கடம் என் னும் காட்சியறிவு அக்கடத்தன்மை ஜாதியை விஷயப்படுத்துவதாய் அதற்கு ஆசிரயமாகிய கடவியக்தியையும் விஷயப்படுத்தல்போல் கடபதத்தாலுண்டான சாப்தவறிவும் அக்கடத் தன்மை ஜாதியை விஷயப்படுத்துவதாய் அக்கடவியக்தியையும் விஷயப்படுத்துகின்றது. இங்ஙனம் கடமுதலிய வியக்திகளின் உணர்வு சமானவிருத்தி வேத்யத்வமாகிய வாட்சேபத் தாற் பெறுமென்பர்.

† மீமாஞ்சகர்:—அனுமானப் பிரமாணத்தானே கடபதத்தாற் கடவியக்தியின் உண ர்வு நிகழுமென்பர். அதெங்ஙனமெனின்:—கடத்தன்மை ஜாதி வியக்தியை யாசிரயிப்பது, ஜாதித்தன்மையால், எது எது ஜாதியோ அதுவது வியக்தியை யாசிரயத்ததே, படத்தன் மை போலும், படத்தன்மைஜாதி ஜாதியாவதாற் படவியக்தியை யாசிரயத்துள்ளது போல, கடத்தன்மை ஜாதியும் ஜாதியாவதாற் கடவியக்தியை யாசிரயித்ததாம். இங்ங னம் கடமுதலிய வியக்திகளின் உணர்வு அனுமானமாகிய வாட்சேபத்தானே பெறுமென் பர்.

§ பட்டபாதர்:—(சைமினி சூத்திர மதம்பற்றி வழிநூல் செய்தோர்) கடபதத்தாற் கடத்தன்மை ஜாதியின் சாப்த உணர்விற்குப் பின்னர் அர்த்தாபத்தியாற் கடவியக்தியின் உணர்வு நிகழுமென்பர். அதெங்ஙனமெனின்:—பகலுண்ணான் பருத்திருப்பான் என்புழி பக லுண்ணாதவனுக் குண்டா முடற்பருமை இரவுணன்றிச் சம்பவியாதாதலின் அவ்விரவுண் கற்பிக்கப்படுதல் போல, அக்கடத்தன்மை ஜாதியும் தனது கடவியக்தியாகிய வாசிரயமன் றிச் சம்பவியாதாதலின் அக்கடவியக்தி கற்பிக்கப்படும். இங்ஙனம் கடமுதலிய வியக்திக ளின் உணர்வு அர்த்தாபத்தி யாக்ஷேபத்தாற் பெறுமென்பர்.

டுங்கூடிய கடவியக்தியின்கண்ணே கடபதத்திற்குச் சக்தியாம்; கேவலம் சாதியின்கண்ணுவது அல்லது வியக்தியின்கண்ணுவது அச்சக்தி யில்லை. ஆனற் ஜாதியிற் சக்தி அறியப்பட்டே சாப்த உணர்விற்கு உபயோகியாகின்றது. வியக்தியிற் சக்தியோ சொரூபமாகவே வுபயோகியாம்; அறியப்பட்டு உபயோகியாகாது. இங்ஙனமான சக்தியினையே சாஸ்திரத்திற் குப்ஜ (வளைந்த) சக்தியென்பர்.

சங்கை:—கடமுதலிய பதங்கட்கு இதரான்வித கடாதிகளிற் சக்தியென்று முன்னே கூறினீர், இப்போது அவைகட்குக் கடத்தன்மைச் சாதியிலாவது அல்லது கடத்தன்மைச் சாதியோடுங்கூடிய கடவியக்தியிலாவது சக்தியென்று துணிந்தீர். ஆதல்பற்றி முன்பின் முரண் அடையப்படுகின்றது.

சமாதானம்:—அச்சக்தி அநுபவத்தினது, நினைவினது என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும். முன்னே இதரான்வித கடாதிகளிற் கடமுதலிய பதங்கட்கு அநுபவத்தினதாகிய சக்தி கூறப்பட்டது. இப்போது கடத்தன்மைச் சாதியில் அல்லது கடத்தன்மைச் சாதியோடுங்கூடிய கடவியக்தியிற் கடபதத்திற்கு நினைவினதாகிய சக்தி கூறப்படுகின்றது. இதனல் முன்னுக்குப் பின் முரண்படாது. இங்ஙனமே மீமாஞ்சக மதத்திலும் காரியான்வித கடாதிகளிற் கடமுதலிய பதங்கட்கு அநுபவத்தினதாகிய சக்தியும், கடத்தன்மைச் சாதியில் நினைவினதாகிய சக்தியுமாம். இதுகாறும் முதற் சக்திவிருத்தி கூறப்பட்டது.

## இலட்சணுவிருத்தி நிரூபணம்.

ஶக்ய ஸம்பந்த: லக்ஷணா (இ-ள்.) சக்கியப்பொருட்கு இலக்கணையாற் கொள்ளப்படும் பொருளோடுள்ள சம்பந்தம் இலட்சணை யெனப்படும். இங்கு மேற்கூறிய சக்திவிருத்திக்கு விஷயம் எதுவோ அது சக்யமாம், இச்சக்யத்தினை வாச்சியமெனவுங் கூறுவர். அதெங்ஙனமெனின்:—உண்மை யுரைப்போனெருவன் மண்டபத்திலுள்ளவனை யுண்பிக்கு மபிப்பிராயத்தால் மஂசம் ஹோஜய (மண்டபத்தை யுண்பிக்குக) என்றொருவனை நோக்கிக் கூறினனுக: அவ்வசனத்தைக்கேட்டவவன் ஜடமான மண்டபத்தினிடத்து உண்ணும் வினைக்கு முதலாகும் தகுதியின்மையை யறிந்து, அம்மண்டபமென்னும் பதத்திற்கு மண்டபத்திலுள்ள புருடனிடத்து இலக்கணையைச் செய்தான். மண்டமென்னும் பதத்திற்குச் சக்கியார்த்தம் வீடு விசேடமாம். அதற்கு அப்புருடனேடு சையோக சம்பந்தமுண்டு. இதனை இலக்கணை யெனப்படும். இவ்விலக்கணை கேவல லட்சணை, இலட்சித லட்சணை என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும்.

## கேவலலட்சணையி னிரூபணம்.

ஶக்ய ஸாக்ஷாத் ஸம்பந்த: கேவல லக்ஷணா (இ-ள்) பதத்தின் சக்கியார்த்தத்திற்கு இலட்சியமான அர்த்தத்தோடுள்ள சாட்சாத் சம்பந்தம் கேவலலட்சணை யெனப்படும். அக்கேவலலட்சணை ஜகத் (விட்ட) லட்சணை, அஜகத் (விடாத) லட்சணை, ஜகதஜகல் (விட்டு விடாத) லட்சணை என்னும் பேதத்தால் மூவகைப்படும்.

ஶக்யார்த்தம் பரித்யஜ்ய தத்ஸம்பந்த்யர்த்தாந்தரே வ்ருத்தி: ஜஹல்லக்ஷணா (இ-ள்) பதத்தின் சக்கியார்த்தம் விடப்பட்டு அதன் சம்பந்தமுடைய வேறு பதார்த்தத்தின்கண்ணுள்ள அப்பதத்தின் இலட்சணாவிருத்தி யாதோ அது ஜகல்லட்சணை யெனப்படும். எங்ஙனமெனின், கேட்போனுக்குக் கங்கைக்கரையின்கண் இடைச்சேரியின் போதமுண்டாக்குங் கருத்தால், ஆத்தனாலுச்சரிக்கப்பட்டது கங்காயாம் கோஷ: ப்ரதிவஸதி (கங்கையின்கண் இடைச்சேரியுளது) என்னும் வாக்கியமாம். அவ்வாக்கியங் கேட்டு அவன் கங்கையென்னும் பதத்தின் சக்கியார்த்தமாகிய ஜலப்பிரவாகத்தின்கண் இடைச்சேரியிருத்தல் பொருந்தாதெனக் கண்டு அக்கங்கை யென்னும் பதத்திற்குக் கரையின்கண் இலட்சணை செய்தான். ஆண்டுக் கங்கையென்னும் பதத்திற்குச் சக்கியார்த்தமாகிய ஜலப்பிரவாகத்தை விட்டு அதன் சம்பந்தமுடைய கரையாகிய வேறுபொருளின்கண்ணுள்ள அக்கங்கை யென்னும் பதத்தின் இலட்சணாவிருத்தி யாதோ அதை ஜகல்லட்சணை யென்பர்.

ஶக்யார்த்தாபரித்யாகேந தத்ஸம்பந்த்யர்த்தாந்தரே வ்ருத்தி: அஜஹல்லக்ஷணா (இ-ள்) பதத்தின் சக்கியார்த்தம் விடப்படாமல் அதன் சம்பந்தமுடைய வேறு பொருளின்கண்ணுள்ள அப்பதத்தின் இலட்சணாவிருத்தி யாதோ அது அஜகல்லட்சணை யெனப்படும். எங்ஙனமெனின், கட்டிலின் கண்ணுள்ள வனை யுணர்த்து மபிப்பிராயத்தான், ஆத்தனால் உச்சரிக்கப்பட்டது மஞ்சா: க்ரோஶந்தி (கட்டில் கரைகின்றது) என்னும் வாக்கியமாம். அவ்வசனங்கேட்டதாற் கேட்போன் ஜடமான கட்டிலின்கண் கரைதற்றொழிற்கு வினைமுதற்றன்மை சம்பவியாததைக் கண்டு அக்கட்டிலென்னும் பதத்திற்கு அக்கட்டிலின் கண்ணுரையும் புருடனிடத்து இலக்கணை செய்தான். ஆண்டு கட்டிலென்னும் பதத்திற்குச் சக்கியார்த்தமாகிய மஞ்சத்தை விடாது அதன் சம்பந்தமுடைய மஞ்சத்தின்கண்ணுரையும் ஆடவனாகிய வேறு பொருளினிடத்துள்ள அக்கட்டிலென்னும் பதத்தின் இலக்கணை யாதோ அதை அஜகல்லட்சணை யென்பர்.

ஶக்யைகதேஶபரித்யாகேந ஏகதேஶே வ்ருத்தி: ஜஹதஜஹல்லக்ஷணா (இ-ள்) பதத்தின் சக்கியார்த்தம் ஏகதேசம் விடப்பட்டு ஏகதேசத்தின் கண்ணுள்ள அப்பதத்தின் இலட்சணா விருத்தி யாதோ, அது ஜகதஜகல்லட்சணை யெனப்படும். இதனை பாகத்தியாக லட்சணை யெனவுங் கூறுவர். எங்ஙனமெனின், தேவதத்தனது அபேதத்தை யுணர்த்துந் தாற்பரியத்தான், ஆத்தனால் உச்சரிக்கப்பட்டது ஸோऽயம் தேவதத்த: (அவன் இத்தேவதத்தன்)என்னும் வாக்கியமாம். அவ்வாக்கியங்கேட்டதாற் கேட்போன் அவன், இவன் என்னுமிருபதங்கட்குத் தேவதத்த பிண்டமாத்திரத்தின்கண் இலட்சணை செய்தான். ஆண்டு 'அத்தேசகால விசிஷ்ட தேவதத்தபிண்டம் அவன்' என்னும் பதத்தின் சக்கியார்த்தமும், 'இத்தேசகாலவிசிஷ்ட தேவதத்தபிண்டம் இவன்' என்னும் பதத்தின் சக்கியார்த்தமுமாம். அவ்விரு சக்கியார்த்தங்கட்கு அபேதம் பொருந்தாதாகையால் அவன் என்னும் பதத்தின் சக்கியா

ர்த்தத்தின்கண் அத்தேசகால விசிஷ்டத்தன்மையாகிய வேகதேசத்தை விடலால் அத்தேவதத்த பிண்டமாகிய ஏகதேசத்தின்கண் அவன் என்னும் பதத்தின் இலட்சணு விருத்தியும், இவன் என்னும் பதத்தின் சக்கியார்த்தத்தின்கண் இத்தேசகால விசிட்டத்தன்மையாகிய வேகதேசத்தை விடலால் இத்தேவதத்த பிண்டமாகிய வேகதேசத்தின்கண் இவன் என்னும் பதத்தின் இலட்சணு விருத்தியு முண்டாகின்றன. இதனை ஜகதஜகல்லட்சணை யென்பர்.

அல்லது, ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்தைப் போதிக்குந் தாற்பரியங்கொண்டு பிரஹ்மவேத்தா குருவால்,உச்சரிக்கப்பட்டது 'தத்துவமசி' என்னும் மகாவாக்கியமாம். அதைக்கேட்டு அதிகாரி தத்,துவம் என்னுமிருபதங்கட்கும் அகண்ட சைதன்யத்தின்கண் இலட்சணை செய்தான். ஆண்டு மாயாவுபகித சைதன்யம் தத்பதத்தின் சக்கியார்த்தமும், தூலசூட்சும முதலிய சரீரவுபகித சைதன்யம் துவம் பதத்தின் சக்கியார்த்தமுமாம். அவ்விரு சக்கியார்த்தங்கட்கு அபேதம் பொருந்தாது. ஆனல் அவ்வாக்கியத்தின்கண் தத் துவம் பதங்களின் சாமானுதிகரணியத்தால் (ஒரு வேற்றுமையால்) அவற்றின் அர்த்தங்கட்கு அபேதமே தோற்றுகின்றது. ஆகையால் தத்பத சக்கியார்த்தத்தின்கண் மாயையாகிய வேகதேசத்தை விடுவதால் சைதன்யமாகிய வேகதேசத்தின்கண் தத்பதத்தின் இலட்சணு விருத்தியும், துவம் பதத்தின் சக்கியார்த்தத்தின்கண் தூலசூட்சும முதலிய சரீரமாகிய வேகதேசத்தை விடுவதால் அச்சைதன்யமாகிய வேகதேசத்தின்கண் துவம் பதத்தின் இலட்சணு விருத்தியுமுண்டாகின்றன. இதனையே சித்தாந்தத்தில் ஜகதஜகல்லட்சணையெனவும், பாகத்தியாக லட்சணையெனவுங் கூறுவர். இதனல் இலட்சியார்த்தமான அகண்ட சைதன்யத்தின் அபேதம் சம்பவிக்கும்.

**சங்கை:**—தத் துவம் என்னுமிருபதங்கட்கும் ஏக அகண்டசைதன்யத்தின்கண்ணே இலட்சணையாயின்; ஓரேபதத்தான் அவ்வகண்ட சைதன்யமான பிரஹ்மத்தின் சாட்சாத்காரம் சம்பவிக்கக் கூடுமாகலின், பிறிதோர் பதம் வியர்த்தமேயாம். அன்றியும் ஒரு அர்த்தத்தை யுணர்த்தும் இருபதங்களைக்கூறலாற் கூறியதுகூற லென்னுங் குற்றமும் வரும்.

**சாமாதானம்:**—பதமோ கேவலம் தனது அர்த்தத்தின் ஸ்மரண மாத்திரமே செய்கின்றது. அடுத்த பதமன்றி அவ்வொருபதம் சாப்தபோதத்திற்கு ஏதுவாகாது. ஆகையால் முதற்கண் தத் துவம் என்னு மிருபதங்களின் பாகத்தியாக லட்சணையால் நிருவிகற்ப வகண்ட சைதன்யத்தின் ஸ்மரண மாத்திர முண்டாகின்றது. அதன் பின்னர் அப்பதங்களின் தொகுதியாய தத்துவமசி என்னும் வாக்கியத்தாற் பிரஹ்மான்மாக்களை விஷயப்படுத்தும் அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் சாப்தவபரோட்சாநுபவ முண்டாகின்றது. அவ்வபரோட்சாநுபவம் ஒரு பதத்தாற் சம்பவியாது; அதனுற் பிறபதம் வியர்த்தமன்று. ஆனல் அவ்விருபதங்களும் சார்த்தகம். முற்கூறிய வகைப்படி தத் துவம் என்னுமிருபதங்களின் வாச்சியார்த்தங்கட்கு பேதமேயுளதாகையால் அவைகட்குக் கூறியது கூறலென்னுங் குற்றம் வராது.

ஜகல்லட்சணையின்கண் வாச்சியார்த்த முழுவதும் விடப்படுகின்றது. ஆனால், தத் துவம் பதங்களின் வாச்சியார்த்த முழுவதும் விடப்படாமல் ஏகதேசம் விடப்படுகின்றதாகையால் அவைகளினிடத்து ஜகல்லட்சணையும் பொருந்தாது. அஜகல்லட்சணையின்கண்ணே வாச்சியார்த்தத்தைவிட அதிக அர்த்தமுங் கொள்ளப்படுகின்றது. ஆனால், தத் துவம் பதங்கட்கு வாச்சியார்த்தத்தைவிட வேறதிகஅர்த்தங் கொள்ளப்படுகின்ற தின்றாகையால் அவைகளினிடத்து அஜகல்லட்சணையும் பொருந்தாது. ஆனால் முற்கூறிய முறைப்படி ஜகதஜகல்லட்சணையே பொருந்தும். இக்காரணம்பற்றியே ஆசாரிய (சங்கர பகவத்பாத) ரவர்களால் தத்த்வமஸ்யாதிவாக்யேஷு லக்ஷணா பாகலக்ஷணா (தத்துவமசி முதலிய வாக்கியங்களில் இலக்கணை பாகத்தியாக இலக்கணையாம்) என்னும் வசனத்தால் தத்துவமசி முதலிய வாக்கியங்களில் பாகத்தியாக லட்சணையே கூறப்பட்டிருக்கின்றது.

ஈண்டுச்சிலநூலாசிரியர் தத்துவமசி முதலிய வாக்கியங்களில் பாகத்தியாக லட்சணையின்றியே அகண்ட சைதன்யத்தின்போத மங்கீகரித்திருக்கின்றனர். அவர் கருத்தாவது:—'அநித்தம் குடம்' என்னும் வாக்கியத்தின்கண் கடத் தன்மைவிசிட்ட கடவியக்தி கடபதத்தின் வாச்சியார்த்தமாம். அவ்வாச்சியார்த்தத்தின் ஏகதேசமாகிய கடத்தன்மைச்சாதிக்கு அநித்தத்தன்மையோடு கொண்டுகூட்டுநிகழாது; ஆனால் அக்கட வியக்திக்கே அவ்வநித்தத்தன்மையோடு கொண்டுகூட்டு நிகழும். எங்ஙனம் கடபதத்திற்குக் கடவியக்தியின்கண் பாகத்தியாக லட்சணை யின்றியே தகுதியின் வலிவால் அக்கட பதத்தின் சக்தி விருத்தியா னுபஸ்திதமான கடவியக்திக்கே அவ்வநித்தத்தன்மையோடு கொண்டுகூட்டுண்டாகின்றதோ, அங்ஙனமே தத் துவம் பதவாச்சியார்த்தங்களின் ஏகதேசமாகிய பரோட்சத்தன்மை அபரோட்சத்தன்மை, சர்வஞ்ஞத்தன்மை அற்பஞ்ஞத்தன்மை, சம்சாரித்தன்மை அசம்சாரித்தன்மை என்றல் முதலிய தர்மங்கட்கு ஒன்றற்கொன்று அபேதம் பொருந்தாது. ஆனால் சைதன்யமாகிய விசேஷிய வம்சத்திற்கே அபேதம் பொருந்தும். ஆகையால் தத் துவம் பதங்களில் பாகத்தியாக லட்சணையின்றியே தகுதியின் வலிவால் அப்பதங்களின் சக்திவிருத்தியா னுபஸ்திதமான அகண்ட சைதன்யத்தினது அபேதத்தின் கொண்டுகூட்டுணர்வே நிகழும். இதனால் தத்துவமசியாதிய வாக்கியங்களின்கண் பாகத்தியாகலட்சணை யங்கீகரித்தல் வியர்த்தம். இம்மதம் சர்வ ஆசாரியர்களின் கூற்றுக்கு முரணுவதால் நலமன்று. இதுகாறும் கேவலலட்சணை கூறப்பட்டது.

## இலட்சித லட்சணை கூறுதல்.

ஶக்ய பரம்பரா ஸம்பந்த: லக்ஷித லக்ஷணா (இ-ள்)பதத்தின் சக்கியார்த்தத்திற்கு இலட்சிமான அர்த்தத்தோடுள்ள பரம்பரைச்சம்பந்தம் இலட்சித லட்சணை யெனப்படும். எங்ஙனமெனின், வண்டு சப்திக்கின்றது என்னும் பொருளை யுணர்த்தும் பொருட்டு, ஆத்தனால் உச்சரிக்கப்பட்ட த்விரேபோ ரௌதி 'துவிரேபம் ஒலிக்கின்றது' என்னும் வாக்கியத்தைக் கேட்டதாற் கேட்போன் துவிரேப பதத்தின் சக்கியார்த்தமாகிய இரண்டு ரகரங்களினிடத்து ஒலித்தற்

ளுழிற்கு வினைமுதலாகுந்தன்மை நிகழாமையைக் கண்டு அப்பதத்திற்கு வண் டின்கண் இலட்சணை செய்தான். அவ்விலட்சணை இலட்சிதலட்சணை யென ப்படும்.

துவிரேப பதத்திற்குச் சக்கியார்த்தம் இரண்டு ரகரங்களாம். அவற்றிற்கு வண்டாகிய வியக்தியோடு ஓர் சாட்சாத் சம்பந்தமோ பொருந்தாது. ஆனால், அவ்விரு ரகரங்கட்குப் பிரமரபதத்தோடு சம்பந்தமுண்டு. அப்பதத்திற்கு வண் டாகிய வியக்தியோடு சம்பந்தமுண்டு. இவ்வாறு அவ்விருரகரங்கட்கு சுவகடித (தாமுற்ற) பதவாச்சியத் தன்மையாகிய பரம்பரைச் சம்பந்தம் அவ்வண்டெ னும். ஈண்டுசுவ(தாம்) எனும் சத்தத்தால் அத்துவிரேப பதத்தின் சக்கியார்த்த மாகிய விருரகரங்களைக் கோடல்வேண்டும். அவ்விரு ரகரங்களுற்றது பிரமரபத மாம், அப்பத வாச்சியத்தன்மை வண்டாகிய வியக்தியின் கண்ணும். இங்ஙனம் சக்கியார்த்தத்தின் பரம்பரைச் சம்பந்தத்தை இலட்சிதலட்சணை யென்பர்.

## கௌணி விருத்தி கூறுதல்.

ஈண்டுச் சிலநூலாசிரியர்கள் சக்தி இலட்சணைகளைவிட வேறாக மூன்றாவது கௌணி விருத்தியு மங்கிகரிக்கின்றனர். அது 'சிங்கம் தேவதத்தன்' என்னும் வாக்கியத்தின்கண் சிங்க பதத்திற்குத் தேவதத்தனிடத்துள்ள கௌணிவிரு த்திபோலாம். இக்கௌணிவிருத்தி இலட்சணாவிருத்திக்கு வேறாதல் பெறப் படாது. ஆனால்முற்கூறிய இலட்சிதலட்சணையி லடங்கியதேயாம். சிங்க பதத் திற்குச் சிங்கமெனும் விலங்கு சக்கியார்த்தம். அதற்குக் குரூரசூரத் தன்மைக ளோடு சம்பந்தமுண்டு. அவற்றிற்கு அத்தேவதத்தனோடு சம்பந்தமுண்டு. இவ் வாறு அச்சிங்க பதத்தின் சக்கியார்த்தத்திற்கு அத்தேவதத்தனோடு சுவவிரு த்தி (தானுற்ற) குரூரத்தன்மை முதலியவை யுடைமையாகிய பரம்பரைச் சம் பந்த முண்டாகையால் அக்கௌணிவிருத்தி இலட்சிதலட்சணையின் கண்ண டங்கியதேயாம்.

இங்ஙனம் பதங்களின் சக்திவிருத்தி இலட்சணாவிருத்திகளின் ஞானம் எவனுக்குண்டோ, அவனுக்கு முற்கூறிய வாக்கியத்தாற் சாப்திப்பிரமையுண் டாகும்; அவ்விருத்திகளின் ஞானமில்லாத அவிற்பன்னனுக்கு அவ்வாக்கியத் தாற் சாப்திப்பிரமை யுண்டாகாது. அன்றியும் எங்ஙனம் சக்தி இலக்கணைகளா கிய விருத்திகளின் ஞானம் சாப்திப்பிரமை யினுற்பத்தியில் காரணமாகின்றன வோ, அங்ஙனமே ஆகாம்க்ஷை, யோக்யதை, ஆசத்தி தாற்பரியமென்னும் நான் கின் ஞானமும் அச்சாப்திப்பிரமையினுற்பத்தியில் காரணங்களாம். ஆகாம் க்ஷை யோக்யதையென்னு மிரண்டின் சொரூபமோ முற்கூறப்பட்டுளது.

## ஆசத்தி நிரூபணம்.

ஶக்தி லக்ஷணாऽந்யதர ஸம்பந்தேந அவ்யவதாநேந பதஜந்ய பதார்த்தோபஸ்திதி: ஆஸத்தி: (இ-ள்.) பதத்திற்குத்தனது அர்த்தத்தின்கண்ணு ள்ள சக்திசம்பந்தத்தால் அல்லது இலக்கணைச்சம்பந்தத்தால், மறைப்பின்றிய பதத்தாற்றோன்றும் பதார்த்தத்தின் ஸ்மிருதி ஆசத்தி(அண்மை)யெனப்படும். எங்ஙனமெனின், 'கடம் கொண்டுவா' என்னும் வாக்கியத்தைக் கேட்டதாற் கே

ட்போனுக்குக் கடபதத்திற்குச் சக்தி சம்பந்தத்தாற் கடமாகிய பொருளின் ஸ்மிருதியும், கொண்டுவாவென்னும் பதத்திற்குச் சக்தி சம்பந்தத்தாற் கொணர்தலாகிய தொழிலின் ஸ்மிருதியுமுண்டாகின்றன. 'கங்கையின்கண் இடைச்சேரி' என்னும் வாக்கியத்தைக் கேட்டலாற் கேட்போனுக்குக் கங்கையென்னும் பதத்திற்கு இலக்கணச்சம்பந்தததால் கரையாகிய பொருளின் ஸ்மிருதியும், இடைச்சேரியென்னும் பதத்திற்குச் சக்திசம்பந்தத்தால் இடையருறையுமூரென்னும் பொருளின் ஸ்மிருதியுமுண்டாகின்றன. இதனே ஆசத்தியெனப்படும்.

## தாற்பரிய நிருபணம்.

அத்தாற்பரியம் வக்திருதாற்பரியம், சப்ததாற்பரியமென்னும் வேறுபாட்டால் இருவகைப்படும். ஶ்ரோத்ருஜ்ஞாநேச்சா வக்த்ருதாத்பர்யம். இவ்வசனத்தால் கேட்பவர்க்கு இப்பொருளினுணர்வுண்டாக வேண்டுமென்னும், சொல்லுவோனது இச்சை விசேடம் வக்திருதாற்பரியமெனப்படும். அதன் உணர்வு சாப்தபோதத்திற்குக் காரணமன்று. ஏனெனின், எப்பொருளிருந்தால் எக்காரியம் உண்டாகுமோ, எப்பொருளில்லாவிடின் எக்காரியம் உண்டாகாதோ, அப்பொருளே அக்காரியத்திற்குக் காரணமாம். அது குலாலன், தண்டம், சக்கரமுதலியவை கடத்திற்குக் காரணமாதற் போலவாம். எப்பொருள் இல்லாவிடினும் எக்காரியம் உண்டாகின்றதோ அப்பொருள் அக்காரியத்திற்குக் காரணமாகாது. ஆனல் அது அக்காரியத்திற்கு அன்யதாசித்தமே (வேரூராற்றுற் பெறப்படுவதே)யாம். எப்படிகழுதை முதலியவை கடத்திற்கு அன்யதாசித்தமோ, அப்படிச்சொல்லுவோனது தாற்பரிய உணர்வில்லையாயினும் சாப்தபோதம் உண்டாவதால் அதுவும் அன்யதாசித்தமே. எங்ஙனமெனின், 'இவ்வாக்கியத்தாற் கேட்போன் இப்பொருளையறிக' வென்னும் இச்சையாகிய தாற்பரியம் கிளி முதலிய விற்பன்ன மில்லாதவைகட்கில்லையாயினும் அதைக்கேட்ட விற்பன்னனுக்கு கிளி முதலியவைகளின் வாக்கியத்தாற் சாப்தபோதமுண்டாகின்றது, ஆகையால் சொல்லுவோனது தாற்பரிய உணர்வு சாப்தபோதத்திற்குக் காரணமெனல் பொருந்தாது.

தத்விஷய ப்ரதீதி ஜநந யோக்யத்வம் ஶப்த தாத்பர்யம் (இ-ள்.) அவ்வத் தொடர்மொழிப் பொருளினுணர்வை நிகழ்த்தும் அவ்வச்சப்தங்களின்கண்ணுள்ள தகுதி சப்ததாற்பரியமெனப்படும். இச்சப்த தாற்பரியஞானம் சாப்தபோதத்திற்குக் காரணமாதல் நியமம். இலௌகிக சப்தங்களின் தாற்பரியமோ சந்தர்ப்பத்திற்கேற்றபடி துணியப்படுகின்றது. அதெங்ஙனமெனின்:-சைந்தவம் கொண்டுவா என்னுந் தொடர்மொழிக்கண்ணுள்ள சைந்தவபதத்திற்கு உப்பு, குதிரை என்னு மிரண்டும் பொருளாம். உண்ணும் வேளையில் அவ்வாக்கியத்தைக் கேட்டலாற் கேட்போனுக்கு உண்ணுஞ் சந்தர்ப்பத்திற்கேற்றபடி அச்சைந்தவபதத்திற்கு உப்பினிடத்தே தாற்பரியமெனல் துணியப்படும். ஓரிடத்திற்குச் செல்லுங்காலத்தே அவ்வாக்கியத்தைக் கேட்பதால் கேட்போனுக்கு அக்காலத்திற் கேற்றபடி, அச்சைந்தவ பதத்திற்குக் குதிரையினிடத்தே தாற்பரியமெனல் துணிபாம். ஒருகால் அத்தாற்பரிய உணர்வு, சாப்தபோதத்திற்

குக் காரணமாகக் கொள்ளாவிடின், சைந்தவமென்னுமொரே பதத்தால் ஒருபோது உப்பினுணர்வும் ஒருபோது குதிரையினுணர்வும் நிகழலாகாது. இதனுற ரூற்பரிய உணர்வு சாப்தபோதத்திற்கு இன்றியமையாக் காரணமெனக் கோடல் வேண்டும்.

## ஷட்லிங்க நிரூபணம்.

வைதிக சப்தங்களின் தாற்பரியமோ அறுவகை இலிங்கங்களாற்றுணியப் படும். அதாவது உபக்ரமோபஸம்ஹாராவப்யாஸோऽபூர்வதா ப²லம் அர்த²வாதோ³பபத்தீ ச லிங்க³ம் தாத்பர்யநிர்ணயே (இ-ள்) உபக்கிரமம் உபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்பனவாம். இவையாறு லிங்கங்களும் வைதிகசப்தங்களின் தாற்பரியத்தை நிர்ணயப் படுத்துகின்றன.

இனி முறையே அவ்வறுவகை யிலிங்கங்களின் இலக்கணமும் உதாரணமும் கூறுதும். ப்ரகரண ப்ரதிபாத்³யஸ்யார்த²ஸ்ய தத³த்³யந்தயோ: ப்ரதிபாத³நமுபக்ரமோபஸம்ஹாரௌ (இ-ள்.) பிரகரணத்திற் பிரதிபாதிக்கப்படும் அத்துவிதீய பிரஹ்ம வஸ்துவை அப்பிரகரணத்தின் முதலிலுங் கடையிலுங் கூறுதல் உபக்கிரம உபசங்காரமாம். ஆண்டுமுதலிற் கூறுதல் உபக்கிரமமும், ஈற்றிற் கூறுதல் உபசங்காரமுமாம். எங்ஙனமெனின், சாமவேதம் சாந்தோக்கிய உபநிடதத்தின் ஆறுவது அத்தியாயத்தின் முதலில் உத்தாலக முனிவராற் சுவேதகேது வென்னும் புத்திரனுக்கு ஸதே³வ ஸோம்யேத³மக்³ர ஆஸீதே³கமேவாத்³விதீயம் (இ-ள்) காண்டற்கினிய சுவேதகேதுவே! இத்திருசியமான சர்வ ஜகத்தும் தனது உற்பத்திமுன் சத் பிரஹ்மவடிவாகவேயிருந்தது. அச்சத்வஸ்து ஏக அத்துவிதீய வடிவமே. அதாவது சஜாதீய விஜாதீய சுவகத பேதாகிதமாம், என்னும் வசனத்தைக் கூறினர். இங்ஙனம் அவ்வாறுவது அத்தியாயத்தின் முதலில் அத்துவிதீய வஸ்துவைப் பிரதிபாதித்தல் எதுவோ அது உபக்கிரம மெனப்படும். ஐதத³ாத்ம்யமித³ம் ஸர்வம் (இ-ள்) இத்திருசியமான சர்வஜகத்தும் அத்துவிதீய பிரஹ்மவடிவமே, அதைவிட வேறன்று. இங்ஙனம் அவ்வாறுவது அத்தியாயத்தின் ஈற்றில் அவ்வத்துவிதீயப் பிரஹ்மத்தைப் பிரதிபாதித்தலே உபசங்கார மெனப்படும். இவ்வுபக்கிரம உபசங்காரமாகிய விரண்டினையுஞ் சேர்த்து ஒரு லிங்கமாகக் கூறலாயிற்று.

ப்ரகரண ப்ரதிபாத்³யஸ்ய வஸ்துந: தந்மத்⁴யே பௌந:புந்யேந ப்ரதிபாத³நமப்⁴யாஸ: (இ-ள்) பிரகரணத்தின்முதலிலுங் கடையிலும் பிரதிபாதிக்கும் வஸ்துவை அதனிடையில் மீண்டும் மீண்டும் பிரதிபாதித்தல் அப்பியாசமாம். எங்ஙனமெனின், அவ்வாறுவது அத்தியாயத்தின்கண்ணே தத்த்வமஸி ஶ்வேதகேதோ (சுவேதகேதுவே! அது நீ)என்னும் வாக்கியத்தை ஒன்பான்முறைபடித்தலால் அவ்வத்துவிதீய சத்வஸ்துவே மீண்டும் மீண்டும் பிரதிபாதிக்கப்பட்டுளது.

ப்ரகரணப்ரதிபாத்³யஸ்ய ப்ரமாணாந்தராவிஷயதா அபூர்வதா (இ-ள்) பிரகரணத்தாற் பிரதிபாதிப்பதான வஸ்து, சுருதிப்பிரமாணத்தைவிட வேறான பிரத்தியட்ச முதலிய பிரமாணங்கட்கு விஷயப்படாமை அபூர்வதையாம். அவ்

வத்துவிதியவஸ்துவின் அபூர்வதை அவ்வாறாவது அத்தியாயத்தின்கண் யம் ஸௌம்யைதம் ந நிரூபயஸே (சௌமியனே! எம்மிக்க நுண்ணியனுன இவனை வேறு பிரமாணத்தால் அறியலாகாதோ) என்னுந் தொடக்கத்து வசனங்களாற் பிரதிபாதிக்கப்பட்டுளது.

ப்ரகரண ப்ரதிபாத்யஸ்ய ஸ்ய ஜ்ஞாநஸ்ய தத்ப்ராப்தி ப்ரயோஜநம் பலம் (இ-ள்) பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்பட்ட வஸ்துவின் ஞானத்தால், சுருதி கூறியுள்ள அவ்வஸ்துவின் பிராப்தியாகிய பிரயோசனம் யாதோ அது பலமெனப்படும். எங்ஙனமெனின், அவ்வாறாவது அத்தியாயத்தின்கண் ஆசார்யவாந் புருஷோ வேத தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே (இ-ள்) எவ்வதிகாரி பிரஹ்ம முணருங் குரவன் முகத்தினின்றும் வேதாந்த சாஸ்திரத்தைச் சிரவணஞ் செய்துள்ளானே, அவனே தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களாற் பிரத்தியகபின்ன பிரஹ்மத்தை 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்று சாட்சாத்கரிக்கின்றுன். அவனுக்கு எக்காலம்வரையிலும் பிராரப்த கருமத்தின் பயனுகர்ச்சியால் தேகமுதலிய பந்தங்களின்றும் விடுதலுண்டாகின்றதில்லையோ, அக்காலம் வரையிலும் அவனுக்கு இருப்புண்டு; போகத்தாற் பிராரப்த கருமம் விடுபடுங்கால் அவன்பிரஹ்மவடிவனேயாகின்றுன், என்று கூறப்பட்டிருக்கின்றது. இச்சுருதி அத்துவிதீய பிரஹ்மஞானத்தால் அவ்வத்துவிதீய பிரஹ்மப் பிராப்தியாகிய பயனைக் கூறியுளது. இதனைப் பலமெனப்படும்.

ப்ரகரணப்ரதிபாத்யஸ்ய ப்ரஶம்ஸநம் அர்த்தவாத: (இ-ள்) பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்பட்ட வஸ்துவின் துதியாகிய பிரசம்சை அர்த்தவாதமெனப்படும். எங்ஙனமெனின், அவ்வாறாவது அத்தியாயத்தின்கண் யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவத்யமதம் மதமவிஜ்ஞாதம் விஜ்ஞாதம் (இ-ள்) சுவேதகேதுவே! எவ்வொரு வஸ்துவைக் கேட்டலாற் கேட்காத வஸ்துவும் கேட்கப்பட்டதாகின்றதோ, எவ்வொரு வஸ்துவின் மனனத்தால் மனனஞ் செய்யப்படாத வஸ்துவும் மனனத்திற்கு விஷயப்படுகின்றதோ, எவ்வொரு வஸ்துவை யறிவதால் அறியப்படாத வஸ்துவும் அறியப்பட்டதாகின்றதோ, அந்த ஒப்பற்ற வஸ்துவை நீ உனது குரவர்களினிடத்து வினவினையா? இன்றா?—என்னும் வசனத்தால் அவ்வத்துவிதீய பிரஹ்மவஸ்துவைத் துதிக்கப்பட்டிருக்கின்றது. இதனை அர்த்தவாத மெனப்படும்.

ப்ரகரணப்ரதிபாத்யஸ்ய த்ருஷ்டாந்தை: ப்ரதிபாதநம் உபபத்தி: (இ-ள்) பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்படும் வஸ்துவைப் பலதிருஷ்டாந்தங்களால் உதாகரித்தல் உபபத்தி யெனப்படும். எங்ஙனமெனின், அவ்வாறாவது அத்தியாயத்தின்கண் மண், பொன் முதலிய உதாரணங்களால் காரணத்திற்கு வேறாகக் காரியமுண்டெனல் நிஷேதிக்கப்பட்டு, அத்துவிதீய பிரஹ்ம வஸ்துவே பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. இதனை உபபத்தி யெனப்படும்.

இங்ஙனமான உத்தாலக சுவேதகேதுக்களின் சம்வாதம் ஆன்மபுராணம் பன்னிரண்டாவது அத்தியாயத்தின்கண் நாம் விரிவாய் நிரூபித்திருக்கின்றோம்,

ஆங்குணர்க.எவ்வாறு சாந்தோக்கிய உபநிடதத்தின் ஆறுவது அத்தியாயத்தில் மேற்கூறியுள்ள ஆறு இலிங்கங்களால் அத்துவிதிய பிரஹ்மத்தின் தாற்பரிய நிச்சயமுண்டாகின்றதோ, அவ்வாறே எல்லா உபநிடதங்கட்கும் அவ்வத்துவிதிய பிரஹ்மத்தின்கண்ணே தாற்பரிய முண்டாகின்றது. இவ்வாறு மேற்கூறிய ஆறு இலிங்கங்களால் சர்வ வேதாந்த வாக்கியங்கட்கும் அத்துவிதிய பிரஹ்மத்தின்கண்ணே தாற்பரியம் நிச்சயித்தல் சிரவணமெனப்படும்.

## மனன நிதித்தியாசன சொரூப நிரூபணம்.

ஶ்ருதஸ்யார்த்தஸ்ய யுக்திபிஶ்சிந்தநம் மநநம் (இ-ள்.) சிரவணஞ்செய்த அத்துவிதிய பிரஹ்மமாகிய வர்த்தத்தைச் சுருதிக்கனுகூலமான அனுமான முதலிய யுத்திகளாற் சிந்தித்தல் மனனமெனப்படும். விஜாதீய வ்ருத்தியதிரஸ்காரேண ஸஜாதீய வ்ருத்திப்ரவாஹீகரணம் நிதித்யாஸநம் (இ-ள்) விஜாதீய (வேற்றுச்சாதி) விருத்திகளைப்போக்கிச் சஜாதீய (சொந்தச்சாதி) விருத்திகளைப் பிரவாகமாகச்செய்தல் யாதோ அது நிதித்தியாசனமெனப்படும். இங்குத்தேகாதி ஆனுன்மப் பொருள்களின்கண் ஆன்மபுத்தியும்,துவிதப்பிரபஞ்சத்தின் தரிசனமும் விஜாதீய விருத்திகளாம். 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் விருத்தி சஜாதீய விருத்தியாம்.

சிரவணத்தாற் பிரமாணகத அசம்பாவனையும், மனனத்தாற் பிரமேயகத அசம்பாவனையும், நிதித்தியாசனத்தால் விபரீதபாவனையும் நிவர்த்தியாகின்றன. தேகமுதலியவற்றின்கண்ணுள்ள ஆன்மபுத்தி விபரீதபாவனையாம். பிரமாணகத அசம்பாவனையும் பிரமேயகத அசம்பாவனையுமாகிய விரண்டும் பின்னர் மூன்றுவது பரிச்சேதத்திற் கூறப்படும். இவ்வண்ணம் சிரவணமனன நிதித்தியாசனங்களால் அசம்பாவனை விபரீதபாவனைகள் நீங்கியபின்னர்,தத் துவம் பதார்த்த சோதனைசெய்த அதிகாரிஎவனோ, அவனுக்குத் தத்துவமசியாதி மகாவாக்கியங்களால் 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் அபரோட்சஞான முண்டாகின்றது. அந்தப்பிரஹ்ம சாட்சாத்காரத்தால் அதிகாரிக்கு அஞ்ஞானத்தி னிவிர்த்தி பூருவகமான பரமானந்தப் பிராப்தியாகிய மோட்சமுண்டாகின்றது. இவ்வாறுசிரவண முதலியன பிரஹ்மசாட்சாத்கார வாயிலாக மோட்சத்திற் குபயோகியாயிருக்கின்றன.

## சிரவணுதிகளின் அதிகாரி வர்ணனம்.

விவேகமுதலிய நான்கு சாதனங்களுடன்கூடிய சந்நியாசிஎவனோ, அவனுக்கே இச்சிரவணமுதலிய மூன்றும் பிரஹ்மசாட்சாத்காரத்திற்கு அந்தரங்க சாதனமாம். ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: (இ-ள்.) ஏமைத்திரேயி! முமூட்சுக்களால் இவ்வான்மா சாட்சாத்கரிக்கத்தக்கது. அதாவது மோட்சமான இஷ்டப்பிராப்திக்கு இவ்வான்ம சாட்சாத்காரமே சாதனமாம். அவ்வான்ம சாட்சாத்காரப் பிராப்தியின் பொருட்டு அதிகாரிகள் சிரவண மனன நிதித்தியாசனங்களைச் செய்யவேண்டும்.இச்சுருதி ஆன்மசாட்சாத்காரப் பிராப்தியின்பொருட்டுச் சிரவணம் மனனம் நிதித்தியாசனமென்னு மூச்சாதனங்களை விதித்திருக்கின்றது.

இலௌகிக வைதிககருமங்களாற் கலக்கமெய்திய சித்தத்தின்கண் அச்சிரவணமுதலியன சம்பவியா. அன்றியும் ஸந்ந்யஸ்ய ச்ரவணம் குர்யாத் (துறந்தே சிரவணஞ்செய்க) என்னுந்தொடக்கத்து வசனங்களும் சந்நியாச பூருவகமாகவே சிரவணமுதலியவை செயற்பாலதென்று கூறியிருக்கின்றன. இதனால் விவேகமுதலிய நாற்சாதனங்களுடன்கூடிய சந்நியாசிக்கே ஆன்மசாட்சாத்காரப்பிராப்தியின் பொருட்டு அச்சிரவணாதிகள் கர்த்தவ்யமாம்.

## விவேகமுதலிய நாற்சாதன வர்ணனம்.

விவேகம், வைராக்கியம், சமாதிஷட்கசம்பத்தி, முமூட்சுதை எனச்சாதனங்கள் நான்கு. ஆன்மாநித்தியம்; ஆன்மாவினும் வேறான பிரம்மலோகவரையிலுமுள்ள அநான்மவத்துக்களனைத்தும் அநித்தியமாம். இங்ஙனம் சுருதி ஸ்மிருதி யுக்திகளால் விசாரித்தல் விவேகமெனப்படும். ஆகாசவத் ஸர்வகதச்ச நித்ய꞉ । அஜோ நித்ய꞉ சாச்வதோऽயம் புராண꞉ । அவிநாசி து தத் வித்தி யேந ஸர்வமிதம் ததம் விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கச்சித் கர்துமர்ஹதி (ஆன்மா ஆகாயம்போல் எங்கும் பரந்தவனும் நித்தியனுமாம். இவன் பிறப்பற்றவன் நித்தியன் சாசுவதன் புராணன். எவனால் ஈதெல்லாம் வியாப்தமோ அவனை நாசமற்றவனென்றறிதி, அழிவற்ற இவனை அழிவுறச்செய்ய ஒருவனாலுங் கூடாது.) என்னுந்தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதிகளால் ஆன்மா நித்தியமெனல் சித்தமாம். தத் யதேஹ கர்மசிதோ லோக꞉ க்ஷீயதே, ஏவமேவாமுத்ர புண்யசிதோ லோக꞉ க்ஷீயதே। அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா꞉ சரீரிண꞉ (இம்மையில் வேளாண்மைத்தொழிலாற் பெறப்பட்டபைங்கூழ்கள் எவ்வாறு நாசமாகின்றனவோ, அவ்வாறே புண்ணியத்தால் மறுமையிற் பெறப்பட்ட உலகங்களும் நாசமாகின்றன. இத்தேகங்கள் முடிவுடையனவென்றும் இத்தேகமுடையவன் நித்தியனென்றுங்கூறப்படுகின்றான்) என்னுந்தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதிகளாலும், யாதுயாது காரியமோ அதுவது அநித்தியமே, கடம்போலும், என்னுந்தொடக்கத்து அனுமானமாகிய யுத்திகளாலும் அநான்மவத்துக்களின் அநித்தியத்தன்மை பெறப்படும்.

இங்ஙனமான விவேகத்தால் அதிகாரிக்குச்சர்வ அநான்மவத்துக்களினிடத்தும் வைராக்கியமுண்டாகின்றது. இவ்வுலக விஷயசுகங்கட்குச் சாதனமான சிர்க் சந்தன வனிதாதிகளும், சுவர்க்கமுதலிய பரலோக விஷயசுகங்கட்குச் சாதனமான அம்ருதபான அப்சராதிகளும், அச்சாதனங்களோடுகூடிய எல்லா விஷயசுகங்களின் கண்ணும் அநித்தியமென்னும் தோஷ புத்தியால் நாய்கக்கினபாயசம்போல விடவேண்டுமென்னும் இச்சையுண்டாவது யாதோ அது வைராக்கியமெனப்படும். சுருதி. பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாந்நாஸ்த்யக்ருத꞉ க்ருதேந (இ-ள்) கருமஉபாசனைகளாற் பிராப்தமாகத்தக்க பிரம்மலோக முதலிய உலகங்களின் அநித்தத்தன்மை நிச்சயத்தாலும், கருமங்களால் மோட்சம் பிராப்தமாகாதென்னும் நிச்சயத்தாலும் பிரஹ்மத்தையறியும் வேட்கையாளர்கள் அக்கருமங்களினின்றும், அக்கருமங்களாற் பெறப்படும் உலகங்களினின்றும் வைராக்கியமடைவாராக. இவ்வாறான

வைராக்கிய முண்டானபின்னர் அதிகாரிக்குச் சமம்,தமம்,உபரதி,திதீட்சை,சிரத்தை,சமாதானம் என்னும் ஷட்சம்பத்தி பிராப்தமாகின்றன. இவற்றின் சொரூபம் பிறகு மூன்ருவது பரிச்சேதத்திற் கூறப்படும். ஶாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷு: ஸமாஹிதோ பூத்வாத்மந்யேவாத்மாநம் பஶ்யதி (இ-ள்.) அதிகாரி சமமுதலிய வாறுசம்பத்திகளுடன் கூடியவனுய்த்தனது மனத்தின்கண் அஹம் பிரஹ்மாஸ்மி என்ற ஆன்மாவைச் சாட்சாத்கரிக்கின்ருன்.

அதன்பின்னர் அதிகாரிக்கு மோட்சத்தையடைய தீவிரமான இச்சையாகிய முமூட்சுதையுண்டாகின்றது. இங்கு விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத்தி முமூட்சுதையாகிய நான்கு சாதனங்களுஞ் சமுச்சிதமாகியே அதிகாரிக்கு விசேஷணமாகின்றதென்று ஆசாரியரவர்கள் அங்கிகரித்திருக்கின்றனர். ஆனுல்வேறு சிலநூலாசிரியர்கள் முமூட்சுதைமாத்திரமே அதிகாரிக்கு விசேஷணமாகின்றதென்றும், விவேகமுதலியவற்றை அம்முமூட்சுதைக்குச் சாதனமென்றும் அங்கிகரித்திருக்கின்றனர்.

இவ்வாறு விவேகமுதலிய நான்கு சாதனங்களுடன் கூடியவனே சந்நியாசத்திற்கு அதிகாரியாகின்ருன். அவனே பிரஹ்மசாட்சாத்காரப் பிராப்தியின் பொருட்டு பிரஹ்மவேத்தாகுருவைப் புகலடைந்து வேதாந்தசாஸ்திர சிரவண முதலியவற்றைச் செயக்கடவன். சுருதி தத்விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத் ஸமித்பாணி: ஶ்ரோத்ரியம் ப்ரஹ்ம நிஷ்டம் (இ-ள்.) சதுட்டய சாதனசம்பன்ன அதிகாரியானவன் கருமமனைத்தினையுந் துறந்து மோட்சப்பிராப்திக்குச் சாதனமாகிய பிரஹ்ம சாட்சாத்காரத்தை யடையும்பொருட்டுப் பூசைக்குரியவைகளிற் சிலவற்றைக் கரத்திற்கொண்டு சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்டகுருவின் சமீபத்திற் செல்லக்கடவன்—ஈண்டு சீடனது சம்சயத்தையகற்றுவதி லுபயோகமுள்ள சாஸ்திர வாராய்ச்சியுடையவர் சுரோத்திரியரும், அங்கை நெல்லிக்கனிபோல் ஐயந்திரிவுகளின்றி, அகண்ட ஏகரச ஆனந்த பிரஹ்ம சாட்சாத்காரமுடையவர் பிரஹ்ம நிஷ்டருமாவர். இவ்விரு விசேடணங்களுடைய குரவரின் உபதேசத்தாற்ருன் சீடனுக்கு ஆன்மசாட்சாத்காரமுண்டாகும்.

## சந்நியாசத்தின் சொரூப நிரூபணம்.

விஹிதாநாம் கர்மணாம் விதிநா பரித்யாக: ஸந்ந்யாஸ: இ-ள்) சுருதி ஸ்மிருதியாகிய சாஸ்திரங்களால், அதிகாரியைக்குறித்துச் செயற்பாலதென்று விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திரம் சந்தியோபாசனை முதலிய கருமங்களை, விதிப்படி விடுவது யாதோ அது சந்நியாசமெனப்படும்—அக்கரும சந்நியாசத்தின் விதியை ஆன்மபுராணம் பதினேராவது அத்தியாயத்தின்கண் மிக விரிவாய்க்கூறியிருக்கின்ேறம். கர்மணாம் த்யாக: ஸந்ந்யாஸ:(கருமங்களை விடுவது சந்நியாசம்) எனல் மாத்திரமே அச்சந்நியாசத்திற்கு இலக்கணமெனின்; விதியல்லாத கருமங்களை அல்லது விலக்குக் கருமங்களை விடுபவனிடத்தும் சந்நியாசத்தன்மை பிராப்தமாம். அது நீங்கும் பொருட்டு அக்கருமங்களுக்கு 'விதிக்கப்பட்ட' என்னும் விசேஷணங் கூறப்பட்டது. அல்லது அவ்விலக்கணத்தின்கண்

'விதிப்படி' எனக்கூறுவிடின் ஆலசிய முதலிய தோஷங்களால், விதிக்கப்பட்ட கருமங்களை விடுபவனிடத்தும் அச்சந்நியாசத்தன்மை பிராப்தமாகும். அது நீங்கும்பொருட்டு 'விதிப்படி கருமங்களை விடுவது' சந்நியாசமெனல் கூறப்பட்டது.

மேற்கூறிய சந்நியாசத்திற்கு வைராக்கியமே காரணம். அதாவது வைராக்கியமுடையவனே அச்சந்நியாசத்தைக் கொள்ளத்தக்கவனுவன். சுருதி. 𑌯𑌦𑌹𑌰𑍇𑌵 𑌵𑌿𑌰𑌜𑍇𑌤𑍍 𑌤𑌦𑌹𑌰𑍇𑌵 𑌪𑍍𑌰𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 (இ-ள்) அதிகாரி எத்தினத்தில் வைராக்கியத்தை யடைகின்றனே, அத்தினத்திலேயே சருவ கருமங்களையுந் துறக்கக் கடவன். ஸ்மிருதி. 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 𑌪𑌰𑌮𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑍋𑌽𑌵𑌧𑌿𑌃 (இ-ள்) சந்நியாசத்திற்குப் பரவைராக்கியமே மேலான அவதியாம். இங்ஙனமான சுருதி ஸ்மிருதிகளால் வைராக்கியமே சந்நியாசத்திற்கு ஏதுவாகப் பெறப்படுகின்றது. சந்நியாசமும் அவ்வைராக்கியத்தின் ஏற்றக்குறைவால் குடீசகம், பகூதகம், ஹம்சம், பரமஹம்சம் என்னும் வேறுபாட்டால் நான்கு வகைப்படும்.

## வைராக்கியத்தின் பிரிவு கூறுதல்.

இனி அவ்வைராக்கியத்தின் ஏற்றக்குறைவுகளைக் கூறக்கருதி அதன் பிரிவு கூறப்படுகின்றது. அவ்வைராக்கியம் அபரவைராக்கியம், பரவைராக்கியம் என்றிருவிதம். அவற்றுள் முதல் அபரவைராக்கியமும் யதமானம், வியதிரேகம், ஏகேந்திரியம், வசிகாரம் என்னும் வேறுபாட்டால் நால்வகைப்படும். இச்சம்சாரத்தின்கண் இதுசாரம், இதுஅசாரம் எனச்சாரவசாரங்களின் விவேகம்யதமானவைராக்கியமாம். சித்தத்தின்கண்ணுள்ள இராகத்துவேஷ முதலிய தோஷங்களுள் 'இம்மட்டு தோஷம் நம்மிடத்து நீங்கியது, மற்றும் இம்மட்டு எஞ்சிநின்றது' என்று விசாரித்து, நிற்கின்றதோஷங்களை நீக்கும் பொருட்டு முயறல் யாதோ, அதுவியதிரேக வைராக்கியமாம். மனத்தினிடத்து விஷயேச்சையிருக்கினும், இந்திரியங்களை அவ்விஷயங்களிற் செல்லவொட்டாது தடுக்கும் முயற்சி ஏகேந்திரியமாம்.

இவ்வுலக பரலோகங்களின் விஷயங்கள் அழிவுடையனவென்றறிந்து, அவற்றை விடும்விருப்பம் வசீகாரவைராக்கியமாம். இதன் சொரூபம் பதஞ்சலி பகவானும் 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌶𑍍𑌰𑌵𑌿𑌕 𑌵𑌿𑌷𑌯 𑌵𑌿𑌤𑍃𑌷𑍍𑌣𑌸𑍍𑌯 𑌵𑌶𑍀𑌕𑌾𑌰 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌮𑍍 (பார்ப்பதும் கேட்பதுமான பொருள்களினிடத்து அவாவற்றிருத்தலே வசிகாரமாம்) என்னுஞ் சூத்திரத்தாற் கூறியருளினர். அவ்வசீகார வைராக்கியமும் மந்தம், தீவிரம், தீவிரதரம் என்று மூவகையாம். புத்திரன், ஸ்திரீ, தனம் முதலிய பிரியமானவைகள் பிரியுங்கால் 'இக்குடும்பங் கொடியது' என்னும் புத்தியால் அவ்விஷயங்களை அக்காலத்தில்மட்டும் உவர்த்துவரும் தியாகேச்சை மந்தவைராக்கியமாம். 'இவ்வுடலளவும் புத்திர, தார, தனமுதலிய பொருள்கள் நமக்குவேண்டாம்' என்னும் ஸ்திர புத்தியால் அவ்விஷயங்களை வெறுத்துவருந் தியாகேச்சை தீவிரவைராக்கியமாம். 'மீண்டும் வருதலையுடைய பிரம்மலோக வரையிலுமுள்ள எல்லா உலகங்களும் மித்தையாகலின் நமக்குவே

ண்டாம்' என்னும் ஸ்திரபுத்தியால் அவைகளை வெறுத்துவரும் தியாகேச்சை தீவிரதர வைராக்கியமாம்.

மந்த வைராக்கிய முடையவனுக்கு யாதொரு சந்நியாசத்திலும் அதிகாரங்கூடாது. ஸ்மிருதி. 𑌯𑌦𑌾 𑌮𑌨𑌸𑌿 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌵𑌸𑍍𑌤𑍁𑌷𑍁 । 𑌤𑌦𑍈𑌵 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑍇𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑌨𑍍𑌯𑌥𑌾 𑌪𑌤𑌿𑌤𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍 (இ-ள்.) எக்காலத்தில் ஒருவனது மனத்தின்கண் எல்லாப்பொருள்களிலும் வைராக்கிய முண்டாகின்றதோ, அக்காலத்திலேயே விவேகியானவவன் சர்வகருமங்களையும் சந்நியசிக்கக்கடவன்; வைராக்கியமின்றி சந்நியாசங்கொள்வோன் பதிதனாகின்றான்—தீவிரவைராக்கிய முடையவனுக்குக் குடீசகம், பகூதகம் என்னுமிரண்டு சந்நியாசங்களின்கண்ணும் அதிகாரங்கூடும். தீவிரவைராக்கியமுடைய எவனது சரீரம் தீர்த்தயாத்திரை செய்யச் சக்தியற்றதாமோ, அவனுக்குக் குடீசக சந்நியாசத்தின்கண் அதிகாரமாம். எவனது சரீரம் தீர்த்தயாத்திரை செய்யச் சக்தியுடையதாமோ, அவனுக்குப் பகூதக சந்நியாசத்தின்கண் அதிகாரமாம். தீவிரதரவைராக்கிய முடையவனுக்கு ஹம்ச சந்நியாசத்தின்கண் அதிகாரமாம்.

குடீசகம், பகூதகம், ஹம்சம் என்னுமூன்று சந்நியாசங்களின் சொரூபமும் அவற்றின் ஒழுக்கமும் மநுபராசர ஸ்மிருதி முதலிய அறநூல்களிற் பிரசித்தம். இவற்றை ஆன்ம புராணத்தின்கண்ணும் கூறியிருக்கின்றோம். மேற்கூறியவெல்லா வைராக்கியங்களினும், மேன்மையான வைராக்கியம் பரவைராக்கியமாம். இதன் சொரூபம் பின்னர் கூறுதும். அத்தகைய பரவைராக்கியமடையுங்கால் இவ்வதிகாரிக்குப் பரமஹம்ச சந்நியாசத்தின்கண் அதிகாரங்கூடும்.

அப்பரமஹம்சசந்நியாசமும் விவிதிஷாசந்நியாசம், வித்வத்சந்நியாசம் என்னும் பேதத்தால் இருவகைத்து. விவேகமுதலிய நான்கு சாதனங்கள்நிறைந்தவன் தத்துவஞானமடையும் பொருட்டுக்கொள்ளும் சந்நியாசம் விவிதிஷா சந்நியாசமாம். சுருதி. 𑌏𑌤𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌵𑍍𑌰𑌾𑌜𑌿𑌨𑍋 𑌲𑍋𑌕𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍍𑌰𑌜𑌨𑍍𑌤𑌿 । (இ-ள்.) விரக்தர்களடையத்தக்க ஆன்மவடிவ உலகம்யாதோ, அதையடையவிச்சிக்கும் அதிகாரிகள் சந்நியாசத்தைக்கொள்கின்றனர். இங்கு ஆன்ம உலகம் அனான்ம உலகம் எனஉலகம் இருவகைத்தெனல் கருத்தாம். 𑌅𑌥 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌵𑌾𑌵 𑌲𑍋𑌕𑌾 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑌃 𑌪𑌿𑌤𑍃𑌲𑍋𑌕𑍋 𑌦𑍇𑌵𑌲𑍋𑌕𑌃 (உலகங்கள் மனிதலோகம், பிதுர்லோகம், தெய்வலோகம் எனமூவகையாம்) என்னுந்தொடக்கத்துச் சுருதிகள் அனான்ம உலகங்கள் மாநுடலோகம் பிதுர்லோகம் தெய்வலோகம் எனமூவனத்தாமென்று கூறியிருக்கின்றன. 𑌅𑌥 𑌯𑍋 𑌹 𑌵𑌾 𑌅𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌂 𑌲𑍋𑌕𑌮𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 𑌸 𑌏𑌨𑌮𑌵𑌿𑌦𑌿𑌤𑍋 𑌨 𑌭𑍁𑌨𑌕𑍍𑌤𑌿 । 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍇𑌵 𑌲𑍋𑌕𑌮𑍁𑌪𑌾𑌸𑍀𑌤 । 𑌕𑌿𑌂 𑌪𑍍𑌰𑌜𑌯𑌾 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌨𑍋𑌽𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌯𑌂 𑌲𑍋𑌕𑌃 (எவன் தன்னுலகத்தைக்காணாது இவ்வுலகத்தைத் துறக்கின்றானோ, அவன் இவ்வான்மாவைக்காணாமல் புசிப்பதில்லை. ஆன்மாவையே உலகமாய் வழிபடல் வேண்டும். இவ்வுலகே ஆன்மாவான நமக்குப் பிரஜையினால் என்?) என்னுந் தொடக்கத்துச் சுருதிகள் ஆன்ம உலகைக்கூறியிருக்கின்றன. ஆகையால் மேற்

கூறிய சுருதிகளின்கண்ணுள்ள உலகசத்தத்தால் ஆன்மவடிவான உலகத்தையே கொள்ளுதல் உசிதமாம்.

## விவிதிஷா சந்நியாசத்தின் விபாகம்.

மேற்கூறியவவ் விவிதிஷாசந்நியாசமும் இருவகைத்து. ஒன்று ஜனனத்தைவிளைவிக்குங் கருமங்களின் தியாகவடிவமாம். மற்றொன்று பிரைஷமந்திரோச்சாரண பூருவகமாகத் தண்டதாரணாதி யாச்சிரமவடிவமாம். காமியகருமங்களும், பலேச்சை பூருவகமாகச்செய்யும் நித்தியகருமங்களும், புருடனுக்கு ஜனனத்தை விளைவிக்கின்றன வாகலின் அவற்றின் தியாகம் முதல்விவிதிஷா சந்நியாசமாம். அதன்கண்ணும் காமியகருமங்களை முற்றும் விடுதலும்; நித்தியகருமங்களை அங்ஙனம் முற்றும் விடாமல், அவற்றின் பலேச்சைமாத்திரம் விடுதலும் கருத்தாம். முதல்விவிதிஷா சந்நியாசத்தின்கண் இச்சுருதிபிரமாணமாம்.
நகூணா நவூ ஜயா நய ெநநத ஏா ெஹெெந ெகஉஷூ தகுவிோநஶூ:
(இ-ள்.) முன்னிருந்த அதிகாரிகள் காமியகருமங்களாலும், பலேச்சை பூருவகமாகச்செய்யும் நித்தியகருமங்களாலும், புத்திரபௌத்திரர் முதலிய பிரஜைகளாலும்,கோ சுவர்ண முதலிய தனங்களாலும் மோட்சத்திற்குச் சாதனமான பிரஹ்ம சாட்சாத்காரத்தையடைந்திலர். ஆனல் பூர்வவிரக்தர்கள் ஜனனத்தைக்கொடுக்கும் கருமங்களின் தியாகவடிவான சந்நியாசமொன்றினனே பிரஹ்ம சாட்சாத்காரமடைந்தனர். ஆகையால்இக்காலத்திலுள்ள அதிகாரிகளும் அக்கருமத்தியாக வடிவான சந்நியாசத்தானே பிரஹ்ம சாட்சாத்காரத்தைச் சம்பாதிக்கவேண்டும். இச்சுருதி அம்முதலாவதான சந்நியாசத்தையே கூறியிருக்கின்றது. யாதாயினும்ஓர்பிரபலநிமித்தத்தின் வசத்தால் தண்டதாரணமுதலிய வடிவான சந்நியாச வாச்சிரமத்தைக்கொள்ளப் பிரதிபந்தமுடையரான,விரக்த இல்லறத்தாருக்கு இந்த முதல் விவிதிஷா சந்நியாசத்தின்கண் அதிகாரமுண்டு. இதன்கண் ஸ்திரீகட்கும் அதிகாரமுண்டு. ஏனெனின் சுருதி, ஸ்மிருதி, இதிகாசம், புராண முதலியவற்றில் ஜனகர், யாங்கியவற்கியர், அஜாதசத்ரு, கஹோலர், மைத்திரேயி, கார்கிமுதலியோருக்கும் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பிராப்தி கூறப்பட்டிருக்கின்றது. மேற்கூறிய விவிதிஷா சந்நியாசத்தினனே அவர்களனைவருக்கும் பிரஹ்ம சாட்சாத்கார முண்டாயிற்று.

சங்கை:—எக்ஞோபவீதத்தைத் தரித்தலாகிய உபநயன சம்ஸ்காரமுடையவருக்கே வேதாத்தியயனத்தின்கண் அதிகாரமுண்டு. ஆனல், ஸ்திரீகள் அவ்வுபநயன சம்ஸ்கார மில்லாதவராதலால் அவர்களுக்கு அவ்வேதாத்தியயனத்தின்கண் அதிகாரமுண்டாகாது. ஸ்ரீஶூஜெள நாயீயதாஂ (ஸ்திரீ சூத்திரர்களிருவரும் அத்தியயனஞ் செய்வதடாது) என்னுஞ் சுருதியும் ஸ்திரீ சூத்திரர்களுக்கு வேதாத்திய யனத்தை நிஷேதித்திருக்கின்றது. தத்துவமசியாதி வேதவாக்கியங்களாற்றான் பிரஹ்ம சாட்சாத்காரம் பிராப்தமாம்; அம்மகா வாக்கியத்தின் சிரவணத்திற்கு அநதிகாரிகளாவதால், ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் தத்துவஞானத்தின்கண் அதிகாரமின்றும்.

சமாதானம்:—ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா ஶூத்ராஸ்தே(அ)பி யாந்தி பராம் கதிம் (ஸ்திரீகள், வைசியர்கள், சூத்திரர்களாகியவர்களும் மேலானகதியை யடைகின்றார்கள்) என்று ஸ்ரீபகவானால் ஸ்திரீ சூத்திரர்களுக்கும் மோட்சப்பிராப்தி கூறப்பட்டிருக்கின்றது. யத் ப்ரஹ்மவித்யயா ஸர்வம் பவிஷ்யந்தோ மனுஷ்யா மன்யந்தே (எந்தப் பிரஹ்மவித்தையால் எல்லாம் பெறுகின்றார்களோ அதைமனிதர்கள் எண்ணுகின்றார்கள்) என்னுஞ் சுருதி மனிதமாத்திரத்திற்கே பிரஹ்ம வித்தையால் சர்வான்மபாவப் பிராப்தி கூறுகின்றது. அந்தப்பிரஹ்மஞானம் வேதாந்த சாஸ்திரத்தின் சிரவணத்தானன்றி நிகழாது, இதனால் வேதாத்தியயனத்திற்கு அதிகாரிகளான பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர் என்னுமூவருணத் தவருக்கும் உபநிடதவடிவான வேதாந்தசிரவணாதிகளானே பிரஹ்மஞான முண்டாகின்றது. ஆனால் கீழ்ப்போன அநந்த ஜன்மங்களிற் செய்துள்ள புண்ணிய கருமத்தால் தூயமனத்தினரும், வேதாத்தியயனத்திற்கு அநதிகாரிகளுமான ஸ்திரீ சூத்திரர்களுக்கோ, வேதாந்தார்த்தத்தைப் பிரதிபாதிக்கும் புராணாதிகளின் சிரவணத்தானே பிரஹ்மஞான முண்டாகின்றது என்பது இதனானே சித்திக்கின்றது. இக்காரணம்பற்றியே இதிகாச புராணங்களில் விதுரர்முதலிய சூத்திரர்களுக்கும் பிரஹ்மஞான முண்டானதாகக் கூறப்பட்டிருக்கின்றது. அந்தப் பிரஹ்மஞானத்தின்கண் சூத்திரர்களுக்கே அதிகாரமுண்டாகுங்கால் மைத்திரேயி, கார்க்கி முதலிய பிராம்மண ஸ்திரீகளுக்கு அதிகாரமுண்டெனக் கூறுவானேன் ?

சில நூலாசிரியர் கூறும் வியவஸ்தையாவது:—பிருகதாரணிய உபநிடதத்தின்கண் யாங்கியவற்கியர் தனது காதலியாகிய மைத்திரேயிக்கு, நேராகச்சுருதிவசனங்களினானே பிரஹ்ம வித்தையை யுபதேசித்திருக்கின்றனர். கார்க்கிக்கும் யாங்கிய வற்கியருக்கும் நடந்தசம்வாதம் அவ்வுபநிடதத்தில் பிரசித்தமாயிருக்கின்றது. ஆகையால் பிராம்மண, க்ஷத்திரிய, வைசியரென்னு மூவருண ஸ்திரீகளுக்கும் ஆன்ஞான உபயோகியான வேதாந்த சுருதிகளின் சிரவணத்தின்கண் அதிகாரமுண்டு. ஆனால் உபநயன சம்ஸ்கார மில்லாமையால் ஸ்திரீகளுக்கு வேதாத்தியயனத்தின்கண் அதிகாரமில்லை. முதலிற் குருவானுச்சரிக்கப்பட்ட வாக்கியங்களைப் பின்னர் சீடனால் உச்சரிக்கப்படுதல் அத்தியயனமெனப்படும். ஓர்கால் ஸ்திரீகளுக்கும் வேதாந்த சிரவணத்தின்கண் அதிகாரமில்லையாயின் யாங்கியவற்கிய முனிவர் மைத்திரேயி, கார்க்கி இவர்கட்கு நேராக வேதவாக்கியங்களாற் பிரஹ்மவித்தையை உபதேசித்திரார். இந்தயாங்கியவற்கிய மைத்திரேயிகளின் சம்வாதத்தை ஆன்மபுராணம் ஏழாவது அத்தியாயத்தின்கண் தெளிவாகக் கூறியிருக்கின்றோம்.

இனி மற்றொரு விவிதிஷா சந்நியாசத்தின்கண் சுருதி ஸ்மிருதிப்பிரமாணங்களைக் கூறுதும். சுருதி. தண்டமாச்சாதனம் கௌபீனம் பரிக்ரஹேச்சேஷம் விஸ்ருஜேத் (இ-ள்.) சந்நியாசி தண்டகமண்டலத்தையும், சீதநிவர்த்தியின் பொருட்டுக்கந்தையையும் கௌபீனத்தையுங் கொள்ளுக; மற்றவற்றைவிடுக.

ஸ்மிருதி. ஸம் ஸார ஏவநிஃ ஸாரம் உஜஷாஸார திக்ஷயா । வ்ர வ்ரஜந்த்ய கூதோ அா ஹாஃ வரம் வைராம் ஞஹோ ஸ்ரிதாஃ (இ-ள்) பிரஹ்மலோக பரியந்தமான சர்வசம்சாரத்தையும் அசாரமெனக்கண்டு, பரமான்மப்பொருளாகிய சாரத்தைக்காணும் விருப்பால் மேலானவைராக்கியத்தை யடைந்த விரக்தர்கள் கிருகஸ்த வாச்சிரமத்திற்கு முன்னமே விவிதிஷா சந்நியாச வாச்சிரமத்தைத் தரிக்கின்றார்கள்—என்னுந்தொடக்கத்து சுருதி ஸ்மிருதி வசனங்கள் விவிதிஷா சந்நியாச வாச்சிரமத்தைக் கூறியிருக்கின்றன. இதுகாறும் இருவகையான விவிதிஷா சந்நியாசசந்நியாசங் கூறினம். இனி வித்வத் சந்நியாசங் கூறுதும்.

## வித்வத் சந்நியாசங் கூறுதல்.

பிரம்மசரிய, கிருகஸ்த, வானப்பிரஸ்தமாகிய மூவகையாச்சிரமத்துள் எதிலாவது வேதாந்த சிரவண முதலியவற்றால் எவனுக்குப்பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டானதோ,அந்தத் தத்துவவேத்தாவால் சித்தவிட்க்ஷேப நிவர்த்திவடிவான ஜீவன்முத்தியின்பொருட்டுக் கொள்ளப்பட்ட சந்நியாசம் வித்வத்சந்நியாசமெனப்படும். இச்சந்நியாசமும் சுருதி ஸ்மிருதிப்பிரமாணங்களாற் பெறப்படும். சுருதி. ஏதத் ஏவவிதித்வா முநிர்ப்பவதி। ஏதம் ஏவ ப்ரவ்ராஜிநோ லோகமிச்சந்த: ப்ரவ்ரஜந்தி। ... வ்யுத்தாயாத பிக்ஷாசர்யம் சரந்தி। நதம் ஸம்நியாஸம் நயவேத்ரவஸீ தம்நா ... ஸநம் வாதிவ ரஹோம்ஸ: (இ-ள்.) இப்பரமான்மாவை அஹம்பிரஹ்மாஸ்மி என்று சாட்சாத்கரித்த வித்வான் பரமஹம்ச சந்நியாசியாகின்றான். ஆன்ம சாட்சாத்காரத்தால் தத்துவமுணர்ந்தோர், புத்திரேடணை, வித்தேடணை,உலக வேடணைஎன்னும் மூன்று வேடணைகளைவிட்டு பிக்ஷாவிருத்தியை அதாவது வித்வத்சந்நியாசத்தைத் தரிக்கின்றார்கள். தத்துமுணர்ந்த அந்தப்பரமஹம்ச சந்நியாசி தண்டம்,சிகை,பூணூல்,ஆடை,இவற்றைத்தரிப்பதில்லை. ஸ்மிருதி. யதா தம் விதிதம் தக்வம் வரம் ப்ரஹ்ம ஸநாதநம் । ததைக தம்டம் ஸம்ருஹ்ய ஸோபவீதாம் ஸிவாம் த்யஜேத்॥ கம்யா கௌபீந வாஸாஸ்ச தம்டய்ருக் வ்யாநதத்பர:॥ ஏககீ ரமேத நித்யம் தம்தேவா ப்ராஹ்மணம் விது:॥ கபாலம் வ்ருக்ஷ மூலாநி குசேலம் ஸஹாயதா । ஸமதா சைவ ஸர்வஸ்மிந் நேதந்முக்தஸ்ய லக்ஷணம்॥ (இ-ள்.) எக்காலத்தில் பரப்பிரஹ்மான சநாதனதத்துவத்தை அதிகாரி சாட்சாத்கரிக்கின்றனனோ, அக்காலத்தில் அவன் ஏகதண்டத்தைக்கிரகித்துப்பூணூலோடு சிகையையும் நீக்கிவிடவேண்டும். எந்தவித்வான் குளிர் நிவர்த்தியின்பொருட்டுக்கேவலம் கந்தை கௌபீன வஸ்திரங்கள் இவற்றைத்தரித்தவனும், தண்டந்தாங்கியவனும், எப்போதும் அந்தரான்மதியானத்திற்றற்பரனும்,தனித்தும் இருப்பவனோ, அவனைத் தெய்வத்தன்மையுள்ள பிரஹ்மவேத்தா பரமஹம்ச சந்நியாசியென்பர். பிச்சையின் பொருட்டு மண்மயமான கபாலத்தைக்கையிற் கொளலும்,விருட்சங்களின் மூலத்திலுறைதலும்,குற்சித (அருவருப்புள்ள) வஸ்திரங்களை யுடுத்தலும், ஒருவர் சகாயமின்றி நிற்றலும், எல்லாப்பூதங்களிற் சமபுத்தியும் ஆகிய இவைகள் முத்தனானபரமஹம்சனது இலக்

கணங்களாம். அதாவது இங்ஙனங்கூறிய விலக்கணங்களையுடையவனே முத்த னை பரமஹம்சனென்றறிக. இவை முதலிய சுருதி ஸ்மிருதி வசனங்கள் அவ் வித்வத் சந்நியாசத்தைக்கூறுகின்றன. இச்சந்நியாசத்திற்கு ஜீவன் முத்தியே பயன். இவ்வித்வத் சந்நியாசிகளின் குறிகளும் ஒழுக்கங்களும் அவ்வியத்தங் களாம். இக்காரணம்பற்றியே சுருதி ஸ்மிருதிகளிற் சிலவிடத்து அவர்களுக் குத்தண்ட வஸ்திரமுதலிய வற்றின் அபாவமும், சிலவிடத்து அவற்றின் தார ணமுங் கூறப்பட்டிருக்கின்றன. அவ்வித்சந்நியாசிகளின் அவ்வியத்தமானகுறி களும் அவ்வியத்தமான வொழுக்கங்களும் ஆன்மபுராணம் பதினோராவது அத் தியாயத்தின் முதலில் தெளிவாய்க் கூறியிருக்கின்றோம்.

சங்கை:—முன்னைய விவிதிஷா சந்நியாசத்தை பிரஹ்மஞானத்திற்கு ஏது வெனக் கூறினீர், அதுபொருந்தாது. ஏனெனின் ஜனகர், அஜாதசத்ரு முதலி யோருக்கு அச்சந்நியாசமில்லையாயினும் பிரஹ்ஞான முண்டென்பது சுருதி ஸ்மிருதியாதிகளா லறியப்படுகின்றது.

சமாதானம்:—கேவலம் இச்சன்மத்தின் விவிதிஷா சந்நியாசமே பிரமஹ ஞானத்திற்குக்காரணமன்று. ஆனால் ஜன்மாந்தரத்திற் கொள்ளப்பட்ட விவிதி ஷா சந்நியாசமும் பிரஹ்ம ஞானத்திற்குக்காரணமாம். ஆகையால் ஜனகர் முத லியோருக்கு இச்சன்மத்தின்கண் அவ்விவிதிஷா சந்நியாசமில்லையாயினும், ஜன் மாந்திரத்தின் விவிதிஷா சந்நியாசத்தானே அவருக்குப் பிரஹ்மஞானமுண்டா னது, இவ்வாறு பிரஹ்மஞானமாகிய காரியத்தால் ஜன்மாந்தரத்தின் சந்நியாச மாகிய காரணத்தின் அனுமான முண்டாகின்றது. அல்லது 𑌯𑌦𑌹𑌰𑍇𑌵 𑌵𑌿𑌰 𑌜𑍇𑌤𑍍 𑌤𑌦𑌹𑌰𑍇𑌵 𑌪𑍍𑌰𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 (எத்தினத்தில் வைராக்கியம் பிறந்ததோ, அத்தி னத்திலேயே சந்நியசித்தல் வேண்டும்) என்னுஞ்சுருதி வைராக்கிய முள்ளவனு க்குச் சர்வஅங்கங்களோடுங்கூடிய விவிதிஷா சந்நியாசத்தை விதித்து, மீண்டும் அப்பிரகரணத்திலேயே 𑌯𑌦𑍍𑌯𑌾𑌤𑍁𑌰𑌃 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌨𑌸𑌾 𑌵𑌾𑌚𑌾 𑌵𑌾𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍇𑌤𑍍 (இ-ள்.) ஒருவன் எப்போது மிக்க ஆதுரன் (நோயுற்றவன்) ஆகின்றானோ, அப் போது அவன் வேறுஅங்கங்களின்றியே மனத்தால் அல்லது வாக்கால் மாத்தி ரம் அச்சந்நியாசத்தைக்கொள்ளுக—என்னுஞ் சுருதி ஆதுர சந்நியாசத்தை விதித்திருக்கின்றது. மரணஞ் சமீபித்த அவ்வாதுரசந்நியாசிக்கு அக்காலத்தில் சிரவணாதிகளால் ஆன்மஞானம் சம்பவியாது. ஆகையால் அவ்வாதுரசந்நியா சம் அவனுக்கு வேறுபிறப்பின்கண் ஆன்மஞானத்தைப் பயக்குமெனல் அவ சியமங்கீகரிக்கவேண்டும்; இல்லாவிடின் அவ்வாதுரசந்நியாசமே வியர்த்தமா கும். ஆதலினன்றே ஜன்மாந்திரத்தின் விவிதிஷா சந்நியாசமும் ஆன்மஞானத் திற்குக் காரணமெனல் பொருந்தும்.

சங்கை:—இவ்வாதுரசந்நியாசம் மேற்கூறிய விவிதிஷா சந்நியாசத்தினும் வேறானசந்நியாசமேயாம். 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍍 (பிரம்ம ஸ்தானம் சந்நியாசத்தாலாம்) என்னும் ஸ்மிருதி அவ்வாதுரசந்நியாசத்திற்குப் பிரஹ்ம லோகப் பிராப்தியாகிய பயனைக்கூறியிருக்கின்றதாகையால் அவ்வாதுரசந்நியா சம் வியர்த்தமன்று.

சமாதானம்:—இவ்வாதுர சந்நியாசத்தின்கண்ணும் விரக்தனுக்கே அதிகாரமுண்டு. விவிதிஷாசந்நியாசப் பிரகரணத்திலேயே இவ்வாதுரசந்நியாசமும் விதிக்கப்படுகின்ற தாகையால் இச்சந்நியாசம் முற்கூறிய விவிதிஷா சந்நியாசத்தினும் வேறான சந்நியாசமாகாமல் அதன்கண் அடங்கியதேயாம். ஆனால் ஸந்ந்யாஸாத் ப்ரஹ்மண꞉ ஸ்தாநம் (பிரம்ம ஸ்தானம் சந்நியாசத்தாலாம்) என்னும் ஸ்மிருதி அவ்வாதுரசந்நியாசத்திற்குப்பிரம்மலோகப் பிராப்தியாகியஅவாந்திர (மத்திய) பயனைக்கூறுவதனால் ஆன்மஞானமாகிய முக்கியபயனை நிஷேதிப்பதாகாது. அல்லது, அந்த ஸ்மிருதி குடீசகமுதலிய ஸ்மார்த சந்நியாசங்களுக்குப் பிரம்மலோகப் பிராப்தியாகிய பயனைக்கூறுவதனானும் அவ்வாதுரசந்நியாசத்திற்கு ஆன்மஞானப் பிராப்தியே முக்கியபயனும். ஜன்மாந்திர சந்நியாசத்தானும் ஆன்மஞான முண்டாமென்னும் வார்த்தை ஸ்ரீசர்வஞ்ஞமகா முனிவரும் சங்க்ஷேபசாரீரக மென்னும் நூலிற் கூறியிருக்கின்றனர். சுலோகம். ஜந்மாந்தரேஷு யதிஸாதநஜாத மாஸீத், ஸந்ந்யாஸ பூர்வகமிதம் ச்ரவணாதி ரூபம் । வித்யாம் அவாப்ஸ்யதி ஜந꞉ ஸகலோऽபி யத்ர தத்ராஸ்ரமேஷு வஸந் நிவாரயாம꞉ (இ-ள்.) ஒருகால் அதிகாரிக்குப் பூருவஜன்மங்களில் சந்நியாசபூருவகமாகச்சிரவணாதி சாதனங்கள் இருக்குமாயின்; அவ்வதிகாரி கிருகஸ்தமுதலிய வெவ்வாச்சிரமத்தின்கண் நிற்பவனாயினும், அப்பூருவ சாதனங்களின் வலிவால் அவன் ஆண்டே பிரஹ்மவித்தையைப் பெறுகின்றான், இப்பொருளை நாம் மறுக்குகிலோம்— இதனால் ஜனகர் முதலியோருக்கும் முற்பிறப்பின் விவிதிஷா சந்நியாசத்தினால் ஆன்மஞானத்தின் பிராப்தி கூடுமெனல் பெற்றாம். முன்னே ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய꞉ ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய꞉ (ஆன்மாவைப் பார்க்குக, அதைப்பற்றி சிரவணமனன நிதித்தியாசனங்களைச்செய்குக) என்னும் சுருதி வசனத்தால் அதிகாரிகட்கு ஆன்மஞானப்பிராப்தியின்பொருட்டுச் சிரவண முதலியவற்றின் கர்த்தவ்யத்தன்மை கூறப்பட்டது. ஆண்டுச்சில நூலாசிரியர்கள் சிரவண முதலியவல்றில் விதி அங்கீகரிப்பதில்லை. சிலர்விதி அங்கீகரிக்கின்றனர். முதற்பட்சம் வாசஸ்பதிமிசிரரதாம். இரண்டாவது பட்சம் விவரணாசாரியரதாம்.

## வாசஸ்பதிமிசிரரது அபிப்பிராயங் கூறுதல்.

விவேகமுதலிய நான்கு சாதனங்கள் நிறைந்த ஜிஞ்ஞாசுக்களாற் செய்யப்பட்ட சிரவணமுதலியவற்றிற்கு ஆன்மஞானத்தின் காரணத்தன்மை உடன்பா டெதிர்மறைகளானே துணியப்படுகின்ற தாகையால் அச்சிரவண முதலியவற்றில் விதிநிகழாது. அப்பிராப்த அர்த்தத்தினிடத்தே விதிநிகழும்.எங்ஙனமெனின், யாகத்தில் சுவர்க்ககாரணத்தன்மை பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களால் அப்பிராப்தமாம், ஆகையால் அக்காரணத்தன்மையைப் போதிக்கும் ஸ்வர்க்காமோ யஜேத (துறக்கம் விரும்புவோன் வேட்க) என்னும் வசனம் விதிவடிவமாம். சிரவண முதலியவற்றில் பிரஹ்மசாட்சாத்காரத்தின் காரணத்தன்மை மேற்கூறிய சுருதிப்பிரமாணத்தினும் வேறானதொரு பிரமாணத்தாற் பிராப்தமாகாதெனினும்; மிகநுண்ணிய தாதலால் அறிதற்கரியதான ஷட்ஜம

முதலிய ஸ்வரங்களின் சாட்சாத்காரத்திற்குக் காந்தர்வசாஸ்திரத்தின் அப்பியாசம் உடன்பா டெதிர்மறைகளாற் காரணமெனல் பிராப்தமாம், அச்சுவரங்களைப்போன்று பிரஹ்மமும் மிக்கநுண்ணியதாதலால் அறிதற்கரியதாயினும், அதன் சாட்சாத்காரத்திற்கு வேதாந்த சாஸ்திரத்தின் சிரவணமும் காரணமெனல் உடன்பா டெதிர் மறைகளானே பிராப்தமாம். அங்ஙனமான பிராப்த அர்த்தத்தினிடத்தே விதிநிகழாது; 'சிரவணஞ்செய்க' என்னும் வசனத்திலுள்ள ககர விகுதிக்கு விதிஅர்த்தமன்று. ஆனல் தகுதி அர்த்தமாம். அதாவது ஆன்மாசிரவணஞ் செய்யத்தக்கது என்பதுபொருளாம். இவ்வாறே 'மனன நிதித்தியாசங்களைச்செய்க' என்னுமிரண்டு வசனங்களிலும் விதியின்மையையறிந்துகொள்க.

## சிரவண அங்கிக்கு அங்கங்கூறுதல்.

ஆசாரியரதபிப்பிராயம் வருமாறு:—ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: (ஆன்மாவைப்பார்க்குக அதற்காக சிரவணமனன நித்தியாசங்களைச்செய்குக) என்னுஞ்சுருதி விவேகமுதலிய நான்கு சாதனங்கள் நிறைந்த சந்நியாசிக்கு ஆன்மசாட்சாத்காரப் பிராப்தியின் பொருட்டு மனனநித்தியாசங்களாகிய பலோபகாரி அங்கங்களோடு சிரவணமென்னும் அங்கி விதித்திருக்கின்றது. நேர்பலத்திற்குச் சாதனமாக எப்பொருள் சிரவணஞ்செய்யப் படுகின்றதோ, அப்பொருள் அங்கி (தலைமைப் பொருள்) எனப்படும். இதனையே சேஷி என்றும், பிரதானம் என்றும் கூறுவர். அங்கியின் சமீபமாகவே எப்பொருள் பயனின்றியே கர்த்தவ்யத்தாற் சிரவணஞ்செய்யப்படுகின்றதோ, அப்பொருள் அங்கம் (தலைமையில் பொருள்) எனப்படும். இதனையே சேஷம் எனவும், சஹகாரி எனவும் கூறுவர்.

அவ்வங்கமும் சொரூபோபகாரி, பலோபகாரி என்றிரு பகுப்பினதாம். எவ்வங்கம் அங்கியின் சொரூபோற்பத்தியில் உபகாரியாகின்றதோ, அவ்வங்கம் சொரூபோபகாரியாம். இதனை மீமாஞ்சகர் சந்நிபத்யோபகாரி அங்கமென்பர். எவ்வங்கம் அங்கியினுற்றோன்றிய பலோற்பத்தியில் உபகாரியாகின்றதோ, அவ்வங்கம் பலோபகாரியாம். இதனை மீமாஞ்சகர் ஆராதுபகாரி அங்கமென்பர். எங்ஙனமெனின், ஈண்டுப்பிரசங்கத்தில் வேதாந்த சாஸ்திரத்தின் சிரவணம், பிரமாண விசார வடிவாதலால் பிரஹ்மஞானமாகிய நேர்பயனுக்குச் சாதனமாக விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் அச்சிரவணம் அங்கியெனப்படும். அச்சிரவணமாகிய அங்கியின் சமீபத்தில் விதித்திருக்கும் விவேக முதலிய சாதனங்கள் எவையோ, அவைகட்கு ஞானத்தைவிடப் பிறிதோர் பயன் ஆண்டுக் கூறப்படவில்லை. ஆகையால் அவ்விவேக முதலிய சாதனங்கள் சிரவணமாகிய அங்கியின் சொருபோற்பத்தியில் உபகாரியாவதால், அவற்றைச் சொரூபோபகாரி அங்கமென்பர். சிரவணமாகிய அங்கியின் சமீபத்திற் பயனின்றியே மனன நித்தியாசனங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் அவை யிரண்டும் சிரவணமாகிய அங்கிக்குப் பிரஹ்ம சாட்சாத்காரமாகிய பலோற்பத்தியில் உபகாரியாவதால், அவற்றைப் பலோபகாரி அங்கமென்பர். இதனுல் ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: (ஆன்மாவைச் சிர

வணஞ் செய்க, மனனநிதித்தியாசனங்களைச் செய்க) என்னும் வசனம் மனன நிதித்தியாசமாகிய பலோபகாரி அங்கசகிதமாகச் சிரவண மென்னும் அங்கியை விதிக்கின்றது. அதாவது சதுட்ட சாதனங்கள் நிறைந்த சந்நியாசி பிரஹ்ம சாட்சாத்காரமடையும் பொருட்டு மனன நிதித்தியாசனமாகியஅங்கங்களோடு சிரவணமென்னும் அங்கியை அவசியம் சம்பாதிக்க வேண்டும். சிரவணத்திற் குப் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் காரணத்தன்மை முற்கூறிய உடன்பாடெதிர் மறைகளானே சித்தமாம். ஆதலால் சிரவணத்தை விதித்திருக்கும் 'சிரவணஞ் செய்க' என்னும் விதி அபூர்வவிதியன்று. ஆனால் நியமவிதி அல்லது பரிசங் கியா விதியாம்.

## அபூர்வமுதலிய மூன்றுவிதிகளின் இலக்கணம்.

கவ்ராவ்ாய்ட பொய கொவியிஃ கவ-ூவட வியிஃ (இ-ள்) வேறு பிர மாணத்தால் அப்பிராப்தமான அர்த்தத்தைக் கர்த்தவ்யத் தன்மையாகப் போ திக்கும் விதி அபூர்வவிதியாம். அது வ்ரீஹீந்ெவ்ராக்ஷதி (நெற்களை இறைக் குக) என்னும் வசனம் அபூர்வவிதியாதற் போலாம். இவ்வசனத்தானன்றி வேறொரு பிரமாணத்தால் நெற்களை இறைத்தல் பிராப்தமாகாது. ஆகையால் அப்பிராப்த அர்த்தத்தைப் போதிப்பதால் அவ்விதி அபூர்வவிதி யெனப்படும்.

வக்ஷ வ்ராவ்வஸ்ர வ்ராவ்ாஂஶ வ-ூரகொ வியிஃ நியஃ வியிஃ (இ-ள்) பட்சத்திற்பெற்ற அர்த்தத்தின் அப்பிராப்த அம்சத்தை முடிக்கும் விதி எதுவோ அது நியமவிதியாம். அது வ்ரீஹீந வஹந்ராக (நெற்களைக் குத்துக) என்னும் விதிபோலும். யாகத்தி லுபயோகியான நெற்க்ளின் உமிகளை நீக்குதல் இரண்டு உபாயங்களாலுண்டாம். ஒன்று அவகாத வடிவான உபாயம். மற் றொன்று நகவிதலன வடிவான உபாயம். உலக்கையினல் நெற்களைக் குத்துதல் அவகாதமும், நகங்களால் உமிகளைக் கிள்ளுதல் நகவிதலனமுமாம். எப்பட் சத்தில் நகவிதலனம் பிராப்தமோ, அப்பட்சத்தில் அவ்வவகாதம் பிராப்தமா காது. (உமிகளைப்போக்கும்) பட்சத்திற் பெற்ற அவகாதத்தின் அப்பிராப்த அம்சத்தை வ்ரீஹீந வஹந்ராக (நெற்களைக்குத்துக) என்னும் வாக்கியம்முடிக் கின்றது. அதாவது குத்துதலானே அந்நெற்களின் உமிகளை நீக்கவேண்டும் என்பதாம். இங்ஙனங் கூறுவதால் நகத்தாற் கிள்ளுதலான உபாயத்தினிவர்த்தி அர்த்தத்தானே சித்திக்கின்றது.

உஹய வ்ராவ்ா விதாவ்ராவ்ருத்தி பொயகொ வியிஃ வரிஸஂவ்ரா வியிஃ (இ-ள்) ஓரே காலத்தில் இரண்டுபொருள்கள் பிராப்தமாக அவற்றுள் ஒரு பொருளின் நீக்கத்தைப் போதிக்கும் விதி எதுவோ அது பரிசங்கியாவிதியாம். எங்ஙனமெனின், ஐமா ஃமருஹ்ண ந்ருஶநாஃருதஸ்ர (இக்கயிற்றை யூபத்திற்கட் டுக) என்னும் மந்திரப்படி எக்ஞத்தில் குதிரை கழுதையென்னு மிரண்டுகளின் கயிற்றைக் கொள்ள நேருங்கால் கஶ்வா ஹியாநீ ஃாஉதெத்த (குதிரையின்பெய ரைக் கூறுகின்றது) என்னும் வசனம் கழுதையின் கயிற்றைக் கொள்ளுதலி னீக்கத்தை விதிக்கின்றது, ஓர் குதிரையின் கயிற்றைக் கொள்க வென விதிக்க வில்லை. ஆனல் குதிரையின் கயிற்றைக்கொள்ளுதல் மேற்கூறியமந்திரத்தா

ளே பெறப்படும். ஆகையால் சுஶ்வா ஹியா.நீ ரோடிதே (குதிரையின் பெயரைக் கூறுகின்றது) என்னும் வசனம் பரிசங்கியா விதியாம்.

நியமவிதியிலும் பரிசங்கியாவிதியிலும் பிறிதினிவர்த்தி சமானமாயினும், நியமவிதியில் பிறிதினிவர்த்தி ஆர்த்திக்யமும் (பொருட் சார்பினதும்), பரிசங்கியாவிதியில் பிறிதினிவர்த்தி விதேயமு (விதிச்சார்பினது) மாம். இதுவே அவ்விரண்டிலுமுள்ள விசேஷமாம். அவ்வாறே இத்தொடர்ச்சியின்கண்ணும் 'சிரவணஞ்செய்க' எனல் நியமவிதியாம். அதாவது சாதனங்கள் நிறைந்த ஜிஞ்ஞாசுக்கள் வேதாந்த சாஸ்திரத்தையே சிரவணஞ்செய்யவேண்டும் என்பதாம். அல்லது அந்த ஜிஞ்ஞாசுக்கள் வேதாந்த சாஸ்திரத்திற்குப் புறம்பான சாஸ்திரங்களைச் சிரவணஞ்செய்யவேண்டாம், என்னும் பரிசங்கியாவிதியுமாம்.

சங்கை:—எவ்விடத்தில் இரண்டு சாதனங்கள் பிராப்தமாகின்றனவோ, அவ்விடத்திலே அப்பிராப்த அம்சத்தை முடிப்பதாகிய நியமவிதி அங்கீகாரமாம் என்று முன்னே நியமவிதிக்கிலக்கணங் கூறினீர். அவ்விலக்கணம் இங்குச் சிரவணவிதியிற் பொருந்தாது. ஏனெனின், பிரஹ்மம் வேதாந்த சாஸ்திரத்தினும் வேறானவோர் பிரமாணத்திற்கு விஷயமன்று; ஆனால் வேதாந்த சாஸ்திரமொன்றிற்கே அதுவிஷயமாம்.

ஒருகால் அந்தப் பிரஹ்மசாட்சாத்காரத்தில் வேதாந்த சாஸ்திரத்தினும் வேறாக யாதாமொரு சாதனம் ஏற்படின், சிரவணம் நியமவிதியெனல் பொருந்தும். ஒருபட்சம் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குப் புராண முதலியவற்றின் சிரவணமும் சாதனமாகக்கூடும்; அதை நிவர்த்திக்கும்பொருட்டு வேதாந்த சிரவணத்தினிடத்து அந்நியமவிதி நிகழுமெனின்; அது பொருந்தாது. ஏனெனின், அத்தியான்மபுராணம் வேதாந்தத்தை மூலமாயுடைமையால் அதன் சிரவணம் வேதாந்த சிரவணத்தினும் வேறான சாதன மென்பதாகாது. ஆனால் அவ்வத்தியான்மபுராண சிரவணமும் வேதாந்தத்தினதே சிரவணமாம்.

ஒருபட்சம் இராகமுள்ளவர்களுக்கு இராகிகீதை முதலியவற்றின் சிரவணங்கூடும்; அதை நிவர்த்திக்கும் பொருட்டு வேதாந்த சிரவணத்தில் நியமவிதி நிகழுமெனின்; அதுவும் பொருந்தாது. ஏனெனின், சிரவண விதியினும் வேறானவசனங்களால் முமுட்சுக்களை நோக்கி இராகிகீதையின் சிரவணம் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றது.

ஒருபட்சம் துவைத சாஸ்திரத்தின் சிரவணங்கூடும்; அதை நிவர்த்திக்கும்பொருட்டு வேதாந்த சாஸ்திர சிரவணத்தில் நியமவிதி நிகழுமெனின்; அது பொருந்தாது. ஏனெனின், துவைதசாஸ்திரம் அத்வைத சாஸ்திரத்திற்கு விரோதமாவதால், அது அத்துவிதீய பிரஹ்ம ஞானத்திற்குச் சாதன மென்பதே பொருந்தாது.

நவக்ஷுஷா வஶ்யதிநா விவாவா । யதோ வாவொ நிவத்தெ। யந்நஸா நதேநதே (கண்ணாலும் பார்ப்பதில்லை, வாக்காலும் சொல்லுவதில்லை. எதை வாக்கினால் சொல்ல முடியாதோ. எதை மனத்தால் எட்டமுடியாதோ) என்

னுந் தொடக்கத்துச் சுருதிகளால் பிரஹ்மத்தினிடத்து, வேதாந்த சிரவணத்தினும் வேறான கண், வாக்கு, மனது முதலியவற்றிற்கு விஷயமாகாமை கூறப்பட்டிருக்கின்றது. இதனால் பிரஹ்மஞானத்தில் பிரத்தியட்ச முதலியவைகளும் சாதனங்களாகாவாகையால் அந்தப் பிரத்தியட்ச முதலியவைகளை நிவர்த்கும் பொருட்டும் அவ்வேதாந்த சிரவணத்தில் நியமவிதி யுண்டாகுமெனலும் பொருந்தாது. ஆகையால் வேதாந்த சிரவணத்தில் எவ்வாற்றானும் நியமவிதியைக் கூறுதல் அசங்கதம். மேற்கூறியபடி அன்னிய சாதனங்களில்லாமையால், அவற்றினிவர்த்தியின் பொருட்டு அவ்வேதாந்த சிரவணத்தில் பரிசங்கியா விதியும் பொருந்தாது.

சமாதானம்:—வேதாந்த சாஸ்திரத்தினும் வேறான புராணமுதலியவைகட்குச் சுவதந்திரமாகப் பிரஹ்சாட்சாத்காரத்தின் சாதனத்தன்மை இன்றாயினும்; வேதாந்த சாஸ்திரத்தின் சிரவணத்தைப்போல புராணாதிகளின் சிரவணமும் சுவதந்திரமாகப் பிரஹ்மசாட்சாத்காரத்திற்குச் சாதனமாமென்னும் பிராந்தியால், அப்புராணாதிகளின் சிரவணத்திற்கும் பிரஹ்மஞானத்தில் சுவதந்திர சாதனத்தன்மை நேரிடுங்காலத்து; அதை நீக்கும் பொருட்டு அவ்வேதாந்த சிரவணத்தினிடத்து நியமவிதியும் பரிசங்கியாவிதியும் அங்கீகரிக்கப்படுமெனப் பொருந்தும். அல்லது பிரஹ்மவேத்தா குருவானன்றி சுவதந்திரமாகத் தனது மதியால் வேதாந்த விசாரஞ் செய்தலை நிவர்த்திக்கும்பொருட்டு அச்சிரவணத்தினிடத்து நியமவிதி அல்லது பரிசங்கியாவிதி அங்கீகாரமாம். அதாவது குருவினானன்றிச் சுவதந்திரமாகக் கேவலம் தனது மதியால் வேதாந்த சாஸ்திரஞ் செய்தல்கூடாது. இவ்வார்த்தை முதியோருங் கூறியிருக்கின்றனர். சுலோகம். நியமஃ பரிஸம்க்யா வா விதியர்த்தோ ஹி பவேத்யதஃ। அநாத்மதர்சநேநைவ பராத்மாநமுபாஸ்மஹே (இ - ள்) எக்காரணத்தால் சுரோதவ்ய: (சிரவணஞ்செய்க) என்னும் விதிக்கு நியமமாவது பரிசங்கியையாவது பொருளாமோ, அக்காரணத்தால் நாம் அநான்மவஸ்துக்களின் சிந்தனையை விட்டுக் கேவலம் பரமான்மாவையே சிந்திப்போமாக.

## சிரவணம் நித்தியமுதலிய கருமங்களன்றெனல்.

சங்கை:—'சிரவணஞ்செய்க' என்னும்விதி வேதாந்த சிரவணத்தை விதிக்கின்றதென்று முன் உம்மால் கூறப்பட்டது. ஆனால் சுருதி ஸ்மிருதிகளில் காமியம், நித்தியம், நைமித்திகம், பிராயச்சித்தம் என்னும் நால்வகைக் கருமங்களே விதிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் அச்சிரவணம் காமிய கருமமா? நித்திய கருமமா? நைமித்திக கருமமா? அல்லது, பிராயச்சித்த கருமமா? முதற்காமிய பட்சமங்கீகரிக்கின், அது பொருந்தாது. ஏனெனின், ஸ்வர்க்காமோ யஜேத (சுவர்க்கத்தை விரும்புவோன் வேள்வி செய்க) என்னும் வசனத்தால் எங்ஙனம் சுவர்க்கமாகிய பயனை உத்தேசித்து வேள்வி விதிக்கப்பட்டதோ அங்ஙனம் ஒரு பயனை உத்தேசித்து அச்சிரவணம் விதிக்கப்படவில்லை.

எங்ஙனம் இராத்திரிசத்ரமென்னும் வேள்வியை விதிக்கும்வாக்கியத்தாற் பயன் கேட்கப்படாவிடினும், பிரஹ்மஞானத்தின்கண் புருடனுக்கு முயற்சி

யை யுண்டாக்கும் பொருட்டு அவ்வேள்விக்குப் பயன் கற்பிக்கப்படுகின்றதோ அங்ஙனமே அச்சிரவணத்திற்கும் பிரஹ்மஞானமாகிய பயன் நம்மால் கற்பிக்கப்படுகின்றது, என்று கூறின்; அக்கூற்று பொருந்தாது. ஏனெனின், கிருகஸ்தர் முதலியோரிடத்து பிரஹ்மஞானமாகிய பயனையடையும் விருப்பமே சம்பவியாது; பின்னையோ அவர்களிடத்து பிரஹ்மஞானத்தின் வெறுப்பே காணப்படுகின்றது. இக்காரணம்பற்றியே ஈவிவ்ருநா வநெ ஶ-ஒநெ ர ஶ்ரு ரமாயஙம் ஸஜ்வதி । நதா நிவிஷயம் மோக்ஷம் கதாவிஷவி மெளதம (இ-ள்) கெளதமரே! இராகமுள்ளவன் சூனிய பிருந்தாவனத்தில் நரியாய்க்கிடக்க விச்சிக்கின்றான். நிர்விஷயமான மோட்சத்தை அவன் ஒருபோதும் விரும்புவதில்லை, என்னும் சுலோகம் இராகிகளின் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கின்றது.

அல்லது வெஷா நிமம் லொகம் மமாஂவ வஸித ர ஜ ர ாதாந மநிவெஷக (வேதம், இவ்வுலகம் ஆகிய விருபொருள்களையுந் தள்ளி ஆன்மாவை விரும்புக) என்னுந் தொடக்கத்துச் சுருதிகளால் நான்கு சாதனங்கள் நிறைந்த ஜிஞ்ஞாசு சந்நியாசிக்கே ஆன்மஞானப் பிராப்தியின் பொருட்டு கர்த்தவ்யத்தன்மை நிச்சயமாகின்றது. ஆகையால் கிருகஸ்தர் முதலியோருக்கு அச்சிரவண முதலியவற்றின்கண் அதிகாரமேயில்லை. சந்நியாசிகளுக்கே அச்சிரவணம் காமியகருமமாகுமெனின்; அதுவும் பொருந்தாது. ஏனெனின், ஒருகால் அச்சந்நியாசிக்கு அச்சிரவணம் காமியகருமமாயின், அக்கருமத்தைச் செய்யாததால் பிரத்தியவாயம் (பாபம்) உண்டாகாது. ஆகையால் அச்சிரவணத்தைச் செய்யாததால் அச்சந்நியாசிக்குப் பிரத்தியவாயத்தின் பிராப்தி உண்டாகாதாக வேண்டும். ஆனால் வேதாந்த சிரவணத்தை விடுவதனால் சந்நியாசிக்குப் பிரத்தியவாயத்தின் பிராப்தி சுருதி ஸ்மிருதிகளிற் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் சந்நியாசிக்கு அச்சிரவணம் காமியகருமமெனல் பொருந்தாது.

சிரவணம் நித்தியகருமமாம் என்னும் இரண்டாவது பட்சத்தை யங்கீகரிக்கின், அதுவும் பொருந்தாது. ஏனெனின், யாவஜ்ஜீவ மமி ஹொத்ரம் ஜுஹுயாத் (ஜீவனகாலவரையிலும் அக்கினிஹோத்திரஞ் செய்க) என்னும் வசனத்தால் எங்ஙனம் கிருகஸ்தனுக்கு ஜீவனகாலம் வரையிலும் அக்கினிஹோத்திரமாகிய நித்தியகருமம் விதிக்கப்படுகின்றதோ, அங்ஙனம் இவ்வதிகாரிக்கு ஜீவனகால வரையிலும் அச்சிரவணம் ஓர் வசனத்தால் விதிக்கப்படவில்லை. ஆகையால் அச்சிரவணத்தின்கண் நித்திய கருமத்தன்மையும் பொருந்தாது.

சிரவணம் நைமித்திக கருமமாம், என்னும் மூன்றாவது பட்சத்தை யங்கீகரிக்கின், அதுவும் பொருந்தாது. ஏனெனின், எங்ஙனம் அக்கினிஹோத்திரஞ் செய்பவனது வீடு தகிக்கப்படுங்கால், அந்நிமித்தத்தை மேற்கொண்டு வேதம் வேள்வியை விதிக்கின்றதோ, அங்ஙனம் ஈண்டு ஓர் நிமித்திமுங்கூறப்படவில்லை. ஆகையால் எந்நிமித்தத்தை மேற்கொண்டு அச்சிரவணம்நைமித்தகருமமாகும்?

சிரவணம் பிராயச்சித்தகருமமாம், என்னும் நான்காவது பட்சத்தையங்கீகரிக்கின், அதுவும் பொருந்தாது. ஏனெனின், தஸ்தீ ஷுஹுமஹத்ராம் யொக

ஹூ௯யெ௩ யஜதெ (எவன் அஸ்வமேதத்தைச் செய்கின்ருனே, அவன் பிரம்ம ஹத்தியைக் கடக்கின்ருன்) என்னும் வசனத்தால் எங்ஙனம் பிரம்மஹத்தியா கிய பாபநிவர்த்தியின் பொருட்டு, அஸ்வமேதமாகிய பிராயச்சித்தம் விதிக்கப் பட்டிருக்கின்றதோ, அங்ஙனம் ஓர் சுருதிவசனத்தாலும் யாதாமோர்பாப நிவ ர்த்தியின் பொருட்டு அச்சிரவணம் விதிக்கப்படவில்லை. ஆகையால் அச்சிரவணம் பிராயச்சித்தமெனலும் பொருந்தாது. இதனுல் ஒருவகையானும் வேதாந்த சிர வணத்தில விதிசம்பவியாது.

## துறவிக்குச்சிரவணம் நித்தியகருமமும் இல்லறத்தாருக்குக் காமியகருமமுமெனல்.

சமாதானம்:—விவிதிஷா சந்நியாசிக்கு அச்சிரவணம் நித்தியகருமமும், கிருகஸ்தர் முதலியோருக்குக் காமியகருமமுமாம். கிருகஸ்தனுக்கு அக்கினி ஹோத்திரம் சந்தியோபாசனை முதலிய நித்தியகருமங்களைச் செய்யாவிட்டால் பிரத்தியவாய முண்டாகுமென்று சுருதி ஸ்மிருதிகள் கூறியிருக்கின்றன. யாவ ஜீவ ௯ஹ்நிஹொத்ரம் ஜுஹுயாத் (ஜீவனகாலவரையிலும் அக்கினிஹோத்திரஞ் செய்க) என்னுந்தொடக்கத்துச் சுருதிகளும் பிழைத்துள்ள வரைக்கும் அக் கினிஹோத்திரமுதலிய நித்தியகருமங்களை விதித்திருக்கின்றன. அதுபோலவே விவிதிஷா சந்நியாசிக்கும் வேதாந்தசிரவண முதலியவற்றைச் செய்யாவிட்டால் பிரத்தியவாயத்தின் பிராப்தியும், ஜீவிதகாலம் வரையிலும் அவைகளைச்செய்ய வேண்டு மென்பதையும் சுருதி ஸ்மிருதிகள் கூறியிருக்கின்றன. கிருகஸ்தனுக்கு அவ்வக்கினிஹோத்திர சந்தியோபாசனைகள் எவ்வாறு நித்தியகருமங்களாகி ன்றனவோ, அவ்வாறு விவிதிஷா சந்நியாசிக்கும் அவ்வேதாந்தசிரவண முதலி யன நித்தியகருமமாம். சுருதி. ஊரூநூவாந ப்ரீநூயா வ்ருகெஹ்ய: ப்ராயச்சம் (இ-ள்.) இந்திரனுகிய நான் வேதாந்தவிசாரமில்லாத யதிகளைக்கொன்று செந் நாய்களுக்குக் இரையாய்க் கொடுத்தேன். இச்சுருதியின் பொருளை ஆன்ம புராணம் இரண்டாவது அத்தியாயம் இந்திரப் பிரதர்தன சம்வாதத்தில் விரி வாய்க்கூறியிருக்கின்ருேம். ஸ்மிருதி. ஙிதம் ஊூ வசித ஜ்ஜ் வெடாஜ்ஷ்ரவ ணம் விநா। வத்ரூ ஊநஹூ ஷந பாவீ வதநெ பவந ஸம்ஶய: (இ-ள்.) அக் கினிஹோத்திரம் சந்தியோபாசனை முதலிய நித்தியகருமங்களை விட்டு எந்த விவிதிஷா சந்நியாசி வேதாந்தசிரவண முதலியவற்றைச் செய்யாமல் இருக்கி ன்ருனே. அவன் பதிதனே; இதற்கு ஐயமில்லை. இவைமுதலிய சுருதி ஸ்மிருதி கள் விவிதிஷா சந்நியாசிக்கு வேதாந்தசிரவணஞ் செய்யாமையாற் பிரத்தியவா யமுண்டாகுமென்று கூறியிருக்கின்றன. ஆஸுவெ ராஸ்தெ: காலம் நயெ வெடாஜ விஜயா। ஊஃ ப்ராநூவ ஸாம் கிஂஷிஜாரா ஶநாம ஊநாமவி (இ-ள்.) இவ் விவிதிஷா சந்நியாசி ஜாக்கிரமுதல் சுழுத்திவரையிலும், பிரஹ்மவேத்தா குரு வின் சமீபத்திற் சென்றதுமுதல் மரணம்வரையிலும், வேதாந்தசாஸ்திர சிந்த னையால் காலங்கழித்தல் வேண்டும்; காமம் குரோதமுதலிய விகாரங்கள் நேரச் சிறிதளவும் இடந்தரலாகாது. இந்த ஸ்மிருதியாலும், இந்த ஸ்மிருதியை மூல மாகவுடைய சுருதியாலும் விவிதிஷா சந்நியாசிக்கு ஜீவிதகாலபரியந்தம் வேதா

ந்த சாஸ்திரத்தின் சிரவணமுதலியவை கர்த்தவ்யமென விதிக்கப்பட்டிருக்கின்றது.

மேற்கூறிய சுருதி ஸ்மிருதிகளின் வலியால் துறவிகளுக்கு அச்சிரவணம் நித்திய கருமமெனல் கேவலம் நாம்மாத்திர மங்கீகரிப்பதன்றி பூர்வ ஆசாரியர்களும் அங்கீகரித்திருக்கின்றனர். சுலோகம். க்ஷம வதாயஞ் விவெகாய ஸந்ந்யா ஸஃ ஸவஞ் கஃஞணாழ । ஶ்ராதந்யாஹி ஶ்யதெ யஹூாத்தந்யாமீ வதிதொ ஹ வெக (இ-ள்.) தத்துவமசி என்னும் மகாவாக்கியத்திலுள்ள துவம்பதத்தின் வாச்சியார்த்தம் அந்தக்கரண விசிஷ்டசைதன்யமாம். அதன்கண்ணுள்ள அந்தக்கரணத்தை விட்டு இலட்சியார்த்தமாகிய பிரத்தியக்சைதன்யம் எதுவோ, அதைப்பிரஹ்மவடிவாக உணர்தல் துவம்பதார்த்த விவேகமாம். அதைக்கருதியே சுருதிகள் அக்கினிஹோத்திரம் சந்தியோபாசனை முதலிய சர்வகருமங்களின் சந்நியாசத்தை விதித்திருக்கின்றன. எவன் துறவுபூண்டும் அத்துவம்பதார்த்த விவேகத்தைச் செய்யாமல் இருக்கின்றானோ, அவன் பதிதனாகின்றான்—இங்ஙனம் வார்த்திகக்காரரான ஸ்ரீசுரேஸ்வாரசாரியர் சிரவணாதிகளில்லாத சந்நியாசியைப் பதிதனென்று கூறியிருக்கின்றனர். இவ்வாறே சர்வஞ்ஞமகாமுனிவரும்சங்க்ஷேபசாரீரகமென்னும் நூலின்கண் கூறியிருக்கின்றனர். சுலோகம். காமஸ்ய காமெந தக்ஷணாத்ஹீ க்ஷாரெஷ வதிதொ ஹவெத்யா । வ்ரஜ ஸவ்ய வஸிவஜஞாதயா ஸத்ய வவ வதிதொ ஹவெதவஸ (இ-ள்) எப்படி சந்நியாசி எக்ஞமுதலிய கருமங்களைச்செய்வதால் உடனே பதிதனாகின்றானோ, அப்படி வேதாந்தசாஸ்திர சிரவணமுதலியவைகளைச் செய்யாமையாலும் அவன் உடனே பதிதனாகின்றான்—இதனால் விவிதிஷா சந்நியாசிக்கு அவ்வேதாந்த சிரவணம் நித்தியகருமமாவதால், அதன்கண் சுரோதவ்ய (சிரவணஞ்செய்க) என்றுகூறிய நித்தியவிதி பொருந்துமெனல் பெற்றாம்.

கிருகஸ்தர் முதலியோருக்கு வேதாந்த சிரவணமுதலியன காமியகருமமாம். ஆண்டு எக்கருமத்தைச்செய்தலாற் பயனுண்டாமோ; செய்யாவிட்டால் பாபமுண்டாகாதோ, அக்கருமத்தைக் காமியகருமமென்பர். எவனுக்கு சுவர்க்கத்தையடைய விருப்பமுண்டோ, அவன் ஜோதிஷ்டோம வேள்வியைச்செய்கின்றான்; அதனால் அவனுக்குச் சுவர்க்கபயன் பிராப்தமாம். எவனுக்கு அச்சொர்க்கத்தையடைய விருப்பமில்லையோ, அவன் அவ்வேள்வியைச் செய்வதில்லை; அதனால் அவனுக்கு ஓர் பாபமுண்டாகாது. இதனால் ஜோதிஷ்டோம மென்னும் வேள்விகாமியகருமமெனப்படும். எந்த கிருகஸ்தனுக்குப் பிரஹ்மஞான விருப்பமுண்டோ, அவன் வேதாந்தசிரவணாதிகளைச் செய்கின்றான்; அதனால் அவனுக்கு பிரஹ்மஞான முண்டாகின்றது. எந்த கிருகஸ்தனுக்குப் பிரஹ்மஞான விருப்பமில்லையோ, அவன் சிரவணாதிகளைச்செய்வதில்லை; அதனால் அவனுக்கு ஓர் பாபமுண்டாகாது. இதனால் இல்லறத்தார் முதலியோருக்கு அச்சிரவணாதிகள் காமியகருமமாமெனவும் பெற்றாம்.

சங்கை:—விவேகமுதலிய நான்கு சாதனங்கள் நிறைந்தவனுக்கே பிரஹ்மஜிஞ்ஞாசையுண்டாம். பிரஹ்மத்தையறியும் வேட்கை பிரஹ்மஜிஞ்ஞாசையென

ப்படும். இல்லறத்தாரிடத்து அச்சாதனங்கள் நிகழா, ஆகையால்பிரஹ்ம ஜிஞ் ஞாசையில்லாமையால் அவர்கட்கு அச்சிரவணம் காமியகருமமெனல் பொருந் தாது.

சமாதானம்:—மிகுந்த வெளிநாட்டமுள்ள வில்லறத்தாருக்கு, அச்சாதன சம்பத்தியில்லாமையால் பிரஹ்மஜிஞ்ஞாசை நிகழாதாயினும், பரமேசுரனல் அனுக்கிரகிக்கப்பட்டவரும், பலேச்சையின்றி நித்தியநைமித்தக கருமங்களைச் செய்தலால் சுத்தாந்தக்கரண முடையவரும், குருஈசுரர்களிடத்து சிரத்தாபக் தியுடையவருமான சில உத்தமவில்லறத்தாருக்கு, அச்சாதன சம்பத்தியால் பிரஹ்மஜிஞ்ஞாசை நிகழும். யாதாமொரு பிரதிபந்த வசத்தால் அவர்களுக்குத் துறவாச்சிரமங் கிடைக்காவிடினும், வேதாந்தசாஸ்திர சிரவணுதிகளில் அவர் களுக்கு முயற்சிநிகழும். அத்தகைய சாதனங்கள் நிறைந்த வில்லறத்தாருக்கே அச்சிரவணவிதி காமியவடிவமாம்.

ஒருகால் அவ்வில்லறத்தாருக்குப் பிரஹ்மஜிஞ்ஞாசை பூருவகமாகச் சிர வணுதிகளில் முயற்சி யங்கீகரியாவிடின், இல்லறவாச்சிரமத்தில் பிரஹ்ம சாட் சாத்காரமுதயமான தத்துவேத்தாக்களை நோக்கி ஜீவன் முத்தியின் பொருட் டுச் சுருதி ஸ்மிருதிகள் வித்வத்சந்நியாசத்தை விதித்தது வியர்த்தமாகும். விவி திஷா சந்நியாசத்தைப்பார்க்கிலும் வேருக வித்வத்சந்நியாசமென்பதொன்றி ல்லையெனக்கூறின்; அக்கூற்று பொருந்தாது. ஏனெனின், முன்னே சுருதி ஸ்மி ருதிகளின் வலிவால் வித்வத்சந்நியாசம் விவிதிஷாசந்நியாசத்தினும் வெறெ னக்கூறினும். அல்லாமலும் அதிகாரி, பயன், சாதனம் என்னும் மூன்றின்வேற் றுமையாலும் அவ்வித்வத் சந்நியாசம், விவிதிஷா சந்நியாசத்தினும் வேருகவே பெறப்படும். விவிதிஷாசந்நியாசத்திற்கு ஜிஞ்ஞாசு அதிகாரியாவன். வித்வத் சந்நியாசத்திற்கு தத்துவமுணர்ந்தோன் அதிகாரியாவன். விவிதிஷா சந்நியாச த்திற்குத் தத்துவஞானம் பயனும். வித்வத் சந்நியாசத்திற்கு ஜீவன்முத்தி பயனும். விவிதிஷா சந்நியாசி தத்துவஞானமாகிய பயனைக்கருதி சிரவணுதிசாத னங்களையநுஷ்டிக்கின்றுன். வித்வத்சந்நியாசி ஜீவன் முத்தியாகிய பயனைக்கருதி மனோநாசவாசனக்ஷய முதலிய சாதனங்களை யநுஷ்டிக்கின்றுன். இவ்வாறு அதிகாரி, பயன், சாதனம் என்னும் மூன்றுகளின் பேதத்தால் வித்வத்சந்நியா சத்தை விவிதிஷாசந்நியாசத்தினும் வேருகவே வங்கிகரிக்கவேண்டும். அவ்வில் லறத்தாருக்கு வேதாந்த சிரவணத்தில் அதிகாரமும், அச்சிரவணத்தால் பிர ஹ்மஞானப்பிராப்தியும் அங்கிகரிக்குங்கால் அவ்வித்வத்சந்நியாசம் சார்த்தக மேயாகின்றது. அவர்களுக்கு அவ்வேதாந்த சிரவணம் காமிய கருமமாகு மென்று மேற்கூறிய பொருள் பொருந்தும்.

அன்றியும், அவ்விலத்தாருக்கு வேதாந்த சாஸ்திர சிரவணத்தாற் பெரும் புண்ணிய விளைவும் சாஸ்திரங்கள் கூறியிருக்கின்றன. சுலோகம். தினே தினே து வேதாந்த ச்ரவணாத்பக்தி ஸம்யுதாத். குருசுச்ரூஷயா லப்தாத் க்ருச்ராசீதிபலம் லபேத் (இ-ள்) தத்துவமுணர்ந்த குருவின் சேவையாற் பெற் றதும், குரு ஈசுரபத்தியுடன் கூடினதுமான ஒரோர்நாளுஞ் செய்யப்பட்ட

வேதாந்த சிரவணம் எதுவோ, அதனல் இவ்வதிகாரி என்பது கிருச்சிரபயனை யடைகின்றான். இங்குத்தாற்பரியமாவது:—வேதாந்த சிரவணமுதலியவற்றைச் செய்யாததால் இல்லறத்தாருக்கு பாபமுண்டாகாது, எனினும், ஆன்மஞான மில்லாதவருக்குப் பெருங்கேடுண்டாருமென்று சுருதி ஸ்மிருதிகள் கூறியிருக்கின்றன, அதனல் அவர்களும் வேதாந்த சிரவணஞ்செய்து ஆன்மஞானத்தை யவசியஞ்சம்பாதிக்கவேண்டும் என்பதாம். சுருதி. நவெதி ஹாவெ ஜிஉ௱ஹதீ விநஷ்டிஃ (இ-ள்.) அதிகாரிமாநுட சரீரத்தைப்பெற்றும் எப்போது ஆன்மாவை அறிகிறதில்லையோ, அப்போதே இவனுக்குமகா ஆனியுண்டாகின்றது. வேறு சுருதி. யொவா வஏத஡க்ஷரம் மாமு௵ விஜிக்வா உ ஹூாஸெ்ளா காவெ௃ஸ ஸக்ரு வணஃ। ஈயய வஏத஡க்ஷரம் மாமி௵ விஜிக்வா ஃ ஹூாஸெ்ளாகா வெ௃ஸ ஸ௃ ப்ராஹணஃ (இ-ள்.) கார்க்கியே! எவன் இந்த நாசமற்ற பரமான்மாவை உணராமல் இவ்வுலகத்தினின்றும் வேறுலகத்திற்குப் போகின்றானே, அந்த அஞ்ஞானியைக் கிருபணனென்றறிதி. இதனல், எவ்வாறு உலகத்தில் தானடைந்துள்ள தனத்தையனுபவிக்காமலிப்பவன் கிருபணனேயாவனே, அவ்வாறே எப்போதும் அடைந்துள்ள ஆன்மதனத்தின் சாட்சாத்காரமாகிய வநுபவமின்றியிருக்கும் அஞ்ஞானியும் கிருபணனேயாவன், என்பது தாற்பரியாம். எவன் இந்தநாசமற்ற பரமான்மாவைச் சாட்சாத்கரித்து இச்சரீரத்தினின்றும் மரணமடைவானே, அத்தத்துவவேத்தாவைப் பிராம்மணனென்றறிதி. இன்னுமொரு சுருதி. யொஹவாஸ௱ா ஸ்ெளாகாஸ௃ ஸொகஉ ஜூஷ்டா வெ௃ஸ ஏத ஜவிஜி தொஃந ஹூநக்தி (இ-ள்.) எவன் இவ்வான்ம உலகை நான்பிரஹ்மமென்றறியாமல் இத்தூலசரீரமாகிய உலகினின்றும் மரணத்தையடைகின்றானே, அந்த அஞ்ஞானி அவ்வான்ம உலகத்தை யறியாததால், அவனைச்சோகம் மோகமுதலிய தோஷங்களினின்றுந் தவிர்த்து காக்கப்படுவதில்லை. ஸ்மிருதி கூந௵ா ஸஹோஃநஂ யொஃந௵ா ஸ௃தி வஃ௵தெ। கிஂதெந நக௵ஂ வாவஂ வெளரெணாத்தா வஹாரிணா (இ-ள்.) அகர்த்தாவாயும் அபோக்தாவாயுமுள்ள ஆன்மாவைக்கர்த்தாவாயும் போக்தாவாயும் எவன் மதிக்கின்றானே, அந்த ஆன்ம அபகாரியான கள்வன் என்னபாபகருமத்தைச் செய்யாதவன்? ஆனல் எல்லாபாபகருமங்களையுஞ் செய்தவனேயாவன். இத்தொடக்கத்துப்பல சுருதி ஸ்மிருதிகள் ஆன்மஞான மில்லாதவர்களை நிந்தித்திருக்கின்றன. ஆகையால் இல்லறத்தாரும் சிரவணதிகளைச்செய்து அவ்வான்மஞானத்தை அவசியம் சம்பாதிக்கவேண்டும்.

## துறவிகட்கசே சிரவணத்தி லதிகாரமேன்னு சிலர் அபிப்பிராயங்கூறுதல்.

இங்குச்சில ஆசாரியர்கள், விவேகமுதலிய சதுட்டசாதனங்கள் நிறைந்த துறவிகளுக்கே வேதாந்தசாஸ்திர சிரவணதிகளில் அதிகாரமுண்டு; இல்லறத்தாருக்கு அவற்றில் அதிகாரமில்லையென்றும், சுருதிகளில் யாங்கியவர்க்கியர் ஜனகர் முதலியோரது தத்துவஞானத்தை யுரைக்கும், சரிதங்கட்குப் பிரஹ்

மான்மாவை யுணர்த்துதலே தாற்பரியமன்றி வேறன்று என்றும் கூறுகின்றனர். இவர்கள் அபிப்பிராயமாவது:—சுருதிகளும் ஆசாரியர்களும் துறவாச்சிரமத்தையே சிரவணத்திற்கு அங்கமாகக் கூறியிருக்கின்றனர், அங்கத்தானன்றி அங்கி சித்தியாது, ஆகையால் சாதனங்கள் நிறைந்த துறவிகளுக்கே சிரவணத்தின்கண் அதிகாரமுண்டு; இல்லறத்தாருக்கில்லை. ப்ரஹ்ம ஸம்ஸ்தோऽம்ருதத்வமேதி (இ-ள்.) இலௌகிக வைதிகமாகிய வெல்லாவியாபாரங்களைவிட்டுக் கேவலம் பிரஹ்ம சிந்தனத்தின்கண் ணொருப்பாட்டுடையவன் பிரஹ்ம சம்ஸ்தனும். அத்தகையபிரஹ்ம சம்ஸ்ததுறவியே மோட்சத்தைப்பெறுவான். இச்சுருதியின் வியாக்கியானத்தில் ஸ்ரீபாஷியக்காரர் துறவிகளுக்கே பிரஹ்ம நிஷ்டையின்கண் அதிகாரமுண்டெனத் துணிவு செய்திருக்கின்றனர். வார்த்திகக்காரரான ஸ்ரீசுரேஸ்வராசாரியரும் தத்ராத்ர ஸேஷகிர்யஸ்யைவ ஸம்ஸாரம் ப்ரஜிஹாஸத: । ஜிஜ்ஞாஸோ ரேவவேதாந்தாரம்பஸ்தேஷ்வயி காரிதா (இ-ள்.) சர்வ இலௌகிக வைதிகக்கிரியைகளைத் தியாகஞ்செய்தவனும், குடும்பமுழுவதும் துன்பவடிவமென்றுணர்ந்து, அதைவிட இச்சித்தவனுமான ஜிஞ்ஞாசிக்கே வேதாந்தசாஸ்திர சிரவணத்தில் அதிகாரமும், அச்சிரவணமுதலியவற்றால் ஆன்மஞானமும் பிராப்தமாம்—என்னும் வசனத்தால் அத்துறவிகளுக்கே சிரவணத்தின்கண் அதிகாரமாமெனத் துணிந்திருக்கின்றனர். மேலும் கர்ம: ஸந்ந்யஸ்ய கர்மாணி ஸர்வாணி ப்ராஜ்ஞா விஹேயத: । ஹித்வாऽவித்யாம் விதேயாத்விஷ்ணோ: பரம் பதம் ॥ வேதாநுக்தம் லோக கர்மாணி ச பரித்யஜ்ய ஆத்மாநமிச்ச (இ-ள்.) அதிகாரி சர்வகருமங்களையுந்துறந்து ஆன்ம ஞானத்தால் அவித்தையை விலக்கி அவ்வான்ம ஞானத்தானே மோட்சமாகிய விஷ்ணுவின் பரமபதத்தையடைகின்றான். வேதமானது பிரதிபாதித்துள்ள அக்கினிஹோத்திர முதலிய கருமங்களையும், இவ்வுலகபரலோகங்களையும் பரித்தியாகஞ்செய்து நீ ஆன்மாவையடைய விரும்புதி, அதாவது ஆன்மஞானத்தின் பொருட்டுச் சிரவணாதிகளைச்செய்க, என்னுந்தொடக்கத்து சுருதிகளாலும் அத்துறவிகளுக்கே சிரவணாதிகளின்கண் அதிகாரமுண்டெனத் துணியப்படுகின்றது. ஆகையால் துறவிகளுக்கு அச்சிரவணம் நித்தியகருமமும், இல்லறத்தாருக்கு அது காமியகருமமுமாம் என்று முற்கூறிய வேற்றுமைபொருந்தாது. ஆனால், எங்ஙனம் இல்லறத்தாருக்கு அக்கினிஹோத்திர முதலியன நித்தியகருமமும் காமியகருமமுமாகின்றனவோ, அங்ஙனமே துறவிகளுக்கு அச்சிரவண முதலியன நித்தியகருமமும் காமியகருமமுமாகும் எனக்கொண்டால் மேற்கூறிய ஆசாரியவசனங்கட்கும் சுருதி வசனங்கட்கும் விரோதமுண்டாகாது.

## பரவைராக்கியங் கூறுதல்.

முன்னே அபரம், பரம் என்னும் வேறுபாட்டால் வைராக்கியம் இருவகைத்தெனக் கூறப்பட்டது. அவ்வைராக்கியத்தின் ஏற்றக்குறைவால் துறவுகளின் பேதத்தைக் கூறுந்தொடர்ச்சியில் சிரவணாதிகளில் விதி விரிவாயாராயப்பட்டது. இனி முறையாக வடையப்பட்ட பரவைராக்கியம் கூறப்படும்.

குணேஷுவைத்ருஷ்ண்யம் பரவைராக்யம் (இ-ள்.) சத்வ, ரஜ, தமமென்னுமுக்குணங்களின் பரிணாமவடிவான இவ்வுலக பரலோக விஷயங்களனைத்திலும் அவாவற்றிருத்தல் பரவைராக்கியமாம். இதன் சொரூபம் பதஞ்சலிபகவானும் யோகசாஸ்திரத்திற் கூறியிருக்கின்றனர். ஆண்டுச் சூத்திரம். தத்பரம் புருஷக்யாதேர்குணவைத்ருஷ்ண்யம் (இ-ள்.) பிரத்தியகான்ம ஞானத்தால், ஒருவனுக்குக் குணங்களின் பரிணாமமான விஷயங்களிலெல்லாம் அவாவற்றிருத்தல்யாதோ அது பரவைராக்கியமாம். இப்பரவைராக்கியமே நிர்விகற்பகமெனப்பெயரிய அசம்பிரஞ்ஞாதசமாதிக்கு அந்தரங்க சாதனமாகின்றது. இவ்வார்த்தையும் அப்பதஞ்சலிபகவானே கூறியிருக்கின்றனர். ஆண்டுச் சூத்திரம். தீவ்ரஸம்வேகாநாமாஸந்ந: ஸமாதிலாப: (இ-ள்.) பரவைராக்கியமுடையவனுக்கு அசம்பிரஞ்ஞாதசமாதி விரைவிலேகைக்கூடும்.

முன்னே தாற்பரியங் கூறுந்தொடர்ச்சியில் சிரவணாதிகள் நிரூபிக்கப்பட்டன. இனி அவைகட்கு இங்கானபொருள் நிரூபிக்கப்படுகின்றது. மேற்கூறிய உபக்கிரம உபசங்காரமுதலிய ஆறு இலிங்கங்களால் எங்ஙனம் வேதாந்த வாக்கியங்களின் தாற்பரியம் நிர்ணயிக்கப்படுகின்றதோ, அங்ஙனமே கருமகாண்ட வாக்கியங்கட்கும் அவ்வறுவகை இலிங்கங்களானே தாற்பரியம் நிர்ணயிக்கப்படுகின்றது. இவ்வாறான தாற்பரியம் நிகழாமையாதோ அதுவே மேற்கூறிய இலக்கணைக்குப் பீஜமாம். இங்ஙனம் அவ்விலட்சணையை நிரூபித்த விடத்துக் கூறினும்.

## இலக்கணைக்குப் பீஜமின்னதெனல்.

சங்கை:—ஒருபதார்த்தத்திற்கு மற்றொருபதார்த்தத்தின்கண்ணுள்ள சம்பந்தம் அந்வய (கொண்டுகூட்டு) மாம். அவ்வந்வய அநுபபத்தி (நிகழாமை) எதுவோ அதுவே இலக்கணைக்குப் பீஜமாம். 'கங்கையின்கணிடைச்சேரி' எனக்கூறிய உதாரணத்தின்கண்ணுள்ள கங்கையென்னும் பதத்திற்குச் சக்கியார்த்தமாகிய ஜலப்பிரவாகத்தினிடத்து இடைச்சேரியின் ஆதாரத்தன்மைச் சம்பந்தமாகிய அந்வயம் பொருந்தாமையால் எங்ஙனம் அப்பதத்திற்குக் கரையின்கண் இலக்கணை கொள்ளப்படுகின்றதோ, அங்ஙனமே எங்கும் அவ்வந்வயாநுபபத்தியாற்றான் இலக்கணை சம்பவிக்கின்றமையால் அதனையே அவ்விலக்கணைக்குப் பீஜமாகக் கோடல் வேண்டும்.

சமாதானம்:—ஓர்கால் எல்லாவிடங்களிலும் அவ்வந்வயாநுபபத்தியே இலக்கணைக்குப் பீஜமெனக் கொள்ளின், தண்டந்தாங்கிய வொருவனைப் புசிப்பிக்கவேண்டி ஓராத்தன் 'தண்டத்தை உள்ளேவிடுக' எனக் கூறினனாக: அதைக்கேட்ட ஒருவன் தண்டமென்னும் பதத்திற்குத் தண்டந் தாங்கியவனிடத்து இலக்கணையைக் கொண்டான், அது உண்டாதல் கூடாது. ஏனெனின் புருடனுக்கு, உள்ளே பிரவேசிக்குந்தொழிலிற் சம்பந்தமாகிய அந்வயமுண்டாதல்போல்,கட்டையாகிய தண்டத்திற்கும் அத்தொழிலின்கண் அந்வயமுண்டாகுமாகையால் ஆண்டு அவ்வந்வயாநுபபத்தியாகிய விலக்கணையின் பீஜம் பொருந்தாது. ஆனல் தாற்பரியாநுபபத்தியாகிய விலக்கணையின் பீஜமே ஆண்டுப் பொருந்தும் மேலும் 'கங்கையின்கணிடைச்சேரி' என்றல் முதலிய மேற்கூறிய

இலக்கணையின் உதாரணங்களனைத்திற்கும் அத்தாற்பரியாநுபபத்தியாகிய பீஜமே நிகழ்கின்றது. எங்கு முண்மையால் அத்தாற்பரியாநுபபத்தி இலக்கணைக்குப் பீஜமாமேயன்றி, பிறழ்ச்சிப்படுவதால் அவ்வந்யவாநுபபத்தி அதற்குப் பீஜமாகாது.

## வாக்கியங்களிலும் இலக்கணை கூறல்.

நையாயிகர் சக்திவிருத்தியைப்போன்று இலட்சணாவிருத்தியையும் கேவலம்பதத்தினிடத்தே யன்றி வாக்கியத்தினிடத்தன்றென் றங்கீகரிக்கின்றனர். அவர் மதத்தைக் கண்டித்தற்பொருட்டு அவ்வாக்கியத்தினிடத்தும் இலக்கணையுண்டெனக் கூறுதும். மேற்கூறிய விலக்கணை பதத்தினிடத்து மாத்திரமன்றி வாக்கியத்தினிடத்து முண்டு. அது, ஂஂஹீராயாஂநத்யாஂ வொஷஃ (ஆழமான நதியின்கண் இடைச்சேரியுளது) என்னும் பதக்கூட்டமாகிய வாக்கியத்திற்குக் கரையின்கண் இலக்கணை அங்கீகரிக்கப்படுதல் போலவாம். இக்காரணம் பற்றியே வேதத்தில் அர்த்தவாத வாக்கியங்களுக்குத் துதியின்கண் இலக்கணை அங்கிகரிக்கப்பட்டிருக்கின்றது. விதிவாக்கியத்தாற் பெறப்படும் பொருளின்துதியையுணர்த்தும் வாக்கியங்கள் அர்த்தவாதமும், குணியின்கண்ணுள்ள குணத்தைக் கூறுதல் துதியுமாம். ஒருகால் வாக்கியத்தினிடத்து இலக்கணையை யங்கிகரியாமல் பதத்தினிடத்து மாத்திரம் இலக்கணையை யங்கீகரிக்கின், அவ்வர்த்தவாத வாக்கியத்தினிடத்துள்ள ஒருபதத்தின் இலக்கணையானே அத்துதியாகிய பொருளினுணர்வுண்டாகுங் காலத்து மற்றபதங்கள் வியர்த்தமாகுமாகையால் பதக்கூட்டமாகிய வாக்கியத்திற்கே அத்துதியின்கண் இலக்கணையை யங்கீகரிக்கவேண்டும். அதுபற்றியே நூலாசிரியர்கள் அவ்வர்த்தவாத வாக்கியங்களுக்கு விதிவாக்கியத்தோடு பதைகவாக்கியதையை யங்கீகரித்திருக்கின்றனர். அவாய்நிலையின் வசத்தால் பதத்திற்கு விதிவாக்கியத்தோடுள்ள கொண்டுகூட்டைப் பதைகவாக்கியதை யென்பர் அவ்வர்த்தவாதவசனங்கள் பதங்களன்று. ஆனல், பதங்களின் தொகுதியானதால் வாக்கியமேயாம், எனினும், அவ்வர்த்தவாத வாக்கியங்கள் இலட்சணாவிருத்தியால் துதியாகியவொரு பதார்த்தத்தை யுணர்த்துவதால் அவற்றைப் பதஸ்தாநீய மென்பர். அங்ஙனமான பதவடிவான அர்த்தவாத வாக்கியங்களுக்கு விதிவாக்கியத்தோடுள்ள ஏகவாக்கியத்தன்மை யாதோ, அது பதைகவாக்கியதையாம். அதெங்ஙனமெனின்:—வாயவீயம் ஶ்வேதம் வஶூ ஊலஹெத (இ-ள்) வாயுவைத்தேவதையாயுடையதெதுவோ, அதற்கு (வேள்விக்கு) வெள்ளைப்பசுவைக்கொல்லுக—என்னும் விதிவாக்கியம் வாயுதேவதைச் சம்பந்தியான வேள்வியை விதிக்கின்றது. அதேபிரகரணத்தின்கண் வாயுவெவெ-ழிக்ஷெ விஷ்ா ஜெவதா (இ-ள்) அவ்வாயுதேவதை விரைவாகச் செல்லக்கூடியது—என்னும் அர்த்தவாத வாக்கியம் அவ்வாயுதேவதையைத் துதிக்கின்றது. இதனல் உடனே பயனை யளிக்கும் வாயுதேவதைச் சம்பந்தியான வேள்வியைப் புருஷன் செய்யக்கடவன் என்பதாம். இவ்வாறு பதவடிவான அர்த்தவாத வாக்கியத்திற்கு விதிவாக்கியத்தோடு ஒரு வாக்கியத்தன்மை இருக்கின்றது. இதுவே பதைகவாக்கியத்தன்மையாம்.

தத்தம் அர்த்தத்திற்றாற்பரியமுடைய வாக்கியங்களுக்கு ஒன்றுக்கொன்று அங்க அங்கிபாவ அவாய்நிலையின் வசத்தால் ஒரு வாக்கியத்தன்மையாக நிற்றல் எதுவோ அது வாக்கியைகவாக்கியதையாம். அதெங்ஙனமெனின்:— ஃஸ ஃ வ ஃ ஸோஹ்யாம் ஸுவ ஃ காமோ யஜேத (இ-ள்) சுவர்க்கம் விரும்புவோன் தரிசபூர்ணமாசமென்னும் வேள்விகளைச்செய்க—என்னும்விதிவாக்கியம் தரிசபூர்ணமாசமென்னும் அங்கியாகத்தையும், அதே பிரகரணத்தில் ஸமியோ யஜதி (சமித்துக்களால் தீயோம்புக) என்னும் வசனம் சமிதமென்னும் அங்கயாகத்தையும் விதிக்கின்றன. அங்கியாகத்திற்கு அங்கயாகத்தின் அபேட்சை அவசியமுண்டு. இதனல் சொர்க்ககாமன் சமிதமுதலிய அங்கயாகங்களுடன் கூடிய தரிசபூர்ணமாச மென்னும் அங்கியாகத்தைச் செய்யக் கடவன் என்பதாம். இவ்வாறு அங்கத்தை யுணர்த்தும் வாக்கியத்திற்கு அங்கியையுணர்த்தும் வாக்கியத்தோடுள்ள ஒரு வாக்கியத்தன்மை எதுவோ, அதுவே வாக்கியைகவாக்கியதையாம்.

மேற்கூறிய தாற்பரிய வுணர்வு எங்ஙனம் வாக்கியார்த்த உணர்விற்குக் காரணமாகின்றதோ, அங்ஙனமே அவாந்தரவாக்கியார்த்த உணர்வும் மகாவாக்கியார்த்த உணர்விற்குக் காரணமாம். அவ்வவாந்தர வாக்கியார்த்த உணர்வின்றி அம்மகாவாக்கியார்த்த உணர்வு நிகழாது. ஈண்டு மகாவாக்கியத்தின் ஆந்தரப் பிரவேசமுடைய வாக்கியங்கள் அவாந்தரவாக்கியங்களாம். இதனல் சக்தி இலக்கணையாகிய விருத்திகள், அவாய்நிலை, தகுதி, அண்மை, தாற்பரியம், அவாந்தரவாக்கியார்த்தம் ஆகிய மேற்கூறிய வெல்லாவற்றின் உணர்ச்சி அவ்வாக்கியத்திற்குச் சககாரி என்பது பெற்றாம். அச்சககாரி நிறைந்த வாக்கியங்களே பரோட்ச அபரோட்சப்பிரமைகளை நிகழ்த்துவனவாம். எவ்வாக்கியம் பரோட்சப்பொருளைக் கூறுகின்றதோ, அவ்வாக்கியம் பரோட்சப்பிரமையை நிகழ்த்துவதாம். எங்ஙனமெனின், ஸுவ ஃ காமோ யஜேத । ஸதேவ ஸௌமெ்ய ஃ ஃ ஆஸீத்। ஃஸ ஜோஃஸி (சுவர்க்கத்தை இச்சிக்கிறவன் வேள்வி செய்க. சௌமியனே! இது முன்சத்தாகவேயிருந்தது. தசமன் இருக்கின்றான்.) இவைமுதலிய வைதிக லௌகிக வாக்கியங்கள் பரோட்சமான சுவர்க்கமுதலியவற்றைக்கூறலாற் பரோட்சப்பிரமையை நிகழ்த்துவனவாம்.

## பரோட்சத்தின் இலக்கணம்.

பரோட்சப்பொருளை எடுத்துரைக்கும் வாக்கியம் பரோட்சப்பிரமையை நிகழ்த்துமென்று மேற்கூறியுளது. ஆண்டு அப்பொருளின்கண்ணுள்ள பரோட்சத்தன்மை யாது?

சமாதானம்:—யோஃ விஷய ஸ்யாநா வ்ருத ஸம்வித்தாதாத்ம்யா ஹாவஃ வ ரோக்ஷ்யம் (இ-ள்.) அஞ்ஞானத்தாலாக்கப்பட்ட ஆவரணமின்றி நிற்கும், சாட்சிசைதன்யமெனப்பெயரிய அநாவிருத சம்வித்தோடு பிரத்தியட்சயோக்கிய விஷயத்திற்குள்ள தாதான்மிய மின்மை எதுவோ, அதுவே அவ்விஷயத்தின் பரோட்சத்தன்மையாம். எங்ஙனமெனின், சுவர்க்கமுதலிய யோக்கிய விஷயங்களுக்கு அநாவிருதசாட்சி சைதன்யத்தோடு தாதான்மியமின்றாதலால்

அவைகள் பரோட்சமெனப்படும். எக்காலத்தில் கடபடமுதலிய விஷயாகாரமாக அந்தக்கரண விருத்தி ஆகவில்லையோ, அக்காலத்தில் அக்கடபடமுதலிய யோக்கிய விஷயங்களுக்கு அவ்வநாவிருதசாட்சி சைதன்யத்தோடு தாதான்மியமின்றுதலால் அவைகளும் பரோட்சமேயாகின்றன. இவ்விலக்கணத்தில் விஷயத்திற்கு 'யோக்கியம்'என்னும்விசேஷணங் கூருவிடின், தர்மாதர்மங்களினிடத்து அவ்விலக்கணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகும். ஏனெனின், தர்மாதர்மங்களுக்கு அநாவிருத (மறைப்பின்றிய) சாட்சிசைதன்யத்தோடு தாதான்மியமுண்டு. ஆனுல், அவை பிரத்தியட்ச யோக்யமன்று; அயோக்யமே. யோக்கியமென்று கூறலால் அத்தர்மாதர்மங்களினிடத்து பரோட்சத்தன்மை சம்பவமாம். அங்ஙனமான பரோட்சப்பொருளை விஷயப்படுத்தும் பிரமைஞானம் எதுவோ, அது பரோட்சமாம். அதாவது பரோட்சப்பொருளை விஷயப்படுத்துவதே அந்தப் பிரமைஞானத்தின்கண்ணுள்ள பரோட்சத்தன்மை என்பதாம். அது, 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌤𑌿, 𑌅𑌯𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑍋 𑌅𑌯𑌂 𑌪𑌾𑌪𑌵𑌾𑌨𑍍, 𑌦𑌶𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 (சுவர்க்கமுளது. இவன் புண்ணியன் இவன்பாபி. தசமன் இருக்கின்றுன்.) என்னுந்தொடக்கத்துத்தொடர்மொழிகளாற்றேன்றும் பிரமைக்கண் சுவர்க்கம், புண்ணியபாபம், தசமன் என்பது முதலிய பரோட்சப்பொருள்களை விஷயப்படுத்தல் பரோட்சத்தன்மையாதற் போலாம்.

அல்லது பிரமாணசைதன்யத்தில் விஷயசைதன்யத்தினும் வேறுந்தன்மை எதுவோ அதுவே பிரமைஞானத்தின்கண் பரோட்சத்தன்மையாம். எங்ஙனமெனின், 'சுவர்க்கமுளது' என்னும் வாக்கியத்தாற்றேன்றும் விருத்தியவச்சின்ன பிரமாணசைதன்யத்தில் சுவர்க்கமாகிய விஷயாவச்சின்ன சைதன்யத்தினும் வேறுந்தன்மையிருக்கின்றது. இதுவே அச்சுவர்க்கத்தை விஷயப்படுத்தும் ஞானத்தின்கண்ணதான பரோட்சத்தன்மையாம். இவ்வாறே அனுமிதிமுதலிய ஞானங்களினும் அப்பரோட்சத்தன்மையை யறிக. பரோட்சஸ்தலத்தில் அந்தக்கரணவிருத்தி விஷயதேசத்திற்குப் போதலின்றி, சரீரத்தினுள்ளேயே அவ் விருத்தியுதயமாகின்றதாதலால், விஷய விருத்திகளாகிய உபாதிகள் வெவ்வேறு தேசங்களிலிருப்பதால், விருத்தியவச்சின்னசைதன்யத்தோடு விஷயாவச்சின்னசைதன்யத்திற்கு ஒற்றுமையில்லை. இவ்வார்த்தை முன்னே பிரத்தியட்ச நிரூபணத்திற் கூறியுளது. இதனுல் விருத்தியவச்சின்ன பிரமாணசைதன்யத்தில், விஷயாவச்சின்ன சைதன்யத்தினும் வேறுகுந்தன்மையாகிய, ஞானத்தின்கண்ணதான பரோட்சத்தன்மை பொருந்தும் என்க.

## அபரோட்சத்தின் இலக்கணம்.

எவ்வாக்கியம் அபரோட்சப்பொருளைக் கூறுவதாமோ, அவ்வாக்கியம் அபரோட்சப்பிரமையை நிகழ்த்துவதாம். அது, 'தத்துவமசி' என்னும் வைதிக வாக்கியம் பிரஹ்மான்மவடிவ அபரோட்சப்பொருளைக் கூறலால் 'அஹம்பிரஹ்மாஸ்மி' என்னும் அபரோட்சப் பிரமையையும், 𑌦𑌶𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿 (நீ பதின்மன்) என்னும் இலௌகிகவாக்கியம் பதின்மனுகிய அபரோட்சப்பொருளைக் கூறலால் 'நான் பதின்மன்' என்னும் அபரோட்சப் பிரமையையும் நிகழ்த்துதல் போலவாம்.

சங்கை:—அபரோட்சப்பொருளைக் கூறலால் வாக்கியம் அபரோட்சப்பிரமையை நிகழ்த்துமெனின், அப்பொருளின்கண் அபரோட்சத்தன்மையாது ?

சாமாதானம்:—யொ³க்³ய விஷய ஸ்யாநா வ்ருதஸம் வித்தா தா³த்ம்யம் ஸ்வபரோக்ஷத்வம் (இ-ள்.) பிரத்தியட்ச யோக்கியமான விஷயத்திற்கு அநாவிருதசாட்சிசைதன்யத்தோடுள்ள தாதான்மியம் யாதோஅதுவே அவ்விஷயத்தின்கண் அபரோட்சத்தன்மையாம். எங்ஙனமெனின், கடபடமுதலியவாகாரமாக விருத்தியாகுங்காலத்தில் அக்கடபடமுதலியவற்றிற்கு, மறைப்பின்றிய சாட்சிசைதன்யத்தோடு தாதான்மியமுண்டு. இஃதே அவற்றின்கண் அபரோட்சத்தன்மையாம்.

தர்மாதர்மங்கட்கு அநாவிருதசாட்சிசைதன்யத்தோடு தாதான்மியமுண்டாயினும்; அவைகள் பிரத்தியட்சயோக்கிய மன்றாதலால், இவ்விலக்கணத்தில் விஷயத்திற்கு 'யோக்கியமான' என்னும் விசேஷணத்தைக் கூறலால், அத்தர்மாதர்மங்களினிடத்து அவ்வபரோட்ச இலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

சித்தாந்தத்தில் நித்தியாபரோட்சமான சைதன்யம் ஒன்றே; அவ்வொரு சைதன்யத்தில் சாட்சிசைதன்யம் அநாவிருதமென்றும், விஷயசைதன்யம் ஆவிருதமென்றும் பேதங்கூறுதல் பொருந்தாதாயினும், விஷய அந்தக்கரண முதலிய உபாதிகளின் பேதத்தால் அச்சைதன்யமும் பேதப்படுமென்று முற்கூறப்பட்டிருக்கின்றது. கடமுதலிய பொருள்களினிடத்து யாவருக்கும் சம்சயம், அநவபாசம், விபர்யயம் ஆகிய விவைகளுண்டாகின்றன; ஆனால் அந்தக்கரணஉபகிதமான சாட்சிசைதன்யத்தினிடத்து ஒருவருக்கும் அச்சம்சய முதலியவை யுண்டாகின்றதில்லை யாதலால் அக்காரியவலிவானே அக்கடாதியவச்சின்னசைதன்யம் ஆவிருதமென்றும், சாட்சிசைதன்யம் அநாவிருதமென்றும் கூறலாயிற்று. ஒருகால் அச்சாட்சிசைதன்யத்தையும் ஆவிருதமெனக்கொளின், பிரகாசிப்பிப்பதின்மையால் உலகின்கண் அந்தத்தன்மைநேரிடும்; ஒருபொருளும் விளங்காதாதல்பற்றி அச்சாட்சியை யெப்போதும் அநாவிருதமென்றே கொள்ளவேண்டும். ஆனால், கடமுதலிய விஷயாவச்சின்னசைதன்யம், கடமுதலியவாகாரமாக விருத்தியுற்பத்தியாதற்கு முன்னே ஆவிருதமாகியும், அவ்விருத்திகாலத்தே அநாவிருதமாகியும் நிற்றலால், அதற்கு அச்சாட்சிசைதன்யத்தோட பின்னமுண்டாகின்றது. கடமுதலிய விஷயங்களுக்கு அவ்வநாவிருதசாட்சிசைதன்யத்தோடு அக்காலத்திலுள்ள தாதான்மிய மெதுவோ, அதுவே அப்பொருள்களின்கண்ணுள்ள அபரோட்சத்தன்மையாம்.

சங்கை:—விஷயப்பிரத்தியட்ச விலக்கணத்தில் கடமுதலிய பொருள்களுக்குச்சாட்சிசைதன்யத்தோடு தாதான்மியமுண்டென மேற்கூறப்பட்டது. அத்தாதான்மியம் என்பதுயாது ? அதாவது ஒற்றுமை எனல் தாதான்மியமா ? பேதசகிதவபேதம் தாதான்மியமா ?

முதற்பட்சம் பொருந்தாது. ஏனெனின், இருளும் வெளிச்சமும்போல, ஜடமும் சைதன்யமும் விரோதமாதலால் அவைகட்கு ஒற்றுமை நிகழாது.

இரண்டாவது பட்சமும் பொருந்தாது. ஏனெனின், சமானசத்தையுடைய பேதா பேதங்களுக்கு ஒன்றுக்கொன்று முரணுண்மையால், அவைகள் ஓரிடத்து நிற்றல் பொருந்தாது.

சமாதானம்:—தத்பிந்நத்வே ஸதி ததபிந்ந ஸத்தாகத்வம் தாதாத்ம்யம் (இ-ள்) எப்பதார்த்தத்தினும் எவ்வஸ்து வேறுகத் தோற்றுகின்றதோ, ஆனல் எப்பதார்த்தத்தின் சத்தையினும் எவ்வஸ்துவின்சத்தை வேறன்றோ, அப்பதார்த்தின் கண்ணுள்ள அவ்வஸ்துவின் சம்பந்தம் யாதோ அது தாதான்மிய மெனப்படும். அது, கடபட முதலிய காரியங்கட்கு மண் நூல் முதலிய உபாதான காரணங்களிலுள்ள தாதான்மியம் போலவாம். ஆண்டு 'இது கடம், இது படம்' என்னும் தோற்றரவால் அக்கடபட முதலியன மண், நூல்முதலிய தம் முபாதானகாரணத்தின் சத்தையினும் அக்கடபடாதிகாரியங்கட்கு வேற்றுச் சத்தையில்லையாகையால் அக்காரியங்கட்கு தம்முபாதானகாரணத்தில் தாதான்மியம் நிகழும்.

இவ்வாறே கற்பித இரஜத சர்ப்ப முதலியவைகளுக்கும் தம்மதிஷ்டானங்களினிடத்து தாதான்மிய முண்டு. எக்காலத்தில் அந்தக்கரணவிருத்தி, கண் முதலிய விந்திரியவாயிலாகப் புறம்போந்து அக்கடாகாரமாகவில்லையோ, அக்காலத்தில் அக்கடமுதலிய விஷயங்கள் சுவாவச்சின்ன சைதன்யத்தினிடத்து அத்தியஸ்தமாயிருந்தன. எப்போது அவ்விருத்தி புறம்போந்து கடமுதலிய வாகாரமானதோ, அப்போது விருத்தி விஷயமாகிய உபாதிகள் ஒரு தேசத்தினிற்றலால் அவ்வுபகிதசைதன்யங்கட்கு ஒற்றுமையுண்டு. அதாவது கடாதியவச்சின்னசைதன்யம், விருத்தியவச்சின்னசைதன்யம், அந்தக்கரணவிசிஷ்டபிரமாதாசைதன்யம், அந்தக்கரண உபகிதசாட்சி சைதன்யமாகியவனைத்திற்கும் அக்காலத்தில் ஒற்றுமையுண்டாகின்ற தென்பதாம். அக்காலத்தில் அக்கடமுதலியவைகள் சாட்சிசைதன்யத்தில் அத்தியஸ்தமாகின்றன. அத்தியஸ்தப்பொருளுக்கு அதிஷ்டானத்தினும் வேற்றுச்சத்தையில்லை. அது, கற்பித இரஜத சர்ப்பாதிகளுக்குச் சுத்தி இரச்சு முதலியவதிஷ்டானத்தினும் வேற்றுச்சத்தை யின்றுதல் போலவாம். இவ்வாறு அக்கடமுதலிய பொருள்களினிடத்து அச்சாட்சிசைதன்னியத்தின் சத்தையினும் வேற்றுச்சத்தையில்லாமை எதுவோ, அதுவே அவைகட்குச் சாட்சிசைதன்யத்தோடுள்ள தாதான்மியமாம். இச்சாட்சியோடுள்ள தாதான்மியமே அக்கடமுதலியவைகளின் அபரோட்சத்தன்மையாம்.

அங்ஙனமான அபரோட்சப் பொருளைக்கூறும் வாக்கியம் அபரோட்சப் பிரமையை நிகழ்த்தும். எங்ஙனமெனின்:—'நீதசமன்' என்னும் வாக்கியத்தின் கண்ணுள்ள தசம புருடனுக்கு நீ என்னும் பொருளோடு அபின்னமிருத்தலால் அவன் அபரோட்சனயாவன். ஆகவே அவ்வபரோட்சப் பொருளைக்கூறலால் அவ்வாக்கியத்தைக் கேட்பவனுக்கு 'நான் தசமன்' என்னும் அபரோட்சப் பிரமையுண்டாகுமே யன்றி; பரோட்சப்பிரமை யுண்டாகாது.

சங்கை:—'ஆவைக்கொண்டுவா, துறக்கமுளது' என்னுந் தொடக்கத்து எல்லாவாக்கியங்களுக்கும் பரோட்சப்பிரமையை யுண்டுபண்ணுதலே வியல்

பாம். பொருளினியல்பு ஒருபோதும்மாறுவதின்றுதலால் 'நீ தசமன்' என்னும் வாக்கியத்தாலும் அத்தசமனுக்கு முதலில் தனது பரோக்ஷ உணர்வே தோன்றி அதன்பிறகு மனவிந்திரியத்தால் தன் தசமத்தன்மையின் சாக்ஷாத்கார முண்டாகின்றது. ஏனெனின், யாது யாது பிரத்தியக்ஷஞானமோ, அதுவது இந்திரியத்தாற்றோன்றுவனவே. ஆன்மப்பிரத்தியக்ஷமும், அவ்வான்மாவினுள்ள சுகதுக்க முதலியவைகளின் பிரத்தியக்ஷமும், இந்திரியமாகிய கரணத்தாற்றோன்றுவனவென்றே அவசியமங்கீகரிக்கவேண்டும். புறக்கண் முதலியவிந்திரியங்கட்கு அகப்பிரத்தியக்ஷத்தை யுண்டுபண்ணும் ஆற்றலில்லை. பாரிசேடமாக அம்மனத்தையே உடன்பாடெதிர்மறைகளால் பிரத்தியக்ஷஞானத்திற்குக் கரணமென்றங்கீகரிக்கவேண்டும். ஒருகால் பிரத்தியக்ஷத்திற்கு மனத்தைக் கரணமென்றங்கீகரியாவிடின், 'நான் சுகி, நான் துக்கி' என்னும் சுக துக்கங்களின் பிரத்தியக்ஷஞானத்தில் அப்பிரமாணம் நேரிடும். ஆகையால் அத்தசமனுக்கு மனத்தினுனே தான்தசமனென்று சாக்ஷாத்காரமுண்டானதேயன்றி; அவ்வாக்கியத்தாலன்று.

சமாதானம்:—சுகதுக்க முதலியவற்றின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாக மனத்தினிடத்து இந்திரியத்தன்மை பெற்றால்; அத்தசமனது சாக்ஷாத்காரத்திலும் அம்மனது கரணமெனல் கூடும், ஆனால் மனம் இந்திரியமெனல் பொருந்தாதென்னும் வார்த்தை முன்னே பிரத்தியக்ஷப்பிரமை நிரூபணத்திற் கூறப்பட்டுளது. சுகதுக்கமுதலியவற்றினுணர்வோ, நித்தியசாக்ஷி வடிவாதலால் ஒரு கரணத்தானும் தோன்றுவதன்று. ஆகையால் அதற்குக் கரணமாக அம்மனத்தை இந்திரியமெனல் பொருந்தாது.

சங்கை:—சுகதுக்க முதலியவற்றினுணர்வை நித்தியசாக்ஷி வடிவெனக் கொண்டால், அந்நித்திய சாக்ஷியாகிய உணர்விற்கு உற்பத்தி நாசம் கூடாவாகையால் 'எனக்கு இப்போது சுகஉணர்வுண்டானது, துக்கஉணர்வொழிந்தது' என்னும் யாவரது அனுபவத்திற்கு விரோதமுண்டாகும். அன்றியும் ஒருவனுக்குக்காலாந்தரத்தில் அச்சுகதுக்கங்களின் ஸ்மிருதி யுண்டாகின்றது. அதுவுமுண்டாகலாகாது. அனுபவத்தினழிவுபாட்டாற்றோன்றும் சம்ஸ்காரங்களினின்றே ஸ்மிருதி யுண்டாகின்றதாதலால்-

சமாதானம்:—சாக்ஷிசைதன்யத்திற்கு உற்பத்தி நாசமில்லையாயினும், அச்சைதன்யத்திற்கு விஷயமாகிய சுகதுக்கமுதலிவற்றிற்கு உற்பத்தி நாசமுண்டாகின்றன. அதனுல் அச்சாக்ஷி யனுபவத்தினிடத்தும் அவ்வுற்பத்தி நாசங்களின் வியவகாரமும், சம்ஸ்காரங்களினுற்பத்தியால் காலாந்தரத்தில் அச்சுகதுக்க முதலியவற்றின் ஸ்மிருதியும் நிகழும். இதனுல் சுகதுக்க முதலியவைகளின் ஞானத்தில் அம்மனத்தைக்கரணமெனல் பொருந்தாது. இவ்வாறே ஆன்மசாக்ஷாத்காரத்தின்கண்ணும் அம்மனத்தைக் கரணமெனல் பொருந்தாது. ஏனெனின், சுருதிகள் சுத்தான்மாவை மனோவாக்குகளுக்கு விஷயமன்றெனக் கூறியுள்ளனவாகலின் அச்சுத்தான்ம சாக்ஷாத்காரத்தின்கண் மனத்திற்குக் கரணத்தன்மை சம்பவியாது. அவ்வாறே சோபாதிக ஆன்மசாக்ஷாத்காரத்திலும் மனதைக்கரணமெனல் பொருந்தாது. ஏனெனின், ஙாஃ ரூஸ

கஶ்ஜோ விசிகித்ஸா (காமம், சங்கற்பம், சந்தேகம்) என்னுந்தொடக்கத்துச் சுருதிகள் அம்மனத்தை விருத்திஞானத்திற்கு உபாதானகாரணமாகக்கூறுகின்றன. உபாதானகாரணம் காரியத்திற்குக் கரணமாகாது. ஆனல், நிமித்த காரணமே கரணமாகும். எப்படிக் கடத்திற்கு உபாதானகாரணமாகிய மண் கரணமாகாமல்; நிமித்தகாரணமாகிய தண்டமுதலியவைகளேகரணமாகின்றனவோ, அப்படி விருத்தி ஞானத்திற்கு உபாதானகாரணமாகிய மனது அதற்குக்கரணமாமெனல் பொருந்தாது.

அல்லது, சாட்சுஷ உணர்வினுற்பத்தியில் சூரியர் முதலியோரின் ஒளி எங்ஙனம் சட்சு விந்திரியத்திற்குச் சககாரியாமோ, அங்ஙனமே அம்மனதும் சப்தமுதலிய பிரமாணங்களுக்குச் சககாரியாம். அவ்வொளிக்கு வேறு பிரமாணமின்ருதல்போன்று, அம்மனதிற்கும் வேறுபிரமாணமில்லை. அல்லது எங்ஙனம் கண்முதலிய விந்திரியங்களுக்கு உருவமுதலியன அசாதாரண விஷயங்களாமோ, அங்ஙனம் அம்மனத்திற்கு ஓர் அசாதாரண விஷயமின்று. அந்தக்கரணமும், அதன் தர்மங்களான சுகதுக்கமுதலியனவும் மேற்கூறிய முறைப்படி கேவலம் சாக்ஷிபாசியமேயாம். அசாதாரண விஷயமில்லாததனுனும் சாட்சாத்காரத்திற்கு அம்மனதைக் கரணமெனல் பொருந்தாது. இவ்வார்த்தை ஆசாரியர்களுங் கூறியிருக்கின்றனர். சுலோகம். ப்ரமாண ஸஹகாரி த்வா விஷயஸ்யாவ்ய ஹாவத꞉। நப்ரமாணம் மனோழுஸ்மாகம் ப்ரமா ஜோா ஶ்ரய த்வத꞉ (இ-ள்.) பிரமாணத்திற்குச் சககாரியாவதாலும், அசாதாரணவிஷயமின்மையாலும், பிரமைஞான முதலியவற்றிற்கு பற்றுக்கோடாவதாலும், அம்மனத்தைப் பிரமாணமென்று நாம் சித்தாந்தத்தில் அங்கிகரிக்கிலோம்.

பிரமாணத்தாற்றோன்றும் அபரோட்ச உணர்வே அபரோட்சப்பிரமத்தைத் தவிர்ப்பதாகையால் 'நான் தசமன்' என்னும் சாட்சாத்காரத்திலும், அம்மனங் கரணமெனல் பொருந்தாது. ஆனல், 'நீதசமன்' என்னும் வாக்கியமே கரணமெனல் பொருந்துமெனப்பெற்றும். 'தத்துவமசி' என்னும் வாக்கியத்திலும் தத்பதலட்சியார்த்தமாகிய பிரஹ்மத்திற்கு துவம்பதலட்சியார்த்தமாகிய சாட்சியோடு எப்போதும் அபேதமுண்டு. ஆகையால் அவ்வநாவிருத சாட்சியோடு தாதான்மியமுண்மையால் பிரஹ்மம் நித்திய அபரோட்சமேயாம். சுருதி. யத்ஸாக்ஷாதபரோக்ஷாத்ப்ரஹ்ம (இ-ள்.) எந்தப்பிரஹ்மம் சர்வான்மவடிவாதல் பற்றி நேராக அபரோட்சமாமோ—அத்தகைய அபரோட்ச பிரஹ்மத்தை எடுத்துரைக்கும் தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களால் புருஷனுக்கு அஹம்பிரஹ்மாஸ்மி என்னும் அபரோட்சப்பிரமையே யுண்டாகின்றது. இங்கு அபரோட்சம், பிரத்தியட்சம், சாட்சாத்காரம் என்னும் மூன்றும் ஒருபொருளைக் குறிக்கும் சொற்களேயாம்.

சங்கை:—தத்துவமசி என்னும் வாக்கியத்தால் அஹம்பிரஹ்மாஸ்மி என்றிவ்வாறு அபரோட்சப்பிரமை யுண்டாகுமாயின்; எவருக்கும் அவ்வாக்கியத்தைக்கேட்டலாற் அவ்வபரோட்சப்பிரமையே யுண்டாதல் வேண்டும்.

சமாதானம்:—எவன் விவேகமுதலிய சதுட்ட சாதனங்கள் நிரம்பியவனும், தத்துவம் பதார்த்தங்களின் சோதனையைச் செய்தவனும், சிரவணமனன நிதித்தியாசனங்களால் ஐயந்திரிவுகளகன்றவனுமாவனோ,அத்தகையசாதனசம்பன்ன அதிகாரிக்கே தத்துவமசியென்னும் வாக்கியத்தால் அஹம்பிரஹ்மாஸ்மி யென்னும் அபரோட்சப்பிரமை யுண்டாகும்; சாதனரகிதனுக்கு உண்டாகாது. அவ்வபரோட்சப் பிரமையினுற்பத்தியில் அத்தத்துவமசி யென்னும் வாக்கியமே கரணமாமன்றி மனது கரணமாகாது. ஆனால், சிரவணமுதலியவற்றாற் சம்ஸ்காரமடைந்த சுத்தமனது சககாரிகாரணமாகும்.

பிரஹ்ம சாட்சாத்காரத்தின்கண் அவ்வேதவாக்கியமே கரணமாகுமென்னும்பொருள் மேற்கூறிய யுக்தியால் மாத்திரமே சித்திப்பதன்றி சுருதிப்பிரமாணத்தாலும் சித்திக்கும். சுருதி. सर्वे वेदा यत्पदमामनन्ति। तं त्वौपनिषदं पुरुषं पृच्छामि। नावेदविन्मनुते तं बृहन्तम् (இ-ள்) எல்லா மறைகளும்எப்பரமான்மபதத்தைநேராகத்தான்,பரம்பரையாகத்தான்கூறுகின்றனவோ, அதாவது எப்பரமான்மாவை விஷயப்படுத்தும் சாட்சாத்காரத்தை உண்டாக்குகின்றனவோ-உபநிடதமாகிய சப்தப்பிரமாண மொன்றினுனே உணரத்தக்க அப்பரமான்மப்புருஷனியல்பைப்பற்றி நான் உம்மைக்கேட்கின்றேன்--வேதாந்த வாக்கியங்களினுணர்வில்லோர் அந்தப்பிரஹ்மத்தைஅறிகிலர்-என்னுந்தொடக்கத்துச் சுருதிகள் பிரஹ்மசாட்சாத்காரத்தினிடத்து வேதாந்தவாக்கியங்களையே பிரமாணமாய்க் கூறியுள்ளன. அன்றியும் मनसैवानुद्रष्टव्यम्। दृश्यते त्वग्र्यया बुद्ध्या (பிரஹமம் சுத்தமனத்தாற் பார்க்கத்தக்கது. கூர்ந்தவறிவால் தரிசிக்கத்தக்கது.) என்னுந்தொடக்கத்துச் சுருதிகள் பிரஹ்ம சாட்சாத்காரத்தின்கண் சுத்தமனத்தைக் சககாரியெனக் கூறுகின்றன. இதனுல் அச்சுருதிகளுக்கும் முரண்வராது.

ஓர்கால் மேற்கூறிய சுருதிப்படி ஆன்மசாட்சாத்காரத்திற்கு மனதைக் கரணமெனக் கொண்டால்; அவ்வான்ம சாட்சாத்காரத்தில் மனது கரணமாமென்பதை நிஷேதித்துள்ள यन्मनसा न मनुते। अप्राप्य मनसा सह(எதை மனத்தாலெட்ட முடியாதோ, எது மனதிற்கு அப்பிராப்யமோ) என்னுந் தொடக்கத்துச் சுருதிகளுக்கு விரோதமுண்டாகும். அதைநிவிர்த்திக்கும்பொருட்டு மேற்கூறிய சுருதிகளால் மனதைச் சககாரி யெனக் கொள்ளுதலே தக்கது. यद्वाचाऽनभ्युदितम्। यतो वाचो निवर्तन्ते (எதை வாக்காற் சொல்ல முடியாதோ, எதுவாக்கை நிவிர்த்திக்கின்றதோ) என்னுந் தொடக்கத்துச் சுருதிகள் அவ்வான்மசாட்சாத்காரத்தினிடத்து வாக்கியப் பிரமாணத்தையும் நிஷேதிக்குமாயினும், அச்சுருதிகள் சப்தத்தின் சக்திவிருத்தியை நிஷேதிக்கின்றன. அதாவது அச்சப்தங்கள் சக்திவிருத்தியால் பிரஹ்மத்தை யுணர்த்தாவென்பதாம். ஆனல், தத்துவமசியாதி வாக்கியங்கள் பாகத்தியாக விலக்கணையால் பிரஹ்மத்தை யுணர்த்துவனவேயாதலால் பிரஹ்மசாட்சாத்காரத்திற்குத் தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களே கரணமெனல் பொருந்தும்.

சாப்திப் பிரமை முற்றிற்று.

---

# அர்த்தாபத்திப்பிரமை

உபபாத்யஜ்ஞாநேந உபபாதகவஸ்த்வந்தரகல்பநம் அர்த்தாபத்தி: ப்ரமா (இ-ள்.) உபபாத்தியப் பொருளினுணர்வால், அப்பொருளின் உபபாதகமாகிய வேறுபொருளின் கற்பனே அர்த்தாபத்திப் பிரமையெனப்படும். எங்ஙனமெனின், பகலுண்ணுத்தேவதத்தனது உடற்பருமை இரவூணன்றிச் சம்பவியாதாதலால்; அப்பருமையினுணர்வால் அவனது இரவூண்கற்பிக்கப்படுகின்றது. இக்கற்பனே அர்தாபத்திப் பிரமையெனப்படும். பகற்பொழுதுணவொழிந்தவனுக்குப் பருமை இரவூணன்றிச் சம்பவியாதென்னுமுணர்வோ, அவ்வர்த்தாபத்திப் பிரமைக்குக் கரணமாவதால் அர்த்தாபத்திப் பிரமாணமெனப்படும். இவன் இரவுண்பன் என்னுமுணர்வு அர்த்தாபத்திப் பிரமையெனப்படும்.

ஈண்டுநையாயிகர் அர்த்தாபத்திப் பிரமாணத்தை யங்கீகரிப்பதில்லை. ஆனல், வெதிரேகியனுமானத்தானே அவ்விரவூணினுணர்வை யங்கீகரிக்கின்றனர். அவ்வனுமானத்தின் ஆகாரமாவது:—அயம் தேவதத்த: ராத்ரௌ புங்க்தே, திவாऽபுஞ்ஜாநத்வே ஸதி பீநத்வாத், யந்நைவம் தந்நைவம் யதா திவா ராத்ராவபுஞ்ஜாந: (இ-ள்.) இத்தேவத்தன் இரவுண்பன். பகற்பொழுதுண்ணுயும் பருத்திருத்தலின்; எவன் இரவூணெழிந்தவனே, அவன் பகலிலுண்ணுனுயப் பருத்திருப்பதில்லை, இராப்பகலுணவொழிந்தவன் பருமனுவதில்லைபோலும். ஆகவே அர்த்தாபத்திப்பிரமாணம் வேறன்று.

இந்நையாயிகரதுமதம் அசங்கதம். ஏனெனின், முன்னே அனுமிதிப்பிரமையினிருபணத்தில் வெதிரேகியனும்மானம் விரிவாகக் கண்டிக்கப்பட்டுளது. அவ்வெதிரேகியனுமானத்தால் அவ்விரவூணினுணர்வு சம்பவியாமல் மேற்கூறிய அர்த்தாபத்திப் பிரமாணத்தாற்றுன் சம்பவிக்கும். ஆகையால் அர்த்தாபத்திப் பிரமாணத்தை வேறுபிரமாணமென்றே வங்கீகரிக்கவேண்டும். நையாயிகர் எப்பொருளினுணர்வை வெதிரேகியனுமானத்தாற் கொள்ளுகின்றனரோ, அப்பொருளினுணர்வு அர்த்தாபத்திப் பிரமாணத்தானே நிகழ்கின்றதாதலால் வெதிரேகியனுமானம் வியர்த்தமேயாம்.

அவ்வர்த்தாபத்திப்பிரமை திருஷ்டா (காண்டல) ர்த்தாபத்தி, சுருதார் (கேள்விய) ர்த்தாபத்தி என்னும் பேதத்தானிருவிதம். கண்டபொருள் திருஷ்டார்த்தமாம். அத்திருஷ்ட அர்த்தத்தின் அனுபபத்தியால் அதன் உபபாதகமாகிய வேறுஅர்த்ததின் கற்பனே திருஷ்டார்த்தாபத்தியெனப்படும். கேட்டபொருள் சுருதார்த்தமாம். அச்சுருதார்த்தாபத்தியின் அனுபபத்தியால் அதன் உபபாதகமாகிய வேறுஅர்த்தத்தின் கற்பனே சுருதார்த்தாபத்தி யெனப்படும்.

அவ்விருவகை அர்த்தாபத்திகளுள் முன்னைய திருஷ்டார்த்தாபத்தியின் உதாரணங்கூறுதும். அதெங்ஙனமெனின்:—தோஷமுடையவனுக்கு, எதிரினுள்ள சுத்தியின்கண் இரஜதத்தை விஷயப்படுத்தும்'இது ரஜதம்' என்னும் பிரம

வடிவ விசிஷ்டானுபவ முண்டாகின்றது. அவ்வனுபவத்தின் விஷயமாகிய இரஜதத்திற்கு; அச்சுத்தி அதிஷ்டான ஞானத்தின் பின்னர் 'இது ரஜதமன்று' என்னும் பாதம் (பொய் நிச்சயம்) காணப்படுகின்றது. ஆதலால் அவ்விரஜத்தின் பாத்யத் தன்மை திருஷ்டார்த்தமாம். பாத்யத்தன்மையாகியவத் திருஷ்டார்த்தம் அவ்விரஜதத்தைச் சத்தியமென்றுரைப்புவதிற் சம்பவியாமல்; அதனை மித்தையென்றுரைப்புவதிற் சம்பவிக்கும். இதனால் அவ்விரஜதத்தின் பாத்யத் தன்மையாகிய திருஷ்டார்த்தம் அவ்விரஜத மித்தியாத்தன்மை யன்றிச் சம்பவியாததாய், அதன்மித்தியாத்தன்மை கற்பிக்கப்படுகின்றது. அக்கற்பனை திருஷ்டார்த்தாபத்திப் பிரமையெனப்படும்.

இனித்தொடர்ச்சிபற்றி பிரமஸ்தலத்தில் வேதாந்தசித்தாந்த சம்மதமான அநிர்வசனீயக்கியாதியைச் சித்தி செய்யக்கருதி முதற்கண் பிறசாஸ்திரங்களிற் கூறியுள்ள கியாதிகளைக் கூறி அவற்றைக் கண்டிக்கப்படுகின்றன.

## அக்கியாதி வாதம்.

மீமாஞ்சகர் பிரமஸ்தலத்தில் அக்கியாதியை யொப்புகின்றனர். அவரதபிப்பிராயமாவது:—எல்லா ஞானங்களும் யதார்த்தமே; ஒரு ஞானமும் அயதார்த்தமன்று. ஆகையால் பிரமஸ்தலத்தில் 'இது ரஜதம்' என்னும் விசிஷ்டபிரமஞானத்திற்கு ஓர் பிரமாணமுமில்லை.

சங்கை:—ஒருகால் 'இது வெள்ளி' என்னும் ஞானத்தை விசிஷ்டபிரமஞானமென் றங்கீகரியாவிடின், அந்த ஞானத்திற்குப் பின்னர், வெள்ளிவிருப்புடையோனுக்கு எதிருற்ற சுத்தியின்கண் முயற்சியுண்டாகலாகாது; ஆனால் அவனுக்கு அதன்கண் முயற்சியோ கண்கூடாய் நிகழ்கின்றது. அதுபற்றி முயற்சியின் அநுபபத்தியால் 'இது வெள்ளி' என்னும் ஞானம் விசிஷ்டபிரமஞானமென்றே சித்திக்கின்றது.

சமாதானம்:—'இது வெள்ளி' என்னும் ஞானத்தை விசிஷ்டபிரமஞானமென்று கொள்ளாவிடினும்; வெள்ளிவிருப்புடையோனுக்கு எதிருற்ற சுத்தியின்கண் முயற்சியுண்டாகக்கூடும். அதைக்காட்டுதும். 'இது வெள்ளி' என்னும் விசிஷ்டபிரமஞானம் ஒன்றன்று. ஆனால், இரண்டு ஞானங்களாம். 'இது' என்பதோ எதிருற்றதை விஷயப்படுத்தும் பிரத்தியட்சஞானமும், 'வெள்ளி'எனல் வெள்ளியை விஷயப்படுத்தும் ஸ்மிருதி ஞானமுமாம். அவ்விரு ஞானங்களும் யதார்த்தமே. அவ்விருஞானத்திற்கும் அவ்விருஞானத்திற்கு விஷயமான 'எதிருற்ற' 'வெள்ளி' என்னுமிரண்டிற்கும் ஒன்றுக்கொன்று பேதமுண்டு. ஆனால், தோஷவசத்தால் புருஷன், அவ்விருஞானங்களின் பேதத்தையும், அவ்விரு விஷயங்களின் பேதத்தையுங் கிரகிப்பதில்லை. அப்பேதங்களைக் கிரகிக்காமையினுனே வெள்ளிவிருப்புடையோனுக்கு எதிருற்ற சுத்தியின்கண் முயற்சிநிகழும். அம்முயற்சிபற்றி அவ்விசிஷ்ட பிரமஞானத்தைக் கற்பித்தல் வியர்த்தமாம்.

அல்லது, ஒருகால் எல்லா ஞானங்களையும் அயதார்த்தமெனக் கொண்டால், புருடனுக்கு ஒருஞானத்தின்கண்ணும் யதார்த்தத்தன்மையின் நிச்சய

முண்டாகாது. ஆனால் அவ்வெல்லா ஞானங்களிலும் யதார்த்தத்தன்மையின் சம்சயமே நிற்கும். ஆதலால் உண்மையுணர்வால் முற்றுப்பெறும் பிரவிருத்தி நிவிருத்தி முதலிய வெல்லாவழக்குகட்கும் உலோபமுண்டாகும். இக்காரணம் பற்றியே ஜ்ஞாநஸ்ய வ்யபிசாரித்வே விஶ்வாஸ꞉ கிந்நிபந்தந꞉ (ஞானத்திற்குப் பிறழ்ச்சியுளதாயின் எவ்வாறு விஸ்வாசமுண்டாகும்) என்னும் வசனத்தைச் சாஸ்திரக்காரர்கள் கூறியிருக்கின்றனர். இவ்வாற்றால் வெள்ளித்தன்மை விசிஷ்ட பிரமமாகிய வனுபவமின்மையால், அநுபவிக்கத்தகுந்த வெள்ளியின் திருஷ்டபாத்யத்வம் (பொய்யென்று வாதிக்கப்படுந்தன்மை) அவ்வெள்ளியின் மித்தியாத்தன்மையைக் கற்பிக்கின்றதென்னும் வேதாந்தியர் கூற்று அசங்கதம்.

இவ்வக்கியாதிவாதியரான மீமாஞ்சகர் மதம் நலமன்று. அக்கியாதிவாதி, விசிஷ்டபிரம ஞானத்தின்கண் பிரமாணமின்றெனக் கூறியது அசங்கதம். ஏனெனின்; அவ்விசிஷ்டபிரமஞானம் அநுமானப்பிரமாணத்தாற் பெறப்படும். அவ்வனுமாவது:—ஶுக்தாவிதம் ரஜதார்த்திந꞉ ப்ரவ்ருத்தி꞉ விஶிஷ்டஜ்ஞாநஸாத்யா ப்ரவ்ருத்தித்வாத், ஸம்வாதிப்ரவ்ருத்திவத் (இ-ள்.) எதிருற்ற சுத்தியின்கண் வெள்ளிவிருப்புடையோனுக்குண்டாகும் பிரவிருத்தி, இதுவெள்ளி என்னும் விசிஷ்ட ஞானத்தாற் சாத்தியம். பிரவிருத்தியாவதால்;உலகில் எதுஎது பிரவிருத்தியோஅதுவது விசிஷ்ட ஞானத்தாற் சாத்தியமே,சத்தியவெள்ளியை விஷயப்படுத்தும் பிரவிருத்தி, இதுவெள்ளி என்னும் எதிருற்றவெள்ளி விசேஷியமும் வெள்ளித்தன்மை விசேஷணமுமாகிய விசிஷ்ட ஞானத்தாற் சாத்தியமாதல் போலும். இவ்வனுமானமே அவ்விசிஷ்டபிரம ஞானத்தின்கண் பிரமாணமாம்.

அன்றியும் அவ்வக்கியாதிவாதியால் ஞானமனைத்தும் யதார்த்தமென்று கூறப்பட்டது எதுவோ அதுவும் அசங்கதம். ஏனெனின், ஞானமனைத்தும் சொரூபமாக யதார்த்தமேயாயினும் விஷயத்தின் பாதஅபாதங்களால் ஞானத்தின்கண்ணும் யதார்த்தம் அயதார்த்தமாகிய விரண்டும் சம்பவிக்கும். அதாவது எந்தஞானத்தின் விஷயம் அபாதிதமோ, அது யதார்த்தமாம். அது, 'இதுகடம், இதுபடம்' என்னுந்தொடக்கத்து ஞானம்போலும். எந்த ஞானத்தின் விஷயம் பாதிதமோ அது அயதார்த்தமாம். அது 'சுத்தியில் இது வெள்ளி, இரச்சுவில் இது சர்ப்பம்' என்னுந்தொடக்கத்து ஞானம்போலாம் ஒருகால் வெள்ளியாகிய விஷயத்தின் பாதத்தால் இதுவெள்ளி என்னும் ஞானத்தைப் பிரமமென்றொப்பாவிடின்; 'இது வெள்ளியன்று' எனப்பின்னிகழும் ஞானத்தால் எதிருற்ற சுத்தியின்கண் வெள்ளியின்பாதம் தோற்றுகின்றது; அது உண்டாகலாகாது. பிராப்தப்பொருளினதே நிஷேதமுண்டாம்; அப்பிராப்தப்பொருளின் நிஷேதமுண்டாகாதாகலின்.

சங்கை:—'இது வெள்ளியன்று' என்னும் ஞானத்தால் 'இதுவெள்ளி' என்னும் ஞானமாவது அல்லது அந்த ஞானத்திற்கு விஷயமான வெள்ளியாவது பாதிக்கப்படுகின்றதில்லை. ஆனால், அவ்வெள்ளியை விஷயப்படுத்தும் பிரவிருத்தி முதலிய வியவகாரங்களே பாதமாகின்றன.

சமாதானம்:—இதுவெள்ளியன்று என்னும் ஞானத்தால் எதிருற்ற வெள்ளியின் நிஷேதானுபவமுண்டாகின்றதே யன்றி வியவகாரத்தின் நிஷேதானுபவமுண்டாகின்றதில்லை. ஒருகால் அந்த ஞானத்தால் வெள்ளி வியவகாரமும் நிஷேதிக்கப்படுமாயின்; அந்த ஞானத்தின் வடிவம் 'இது வெள்ளியன்று' என்னும் வியவகாரமாகவே நிற்றல்வேண்டும். அவ்வாறில்லையாதலால் இது வெள்ளியன்று என்னும் நிஷேதவல்லமையானும் இது வெள்ளி யென்னும் விசிஷ்ட பிரமஞானமே பெறப்படும். அவ்விசிஷ்ட பிரமஞானமே எதிருற்ற சுத்தியின்கண் வெள்ளிவிருப்புடையோனது பிரவிருத்திக்குக் காரணமாம். அக்கியாதி வாதிகூறிய, பேதஅக்கிரகம்(கிரகியாமை)அந்தப்பிரவிருத்திக்குக் காரணமன்று. ஒருகால் அப்பேதஞானுபாவ வடிவான பேதாக்கிரகத்தையே பிரவிருத்திக்குக் காரணமெனக்கொண்டால்; அது எப்போது மிருத்தலால் அந்தப் பிரவிருத்தியும் எப்போது மிருத்தல் வேண்டும்.

அன்றியும் அவ்வக்கியாதிவாதி வெள்ளியின் ஸ்மிருதி ஞானத்தால் பிரவிருத்தி யுண்டெனக் கொண்டனன், அதுவும் பொருந்தாது. ஏனெனின் ஸ்மிருதி, ஞானத்திற்கு விஷயமாகிய வெள்ளி தேசாந்தரத்திலிருக்கின்றது; எதிருற்ற சுத்தியின்கண் ணில்லையாகையால், அந்த ஸ்மிருதி ஞானத்தால் வெள்ளி விருப்புடையோனுக்கு அத்தேசாந்தரத்தினிடத்தே பிரவிருத்தியுண்டாகும்; எதிருற்ற சுத்தியின்கண் பிரவிருத்தியுண்டாகாது. ஆகையால் அவ்வக்கியாதி வாதியும் எதிருற்ற சுத்தியின்கண் நினைவினதாய வெள்ளியை யாரோபித்து வெள்ளி விசேஷணமும், எதிருற்ற தென்னும் விசேஷியமுமாகிய 'இது வெள்ளி' யென்னும் விசிஷ்ட ஞானமே அந்தப் பிரவிர்த்திக்குக் காரணமெனக் கோடல்வேண்டும். அவ்விசிஷ்டபிரம உணர்வும் நிர்விஷயமாகாது; ஆனல் சவிஷயமேயாகும். இதுவெள்ளியன்று என்னுமுணர்வால் எதிருற்ற சுத்தியின்கண்ணே அவ்வெள்ளியாகிய விஷயத்தின் பாதம் தோற்றுகின்றதாதலால், அவ்வெள்ளியின் வாதிக்கப்படுந்தன்மை அநுபபத்தியால் அவ்வெள்ளியின்கண் மித்தியாத்தன்மை கற்பிக்கப்படுகின்றது.

## அசத்கியாதி வாதம்.

சூனியவாதிகளான மாத்தியமிகரும், சிலதாந்திரிகர்களும் பிரமஸ்தலத்தில் அசத்கியாதியைக் கொள்ளுகின்றனர். சூனியவாதியின் மதத்திலோ ஞாதா ஞானம், ஞேயம் முதலிய வெல்லாப்பொருள்களும் அசத்தாம். ஆகையால் அசத் சுத்தியின்கண் அசத்வெள்ளியே 'இது வெள்ளி' என்னு முணர்விற்கு விஷயமாம்.

தாந்திரிகர் மதத்திலோ சுத்தியாதிய வியாவகாரிகப் பொருள்கள் அசத்தன்று. ஆனல்,அச்சுத்தியின்கண் தோற்றும் வெள்ளி அசத்தாம்.ஆகலின் 'இது வெள்ளி'என்னு முணர்வுஅசத்தான வெள்ளியை விஷயப்படுத்துகின்றது.சுத்தி ஞானத்திற்குப் பிறகு 'இச்சுத்தியின்கண் அசத்வெள்ளியே எனக்குத் தோற்றியது' என்னும் அனுபவம் ஒருவனுக்குண்டாகின்றது. அவ்வனுபவத்தால் அவ்வெள்ளி அசத்தென்றே பெறப்படுகின்றதனல் பிரமஉணர்விற்கு விஷயமாகிய வெள்ளிமுதலியவைகள் அசத்தென்றே கொள்ளவேண்டும்.

இவ்வசத்கியாதிவாதியின் மதமும் நலமன்று. ஏனெனின், அவ்வெள்ளி அசத்தாமேல், அவ்வசத்வஸ்துவின் பிரத்தியட்சஉணர்வு நிகழாது. ஆகலின் அவ்வெள்ளியை விஷயப்படுத்தும் 'இதுவெள்ளி' யென்னு முணர்வும் பிரத்தியட்சமாதல் கூடாது. ஒருகால் அசத்வஸ்துவிற்கும் பிரத்தியட்சஉணர்வு நிகழுமெனின், சசசிருங்கம் வந்தியாபுத்திரன் முதலிய வசத்பொருள்களும் யாவருக்கும் பிரத்தியட்சமாய்த் தோன்றவேண்டும்; ஆகையால் அவ்வெள்ளியை அசத்தெனல் பொருந்தாது. அசத்வஸ்துவெனல் ஒன்றுண்டா? இன்றா? உண்டெனின் அதற்கு அசத்துத்தன்மை நிகழாது. இன்றெனின் அது தோன்றவே வேண்டும். விஷயமின்றி உணர்வுநிகழாது. ஆகவே பிரமஞானத்திற்கு விஷயமாகிய வெள்ளி முதலியவற்றை அசத்தெனல் பொருந்தாது.

## சத்கியாதி வாதம்.

சிலநூலாசிரியர்கள் பிரமஸ்தலத்தில் சத்கியாதியை யங்கீகரிக்கின்றனர். அவர் அபிப்பிராயம் வருமாறு:—சுத்தியின் ஆரம்பக அவயவங்களோடு வெள்ளியின் ஆரம்பக அவயவங்கள் எப்போதும் கலந்தேயிருக்கின்றன. சுத்தியினவயவம் எப்படிச் சத்தியமோ, அப்படி வெள்ளியினவயமும் சத்தியமே. தோஷத்தோடுங்கூடிய நேத்திரேந்திரியத்திற்குஅவ்வவயவங்களோடு எப்போதுசையோகசம்பந்தமுண்டாமோ, அப்போது அவ்வவயவங்கள் சத்தியமான வெள்ளியையுண்டாக்குகின்றன. இக்காரணம்பற்றியே அவ்வெள்ளியின் சத்தியத்தன்மையை விஷயப்படுத்தும் 'இவ்வெள்ளிசத்து' என்னும் பிரத்தியட்சம் யாவருக்குமுண்டாகின்றது. சுத்திஞானத்தால் அச்சத்திய வெள்ளியும் தனதவயவத்திற்றும்சமாகின்றது.

இச்சத்கியாதிவாதியர் மதமும் நலமன்று. ஏனெனின், அச்சுத்தியின் கண் ஒருகால் சத்தியவெள்ளி உற்பத்தியாயின்; 'இது வெள்ளியன்று' என்னுமனுபவத்தால் அச்சுத்தியின்கண் வெள்ளியின்பாதம் உண்டாதல் கூடாது. சத்தியவஸ்துவிற்குப் பாதமுண்டாகாதாகலின். ஒருகால் சத்தியவஸ்துவிற்கும் பாதமுளதாயின்; அச்சத்திய சுத்திக்கும் பாதமுளதாதல் வேண்டும். ஆனால் அவ்வெள்ளியின் பாதமோ அனைவருக்கும் பிரத்தியட்ச சித்தமேயாகையால், அதைச் சத்தியமெனல் பொருந்தாது. 'இவ்வெள்ளி சத்து' என்று மேற்கூறிய பிரத்தியட்சமோ, வெள்ளியின்சத்தை விஷயப்படுத்துவதன்று; ஆனால் அவ்வெள்ளியின் அதிஷ்டான சத்தையே விஷயப்படுத்துவதாம். ஆகலின் அந்தப் பிரத்தியட்சத்தின் வலிவானும் அவ்வெள்ளி சத்தியமெனல் பெறப்படாது.

அல்லது, சுத்தியவயங்களோடு வெள்ளியினவயங்களும் எப்போதும் கலந்தேயிருக்கின்றன என்று கூறுதலும் அசங்கதம். ஏனெனின், வெள்ளியினுற்பத்திக்குப்பூருவம் அச்சுத்தியினவயவங்கள் எப்படிப்பிரத்தியட்சமாய்த்தோன்றின்றோ, அப்படியே அவ்வெள்ளியவயங்களும் பிரத்தியட்சமாய்த் தோன்றவே வேண்டும். வெள்ளிதைஜச (தேயுக்கூறும்) திரவியம். அது அக்கினியின் சையோகத்தால் நாசமுறாது. அத்தியந்த அக்கினியின் சையோகத்தால் அச்சுத்தி சாம்பாருங்கால் யாவருக்கும் அவ்வெள்ளியவயவம் பிராப்தமாதல் வேண்

டும். குன்றிமணிக்கொத்தின்கண் எங்கே அக்கினிப்பிரம முண்டாகின்றதோ, அங்கே அச்சத்திய அக்கினியால் அக்குன்றிமணிக்கொத்தும் அழிவுறவேண்டும். இத்தொடக்கத்துப் பலவகைத்தூஷணங்கள் அச்சத்கியாதி வாதத்தின்கண் பிராப்தமாகின்றன. ஆகையால் அவ்வாதம் முற்றும் அசங்கதம்.

## ஆத்மக்கியாதி வாதம்.

க்ஷணிகவிஞ்ஞான வாதிகளான யோகாசாரர் பிரமஸ்தலத்தில் ஆத்மக்கியாதியை யங்கீகரிக்கின்றனர். அவர்கருத்தாவது:—சரீரத்தி னகத்துள்ள க்ஷணிகவிஞ்ஞானம் எதுவோ அதுவே ஆன்மா. அவ்விஞ்ஞான வான்மாவிற்குவேறாகப் பிறிதோர் பொருள் அகத்தும் புறத்துமில்லை. ஆனால் எல்லாப் பொருள்களும் அவ்வுணர்வின் ஆகார விசேடங்களேயாம். ஆகையால் அச்சுத்தியின்கண் வெள்ளி தோன்றுதல் எதுவோ, அதுவும் அவ்வகத்துணர்வின் தர்மமேயாம். அவ்வகத்து வெள்ளியே தோஷவல்லமையால் புறத்ததுபோலத் தோன்றுகின்றது. இதுவெள்ளியன்று யென்னும் ஞானத்தால் அவ்வெள்ளி,சொரூபமாகப் பாதமாகின்றதில்லை. ஆனால், அவ்வகத்து வெள்ளியின்கண் இதுவெனும் வடிவப்புறத்ததின்பாதமே யுண்டாகின்றது.

இம்மதமும் நலமன்று. ஏனெனின், அவ்வெள்ளி முதலியன அகத்ததென்பதில் ஓர்பிரமாணமும் யுக்தியும் கிடையா. நேத்திரேந்திரியத்தால் அவ்வெள்ளி முதலிய பொருள்கள் அனைவருக்கும் பாகியதேசத்தின்கண்ணே தோற்றுகின்றன. இன்பத்துன்ப முதலியனமாத்திரமே அகத்தே தோற்றுவனவாம். ஒருகால் அவைகளைப்போன்று அவ்வெள்ளி முதலியனவும் அகத்ததேயாயின்,நேத்திரேந்திரியமன்றியும் அவ்வெள்ளி முதலியன பிரத்தியட்சமாதல் வேண்டும். அவ்வாறாகின்ற தின்றாகையால் அவற்றைப் புறத்ததாகவே கோடல் வேண்டும்.

இதுவெனல் சந்நிதிக் (எதிரிடத்திற்) காம். இதுவெள்ளியன்று என்னும் ஞானத்தால் இதுவெனல் நிஷேதிக்கப்படுமாயின், அவ்வெள்ளியின்கண் தூரத்தன்மையாகிய அசந்நிதிதன்மையே பிராப்தமாகும். அத்தியந்த சந்நிதியான விஞ்ஞானத்தன்மை பிராப்தமாகாது. ஆகையால் இது வெள்ளியன்று என்னும் ஞானம் அவ்வெள்ளியின் இதுவென்பதை மாத்திரமே நிஷேதிக்கின்றதென்னும் அவர் கூற்றுமித்தையேயாம். இவ்விஞ்ஞானவாதி மதத்தின் அகலகண்டனம் நியாயப்பிரகாசம் இரண்டாவது பரிச்சேதத்தின்கண் கூறியிருத்தலின், ஆங்குணர்க.

## அந்நியதாக்கியாதி வாதம்.

நையாயிகர் பிரமஸ்தலத்தில் அந்நியதாக்கியாதியை யொப்புகின்றனர். அவர் கருத்தாவது:—இதுரஜதம் என்னும் பிரமஞானத்திற்கு விஷயமாகிய இரஜதம், எதிரேயுள்ள சுத்தியின்கண்ணில்லை. ஆனால் காந்தையின் கரத்தில் கைவளைமுதலிய வடிவாகத் தேசாந்தரத்தின்கண்ணேயுளது. அச்சத்திய ரஜதத்தின் அனுபவத்தாலுண்டாகும் சம்ஸ்காரமுடையவனுனது தோஷத்தோடுங்கூடிய நேத்திரத்திற்கு எப்போது அவ்வெள்ளிக்கொப்பான எதிரேயுள்ள

சுத்தியோடு சையோக சம்பந்தமுண்டாகின்றதோ, அப்போது அவ்வொப்புமைக் காட்சியால் சம்ஸ்காரம் உற்புத்தமாக, அவனுக்குத் தேசாந்தரத்திலுள்ள இரஜதத்தின் ஸ்மிருதியுண்டாகின்றது. அதன் பின்னர் தோஷவசத்தால் எதிரேயுள்ள சுத்தியே அத்தேசாந்தரீய இரஜதமாகப் பிரத்தியட்சமாகின்றது. அதாவது ஸ்மிருதி ஞானத்திற்கு விஷயமாகிய இரஜதத்தின் இரஜதத்தன்மைத்தர்மம் எதிரேயுள்ள சுத்தியின்கண் 'இதுரஜதம்' என்று பிரத்தியட்சமாய்க் காணப்படுகின்றது. இதனை அந்நியதாக்கியாதி என்பர். ஒருபொருள் வேறு உருவமாய்த்தோற்றுதல் அந்நியதாக்கியாதி எனப்படும். அது, எதிரேயுள்ள சுத்தி, இரஜதத்தன்மை உருவமாகவும்,எதிரேயுள்ள இரச்சு சர்ப்பத்தன்மை உருவமாகவும் தோற்றுதல் போலாம். இங்ஙனம் பிராந்திஞானத்தால் எதிரேயுள்ளசுத்தி முதலியவற்றிற் பெறப்படும் இரஜத முதலியவை எவையோ அவைகட்கு இதுரஜதமன்று என்னும் ஞானத்தால் நிஷேதமும் சம்பவிக்கக்கூடும்.

சங்கை:—தேசாந்தரத்திலுள்ள இரஜதம் எதிரேயுள்ள சுத்தியின்கண் விளங்குகின்றதெனக்கொளின், இது ரஜதம் என்னும் பிரமஞானத்திற்கு அவ்விரஜதாம்சத்தில் பிரத்தியட்சம சம்பவியாதாகும். ஏனெனின், விசிஷ்டப்பிரத்தியட்சத்தில் விசேஷண விசேஷ்யமாகிய விரண்டினோடு இந்திரியத்தின் சம்பந்தம்ே காரணமாகின்றது. எங்ஙனம் தண்டிபுருஷன் என்னும் விசிஷ்டப்பிரத்தியட்சத்தில் தண்டவிசேஷணத்துடனும், புருஷவிசேஷ்யத்துடனும் நேத்திரேந்திரியத்தின் சையோக சம்பந்தம் காரணமாமோ, அங்ஙனமே எதிருற்ற சுத்தி விசேஷ்யத்துடனே நேத்திரேந்திரியத்திற்குச் சையோக சம்பந்தமாம். ஆனல், அத்தேசாந்தரத்திலுள்ள இரஜத விசேஷணத்தோடு அந்நேத்திரேந்திரியத்திற்கு ஒரு சம்பந்தமுமின்று. ஆகலின் 'இதுரஜதம்' என்னும் பிரமஞானத்திற்கு அவ்விரஜத அம்சத்தின்கண் பிரத்தியட்சத்தன்மை உண்டாகாது. ஆனல், நையாயிகர்களாகிய நீவிரோ 'இதுரஜதம்' என்னும் பிரமஞானத்திற்கு அவ்விரஜத அம்சத்தின்கண் பிரத்தியட்சமே யொப்பியிருக்கின்றீர்.

சமாதானம்:—விசிஷ்டப் பிரத்தியட்சத்தில் விசேஷணத்தோடுஇந்திரியசம்பந்தத்தை நாம் காரணமெனக்கொள்வதில்லை.ஆனல் நாம் விசேஷ்யத்தோடு இந்திரியத்தின் சம்பந்தத்தையும்,விசேஷணத்தின் ஸ்மிருதிஞானத்தையும்,விசேஷணவிசேஷ்யமாகிய விரண்டின் சம்பந்தமின்மையைக் கவராமையையும் முதலிய சாமக்கிரிகளையே விசிஷ்டப்பிரத்தியட்சத்திற் காரணமென்றுரைப்புகின்றோம். அக்காரணக்கருவிகள் பிரமஸ்தலத்தில் உள்ளனவே. ஆண்டு,எதிருற்ற சுத்தியாகிய விசேஷ்யத்தோடு நேத்திரேந்திரியத்திற்குச் சையோக சம்பந்தமும், அவ்விரஜதமாகிய விசேஷணத்தின் ஸ்மிருதி ஞானமும்,தோஷவசத்தால் அவ்விசேஷணவிசேஷ்யமாமிரண்டின் சம்பந்தமின்மையைக் கவராமையுமிருக்கின்றன. அக்காரண சாமக்கிரிகளிருக்கவே 'இதுரஜதம்'என்று இரஜதத்தை விஷயப்படுத்தும் பிரமஞானத்திற் பிரத்தியட்சத்தன்மை சம்பவிக்கின்றதாகலின் அவ்விரஜதமாகிய விசேஷணத்தோடு நேத்திரேந்திரியத்தின் சம்பந்தத்திற்கு ஓர் பயனுமில்லை. ஒருகால் அவ்விசேஷணத்தோடு இந்திரியத்தின் சம்பந்தம் விசிஷ்டப்பிரத்தியட்சத்திற்குக் காரணமாதல் நியமமெனின்; 'அவன் இத்தேவதத்தன்'

என்னும் பிரத்தியபிஞ்ஞை யுணர்விற்குப் பிரத்தியட்சத்தன்மை உண்டாகாது. ஏனெனின், அத்தேசகால விசிஷ்டத்தன்மையாகிய அவன் என்னும் விசேஷணம் கடந்ததாதலால், அதனோடு நேத்திரேந்திரியத்திற்குச் சம்பந்தமே சம்பவியாது. கூறிய முறைப்படி அவ்விசேஷணஞானம் அவ்விசிஷ்டப்பிரத்தியட்சத்திற் காரணமென்றங்கீகரிக்கின், அவன் என்னும் விசேஷணத்தின் ஸ்மரணஞானமும், தேவதத்தனோடு நேத்திந்திரியத்திற்குச் சையோகசம்பந்தமுமிருக்கின்றனவாகலின் பிரத்தியபிஞ்ஞை யுணர்வின்கட் பிரத்தியட்சத்தன்மை பொருந்தும்.

**சங்கை:**—'அவன் இத்தேவதத்தன்' என்னும் ஞானத்திற்குத் தேவதத்தனென்னும்புருஷஅம்சத்திற் பிரத்தியட்சமும், அவன் என்னும் அம்சத்திற் பிரத்தியட்சமின்றி ஸ்மிருதியு மிருக்கின்றன. ஸ்மிருதி ஞானத்தில் இந்திரியத்திற்கும் பொருட்குமுள்ள சம்பந்தம் அபேட்சிக்கப் படுகின்றதில்லை.

**சமாதானம்:**—'அவன் இத்தேவதத்தன்' என்னும் ஞானத்திற்கு அவன் என்னும் அம்சத்தில் ஸ்மிருதி யங்கீகரிக்கின்; அவ்வொரே ஞானத்திற் பிரத்தியட்சத்தன்மை ஸ்மிருதித்தன்மை யென்னுமிருதருமங்கட்குக் கலப்புக்குற்றம் வரும்; அதனால் ஜாதிபாதிக்கப்படும். பிரத்தியட்சத்தன்மை, ஸ்மிருதித்தன்மை யென்னு மிருதர்மங்களில் ஜாதித்தன்மையே சம்பவியாதாகும். ஆகவே 'அவன் இத்தேவதத்தன்' என்னும் ஞானத்திற்கு அவன் என்னும் அம்சத்திலும் பிரத்தியட்சமே யொப்பவேண்டும். இவ்வாறு இந்திரிய சம்பந்தமன்றியே எங்ஙனம் அவன் என்னும் அம்சத்திற் பிரத்தியட்ச முண்டாகின்றதோ, அங்ஙனமே அத்தேசாந்தரத்துள்ள இரஜதத்திற்கு இந்திரிய சம்பந்தமன்றியே எதிருற்றசுக்தியில் 'இதுரஜதம்' என்னும் விசிஷ்டபிரமப்பிரத்தியட்சம் சம்பவமாம்.

அல்லது அத்தேசாந்தரத்துள்ள இரஜதத்தோடு நேத்திரேந்திரியத்திற்கு அவ்விரஜதத்தை விஷயப்படுத்தும் ஸ்மிருதி ஞானமாகிய அலௌகிகசம்பந்தமும், எதிருற்ற சுக்தியோடு அவ்விந்திரியத்திற்குச் சையோகமாகிய இலௌகிக சம்பந்தமுமிருக்கின்றனவாகலின் 'இதுரஜதம்' என்னும் பிரமஞானத்திற்கு அவ்விரஜத அம்சத்திற் பிரத்தியட்சத்தன்மை நிகழும். நையாயிகர் சையோகம், சையுக்தசமவாயம், சையுக்தசமவேதசமவாயம், சமவாயம், சமவேத சமவாயம், விசேஷணத்தன்மை என்னும் ஆறுசம்பந்தங்களை இலௌகிக சம்பந்தமெனவும்;சாமானியலட்சணம்,ஞானலட்சணம், யோகஜதர்மலட்சணம் என்னும் மூன்றுசம்பந்தங்களை அலௌகிக சம்பந்தமெனவுங் கூறுவர். அவ்விருவகைச் சம்பந்தங்களை நியாயப்பிரகாசம் ஆறுவது பரிச்சேதம் பிரத்தியட்ச நிருபணத்தில் விஸ்தாரமாய்க் கூறியிருக்கின்றோம். வேண்டுவோர்ஆண்டறிந்து கொள்க. இவ்வாற்றால்'இதுவெள்ளி' என்னும் பிரமஞானம் அந்நியதாக்கியாதி வடிவமேயாகலின் அந்தப் பிரமஞானத்திற்கு விஷயமாகிய இரஜதம் மித்தையெனல் பொருந்தாது.

இவ்வந்நியதாக்கியாதிவாதி நையாயிகரின் மதமும் அசங்கதம். ஏனெனின், 'இதுவெள்ளி' என்னும் பிரமஞானத்திற்கு விஷயமாகிய வெள்ளிக்கு

தேசாந்தரஸ்திதி யங்கீகரிக்கின்; அவ்வெள்ளியோடு நேத்திரேந்திரியத்திற்குச் சையோகசம்பந்தம் சம்பவியாது. இந்திரிய சம்பந்தமில்லாத வஸ்து பிரத்தியட்சமாகாதாகலின், அவ்விரஜத ஞானத்திற்குப்பிரத்தியட்சத் தன்மையே யுண்டாகாது. 'இதுவெள்ளி' என்னும் பிரமஞானநந்தரம். 'இரஜதத்தை நேராய்க்காண்கின்றேன்'என்னுமநுபவம் யாவருக்கு முண்டாகின்றது. அவ்வநுபவத்தால் அவ்விரஜதஞானத்திற்குப் பிரத்தியட்சத்தன்மையே சித்தமாம்.

அல்லது நையாயிகர் விசேஷணத்தின் ஸ்மிருதி ஞானத்தையும், விசேஷியத்தோடு இந்திரியத்தின் சம்பந்தத்தையும், விசிஷ்டப் பிரத்தியட்சத்திற் காரணமென்றேப்பினர்; அது பொருந்தாது. ஏனெனின், அச்சாமக்கிரிகள், 'தண்டீபுருஷன்' என்றல் முதலிய வெல்லாவிசிஷ்டப்பிரத்தியட்சங்களில் காரணமாதல் காணப்படுகின்றதில்லை. ஆனல், விசேஷண விசேஷியமாகிய இரண்டினேடுள்ள இந்திரியத்தின் சம்பந்தமே காரணமாகக் காணப்படுகின்றது. மேலும் 'அவன் இத்தேவதத்தன்' என்னும் பிரத்தியபிஞ்ஞையினுணர்வு கேவலம் தேவதத்த அம்சத்திற் பிரத்தியட்சமும், அவன் என்னும் அம்சத்திற் பிரத்தியட்சமின்றி ஸ்மிருதியுமாகின்றது. 'அவன் இத்தேவதத்தன்' என்னும் பிரத்திய பிஞ்ஞையினுணர்விற்கு அவன் என்னும் அம்சத்தில் ஸ்மிருதி யங்கீகரிக்கின்; நையாயிகர், பிரத்தியட்சத்தன்மை ஸ்மிருதித்தன்மை என்னுமிரு தர்மங்களின் ஜாதித்தன்மைகள், கலப்புக்குற்றத்தால் பாதிக்கப்படுமெனக் கூறினர்; அது அசங்கதம். ஏனெனின், வேதாந்த சித்தாந்தத்தில் அவித்தைக்கு அதிரிக்தமான(மீறின)தோர் சடசாதி அங்கீகாரமில்லை.ஆனல்,அவ்வவித்தையே அவ்வக்காரியத்தின்கண் அநுகதமாக (உள்ளீடாக) நின்று அவ்வச்சாதிவடிவாகத்தோன்றுகின்றதாகலின் சித்தாந்தத்தில் அச்சாதிக்குக் கலப்புக்குற்றம் வருமெனல் பொருந்தாது.

அல்லது நையாயிகர் அத்தேசாந்தரத்துள்ள இரஜதத்தோடு நேத்திரேந்திரியத்திற்கு ஞானவடிவ சம்பந்தத்தை யொப்பினர்; அதுவும் அசங்கதம். ஞானத்திற்கும் நேத்திரத்தின் சம்பந்த முண்டெனின், எங்கே ஒருவனுக்கு மலையின்கண் வன்னியின் அநுமிதி ஞானமுண்டாகின்றதோ, அங்கணும் அவ்வன்னியின் பிரத்தியட்ச ஞானமேயுண்டாதல் வேண்டும். ஏனெனின், 'மலை வன்னியுடைத்து' என்னும் ஞானத்தில் மலை விசேஷியமும் வன்னி விசேஷணமுமாம். ஆண்டு மலையினுடனே நேத்திரேந்திரியத்திற்குச் சையோக சம்பந்தமாம். வன்னியோடு அவ்வன்னியின் ஸ்மிருதிஞான சம்பந்தமாம். அவ்விந்திரிய அர்த்த சம்பந்தத்தாற்றேன்றுதலால் அவ்வன்னிஞானத்திற்குப் பிரத்தியட்சத்தன்மையே யுண்டாதல் வேண்டும்; அதனல் அனுமானப்பிரமாணமே இன்றாய் முடியும். ஆகவே அந்த ஞானத்தை இந்திரிய சம்பந்தமெனல் பொருந்தாது. அல்லது 'இதுவெள்ளி' என்னும் பிரமஞானத்தின் விஷயமாகிய வெள்ளிக்குத் தேசாந்தரத்தில் ஸ்திதி யங்கீகரிக்கின் வெள்ளிவிருப்புடையோனுக்கு அத்தேசாந்தரத்திலேயே பிரவிருத்தியுண்டாதல் வேண்டும்; எதிருற்றதிற் பிரவிருத்தியுண்டாதல் கூடாது. ஞானம்யாண்டு தான்விஷயப்படுகின்றதோ ஆண்டே புருஷனுக்குப் பிரவிருத்தி நிகழ்தல் நியமமாகலின். தேசாந்

தரத்துள்ள இரஜதம் எதிருற்ற சுக்தியிற் பிரதீதியாகின்றது என்னும் அந்நிய தாக்கியாதிவாதி நையாயிகமதம் அத்தியந்தம் அசங்கதம்.

## அநிர்வசனீயக்கியாதி வாதம்.

இவ்வாறு பிரமஸ்தலத்தில் அக்கியாதி, அசத்கியாதி, சத்கியாதி, ஆத்மக்கியாதி, அந்நியதாக்கியாதி, எனமுற்கூறிய ஐந்துகியாதிகள் பொருந்தா. ஆகவே; ஆறுவது அநிர்வசனியக்கியாதியே அங்கிகரிக்கவேண்டும். அஃதாவது பிரமகாலத்தில் சுத்தியின்கண் அநிர்வசனிய இரஜதம்உற்பத்தியாகின்றதெனக் கொள்ளவேண்டும்.

**சங்கை:**—உலகப்பிரசித்தமான வெள்ளியினுற்பத்தி அவயவமுதலிய சாமக்கிரியானுண்டாகின்றது. அவ்வவயவசாமக்கிரி அச்சுத்திதேசத்திலின்று. ஆகலின் அச்சுத்தியில் இரஜதத்தின் உற்பத்தி சம்பவியாது. அறம்பாவமாகிய அதிருஷ்டமே அவ்விரஜதத்தை உற்பத்திசெய்யுஞ் சாமக்கிரியெனின்; அது பொருந்தாது. ஏனெனின், அவ்வவயவமுதலிய திருஷ்டசாமக்கிரியன்றி அவ்வதிருஷ்டம் ஓர்காரியத்தையும் உற்பத்திசெய்யாது. ஒருகால் அத்திருஷ்ட சாமக்கிரியன்றியே அவ்வதிருஷ்டம் காரியோற்பத்தியைச் செய்யுமெனின்; மண், குலாலன்முதலிய திருஷ்டசாமக்கிரி அன்றியே அவ்வதிருஷ்டத்தாற் கடமுதலியனவு முற்பத்தியாதல் வேண்டும்.

**சமாதானம்:**—பிரசித்தமான இரஜதத்தை உற்பத்திசெய்யும் அவயவமுதலிய இலௌகிக சாமக்கிரிகள் எவையோ, அவைகள் அந்தப் பிரமத்திற்கு விஷயமாகிய இரஜதத்தை உற்பத்திசெய்வனவன்று. ஆனால், அவ்விலௌகிக சாமக்கிரிகளினும் வேறான சாமக்கிரியே அவ்விரஜதத்தை உற்பத்தி செய்வதாம். அதைக்காட்டுதும்:—உண்மையான இரஜதத்தின் அனுபவத்தாற் பிறந்த சம்ஸ்காரமுடையவனது நேத்திரேந்திரியத்திற்கு எப்போது எதிருற்ற சுக்தியோடு சையோகசம்பந்த முண்டாகின்றதோ, அப்போதே அந்நேத்திரவாயிலாக வெளியே புறப்பட்ட அந்தக்கரணவிருத்தி அச்சுக்தியின் இதமாகாரமாயும், சாகசக்கியாகார (இடைவிட்டொளிர்தலாகார) மாயும் உற்பன்னமாகின்றது. அச்சாகசக்யமாகிய ஒப்புமைக்காட்சியால் முன்பார்த்த அவ்விரஜதத்தின் சம்ஸ்காரம் உற்புத்தமாகின்றது. அவ்வுற்புத்த சம்ஸ்காரமாகிய தோஷத்தைச்சககாரியாயுடைய, இஃதெனும் அம்சாவச்சின்னசைதன்னியத்திலுள்ளதும், அச்சுக்தியின் சுக்தித்தன்மை, கறுமுதுகுடைமை, முக்கோணமுதலிய விசேஷ அம்சத்தை மறைத்துள்ளதுமாகிய அவித்தை எதுவோ, அது க்ஷோபத்தை (காரியாபிமுகா வஸ்தையை) யடைந்ததாய் இரஜதாகார பரிணமத்தையும், அவ்விரஜதத்தை விஷயப்படுத்தும் ஞானகாரபரிணமத்தையு மடைகின்றது. இதனே அநிர்வசநீயக்கியாதி எனப்படும். இவ்வாறே இரச்சு சர்ப்பமுதலிய எல்லாப் பிரமஸ்தலங்களிலும் உணர்ந்துகொள்க.

**சங்கை:**—பிரமஸ்தலத்தில் அவ்வவித்தை மேற்கூறியவாறு இரஜத முதலிய பொருள்களினகார பரிணமத்தையோ அடைக. ஆனல் அதற்கு ஞானகாரபரிணம மங்கீகரித்தல் அசங்கதம். ஏனெனின், அவ்வவித்தைக்கு

ஞானகாரபரிணும மொப்புவதில் ஓர்பயனுமின்று. பயனின்றி ஓர்பொருளை யங்கீகரித்தல் வியர்த்தமேயாம். இதுரஜதம் என்னும் வியவகாரத்தின் பொருட்டு அவ்வவித்தைக்கு இரஜதாகாரவிருத்தி அவசிய மொப்பவேண்டுமெனின்; அதுபொருந்தாது. ஏனெனின், சுகதுக்கமுதலியவைகளைப்போன்று, பிராதிபாசிக இரஜதமும் சாட்சிசைதன்னியத்தினிடத்தே அத்தியஸ்தமாம். ஆகவே அவ்விரஜதாகார விருத்தியன்றியே அச்சாட்சிசைதன்னியத்தால் அவ்விரஜதத்தை விஷயப்படுத்தும் வியவகாரம்பெறப்படுகின்றது; அவ்வியவகாரத்தின் பொருட்டு இரஜதாகார அவித்தியா விருத்தியை யங்கீகரித்தல் நிட்பலம்.

அவ்விரஜதாபரோட்சத்தன்மையைப் பெறும்பொருட்டே அவ்வவித்தியாவிருத்தியின் அங்கிகாரமாமெனின்; அதுவும் பொருந்தாது. ஏனெனின், அநாவிருத (மறைவுபடாத) சாட்சிசைதன்னியத்தோடு தாதான்மியமிருத்தலால் சுகதுக்காதிகளைப்போன்று அவ்வவித்தியா விருத்தியன்றியே அவ்விரஜதமும் அபரோட்சமாதல் கூடும். ஆகலின் அவ்விரஜதாபரோட்சத்தன்மையின் பொருட்டு அவ்வவித்தியாவிருத்தியை யங்கீகரித்தலும் நிட்பயன்.

அவ்விரஜதாகார அவித்தியாவிருத்தியை யங்கீகரியாவிடின்; அவ்விரஜதத்திற்குக் காலாந்தரத்தில் ஸ்மரணையுண்டாதல் கூடாது. ஏனெனின், அநுபவத்தின் நாசத்தாற்றூன் றும்சம்ஸ்காரங்களினுனே ஸ்மரணஞான முண்டாகின்றது. நித்தியமாதலாற் சாட்சிசைதன்னிய வனுபவத்திற்கு நாசஞ்சம்பவியாது. ஆனல் அவ்விரஜதாகாரஅவித்தியாவிருத்தியை யங்கீகரித்தலால்அவ்விருத்திநாசமாக, அவ்விருத்தியுபகித வடிவான சாட்சிக்கும் நாசமுண்டாவதால், அவ்விரஜதத்தை விஷயப்படுத்தும் சம்ஸ்காரமும், அச்சம்ஸ்காரத்தால் ஸ்மிருதி ஞானமுமுண்டாதல் கூடுமாகலின், அவ்விரஜதத்தின் ஸ்மிருதியைத் தோற்றுவிக்கும் சம்ஸ்காரத்தினுற்பத்தியின் பொருட்டு, அவ்விரஜதாகார அவித்தியா விருத்தியை அவசியம் அங்கிகரிக்கவேண்டுமெனின்; அதுவும் பொருந்தாது. ஏனெனின், அவ்விரஜதப் பிரமத்திற்கு முன் உற்பத்தியான இதமாகாரவிருத்தியின் நாசத்தானே அவ்விருத்தியுபகிதத்தன்மைவடிவான சாட்சியின்நாசமு முண்டாவதால் அவ்விரஜதத்தை விஷயப்படுத்தும் சம்ஸ்காரத்தினுற்பத்தியும், அந்த சம்ஸ்காரத்தினின்றும் ஸ்மிருதியின் உற்பத்தியும் சம்பவிக்கின்றன.

அல்லது சுகதுக்கமுதலிய விஷயங்கள் நாசமாகுங்கால், அச்சுகதுக்கமுதலிய உபகித சாட்சியும் நாசமுறுதலால் எங்ஙனம் அச்சுகதுக்காதிகளை விஷயப்படுத்தும் சம்ஸ்காரத்தின் உற்பத்தியும், ஸ்மிருதிஞானத்தின் உற்பத்தியும் நிகழுமோ, அங்ஙனமே அவ்விரஜத விஷயம் நாசமாக, அவ்விரஜத உபகித சாட்சியும் நாசமாவதால் அவ்விரஜதத்தை விஷயப்படுத்தும் சம்ஸ்காரத்தினுற்பத்தியும் ஸ்மிருதி ஞானத்தினுற்பத்தியும் நிகழும். ஆகலின் அவ்விரஜதத்தை விஷயப்படுத்தும் ஸ்மிருதியைத் தோற்றுவிக்கும் சம்ஸ்காரத்தினுற்பத்தியின் பொருட்டு அவ்விரஜதாகார அவித்தியாவிருத்தியை யங்கீகரித்தலும்நிட்பயன்.

சமாதானம்:—அவ்விரஜதத்தின் ஸ்மிருதியைத் தோற்றுவிக்கும் சம்ஸ்காரம் எதுவோ, அதன் உற்பத்தியின் பொருட்டே அவ்விரஜதாகார அவித்தியா

விருத்தியின் அங்கீகாரமாம். ஏனெனின், அவ்விரஜதானுபவவடிவான சாட்சி சைதன்னியம் உற்பத்திநாசமின்றி நித்தியமாம். ஆகலின் அதற்குச் சொரூபமாகவோ நாசஞ்சம்பவியாது. ஆனல் அவ்விரஜதாகார அவித்தியாவிருத்தியை யங்கீகரிக்குங்கால் அவ்விருத்தி நாசத்தால் அவ்விருத்தியுபகித சாட்சியும் நாசமுறும், அதனல் இரஜதத்தை விஷயப்படுத்தும் சம்ஸ்காரத்தினுற்பத்தியும் அச்சம்ஸ்காரத்தால் ஸ்மிருதி ஞானத்தினுற்பத்தியும் உண்டாம். ஆகவே அவ்விரஜதஸ்மிருதியைத் தோற்றுவிக்கும் சம்ஸ்காரத்தினுற்பத்தியின்பொருட்டு அவ்விரஜதாகார அவித்தியாவிருத்தியை யவசியம் அங்கிகரிக்கவேண்டும். அன்றியும் அவ்வாதி எவ்விதமாகார விருத்தியின் நாசத்தால் இரஜதஸ்மிருதியைத் தோற்றுவிக்கும் சம்ஸ்காரத்தின் உற்பத்தியைக் கூறினனே; அக்கூற்றும் அசங்கதம். ஏனெனின், அனுபவம், சம்ஸ்காரம், ஸ்மிருதி என்னும் மூன்றும் சமானவஸ்துவை விஷயப்படுத்துந்தன்மையானே அவைகளுக்கு ஒன்றுக்கொன்று காரியகாரணபாவமுண்டு. ஒரு வஸ்துவை விஷயப்படுத்தும் அனுபவத்தால் வேறு வஸ்துவை விஷயப்படுத்தும் சம்ஸ்காரமாவது அல்லது ஸ்மிருதியாவது உண்டாகாது. ஒருகால் அவ்வாறுண்டாயின்கடத்தை விஷயப்படுத்தும் அனுபவத்தால் படத்தை விஷயப்படுத்தும் சம்ஸ்காரமும், ஸ்மிருதியும் உண்டாதல் வேண்டும். ஆகலின் அவ்விதமாகார விருத்தியினின்றும் இரஜதத்தை விஷயப்படுத்தும் சம்ஸ்காரத்தினுற்பத்தியும் ஸ்மிருதியினுற்பத்தியும் நிகழுமெனல் பொருந்தாது

அன்றியும் அவ்வாதியால் இரஜத விஷயம் நாசமாக; அவ்விரஜத சம்ஸ்காரம் உற்பத்தியாகுமென்று முன் கூறப்பட்டது. அதுவும் பொருந்தாது. ஏனெனின், உலகத்திற் கடமுதலிய விஷயங்களின் நாசத்தால் அக்கடாதிகளின் சம்ஸ்காரத்தினுற்பத்தி காணப்படுவதில்லை. ஆனல் அக்கடாதிகளிருக்குங்காலத்தே அக்கடமுதலியவற்றின் ஞானநாசத்தால் சம்ஸ்காரங்களின்உற்பத்தி காணப்படுகின்றது. ஆதலால் எங்கும் ஞானத்தின் நாசத்தானே சம்ஸ்காரங்களினுற்பத்தி அங்கீகரிக்க வேண்டும். சுகதுக்காதிகளில் அச்சுகதுக்க முதலிய விஷயங்களின் நாசத்தானே சம்ஸ்காரங்களினுற்பத்தி காணப்படுகின்றதென்று கூறின்; அக்கூற்றுஞ் சம்பவியாது. ஏனெனின், அங்கும் சம்ஸ்கரங்காளினுற்பத்தியின் பொருட்டுச் சுகதுக்கமுதலிய வாகாரமான விருத்திகளை அங்கீகரிக்கப்படும். அல்லது அந்தக்கரணத்திற்கும் அதன் சுகதுக்காதி தர்மங்களுக்கும் விருத்தியன்றியே சாட்சிபாசியத்தன்மையும், அச்சுகதுக்காதிகள் நாசமாக அவ்வுபகித சாட்சியின் நாசத்தால் சம்ஸ்காரங்களின் உற்பத்தியும் நிகழுமெனினும்; அவித்தியாகாரியமான பாகியகடமுதலிய பொருள்களின் சம்ஸ்காரத்தினுற்பத்தியோ, அக்கடமுதலியவாகார விருத்தியின் நாசத்தாற்றான் காணப்படுகின்றது. அதுபோலவே அந்தப் பிராதிபாசிகரஜதமும் அவித்தியா காரியமாகலின் அவ்விரஜதாகாரவிருத்தியின் நாசத்தினனே அவ்விரஜத சம்ஸ்காரத்தினுற்பத்தி யங்கீகரிக்கவேண்டும். ஒருகால் அவ்வாறங்கீகரியாவிடின்; ஆசாரியர்கள் தம் நூற்களினிடத்து சொப்பனத்தில் அச்சொப்பனப் பொருள்களினகாரமான விருத்தியையும், ஜாக்கிரசொப்பனங்களில் அஹம்ஆகார விருத்தியையு மங்கீகரித்துள்ளவை எவையோ, அவையனைத்தும்

அசங்கதமாகும். ஏனெனின், விருத்தியன்றியும் கேவலம் சாட்சியால் அப்பொருள்கள் விளங்குகின்றன. ஆதலால் அவ்விரஜத ஸ்மிருதிக்கு ஏதுபூதமான சம்ஸ்காரத்தினுற்பத்தியின் பொருட்டு அவ்வநிர்வசனீயஇரஜதாகார அவித்தியாவிருத்தியை யவசிய மொப்பவேண்டும். ஈண்டுச் சிலநூலாசிரியர் கூறுவதாவது:—கடாகாரவிருத்தி உபகிதசாட்சிசைதன்னியத்தின்கண்ணுள்ள கடத்தின் தாதான்மியமே எவ்வாறு அக்கடத்தின் அபரோட்சத்தன்மையாமோ, அவ்வாறே அந்தப்பிராதிபாசிக ரஜதத்தின்கண்ணுள்ள அபரோட்சத் தன்மையைப் பெறும்பொருட்டே அவ்விரஜதாகார அவித்தியாவிருத்தியை யவசியம் அங்கீகரித்தல் வேண்டும். அவ்விருத்தியன்றி அவ்விரஜதத்தின்கண் அவ்வபரோட்சத்தன்மையே சம்பவியாது

சில ஆசிரியர்கள் இங்ஙனங் கூறுகின்றனர்:—எவ்வெவ்வியவகாரம் ஓர்போதையதாமோ, அவ்வவ்வியவகாரம் ஓர்போதைய ஞானத்தானே சாத்தியமாம். எங்ஙனம் 'இது கடம்' என்னும் ஓர்போதைய வியவகாரம் ஓர் போதைய கடஞானத்தாற் சாத்தியமாமோ, அங்ஙனமே 'இது ரஜதம்' என்னும் வியவகாரமும் ஓர் போதையதாமாகலின், அவ்விரஜதமும் அதை விஷயப்படுத்தும் ஓர் போதைய ஞானத்தினுனே சாத்தியமாம். சாட்சிவடிவ ஞானத்தின்கண் ஓர்போதைய தன்மை சம்பவியாது. ஆனுல் அவ்வவித்தியாவிருத்தி வடிவ ஞானத்திலேயே அவ்வோர்போதைய தன்மை சம்பவிக்கும். ஆதலால் அவ்விரஜதவியவகாரத்தில் ஓர்போதையதன்மை சித்திக்கும்பொருட்டு அவ்விரஜதத்தைக்கோசரிக்கும் அவித்தியாவிருத்தியை அவசியம் அங்கிகரிக்கவேண்டும். ஒருகால் சாட்சி வடிவ நித்திய ஞானத்தானும் அவ்வோர்போதைய வியவகாரம் உண்டாமெனின்; கடமுதலிய பொருள்கள்களின் அவ்வோர் போதைய வியவகாரமும் அச்சாட்சி சைதன்னியத்தானே சித்திக்கக்கூடும். இதனுல் கடமுதலிய வாகாரமான அந்தக்கரணவிருத்தி சித்தியாது.

மற்றுஞ் சிலர் பிராதிபாசிக ரஜதமுதலிய ஆகாரமான அவித்தியாவிருத்தியைக் கண்டித்திருக்கின்றனர். அது பிரௌடிவாதத்தானெனவறிக. தனது மதியின் மேம்பாட்டையறிவித்தல் பிரௌடிவாதமாம். ஆதலால் மேற்கூறியவாறு பிரமஸ்தலத்தில் அவ்வவித்தையே ரஜதமுதலிய விஷயாகாரமாயும், அவற்றின்ஞானுகாரமாயும் பரிணமிக்கின்றதென்னும் அர்த்தம் நிர்தோஷமாகச் சித்தித்தது.

சங்கை:—பிரமஸ்தலத்திலே சுத்தியின்கண் அவித்தையினின்றும் இரஜதோற்பத்தி உண்டாகுமேல் ஆகுக. அவ்விரஜதம் மித்தையாமாறு எங்ஙனம்?

சமாதானம்:—உலகின்கண் இந்த்ரஜாலிகனது மாயையாற் செய்யப்பட்ட பொருள்கள் மித்தையாகவே காணப்படுகின்றன. அதுபோல் அவித்தியா காரியமாதலால் அவ்விரஜதமுதலியனவும் மித்தையே. இரஜமுதலியவற்றின் மித்தியாத்தன்மையில் முற்கூறிய திருஷ்டார்த்தாபத்தியே பிரமாணமாம்.

## சுருதார்த்தாபத்தி நிரூபணம்.

தரதி ஶோகமாத்மவித் (இ-ள்) ஆன்மஞானமுடையவன் சோகத்தை நாசஞ்செய்கின்றான். ஈண்டுச் சோக சப்தத்தாற் பிரமாத்ருத்தன்மை, கர்த்திருத்தன்மை முதலிய வெல்லாச் சம்பந்தங்களையும் கிரகிக்கவேண்டும். இச்சுருதி வசனத்தாற் கேட்கப்பட்ட பந்தம் ஆன்மஞானத்தால் நிவிர்த்தியாம் என்பது எதுவோ, அது அப்பந்தத்தைச் சத்தியமென்றொப்புவதிற் சம்பவியாது. ஏனெனின், சத்தியவஸ்து ஞானத்தால் நிவிர்த்தியாகாது; ஆனால் கிரியையினாற்றான் நிவிர்த்தியாகும். அது, தடிகொண்டடித்தல் முதலிய கிரியையாற் கடமுதலியன நிவிர்த்தியாதல் போலும். மித்தியாவஸ்து, ஞானத்தானே நிவிர்த்தியாம். அது ரச்சுசர்ப்பத்தின் நிவிர்த்தி இரஜ்ஜுஞானத்தா லுண்டாதல் போலவாம். ஆகவே அவ்வான்மஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந்தன்மை அப்பந்தமித்தியாத்தன்மையன்றிச் சம்பவியாததாய் அப்பந்தத்தின் மித்தியாத்தன்மையைக் கற்பிக்கின்றது. இதுவே சுருதார்த்தாபத்தியாம்.

**சங்கை:**—சத்தியவஸ்து, ஞானத்தால் நிவிர்த்தியாகாதென்று நீவிர்கூறியது அயுக்தம். ஏனெனின், ஸ்ரீராமராற் கட்டப்பட்ட சேதுவின் தரிசனத்தால் சத்தியமான பாபம் நிவிர்த்தியாகுமென்று சாஸ்திரப் பிரமாணத்தானறியப்படுகின்றது. மேலும் கருடத்தியானத்தாற் சத்தியமான விஷத்தின் நிவிர்த்தியும் காணப்படுகின்றது. இவ்வாறே சத்தியமான பந்தமும் ஆன்மஞானத்தால் நிவர்த்தியாகாதெனல் என்! ஆதலால் அப்பந்தம் மித்தையாதலின்றியும் ஞானத்தால் நிவிர்த்தியாமாறு கூடும்.

**சமாதானம்:**—சத்தியபந்தம் ஞானத்தால் நிவர்த்தியாமென்பதில் நீவிர் கூறிய சேதுதரிசனமும் கருடத்தியானமுமாகிய திருஷ்டாந்தங்கள் தார்ஷ்டாந்தத்திற்கு விஷமம் (சரியற்றது). அவற்றால் மேற்கூறிய பொருளின் சித்தியுண்டாகாது. அவ்விஷமத்தன்மை எங்ஙனேயெனிற் கூறுதும்:—சேதுவின் கேவலதரிசனமாத்திரத்தாற் பிரம்மஹத்தியாதிபாபங்கள் நிவிர்த்தியாகா. ஆனால், தர்மசாஸ்திரத்திற் கூறியுள்ள பிரம்மசரியம், சௌசம், சத்தியபாஷண (உண்மையுரைத்தல்) முதலிய நியமங்களோடுங்கூடிய அச்சேதுதரிசனமே பாபத்தைப் போக்கடிக்கும். ஒருகால் அந்நியமங்களின்றியே கேவலம் அச்சேதுதரிசனமாத்திரத்தானே பாபம் நிவிர்த்தியாகுமெனின்; ஆங்குறையும் மிலேச்சர் முதலியோருக்கும் அச்சேது தரிசனத்தால் பாபநிவிர்த்தி யுண்டாதல் வேண்டும்.

அச்சேது தரிசனமாத்திரத்தால் அம்மிலேச்சர் முதலியோருக்கும்பாபகர்மத்தின்நிவிர்த்தி உண்டாகுமெனின்;அச்சேதுவைத்தரிசிக்கும் கர்த்தாவைக் குறித்து பாபநிவிர்த்தியின் பொருட்டு அந்நியமங்களை விதித்த தர்மசாஸ்திரமே போலியாகும். கிரியையாகிய நியமங்களுடன் கலந்துள்ளதால் அச்சேது தரிசனமும் கிரியை வடிவேயாகும்; ஞானவடிவாகாது. அந்தக்கிரியை வடிவான சேதுதரிசனத்தால் அச்சத்தியபாபமும் நிவிர்த்தியாகக்கூடும்; அவ்வாறே கருடத்தியானமும் மானசக்கிரியையாகலின் அந்தக்கிரியையாகிய தியானத்தால்

அச்சத்திய விஷமும் நிவிர்த்தியாதல் கூடும்; என்றிங்ஙனங்கூறின்; அதுபொருந்தாது. ஏனெனின், ஈண்டுப்பிரசங்கத்தில் வேறுசாதனத்தின் அபேட்சையின்றி கேவலம் ஆன்மஞானத்தானேயே பந்தம் நிவிர்த்தியாமென்று சுருதி கூறுகின்றது. அந்த ஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந்தன்மை அப்பந்தத்தைச் சத்தியமென்பதிற் சம்பவியாது. ஆகவே அந்த ஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந்தன்மை அப்பந்தத்தின் மித்தியாத்தன்மையைக் கற்பிக்கின்றது.

## பிரமாத்ருவிசாரம்.

**சங்கை:**—முன்னே, ஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந்தன்மையாற் பிரமாத்திருத்தன்மை முதலிய பந்தம் மித்தையெனல் துணியப்பட்டது. ஆண்டுப்பிரமாதா வென்பதுயாது? அதாவது பிரமாதாவெனல் ஆன்மாவையா? அல்லது அந்தக்கரணத்தையா? 𑌅𑌸𑌙𑍍𑌗𑍋 𑌹𑍍𑌯𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 (அசங்கனன்றோ இப்புருஷன்)—என்னுந்தொடக்கத்துச் சுருதிகள் ஆன்மாவை அசங்கமென்றறைந்துள்ளன. பிரமாஞானத்தின் ஆசிரயத்தைப் பிரமாதாவென்பராகலின், அவ்வசங்க ஆன்மாவில் பிரமாதாத்தன்மை சம்பவியாது. அவ்வாறே அந்தக்கரணத்திலும் பிரமாதாத்தன்மை சம்பவியாது. ஏனெனின், அவ்வந்தக்கரணம் பூதங்களின் காரியமாவதாற் கடாதிகளைப்போன்று ஜடமாம். அன்றியும் பிரமாத்திருத்தன்மை முதலிய தர்மங்கள் சேதனத்தினவாமாகலின் ஜட அந்தக்கரணத்தினிடத்து அந்தப்பிரமாதாத்தன்மையே சம்பவியாது.

**சமாதானம்:**—கேவல ஆன்மாவையும், கேவல அந்தக்கரணத்தையும் பிரமாதாவென்று யாம் அங்கிகரிப்பதில்லை. ஆனால், யாம் அந்தக்கரண விசிஷ்ட சைதன்னியத்தையே பிரமாதாவென் றங்கிகரிக்கின்றோம். அந்தப் பிரமாதாவே கர்த்தாவும் போக்தாவுமாம். பிரமாஞானத்திற்கு ஆசிரயமாவதால் அவ்வந்தக்கரண விசிஷ்ட சைதன்னியம் பிரமாதாவெனப்படும். முயற்சியாகிய கிருதிக்கு ஆசிரயமாவதால் கர்த்தாவெனப்படும். தர்மாதர்மங்களாற்றோன்றிய சுகதுக்க நுகர்ச்சிக்கு ஆசிரயமாவதால் போக்தாவெனப்படும். பிரமாத்திருத்தன்மை, கர்த்திருத்தன்மை, போக்திருத்தன்மை என்னும் மூன்றும் அவ்வந்தக்கரண விசிஷ்ட சைதன்னியமான பிரமாதாவினதே தர்மங்களாம். கேவல ஆன்மாவிற்கும், கேவல அந்தக்கரணத்திற்கும் பிரமாத்திருத்தன்மை முதலியதர்மங்களின்று.

**சங்கை:**—அவ்வந்தக்கரண விசிஷ்ட சைதன்னியமான பிரமாதா, அவ்வந்தக்கரண,சைதன்னியங்களைவிட வேறன்று. அன்றியும் அந்தப்பிரமாத்திருத்தன்மைத் தர்மம் கேவல சைதன்னியத்திலாவது கேவல அந்தக்கரணத்திலாவது இராது. ஆகலின் அந்தப் பிரமாத்திருத்தன்மை அவ்வந்தக்கரண விசிஷ்ட சைதன்னியத்தினிடத்தே இருக்குமெனல் எங்ஙனம்?

**சமாதானம்:**—கேவல ஆன்மாவிலும் கேவல அந்தக்கரணத்திலும் பிரமாதாத்தன்மை எங்ஙனம் வாஸ்தவமாயிராதோ, அங்ஙனமே அவ்வந்தக்கரண விசிஷ்ட சைதன்யத்திலும் பிரமாதாத்தன்மைவாஸ்தவமாயிராது. ஆனால் சுத்தியின்கண் ரஜதம் எங்ஙனம் ஆரோபமாமோ, அங்ஙனமே அவ்வந்தக்கரண விசிஷ்ட சைதன்யத்தின்கண் பிரமாதாத்தன்மை ஆரோபமாம்.

**சங்கை:**—சுக்தியின்கண் ரஜதாரோபத்திற்குப் பூர்வம் ஒருவனுக்குத் தேசாந்தரத்திலுள்ள ரஜதத்தின் யதார்த்த அனுபவமுண்டாம்; அவ்வனுபவஜன்ய சம்ஸ்காரத்தானே எங்ஙனம் அவனுக்கு அச்சுக்தியின்கண் ரஜதம் ஆரோபமாமோ, அங்ஙனமே அவ்வாரோபத்திற்குப் பூர்வம் யாதாமொரு வஸ்துவின்கண் பிரமாதாத்தன்மையின் யதார்த்த அனுபவமுண்டாமேல்; அப்போது அவ்விசிஷ்ட சைதன்யத்தின்கண் பிரமாதாத்தன்மையின் ஆரோபம் சம்பவிக்கும். யதார்த்த அனுபவத்தானன்றி ஆரோபம் சம்பவியாது.

**சமாதானம்:**—எவ்வஸ்து ஆரோபமாமோ, அவ்வஸ்துவின் அனுபவமாத்திரம் பூர்வம்வேண்டும். அவ்வனுபவம் யதார்த்தமாயினுமாகுக;அல்லதுபிரமமாயினுமாகுக. சம்சாரத்தின்கண் அநாதியாகவே இச்சீவனுக்கு அவ்வந்தக்கரண விசிஷ்ட சைதன்யத்தினிடத்துப் பிரமாதாத்தன்மைப்பிரமம் நிகழ்ந்துவருகின்றது. அது ஆரோபமாதல், பூர்வபூர்வ பிரம அனுபவத்தாற்றோன்றும் சம்ஸ்காரங்களினின்றும் உத்தரோத்தர பிரமாதாத்தன்மை யுண்மையின் பெறப்படும். இவ்வாறே கர்த்திருத்துவ போக்த்ருத்துவ ஆரோபங்களிலும் உணர்ந்து கொள்ளுக.

இங்கே நையாயிகர் கேவல ஆன்மாவிற்கே பிரமாத்ருத்தன்மை முதலிய தர்மங்களுண்டென்று கூறுகின்றனர். அவர்கூற்று சுருதி ஸ்மிருதிப்பிரமாணங்களுக்கு விருத்தமாதலால் அசங்கதம். സാക്ഷീ ചേതാ കേവലോ നിർഗുണശ്ച । അസംഗോ ഹ്യയം പുരുഷഃ । ശരീരസ്ഥോऽപി കൌന്തേയ ന കരോതി ന ലിപ്യതേ (ஆன்மாசாட்சி, சித்து கேவலமும் நிர்க்குணமுமாம். இப்புருஷன் அசங்கனே. கௌந்தேயா ! ஆன்மா சரீரத்திலுள்ளவனாயினும் செய்வதுமில்லை பற்றுவதுமில்லை) என்பதாதி சுருதி ஸ்மிருதிகள் நிருபாதிகமான ஆன்மாவை நிர்க்குணம் அசங்கம் நிர்லேபம் (பற்றற்றது) என்று கூறுகின்றன. அத்தகைய அசங்க ஆன்மாவினிடத்துப் பிரமாத்ருத்தன்மை முதலிய தர்மங்கள் சம்பவியாவாதலால், அவ்வந்தக்கரண விசிஷ்ட சைதன்யத்தினிடத்தேயே அத்தர்மங்களை யொப்பவேண்டும். ஒருகால் அந்தப்பிரமாத்ருத்தன்மை முதலிய தர்மங்களைக் கேவலம் ஆன்மாவினிடத்தெனக் கொண்டால், அத்தர்மங்களையுடைய ஆன்மாவின்கண் அசங்க நிர்க்குண நிர்லேபத்தன்மைகள் பொருந்தா. ஆகவே ஆன்மாவை அசங்கம் நிர்க்குணம் நிர்லேபமெனக்கூறும் சுருதி ஸ்மிருதி வசனங்கள் அப்பிரமாணமாகும். அல்லது பிரமாத்ருத்தன்மை முதலிய பந்தம் ஆரோபிதமன்று; ஆனால் சத்தியமெனக்கொள்ளின் சத்திய வஸ்துவிற்கு ஞானத்தால் நிவிர்த்தியுண்டாகாது. இதனால் நையாயிகமதத்தில் பந்த நிவிர்த்தியாகிய மோட்சமே சம்பவியாதாகும் அதுபற்றியும் அப்பந்தத்தைக் கற்பிதமென்றே கொள்ளவேண்டும்.

**சங்கை:**—பிரமாத்ருத்தன்மை முதலிய தர்மங்கள் அந்தக்கரண விசிஷ்ட சைதன்யத்திற்கு என்று மேற்கூறினீர்; அதுபொருந்தாது. ஏனெனின்,ஆன்மா அசங்கமும் நிரவயவமுமாம். ஆனால், அந்தக்கரணம் சாவயவமும் கிரியையுடையதுமாம். அத்தகைய ஆன்மாவிற்கு அந்தக்கரணத்தோடு எவ்வகைச் சம்பந்த

மும் சம்பவியாது. சம்பந்தத்தானன்றி விசிஷ்டத்தன்மை சம்பவியாது. ஒருகால் சம்பந்த மின்றியும் விசிஷ்டத்தன்மை யுண்டெனின்; இமாசல விசிஷ்டம் விந்தியாசலம் என்னும் வியவகாரமும் உண்டாதல்வேண்டும்.

அல்லது அவ்வந்தக்கரணம் சத்தியமா ? மித்தையா ? முதற்பட்ச மங்கீகரிக்கின், சத்திய அந்தக்கரணத்தின் சம்பந்தமும் சத்தியமேயாகும். அச்சத்தியசம்பந்தம் ஞானத்தால் நிவிர்த்தியாகாது. ஆகவே ஒருஜீவான்மாவிற்கும்மோட்சமுண்டாகாது. மோட்சமில்லையாகுங்கால் மோட்சத்தைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரமே அப்பிரமாணமாகும். அவ்வந்தக்கரணம் மித்தை என்னும் இரண்டாவது பட்சமங்கீகரிக்கின்; அதுவும் பொருந்தாது. ஏனெனின், அவ்வந்தக்கரண மித்தியாத்தன்மையில் ஓர் பிரமாணமுமில்லை. ஒருகால் பிரமாண மின்றியும் அவ்வந்தக்கரணம் மித்தையாமேல்; ஆன்மாவும் மித்தையாதல் ஏன் கூடாது; ஆகவே அந்தக்கரண விசிஷ்ட சைதன்யத்திற்குப் பிரமாத்ருத்தன்மை முதலிய தர்மங்களைக் கூறுதல் அசங்கதம்.

சமாதானம்:—சுக்தி அஞ்ஞானத்தால் அச்சுக்தியின்கண் ரஜதம் கற்பிதமாவதுபோல் ஆன்ம அஞ்ஞானத்தால் பிரத்யகாத்மாவின்கண் இவ்வந்தக்கரண முதலியன சொரூபமாக அத்தியஸ்தம் அதாவது கற்பிதமாம். அத்தியஸ்தம், கற்பிதம், ஆரோபிதம் என்னும் மூன்றும் ஒரேபொருளின் வாசகங்களாம். இவ்வளவுங் கூறியதால் அவ்வந்தக்கரணத்தின் கற்பிதத்தன்மையில் இவ்வனுமானம் உணரப்படுகின்றது. 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌂 𑌅𑌧𑍍𑌯𑌸𑍍𑌤𑌂, 𑌜𑌡𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌆𑌵𑌿𑌦𑍍𑌯𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑌜𑌤𑌵𑌤𑍍 (இ - ள்) அந்தக்கரணம் பிரத்யகாத்மாவின்கண் அத்தியஸ்தமாம். ஜட, திருசிய, ஆவித்யகமாவதால். எப்பொருள்கள் ஜடமும் திருசியமும், ஆவித்யகமுமாமோ, அப்பொருள்கள் அத்தியஸ்தமேயாம். சுத்திரஜதம் ஜடதிருசியஆவித்யகமாவதால் அத்தியஸ்தமாதல் போதும். இவ்வனுமானப் பிரமாணத்தானும், 𑌅𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌦𑌾𑌰𑍍𑌤𑌂 (இ-ள்) சைதன்ய ஆன்மாவினும் வேறானவெல்லாப் பொருள்களும் மித்தையாம்—என்னும் சுருதிப்பிரமாணத்தானும் அந்தக்கரணத்தினிடத்து கற்பிதத்தன்மையே பெறப்படும்.

அல்லது 'நான்ஜடன்' 'நான்சேதனன்'என்னும் அனுபவங்களால்ஜடமான அந்தக்கரண முதலியவற்றிற்கு ஆன்மாவினிடத்து அத்தியாசமும்,சேதனஆன்மாவிற்கு அந்தக்கரணத்தினிடத்து அத்தியாசமும் தோற்றாவாகின்றன. ஆதலால் சித்தாந்தத்தில் ஆன்மாவிற்கும் அந்தக்கரணமுதலிய அநான்மாக்களுக்கும் ஒன்றுக்கொன்று அத்தியாசம் தாற்பரியமாம். ஆனால் அதன்கண் இத்துணைப் பேதமுண்டு:—அந்தக்கரணமுதலியன ஆன்மாவினிடத்து எங்ஙனம் சொரூபமாக அத்தியஸ்தமோ, அங்ஙனம் ஆன்மா அந்தக்கரணமுதலியவற்றினிடத்துச் சொரூபமாக அத்தியஸ்தமன்று. ஆனல்,அவ்வந்தக்கரணத்தினிடத்துச் சம்ஸர்கமாக அத்தியஸ்தமாம். ஒருகால் அந்தக்கரணமுதலியவைகளைப் போன்று ஆன்மாவையும் சொரூபமாக அத்தியஸ்தமெனின்; அதிஷ்டான ஞானத்தால் எப்படி அவ்வந்தக்கரணமுதலியவைகள் பாதமாகின்றனவோ, அப்படி அவ்வான்மாவும் பாதமாதல் வேண்டும். ஆனல், சர்வசாட்சியாவதால் பாத அயோக்யமான ஆன்மா பரமார்த்த சத்தியம், அங்ஙனமாய ஆன்வாவிற்

குப் பாதம் பொருந்தாது. ஆகவே அவ்வந்தக்கரணத்தினிடத்து ஆன்மாவின் சொருபாத்தியாசம் சம்பவியாது. ஆனல், சம்ஸர்காத்தியாசமே சம்பவிக்கும். இவ்வாறு ஆன்ம அநான்மாக்களின் அத்தியாசத்தை ஸ்ரீபகவான் பாஷியக் காரரும் சாரீரகமீமாம்சையின் முதலிற் கூறியிருக்கின்றனர். அசங்க ஆன்மா வினிடத்து அந்தக்கரணமுதலியவற்றின் வாஸ்தவ சம்பந்தமில்லையாயினும், ஆத்தியாசிக சம்பந்தமுண்டு. அவ்வாத்தியாசிக சம்பந்தத்தானே ஆன்மாவிற்கு அந்தக்கரண விசிஷ்டத்தன்மையுமுண்டு. இதனல் அவ்வந்தக்கரண விசிஷ்ட சைதன்யத்தின்கண் பிரமாத்ருத்தன்மை முதலிய தர்மங்கள் பொருந்தும்.

## அத்தியாச இலக்கணம்.

அந்தக்கரணமுதலியன ஆன்மாவினிடத்து அத்தியஸ்தமெனல், அவ்வத் தியாசத்தின் சொரூபம் நிர்ணயமாகும் போதன்ரோ நிகழும்; அஃதன்றி அந் தக்கரணமுதலியவற்றை அத்தியஸ்தமெனல் எங்ஙனம் பொருந்தும் என்று சங்கிக்க;—இனி அவ்வத்தியாசத்தின் இலக்கணங் கூறுதும். வாத்ரு வாாவ ஹாஸஃ ஃயூ்ாஸஃ (இ-ள்) ஒன்றின்கண் மற்ருென்றின் அவபாசம் அத்தியாச மாம். ஞானத்தியாச, அர்த்தாத்தியாசபேதத்தால் அவ்வத்தியாசம் இருவ கைத்து. ஆண்டு ஞானத்தியாசபட்சத்திலோ அவபாசபதத்தால் பிராந்திஞான த்தையும், அர்த்தாத்தியாச பட்சத்தில் அவபாசபதத்தால் பிரமஞானத்திற்கு விஷயமான ரஜதமுதலிய பொருள்களையுங் கொள்ளவேண்டும். ஆகவே மேற் கூறிய அத்தியாச இலக்கணம் அவ்விரு அத்தியாசங்களிலும் அமையும்.

## ஞானத்தியாச அர்த்தாத்தியாசங்களின் இலக்கணங்கள்.

ஃதஷிம் ஹஊ௩ஜிஃ ஜூாநாயூ்ாஸஃ (இ-ள்) அவ்வஸ்துவின் அதிகரணத் திற்கு அயோக்யமான அதிகரணத்தின்கண்ணுள்ள அவ்வஸ்துவின் புத்தி (ஞானம்)ஞானத்தியாசமாம். அது, வாஸ்தவத்தில் ரஜத அதிகரண (நிலைக் களை)த்திற்கு யோக்யமல்லாத சுக்தியின்கண் 'இது ரஜதம்' என்னும் புத்தியும், வாஸ்தவத்தில் அந்தக்கரண முதலிய அநான்ம அதிகரணத்திற்கு யோக்ய மல்லாத ஆன்மாவின்கண் அநான்மபுத்தியும் போலவாம். இதனை ஞானத்தி யாச மெனப்படும்.

ப்ரோணா ஜநூ ஜூாந விஷயகெவ ஸதி வஹிவஃ ஊூஷகூா நயிகூரணஂ ஃயஹூா யூ்ாஸஃ (இ-ள்.) பிரமாண அஜன்ய ஞானத்திற்கு விஷயமும் பூர்வ திருஷ்டத்வ தர்மத்திற்கு அநதிகரணமுமான பொருள்கள் எவையோ, அப் பொருள்கள் அர்த்தாத்தியாசமாம். அது,சுக்தியில் ரஜதமும், ஆன்மாவில் அந் தக்கரண முதலியனவும் அத்தியாசமாதற் போலும். சுக்தி ரஜதத்தை விஷயப் படுத்தும் 'இதுரஜதம்' என்னும் உணர்ச்சி அப்பிரமையாதல் பற்றி, ஓர் பிர மாணத்தானும் ஜன்யமன்ருதலால், அவ்விரஜதம் பிரமாண அஜன்ய ஞானத் திற்கு விஷயமாயும், தனது தோற்றரவிற்கு முன்னில்லையாதலால் பூர்வதிருஷ் டத்வ தர்மத்திற்கு அநதிகரணமாயு மிருக்கின்றது. ஆகவே அவ்விரஜதத்தின் கண் அர்த்தாத்தியாசத்தன்மை பொருந்தும். இங்ஙனமான அர்த்தாத்தியாச இலக்கணத்தை ரச்சு சர்ப்ப முதலியவைகளிலும் உணர்ந்துகொள்ளுக.

'பூர்வதிருஷ்டத்வ தர்மத்திற்கு அநதிகரணமான' எனல் மாத்திரமே அவ்வர்த்தாத்தியாசத்திற்கு இலக்கணமெனின்; இப்போது புதுவதாயுற்பத்தி யான கடத்தின்கண் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அக்கட மும் பூர்வதிருஷ்டத்வ தர்மத்திற்கு அநதிகரணமே யாகலின். அது நீக்குதற்கு அவ்விலக்கணத்தின்கண் 'பிரமாண அஜன்ய ஞானத்திற்கு விஷயம்' என் பது கூறப்பட்டது. அது அக்கடத்தின்கண்ணில்லை. ஆனல், அதன்கண் பிர மாண ஜன்ய ஞானத்திற்கு விஷயப்படுந்தன்மையே யுண்டு. ஆகவே அக்கடத் தின்கண் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

'பிரமாண அஜன்ய ஞானத்திற்கு விஷயம்' எனல் மாத்திரமே அவ்வர்த் தாத்தியாசத்திற்கு இலக்கணமெனின், ஸ்மரிக்கப்பட்ட சிவன், விஷ்ணு, கங்கை முதலியோரிடத்தும் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம்; பிரமாண அஜன்ய ஸ்மிருதிஞானத்திற்கு விஷயமாகுந்தன்மை அவரிடத்து முளதாக லின். அது நீக்குதற்கு அவ்விலக்கணத்தின்கண் 'பூர்வதிருஷ்டத்வ தர்மத்திற்கு அநதிகரணமான' என்பது கூறப்பட்டது. பூர்வதிருஷ்ட (முன்பார்த்த) பொ ருள்களினதே ஸ்மிருதியுண்டாம், ஸ்மரிக்கத்தகுந்த அப்பொருள்களின்கண் பூர்வதிருஷ்டத்வ தர்மத்திற்கு அநதிகரணமில்லை; ஆனல் அதிகரணமேயுண்டு. ஆகவே ஸ்மரிக்கத்தகுந்த அப்பொருள்களின்கண் அவ்வர்த்தாத்தியாச இலக் கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

மேற்கூறிய அர்த்தாத்தியாச இலக்கணத்தின்கண்ணுள்ள பிரமாண சத் தத்தால் பிரத்யகபின்ன பிரஹ்மத்தை யுணர்த்தும் தத்துவமசியாதிய மகா வாக்கியங்களைக் கிரகித்தல்வேண்டும். அம்மகாவாக்கியப் பிரமாணத்திற்கு அஜன்யமான விருத்தியபிவியக்த சைதன்யரூப ஞானம் எதுவோ, அதற்கு விஷயமாகுந்தன்மை கடமுதலியவியாவகாரிகப் பொருள்களின்கண்ணும், சுக்தி ரஜதமுதலிய பிராதிபாசிகப் பொருள்களின்கண்ணு மிருக்கின்றன. சைதன்ய ஆன்மாவினும் வேருன அநான்மப் பொருள்களனைத்தும் கணந்தோறும் பரிணமத்தை யடைகின்றன வாதலால் அக்கடமுதலிய பொருள்களின்கண் பூர்வதிருஷ்டத்வ தர்மத்திற்கு அநதிகரண மாதலுமுண்டு. ஆகவே மேற்கூறிய அர்த்தாத்தியாச இலக்கணம் வியாவகாரிகப் பிராதிபாசிகப் பொருள்களுக்கெல் லாம் பொதுவாம். இங்குத்தாற்பரியமாவது:—வேதாந்த சித்தாந்தத்தின்கண் பிரஹ்மசைதன்யத்தினும் வேருன எத்துணைக் கடமுதலிய வியாவகாரிகப் பொருள்களும், சுக்தி ரஜதமுதலிய பிராதிபாசிகப் பொருள்களு முள்ளனவோ, அவையனைத்தும் அந்தப்பிரஹ்ம சைதன்யத்தின்கண் அத்தியஸ்தமாதலால் அர்த்தாத்தியாசமேயாம். ஆகவே மேற்கூறிய அர்த்தாத்தியாச இலக்கணம் வியாவகாரிகப் பிராதிபாசிகப் பொருள்களுக்கெல்லாம் பொதுவிலக்கணமாதல் பொருத்தமாம்.

சில நூலாசிரியர்கள் கூறுவதாவது:—மேற்கூறிய அர்த்தாத்தியாச இலக் கணம் பிராதிபாசிக ரஜதமுதலியவை கட்காமே தவிர கடமுதலிய வியாவகாரி கப்பொருள்களுக்காகாது. ஆகவே அவ்விலக்கணத்தின்கண்ணுள்ள பிரமாண சத்தத்தால் தத்துவமசியாதிய பிரமாணங்களைக் கிரகித்தல்கூடாது. ஆனல்,

அச்சத்தத்தால் அஞ்ஞாத அர்த்தத்தை யுணர்த்தும் பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களைக்கிரகிக்கவேண்டும். பிரத்தியட்சமுதலியபிரமாண அஜன்யஞானத்திற்கு விஷயமாதல் கேவலம் சுக்தி ரஜதமுதலிய பிராதிபாசிகப் பொருள்களிலேயுண்டு, கடமுதலிய வியாவகாரிகப் பொருள்களிலில்லையாதலால் மேற்கூறிய இலக்கணம் பிராதிபாசிக சுக்திரஜதமுதலிய அர்த்தாத்தியாசங்களுக்கேயாம்.

## அர்த்தாத்தியாசத்தின் பிரிவுகூறுதல்.

மேற்கூறிய அர்த்தாத்தியாசம் பிராதீதிகம், வியாவகாரிகம், என்னும் வேறுபாட்டால் இருவகைத்து. ஆம஗ஂுக ஷொஷ ஜநூஃ ப்ராதீதிகஃ (இ-ள்.) ஆகந்துக (இடையில்வந்து கூடிய) தோஷத்தாற்றோன்றும் பொருள் எதுவோ, அது பிராதீதிகமாம். இதனைப் பிராதிபாசிகமெனவுங் கூறுவர். அது, சுக்தியில் ரஜதம், ரச்சுவிற் சர்ப்பம், மருபூமியில் ஜலம் போலவாம். இவைமுதலிய பொருள்கள் ஆகந்துக தோஷத்தாற்றோன்றுவனவாதலால் பிராதீதிகமெனப்படுகின்றன. அந்தப் பிராதீதிகப் பொருள்களை யுண்டுபண்ணுந் தோஷங்கள் பிரமாத்ருதோஷம், விஷயதோஷம், கரணதோஷம் என்னும் பேதத்தால் மூவகைப்படும். இராகம் பயமுதலியன பிரமாதாவிலுள்ள தோஷங்கள், சாதிருசிய முதலியன விஷயத்திலுள்ள தோஷங்கள், காசம் காமாலை முதலியவைகள் நேத்திரமுதலிய விந்திரியங்களிலுள்ள தோஷங்கள். இங்ஙனமான மூவகைத் தோஷங்களாற்றோன்றுதலால் அச்சுக்தி ரஜதமுதலியவைகள் பிராதீதிக அர்த்தாத்தியாசங்களாம்.

ப்ராதீதிகஃ ஹிநூஃ வ்யாவ ஹாரிகஃ (இ-ள்) ஆகந்துக தோஷத்தாற்றோன்றும் பிராதீதிகப் பொருள்களினும் வேறானவை எவையோ, அவை வியாவகாரிகமாம். அவை, ஆகாயமுதல் கடபரியந்தமான பொருள்கள் வியாவகாரிக அர்த்தாத்தியாசங்களாதல் போலாம். ஆன்மஞானத்திற்குப் பூருவம் எப்பொருள்கள் பாதமாகாவோ, அப்பொருள்கள் வியாவகாரிகமும், ஆன்மஞானத்திற்குப் பூருவமே எப்பொருள்கள் பாதமாமோ, அப்பொருள்கள் பிராதீதிக அல்லது பிராதிபாசிகமுமாம்.

சில நூலாசிரியரோ, பிராதீதிக வியாவகாரிக அர்த்தாத்தியாசத்திற்கு இவ்விதம் பொது விலக்கணங் கூறுகின்றனர். ஷொஷ ஸஂப்ர யொ஗ ஸஂஸ்கார ஜநூத்வஂ அய்ஸ்ர ஸத்வஂ (இ - ள்) மேற்கூறிய தோஷங்களும், சுக்திமுதலிய அதிஷ்டானங்களோடு நேத்திரமுதலிய விந்திரியங்களின் சம்பந்தமும், தேசாந்தரத்திலுள்ள ரஜதமுதலியவைகளின் அனுபவஜன்ய சம்ஸ்காரமும் ஆகிய இவைகளாற்றோன்றுந் தன்மை எதுவோ, அதுவே அவ்விரஜதமுதலியவைகளிலுள்ள அத்தியஸ்தத்தன்மையாம். சித்தாந்தத்தில் அவித்தை அநாதியாதலால் அத்தோஷங்களாற் றோன்றுவதன்று. அதனால் அவ்வவித்தியாத்தியாசத்தில் மேற்கூறிய இலக்கணத்திற்கு அவ்யாப்தியே யுண்டாம், எனினும்; இவ்விலக்கணம் அந்தக்கரண முதலிய காரியாத்தியாசங்களுக்காமே தவிர அநாதியான அவித்தைக்காகாது. ஆகவே அவ்விலக்கணத்திற்கு அவித்தையின்கண் அவ்யாப்தியுண்டாகாது. தாற்பரியமிது:—அக்காரியாத்தியாசமே ஜாக்கிர

சொப்பனங்களில் இச்சீவனது அநர்த்தத்திற்கு ஏதுவாகும். ஆனுல், அவ்வவித்தியாத்தியாசம் சுழுத்தியின்கண்ணிருப்பதாயினும் அநர்த்தத்திற்கு ஏதுவாகாது. இதனுல் மேற்கூறிய இலக்கணம் அக்காரியாத்தியாசத்திற்கேயாம்.

சங்கை:—மேற்கூறிய இலக்கணத்தின்கண்ணுள்ள தோஷம், சம்பந்தம் சம்ஸ்காரம் என்னும் மூன்றுபதங்களைக் கூறியதற்குப் பயன் என்னை?

சமாதானம்:—அவ்விலக்கணத்தின்கண் அப்பதங்களைக் கூறலால் அவ்வத்தியாசத்திற்கு இவ்விரு இலக்கணங்கள் பெறப்படும். ஜொஷஜநு௵வஸதிஸஂஸ்காரஜநு௱வஂ ஈய௱ஸ்த௱வு। ஈமவா ஸஂவ௯யொமஜநு௱ கெவஸதிஸஂஸ்காரஜநு௱வஂ ஈய௱ஸ்தவு (இ-ள்) எப்பொருள்கள் தோஷத்தாற்றேன்றுவனவாய் சம்ஸ்காரஜன்யமாமோ, அப்பொருள்கள் அத்தியஸ்தமாம். அல்லது எப்பொருள்கள் சம்பந்தத்தாற்றேன்றுவனவாய் சம்ஸ்காரஜன்யமாமோ அப்பொருள்கள் அத்தியஸ்தமாம்.

முந்திய இலக்கணத்தின்கண் சம்ஸ்காரஜன்யஸ்மிருதியின் அதிவியாப்தி நீக்குதற்கு 'தோஷத்தாற்றேன்றும்' என்றும், தோஷ விஷயத்தாற்றேன்றும் தோஷப் பிரத்தியட்சப்பிரமையின் அதிவியாப்தி நீக்குதற்கு 'சம்ஸ்கார ஜன்யம்' என்றும் கூறியவாறு. அதுபோல் பிந்திய இலக்கணத்தின்கண்ணும் சம்ஸ்காரஜன்ய ஸ்மிருதிஞானத்தின் அதிவியாப்தி நீக்குதற்கு 'சம்பந்தத்தாற்றேன்றும்' என்றும், சம்பந்தாற்றேன்றும் பிரத்தியட்சப்பிரமையின் அதிவியாப்தி நீக்குதற்கு 'சம்ஸ்கார ஜன்யம்' என்றும் கூறியவாறு. இப்பிந்திய இலக்கணத்திற்கு, சம்பந்தம், சம்ஸ்காரம், என்னும் இரண்டாற்றேன்றும் 'அவன் இத்தேவதத்தன்' என்னும் பிரத்தியபிஞ்ஞைப் பிரத்தியட்சத்தின்கண் அதிவியாப்தி உண்டாம், எனின்; அவ்விலக்கணத்திற்கு 'பிரத்தியபிஞ்ஞைக்கு வேறாய்' என்னும் அடைகொடுக்கின், அதன்கண் அதிவியாப்தி உண்டாகாது.

சங்கை:—ஆன்மாவின்கண் அந்தக்கரண முதலியன அத்தியஸ்தமாயினும் அது சம்பந்தத்தாற் றேன்றுமெனல் பொருந்தாது. ஏனெனின் அதிஷ்டான ஆன்மாவோடு நேத்திரமுதலிய இநதிரியங்களுக்குச் சம்பந்தமின்று. ஆகவே அந்தக்கரண முதலியவற்றின் அத்தியாசத்தினிடத்து மேற்கூறிய இலக்கணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும்.

சமாதானம்:—சம்பந்தமென்னும் சத்தத்தால் அதிஷ்டான ஆன்மாவின் சத்தை முதலிய சாமானிய அம்சங்களின் ஞானமே விவட்சிதமாம். அச்சாமானிய ஞானம் அவ்வந்தக்கரண முதலியவைகளின் அத்தியாசத்திற்குப் பூருவம் உள்ளதே. அவ்வதிஷ்டான ஆன்மாவின் சாமானிய ஞானம் ஓர் இந்திரியத்தானும் தோன்றுவதன்று. ஆனுல், அது தனது சுயஞ்ஜோதிவடிவமாகவேயுளது. ஆதலால் அந்தக்கரண முதலியவைகளின் அத்தியாசத்தில் மேற்கூறிய இலக்கணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது.

சங்கை:—தோஷமும், சம்ஸ்காரமும் இரஜதமுதலிய பொருள்களை யுண்டாக்கு மென மேற்கூறியது பொருந்தாது. தோஷசம்ஸ்காரங்கள் இரஜதமுதலியவைகளின் ஞானத்தையே உண்டாக்கக் காண்டலின்.

சமாதானம்:—மேற்கூறிய தோஷசம்ஸ்காரங்களிருக்கின் இரஜதமாகிய பொருளும், அதன் ஞானமும் உற்பத்தியாம். அத்தோஷ சம்ஸ்காரங்களின்றேல் இரஜதமாகிய பொருளும் அதன் ஞானோற்பத்தியுமின்றாம். இவ்வாறாகிய உடன்பாடெதிர்மறைகளால் அர்த்தாத்தியாச ஞானாத்தியாசங்களிரண்டிற்கும் அத்தோஷ சம்ஸ்காரங்கள் காரணமென்பது பெறப்படும். ஆகவே ஞானாத்தியாசத்தைப்போன்று அர்த்தாத்தியாசத்திற்கும் தோஷசம்ஸ்காரங்களாற் றோன்றுந்தன்மை பொருந்தும். இக்கருத்துபற்றியே ஸ்ரீபகவன் பாஷியக்காரரும் ஸ்மிருதிரூப: பரத்ர பூர்வதிருஷ்டாவபாஸ: என்று அத்தியாசத்திற்கு இலக்கணங் கூறியிருக்கின்றனர். இவ்வத்தியாச இலக்கணம் ஞானாத்தியாச அர்த்தாத்தியாசங்களுக்குப் பொதுவாம். ஞானாத்தியாச பட்சத்திலோ பாஷியத்திற் கூறிய இலக்கணத்திற்கு இப்பொருள் கொள்ளுக:—(ஸ்மிருதிரூபம்) சம்ஸ்கார ஜன்யமாவதால் ஸ்மிருதிக்குச் சதிருசமாகிய, (பரத்ர) மற்றோரிடத்தில், (பூர்வதிருஷ்டாவபாச) முன்பார்த்த பொருளுக்குச் சஜாதீயமான பொருளின் ஞானம் ஞானாத்தியாசமாம். அது, இப்பியின்கண் இதுவெள்ளி என்னும் ஞானம்போலும். அர்த்தாத்தியாச பட்சத்தில் அப்பாஷியத்திற் கூறிய இலக்கணத்திற்கு இங்ஙனம் பொருள் கொள்ளுக:—(ஸ்மிருதிரூபம்) பிரமாண அஜன்ய ஞானத்திற்கு விஷயப்படும், (பூர்வதிருஷ்ட) முன்பார்த்த பொருளுக்குச் சஜாதீயமான பொருள் அர்த்தாத்தியாசமாம். அது, சுக்தி முதலியவைகளின்கண்ணுள்ள ரஜதமுதலியன போலாம்.

இவ்வாறு அத்தியாசம் பெறப்படவே பிரமாத்ருத்தன்மை, கர்த்ருத்தன்மை, போக்த்ருத்தன்மை முதலிய பந்தம் அத்தியஸ்தமாதலால் அவைகளுக்கு மித்தியாத்தன்மை கூடும். ஆகவே தரதி ஶோகம் ஆத்மவித் (ஆன்மாவையறிந்தவன் சோகத்தைக் கடக்கின்றான்) என்னும் சுருதி வசனத்தாற் சிரவணஞ்செய்யப்பட்ட பந்தத்தின்கண் ஞானநிவர்த்தியத்தன்மை எதுவோ, அது அப்பந்தத்தின் மித்தியாத்தன்மை யன்றிச் சம்பவியாததாய், அப்பந்தமித்தியாத்தன்மையைக் கற்பிக்கின்றதென்று மேற்கூறிய சுருதார்த்தாபத்தி சித்தமாம்.

அர்த்தாபத்திப்பிரமை முற்றிற்று.

---

# அபாவப் பிரமை.

---

யோக்யாநுபலப்தி கரணிகா ப்ரமா அபாவ ப்ரமா (இ-ள்.) யோக்கியாநுபலப்தியாகியகரணம் எப்பிரமைக்கோ, அந்தப்பிரமை அபாவப்பிரமை எனப்படும். எவ்வதிகரண (நிலைக்கள) த்தின்கண் எவ்வபாவத்தினுணர்ச்சி யுண்டாகின்றதோ, அவ்வதிகரணத்தின்கண்ணுள்ள அவ்வபாவத்தினது பிரதியோ

கி (எதிர்மறை) யின் ஞானத்தை உபலப்தி என்பர். அவ்வுபலப்தியினையே உப லம்ப (ஞான) மென்றுங்கூறுவர். அவ்வுபலப்தியின் அபாவத்தை அநுபலப்தி யென்றும் அநுபலம்ப மென்றுங்கூறுவர். அவ்வநுபலப்தியே அபாவப்பிரமை க்குக் கரணமாம். அதெங்ஙனம் எனின்:—எப்பூதலத்தின்கண் 'கடமிருக்கின் றது' என்னும்கட ஞானமுண்டாமோ, அப்பூதலத்தின்கண் 'கடம் இன்று' என் னும் கடாபாவத்தின் ஞானம் உண்டாகாது. ஆனல் கடமிருக்கின்றதென்னும் ஞானத்திற்கு யாண்டு அபாவம்உண்டாகின்றதோ, ஆண்டே கடமில்லை என்னும் கடாபாவத்தின்ஞானம் உண்டாகின்றது. ஆகலின் அக்கடஞானத்தின் அபாவ வடிவ அநுபலப்தியின்கண் அக்கடாபாவத்தை விஷயப்படுத்தும் பிரமைக்குக் கரணமாதல் உடன்பாடெதிர்மறைகளாற் பெறப்படும். அவ்வநுபலப்தியின்கண் யோக்கியதையும் அபேட்சிக்கப்படும். ஒருகால் கேவலம் அவ்வநுபலப்தி மாத் திரத்தானே அபாவப்பிரமை உண்டாமேல்; அவ்வநுபலப்தியால் அந்தகாரத்தி லுள்ள கடாபாவத்தின் பிரமையும், ஆத்மாவிலுள்ள தர்மாதர்மங்களின் அபா வப்பிரமையும் நிகழல்வேண்டும். ஏனெனின், அந்தகாரத்திலுள்ள கடத்திற்கு உபலப்தி உண்டாகின்றதில்லை. கட உபலப்தியின் அபாவவடிவ அநுபலப்திஅங் கேயும் உள்ளதேயாம். அதுபோலவே ஆன்மாவிலுள்ள தர்ம அதர்மங்களின் உபலப்தியு முண்டாகின்றதில்லை. அத்தர்மாதர்ம உபலப்தியின் அபாபவடிவ அநுபலப்தி அங்கணும் உள்ளதேயாம். ஆனல் மேற்கூறிய ஸ்தலங்களில் அவ்வபாவத்தை விஷயப்படுத்தும் பிரமையுண்டாகின்றதில்லை. ஆகலின் அபா வப்பிரமையை உண்டு பண்ணுவதில் அவ்வநுபலப்திக்கு யோக்கியதையின் அபேட்சை அவசியமாம். அநுபலப்தியால் எவ்வபாவத்தின் ஞானமுண்டாகி ன்றதோ, அவ்வபாவப் பிரதியோகியின் ஆரோபத்தால் எங்கே அந்தப்பிரதி யோகியினது உபலப்தியின் ஆபாதனஞ்செய்யப்படுமோ, அங்கே அவ்வுபலப்தி யின் அபாவவடிவ அநுபலப்தி யோக்கியாநுபலப்தி யாம். அதெங்ஙன மெனின்:—பிரகாசமுடைய பூதலத்தின்கண் 𑌯𑌦𑌿 𑌅𑌤𑍍𑌰 𑌘𑌟𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑍇𑌤 (இ-ள்.) இப்பூதலத்தில் ஓர்கால் கடமிருக்கின் இப்பூதலத்தை ப்போன்று அக்கடமும் பிரதீதியாகும்; ஆனல் பிரதீதியாகவில்லை. ஆகலின் இப் பூதலத்தில் கடமில்லை. இவ்வாறு கடமாகிய பிரதியோகியின் இருப்பை ஆரோ பித்து அக்கடோபலப்தி ஆபாதானஞ்செய்யப்படும். அதனுல் அக்கடத்தினது உபலப்தியின் அபாவவடிவ அக்கடத்தின் அநுபலப்தி யோக்கியமெனப்படும். அந்த யோக்கியாநுபலப்தியானே, பிரகாசமுடைய பூதலத்தில் கடமில்லை என் னும் அபாவப்பிரமை யுண்டாகின்றது. அந்தகாரத்தில் கடமும், ஆத்மாவில் தர் மாதர்மங்களும் இருந்தும் அவை காணப்படுவதில்லை. இவ்வந்தகாரத்தில் கடம் இருந்தால் காணப்படவேண்டும்; ஆத்மாவில் தர்மாதர்மங்கள் காணப்படவே ண்டும் என்றிவ்வாறு கடமுதலிய பிரதியோகிகளின் சத்தை ஆரோபித்து அவ் வுபலப்தி ஆபாதானஞ்செயப்படுவதில்லை. ஆதலின் அவ்வந்தகாரத்தில் கடத் தின் அநுபலப்தியும் ஆத்மாவில் தர்மாதர்மங்களின் அநுபலப்தியும் யோக்கிய மன்று. இக்காரணம்பற்றி அந்தகாரத்திலுள்ள கடத்தின் அபாவஞானமும் ஆத்மாவிலுள்ள தர்மாதர்மங்களின் அபாவஞானமும் அநுபலப்தியாலுண்டா

கா. ஆனுல், அனுமான முதலியவைகளால் அவ்வபாவ ஞானமுண்டாம். முற் கூறிய யோக்கியாநுபலப்தி கரணம். அபாவப்பிரமைபயன்.

ஈண்டு நையாயிகர் கூறுவதாவது:—முற்கூறிய யோக்கியாநுபலப்தி யைச் சஹகாரியாயுடைய இந்திரியவடிவ பிரத்தியட்சப் பிரமாணத்தாற்றுன் பூதலமுதலியவற்றில் கடமுதலிய வற்றின் அபாவஞானமுண்டாதல் கூடும். அவ் வபாவ ஞானத்தின் பொருட்டு யோக்கியானுபலப்தியை வேறுபிரமாண மென் றெப்புவதிற் கௌரவதோஷமே அடையப்படும்.

மற்றுஞ்சிலர். அக்கடாபாவத்தின் அதிகரணமாகிய பூதலத்துடனே நேத் திரேந்திரியத்திற்குச் சையோக சம்பந்தமுண்டு; ஆனுல் அக்கடாபாவத்துடன் அவ்விந்திரியத்திற்கு ஒருசம்பந்தமுமில்லை; ஆதலால் அவ்வபாவ ஞானத் தின்கண் இந்திரியங் கரணமெனல் பொருந்தாது, என்று கூறுவர். அவர் கூற் றும் அசங்கதம். ஏனெனின், அவ்வபாவத்தோடு இந்திரியத்திற்குச் சையோக முதலிய சம்பந்தங்க ளில்லையாயினும் விசேஷண விசேஷ்யபாவமாகிய சம்பந்தம் இருக்கின்றது. அச்சம்பந்தத்தால் அவ்வபாவத்திற்கு இந்திரியப் பிரத்தியட்சஞானம் சம்பவமாம். இந்த நையாயிகர்களின் மதம் நலமன்று. ஏனெனின், நேத்திரமுதலிய இந்திரியங்களுக்குப் பூதலமுதலிய அதிகரணங் களோடு சையோகமுதலிய சம்பந்தமுண்டு; அவ்வபாவத்தோடு ஓர் சம்பந்தமு மில்லை. ஆதலால் நேத்திரமுதலியஇந்திரியங்கள் பூதலமுதலிய அதிகரணத் தின் ஞானத்தினிடத்தே பயன்படுவனவாம். அபாவஞானத்தில் அவ்விந்திரி யங்களுக்குக் கரணத்தன்மையில்லை.

அன்றியும் நையாயிகர்கள் எவ்விந்திரியத்திற்கு அபாவத்துடன் விசேஷண விசேஷ்யபாவ சம்பந்தம் ஒப்பினரோ; அதுவும் அசங்கதம். ஏனெனின், இர ண்டு பதார்த்தங்கட்கு ஒன்றுக்கொன்று சம்பந்தமுண்டாகின்றது. அச்சம்பந் தம் அவ்விரு சம்பந்திகளைவிட வேறாயும், அவ்விரு சம்பந்திகளை ஆசிரயித்துள் ளதாயும், ஒன்றாயுமிருக்கின்றது. நேத்திரத்திற்கும் நிலத்திற்குமுள்ள சை யோக சம்பந்தம்; நேத்திர நிலமாகிய இருசம்பந்திகளைவிட வேறும் அவ் விருசம்பந்திகளை ஆசிரயித்துள்ளதும், ஒன்றுமாதல்போலாம். இவ்வாறான சம்பந்தத்தின் இலக்கணம் அவ்விசேஷண விசேஷ்ய பாவத்திற் பொருந்தாது. ஏனெனின், வடாஹாவவஜ்ஹ-நூதலு (கடமிலது இப்பூதலம்) என்னும் பிரதீதி யில் கடாபாவம்விசேஷணமும்,பூதலம் விசேஷ்யமுமாம். ஹ-நூதலெவடாஹாவஃ (இப்பூதலம் கடமிலது) என்னும் பிரதீதியில் பூதலம் விசேஷணமும் கடாபா வம் விசேஷ்யமுமாம். அவ்வபாவத்திலுள்ள விசேஷணத்தன்மை விசேஷண பாவமும்,விசேஷ்யத்தன்மைவிசேஷ்யபாவமுமாம். விசேஷணபாவம் விசேஷண வடிவேயாம்; விசேஷ்யபாவம் அவ்விசேஷ்யவடிவமேயாம். விசேஷண விசேஷ்ய ங்களினும் அவ்விசேஷண விசேஷ்யபாவங்கள் வேறன்று. அபேதத்தின்கண் ஆதார ஆதேயபாவங்கள் நிகழா இதனுல் அவ்விசேஷண விசேஷ்யபாவம்;அவ் வபாவவடிவ சம்பந்தியினும் வேறும், அச்சம்பந்தியை ஆசிரயித்ததும்; விசேஷ ணத்தன்மை விசேஷ்யத்தன்மை வடிவத்தான் இருவிதமாவதால் ஒன்றும் அ

ன்று. ஆகவே அவ்விசேஷண விசேஷ்யபாவத்திற்கு இந்திரிய சம்பந்தமுண்டெனல் பொருந்தாது.

அல்லது, அபாவப்பிரத்தியட்சத்தின்கண் விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தைக் காரணமெனக்கொள்ளின்; வியவஹித (மறைவுபட்ட) பூதலத்திலுள்ள அபாவமும் நேத்திரேந்திரியத்தாற் பிரத்தியட்சமாதல்வேண்டும். ஏனெனின், அப்பூதலத்தின்கண் அவ்வபாவம் விசேஷணவடிவாக விருக்கின்றது. அன்றியும் நேத்திரேந்திரியத்திற்கு அப்பூதலத்தோடு சையுக்தசையோக முதலிய பரம்பரைச் சம்பந்தமுமிருக்கின்றது. அல்லது, விசேஷணத்திற்கும் இந்திரிய சம்பந்தமுண்டெனின்; பூதலத்திலுள்ள கடமும் அக்கடத்தின்கண்ணுள்ள உருவ முதலியவைகளும், அவ்விசேஷணத்தன்மைச்சம்பந்தத்தானே பிரத்தியட்சமாதல் வேண்டும். இதனுல் நையாயிகர்கள் அங்கீகரித்துள்ள சமவாயமுதலிய சம்பந்தங்களனைத்திற்கும் உலோபமுண்டாகும். ஆகவே அவ்விசேஷண விசேஷ்யபாவத்தில் சம்பந்தவடிவத்தன்மை சம்பவியாது. நேத்திர முதலிய இந்திரியங்கள், தம்மொடு சம்பந்தமில்லாத பொருட்களின் பிரத்தியட்சத்தை உண்டாக்குவனவன்றாகலின் அவ்வபாவஞானத்தில் அவை கரணமாகா. ஆனுல் மேற்கூறிய யோக்கியாநுபலப்தியே கரணமாம்.

### கரண இலக்கணம்.

அஸாதாரண காரணம் கரணம் (இ-ள்) எக்காரியத்திற்கு எது அசாதாரண (சிறந்த) காரணமாமோ, அவ்வசாதாரண காரணம் அக்காரியத்திற்குக் கரணமாம். அஃதெங்ஙனம்:—பிரத்தியட்சப் பிரமைக்குக் கண்முதலிய இந்திரியங்கள் அசாதாரண காரணமாவதாற் கரணமும், மேற்கூறிய அபாவப்பிரமைக்கு யோக்கியாநுபலப்தி அசாதாரணகாரணமாவதாற் கரணமுமாம். இவ்வாறே அநுமான முதலியவைகளிலும் கரணவிலக்கணம் அறிந்துகொள்ளுக. காரியமாத்திரத்திற்குச் சாதாரண (பொது) காரணங்களான அதிருஷ்டம், தேசம், காலம் முதலியவற்றின் அதிவியாப்தியை நீக்குதற்கு அவ்விலக்கணத்தில் 'அசாதாரண' என்று கூறியவாறு.

### காரண இலக்கணம்.

நியத பூர்வவ்ருத்தி காரணம் (இ-ள்.) எப்பதார்த்தம் எக்காரியோற்பத்திக்குப் பூருவம் நியதமாய் நிற்குமோ, அப்பதார்த்தம் அக்காரியத்திற்குக் காரணமாம். அஃதெங்ஙனம்:—கடகாரியோற்பத்திக்கு முற்காலத்தில் மண், குலாலன், தண்டம், சக்கரம் முதலியன நியதமாய் நிற்பனவாகலின் அவை அக்கடகாரியத்தைக்குறித்துக் காரணங்களாம்.

### காரணத்தின் பிரிவுகூறுதல்.

உபாதானகாரணம், நிமித்தகாரணம், என்னும் பேதத்தால் அக்காரணம் இருவகைப்படும். கார்யாந்விதம் காரணம் உபாதானகாரணம் (இ-ள்.) காரியத்தில் அந்வித அதாவது தாதான்மிய பாவத்தையடைந்துள்ள காரணம் எதுவோ, அது உபாதானகாரணமாம். அஃதெங்ஙனம்:—கடகாரியத்தில் அந்வித

மானமண் அக்கடத்திற்கு உபாதானகாரணமும், ஆடையாகிய காரியத்தில் அந்விதநூல்கள் அவ்வாடைக்கு உபாதானகாரணமுமாம். கடமுதலிய காரியங்களுக்கு நிமித்தகாரணமாகிய குலான் முதலியோரின் அதிவியாப்தி நீக்குதற்கு இவ்விலக்கணத்தில் 'காரியாந்விதம்' என்று கூறியவாறு. அக்குலாலனாதிய நிமித்தகாரணங்கள் கட காரியத்தில் அந்வித மன்றாதலின் அவைகளின் அதிவியாப்தி யுண்டாகாது. கடமுதலிய காரியத்தில் அந்விதமான உருவமுதலியவற்றின் அதிவியாப்தி நீக்குதற்குக் 'காரணம்' என்று கூறியவாறு. அவ்வுருவமுதலியவைகள் அக்கடத்திற்குக் காரணமன்றாதலின் அவற்றில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

கார்யோத்பத்த்யநுகூலவ்யாபாரவத்காரணம் நிமித்தகாரணம் (இ-ள்) காரிய உற்பத்திக்கு அநுகூலமான வியாபாரமுடையகாரணம் நிமித்தகாரணமாம். கடமுதலிய காரியங்களின் உற்பத்திக்கு அனுகூலமான வியாபாரமுடைய குலாலன் முதலியன, அக்கடமுதலிய காரியங்கட்கு நிமித்தகாரணங்களாதல் போலவாம். பிரஹ்மமோ இச்சகத்தாகிய காரியத்திற்கு உபாதானகாரண, நிமித்தகாரண மிரண்டுமாதலின் பிரஹ்மத்தினிடத்து நிமித்தகாரண உபாதானகாரணங்களின் இலக்கணங்களுக்கு அதிவியாப்தியுண்டாகாது.

**சங்கை:**—பிரஹ்மம் பிரபஞ்சத்திற்கு உபாதானகாரண மென்பது பொருந்தாது. ஏனெனின், உலகின்கண் சமான சுவபாவமுள்ள மண், கடமுதலியவற்றிற்கே ஒன்றுக்கொன்று உபாதான உபாதேயபாவங்கண்டாம். விலட்சண சுவபாவமுள்ள பதார்த்தங்களுக்கு அவ்வுபாதான உபாதேய பாவங்கள் எங்குங் கண்டிலம். பிரஹ்மமோ சேதனவடிவம்; காரியப்பிரபஞ்சம் ஜடவடிவம். ஆதலின் பிரஹ்ம பிரபஞ்சமிரண்டும் ஒன்றுக்கொன்று விலட்சணமாம். அவ்விலட்சண பிரஹ்மத்தை அவ்விலட்சன பிரபஞ்சத்திற்கு உபாதானகாரண மென்பதே பொருந்தாது.

எங்ஙனம் இந்திரியாகோசரமான தர்மாதர்மங்களிற் சுருதியே பிரமாணமாமோ, அங்ஙனமே இந்திரியாகோசர பிரஹ்மத்தின்கண்ணும் சுருதியே பிரமாணமென்றும், யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே (இப்பூதங்கள் எதினின்றும் பிறக்கின்றனவோ) என்னுந்தொடக்கத்துச் சுருதிகள் பிரஹ்மத்தினின்றும் ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்களைக் கூறுவனவாய் அந்தப்பிரஹ்மத்தையே ஜகத்திற்கு உபாதானகாரண மென்று கூறியுள்ளனவாகலின் அச்சுருதியின் வலிவானே பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதானகாரணத்தன்மை சித்தமாமென்றும், சுருதிசித்தமான அர்த்தத்தினிடத்து யுக்தியின் அபேட்சையுண்டாகாதென்றுங் கூறின்; அதுவும்பொருந்தாது. யுக்திக்கு விரோதமானவழி அச்சுருதிப்பொருளின் நிர்ணயம் உண்டாகமாட்டாதாகலின். ஒருகால் யுக்திக்கு விரோதமானவழியும் சுருதிப்பொருளின் நிச்சயமுண்டாமேல்; அவ்விரோதத்தை நீக்குவதற்காக வெழுந்த உத்தரமீமாஞ்சையின் ஆரம்பமே வியர்த்தமாம். ஆகவே கூறிய யுக்திக்கு விரோதமாவதால் சேதனபிரஹ்மத்தை ஜடஜகத்திற்கு உபாதான காரணமெனல் பொருந்தாது.

அல்லது, பிரஹ்மத்திற்கு ஜகத்தின் நிமித்தகாரணத்தன்மையும் சம்பவியாது. ஏனெனின், உலகத்தில் கடமுதலிய காரியங்களுக்கு நிமித்தகாரணரான குலாலன்முதலியோர் சங்கமுடையவராகவும், கர்த்தாவாகவுமே காணப்படுகின்றனர். பிரஹ்மத்தையோ அசங்கமெனவும், அகர்த்தாவெனவும் சுருதி கூறுகின்றது. ஆகவே அவ்வசங்கமும் அகர்த்தாவுமான பிரஹ்மத்தை ஜகத்தின் நிமித்த காரணமெனல் பொருந்தாது. ஆனல், ஜடப்பிரபஞ்சத்திற்கு ஜடப்பிரதானத்தையே உபாதான காரணமெனக் கொள்ளவேண்டும். கபில ஸ்மிருதியும் அச்சடப் பிரதானத்தையே ஜகத்திற்கு உபாதான காரணமென்றுகூறியுளது. மேற்கூறிய யுக்திக்கும், கபில ஸ்மிருதிக்கும் விரோதமாவதால், அச்சுருதியும் பிரதானத்தையே ஜகத்திற்கு உபாதான காரணமாகக் கூறுதலாகும். ஆகலின் அச்சடப் பிரதானமே சடப்பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாம்.

சமாதானம்:—மாயாவுபகித பிரஹ்மமே இப்பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமும் நிமித்தகாரணமுமாம். விலட்சண பதார்த்தங்கட்குக் காரியகாரண பாவமுண்டாகாதென்று முன்சாங்கியர்கள் கூறினர், அது அசங்கதம். ஏனெனின், உலகத்தில் சேதனனுன புருஷனிடத்தினின்றும் அசேதனமான கேசம் நகம் முதலியவற்றினுற்பத்தி காணப்படுகின்றது. மேலும் அசேதனமான கோமயத்தினின்றும் சேதனமான விருச்சிக முதலியவைகளினுற்பத்தியுங் காணப்படுகின்றது. ஆகவே விலட்சண பதார்த்தங்களுக்குங் காரியகாரணபாவம் உலகின்கண் புலப்படுதலின் சேதன பிரஹ்மத்தினின்றும் அசேதன பிரபஞ்சத்தின் உற்பத்தி நிகழும்.

அன்றியும் ஸோऽகாமயத பஹுஸ்யாம் (அவர் அநேகவடிவங்களாவே மென்று இச்சித்தார்) என்னுந்தொடக்கத்துச் சுருதிகள் பிரஹ்மத்தையே ஜகத்திற்கு உபாதான காரணமாகக் கூறியுள்ளன. அச்சுருதிக்கு விரோதமான கேவலயுக்திக்கு அப்பிரமாணத்தன்மை யுண்மையால் அவ்வுத்தர மீமாஞ்சையின் ஆரம்பமும் நிகழும். சுருதிக்கு அநுகூலமான யுக்தியே பிரமாணமாம்; சுருதிக்கு விருத்தமான கேவலயுக்தி பிரமாணமாகாது. ஆகவே மேற்கூறிய சுருதியால் பிரஹ்மமே ஜகத்தின் உபாதான காரணமெனச் சித்திக்கின்றது. மேலும் சாங்கியர்கள் கற்பிக்கும் பிரதானம் ஜகத்திற்கு உபாதான காரணமாக மாட்டாது. அந்தப்பிரதானம் அசேதனமாகலின். அசேதன வஸ்துவிற்குத்தானகவே பிரவிருத்தித்தல் சம்பவியாது. ஆனல் அசேதனமான இரதமுதலியன சேதனபுருஷனது அதீனமாகவே பிரவிருத்திக்கக் காணப்படுகின்றது. காணப்பட்டபொருளின் அநுசாரமாகவே காணப்படாதபொருளின் கற்பனையுண்டாம். ஆகவே அந்தப்பிரதானத்தை ஜகத்திற்கு உபாதானகாரணமெனல் பொருந்தாது. எங்ஙனம் மநுமுதலிய ஸ்மிருதிகள் சுருதி மூலகமாமோ, அங்ஙனம் அக்கபில ஸ்மிருதி சுருதி மூலகமன்று. ஆதலால் அது அப்பிரமாணமே. சுருதியை முதலாகவுடைய ஸ்மிருதியே பிரமாணமாகலின். அக்கபில ஸ்மிருதியினுனும் அந்தப்பிரதானத்திற்கு ஜகத்தின் காரணத்தன்மை பெறப்படாது.

சங்கை:—உமது மதத்தில் அசங்க பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணமாதல் பொருந்துமாறு எங்ஙன்?

சமாதானம்:—நம் மதத்தில் சங்கமில்லாததும், விகாரமில்லாததுமானசுத்த பிரஹ்மம் காரணமன்று. ஆனால், அநிர்வசநீய மாயாவுபகித பிரஹ்மமே ஜகத்திற்கு உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாம். ஆண்டு ஆவரணசக்தி விசிஷ்ட மாயாவடிவ வுபாதியின் பிரதான (முக்கிய) த்தன்மையானே அந்தப்பிரஹ்மம் ஜகத்திற்கு உபாதான காரணமும், ஞானசக்தி விசிஷ்ட மாயாவுபகித தனது சொரூபப் பிரதானத்தன்மையால் பிரஹ்மம் ஜகத்திற்கு நிமித்த காரணமுமாம். சுருதி. தடைக்ஷத ப ஹுஸ்யாம் ப்ரஜாயேய (இ-ள்.) நான் அநேக வடிவமாக உண்டாவேனாக என்று பரமேசுரனாகிய மாயாவுபகித பிரஹ்மம் சிருட்டிக்குமுன், வரக்கடவதான பிரபஞ்சத்தை விஷயப்படுத்தும் ஞானமாகிய ஈட்சணையை (சங்கற்பத்தை)ச் செய்தது. இச்சுருதியின்கண்ணுள்ள தடைக்ஷத (அது சங்கற்பித்தது) என்னும் வசனம் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உற்பத்திக்குமுன் ஈட்சணைக்கு வினைமுதலாந்தன்மையைக்கூறியுளது. அதனால் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் நிமித்தகாரணத்தன்மை சித்தமாம். அது,கடோற்பத்திக்குப்பூருவம் அதன் அநுகூலஞானமுடைய குலாலன் அக்கடத்திற்குநிமித்த காரணனாதல்போலும். பஹுஸ்யாம் ப்ரஜாயேய (அநேகவடிவங்களாவேன்) என்னும் வசனத்தால் பிரஹ்மத்திற்கு அநேகவடிவமாதல் கூறப்பட்டுளது. அதனால் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதான காரணத்தன்மை சித்தமாம். அது, கடசராவமுதலிய அநேகவடிவமாதலுடைய மண், அக்கடசராவாதி காரியங்களுக்கு உபாதானகாரணமாதல் பிரசித்தமேயாதல்போலும். அன்றியும் ஸ்ரீவியாசபகவானும் பிரஹ்ம சூத்திரத்தில் அம்மாயாவுபகித பிரஹ்மமே ஜகத்திற்கு உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாம் என்று கூறியிருக்கின்றனர். சூத்திரம். ப்ரக்ருதிஸ்ச ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தா நுபரோதாத் (இ-ள்.) அம்மாயாவுபகித பிரஹ்மமே ஜகத்திற்கு உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாம். அவ்வாறங்கீகரிப்பத்திற் சுருதி கூறியுள்ள பிரதிஞ்ஞையும் திருஷ்டாந்தமும் பொருந்தும். ஆண்டுச்சுருதியில் ஏகபிரஹ்மத்தின் ஞானத்தாற் சருவஜகத்தின் ஞானங்கூறியிருத்தல் பிரதிஞ்ஞையும், மண்ணென்னும் ஒன்றின் ஞானத்தால் அம்மண்ணின் காரியங்களான கடசராவமுதலிய வெல்லாவற்றின் ஞானங்களைக் கூறியிருத்தல் திருஷ்டாந்தமுமாம். எப்போது பிரஹ்மம் சருவஜகத்திற்குஉபாதான காரணமென்று கொள்ளப்படுமோ, அப்போது அந்தப்பிரதிஞ்ஞையும் திருஷ்டாந்தமும் நிகழும். உபாதானகாரணத்தின்ஞானத்தினானே காரியத்தின் ஞானமுண்டாம். ஆகலின் சூத்திரத்தினாலும் பிரஹ்மம் ஜகத்திற்கு அபிந்நநிமித்த உபாதானகாரணமென்பதே பெறப்படும். இப்பொருளையே முதற்பரிச்சேதத்தில் ஊர்ணநாபி (சிலம்பி) திருஷ்டாந்தத்தால் விரிவாய்க்கூறியுளது.

அக்காரண பேதத்தின் வேறுவகையாகயாவது:—சாதாரணம் (பொது) அசாதாரணம் (சிறப்பு) என்னும் வேறுபாட்டால் அக்காரணம் மீண்டும் இருவகைத்து. காரியமாத்திரத்தை உண்டாக்கும் காரணம் சாதாரண காரணமாம். அவை அதிருஷ்டம்,தேசம், காலம் முதலியனவாம். காரியவிசேஷத்தைத் உண்டாக்கும் காரணம் அசாதாரண காரணமாம். அது, சாட்சுஷ முதலிய பிரமைகளில் சட்சுமுதலியவைகள் அசாதாரண காரணங்களாதல் போலவாம்.

இவ்வாறே கடாபாவத்தை விஷயப்படுத்தும் பிரமைக்கண் மேற்கூறிய கடாநுபலப்தி அசாதாரண காரணமாவதால்; அதுவுங்கரணமாதல் கூடும்.

## அபாவத்தின் சொரூபம்.

நஞு ஸெஹூஜிவிதயீ விஷயஃ ஃஹாவஃ(இ-ள்) ந சத்தத்தின்பொருளை விஷயப்படுத்தும் நாஸ்தி (இல்லை) என்னும் பிரதீதிக்கு விஷயம் எதுவோ,அது அபாவமாம். ஹூதலெவடொநாஸ்தி (பூதலத்திற்கடமில்லை) என்னும் பிரதீதிக்கு விஷயம் பூதலத்தில் கடத்தின் அபாவமாதல் போதும். அவ்வபாவம் ஒரு அத்தியந்தாபாவமேயாம். பிராகபாவ முதலிய பேதத்தால் அவ்வபாவம் நான்கு வகைத்தென்பதில் ஓர் பிரமாணமுமில்லை.

ஈண்டு நையாயிகர்களோ இங்ஙனங் கூறுவர்:—அவ்வபாவம் பிராகபாவம் (முன்னபாவம்), பிரத்தொம்சாபாவம் (அழிவுபாட்டபாவம்), அத்தியந்தாபாவம் (முழுதுமபாவம்), அந்யோந்யாபாவம் (ஒன்றுக்கொன்றபாவம்) என்னும் பேதத்தால் நான்கு விதம். கடத்தின் உற்பத்திக்கு முன் அக்கடத்தின் அவயவமாகிய கபாலங்களில் வடொஹவிஷ்யதி (கடம்தோன்றும்) என்னும் தோற்றம் உண்டாகின்றது. அத்தோற்றத்தால் அக்கபாலங்களில் அக்கடத்தின் பிராகபாவம் பெறப்படும். தடியாலுடைத்தல் முதலியவைகளால் அக்கடம் உடைபட்ட பின்னர்,அக்கபாலங்களில் வடொயூஷஃ(கடம் அழிந்தது)என்னும் தோற்றமுண்டாகின்றது. அத்தோற்றத்தால் அக்கபாலங்களில் அக்கடத்தின் பிரத்தொம்சாபாவம் பெறப்படும். கடந்தோன்ருக்காலத்து ஹூதலெவடொநாஸ்தி (நிலத்திற் கடமில்லை) என்னுந்தோற்றமுண்டாகின்றது. அத்தோற்றத்தால் அந்நிலத்தின்கண் அக்கடத்தின் அத்தியாந்தபாவம் நிகழும். நிலத்தின்கண் கடம் இருக்குங் காலத்தும் ஹூதலஂநவடஃ (நிலங்கடமன்று) என்னும் தோற்றமுண்டாகின்றது அத்தோற்றத்தால் அந்நிலத்தின்கண் அக்கடத்தின் பேதமான அந்யோந்யாபாவம் பெறப்படும். இவ்வாறுவிலட்சணத் தோற்றத்தின் வலியால் அவ்வொரே கடத்திற்கு நால்வகை அபாவங்கள் சித்திக்கும். ஆண்டுப் பிராகபாவம் அநாதியும் நாசமுடையதுமாம். பிரத்தொம்சாபாவமோ உற்பத்தியுடையதும் நாசமின்றியதுமாம். அத்தியந்தாபாவம் அந்யோன்யாபாவமென்னு மிரண்டு அபாவங்களும் உற்பத்தி விநாசரகிதமாவதால் நித்தியமாம். இந்நான்கு அபாவங்களின் விஸ்தாரநிரூபணம் நியாயப்பிரகாசம் நான்காவது பரிச்சேதத்திற் கூறியிருத்தலின் ஆண்டறிக.

நையாயிகர்களின் மதம் நலமுடைத்தன்று. ஏனெனின்,வடொஹவிஷ்யதி (கடம்தோன்றும்) என்று மேற்கூறிய தோற்றம் அபாவவாசகமான ந (அன்று இன்று)என்னும் சத்தமின்ருதலால் அந்தப் பிராகபாவத்தை விஷயப்படுத்துவதன்று. ஆனல்பவிஷ்யத்தான எதிர்காலத்தே இனித்தோன்றக்கடவதான கடத்தின்சத்தையோடுள்ள சம்பந்தம் எதுவோ, அதனையே அத்தோற்றம் விஷயப்படுத்தும். ஆகவே அத்தோற்றத்தால் கடத்தின் பிராகபாவம் சித்தமாகாது. அல்லது அக்கடத்தின் உற்பத்திக்குமுன் பிராகபாவமுண்டெனின்; உற்பத்திக்குமுன் அசத்தாவதால் அக்கடத்தின் உற்பத்தியே நிகழாது. ஒருகால்

அசத்திற்கும் உற்பத்தி நிகழுமெனின்; சத்தல்லாத முயற்கோடு, மலடிமகன் முதலியவைகளும் உற்பத்தியாதல் வேண்டும்.

சங்கை:—அசத்திற்கு உற்பத்தி எங்ஙனம் சம்பவியாதோ, அங்ஙனமே சத்திற்கும் உற்பத்தி சம்பவியாது. ஏனெனின், எக்கட உற்பத்தியின் பொருட்டுக் குலாலன் தண்டம் சக்கரம் முதலிய காரகங்களின் வியாபாரமுண்டாமோ, அக்கடம் நுமது மதத்தில் தனது உற்பத்திக்கும் பூருவமே சித்தமாம். ஆகலின் அக்காரக(வினைகொண்டு முடியும்) வியாபாரம் வியர்த்தமேயாகும்.

சமாதானம்:—அக்கடம் தனது உற்பத்திக்கு முன் மண் முதலிய காரண வடிவாகவே நிற்கினும், அக்காரக வியாபாரத்திற்குப் பூருவம் அக்கடம் அபிவியக்தமாவதில்லை. ஆனால் அக்காரக வியாபாரத்திற்குப் பின்னரே அக்கடம் அபிவியக்தமாகின்றது. ஆகவே அக்கடகாரியத்தின் அபிவியக்தி (வெளிப்படுதல்) மாத்திரத்தால் அக்காரக வியாபாரத்திற்குப் பொருளுடைத்தாதல் கூடும்.

அல்லது, உற்பத்திக்கு முன் காரியத்திற்குக் காரணவடிவசத்தை மேற்கூறிய யுக்தி மாத்திரத்தாற் பெறப்படுவதல்லாமல் சுருதி சூத்திரங்களானும் பெறப்படும். ஆண்டுச் சுருதி ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் (காண்டற்கினிய சுவேதகேதுவே' சுட்டியறியப்படும் இப்பிரபஞ்சம் தனது உற்பத்திக்குப் பூருவம் சத்தாகவே நின்றது. அஃதாவது பரமகாரணமான பரமான்ம வடிவத்தாற் சத்தாயிருந்தது. ஆண்டுச் சூத்திரம். ஸத்வாச்சாவரஸ்ய (இ-ள்) இப்பிரபஞ்சமாகிய காரியம் தனது உற்பத்திக்கு முன் காரணவடிவமாகச் சத்தாயிருத்தலின், இவ்வர்த்தமான காலத்தும் அப்பரமகாரணத்தினும் அநன்னியமே. அஃதாவது அப்பரமகாரணமாகிய பரமான்மாவினும் பிந்நமாக அபாவமேயாம். ஒருகால் அப்பிராகபாவம் அங்கீகாரமாயின் இச்சுருதி சூத்திரங்களுக்கு விரோதமுண்டாம். ஆதலின் சுருதி சூத்திரங்கட்கு விரோதமாக அப்பிராகபாவத்தை அங்கீகரித்தல் தகுதியன்று.

அல்லது, பிராகபாவத்தைப்போன்று பிரத்தொம்சாபாவத்திலும் ஓர் பிரமாணமுமில்லை. ஏனெனின், பிரஹ்ம சாட்சாத்காரத்திற்கு முன் இக்காரியப் பிரபஞ்சத்திற்கு அத்தியந்த நாசமுண்டாகிறதில்லை. ஆனால், பிஜாங்குர நியாயம்போல் சிருட்டிப் பிரளயங்களுக்குப் பிரவாக வடிவாக அநாதித்தன்மையே யுண்டு. அதாவது எங்ஙனம் விதையினின்று முளையும், அம்முளையினின்று மீண்டும் விதையுப், அவ்விதையினின்று மீண்டும் முளையுமுண்டாகின்றனவோ, அங்ஙனமே சிருட்டிக்குப் பின்னர் பிரளயமும், அப்பிரளயத்திற்குப் பின்னர் மீண்டும் சிருட்டியும், அச்சிருட்டிக்குப் பின்னர் மீண்டும் பிரளயமுமுண்டாகின்றன. இவ்வாற்றான் அச்சிருட்டிப் பிரளயங்கள் பிரவாக வடிவமாக அநாதியாயிருக்கின்றன. பிரளயகாலத்திலும் அக்காரியப் பிரபஞ்சம் முற்றும் நாசமாவதில்லை. ஆனால், தனது காரணத்தில் மறைந்துளது. இவ்வாறு இப்போது அழிந்த கடமுதலியகாரியங்களும் தம் கபாலமுதலிய காரணங்களில் மறைந்தே யுள்ளன. அங்ஙனம் மறைந்த அவஸ்தையேவ ப்ரத்வம்ஸ:

(கடம் அழிந்தது)என்னுந்தோற்றத்திற்குவிஷயமாம். ஆகவேஅத்தோற்றத்தால் கடத்தின் பிரத்தொம்சாபாவம் சித்தியாது. அல்லது பிரளயமுதலியவற்றில் ஓர்கால் காரியங்கள், முற்றும் நாசமானுல் ஸதெவ ஸெளமெ ஞுஃ ஊ ருஸீஸ்। ஞூத்ராவா ஊஃ மெகூ வனவாஜு ஞுஸீஸ் । நாஸதொ விஃ ரு தெ ஹாவொ நாஹா வொ விஃ ருதெ ஸதஃ (ஏசௌமிய! முன்சத்தே இருந்தது. ஈதெல்லாம் ஆன் மாகவே யன்றே முன் இருந்தன. அசத்துக்குச்சத்தை இல்லை. சத்தைக்கு அசத்தை இல்லை.) என்னுந்தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்கள் சிரு டிக்குப் பூருவம் இலீனமான காரியத்திற்கு காரணவடிவத்தாற்சத்தை கூறி யது எதுவோ, அது அசங்கதமாகும். ஆதலின் அச்சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமாவதால் அப்பிரத்தொம்சாபாவமும் அங்கிகரிக்கத்தக்கதன்று.

அல்லது நையாயிகர்கள் அத்தியந்தாபாவ அந்யோந்யாபாவங்கள் உற் பத்தி நாசமின்றி நித்தியமாமென் றுரைப்பினர்; அதுவும் அசங்கதம். ஏனெனின், வகூ மெவா ஷிதீயம் ஸ்ரூஹ (பிரஹ்மம் சுசாதி விசாதி சுவகத பேதமற்றது) என்னுஞ் சுருதியோ பிரஹ்மத்தைச் சருவதுவிதப் பிரபஞ்சத்திற்கும் வேரு கக் கூறியுளது. அன்றியும், நெஹ நாநாஸி கிஂவந (ஈண்டு பலவென்பது இறையுமில்லை) என்னுஞ் சுருதி பிரஹ்மத்தின்கண் சருவதுவிதப் பிரபஞ்சத் தை நிஷேதஞ் செய்துளது. அன்றியும் ஈதொ ஽ நு ரு ஊாத்ருஂ (இதனினும் பிறிதெலாம் பொய்)என்னுஞ்சுருதி அந்தப்பிரஹ்மத்திற்கு வேருன சருவப்பிர பஞ்சத்தையும் மித்தையெனக் கூறியுளது. ஓர்கால் அவ்வத்தியந்தாபாவ அந் யோந்யாபாவங்கள் நித்தியமாமெனின்; இவ்வெல்லாச் சுருதிகட்கும் விரோ தம் வருமாகலின் அவற்றை அநித்தியமென்றே கொள்ளவேண்டும். மேலும் அவ்வபாவத்தோடு நேத்திரமுதலிய விந்திரியங்கட்குச் சம்பந்தம் எவ்வழியுங் கூடாதெனல் மேற்கூறியுளது. ஆகவே ஹூதலெவடொநாஸி (பூதலத்திற் கடமில்லை) என்னும் பிரத்தியட்சப் பிரதீதியால் அந்த அத்தியந்தாபாவம் நித் தியமெனல் பொருந்தாது. அன்றியும் வடஃவடொந (கடம்படமன்று) எனல் முதலிய பிரதீதி அவ்வந்யோந்யாபாவத்தை விஷயப்படுத்துவனவன்று. ஆனல் அந்தப்பிரதீதி 'கடம்படம்' என்னுமிரண்டின் அபேதத்தின் அத்தியந்தாபாவம் எதுவோ அதையே விஷயப்படுத்தும். ஆகவே மேற்கூறிய அந்தப் பிரதீதியால் அந்யோந்யாபாவத்தின் சித்தியுண்டாகாது. பேதவடிவான இவ்வந்யோந்யா பாவத்தை முதற்பரிச்சேதத்தில் விரிவாய்க் கண்டிக்கப்பட்டுளது. இவ்வாறு கிய பிராகபாவ, பிரத்தொம்சாபாவ, அந்யோந்யாபாவ மென்னும் மூன்று அபா வங்கள் நிரூபிக்கப்படாதன; ஆகவே அத்தியந்தாபாவ மொன்றையே கொள்ள வேண்டும்.

## பாரமார்த்திக அத்தியந்தபாவ நிரூபணம்.

அவ்வத்தியந்தாபாவமும் பாரமார்த்திகம், வியாவகாரிகம் என்னும் பேதத் தால் இருவிதம். நெஹ நாநாஸி கிஂவந (ஈண்டுநாநாவென்பது சிறிதுமில்லை) என்னுஞ் சுருதி பிரத்தியகபின்ன பிரஹ்மத்தின்கண்ணுள்ள ஜீவ ஈசுவர ஜகத்

தான துவிதப் பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவம் பாரமார்த்திகமாமென்று கூறியுளது.

**சங்கை:**—அவ்வத்தியந்தாபாவம் பாரமார்த்திகமெனல் பொருந்தாது. ஏனெனின்; பிரதியோகிசத்தையின் அதீனமாகவே அபாவத்தின்சத்தை யுண்டாம். பிரபஞ்சமாகிய பிரதியோகி கற்பிதமாகலின் அந்தப் பிரபஞ்ச அத்தியந்தாபாவமும் கற்பிதமேயாகும். அல்லது அந்தப் பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவம் பாரமார்த்திகமெனின் பிரஹ்மத்தை அத்துவிதீயமென்றுகூறும் ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம (சுசாதி விசாதி சுவகதபேதமற்றது பிரஹ்மம்) என்னும் சுருதிக்கு முரண்வரும்.

**சமாதானம்:**—கற்பிதவஸ்துவின் அபாவம் அதிஷ்டானவடிவமேயாம்; அதிஷ்டானத்தினும் வேறன்று. ஆதலின் கற்பிதப்பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவமும் அதிஷ்டான பிரஹ்ம வடிவமேயாம். அவ்வதிஷ்டானத்தினும் வேறன்று. அவ்வதிஷ்டான பிரஹ்மத்திற்குப் பாரமார்த்திகத்தன்மை சுருதி ஸ்மிருதிகளாற் சித்தமேயாம். ஆகலின் அவ்வதிஷ்டானப் பெற்றியால் அவ்வத்தியந்தாபாவத்தின்கண்ணும் அப்பாரமார்த்திகத்தன்மை சம்பவமாம். ஆனால் அவ்வத்தியந்தாபாவம் அவ்வதிஷ்டான பிரஹ்மத்தினும் வேறன்று. ஆகவே அவ்வத்வைதத்தைப்போதிக்கும் சுருதிக்கும் முரண்வராது.

**சங்கை:**—அவ்வத்தியந்தாபாவம் அதிஷ்டான வடிவமாமேல்; அவ்வதிஷ்டானத்தின் ஞானம் அநுபலப்திப் பிரமாணத்தால் பெறப்படாது. ஆதலால் நுமதுமதத்தில் அவ்வநுபலப்திப் பிரமாணத்தை அங்கீகரித்தல் வியர்த்தமேயாம்.

**சமாதானம்:**—யாம் பூதல முதலியவைகளிலுள்ள கடமுதலியவைகளின் அத்தியந்தாபாவத்தை அதிஷ்டானமென் றங்கீகரிப்பதில்லை. ஆனால், வியாவகாரிக கடமுதலியவைகளின் வியாவகாரிக அத்தியந்தாபாவம் அதிஷ்டானத்தினும் பின்னமேயாம், அவ்வியாவகாரிக அத்தியந்தாபாவ ஞானத்தின் பொருட்டே யாம் பூருவம் அநுபலப்திப் பிரமாணத்தை அங்கீகரித்தோம். ஆகவே அவ்வநுபலப்திப் பிரமாணத்தின் அங்கீகாரம் வியர்த்தமன்று.

ஈண்டுச்சில நூலாசிரியரோ இங்ஙனங்கூறுகின்றனர்:—நேஹ நாநாஸ்தி கிஞ்சந (ஈண்டு நாநாவானவை சிறிதுமில்லை.) என்னுஞ் சுருதிகூறிய பிரஹ்மத்தினிடத்துள்ள பிரபஞ்சத்தின் பாரமார்த்திக அத்தியந்தாபாவம் எதுவோ, அது அவ்வதிஷ்டான பிரஹ்மத்தினும் பின்னமே; அதிஷ்டானசொரூபமன்று. பாவ அபாவங்களுக்கு ஒற்றுமை நிகழாதாதலின். ஏகமேவாத்விதீயம்ப்ரஹ்ம (பிரஹ்மம் சுசாதி விசாதி சுவகதபேத மற்றது)என்னுஞ் சுருதிக்கோ பாவாத்வைதத்தில் தாற்பரியமாம். அஃதாவது பிரஹ்மத்திற்கு வேறாகப் பிறிதோர் பாவ பதார்த்தம் யாது மின்று என்பதாம். அவ்வத்தியந்தாபாவம் பிரஹ்மத்திற்கு வேறாகவே நிற்கினும் அதனால் அவ்வத்வைத சுருதிக்கு விரோதமுண்டாகமாட்டாது.

இம்மதம் நலமன்று. ஏனெனின், ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம (பிரஹ்மம் சுசாதி விசாதி சுவகதபேத மற்றது) என்னுஞ் சுருதி பிரஹ்மத்தைப் பாவ அபாவவடிவ துவிதப்பிரபஞ்சமனைத்து மின்றியதெனக் கூறுகின்றது. அச்சுருதியைச் சங்கோசஞ்செய்து கேவலம் பாவாத்வைதபரத்வம் ஒப்புவதில் ஓர் பிரமாணமுமில்லை. அன்றியும் பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவம் அதிஷ்டான பிரஹ்மத்தினும் பின்னமென்றங்கீகரிக்கின்,அவ்வத்தியந்தாபாவத்தினிடத்துப்பாரமார்த்திகத்தன்மை சம்பவியாது. அதிஷ்டானத்திற்கு வேறான அபாவம், பிரதியோகியின் சத்தைக்குச் சமானமான சத்தையுடைய தென்பது நியமமாகலின், பிரபஞ்சமாகிய பிரதியோகி கற்பிதமாதலால், அக்கற்பிதப் பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவமும் கற்பிதமேயாகும். ஆகவே முற்கூறியபட்சம் சமீசினமன்று.

## வியாவகாரிக அத்தியந்தாபாவ நிரூபணம்.

பூதலே கடோ நாஸ்தி (பூதலத்திற் கடமில்லை)என்னும் பிரதீதிபூதலத்திலுள்ள கடத்தின் எவ்வத்தியந்தாபாவத்தை விஷயப்படுத்துகின்றதோ, அவ்வத்தியந்தாபாவம் வியாவகாரிக அத்தியந்தாபாவமாம். இவ்வியாவகாரிக அத்தியந்தாபாவமே முற்கூறிய யோக்கியாநுபலப்தியாற் கொள்ளப்படும். அப்பூதலத்தின்கண்ணுள்ள கடாபேதத்தின் அத்தியந்தாபாவத்தையே நையாயிகர் பூதலம் கடோ ந (பூதலம் கடமன்று) என்னுந் தோற்றத்திற்கு விஷயமாக, பேதமென்றும் அந்யோந்யாபாவமென்றும் கூறுவர். ஆகலின் அப்பேதவடிவ அந்யோந்யாபாவம் அவ்வத்தியந்தாபாவத்தினும் வேறன்று. அன்றியும் சுருதியின் யதார்த்ததாற்பரிய உணர்ச்சியில்லாத நையாயிகர்கள் ஜீவ ஈசுவரர்களுக்குப்பேதமும், பூதலமுதலியவைகளில் கடமுதலியவைகளுக்கு அத்தியந்தாபாவமும் அங்கிகரித்திருக்கின்றனர். அவ்வெல்லா அபாவங்களும் அநித்தமே; ஒரு அபாவமும் நித்தமன்று. ஏனெனின் பிரஹ்மத்திற்கு வேறான எத்துணைப்பாவ அபாவவடிவ ஜகத்துண்டோ, அவ்வெல்லா ஜகத்தும் அவித்தையின் காரியமாம். தத்துவமசி முதலிய மகாவாக்கியத்தாற்றோன்றும் பிரஹ்மாத்ம சாட்சாத்காரத்தால் அவ் வவித்தை நாசமாம். அவ்வவித்தை நாசமாகுங்கால் அவ்வவித்தையின் காரியமான பிரபஞ்சமும் நாசமாம். இவ்வாறு சர்வ அநான்மப் பிரபஞ்சமும் ஆன்மஞானத்தால் நிவிர்த்தியாவதால் அவ்வபாவங்களுக்கு அநித்தத்தன்மையே பெறப்படும்.

ஈண்டுச் சிலநூலாசிரியரோ நியாயநூற்களை யநுசரித்துப் பிராகபாவம், பிரத்தொம்சாபாவம், அத்தியந்தாபாவம், அந்யோந்யாபாவம், என்னும் பேதத்தால் அவ்வபாவம் நால்வகைத்தென்றொப்பி யிருக்கின்றனர். அவற்றின் இலக்கணங்களாவன:—தனது உற்பத்திக்குமுன் காரியத்திற்குத்தனது உபாதானகாரணத்திலுள்ள அபாவம் பிராகபாவமாம். அது, கடமுதலிய காரியங்களுக்குத்தம் உற்பத்திக்கு முன்,மண் முதலிய காரணங்களிலுள்ளது. எவ்வபாவம் அநாதியும் தனது பிரதியோகியைத்தோற்றுவிப்பதுமாமோ அவ்வபாவம் பிராகபாவமெனப்படும். அல்லது எவ்வபாவம் அநாதியும் நாசமுடையதுமாமோ, அவ்வபாவம் பிராகபாவமெனப்படும். தோன்றியகாரியத்திற்குத் தனது

உபாதானகாரணத்திலுள்ள அபாவம் பிரத்தொம்சாபாவமெனப்படும். அது, தடியாலுடைத்தற்குப்பின்னர் கடமுதலிய காரியங்களுக்குக்கபாலமுதலியகாரணங்களிலுள்ளது. தனது பிரதியோகியின் சமானமற்ற அதிகரணத்தின்கண்ணுள்ள அபாவம் அத்தியந்தாபாவ மெனப்படும். அது, பூதலமுதலியவைகளிலுள்ள கடமுதலியவற்றின் அத்தியந்தாபாவம் தனது பிரதியோகியின் அதிகரணத்திற்கு வேறான அதிகரணததிலே இருப்பதுபோலும். எவ்வபாவம் தனது பிரதியோகியின் சமான அதிகரணமாமோ அல்லது எவ்வபாவத்திற்குத் தாதான்மியமே பிரதியோகியாமோ அவ்வபாவம் அந்யோந்யாபாவ மெனப்படும். இவ்வந்யோந்யாபாவத்தைப் பேதமெனவுங் கூறுவர். எங்ஙனமெனின், பூதலமுதலியவைகளில் கடத்தின் அந்யோந்யாபாவமாகிய பேதமுண்டு. அது அப்பூதலத்திற் கடம் இருக்குங்காலத்திலும் இருக்கின்றது. ஆகலின் அவ்வந்யோந்யாபாவம் பிரதியோகியின் சமானஅதிகரணமாம்.

அந்தப் பிராகபாவமுதலிய அபாவங்களனைத்தும் மாயாகாரியமாவதால் அநித்தமேயாம். அத்தியந்தாபாவம், அந்யோந்யாபாவம் என்னும் இரண்டு அபாவங்களோ நித்தமும், ஏனைப்பிராகபாவ பிரத்தொம்சாபாவங்கள் அநித்தமுமாம், என்னும் நையாயிகர்களின் கூற்று, சர்வப்பிரபஞ்சத்தையும் நிஷேதிக்கும் சுருதிக்கு முரணுவதால் அசங்கதமாம். இது அபாவப்பிரமாண நிரூபணம்.

முன் நிரூபித்துள்ள பிரத்தியட்சம், அநுமிதி, உவமிதி, சாப்தம், அர்த்தாபத்தி, அபாவம் என்னும் இவை அறுவகைப் பிரமைகளாம். அவ்வெல்லாப்பிரமைளால் ஆவரணசக்தியோடு அஞ்ஞானத்தின் நிவிர்த்தியே யுண்டாகின்றது. அவற்றுள்ளும் அநுமிதிமுதலிய பரோட்சப் பிரமையானே அசத்வாபாதக (இல்லை என்பதைச்சம்பாதிக்கும்)ஆவரணசக்தி விசிஷ்ட அஞ்ஞானம் நிவிர்த்தியாம். அபரோட்சப் பிரமையால் அபாநுபாதக (விளங்கவில்லை என்பதைச் சம்பாதிக்கும்) ஆவரண சக்தி விசிஷ்ட அஞ்ஞானம் நிவிர்த்தியாம். அவ்வாவரண சக்தி விசிஷ்ட அஞ்ஞான நிவிர்த்திக்குப் பின்னர் கடமுதலிய பொருள்கள்விளங்குகின்றன. இவ்வாறே தத்துவமசி முதலிய மகாவாக்கிய ஜன்னிய அஹம்பிரஹ்மாஸ்மி என்னும் அபரோட்சப் பிரமையால் பிரஹ்மத்தை மறைத்துள்ள மூலாஞ்ஞானம் நிவிர்த்தியாகுங்கால் இவ்வதிகாரிக்குப் பிரஹ்ம சாட்சாத்காரம் நிகழும். ஆகலின் இப்பரிச்சேதத்தின்கண் பிரமை நிரூபணம் சார்த்தகமாம்.

இஃது ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ உத்தவானந்தகிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யனான
சித்கனானந்தகிரி சுவாமியாற் செய்யப்பட்ட
பிராகிருத தத்துவாநு சந்தானத்தின்
இரண்டாவது பரிச்சேதம் முற்றிற்று.

---

உ

ஸ்ரீகணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம:

ஸ்ரீகாசீவிஸ்வேஸ்வராப்யாம் நம: ஸ்ரீசங்கராசார்யேப்யோ நம:

# தத்துவாநுசந்தானம்

---

## மூன்றாவது பரிச்சேதம்.

---

முன் இரண்டாவது பரிச்சேதத்தின் முதலில் பிரமை, அப்பிரமை, என்னும் பேதத்தால் இருவித விருத்தியைக் கூறினோம். அவற்றுள் முதற் பிரமை விருத்தியை பிரமாணப்பயன்களோடு இரண்டாவது பரிச்சேதத்தில் விரிவாய்க்கூறினோம். இனி இம்மூன்றாவது பரிச்சேதத்தில் இரண்டாவது அப்பிரமையைப்பற்றி விரிவாய் நிரூபிப்பாம்.

### அப்பிரமை விருத்தி நிரூபணம்.

சங்கை:—'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் பிரமைவிருத்தியோ அஞ்ஞானத்தை நிவிர்த்திசெய்து அதிகாரிக்குப் பிரஹ்ம பாவத்தை நிகழ்த்தும்; ஆதலாற் பிரமை விருத்தியை நூலில் நிரூபித்தல் உசிதமாம். ஆனால் அப்பிரமை விருத்தியால் அதிகாரி ஓர் பயனும் பெறுவதில்லை, ஆதலால் நூலில் அப்பிரமை விருத்தியை நிரூபித்தல் நிஷ்பயனும்.

சமாதானம்:—பிரதிபந்தமில்லாத பிரமைக்கே அஞ்ஞானத்தை நிவிர்த்திக்குந் தன்மையுண்டு. ஆதலாற் பிரதிபந்தமும், பிரதிபந்தத்தை நிவிர்த்திக்கும் உபாயமுமாகிய விரண்டையும் அதிகாரி அவசியம் அறிதல்வேண்டும். ஆண்டு அசம்பாவனை விபரீதபாவனை என்னும் இரண்டும் பிரதிபந்தமெனப்படும். சிரவண மனன நிதித்தியாசனமென்னும் மூன்றும் அந்தப் பிரதிபந்தத்தை நிவிர்த்திக்கும் உபாயங்களாம். அசம்பாவனை விபரீதபாவனைகள் ஆத்மஞானத்திற்குப் பிரதிபந்தகமென்பதை பராசரமுநிவரும் கூறியிருக்கின்றனர். சுலோகம் ஹாவநாவிவரீதாயாயாவா ஸஂஹாவநா ஶுக। கூஈஈதெ வூதிவஂயஂஸாத க்ஷஜாநஸு நாவாஶு (இ-ள்.) சுகரே! விபரீதபாவனையும் அசம்பாவனையுமாகிய விரண்டும் ஆத்மஞானத்தைப்பிரதிபந்திக்கின்றன. வேறு யாதும் அதைப் பிரதிபந்திக்காது, ஆதலால் அதிகாரி சிரவண முதலியவைகளால் அந்தப் பிரதிபந்தத்தை நிவிர்த்திக்கவேண்டியது அவசியமாம்.

அல்லது சிரவண முதலியவைகளும் பிரதிபந்தத்தை நிவிர்த்திக்கு மாற்றால் ஆத்ம ஞானத்திற்குச் சாதனங்களாகின்றனவே தவிர, சாட்சாத் அன்று. பிரதிபந்தவடிவான அசம்பாவனையும் விபரீதபாவனையும் மேற்கூறப்படும் அப்

பிரமை ஞானத்தில் அடங்கியனவேயாதலால் அந்த அப்பிரமை விருத்தியை அவசியம் நிரூபித்தல் தகுதியுடைத்து. இவ்வபிப்பிராயத்தாற்றான் இம்மூன்றாவது பரிச்சேதத்தின்கண் அப்பிரமை விருத்தியை விரிவாயாராய்வாம். ஆண்டு ப்ரமாபிந்நம் ஜ்ஞாநம் அப்ரமா (இ-ள்.) முன் இரண்டாவது பரிச்சேதத்திற் கூறிய பிரமைக்கு வேறான ஞானம் யாதோ, அது அப்பிரமை எனப்படும். அது, இப்பியில் 'இதுவெள்ளி' என்றல் முதலிய ஞானம் பிரமை ஞானத்திற்கு வேறாகுவதால் அப்பிரமை எனப்படுதல்போலும். 'ஞானம் அப்பிரமை' எனல்மாத்திரமே அப்பிரமைக்கு இலக்கணமாகக்கூறி அவ்விலக்கணத்தில் 'பிரமைக்குவேறான' எனக்கூறாவிடின்; பிரமை ஞானத்தில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்குதற்கு அவ்விலக்கணத்தில் 'பிரமைக்கு வேறான' என்று கூறப்பட்டது. பிரமை ஞானத்தில் பிரமைக்கு வேறாந்தன்மையின்று. ஆதலால் பிரமை ஞானத்தில் முற்கூறிய இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது, 'பிரமைக்கு வேறானது அப்பிரமை,' என்று இம்மட்டிற் கூறி ஞானமென்னும் பதத்தைக் கூறாவிடின் பிரமை ஞானத்திற்கு வேறான கடமுதலியவைகளில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்குதற்கு அவ்விலக்கணத்தில் ஞானமென்னும் பதங்கூறப்பட்டது. கடமுதலியவைகளில் ஞானத்தன்மையின்று, ஆதலால் அக்கட முதலியவற்றில் அப்பிரமை இலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

## ஸ்மிருதி நிரூபணம்.

முற்கூறிய அப்பிரமைவிருத்தி ஸ்மிருதி, அநுபவம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்து. ஸம்ஸ்காரமாத்ரஜந்யம் ஜ்ஞாநம் ஸ்ம்ருதி: (இ-ள்.) சம்ஸ்கார மாத்திரத்தாலுண்டாகும் ஞானம் ஸ்மிருதி எனப்படும். அவள் எனது தாய் அவர் எனது தந்தை என்பன முதலிய ஞானங்கள் சம்ஸ்கார மாத்திரத்தாலுண்டாவதால் ஸ்மிருதி எனப்படுதல் போலும். இவ்விலக்கணத்தில் 'மாத்திரம்' என்னும் பதத்தைக் கூறாவிடின் ஸோऽயம் தேவதத்த: (அவன் இத்தேவதத்தன்) என்னும் பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியட்சத்தில் அந்த ஸ்மிருதியின் இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும்; பிரத்தியபிஞ்ஞாப் பிரத்தியட்சமும் சம்ஸ்காரத்தாற் றோன்றுவதே யாதலால். அவ்வதிவியாப்தி தோஷத்தை விலக்குதற்கு அவ்விலக்கணத்தில் மாத்திர பதங்கூறப்பட்டது. பிரத்தியபிஞ்ஞாப் பிரத்தியட்சம் சம்ஸ்கார மாத்திரத்தாற் றோன்றுவதன்றி, சம்ஸ்காரத்தோடுங் கூடிய இந்திரியத்தாற்றோன்றுவதாம். மாத்திரபதத்தைக் கூறலால் பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியட்சத்தில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

அல்லது, அவ்விலக்கணத்தில் 'ஞானம்' என்னும் பதத்தைக் கூறாவிடின் சம்ஸ்காரமாகிய பிரதியோகியாற்றோன்றும் அச்சம்ஸ்கார தொம்சத்தில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அது நீக்குதற்கு அவ்விலக்கணத்தில் 'ஞானம்' என்னும் பதங்கூறப்பட்டது. அத்தொம்சத்தில் ஞானத்தன்மையின்மையால் அதனிடத்து ஸ்மிருதி இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. ஈண்டுக் கருத்திதுவாம். சம்ஸ்காரம் வேகம், பாவனை, திதிஸ்தாபகம் (நிலைபெ

றுத்துகை) என்னும் வேற்றுமையால் மூவிதம். எச்சம்ஸ்காரம் கிரியையாற் றோன்றுவதாயும், வேறு கிரியையைத் தோற்றுவிப்பதாயுமுளதோ, அச்சம்ஸ் காரம் வேகமெனப்படும். அவ்வேகமெனப் பெயரிய சம்ஸ்காரம் பாணமுதலிய வற்றிலுளது. எச்சம்ஸ்காரம் அநுபவஞானத்தாற்றோன்றுவதாயும், ஸ்மிருதி ஞானத்தைத் தோற்றுவிப்பதாயுமுளதோ, அச்சம்ஸ்காரம் பாவனை எனப்படும். அப்பாவனை என்னும் சம்ஸ்காரம் வேதாந்தசித்தாந்தத்திலோ அந்தக்கரணத்தி லுளது, நையாயிகமதத்தில் ஆத்மாவிலுளது. வேதாந்திகள் ஒப்பியுள்ள அகங் காரத்தினையே ஆத்மாவென நையாயிகர்கள் அறிகின்றாராகலின். வேறுதன்மை யாகச் செய்யப்பட்ட வஸ்துவைமீட்டும் அங்நிலையேயாக்குவதாகிய சம்ஸ்காரத் தினைத் திதிஸ்தாபகமெனப்படும். அத்திதிஸ்தாபகமெனப் பெயரிய சம்ஸ்கா ரம் வில் கிளை முதலியவைகளிலுளது. இம்மூவித சம்ஸ்காரங்களை நியாயப்பிர காசம் மூன்றுவது பரிச்சேதத்தில் விரிவாய் நிரூபித்துள்ளேம். அவைகளை ஆண்டு அறிக. வேகம், திதிஸ்தாபகம் என்னும் இரண்டு சம்ஸ்காரங்கட்குங் கிரியையைத் தோற்றுவிக்குந் தன்மையேயுளது; எனினும், பாவனை என்னும் சம்ஸ்காரத்திற்கு ஞானத்தைத் தோற்றுவிக்குந் தன்மையுளது. ஆதலால் ஸ்மிருதியின் இலக்கணத்தில் சம்ஸ்காரசப்தத்தால் பாவனை என்னும் சம்ஸ் காரமே விவட்சிதமாம் (கருத்து). ஆகவே முற்கூறிய ஸ்மிருதியின் இலக்கணம் சம்பவமாம்.

## ஸ்மிருதியின் பிரிவு கூறுதல்.

முற்கூறிய ஸ்மிருதி யதார்த்தம், அயதார்த்தம் என்னும் பேதத்தால் இரு விதம். யதார்த்த அநுபவஜன்ய சம்ஸ்காரத்தாலுண்டாகும் ஸ்மிருதி யதார்த்த ஸ்மிருதியாம். அயதார்த்த அநுபவஜன்ய சம்ஸ்காரத்தாலுண்டாகும் ஸ்மிருதி அயதார்த்த ஸ்மிருதியாம். அந்த யதார்த்தஸ்மிருதியும் அநாத்ம ஸ்மிருதி, ஆத்மஸ்மிருதி என்றிருவிதம். 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌿𑌕𑌃 𑌪𑍍𑌰𑌪𑌂𑌚𑌃 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾, 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑌜𑌤𑌵𑌤𑍍 (வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தை, திருசியத்தன்மையால், சுக்திரஜதம்போலும்) என்னும் அநுமானத்தாலுண்டாகும் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மை அநுபவமாம். அவ்வநுபவஜன்ய சம்ஸ்காரத்தால் அதிகாரிக்கு உண்டாகும் பிரபஞ்சமித்தியாத்தன்மையின் ஸ்மிருதி யதார்த்த அநாத்ம ஸ்மிருதி எனப்படும். தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களாலுண்டான 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் அநுபவஜன்ய சம்ஸ்காரத்தால் அதிகாரிக்கு உண்டாகும் பிரத்தியகபின்ன பிரஹ்மத்தின் ஸ்மிருதி யதார்த்த ஆத்மஸ்மிருதி எனப்படும். இவ்வாறு இரண்டாவது அயதார்த்தஸ்மிருதியும் அநாத்மஸ்மிருதி, ஆத்மஸ்மிருதி என்றிருவிதம். 𑌵𑌾𑌚𑌾𑌰𑌂𑌭𑌣𑌂 𑌵𑌿𑌕𑌾𑌰𑍋 𑌨𑌾𑌮𑌧𑍇𑌯𑌮𑍍। 𑌅𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌦𑌾𑌰𑍍𑌤𑌮𑍍। 𑌮𑌾𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌂 𑌦𑍍𑌵𑍈𑌤𑌮𑍍 (விகாரங்கள் வாக்கை முதலாயுடைய பெயர்மாத்திரம். இதனினும் பிறிதெல்லாம் பொய். இத்துவைதம் மாயாமாத்திரம்) என்றற்றொடக்கத்துசுருதிகளானும், முற்கூறிய அநுமானத்தானும் இப்பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையே சித்தமாம். அங்ஙனமாய மித்தியாப்பிரபஞ்சத்திலுள்ள சத்தியத்தன்மையின் அநுபவம் மயக்கமேயாம். அயதார்த்த அநுபவ ஜன்ய சம்ஸ்காரத்தாலுண்டாகும்

பிரபஞ்ச சத்தியத்தன்மையின் ஸ்மிருதி அயதார்த்த அநாத்மஸ்மிருதி எனப் படும். அகங்காரமுதல் தூலதேகம்வரையிலுமுள்ள அநாத்மபதார்த்தங்கள் யாவும் ஆத்மபாவனைக்கு வேறுதல்பற்றி, அவ்வகங்கார முதலியவைகளிலுள்ள ஆத்மத்தன்மைப்புத்தி அயதார்த்த அநுபவமேயாம். அவ்வயதார்த்த அநு பவஜன்ய சம்ஸ்காரத்தாலுண்டான அகங்காரமுதலியவைகளிலுள்ள ஆத்ம பாவனையின் ஸ்மிருதி யாதோ அது அயதார்த்த ஆத்மஸ்மிருதி எனப்படும். அல்லது வாஸ்தவத்தில் கர்த்தாத்தன்மையில்லாத ஆத்மாவில் கர்த்திருத்தன் மைப் புத்தியாகிய அயதார்த்த அநுபவஜன்ய சம்ஸ்காரத்தாலுண்டாகும் கர்த்தாத்தன்மையின் ஸ்மிருதி அயதார்த்த ஆத்மஸ்மிருதி எனப்படும்.

சங்கை:—சொப்பனத்தில் எப்பதார்த்தங்களின் ஞானமுண்டாகின்றதோ அதுவும் அயதார்த்த ஸ்மிருதி யாதலால் அச்சொப்பனத்தின் ஞானத்தை ஈண்டு விடுத்தது எங்ஙனம்?

சமாதானம்:—சொப்பனஞானம் ஸ்மிருதி யன்று; ஆனுல் அநுபவமே. ஏனெனின், சொப்பனத்தின் ஞானம் ஒருகால் ஸ்மிருதியானுல் அச்சொப்பன த்தில் யாவருக்கும் 'அந்தரதம்' என்றே இரதமுதலிய பதார்த்தங்களின் ஞானமுண்டாகும், அவ்வண்ணம் உண்டாகின்றதில்லை; ஆனுல் 'நான் இரதத் தைக் காண்கின்றேன்' என்னும் அநுபவமே சொப்பனத்தில் நிகழ்கின்றது. இதனுல் அச்சொப்பனத்தின் ஞானம் அநுபவமே; ஸ்மிருதியன்று. இவ்வார் த்தை பின்னருங்கூறுதும். இதுகாறும் ஸ்மிருதி நிரூபிக்கப்பட்டது.

## அநுபவ நிரூபணம்.

ஸ்மிருதிபிந்நஜ்ஞாநம் அநுபூதி: (இ-ள்.) முற்கூறிய ஸ்மிருதி ஞானத் திற்கு வேறுன ஞானம் யாதோ அது அநுபவமெனப்படும். அநுபூதி எனி னும் அநுபவமெனினும் ஒக்கும். 'இதுகடம்' 'இதுவெள்ளி' என்னுந் தொ டக்கத்து ஞானங்கள் ஸ்மிருதி ஞானத்திற்கு வேறுவதால் அநுபவங்களே. 'ஞானம் அநுபவம்' என்றிம்மாத்திரமே அவ்வநுபவத்திற்கு இலக்கணமாயின் ஸ்மிருதி ஞானத்தில் அவ்வநுபவ இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும் அதை நீக்கும்பொருட்டு அவ்விலக்கணத்தில் 'ஸ்மிருதிக்கு வேறுன' என்று கூறப்பட்டது. 'ஸ்மிருதிக்கு வேறுனது அநுபவம்' எனல் மாத்திரமே அவ் வநுபவத்திற்கு இலக்கணமெனின் ஸ்மிருதி ஞானத்திற்கு வேறுன கடமுதலிய வற்றில் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அது நீக்கும்பொருட்டு அவ்விலக்கணத்தில் ஞானம் என்னும் பதம் கூறப்பட்டது.

## அநுபவத்தின்பிரிவைச் சொல்லுதல்.

முற்கூறிய அநுபவமும் யதார்த்தம், அயதார்த்தம் என்னும் பேதத்தால் இருவிதம். பாதிக்கப்படாதபொருளை விஷயப்படுத்தும் பிரமை யதார்த்த அநுபவமாம். பிரமையாகிய யதார்த்த அநுபவத்தை இரண்டாவது பரிச்சே தத்தில் விரிவாய்க் கூறினும். ஆதலால் ஈண்டு மீண்டும் நிரூபிக்காது விட் டனம். இனி அயதார்த்த அநுபவம்நிரூபிக்கப்படுகின்றது. பாதிதார்த்தவிஷ

யாநுஹஙுதிஃ ஙயயாயநுஹஙுதிஃ (இ - ள்) விஷய அபாவத்தின் பிரமை பாதமும், பாதத்திற்கு விஷயம் பாதிதமுமாம். பாதிக்கப்படும்பொருளை விஷயமாக்கும் அநுபவம் அயதார்த்த அநுபவமாம். எங்ஙனமெனின், 'இது வெள்ளியன்று' என்பது பாதஞானத்திற்கு விஷயமாவதால்; பாதிக்கப்படும் கிளிஞ்சில்வெள்ளி முதலியவற்றை விஷயப்படுத்தும், 'இதுவெள்ளி' என்னும் அநுபவம் அயதார்த்த அநுபவமாம். பிரமைஞானத்தில் இவ்வயதார்த்த அநுபவ இலக்கணத்தின் அதிவியாப்தி நீக்குதற்கு இவ்விலக்கணத்தில் 'பாதிக்கப்படும் பொருள்' என்றும், பாதிக்கப்படும் பொருளை விஷயப்படுத்தும் அயதார்த்த ஸ்மிருதியில் இவ்விலக்கணத்தின் அதிவியாப்தி நீக்குதற்கு இவ்விலக்கணத்தில் 'அநுபவம்' என்றும் கூறியவாறு.

சம்சயம், நிச்சயம், என்னும் பேதத்தால் அவ்வயதார்த்த அநுபவமும் இருவிதம். ஆண்டு ஏககஸ்மிநுதர்மிணிவிருத்தநாநாகொடிக ஜ்ஞாநம் ஸம்ஶயஃ (இ-ள்.) ஒரேதர்மியின்கண் விளங்கும் ஒன்றுக்கொன்று விரோதமான நாநா கோடிகளை (பட்சங்களை) விஷயப்படுத்தும் ஞானம் சம்சயமெனப்படும். தாணுவோ, புருஷனோ என்னும் ஞானம் ஒரே தாணுவாகிய தர்மியிலாவது, புருஷனுகிய தர்மியிலாவது தாணுத்தன்மை புருஷத்தன்மை என்னும்விருத்தமான நாநா கோடிகளை விஷயப்படுத்துவதாகலின் அந்தஞானம் சம்சயமெனப்படும். முற்கூறிய சம்சயமும் பிரமாணசம்சயம், பிரமேயசம்சயம் என்னும் பேதத்தால் இருவிதம். பிரமாணத்திலுள்ள அசம்பாவனை பிரமாணசம்சயம். பிரமேயத்திலுள்ள அசம்பாவனை பிரமேயசம்சயம்.

அந்தப்பிரமாணசம்சயமும் பிரமைசம்சயம், கரணசம்சயம், என்னும் பிரிவால் இரண்டு பிரகாரமாம். பிரமாணத்தாற் பிறந்த பிரமைஞானத்திலுள்ள சம்சயம் பிரமைசம்சயம் எனப்படும். பிரமாணத்தின் சொரூபத்திலுள்ள சம்சயம் கரணசம்சய மெனப்படும். ஓர் ஸ்தலத்தின்கண்ணுள்ள, முன் அறியப்படாத ஜலத்தோடு நேத்திரேந்திரியத்திற்குச் சம்பந்தமுண்டான பின்னர் ஒருவனுக்கு 'இது ஜலம்' என்னும் பிரமை ஞானமுண்டாகின்றது; ஆனல் அவன் அத்தலத்தில் முன்னோர் போதும் ஜலத்தைக்கண்டான் இல்லை. ஆதலால் அவனுக்கு அச்சல ஞானத்தில் இவ்வுணர்ச்சி பிரமையோ? அன்றோ? என்று அச்சல ஞானத்தில் பிரமைத்தன்மையையும், பிரமைத்தன்மையின் அபாவத்தையும் விஷயப்படுத்தும் சம்சயம் உண்டாகின்றது. அச்சம்சயம் பிரமைசம்சயமெனப்படும். பிரமைசம்சயமானது பிரமைஞானத்தின் பிரமைத்தன்மையின் நிச்சயத்தினையே நீங்கி விடுகின்றது. ஆண்டு தத்வதி தத்ப்ரகாரகத்வம் வ்யாகத்வம் (இ-ள்.) அத்தர்மமுடைய வஸ்துவில் அத்தர்மத்தை விஷயப்படுத்துந்தன்மையே ஞானத்தின்கண்ணுள்ள பிரமைத்தன்மையாம். கடத்தன்மைத் தர்மமுடைய கடத்தில் அக்கடத்தன்மையை விஷயப்படுத்துந் தன்மையே 'இதுகடம்' என்னும்ஞானத்திலுள்ள பிரமைத்தன்மையாதல் போலும். இதனையே பிராமாணியமென்றுங் கூறுவர். பிரமை ஞானத்தின் பிரமைத்தன்மை நையாயிகமதத்தில் பரத: கிராஹ்யமும் (பிறிதாற் கிரகிக்கப்படுவதும்),

மீமாஞ்சக வேதாந்தசித்தாந்த மதங்களில் சுவத: கிராஹ்யமும் (தன்னாற் கிரகிக்கப்படுவதும்) ஆம். பிரமைத்தன்மையின் சுவத: கிராஹ்யத்தன்மையிலும் மீமாஞ்சகர்களுள் அநேக மதமுண்டு. இங்கு விரிவஞ்சி விடுத்தாம். அம்மதங்கள் நியாயப்பிரகாசம் ஆறுவது பரிச்சேதத்தில் விரிவாய் நிருபித்திருத்தலின் வேண்டுவோர் ஆண்டுணர்க.

## சுவதஃ கிராஹ்ய நிரூபணம்.

பிரமைத்தன்மையின் சுவத: கிராஹ்யம் வேதாந்த சித்தாந்த சம்மதமாம். யாவத்ஸ்வாஶ்ரயக்ராஹகக்ராஹ்யத்வம் ஸ்வதோக்ராஹ்யத்வம் (இ-ள்) பிரமைத் தன்மைத் தர்மத்திற்கு ஆசிரயமான பிரமை ஞானத்தின் எத்துணைக் † கிராஹகங்கள் உள்ளனவோ, அவற்றால் அந்தப்பிரமைத் தன்மையின் * கிராஹ்யத் தன்மை எதுவோ அதுவே அந்தப்பிரமைத் தன்மையின்கண் சுவத: கிராஹ்யத் (தன்னாற் கவரப்படுந்) தன்மையாம். அதெங்ஙனமெனின்:—பிரமைத்தன்மைத் தர்மத்திற்கு ஆசிரயம் 'இதுகடம்' என்னும்விருத்தி ஞானமாம். அவ்விருத்தி ஞானத்தைக் கிரகிப்பது சாட்சி சைதன்யமாம். அச்சாட்சி சைதன்யம் அவ்விருத்தி ஞானத்தைப்போன்று அதன் பிரமைத்தன்மையையுங் கிரகிக்கின்றது. இதுவே அந்தப் பிரமைத்தன்மையின் சுவத: கிராஹ்யத்தன்மையாம்.

சங்கை:—பிரமை ஞானத்தின் பிரமைத்தன்மை எப்படிச் சுவத: கிராஹ்யமோ, அப்படி 'இது ரஜதம்' என்னும் அப்பிரமை ஞானத்தின் அப்பிரமைத் தன்மையும் சுவத: கிராஹ்யமேயாகும்.

சமாதானம்:—அவ்வப்பிரமைத் தன்மைத் தர்மமோ பரத: கிராஹ்யமேயன்றிச் சுவத: கிராஹ்யமன்று. தத³பா⁴வவதி தத்ப்ரகாரகத்வம் அப்ரமாத்வம் (இ-ள்.) அத்தர்ம அபாவமுடைய வஸ்துவில் அத்தர்மத்தை விஷயப்படுத்துந் தன்மையே ஞானத்தின்கண்ணுள்ள அப்பிரமைத்தன்மையாம். அதெங்ஙனமெனின்:--வாஸ்தவ ரஜதாபாவமுடைய சுக்தியில் இரஜதத்தை விஷயப்படுத்துந் தன்மை எதுவோ, அதுவே 'இதுரஜதம்' என்னும் ஞானத்தின்கண்ணுள்ள அப்பிரமைத்தன்மையாம். அப்பிரமையிலமைந்த சுக்திரஜதாபாவத்தை அவ்விருத்தி ஞானம் விஷயப்படுத்துவதில்லை. அவ்விரஜதாபாவத்திலமைந்த அப்பிரமைத்தன்மையைச் சாட்சி சைதன்யமும் கிரகிப்பதில்லை; ஆனால் அச்சாட்சி சைதன்யம் கேவலம் அவ்வப்பிரமைத் தன்மைத் தர்மத்திற்கு ஆசிரயமான ஞானமாத்திரத்தையே கிரகிக்கின்றது. ஒருகால் விருத்தி ஞானத்திற்கு விஷயப்படாத பொருளையும் அச்சாட்சி பிரகாசிப்பிக்குமெனின்; கடாகாரமாக விருத்தியாகுங்காலத்தே படமுதலியனவும் அச்சாட்சியாற் பிரகாசமாதல் வேண்டும். ஆகவே அப்பிரமைத்தன்மை பிரமைத்தன்மையைப்போன்று சுவத: கிராஹ்யமன்று; ஆனால் பரத: கிராஹ்யமேயாம்.

---

† கிராஹகம்-கவருவது, * கிராஹ்யம்-கவரப்படுவது.

## பரதஃ கிராஹ்ய நிரூபணம்.

𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌯 𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌾𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌸𑌾𑌮𑌗𑍍𑌰𑍀 𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌪𑌰𑌤𑍋 𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍍

(இ-ள்.) அப்பிரமைத் தன்மைத் தர்மத்திற்கு ஆசிரயமான அப்பிரமை ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரி (கருவி) க்குவேருன சாமக்கிரியாற் கிரகிக்கப்படுந் தன்மை எதுவோ அதுவே அப்பிரமைத் தன்மையின் பரதஃ கிராஹ்யத் (பிறிதாற் கவரப்படுந்) தன்மையாம். அதெங்ஙனமெனின்:—மேற்கூறிய அப்பிரமைத்தன்மைத் தர்மத்திற்கு ஆசிரயமான 'இது ரஜதம்' என்னும் அப்பிரமை ஞானத்தைக் கிரகிப்பதோ சாட்சி சைதன்யமாம். அச்சாட்சி சைதன்யம் அந்த அப்பிரமைத் தன்மைத் தர்மத்தைக் கிரகிப்பதில்லை. ஆனுல் அச்சாட்சி சைதன்யத்தினும் வேருன அனுமான சாமக்கிரியானே அந்த அப்பிரமைத் தன்மைத் தர்மம் கிரகிக்கப்படுகின்றது. இஃதே அந்த அப்பிரமைத்தன்மையின் பரத: கிராஹ்யத்தன்மையாம்.

அவ்வனுமானவகை காட்டுதும். ஒருவனுக்கு இஷ்டசாதனத்தன்மையின் ஞானத்திற்குப் பின்னரே பிரவிருத்தி நிகழ்கின்றது. இங்கு சம்வாதிப்பிரவிருத்தி, விசம்வாதிப்பிரவிருத்தி என அந்தப் பிரவிருத்தி இருவகைப்படும். சபல (பயனுடை) ப்பிரவிருத்தி சம்வாதிப் பிரவிருத்தியும், நிஷ்பலப் (பயனற்ற) பிரவிருத்தி விசம்வாதிப் பிரவிருத்தியுமாம். அவ்விசம்வாதிப் பிரவிருத்தியானே அப்பிரமைத்தன்மையின் அனுமானமுண்டாகின்றது. அவ்வனுமானமாவது:—சுக்தியில்'இது ரஜதம்' என்னும் ஞானம் அப்பிரமையாம். நிட்பலப் பிரவிருத்தியைத் தோற்றுவிப்பதால், எந்த ஞானம் அப்பிரமையன்ருே அந்த ஞானம் நிஷ்பலப் பிரவிருத்தியைத் தோற்றுவிப்பதுமன்று. பிரமை ஞானம்போலும். இவ்வாருன அனுமானத்தால் அவன் ரஜதஞானத்தில் அப்பிரமைத்தன்மையை நிச்சயிக்கின்ருன். இதுவே அப்பிரமைத் தன்மையின் பரத: கிராஹ்யத் தன்மையாம்.

அல்லது, பிரமைத்தன்மையின் ஞானத்தில் எங்ஙனம் சுவத: தன்மையுண்டோ, அங்ஙனமே அதன் உற்பத்தியிலும் சுவத: தன்மையே யுண்டு. ஞானத்தின் உற்பத்திக்கான சாமானிய சாமக்கிரிமாத்திரத்தால் உண்டாவதெதுவோ, அதுவே பிரமைத்தன்மையின் உற்பத்தியில் சுவத: தன்மையாம். இவ்வாறே அப்பிரமைத் தன்மையின் ஞானத்தில் எங்ஙனம் பரதஃதன்மையோ, அங்ஙனமே அதன் உற்பத்தியிலும் பரதஃதன்மையேயாம். ஞானேற்பத்திக்கான சாமானிய சாமக்கிரியினும் வேருன தோஷத்தாலுண்டாவது எதுவோ, அதுவே அப்பிரமைத் தன்மையின் உற்பத்தியில் பரதஃதன்மையாம்.

சங்கை:—மேற்கூறியவாறு பிரமைத்தன்மையின் உற்பத்தியிலும் ஞானத்திலும் சுவதஃ தன்மையை யங்கீகரிக்கின்; முன் பார்த்திராத ஓர் ஸ்தலத்தில் 'இது ஜலம்' என்னும் ஞானத்திற்குப் பின்னர் ஒருவனுக்கு இச்சலஞானம் 'பிரமையோ, அன்ருே' என்னும் சம்சய முண்டாகின்றது; அது உண்டாதல் கூடாது. ஏனெனின், நுமது மதத்தில் ஞானத்தின் பிரமைத்தன்மை சாட்சி சைதன்யத்தால் நிச்சயிக்கப்பட்டதேயாம். நிச்சயிக்கப்பட்ட பொருளினிடத்து சம்சயம் உண்டாகாது.

**சமாதானம்:**—அத்தலத்தில் சம்சயத்தை உற்பத்தி செய்யும் தோஷத்தோடுங்கூடிய சம்சய சாமக்கிரி, பிரமைத்தன்மையைக் கிரகிக்கும் சாமக்கிரியைவிடப் பிரபலமாம். ஆகையால் அச்சலஞானத்தில் பிரமைத்தன்மையின் நிச்சயமின்மையால், பிரமைத்தன்மையின் சம்சயம் சம்பவிக்கும். இவ்வாறு தன்னாற் கிரகிக்கப்படும் பிரமைத் தன்மையின் நிச்சயத்தால் முற்கூறிய பிரமைக்கண் சம்சயத்தின் நிவிர்த்தி உண்டாகக்கூடும்.

## பிரமாணகத பிரமேயகத அசம்பாவனைகளும் அவற்றின் நிவிர்த்தியுங்கூறல்.

இனிக் கரணசம்சயத்தையும் அதன்நிவிர்த்திக்கான உபாயத்தையுங் கூறுதும். தத்துவமசி முதலிய வேதாந்த வாக்கியங்கள் அத்விதீய பிரஹ்மத்திற் பிரமாணமோ! அன்றோ! என்னும் வேதாந்த வாக்கியமாகிய பிரமாணத்திலுள்ள அசம்பாவனை கரணசம்சயமெனப்படும். அக்கரணசம்சயம் பிரஹ்மவேத்தா குருவின் முகத்தினின்றும் வேதாந்த சாஸ்திரத்தைச் சிரவணஞ்செய்தலால் நிவிர்த்தியாம். அச்சிரவணத்தின் சொரூபம் இரண்டாவது பரிச்சேதத்திற் கூறப்பட்டிருக்கின்றதாகலின் மீண்டும் ஈண்டு எழுதப்படவில்லை. முற்கூறிய சிரவணம் சாரீரக மீமாஞ்சையின் முதல் அத்தியாயத்தின் படிப்பாற் பெறப்படும். இதுகாறும் பிரமாணகத சம்சயம் நிரூபிக்கப்பட்டது.

இனிஇரண்டாவது பிரமேயகத சம்சயமும்,அதன் நிவிர்த்தியும் நிரூபிக்கப்படுகின்றன. பிரமாணஜன்ய ஞானத்திற்கு விஷயம் பிரமேயமாம். அந்தப் பிரமேயத்திலுள்ள சம்சயமும் அநாத்மகத சம்சயம், ஆத்மகத சம்சயம் என்றிருவிதம். ஒருவனுக்கு ஆநாத்மாக்களாகிய தாணுவாதிகளில் ஸ்தாணுர்வா புருஷோவா (தாணுவோ, புருஷனோ) என்றல் முதலிய எச்சம்சயம் உண்டோ, அது அநாத்மகத சம்சயமெனப்படும். இவ்வநாத்மகத சம்சயம் சாதாரண தர்மத்தின் தரிசன(சாமானிய ஞான) த்தாலுண்டாகும். எங்ஙனமெனின்,தாணுவினதும் புருஷனதும் சாதாரண தர்மமாகிய மூன்றமுழ அளவுள்ள உயரத்தைப்பார்த்தலால் முற்கூறிய சம்சயம் உண்டாகின்றது. அத்தாணு முதலியவைகளின் அசாதாரணதர்மத்தின் ஞானமாகிய விசேஷதரிசனத்தால் முற்கூறிய சம்சயத்தின் நிவிர்த்தி யுண்டாகின்றது. தாணுத்தன்மையை நிச்சயப்படுத்தும் வளைவு பொந்து முதலியவைகளோ அத்தாணுவின் அசாதாரண தர்மங்களாம். புருஷத்தன்மையை நிச்சயப்படுத்தும் கை, கால், தலைமுதலிய உறுப்புகள் புருஷனது அசாதாரண தர்மங்களாம். அவ்வசாதாரண தர்மங்களின் ஞானத்தால் முற்கூறிய சம்சயத்தின் நிவிர்த்தியுண்டாகின்றது.

புருஷனுக்குத்தன்து ஆத்மாவில் எச்சம்சயம் உண்டாகின்றதோ,அது ஆத்மகத்சம்சயமெனப்படும். அவ்வாத்மகத சம்சயம் விப்பிரதிபத்தியானுண்டாவதான்அநேகப்பிரகாரங்களாம். ஆண்டு ஒன்றுக்கொன்று முரணுள்ளபொருளைக் கூறும் வாதிகளின் பல வசனங்களை விப்பிரதிபத்தி என்பர். அவ்விப்பிரதிபத்தியை ஸ்ரீபகவான் பாஷ்யக்காரருங் கூறியிருக்கின்றனர். அதைக்காட்டுதும். சைதன்ய விசிஷ்டமாகிய இத்தூலதேகமே ஆத்மாவாமெனப் பாமர ஜனங்

களும், உலோகாயதரும் அங்கீகரித்தனர். நேத்திராதி இந்திரியங்களே ஆத்மாவெனப் பிறிதோர் சாரார் அங்கீகரித்தனர். மனதே ஆத்மாவென வேறு சிலர் அங்கீகரித்தனர். க்ஷணிக விஞ்ஞானமே ஆத்மாவெனச் சிலர் அங்கீகரித்தனர். சிலர் சூனியமே ஆத்மாவென அங்கீகரித்தனர். தேகேந்திரியாதிகளுக்கு வேறான சம்சாரி கர்த்தா போக்தா ஆத்மாவெனச்சிலர் அங்கீகரித்தனர். ஆத்மா கேவலம் போக்தாவே கர்த்தாவன்றென்றே சிலர் அங்கீகரித்தனர். கர்த்தாபோக்தாவைவிட வேறான சர்வஞ்ஞ சர்வசக்தியுடைய ஈசுரனே ஆத்மாவெனச்சிலர் அங்கீகரித்தனர். ஆத்மாவானது உபாதி சம்பந்தத்தால் கர்த்தாபோக்தாவாயினும், உண்மையில் சுத்தமேயாமென்று சிலர் அங்கீகரித்திருக்கின்றனர். முற்கூறிய வாதிகள் அவ்வத்தேகமாகிய ஆத்மாவினது சித்தியின் பொருட்டுத்தக்கதான யுக்தி பிரமாண முதலியவற்றைக் கூறியிருக்கின்றனர். இவ்வாறு ஒன்றுக்கொன்று முரணுள்ள பொருள்களைக்கூறும் வாதிகளது வசன விப்பிரதிபத்தியாற் புருஷனுக்கு ஆத்மசம்சயம் அநேகவிதமா யுண்டாகின்றது. ஆண்டு அவ்வாத்மா உண்மையில் ஏக அத்விதியமாயினும் உபாதி வேறுபாட்டால் அவ்வாத்மா பரமாத்மா, ஜீவாத்மா என்றிருவகைப்படும். தத்துவமசி என்னும் மகாவாக்கியத்திலுள்ள தத்பதார்த்தத்தின் அர்த்தமாகிய மாயா உபகித பிரஹ்மம் பரமாத்மாவாம். துவம் பதார்த்தமாகிய சரீர உபகித சைதன்யம் ஜீவாத்மாவாம். அவ்விரண்டனுள் முதல் தத்பதார்த்த பரமாத்மாவில் அவ்வநேகவித சம்சயங்களைக் காட்டுதும். ஆண்டு பிரஹ்மம் அத்விதியமா? அல்லது சத்விதியமா ? அத்விதிய வடிவமாயினும் பிரஹ்மம் ஆநந்தகுணமுடையதா ? அல்லது, ஆநந்தசொரூபமா ? பிரஹ்மம் ஞானகுணமுடையதா ? அல்லது, ஞானசொரூபமா ? பிரஹ்மம் சத்தாஜாதியுடையதா ? அல்லது, சத்தாசொரூபமா ? பிரஹ்மம் சகுணமா?அல்லது, நிர்க்குணமா? என்பன முதலிய அநேகவித சம்சயங்கள் புருஷனுக்கு அத்தத்பதார்த்த பிரஹ்மத்தினிடத்துண்டாகின்றன.

இனி துவம்பதார்த்த ஜீவாத்மாவிலும் அவ்வநேகவித சம்சயங்களைக் காட்டுதும். இவ்வாத்மா தேகேந்திரியாதிகட்குவேறு ? அன்று ? தேகேந்திரிய முதலியவற்றிற்கு வேறாயினும் அவ்வாத்மா கர்த்தாவா ? அல்லது, அகர்த்தாவா ? அகர்த்தாவாயினும் அவ்வாத்மா சித்வடிவமா ? அல்லது அசித்வடிவமா ? சித்வடிவமாயினும் ஆத்மா ஆநந்தவடிவமா ? அன்று ? ஆநந்தவடிவமாயினும் அவ்வாத்மா பரிணாமியா ? அல்லது கூடஸ்தனா ? கூடஸ்தனாயினும் அவ்வாத்மா சத்தா ஜாதியுடையதா ? அல்லது சத்தாவடிவமா ? என்பன முதலிய அநேகவித சம்சயங்கள் புருஷனுக்கு அத்துவம் பதார்த்த ஜீவாத்மாவில் உண்டாகின்றன. ஜீவாத்மாவிற்குச் சச்சிதானந்தத் தன்மையுளதாயினும் பரமாத்மாவோடு ஜீவாத்மாவிற்கு ஏகத்தன்மை பொருந்துமாறு உண்டோ ! இன்றோ ! எனல் தத் துவம்பதார்த்தங்களின் ஏகத்தன்மையாகிய வாக்கியார்த்தத்திலுள்ள சம்சயமாம்.

மோட்சசாதனத்தின்சம்சயமாவது:—ஜீவப்பிரஹ்மங்களுக்குஏகத்தன்மையுளதாயினும் அவ்வேகத்தன்மையின் ஞானம் மோட்சசாதனமா ? அன்று ? அந்த ஞானத்திற்கு மோட்சத்தின் சாதனத்தன்மை யுளதாயினும் அந்த ஞா

னம் கர்மசகிதமாக மோட்சத்திற்குச் சாதனமா? அல்லது, கேவலஞானம் மோட்சத்திற்குச் சாதனமா? என்னுந்தொடக்கத்து எல்லாச்சம்சயங்களும் ஆத்மகதசம்சயமாம். அவ்வெல்லா ஆத்மகத சம்சயங்களும் தர்க்கமாகிய மனனத்தால் நீங்கிவிடுகின்றன. ஊநிஷ ஷ்ஹ ஜகஃ தகூஃ (இ-ள்.) பிரதிவாதியின் அநிஷ்டத்தைச் சித்திசெய்யும் யுக்தியாதோ அது தர்க்கமெனப்படும். அஃதாவது வியாப்யத்தின் ஆரோபணத்தால் வியாபகத்தின் ஆபாதனம் தர்க்கமெனப்படும். வியாப்தியின் ஆசிரயம் வியாப்யமும், வியாப்தியின் நிரூபகம் வியாபகமுமாம். வியாப்தியின் சொரூபம் முன் இரண்டாவது பரிச்சேதத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. எங்ஙனமெனின், மலையின்கண் புகையைக்கண்ட வழியும் எப்பிரதிவாதி அம்மலையிடத்துத் தீயை அங்கீகரிப்பதில்லையோ, அவனைக்குறித்துக் கூறப்படுந்தர்க்கமாவது:—புகை தீக்களுக்குக் காரியகாரணபாவம் உலகிலெங்கும் பிரசித்தம். காரணமன்றிக்காரியமுண்டாகாதென்பதும் யாண்டும் பிரசித்தம். ஆதலால், மலையின்கண் தீயில்லையாயின் அதன் கார்யமான புகையும் இல்லையாதல் வேண்டும். அம்மலையில் புகையின் அபாவம் பிரதிவாதிக்கு அநிஷ்டமாம். அப்பிரதிவாதியின் அநிஷ்டத்தின் பெறுதி இத்தர்க்கத்தாலுண்டாகின்றது. அன்றியும் கூறிய இத்தர்க்கத்தில் தீயின்மையாகிய வியாப்யத்தின் ஆரோபணத்தால் புகையின்மையாகிய வியாபகத்தின் ஆபாதனஞ்செய்யப்படும். ஆகவே அத்தர்க்கத்தின் இலக்கணம் இப்பிரசித்த தர்க்கத்தில் சம்பவிக்கின்றது. இவ்வாறே இனிவருந் தர்க்கங்களினும் இவ்விலக்கணத்தின் பொருத்தத்தை உய்த்துணர்க.

இனி ஆத்ம சம்சயத்தை நிவிர்த்திக்கும் தர்க்கநிரூபணம். அத்தர்க்கங்களினும் முதல் தத்பதார்த்தமாகிய பரமாத்மாவின் அத்விதீயத்தன்மைக்குச் சாதகமான தர்க்கம் சொல்லப்படுகின்றது. ஒருகால் இவ்வாகாச முதலிய பிரபஞ்சம் சத்தியமாயின்; பிரஹ்மத்தை அத்விதீய வடிவெனக்கூறும் ஏகமேவா த்விதீயம் ப்ரஹ்ம (பிரஹ்மம் சுசாதி விசாதி சுவகதபேத மற்றது) என்னும் சுருதிக்கு விரோதம் வரும். அஃதாவது அத்விதீய பிரஹ்மத்தைச்சத்விதீய வடிவமாகக்கூறும் அச்சுருதி போலி யாவதால் அப்பிரமாணமாகும் என்பதாம். சுருதியின் அப்பிரமாணத்தன்மை ஆஸ்திகவாதிக்கு அநிஷ்டமேயாதலால் பிரபஞ்சம் மித்தை எனவே கோடல்வேண்டும். பிரபஞ்சம் மித்தையாயின்; அத்வைத சுருதிக்கு விரோதமுண்டாகாது.

சங்கை:—பிரஹ்மத்தை அத்விதீயமெனக்கொள்ளின்; பேதத்தைக் கூறுவனவாகிய சுருதிகளுக்கு விரோதமுண்டாகும். அச்சுருதிகளுக்கு விரோதமாக அவ்வத்வைதசுருதி அத்வைதத்தைப் பிரதிபாதிப்பதன்று; ஆனல் வேறு அர்த்தத்தைப் பிரதிபாதிப்பதாம். ஆதலால் பிரபஞ்சசத்தியத்தன்மையைக் கொள்ளுவதினும் அவ்வத்வைத சுருதிக்கு விரோதமுண்டாகாது.

சமாதானம்:—அதிகாரிக்கு எவ்வர்த்தம் விரும்பியபலத்திற்குஏதுவாகின்றதும், பிரத்தியட்சமுதலிய பிரமாணங்களால் அஞ்ஞாதமும் (அறியப்படாததும்)ஆகின்றதோ, அவ்வர்த்தத்தினிடத்தே சுருதிக்குத் தாற்பரியமாம். அவ்வத்வைதமோ பிரத்தியட்சமுதலிய பிரமாணங்களுக்கு அஞ்ஞாதமாம். அவ்வத்

வைத பிரஹ்மத்தின் ஞானத்தால் அதிகாரிக்கு ஸ்ரு ஹ வெ ஷ ஸ்ரு ஹெஹவ ஹவ தி। தரதி ஸொக மாத்மவித (பிரஹ்மத்தை அறிந்தவன் பிரஹ்மமேயாகின் ருன். ஆத்மாவை யறிந்தவன் சோகத்தைக் கடக்கின்ருன்) என்னுந்தொடக்கத் துச்சுருதிகள் மோட்சமாகிய நிரதிசய புருஷார்த்தப்பேற்றையும் கூறுகின் றன. துவைதவடிவபேதமோ பிரத்தியட்சமுதலிய பிரமாணங்களால் ஞாதமாம் (அறியப்படுவதாம்). பேதஞானத்தால் விரும்பியதோர் பலப்பிராப்தியு முண் டாகாது; பின்னேயோ, உஷர ஜேரம் குரு தெ ய்மதஸ்ய ஹயம் ஹவதி। ஸ்ரு தெ ர்ஃ ஸ்ரு த்து மாஹ்நொதி யஇஹ நாநெவ வஸ்ருதி (சிறிதாவது பே தம் நினைத்தானுகில் பயமென்பது அவனுக்கேயாம். எவன் அநேக விதமாகப் பேதத்தைப் பார்க்கின்ருனே அவன் மிருத்யுவால் மரணத்தையேபெறுவான்) என்னுந் தொடக்கத்துச் சுருதிகள் அப்பேதத்தைக் காணும் புருஷனுக்கு அந ர்த்தப் பிராப்தியுங் கூறுகின்றன. அன்றியும், அய யொ ந்ரம் தெவதா வாஸ்தெ நெ ர்ா ஸாவந் ர்ா ஹவெஸ்தி நஸ வெஷ யயாவஸ்ரு (யான்வேறு இத்தெய்வம் வேறு என்னும் பாவனையுடன் எவன் உபாசிக்கின்ருனே அவன் அறியவில்லை, பசு எங்ஙனமோ அங்ஙனம்) என்னுஞ் சுருதி அப்பேததர்சியைப் பசுவிற்குச் சமானமாகக்கூறி, பேதத்தையே நிந்தித்துளது. ஆகவே சுருதிக்கு அந்தப்பேதத்தில் தாற்பரியமெனல் சம்பவியாது. ஒருகால் அச்சுருதி பேதத் தைக் கூறுமாயின், பிரத்தியட்ச சித்தபேதத்தைக் கூறுந்தன்மையால் அச் சுருதிக்கு அப்பிரமாணத்தன்மையே பிராப்தமாகும். இதனுற்போந்தது யாதெ னின்:—பலமுடைய அஞ்ஞாதஅர்த்தத்தைப் போதிப்பதால் அவ்வத்வைதசுரு தியோ பிரபலமும், பலசூனிய ஞாதஅர்த்தத்தைப் போதிப்பதால் அப்பேத சுருதி துர்ப்பலமுமாம். உலகத்திலும் பிரபலத்தினுனேயே துர்ப்பலத்தின் பாத முண்டாகின்றது. எத்துர்ப்பலத்தாலும் பிரபலம் பாதமாகாது. ஆகலின் அப் பேதசுருதிக்கு விரோதமாக அவ்வத்வைத சுருதிக்கு அந்யபரத்தன்மை (இர ண்டிலொன்ருந்தன்மை) சம்பவியாது; ஆனுல் அவ்வத்வைத சுருதிக்கு விரோத மாக அப்பேத சுருதிக்கே அந்யபரத்தன்மை சம்பவிக்கும். ஆதலால் அவ்வத் வைத சுருதிக்கு விரோதமாகப் பிரபஞ்சம் சத்தியமெனல் பொருந்தாது. இவ் வாறு பிரஹ்மத்தின் அத்விதியத்தன்மைக்குச் சாதகமான தர்க்கத்தால் அந் தப் பிரஹ்மம் அத்விதியமா? அல்லது சத்விதியமா? என்னுஞ் சம்சயம் நிவிர் த்தியாகின்றது.

இனி அப்பரமாத்மாவின் ஆநந்தத்தன்மைக்குச் சாதகமான தர்க்கமா வது:—அப்பரமாத்மா ஓர்கால் ஆநந்தவடிவமன்ருயின் அப்பரமாத்மாவின் பிராப்திக்குப் புருஷார்த்தத்தன்மை யுண்டாகாது. ஆநந்தப் பிராப்தியே புரு ஷார்த்தமாகலின். அப்பரமாத்மப் பிராப்தியைப் புருஷார்த்தமின்றியதெனக் கொள்ளின், பரமாத்மப் பிராப்தியைப் புருஷார்த்த வடிவமாகக் கூறும் ஆத் லாஹாநு வரம் விஷ்யதெ। புருஷாநு வரம் கிஞ்சித்ஸா காஷ்டா ஸா வராமதிஃ (ஆன்மலாபத்தைக்காட்டிலும் பிறிதொன்று கிடையாது.புருடனினும் சிறந்தது வேறென்றுமில்லை அஃதே எல்லை அதே மேலானகதி)என்பதாதி சுருதிஸ்மிருதி

வசனங்களுக்கு விரோதமுண்டாகும். அச்சுருதி ஸ்மிருதிகளின்விரோதம் யாவருக்கும் அநிஷ்டமேயாம். ஆகலின் பரமாத்மாவை ஆநந்தவடிவமென்றேகோடல் வேண்டும். இவ்வாறாகிய தர்க்கத்தால் பரமாத்மா ஆநந்தவடிவமா? அன்றா? என்னுஞ் சம்சயம் நிவிர்த்தியாகின்றது. இனி அப்பரமாத்மாவினது சைதன்ய தன்மைக்குச் சாதகமான தர்க்கமாவது:—அப்பரமாத்மா ஓர்கால் சைதன்ய மன்றாயின் கடாதிகளைப்போன்று சூர்யன் சந்திரன் முதலிய ஜகத்தைப் பிரகாசிப்பதாதல்கூடாது. அப்பரமாத்மாவிற்கு ஜகத்தைப்பிரகாசிப்பிக்குந்தன்மை கூடாதாயின், அப்பரமாத்மாவிற்கு சூர்யன் சந்திரன் முதலிய சர்வ ஜகத்தையும் பிரகாசிப்பதெனக் கூறும் தஸ்ய பா⁴ஸா ஸர்வமித³ம் விபா⁴தி । தச்சு²ப்⁴ரம் ஜ்யோதிஷாம் ஜ்யோதி: ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதிஸ்தமஸ: பரமுச்யதே (அவனது காந்தியால் ஈதெல்லாம் விளங்குகின்றன. அதே சுத்தமானது சோதிக்கெல்லாம் சோதி. சோதிகட்குச்சோதி அது தமசிற்கு வேறு எனப்படும்) இவைமுதலிய சுருதி ஸ்மிருதி வசனங்கட்கு விரோதம் பிராப்தமாகும். அச்சுருதி ஸ்மிருதி வசனங்களின் விரோதம் யாவருக்கும் இஷ்டமன்று. ஆகவே பரமாத்மாவைச் சைதன்யவடிவமென்றே கொள்ள வேண்டும். இவ்வாறாகிய தர்க்கத்தால் அப்பரமாத்மா சைதன்யவடிவமோ? அன்றோ? என்னும் சம்சயம் நிவிர்த்தியாகின்றது.

இனி அப்பரமாத்மாவின் நிர்க்குணபாவத்திற்குச் சாதகமான தர்க்கமாவது:—அப்பரமாத்மா ஓர்கால் சகுணமாமாயின் பரமாத்மாவிற்கு நிர்விசேஷ சொரூபத்தைக் கூறுவனவாகிய அஸ்தூ²லமனண்வஹ்ரஸ்வமதீ³ர்க⁴ம் (பெரிதன்று சிறிதன்று நெடில் குறில்களுமன்று) என்னுந் தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்கள் யாவிற்கும் விரோதமுண்டாம். அச்சுருதி ஸ்மிருதிகளின் விரோதம் யாவருக்கும் அநிஷ்டமேயாம். ஆகலின் அப்பரமாத்மாவிற்கு நிர்க்குணமே அங்கீகரிக்கத்தக்கதாம். இவ்வாறாகிய தர்க்கத்தால் அப்பரமாத்மா சகுணமா? நிர்க்குணமா? என்னுஞ் சம்சயம் நிவிர்த்தியாம்.

துவம் பதார்த்தமாகிய ஆத்மாவினது ஆநந்தத்தன்மைக்குச் சாதகமான தர்க்கமாவது:—இவ்வாத்மா ஓர்கால் ஆநந்தமன்றாயின் ஓர் ஜீவனும் தன்பொருட்டுப் பிரவர்த்திக்கமாட்டான். ஆனால் சர்வப்பிராணிகளுக்கும் தம் பொருட்டேயே பிரவிருத்தி நிகழக்காண்கிறோம். உலகப்பிரசித்தத்திற்கு விரோதம்வருவதோடு யாஞ்ஞவர்க்கிய முனிவர் மைத்திரேயியைக்குறித்து ந வா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ ப⁴வதி ஆத்மனஸ்து காமாய பதி: ப்ரியோ ப⁴வதி (பதியினது காமத்தின்பொருட்டு பதியானவன் பிரியனாவதில்லை. ஆத்மாவினது காமத்தின் பொருட்டன்றோ பதி பிரியனாக ஆகின்றான்) என்றல் முதலிய சுருதி வசனங்களில் ஸ்திரீபுமானாதிய சர்வர்கட்குந் தமது ஆத்மாவின் பொருட்டே பிரியமுண்டென்று சொல்லி யிருக்கின்றார்; அச்சுருதிவசனங்களுக்கும் விரோதம் பிராப்தமாகும். ஆகலின் ஆத்மாவை ஆநந்தமாகவே கோடல் வேண்டும். இவ்வாறாகிய தர்க்கத்தால் ஆத்மா ஆநந்தவடிவமா? அன்றா? என்னும் சம்சயம் நிவிர்த்தியாகின்றது.

இனி அவ்வாத்மாவிலுள்ள சைதன்யத்தன்மைக்குச் சாதகமான தர்க்கமாவது:—இவ்வாத்மா ஓர்கால் சைதன்யமன்றாயின் கடமுதலியவைகளைப் போன்று ஜடத்தன்மையால் சாவயமாக அநாத்மாவேயாகும். அதனால் பிரகாசிப்பிக்கும் சைதன்னியாபாவத்தால் ஜகத்தின்கண் அந்தத்தன்மையே பிராப்தமாகும். அன்றியும் ஆத்மாவைச் சைதன்யமெனக் கூறும் யொ உயம் விஜ்ஞாநமயஃ ப்ராணேஷு ஹ்ருத்யந்த ஜ்யோதிஃ புருஷஃ। அத்ராயம் புருஷஃ ஸ்வயம்ஜ்யோதிர்பவதி। க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி பாரத (யாதொரு இந்த விஞ்ஞானமயன் பிராணன்களிலும் இருதயத்திலும் உட்சென்றவனை சோதி புருடனுவன். ஈண்டு இப்புருடன் சுவயஞ்சோதியாயிருக்கின்றான். பாரத! எல்லா க்ஷேத்திரங்களையும் விளங்கச் செய்பவன் க்ஷேத்திரஞ்ஞனென்னும் ஆன்மாவே) என்னுந்தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்களனைத்திற்கும் விரோதமே யுண்டாகும். அச்சுருதி ஸ்மிருதி வசனங்கள் யாவருக்கும் அநிஷ்டமேயாமாகலின் ஆத்மாவைச் சைதன்யமெனவே அறிதல் வேண்டும். இவ்வாறாகிய தர்க்கத்தால் ஆத்மா சைதன்யவடிவமா? அன்றா? என்னுஞ் சம்சயம் நிவிர்த்தியாகின்றது.

இனி ஆத்மாவின் அகர்த்தாத்தன்மைக்குச் சாதகமான தர்க்கமாவது:—இவ்வாத்மா ஓர்கால் கர்த்தாவாயின்; விகாரமடைந்து பரிணாமியாவதால் அநித்தியமேயாகும். ஆத்மாவை அநித்தியமென்றங்கீகரிக்கின் ஆத்மாவை நித்தியமெனக் கூறுவனவாகிய அவிநாஶீவா அரேऽயமாத்மா। நித்யஃ ஸர்வகதஃ ஸ்தாணுஃ (அடா! இவ்வான்மா அழிவற்றவன், நித்தியன் எங்குமுள்ளவன் ஸ்தாணு) என்னுந் தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்களுக்கு விரோதம் பிராப்தமாகும். அச்சுருதி ஸ்மிருதிகளின் விரோதம் அனைவருக்கும் அநிஷ்டமேயாகலின் ஆத்மாவை அகர்த்தாவெனவே அங்கீகரிக்கவேண்டும். இவ்வாறாகிய தர்க்கத்தால் இவ்வாத்மா கர்த்தாவா ? அகர்த்தாவா ? என்னுஞ்சம்சயம் நிவிர்த்தியாகின்றது.

தத் துவம் பதார்த்தங்களின் அபேதத்திற்குச் சாதகமான தர்க்கமாவது:- அத் தத்பதார்த்தமாகிய பரமாத்மா ஓர்கால் இத் துவம் பதார்த்தமாகிய ஜீவாத்மாவிற்குப் பின்னமாயின் கடமுதலியவைகளைப்போன்று அநான்மபாவத்தால் அநித்தியமேயாகும். அப்பரமாத்மா அநித்தியமாயின் அதை நித்தியமென்று கூறியுள்ள சுருதி ஸ்மிருதி இதிகாச புராணமுதலிய வெல்லா வசனங்கட்கும் விரோதம் பிராப்தமாகும். அன்றியும் ஜீவப் பிரஹ்மத்திற்குப் பேதமங்கீகரிக்கின்; ஜீவப்பிரஹ்மத்திற்கு அபேதத்தைக் கூறும் தத்த்வமஸி। அஹம்ப்ரஹ்மாஸ்மி। அயமாத்மா ப்ரஹ்ம। க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத (தத்துமசி-அஹம்பிரஹ்மாஸ்மி அயமாத்மா பிரஹ்மம், ஏ பாரத! எல்லாச் சரீரங்களிலும் என்னைச் சரீரா திஷ்டானனாக அறிதி) என்னுந் தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்களுக்கும் விரோதம் பிராப்தமாம். அச்சுருதி ஸ்மிருதிகளின் விரோதம் சர்வருக்கும் அநிஷ்டமேயாம். ஆதலால் அப்பரமாத்மாவை இச்சீவாத்மாவிற்கு அபின்னமெனவே அங்கீகரிக்க வேண்டும். இவ்வாறாகிய

தர்க்கத்தால் அப்பரமாத்மா இச்சீவனினும் பிந்நமா? அபிந்நமா? என்னும் சம்சயம் நிவிர்த்தியாகின்றது. கேவல ஞானத்தில் மோட்ச சாதனத்திற்குச் சாதகமான தர்க்கமாவது:—ஓர்கால் கர்மத்துடன் கூடிய ஞானம் மோட்சத்திற்குச் சாதனமாயின், சுவர்காதிகளைப்போன்று கர்மஜன்னியமாவதால் மோட்சத்திற்கும் அநித்தியத்தன்மையே பிராப்தமாகும். மோட்சம் அநித்தியமென்றங்கீகரிக்கின் முக்தர்களுக்கும் மீண்டும் சம்சாரம் பிராப்தமாம். அதனுல் முக்தர்களுக்கு மீண்டும் சம்சாரப் பிராப்தியை நிஷேதிக்கும் (நஸ வுநராவத்ததெ। யஒுகூாநநி வதஒுஜெ தலாவோ ஈ௦ஃ (அவன் மீண்டும் பிறப்பதில்லை. எதை யடைந்தால் மீண்டுந் திரும்பமாட்டார்களோ அதுவே எனது பரந்தாமம்) என்னுந் தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்களுக்கும் விரோதம் பிராப்தமாகும். அன்றியும் ஞானமாத்திரத்தால் மோட்சப்பிராப்தியைக் கூறும் ஜ்ஞாநாதெவது கைவஸ்யூ। நாநூ: வஹா விதூதெ உயநாய। ஜ்ஞாநெந து தது ஜ்ஞாநம் யெஷாம் நாஸிதமாத்மநஃ (ஞானத்தினுற்றுன் மோட்சம். மோட்சத்திற்கு ஞானத்தை விட வேறு வழி கிடையாது. எவர்களுடைய அந்த அஞ்ஞானமானது ஆன்மாவின் ஞானத்தாற்றுன் போக்கடிக்கப்படுமோ) என்பதாதி சுருதி ஸ்மிருதி வசனங்கள் அனைத்திற்கும் விரோதம் பிராப்தமாம். அச்சுருதி ஸ்மிருதிகளின் விரோதம் சகல ஆஸ்திகர்கட்கும் அநிஷ்டமாம். ஆதலால் அக்கர்மத்துடன் கூடிய ஞானம் மோட்ச சாதனமன்று. ஆனுல் 'அகம்பிரஹ்மாஸ்மி' என்னும் அபேதஞானமே மோட்சத்திற்குச் சாதனமென வங்கீகரிக்கவேண்டும். இவ்வாறுகிய தர்க்கத்தால் கர்மத்துடன் கூடிய ஞானம் மோட்சத்திற்குச் சாதனமா? கேவலஞானம் மோட்சத்திற்குச் சாதனமா? என்னுஞ் சம்சயம் நிவிர்த்தியாகின்றது. இவ்வாற்றுல் சுருதிகூறிய தர்க்கமாகிய மனனத்தினுனேயே முற்கூறிய ஆத்மகத சம்சயம் நிவிர்த்தியாகின்றது.

இத்தர்க்கமாகிய மனனத்தின் இலட்சணம் முன் இரண்டாவது பரிச்சேதத்தில் நிரூபித்துளது. அதை ஈண்டு மறிக. கூறிய விம்மனனம் சாரீரக மீமாஞ்சையின் இரண்டாவது அத்தியாயத்தின் படிப்பாற் பெறப்படும். முன்னர், சம்சயம் நிச்சயம் என்னும் பேதத்தால் இருவித அயதார்த்த அநுபவங் கூறப்பட்டன. அவற்றுள் முதலாவது சம்சயம் இதுவரைக்கும் நிரூபிக்கப்பட்டது.

## நிச்சய நிரூபணம்.

ஸஂஶய விரோயி ஜ்ஞாநம் நிஶ்சயஃ (இ-ள்) முற்கூறிய சம்சயத்திற்கு விரோதியான ஞானம் நிச்சயமாம். புருஷனுக்கு எப்பதார்த்தத்தின் நிச்சயமுண்டாகின்றதோ, அப்பதார்த்தத்தில் சம்சய முண்டாகாதாகலின் அந்த நிச்சயத்தில் சம்சயத்தின் விரோதித்தன்மை வெளிப்படையேயாம். அந்த நிச்சயமும் யதார்த்தம் அயதார்த்தம் என்னும் பேதத்தால் இருவிதம். ஆண்டு சுவிஷவாதி ஜ்ஞாநம் யயாத நிஶ்சயஃ (இ-ள்) பயனிடத்து முடிவையுடைய ஞானம் யதார்த்த நிச்சயமெனப்படும். அஃதாவது எவ்வஸ்துவின் நிச்சயத்

திற்குப் பின்னர், பிரவிருத்தித்த புருஷனுக்கு அவ்வஸ்து பிராப்தமாகின்றதோ, அந்த நிச்சயம் யதார்த்த நிச்சயமெனப்படும். யதார்த்த நிச்சயத்தினை முன் இரண்டாவது பரிச்சேதத்தில் பிரமையாகவும் இம்மூன்றாவது பரிச்சேதத்தின் முதலில் யதார்த்த ஸ்மிருதியாகவும் கூறப்பட்டுளது. அஃதாவது யதார்த்த அநுபவமும் யதார்த்த ஸ்மிருதியும், யதார்த்த நிச்சயமெனப்படும். விஸம்வாதி ஜ்ஞாநம் அயதார்த்த நிஶ்சயஃ (இ-ள்) பயனில்லாத ஞானம் அயதார்த்த நிச்சயமெனப்படும். அஃதாவது எவ்வஸ்துவின் நிச்சயத்திற்குப் பின்னர், பிரவிருத்தித்த புருஷனுக்கு அவ்வஸ்து பிராப்தமாகாதோ, அந்த நிச்சயம் அயதார்த்த நிச்சயமெனப்படும். அவ்வயதார்த்த நிச்சயமும் தர்க்கம், விபர்யயம் என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும். தர்க்க இலக்கணமும், உதாரணமும் இப்பரிச்சேதத்தில் முன் நிரூபிக்கப்பட்டன ஆதலால் மீண்டும் ஈண்டு நிரூபிக்கப்படவில்லை. வன்னியுடையதும் தூமமுடையதுமான பர்வதத்தில் வன்னியின் அபாவத்தையும் தூமத்தின் அபாவத்தையும் விஷயப்படுத்தும் 'இப்பர்வதத்தில் வன்னியின்றாயின் தூமமுமின்றாம்' என்னும் தர்க்கத்தில் அயதார்த்த நிச்சயத்தன்மை தெளிவாகவே யிருக்கின்றது. இனி விபர்யயநிரூபணம். ஆண்டு மித்யா ஜ்ஞாநம் விபர்யயஃ (இ-ள்) எந்த ஞானம் மித்தையாகின்றதோ, அந்த ஞானம் விபர்யயமெனப்படும். சுக்தியில் இது வெள்ளி என்னும் ஞானமும் இரச்சுவில் இது சர்ப்பம் என்னும் ஞானமும் மித்தியாஞானமாவதால் விபர்யயமெனப்படுதல் போலவாம்.

சங்கை:—ஞானத்தில் மித்தியாத்தன்மை யென்பது யாது? அதாவது பாதிக்கப்படுந் தன்மை என்பது மித்தியாத்தன்மையா? அல்லது, நிர்விஷயத் தன்மை என்பது மித்தியாத்தன்மையா? எந்த ஞானமும் தனது சொரூபத்தோடு பாதமாகாதாதலால் பாதிக்கப்படுந்தன்மை மித்தியாத்தன்மையா மென்னும் முதற்பட்சமோ சம்பவியாது. எந்த ஞானமும் நிர்விஷயமாகாதாதலால் அவ்விரண்டாவது பட்சமும் சம்பவியாது.

சமாதானம்:—இனி அம்மித்தியாஞானத்தின் இலக்கணம் சொல்லப்படுகின்றது. அதத்வதி தத்ப்ரகாரகஃ மித்யாஜ்ஞாநம் (இ-ள்) அவ்வர்த்தாகித வஸ்துவிலுள்ள அவ்வர்த்தத்தின் புத்தி மித்தியாஞான மெனப்படும். இரஜதமில்லாத சுக்தியிலுள்ள 'இது இரஜதம்' என்னும் இரஜதபுத்தி மித்தியாஞானமென்றல் போலும். ஞானத்திற்குச் சொரூபமாகப் பாதமுண்டாகாதென்றாலும், விஷயத்தின் பாதத்தால் ஞானத்தின் பாதம் கூறப்பட்டது. பாதிக்கப்படுந்தன்மையே ஞானத்தில் மித்தியாத்தன்மையாம். முற்கூறிய விபர்யயமாகிய பிரமமும் நிருபாதிக பிரமம், சோபாதிக பிரமம் என்னும் பேதத்தால் இருவிதம். எந்தப்பிரமம் அதிஷ்டானத்தின் ஞானத்தால் நிவிர்த்தியாகின்றதோ, அது நிருபாதிக பிரமமெனப்படும். எந்தப்பிரமம் அதிஷ்டான ஞானமுண்டான விடத்தும் நிவிர்த்தியாகின்றதில்லையோ, அது சோபாதிக பிரமமெனப்படும். அந்த நிருபாதிக பிரமமும் பாகியம், ஆந்தரம் என்னும் பேதத்தால் இருவிதம். சுக்தி ரஜ்ஜு முதலியவைகளில் 'இது வெள்ளி' 'இது சர்ப்பம்' என்றல் முதலிய பிரமஞானங்களோபாகிய

நிருபாதிக பிரமமெனப்படும். 'நான் அஞ்ஞானி' 'பிரஹ்மத்தை அறிகிலேன்' என்னும் பிரமம் ஆந்தர நிருபாதிக பிரமமாம். சுக்தி ரஜ்ஜு முதலிய அதிஷ்டானங்களின் ஞானத்தால் ஊஷம் ரஜதம் ஈயம் ஸவபூ: 'இதுவெள்ளி' 'இது சர்ப்பம்' என்பது முதலிய பிரமமும், ஆத்மாவாகிய அதிஷ்டானத்தின் ஞானத்தால் யான் அஞ்ஞானி என்னும் பிரமமும் நிவிர்த்தியாகின்றன. ஆதலால் முற்கூறிய பிரமத்தில் நிருபாதிக பிரமத்தன்மை சம்பவிக்கின்றது. இவ்வாறே இரண்டாவது சோபாதிக பிரமமும் பாகியம், ஆந்தரம் என்றிருவிதம். செம்மைக் குணமில்லாத படிகத்தில் செம்மை நிறமுடைய செம்பரத்தம் புட்ப முதலிய திரவியங்கட்குச் சமீபமாயிருந்தால் 'படிகம் செம்மை' என்னும் பிரமமுண்டாகின்றது. அது பாகிய சோபாதிக பிரமமெனப்படும். இப்படிகம் வெண்மையே, செம்மையன்று என்று படிகமாகிய அதிஷ்டானத்தின் ஞானமுண்டாயினும், எதுபரியந்தம் செம்பரத்தமுதலிய உபாதிகள் நிவிர்த்தியாவதில்லையோ, அது பரியந்தம் 'படிகம செம்மை' என்னும் பிரமம் நிவிர்த்தியாகாது. ஆதலால் 'படிகம் செம்மை' என்னும் பிரமத்தில் சோபாதிக பிரமத்தன்மை சம்பவிக்கின்றது. இவ்வாறு தத்துவவேத்தா புருஷனுக்கு எவ்வாகாச முதலிய பிரபஞ்சத்தின் அநுபவமுண்டாகின்றதோ, அதுவும் பாகிய சோபாதிக பிரமமெனப்படும்.

**சங்கை:**—படிகம் செம்மை என்னும் பிரமத்திலோ ஜபாகுசும (செம்பரத்தம்புட்ப) முதலிய உபாதிகள் இருக்கின்றன. ஆதலால் அந்தப் பிரமத்திற்கோ சோபாதிகத்தன்மை சம்பவிக்கும்; ஆனால், பிரபஞ்ச பிரமத்தில் ஒருபாதியும் காணப்படவில்லை, ஆதலால் பிரபஞ்ச பிரமத்திற்குச் சோபாதிகத்தன்மை சம்பவியாது.

**சமாதானம்:**—பிரபஞ்ச பிரமத்திலும் பிராரப்த கர்மத்தோடுங் கூடிய விட்சேப சக்தியுடைய அஞ்ஞானமே உபாதியாம். ஏனெனின், 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் அதிஷ்டான பிரஹ்மத்தின் ஞானத்தால் ஆவரண சக்தியுடைய அஞ்ஞானம் நிவிர்த்தியாயினும், விட்சேபசக்தியுடைய அஞ்ஞானத்தின் வலியால் பிராரப்த கர்மநாசபரியந்தம் தத்துவ முணர்ந்தோனுக்கும் அவ்வாகாச முதலிய பிரபஞ்சத்தின் அநுபவ முண்டாகின்றது. ஆதலால் 'படிகம் செம்மை' என்னும் பிரமத்தைப் போன்று பிரபஞ்ச பிரமத்திற்கும் சோபாதிகத்தன்மை சம்பவிக்கின்றது. யான் கர்த்தா யான் போக்தா என்று ஆத்மாவினுள்ள கர்த்திருத்வ போக்திருத்வ புத்தியாதோ, அது ஆந்தர சோபாதிக பிரமமெனப்படும். அந்தப் பிரமத்தில் அந்தக்கரணமே உபாதியாமென வறிக. ஏனெனின், ஆத்மா வாஸ்தவத்திலோ அசங்க நிர்விகாரமாம். அங்ஙனமாய ஆத்மாவில் சொரூபமாகவோ கர்த்திருத்தன்மை போக்திருத்தன்மைகள் சம்பவியா. ஆனால் அவ்வந்தக்கரணத்திற் றங்கியுள்ள கர்த்திருத்தன்மை போக்திருத்தன்மை முதலிய தர்மங்கள் அவிவேகத்தால் ஆத்மாவில் ஆரோபமாகின்றன. ஆதலால் யான் கர்த்தா யான் போக்தா என்பது முதலிய புத்தியில் சோபாதிக பிரமத்தன்மை சம்பவிக்கின்றது.

## சோப்பன விசாரம்

இவ்வாறே சொப்பனத்திலுள்ள இரதமுதலிய பதார்த்தங்களின் ஞானம் ஆந்தர சோபாதிக பிரமமேயாகும்; ஸ்மிருதியாகாது. ஏனெனின், அச்சொப்பன ஞானம் ஓர்கால் ஸ்மிருதியாயின் 'அந்த ரதம்' என்றே அந்த ஞானத்தின் ஆகாரமாகும். சொப்பனத்தில் அந்தரதம் என்று உண்டாவதில்லை; ஆனால், 'இது ரதம்' 'யான் ரதத்தைக் காண்கின்றேன்' என்னும் ஞானமே யுண்டாகின்றது. ஆதலால் அச்சொப்பன ஞானம் சோபாதிக பிரமமாகிய அயதார்த்த அநுபவமேயாம்; ஸ்மிருதியன்று. ஆதலால் சொப்பனத்தை அயதார்த்த ஸ்மிருதியாக வங்கீகரிக்கும் தார்க்கிகர்களின் மதம் அசங்கதம்.

சங்கை:—அச்சொப்பன ஞானத்தை ஸ்மிருதியாக வங்கீகரியாது அநுபவமாக வங்கீகரிக்கின் அவ்வநுபவத்திற்கு விஷயப்படும் இரதமுதலிய பதார்த்தங்கட்கும் ஆண்டு உற்பத்தி கொள்ளவேண்டும். சொப்பனத்தில் அவ்விரத முதலியவற்றின் உற்பத்தி சம்பவியாது. ஏனெனின், ஜாக்கிராவஸ்தையில் எத்துணைத் தேசகாலங்கள் அவைகளின் உற்பத்திக்கு வேண்டியனவோ, அத்துணைத் தேசகாலங்கள் அச்சொப்பனத்திலின்று. பிரசித்தமான ரத முதலியவைகளின் உற்பத்திக்குவேண்டிய மரம், மரவினைஞன் முதலிய சாமக்கிரிகளும் அச்சொற்பனத்திற்கிடையா. காரணசாமக்கிரியன்றிக்காரியத்தினுற்பத்தி யுண்டாகாது. ஆகவே சொப்பனத்தில் அவ்விரத முதலியவற்றின் உற்பத்தி சம்பவியாது. ஆதலால் சொப்பனத்தில் எல்லாப்பதார்த்தங்களின் ஞானமும் ஸ்மிருதியெனவே கொள்ளவேண்டும். அச்சொப்பன ஞானம் நித்திராதோஷத்தாற் பிறந்ததாகலின் அந்தரதம் என்னும் ஞானஸ்தானத்தில் இது ரதம் என்னும் மயக்க முண்டாகின்றது.

சமாதானம்:—எங்ஙனம் கைவளை முதலியவைகளிலுள்ள வியாவகாரிக ரஜதத்தை உற்பத்திசெய்யும் சாமக்கிரியைவிட, பிராதிபாசிக ரஜதத்தை உற்பத்திசெய்யும் சாமக்கிரி வேறுபட்டதே யாமோ, அங்ஙனமே ஜாக்கிராவஸ்தையின் இரதமுதலியவைகளை உற்பத்தி செய்யும் சாமக்கிரியைவிட அச்சொப்பன இரதமுதலியவைகளை உற்பத்திசெய்யும் சாமக்கிரியும் வேறுபட்டதே யாகின்றது. அவ்வேறுபட்ட சாமக்கிரியாவது:—ஜாக்கிராவஸ்தையில் சுகதுக்கமாகிய போகத்தைப் பயப்பனவாகிய புண்ணியபாப கருமங்கட்கு ஒழிவுண்டாகவும், சொப்பனபோகத்தைத் தருவதாகிய கர்மங்கள் உற்பவமாகவும், நேத்திரமுதலிய இந்திரியங்கள் இலயமாகவும்; ஜாக்கிர இரதமுதலிய சர்வ விஷயங்களின் சம்ஸ்காரமும் இந்திரியாதிகளின் சம்ஸ்காரமுமாகிய சர்வ வாசனைகட்கும் ஆசிரயமானதும் நித்திராதோஷத்தோடுங் கூடியதுமான அவ்வந்தக்கரணமே அச்சொப்பனவஸ்தையில் இரதமுதலிய விஷயாகார பரிணாமத்தையும், இரதமுதலியவைகளைக் கிரகிக்கும் நேத்திரமுதலிய இந்திரியங்களின் ஆகாரபரிணாமத்தையும்,அவ்விரதமுதலிய விஷயாகாரவிருத்தி வடிவபரிணாமத்தையும் அடைகின்றது. இவ்வாறு ஜாக்கிர இரதமுதலியவைகளின் சாமக்கிரியைவிட, சொப்பனத்தின் பிராதிபாசிக இரதமுதலியவைகளின் சாமக்கிரி வேறுபட்டதேயாம்.

சங்கை:—ஜாக்கிராவஸ்தையில் பிரமாதா பிரமாணம் பிரமேயம் என்னும் வியவஹாரம் நிகழ்வதுபோல, சொப்பனத்திலும் பிரமாதா பிரமாணம் பிரமேயமாகிய வியவஹாரம் நிகழ்கின்றது. ஆகையால் சொப்பனப்பொருள்களுக்குப் பிராதிபாசிகத்தன்மை சம்பவியாது.

சமாதானம்:—ஜாக்கிரப்பொருள்கள் பூதங்களின் காரியங்களாவதால் நீண்டகாலம் வரைக்கு மிருப்பனவாகின்றன. சொப்பனப் பொருள்கள் வாசனையோடுங் கூடிய அந்தக்கரணத்தின் பரிணாமங்களாவதால் வாசனாமயமாம். இக்காரணம்பற்றியே அச்சொப்பனப் பொருள்கள் அற்பகாலம் வரைக்கு மிருப்பனவே யாகின்றன. இவ்வாற்றால் ஜாக்கிரப் பொருள்களைவிட வேற்றுத் தன்மை யிருத்தலால் சொப்பனப் பொருள்களில் பிராதிபாசிகத் தன்மை சம்பவிக்கின்றது. சுக்தியிலுள்ள ரஜதஞானம் எப்படித்தோஷத்தாற் றோன்றியதோ, அப்படி,சொப்பனப் பொருள்களின் ஞானமும் நித்திரையாகிய தோஷத்தாற்றோன்றியதா யிருக்கின்றது. ஆகையால் அந்த ஞானத்தில் மயக்கமும் சம்பவிக்கின்றது.

சங்கை:—ஜாக்கிராவஸ்தையில் சூர்யாதி ஜோதிகளின் பிரகாசத்தோடுங்கூடிய சட்சுமுதலிய இந்திரியங்களிருக்கின்றனவாகையால் அவ்விந்திரியங்களால் உருவமுதலிய பதார்த்தங்களின் ஞானமுண்டாகின்றது. சொப்பனாவஸ்தையிலோ அச்சட்சு முதலிய இந்திரியங்களின் அபாவமிருக்கின்றதாதலால் சொப்பனத்தில் அவ்வுருவமுதலிய பொருள்களின் அநுபவம் எப்படிச் சம்பவிக்கும்?

சமாதானம்:—வாசனையோடுங்கூடிய அந்தக்கரணம் அச்சொப்பனத்தில் விஷயம் இந்திரியமுதலிய பரிணாமங்களை யடைந்துள்ளன. அவ்வந்தக்கரண உபகித சாட்சி சைதன்னியமே அச்சொப்பன ரதமுதலிய பொருள்களைப் பிரகாசிப்பிக்கின்றது.

சங்கை:—சொப்பனத்தில் அச்சாட்சி தான் பிறிதோர் சாட்சியாற் பிரகாசிப்பிக்கப்பட அவ்விரதமுதலியவைகளைப் பிரகாசிப்பிக்கின்றதா? அல்லது அப்பிரகாசிதமாக விருந்து பிரகாசிப்பிக்கின்றதா? முதற்பட்சத்தை யங்கீகரிக்கின் அநவஸ்தாதோஷம் பிராப்தமாகும். ஏனெனின் முதற்சாட்சியைப் போன்று இரண்டாவது சாட்சியும் வேறு மூன்றாவது சாட்சியாற் பிரகாசிப்பிக்கப்பட்டே பிரகாசிப்பிக்கவேண்டும். அம்மூன்றாவது சாட்சியும் வேறு நான்காவது சாட்சியாற் பிரகாசிப்பிக்கப்பட்டே பிரகாசிப்பிக்க வேண்டும். இவ்வாறு முன்முன் சாட்சியின் பிரகாசத்தின் பொருட்டு, பின்பின் சாட்சியை அங்கீகரிக்கப்பட அநவஸ்தாதோஷம் பிராப்தியாகும். இரண்டாவது பட்சத்தை அங்கீகரிக்கின் அப்பிரகாசிதமாவதால் ஜடமான அச்சாட்சி சொப்பனப்பொருள்களை எப்படிப் பிரகாசிப்பிக்கும்?

சமாதானம்:—அச்சாட்சிசைதன்யம் சுவயம் பிரகாசமுடையது. அஃதாவது தானே தன்னாற் பிரகாசமுடையது. ஆதலால் அச்சாட்சியில் முற்கூறிய அநவஸ்தையும், ஜடத்தன்மையும் பிராப்தமாகா. அப்படிப்பட்ட சுவப்பிரகாசு

சாட்சியே அச்சொப்பன பதார்த்தங்களைப் பிரகாசிப்பிக்கின்றது. இக்காரணத் தாற்றான் அச்சொப்பனுவஸ்தையில் சாட்சி சைதன்யத்தின் சொப்பிரகாசத் தன்மை அறிய எளிதாகின்றது.

சங்கை:—യേന സൂര്യസ്തപതി തേജസേദ്ധഃ । തമേവ ഭാന്തമനുഭാതി സർവം । തസ്യ ഭാസാ സർവമിദം വിഭാതി । ന തത്ര സൂര്യോ ഭാതി ന ചന്ദ്രതാരകം (பிரகாசிக்கின்ற சூர்யன் எத்தேஜசால் பிரகாசிக்கின்றானே, பிரகாசிக்கின்ற அவனை அநுசரித்தே எல்லாம் விளங்குகின்றன. அவனது பிரகாசத் தால் இவை யாவும் பிரகாசிக்கின்றன ஆண்டுச் சூர்யன் பிரகாசிக்கிறதில்லை சந்திர நட்சத்திரங்கள் பிரகாசிக்கிறதில்லை) என்னுந் தொடக்கத்துச் சுருதிகள் அச்சாட்சி சைதன்யத்திற்குச் சூர்ய சந்திராதி சர்வஜகத்தையும் பிரகாசிப் பிக்குந் தன்மையும் அச்சூர்ய சந்திராதி ஜோதிகளால் அதன் அப்பிரகாசிதத் தன்மையுங் கூறியுள்ளன. இதுவே அச்சாட்சி சைதன்யத்தில் சொப்பிரகாசத் தன்மையாம். இதனுல் அச்சாட்சி சைதன்யத்தின் சொப்பிரகாசத்தன்மை ஜாக்கிராவஸ்தையினும் நிச்சயிக்கப்பட்டதேயாம். ஜாக்கிராவஸ்தையைவிட்டு சொப்பனுவஸ்தையில் அச்சாட்சிசைதன்யத்தின் சொப்பிரகாசத்தன்மை நன் ருய் அறியக்கூடியதெனக் கூறுதல் அநுசிதம்.

சமாதானம்:—விவேகிகட்கு ஜாக்கிராவஸ்தையினும் அச்சாட்சியின் சொப்பிரகாசத்தன்மை நன்ருய் அறியக்கூடியது, என்றுலும், அவிவேகிகட்கு அச்சாக்கிராவஸ்தையில் சாட்சியின் சொப்பிரகாசத் தன்மை அறியமுடியாத தேயாம். ஏனெனின், அச்சாக்கிராவஸ்தையில் புருஷனுக்குப் போதல் வருத லாதிய வியவகாரங்கள் சூர்யஜோதியால் நிகழ்கின்றன. அச்சூர்ய ஜோதி யில் லாவிடில் சந்திரஜோதியால் அவ்வியவகாரங்கள் நிகழ்கின்றன. அச்சந்திர ஜோதியில்லாவிடில் அக்னியாகிய ஜோதியால் அவ்வியவகாரங்கள் நிகழ்கின்றன. அக்னியாகிய ஜோதி யில்லாவிடினும் காடாந்தகாரத்தில் சப்தமாகிய ஜோதி யால் அவ்வியவகாரங்கள் நிகழ்கின்றன. இவ்வாறு ஜாக்கிராவஸ்தையில் வியவ காரத்திற்குச் சாதகமாகிய சூர்யாதி அநேக ஜோதிகளாற் கலந்துள்ளது அச் சாட்சி சைதன்னியமாகிய ஜோதியாம். ஆதலால் ஜாக்கிராவஸ்தையில் அவி வேகிகட்கு அச்சாட்சி சைதன்யத்தின் சொப்பிரகாசத்தன்மை நிச்சயிக்கமுடி யாது. சொப்பனுவஸ்தையிலோ அச்சாக்கிராவஸ்தையின் சூர்ய சந்திராதி எல்லா ஜோதிகளும் இலயமாய் விடுகின்றன. சொப்பனுவஸ்தையினும் ஜாக் கிராவஸ்தையைப்போல அவ்வெல்லா வியவகாரங்களும் நிகழ்கின்றன. எது எது வியவகாரமோ, அது அது ஓர் ஜோதியினுனேயே சாத்தியமாகின்றது. 'ஆத லால் அச்சொப்பன வியவகாரங்களின் சாதகத்திற்கும் ஓர் ஜோதி அவசியம் அங்கீகரிக்கவேண்டும். அச்சொப்பனத்தில் அந்தக்கரணமும், அஞ்ஞானமும் உளவாயினும் அவ்வந்தக்கரணம் ஆண்டு விஷயாகார பரிணமத்தை யடைகின் றதாதலால் அவ்வந்தக்கரணத்திற்கு ஜோதித்தன்மை சம்பவியாது. அஞ்ஞான மோ இருளைப்போன்று பிரகாச விரோதியே யாதலால் அவ்வஞ்ஞானத்திற் கும் ஜோதித்தன்மை சம்பவியாது. பாரிசேடத்தால் (ஓழிபால்) அச்சாட்சி

சைதன்யமாகிய ஜோதியே அச்சொப்பன வியவகாரங்கட்குச் சாதகமாகவே பெறப்படுகின்றது. இவ்வாற்ருல் அவிவேகிகட்கும் சொப்பனுவஸ்தையில் அச் சாட்சி சைதன்யத்தின் சொப்பிரகாசத்தன்மை நிச்சயிக்கப்படுவதாகின்றது. ஆதலால் சொப்பனுவஸ்தையில் சாட்சி சைதன்யத்தின் சொப்பிரகாசத்தன்மை நன்ருயறியக்கூடியதென்னுங் கூற்று சம்பவிக்கின்றது. இக்கருத்து பற்றியே அத்ராயம் புருஷஃஸ்வயம் ஜ்யோதிர்பவதி (ஈண்டுப் புருஷன் சுவயஞ்சோதியாகின்ருன்) என்னும் பிருகதாரணியக சுருதி சொப்பனுவஸ்தையின் கண்ணேயே அச்சாட்சி ஆத்மாவை சுவயம் ஜோதி எனக்கூறியுளது. ஈண்டு சுவயஞ் சோதி, சுவப்பிரகாசம், சுவயம்பிரகாசமுடையது என்னும் மூன்றும் ஒரு பொருட்கிளவிகளேயாம். சாட்சியின் இலக்கணம் முன் இரண்டாவது பரிச்சேதத்திற் கூறப்பட்டிருக்கிறது.

இனி,; தொடர்பாட்டால் அச்சாட்சி சைதன்னியத்திற்குச் சொப்பிரகாசத்தன்மையின் இலக்கணம் கூறப்படுகின்றது. ஆண்டு வேதநத்ரா விஷயக்வம் ஸ்வப்ரகாஶக்வம் (இ - ள்.) இந்திரிய ஜன்னிய விருத்தியிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யம் பல சைதன்யமெனப்படும். அப்பல சைதன்யத்திற்கு விஷயமாகாமையே அச்சாட்சி சைதன்யத்தில் சொப்பிரகாசத்தன்மையாம். அல்லது அவேத்யத்வே ஸதி அபரோக்ஷ வ்யவஹார யோக்யத்வம் ஸ்வப்ரகாஶக்வம் (இ-ள்) முற்கூறிய பல சைதன்யத்திற்கு விஷயமாகாததாய் அபரோட்ச வியவகாரத்திற்கு யோக்கியமாகுந் தன்மை யாதோ அதுவே அச்சாட்சி சைதன்யத்தில் சொப்பிரகாசத் தன்மையாம். ஈண்டு அபரோட்ச வியவகாரத்தால் பிரமாண ஜன்னிய விருத்தியைக் கிரகித்தல் வேண்டும். அபரோட்ச வியவகாரத்திற்கு யோக்யமான கடமுதலியவற்றில் இவ்விலக்கணத்தின் அதிவியாப்தியை நீக்குவான் கருதி 'பலசைதன்யத்திற்கு விஷயமாகாததாய்' என்று கூறப்பட்டது. அக்கடாதிகளில் பல சைதன்யத்திற்கு விஷயமாகாமையாகிய அறியப்படாத் தன்மை யின்று. அறியப்படாததான தர்மாதர்மங்களில் இவ் விலக்கணத்தின் அதிவியாப்தியை விலக்குதற்பொருட்டு 'அபரோட்ச வியவகாரத்திற்கு யோக்யமாகும்' என்று கூறப்பட்டது. அவ்வபரோட்ச வியவகாரத்திற்கு யோக்யமாகுந்தன்மை தர்மாதர்மங்களிலின்ருகலின் ஆண்டு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—சொப்பிரகாச சாட்சியால் சொப்பன பதார்த்தங்கள் விளங்குமேல் விளங்குக. ஆனல், தேர் முதலிய பொருள்கள் அச்சொப்பனத்திற் புதுவதாகவே யுண்டாகின்றன வென்பதிற் பிரமாணம் யாது?

சமாதானம்:—சாட்சாத்வேத சுருதியே அவ்வர்த்தத்திற் பிரமாணமாம். சுருதி. ந தத்ர ரதா ந ரதயோகா ந பந்தானோ பவந்தி அத ரதான் ரதயோகான் பத: ஸ்ருஜதி (இ-ள்) ஜாக்கிராவஸ்தையிலுள்ள வியாவகாரிக இரதமும், அதிற் பூட்டிய அசுவங்களும், அவ்வசுவங்கள் போதற்குரிய மார்க்கங்களுமாகிய அவையாவும் சொப்பனத்தில் இல்லாதிருந்தும் சொப்பனத்தில் இரதங்களையும், அசுவங்களையும், மார்க்கங்களையும் (மனதே) உண்டாக்குகின்றது. இச்

சுருதி சொப்பனத்தில் ஜாக்கிர ரதாதிகளின் அபாவத்தையும் பிராதிபாசிக ரதமுதலியவைகளின் உற்பத்தியையும் கூறுகின்றதாகலின் அவ்விரத முதலியவைகளை விஷயப்படுத்தும் அச்சொப்பன ஞானம் அநுபவவடிவமேயாம்; ஸ்மிருதி வடிவமன்று.

சங்கை:—இவ்வாறு அச்சொப்பன ஞானத்தை அநுபவவடிவமென வங்கீகரிக்கின் அச்சொப்பன இரதாதி பதார்த்தங்கட்கு ஜாக்கிரத்திலும் அநுவிருத்தி (தொடர்ந்து வருதல்) உண்டாதல் வேண்டும். ஏனெனின், எப்பதார்த்தம் எவ்வதிஷ்டானத்தில் கற்பிதமாகின்றதோ, அவ்வதிஷ்டானத்தின் ஞானத்தினலேயே அப்பதார்த்தத்தின் நாசமுண்டாகின்றது. அச்சொப்பன பதார்த்தம் பிரஹ்ம சைதன்யத்தினிடத்தே கற்பிதமாதலால் பிரஹ்மசைதன்னியத்தின் சாட்சாத்காரத்தினனே அச்சொப்பன பதார்த்தங்களின் நாசமுண்டாகும். அதிஷ்டான பிரஹ்மசாட்சாத்காரம் இப்புருஷனுக்கு இன்று. அவ்வதிஷ்டான சாட்சாத்காரத்திற்குப் பின்னமான பிறிதொன்றால் அச்சொப்பன பதார்த்தங்களின் நிவிர்த்தி உண்டாகாது. ஆதலால் ஜாக்கிராவஸ்தையில் அச்சொப்பன பதார்த்தங்களின் அநுவிருத்தி அவசியமுண்டாதல் வேண்டும். ஓர்கால் இவ்வர்த்தத்தில் இஷ்டமுளதாயின் யாவருடைய அநுபவத்திற்கும் விரோதமுண்டாகவேண்டும்:—அஃதாவது யாவரும் சொப்பன பதார்த்தங்களை ஜாக்கிரத்தில் அபாவமாகவே அங்கீகரிக்கின்றனராதலால் அச்சொப்பன ஞானத்தில் அநுபவவடிவத்தன்மை சம்பவியாது.

சமாதானம்:—காரியத்தின்நாசம் இருவிதம். ஒன்றுபாதம் மற்றென்று இலயம். ஆண்டு அதிஷ்டானத்தினது வாஸ்தவ சொரூபத்தின் சாட்சாத்காரத்தால் காரியம் தனது உபாதான காரணமாகிய அஞ்ஞானத்துடன் நாசமாதல் பாதமென படும். சுக்தியாகிய அதிஷ்டானத்தின் சாட்சாத்காரத்தால் இரஜதமாகிய காரியத்திற்குத் தனது உபாதான காரணமான அஞ்ஞானத்தோடு நாசம் பாதமாதல் போலும். உபாதான காரணம் இருந்தாலும் காரியம் மறைவுபடுவது மாத்திரம் இலயமெனப்படும். சொப்பன இரதமுதலிய பதார்த்தங்கள் அந்தக்கரண மாயை வாயிலாக, சுத்த சைதன்யத்தில் அத்தியஸ்தமாம். சுத்த சைதன்யமாகிய அதிஷ்டானத்தின்சாட்சாத்காரம் புருஷனுக்குச்சாக்கிரகாலத்திலின்று. ஆதலால்சுக்திரஜதத்தைப்போன்று அச்சொப்பன பதார்த்தங்கட்குப் பாதமாகிய நாசமோ கூடாது. ஆனல் அச்சொப்பனம் முற்கூறியவாறு சோபாதிக பிரமமாம். ஆதலால் செவ்வரத்தப்புட்ப முதலிய உபாதிகளின் நிவிர்த்தியால் எங்ஙனம் படிகத்தில் செம்மை நிவிர்த்தியாகின்றதோ, அங்ஙனமே உபாதி நிவிர்த்தியால் அச்சொப்பன பதார்த்தங்கட்கும் நிவிர்த்தி சம்பவிக்கின்றது. ஆதலால் ஜாக்கிராவஸ்தையில் அச்சொப்பன பதார்த்தங்களின் அநுவிருத்தி சம்பவியாது. ஜாக்கிரத்தின் சம்ஸ்காரமும், சொப்பனத்தில் போகத்தைத் தருவதாகிய கர்மமும், நித்திராதோஷமுமாகிய இவைமூன்றோடுங் கூடிய அந்தக்கரணமே அச்சொப்பன பிரமத்தில் உபாதியாம். அந்தக்கரணமாகிய உபாதியின் நிவிர்த்தியால் ஜாக்கிராவஸ்தையில் அச்சொப்பன பதார்த்தங்கள் நிவிர்த்தியாகின்றன. ஜாக்கிராவஸ்தையில் அவ்வந்தக் கரணம் சொரூப

மாகவே இருப்பதாயினும் சாக்கிராவஸ்தையில் அவ்வந்தக்கரணம் சொப்பன போகத்தைப் பயக்கும் கர்மம், நித்திராதோஷம் இவைகளுடன் கூடியதன்று. எப்பதார்த்தம் தன்னிடத்துள்ள தர்மங்களைத் தனது சம்பந்தியினிடத்து ஆரோபிக்கின்றதோ, அப்பதார்த்தம் உபாதி எனப்படும். எங்ஙனம் ஜபாகுசுமம் (செவ்வரத்தம்புட்பம்) தன்னிடத்துள்ள செம்மை நிறத்தைத் தனது சம்பந்தியாகிய படிகத்தில் ஆரோபணஞ் செய்வதால் அச்சபாகுசுமம் உபாதி எனப்படுமோ, அங்ஙனமே அந்தக்கரணம் தனது கர்த்திருத்வ போக்திருத்வாதி தருமங்களைத் தனது சம்பந்தியான ஆத்மாவில் ஆரோபணஞ் செய்கின்றதாதலால் அவ்வந்தக்கரணமும் உபாதி எனப்படும். இவ்வாறு சொப்பன ஞானம் சோபாதிக பிரமமாவதால் அதற்கு அநுபவத்தன்மையே சம்பவிக்கின்றது.

## சில நூலாசிரியர்கள் சோப்பனத்தை நிருபாதிகமெனல்.

ஈண்டுச் சில நூலாசிரியரோ, அச்சொப்பன அத்தியாசம் சோபாதிக பிரமமன்று; ஆனல் சுக்தி ரஜத பிரமத்தைப் போன்று நிருபாதிக பிரமமேயாமென்று கூறுகின்றனர்.

சங்கை:—சொப்பனுவஸ்தையை நிருபாதிக பிரமமென வங்கீகரிக்கின், அச்சொப்பன பதார்த்தங்கட்கு அநுவிருத்தி ஜாக்கிரத்திலும் உண்டாதல் வேண்டும். ஏனெனின், நிருபாதிக பிரமத்தின் நிவிர்த்தி அதிஷ்டானத்தின் ஞானத்தினுனே யுண்டாகின்றது. அச்சொப்பன பிரமத்திற்கு அதிஷ்டானம் பிரஹ்ம சைதன்யமாம். புருஷனுக்கு சாக்கிராவஸ்தையில் பிரஹ்மசைதன்யத்தின் சாட்சாத்கார மின்ருகலின் அச்சொப்பன பதார்த்தங்கட்கு ஜாக்கிராவஸ்தையில் பாதமுண்டாகாது.

சமாதானம்:—இரஜத பிரமத்திற்கு அதிஷ்டானம் சுக்தியாம். அச்சுக்தியின் சாட்சாத்கார மின்ருயினும், அவ்விரஜத பிரமத்திற்கு உபாதான காரணமாகிய அஞ்ஞான முளதாயினும், அவ்விரஜத பிரமம் தனது விரோதியான தண்ட முதலிய பதார்த்தங்களின் ஞானத்தால் எங்ஙனம் நிவிர்த்தியாகின்றதோ, அங்ஙனமே சொப்பன பிரமத்திற்கு அதிஷ்டானமாகிய பிரஹ்ம சைதன்யத்தின் சாட்சாத்கார முண்டாகாவிடினும், விரோதியாகிய ஜாக்கிரத்தின் ஞானத்தால் அச்சொப்பன பதார்த்தங்களின் நிவிர்த்தி உண்டாதல் கூடும். ஆதலால் அச்சொப்பன பதார்த்தங்கட்கு ஜாக்கிரத்தில் அநுவிருத்தி யுண்டாகாது. ஆகவே இரஜத பிரமத்தைப்போன்று சொப்பன பிரமமும் நிருபாதிக பிரமமேயாம்.

சங்கை:—சொப்பன பிரமத்தை நிருபாதிகமென வங்கீகரிக்கின்; பிரஹ்ம வேத்தாக்களாகிய ஞானிகட்கு, சொப்பனப் பிரமமே யுண்டாகலாகாது. ஏனெனின், சொப்பன பதார்த்தங்களின் அதிஷ்டானம் பிரஹ்ம சைதன்யமாம். அந்தப் பிரஹ்ம சைதன்யத்தின் சாட்சாத்காரத்தால் பிரஹ்மவேத்தாக்களுக்கு அச்சொப்பன பிரமத்திற்கு உபாதான காரணமாகிய அஞ்ஞானம் நிவிர்த்தியாய் விட்டது.

சமாதானம்:—பிரஹ்ம சாட்சாத்காரத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியாயினும் அவ்வஞ்ஞானத்தின்காரியமாகிய அந்தக்கரண முதலிவைகட்குப்பிராரப்த கர்மநாச பரியந்தம் நிவிர்த்தியுண்டாகாது. முற்கூறியவாறு அச்சொப்பன பதார்த்தங்கட்கு அந்தக்கரணமே நேரான உபாதானகாரணமாம். ஆதலால் பிராரப்தநாச பரியந்தம் பிரஹ்மவேத்தாக்கட்கும் சொப்பன பிரமம் சம்பவிக்கும். ஓர்கால் பிரஹ்மசாட்சாத்காரத்தால் அஞ்ஞான நிவிர்த்தியின் பின்னர், தத்துவவேத்தாவிற்குச் சொப்பன பிரமம் அங்கீகரியாவிடின், அத்தத்துவ வேத்தாவிற்கு ஜாக்கிராவஸ்தையிலும் சப்தாதி விஷயங்களின் அநுபவம் உண்டாகலாகாது. ஆனுல், ஜாக்கிராவஸ்தையில் அத்தத்துவ வேத்தாவினது வியவகாரம் கண்கூடாய்க் காணப்படுகின்றது. ஆதலால் அத்தத்துவ வேத்தாவிற்குச் சொப்பன பிரமமும் அங்கீகரிக்க வேண்டும். ஆனுல் தத்துவேத்தாவானவன் அஞ்ஞானியைப் போன்று தனது சொரூபத்தில் ஓர் வியவகாரத்தையும் அங்கீகரிக்கமாட்டான்.

## விபர்யயத்தின் வேறு விதம்.

முன் நிரூபாதிகம், சோபாதிகம் என்னும் பேதத்தால் இருவிதமான விபர்யயங் கூறி, அவைகள் இதுவரையும் நிரூபிக்கப்பட்டன. இனி முற்கூறிய விபர்யயத்திற்கே வேறுவகைப் பிரிவு கூறப்படுகின்றது. முற்கூறிய பிரமமாகிய விபர்யயம் மீண்டும் இருவிதமாம். ஒன்று அந்தக்கரண விருத்திவடிவம், மற்ரென்று அவித்தியாவிருத்தி வடிவம். சொப்பன பதார்த்தங்களின் ஞானமும், மஞோராஜ்ஜியமும், மரித்துப்போன புத்திராதிகளின் பிரத்தியட்சமுமாகிய இவைமுதலிய பிரமமோ அந்தக்கரண விருத்தி வடிவமாம். சுக்தியில் இரஜத ஞானமும்,இரஜ்ஜுவில் சர்ப்பஞானமுமாகிய பிரமங்கள் அவித்தியா விருத்திவடிவமாம். இவ்வாறு முற்கூறிய சம்சயமும் அவித்தியாவிருத்தி வடிவமேயாம். இதுகாறும் விபர்யயத்தைப்பற்றி நிரூபிக்கப்பட்டது. இனி அவ்விபர்யய நிவிர்த்தியின் உபாயம் கூறப்படுகின்றது. ஆண்டு முற்கூறிய 'நான் அஞ்ஞானி' என்பது முதலிய நிரூபாதிக விபர்யயமோ நிதித்யாசனத்தால் நிவிர்த்தியாகின்றது. சோபாதிக விபர்யயமோ அவ்வவ்வுபாதிகள் நிவிர்த்தியாக நிவிர்த்தியாகின்றது. முற்கூறிய விபரீதபாவனையாகிய விபர்யயத்தை நிவிர்த்திக்கத்தக்க நிதித்யாசனத்தின் சொரூபம் முன் இரண்டாவது பரிச்சேதத்தில் நிரூபிக்கப்பட்டுளது. அதை ஈண்டும் அறிக. அந்த நிதித்யாசனம் சாரீகமீமாஞ்சையின் மூன்றுவது அத்தியாயத்தின் படனத்தாற் பெறப்படும். இவ்வாறு சிரவணத்தால் பிரமாணகத அசம்பாவனையும், மனனத்தால் பிரமேயகத அசம்பாவனையும், நிதித்யாசனத்தால் விபரீதபாவனையும் நிவிர்த்தியாக அதிகாரிக்குத் தத்துவமசி முதலிய வாக்கியங்களால்'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் அபரோட்ச ஞானம் உண்டாகின்றது. அவ்வபரோட்ச ஞானத்தால் அஞ்ஞான நிவிர்த்தி பூருவகமாகப் பரமானந்தத்தின் பிராப்தி யுண்டாகின்றது.

சங்கை:—சிரவண மனன நிதித்யாசனங்களைச் செய்யினும் சிலருக்குப் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகின்றதில்லை. இதன் காரணம் யாது?

சமாதானம்:—ஆத்மஞானத்தின் உற்பத்தியில் எங்ஙனம் முற்கூறிய அசம்பாவனை விபரீதபாவனைகள் பிரதிபந்தங்களாகின்றனவோ, அங்ஙனமே பூத (சென்ற) பாவி (வரும்) வர்த்தமானம் (நிகழ்) என்னும் மூன்றுவித வேறு பிரதிபந்தங்களுமுண்டு. எவருக்கு அந்தப் பிரதிபந்தங்களிருக்கின்றனவோ, அவர்களுக்கு சிரவணுதிகளைச் செய்யினும் ஆத்மஞானம் உண்டாகாது. ஆனல் எவர்களுக்கு அந்தப் பிரதிபந்தங்கள் இன்றோ அவர்களுக்குத் தத்துவமசி வாக்கியத்தின் விசாரத்தால் பிரஹ்மசாட்சாத்காரம் அவசியம் உண்டாகின்றது. இவ்வார்த்தை ஸ்ரீவியாசபகவானும் பிரஹ்ம சூத்திரத்திற் கூறியிருக்கின்றார். ஆண்டுச் சூத்திரம் 𑌐𑌹𑌿𑌕𑌮𑌪𑍍𑌯𑌪𑍍𑌰𑌸𑍍𑌤𑍁𑌤𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑍇 𑌤𑌦𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 (இ-ள்) பலத்தைத் தருவதற்கு எதிர்ப்பட்ட கர்மவிசேஷம் வர்த்தமானப் பிரதிபந்தமெனப்படும். அல்லது பிரஹ்மசாட்சாத்காரத்தின் உற்பத்திக்கு விரோதியாகிய வாசனுவிசேஷம் வர்த்தமானப் பிரதிபந்தமெனப்படும். அவ்வர்த்தமானப்பிரதிபந்த மின்றாயின் புருஷனுக்குச் சிரவண மனனுதிகளால் இப்பிறப்பிலேயே பிரஹ்ம சாட்சாத்கார முண்டாகின்றது. வர்த்தமானப் பிரதிபந்த மிருக்கின் வேறு பிறப்பிலும் புருஷனுக்குப் பிரஹ்மசாட்சாத்காரம் உண்டாகாது. வாமதேவாதிகட்குண்டானது போலும். பிரதிபந்தத்தோடுங் கூடியவனுல் ஆத்மா அறிதற்கரியது என்று சுருதி ஸ்மிருதிகளும் கூறுகின்றன. சுருதி 𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌯𑌾𑌪𑌿 𑌬𑌹𑍁𑌭𑌿𑌰𑍍𑌯𑍋 𑌨 𑌲𑌭𑍍𑌯𑌃 𑌶𑍃𑌣𑍍𑌵𑌨𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌬𑌹𑌵𑍋 𑌯𑌂 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌃 (இ-ள்) இவ்வாத்மா அநேகர்கட்குச் சிரவணத்தின் பொருட்டும் அடையப்படுவதில்லை. அன்றியும் அநேகர்கள் இவ்வாத்மாவைச் சிரவணஞ்செய்யினும் யாதாமோர் பிரதிபந்தத்தின் வசத்தால் சாட்சாத்கரிக்க வலியற்றவர்களாகின்றனர். இவ்வர்த்தத்தினையே 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌚𑍍𑌚𑍈𑌨𑌮𑌨𑍍𑌯𑌃 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌪𑍍𑌯𑍇𑌨𑌂 𑌵𑍇𑌦 𑌨 𑌚𑍈𑌵 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 (பிறன் இவனை ஆச்சரியமாகவே கேட்கின்றான். கேட்டும் ஒருவனும் இவனை அறிவதில்லை) என்னுந் தொடக்கத்து ஸ்மிருதி வசனங்களுங் கூறுகின்றன.

## பூத பாவ வர்த்தமான பிரதிபந்தங்களின் சோரூபமும் அவைகளை நிவிர்த்திக்கும் உபாயங்களுங் கூறுதல்.

முன் அநுபவிக்கப்பட்ட ஓர் பிரியவிஷயத்தின் திட சம்ஸ்காரத்தின் வலியால் பிரஹ்மசிந்தனகாலத்தில், அவ்விஷயத்தின் அடிக்கடிஸ்மரணம் பூதப்பிரதிபந்தமெனப்படும். அப்பூதப் பிரதிபந்தம் விஷய உபகித பிரஹ்மத்தின் சிந்தனத்தால் நிவிர்த்தியாகின்றது. எங்ஙனமெனின், ஓர் சந்நியாசிக்கு முன் கிருகஸ்த ஆசிரமத்தில் அநுபவிக்கப்பட்ட எருமை முதலிய பதார்த்தங்களின் அடிக்கடி ஸ்மரணத்தால் சிரவணஞ்செய்யினும் தத்துவஞானம் உண்டாகவில்லை. அப்போது குருவானவர் அப்பூதப் பிரதிபந்தத்தை நீக்கக் கருதி அச்சந்நியாசிக்கு அவ்வெருமை யுபகித பிரஹ்மத்தின் சிந்தனத்தை உபதேசித்தனர். அச்சிந்தனத்தால் அச்சந்நியாசிக்கு அப்பூதப் பிரதிபந்தம் நீங்கி உடனே சிரவணுதிகளால் ஆத்மஞானம் உண்டானது. இவ்விதகதைகள் உலக பரம்பரையாக வருகின்றன. இரண்டாவது பாவிப்பிரதிபந்தமோ பிராரப்த கர்ம

சேஷம், பிரஹ்மலோக இச்சை என்னும் பேதத்தால் இருவிதம். அப்பாவிப் பிரதிபந்த மிருக்கின் புருஷனுக்கு சிரவணுதிகளைச் செய்யினும் ஆத்மஞானம் உண்டாகாது.

சங்கை:—பிராரப்த கர்மத்தை ஞானத்திற்குப் பிரதிபந்தகமென வங்கிகரிக்கின் எப்புருஷனுக்கும் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகலாகாது. ஏனெனின், சரீரமுள்ளவரையும் அந்தப்பிராரப்த கர்மம் நாசமாகாது. பிராரப்த கர்மமாகிய பிரதிபந்தத்தின் வலியால் ஒருவனுக்கும் பிரமசாட்சாத்காரம் உண்டாகாதபோது பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பொருட்டுச் சிரவணுதி சாதனங்களை விதித்துள்ள 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌾 𑌅𑌰𑍇 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑍋 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑍋 𑌨𑌿𑌦𑌿𑌧𑍍𑌯𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌃 (அடே! ஆத்மா கேட்கத்தக்கது, சிந்திக்கத்தக்கது, தெளியத்தக்கது) என்னுந் தொடக்கத்து மறைமொழிகள் அப்பிரமாணமாகும்.

சமாதானம்:—பிராரப்த கர்மம் இருவிதம். பலாபிசந்திகிருத (பலத்தின் விருப்பத்தினுற் செய்யப்பட்ட) பிராரப்தகர்மம் ஒன்று. கேவல பிராரப்தம் மற்றொன்று. ஆண்டு 'இக்கருமத்தால் எமக்குச் சுவர்க்கமாகிய பயன் பிராரப்தமாகுக' என்னும் பலத்தின் இச்சை பலாபிசந்தியும், அப்பலாபி சந்தியன்றிச்செய்யப்பட்ட கர்மம் கேவல பிராரப்தமு மெனப்படும். பலாபிசந்திகிருத பிராரப்த கர்மமோ பலபோகத்தினுனே நாசமாகின்றது; வேறு எவ்வுபாயத்தானும் நாசமாகாது. அப்பலாபி சந்திகிருத கர்மம் இருக்கின், புருஷன் சிரவணுதிகளைச் செய்யினும் அவனுக்குப் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகாது. ஏனெனின், இச்சையோடுங்கூடிய சாமக்கிரி யாண்டும் பிரபலமேயாம். எங்ஙனமெனின், உலகத்தில் இரண்டுவஸ்துக்களின் ஞானத்திற்கு சாமக்கிரி இருந்தும் புருஷனுக்கு எவ்வஸ்துவினது ஞானத்தின் இச்சையுண்டாகின்றதோ, அவ்வஸ்துவின் ஞானமே முதலிலுண்டாகின்றது; வேறு வஸ்துவின் ஞானமுண்டாகாது. ஆகையால் பல இச்சையோடுங்கூடிய பிராரப்த கர்மம் பிரபலமாவதால் அது இருக்கச் சிரவணுதிகளைச்செய்தும் புருஷனுக்குப்பிரஹ்மசாட்சாத்காரம் உண்டாகாது. ஆனுல், பலாபிசந்திகிருத பிராரப்த கர்மத்தின் பயனை நுகர்ந்த பிறகே புருஷனுக்குப் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகின்றது. இனி அப்பலாபி சந்திகிருத கர்மத்தின் பிரபலத்தில் சுருதிப் பிரமாணம் சொல்லப்படுகின்றது. 𑌸𑌯𑌥𑌾𑌕𑌾𑌮𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌤𑍍𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌯𑌤𑍍𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌯𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌤𑌦𑌭𑌿𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 (இ-ள்) புருஷன் எவ்வெப்பலத்தின் இச்சையுடையவனுகின்றுனே, அவ்வப்பலத்திற்கு அநுகூலமான கர்மத்தினிடத்துச் சங்கற்பமுடையவனுகின்றுன். எவ்வெக்கர்மத்தின் சங்கற்பமுடையவனுகின்றுனே, அவ்வக்கருமத்தைச் செய்கின்றுன். எவ்வெக்கருமத்தைச் செய்கின்றுனே, அவ்வக்கர்மாநுசாரமாகச் சுவர்க்க முதலியவான பலத்தை அடைகின்றுன். இவ்வாற்றுல், பலாபிசந்திகிருத பிராரப்தகர்மமே பாவிப்பிரதிபந்தமெனப்படும். இரண்டாவது, பலத்தில் இச்சையில்லாத கேவலபிராரப்த கர்மமும், புண்ணியம் பாபம் என்னும் பேதத்தால் இருவிதம். அவற்றுள் கேவல புண்ணிய பிராரப்தமோ பாபநிவிர்த்தி வாயிலாகப் புருஷனுக்குத் தத்துவஞா

னத்திற்கே ஏதுவாகின்றது. யஜ்ஞேநவாப ஞேவநாஶதி। ஜ்ஞாநோத்பத்யதே பும்ஸாம் க்ஷயாத்பாபஸ்ய கர்மண:। க்ஷாயேகஷாயைஃ பக்வே தேதோ ஜ்ஞாநம் ப்ரவர்த்ததே (இ-ள்) புருஷன் தர்மத்தால் பாவத்தை நிவிர்த்திக்கின்ருன். அதிகாரிகட்குப் பாபகர்மத்தின் நாசத்தினுலே ஆத்மஞானம் உண்டாகின்றது. புண்ணிய கர்மங்களாற் பாபமுதலியவைகள் நீங்கிய பிறகு புருஷனது சுத்த அந்தக்கரணத்தில் ஆத்மஞானம் உண்டாகின்றது. இவை முதலிய சுருதி ஸ்மிருதி வசனங்களால் கேவலபுண்ணிய பிராரப்த கர்மத்திற்குப் பாப நிவிர்த்தி வாயிலாக ஆத்மஞானத்தின் காரணத்தன்மை பெறப்படுகின்றது. இரண்டாவதான பாபபிராப்தமோ பலாபிசந்திகிருதமாகின்றது, அல்லது பலாபிசந்தி ரகிதமான கேவலமாகின்றது. இருதிறத்தினுனும் அந்தப்பிராரப்தகர்மம் ஆத்மஞானத்திற்குப் பிரதிபந்தமே யாகின்றது. அப்பாப பிராரப்தம் யாதோமோர் பிரபல புண்ணியகர்மத்தால் திரோபாவத்தை யடைந்து நிவிர்த்தமாகின்றது. இல்லாவிடின் ஞானேற்பத்திக்குப் பிரதிபந்தமாகின்றது. இதனுற் பெற்றது யாதெனின்:—அப்பிராரப்த சேஷமாகிய பாவிப்பிரதிபந்தம் எது பரியந்தம் பலாநுபவத்தால் நிவிர்த்தி யாவதில்லையே, அதுபரியந்தம் சிரவணுதிகளைச் செயினும் புருஷனுக்கு ஆத்மஞானம் உண்டாகாது. எப்போது பலாநுபவத்தால் அப்பாவிப் பிரதிபந்தம் நிவிர்த்தியாகின்றதோ, அப்போதே புருஷனுக்குச் சிரவணுதி சாதனங்களால் ஆத்மஞானம் உண்டாகின்றது. ஆகவே ஆத்ம சாட்சாத்காரத்தின் பொருட்டுச் சிரவணுதி சாதனங்களை விதித்துள்ள மறைகட்கு அப்பிரமாணத்தன்மை யுண்டாகாது.

சங்கை:—முற்கூறிய பாவிப்பிரதிபந்தம் எவ்வளவு காலத்திற்குப் பிறகு நீங்குமோ?

சமாதானம்:—இப்பாவிப் பிரதிபந்தத்தின் நீக்கத்தில் காலத்தின் நியமமில்லை. சிலருக்கு ஓர் ஜன்மத்திலும் அந்தப் பிரதிபந்தம் நீங்குகின்றது. சிலருக்கு இரண்டு மூன்று ஜன்மங்களிலும் நீங்குகின்றது. இவ்வார்த்தை வேறு நூற்களிலும் கூறப்பட்டுளது. சுலோகம் ஞாமிவ்ரு திவ்யேநாஹி வாமதேவே ஹீரிதஃ। ஜந்மஜந்நாக்ஷீணோ பரத ஸ்ய த்ரிஜந்மபிஃ (இ-ள்) முற்கூறிய பிராரப்த சேஷமாகிய பாவிப் பிரதிபந்தம் வாமதேவரிடத்திலும், பரதரிடத்திலும் இருந்தது. வாமதேவருக்கு அப்பிரதிபந்தம் ஓர் ஜன்மத்தில் நீங்கினது, பரதருக்கு மூன்று ஜன்மங்களில் நீங்கினது. ஆதலால் அப்பாவிப் பிரதிபந்தத்தின் நீக்கத்தில் ஒருகால நியமமுமில்லை. அவ்வாமதேவரது விருத்தாந்தம் ஆத்மபுராணத்தின் முதல் அத்தியாயத்தில் விரிவாய்க் கூறப்பட்டுளது. முன்னே பிராரப்தசேஷம், பிரஹ்மலோகஇச்சை என்னும் இருவகைப்பாவிப் பிரதிபந்தங்கள் கூறப்பட்டன. அவற்றுள் பிராரப்தசேஷமாகிய முதற்பிரதிபந்தம் இதுகாறும் நிரூபிக்கப்பட்டது. இனி பிரஹ்மலோக இச்சையாகிய இரண்டாவது பாவிப் பிரதிபந்தம் கூறப்படுகின்றது. எப்புருஷனுக்கு மனத்தின்கண் பிரஹ்மலோகத்தை யடைய இச்சை யிருக்கின்றதோ, அப்புருஷன் சிரவணுதிகளைச் செயினும் ஆத்மஞானத்தை அடைகின்றதில்லை. ஆதலால் அந்தப்பிரஹ்மலோக இச்சையும் ஆத்மஞானத்தின் உற்பத்தியில் பாவிப் பிரதிபந்தமா யிருக்

கின்றது. இவ்வார்த்தை ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகளும் கூறி யிருக்கின்றனர். ஆண்டுச் சுலோகம் ബ്രഹ്മലോകാഭിവാഞ്ഛായാം സമ്യക് സത്യാം നിരുധ്യ താം। വിചാരയേദ്യ ആത്മാനം ന തു സാക്ഷാത്കരോത്യയം (இ-ள்) எவனுக்குப் பிரஹ்மலோகத்தையடைய மிகவும் உற்கட இச்சை யிருக்கின்றதோ, அவன் அவ்விச்சையைத் தடுத்துச் சிரவணாதிகளைச் செய்யினும் அவனுக்கு ஆத்ம சாட்சாத்காரம் உண்டாகாது.

சங்கை:—உபாசகர்கள் எந்தப் பிரஹ்மலோகத்திற்குச் செல்லுவாரோ, அந்தப் பிரஹ்மலோகத்தை யடைவதற்குச் சாதனமாகிய உபாசனையை அப்புருஷன் செய்யவில்லை. இச்சையாகிய பிரதிபந்தத்தின் வசத்தால் அவனாற் செய்யப்பட்ட சிரவணாதிகளாலும் அவனுக்கு ஆத்மஞானமும் உண்டாகவில்லை. ஆதலால் அவன் இருவித பலன்களினும் பிரஷ்டனாகிக் கீழ்விழுதலையே யடைகின்றான்.

சமாதானம்:—அப்புருஷன் மரணத்திற்குப் பின்னர், அச்சிரவணாதிகளின் பிரபாவத்தால் பிரஹ்மலோகத்தையடைந்து, ஆண்டு நிர்க்குண பிரஹ்மத்தை 'அஹம்பிரஹ்மாஸ்மி' என்று சாட்சாத்கரிக்கின்றான். அச்சாட்சாத்காரத்தால் ஆண்டு விதேக கைவல்ய மோட்சத்தை யடைகின்றான். இவ்வார்த்தை சுருதியிலும் கூறப்பட்டுளது. சுருதி. വേദാന്തവിജ്ഞാനസുനിശ്ചിതാർഥാഃ സംന്യാസയോഗാദ്യതയഃ ശുദ്ധസത്ത്വാഃ തേ ബ്രഹ്മലോകേഷു പരാന്തകാലേ പരാമൃതാത് പരിമുച്യന്തി സർവേ (இ-ள்) வேதாந்த சிரவண ஜன்னிய ஞானத்தால் அத்துவிதிய பிரஹ்மமாகிய அர்த்தத்தைத் திடமாக நிச்சயித்தவராயும், சுருதி ஸ்மிருதிகட்கு விகிதமான சர்வ கர்மங்களின் தியாக பூர்வகம் ஞானப்பியாசமாகிய யோகத்தாற் றூய்மையான அந்தக்கரணமுடையவராயுமுள்ள துறவிகள், யாதாமோர் பிரதிபந்தத்தின் வசத்தால் ஈண்டுப் பிரஹ்மசாட்சாத்காரத்தை யடைந்தவரல்லராயினும், அச்சிரவணாதிகளின் பிரபாவத்தால் பிரஹ்ம லோகத்திற்குச்சென்று, ஆண்டு நிர்க்குண பிரஹ்மத்தைச் சாட்சாத்கரித்து, அவ்வுலகிற்கு அதிபதியாகிய ஹிரண்யகர்ப்பனது முடிவில் அத்துறவிகள் தமக்கு உண்டான பிரஹ்ம சாட்சாத்காரத்தால் விதேக கைவல்யமான மோட்சத்தை அடைகின்றார்கள். இவ்வர்த்தத்தினையே ബ്രഹ്മണാ സഹ തേ സർവേ സംപ്രാപ്തേ പ്രതിസഞ്ചരേ। പരസ്യാന്തേ കൃതാത്മാനഃ പ്രവിശന്തി പരം പദം (அவர்கள் அனைவரும் பிரஹ்மாவுடன் பிரளயமுடிவில் மேன்மையான பதவியில் பிரவேசிக்கின்றார்கள்) என்னும் ஸ்மிருதியும் கூறுகின்றது. அன்றியும் இவ்வர்த்தத்தினையே നഹി കല്യാണകൃത് കശ്ചിത് ദുർഗതിം താത ഗച്ഛതി (குழந்தாய்! நற்காரியஞ் செய்பவன் கெட்டவழியை அடையமாட்டான்) என்னும் வசனத்தால் ஸ்ரீபகவான் கீதையிலும் கூறியிருக்கின்றனர். ஆதல்பற்றி அப்புருஷனுக்கு அச்சிரவணாதிகள் நிஷ்பலமன்று. ஆனால் அவைகள் பிரஹ்மலோக பிராப்தி வாயிலாக ஆத்மஞானத்தை உற்பத்திசெய்து மோட்சத்திற்கே சாதனமாகின்றன.

இனி வர்த்தமான பிரதிபந்தத்தின் நிரூபணம். அவ்வர்த்தமான பிரதிபந்தம் விஷயாசக்தி, புத்திமந்தத்துவம், குதர்க்கம், விபர்யய துராக்கிரகம் என்னும் பேதத்தால் நான்குவிதம். சப்த ஸ்பரிசமுதலிய விஷயங்களிலுள்ள ஆசை விஷயாசக்தி எனப்படும். சிரவணஞ்செய்த அர்த்தத்தைக் கொள்ளுவதிலும் உள்ளத்தமைத்தலிலும் புத்தி வலிமையில்லாமை புத்திமந்தத்துவ மெனப்படும். சுருதிக்கு விரோதியான தர்க்கம் குதர்க்கமெனப்படும். வாஸ்தவத்தில் அகர்த்தா அபோக்தாவாகிய ஆத்மாவில் கர்த்தா போக்தாவின் துராக்கிரகம் அதாவது ஆத்மா கர்த்தா போக்தாவே என்னும் அபிமானம் விபர்யய துராக்கிரக மெனப்படும். இந்நான்கு பிரதிபந்தங்களில் ஏதாவதொன்றிருந்து புருஷன் சிரவணாதிகளைச்செய்தாலும் அவனுக்குஆத்மசாட்சாத்காரம் உண்டாகாது. ஆதலால் அந்நான்கும் ஆத்மஞானத்திற்கு வர்த்தமான பிரதிபந்த மெனப்படும். இப்பிரதிபந்தங்கள் எப்போது நீங்குகின்றனவோ அப்போதே புருஷனுக்கு அச்சிரவணாதிகளால் ஆத்மஞானம் உண்டாகின்றது. ஆதலால் இனி அந்நான்கு பிரதிபந்தங்களை நீக்கும் உபாயங்கள் சொல்லப்படுகின்றன. சமதமாதிகளினால் விஷயாசக்தியாகிய பிரதிபந்தம் நீங்குகின்றது. வேதாந்த சிரவணத்தால் புத்தி மந்தத் தன்மையாகிய பிரதிபந்தம் நீங்குகின்றது. மனனத்தால் குதர்க்கமாகிய பிரதிபந்தம் நீங்குகின்றது. நிதித்தியாசனத்தால் விபர்யயதுராக்கிரமாகிய பிரதிபந்தம் நீங்குகின்றது. இவ்வெல்லாப் பொருள்களையும் ஸ்ரீவித்தியாரண்ய சுவாமியானவர் ப்ரதிபந்தோ வர்த்தமாநோ விஷயாஸக்திலக்ஷண꞉। ப்ரஜ்ஞாமாந்த்யம் குதர்கஶ்ச விபர்யயதுராக்ரஹ꞉॥ ஶமாத்யை꞉ ஶ்ரவணாத்யைஶ்ச தத்ர தத்ரோசிதை꞉ க்ஷயம் நீதே(அ)ஸ்மிந் ப்ரதிபந்தே(அ)த꞉ ஸ்வஸ்ய ப்ரஹ்மத்வமஶ்நுதே (ஞானத்திற்கு நிகழ்காலத்தைய பிரதிபந்தங்களாவன:— விஷயத்தில் விருப்பமும், ஞானமறதியும், குதர்க்கமும், விபரீதத்திற் பிடிவாதமுமாம். இப்பிரதிபந்தங்களைச் சமதமாதிகளாலும் சிரவணாதிகளாலும் தொலைக்கவேண்டியது, ஆகவே பிரஹ்மத்தை அடைகின்ருன்.) என்னும் இரண்டு சுலோகங்களாற் கூறி யிருக்கின்றனர். சிரவணம் மனனம் நிதித்யாசனம் என்னுமிம்மூன்றும் முன் இரண்டாவது பரிச்சேதத்திற் கூறப்பட்டுள்ளன. அவைகளை ஈண்டு மறிக.

## சமதமாதிகளின் சொரூபங் கூறுதல்.

சமம், தமம், உபரதி, திதிட்சை, சிரத்தை, சமாதானம் என்பன சமாதிஷட்க சம்பத்தி எனப்படும். எங்ஙனம் சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்னும் மூன்றும் முற்கூறிய பிரதிபந்தத்தின் நிவிர்த்தி வாயிலாக ஆத்மஞானத்தின் உற்பத்தியில் அந்தரங்க சாதனங்களாமோ, அங்ஙனமே சமாதி ஷட்க சம்பத்தியும் பிரதிபந்த நிவிர்த்தி வாயிலாக அந்தரங்க சாதனங்களேயாகின்றன. ஆந்தரமனத்திலுள்ள விஷயசிந்தனத்தின் நிக்கிரகம் சமமெனப்படும். சுரோத்திரமுதலிய இந்திரியங்களைச் சப்தாதி விஷயங்களினின்றும் நிக்கிரகம் தமமெனப்படும். விதிபூர்வகமாய்ச் சர்வகர்மங்களையும் விடுதல் உபரதி எனப்படும். சீதம் உஷ்ணம், சுகம் துக்கம், மானம் அவமானம், நிந்தை துதி, என்பன முதலிய துவந்துவ தருமங்களைப் பொறுத்தல் திதிட்சை எனப்படும்.

குரு வேதாந்த வசனங்களிலுள்ள விசுவாசம் சிரத்தை எனப்படும். சிரவணாதிகளைச் செய்வதிலுள்ள சித்தத்தின் ஏகாக்கிரதைசமாதானமெனப்படும். ஆண்டு விஜாதிய விருத்திகளைத் தடுத்து லட்சிய வஸ்துவைக் கோசரிக்கும் சஜாதிய விருத்திகளின் பிரவாகமென்பதுவே அச்சித்த ஏகாக்கிரதையென வறிக. அன்றியும் இச்சமாதிஷட்க சம்பத்தை ஆத்மஞானத்தின் அந்தரங்க சாதனமென்று சுருதியும் கூறியுளது. சுருதி. ஶாந்தோ தாந்த உபரதிஸ்திதிக்ஷு: ஸமாஹிதோ ஶ்ரத்தாவிதோ பூத்வாத்மந்யேவாத்மாநம் பஶ்யதி (இ-ள்) சமம், தமம், உபரதி, திதிட்சை, சிரத்தை, சமாதானம் என்னும் ஆறு சம்பத்தியையுடையவன் தனது அந்தக்கரணத்தில் ஆத்மாவைச் சாட்சாத்கரிக்கின்றான். இவ்வர்த்தத்தினை ஸ்ரீவியாசபகவானும் ஶமதமாத்யுபேத: ஸ்யாத் (சமதமங்களுடன் கூடினவன் ஆவான்) என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களாற் கூறியிருக்கின்றனர். ஆதலால் சிரவணாதிகளைப் போன்று அச்சமாதிஷட்க சம்பத்தியில் ஆத்மஞானத்தின் அந்தரங்க சாதனத்தன்மை சம்பவிக்கின்றது.

இனி அவ்வாத்ம ஞானத்தின் பகிரங்க சாதனங்கள் நிரூபிக்கப்படுகின்றன. சுவர்க்கமுதலிய பயன்களின் இச்சையன்றியிற் செய்யப்பட்ட வேள்வி, தானம் முதலிய கர்மங்கள் அவ்வாத்ம ஞானத்திற்குப் பகிரங்கசாதனங்களாம். ஏனெனின், நிஷ்காமமாய்ச் செய்யப்பட்ட வேள்வி தானம் முதலிய கர்மங்களாற் புருஷனுக்கு அந்தக்கரண சுத்தியுண்டாகின்றது. அச்சுத்தவந்தக்கரணத்தில் ஆத்மஞான இச்சையாகிய விவிதிஷை உண்டாகின்றது. அவ்விவிதிஷையின் பின்னர், சிரவணாதிகளால் புருஷனுக்கு ஆத்ம சாட்சாத்காரமுண்டாகின்றது. இவ்வாறு தொடர்ச்சியாக அவ்வேள்வி தானம் முதலிய கர்மங்கட்கும் ஆத்ம ஞானத்தின் சாதனத்தன்மை யுண்டு. ஆதலால் அவ்வேள்வி தானாதிகள் ஆத்ம ஞானத்திற்குப் பகிரங்க சாதனங்களாகுமெனல் சம்பவிக்கின்றது. ஆண்டுச் சுருதி. தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸா நாஶகேந (இ-ள்) அதிகாரிகளான பிராஹ்மணர்கள் இவ்வாத்மாவை வேதாநுவசனத்தாலும், யஜ்ஞத்தாலும், தானத்தாலும், அநாசக தவத்தாலும் அறிய விருப்புகின்றார்கள். இச்சுருதியிலுள்ள வேதாநுவசனமென்னுஞ் சப்தத்தால் வேதமோதுவதைக் கிரகிக்க வேண்டும். யஜ்ஞசப்தத்தால் அக்கினிஹோத்திர முதலிய வேள்விகளைக் கிரகிக்கவேண்டும். தானசப்தத்தால் யஜ்ஞத்திற்கு வேறான தானத்தைக் கிரகிக்கவேண்டும். இதமுடையதாயும், மிதமாயும், பவித்திரமாயுமுள்ள அந்நத்தைப் புஜித்தல் தவமெனப்படும். இக்காரணத்தால், சுருதியில் அத்தவத்திற்கு அநாசகமென்னும் அடைமொழி கூறப்பட்டுளது. சரீரநாசத்திற்கு ஏதுவாகாத தவம் யாதோ அது அநாசகமெனப்படும்.

ஈண்டுச் சிலநூலாசிரியர்கள் தபஸா நாஶகேந 'அநாசகமானதவத்தால்' என்னும் சுருதி வசனத்தில் 'அநாசகமான' என்று பதத்தைப் பிரிக்காமல் நாசகமான என்று பதத்தைப் பிரித்து அவ்வசனத்திற்கு இப்பொருள் கூறுகின்றனர். சரீரக்கேட்டிற்கு ஏதுவான அனசன (ஊணற்ற) விரதமும் ஸ்ரீகங்

கை யமுனேகளின் சங்கமமாகிய பிரயாகையில், புத்தி பூர்வகமாய்ச் சரீரத்தை விடுவதும், சரீரத்தைக் குறைக்கச் செய்யும் கிருச்சிர சாந்திராயணுதி விரதங்களும் தவமெனப்படும். இக்காரணம் பற்றியே தவொ நாநஶநாதூஂ (உபவாசத்தினும் சிறந்த தவமில்லே) என்னுஞ்சுருதி அனசன விரதத்தை எல்லாத் தவங்களிலும் மேன்மையான தவமெனக் கூறியிருக்கின்றது. பிரயாகையில் புத்தி பூர்வகமாய்ச் சரீரத்தைத் தியாகஞ் செய்பவனுக்கு விவிதிஷை வாயிலாகப் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பிராப்தி சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களிற் கூறப்பட்டுளது. ஆதலால், அச்சுருதியினுள்ள தவமென்னும் சப்தத்தால் அனசனமுதலியவான தவத்தையே கிரகித்தல் வேண்டும்.

ஈண்டுச் சில நூலாசிரியர்கள் இங்ஙனங் கூறுகின்றனர். பிரயாகை முதலியவைகளில் புத்தி பூர்வகமான மரணம் சாத்திரங்களிற் கூறியதுண்மையே. ஆனல் இக்கலியுகத்திற்கு வேருன திரேதாதியுகங்களில் அம்மரணங் கூறப்பட்டது. இக்கலியுகத்திலோ அந்தப் புத்தி பூர்வகமான மரணம் சர்வப்பிரகாரங்களானுந் தள்ளப்பட்டதேயாம். மரணத்தை விதித்துள்ள அவ்வசனங்களுக்கு யுகபேதங்களின் வேற்றுமை கூருவிடினும் அவ்வசனங்கள் பிராஹ்மண க்ஷத்திரிய வைசியரென்னும் மூன்று வருணங்கட்கு வேருன சூத்திராதிகளின் மரணத்தை விதித்துளது. மூவருணங்களேயுடையவர்களது மரணத்தை விதிக்கவில்லே. இக்காரணம் பற்றியே தர்மசாஸ்திரத்தில் பிராஹ்மணர் முதலியோருக்கு மரணவிறுதியிற் செய்வதான பிராயச்சித்தம் விலக்கப்பட்டிருக்கின்றது. மேற்காட்டிய சுருதியிற் கூறியுள்ள வேதாத்தியயனம், வேள்வி, தானம், தவமாகிய கர்மங்கள் யாவுங் கூடி, அவ்விவிதிஷைக்குச் சாதனமாகின்றதென்று சிலர் அங்கீகரித்திருக்கின்றனர். மற்றுஞ் சில நூலாசிரியரோ விகற்பப்படுத்தி வேள்வியாதி கர்மங்களே அவ்விவிதிஷைக்கு ஏதுவென ஒப்பியுள்ளார். அஃதாவது வேதாத்தியயனமாகிய கர்மத்தாலும் வேள்வி கொடை முதலியவான கர்மங்களாலும், அவ்விவிதிஷை யுண்டாகின்றது என்பதாம்.

சங்கை:—முற்கூறிய வேள்விதானுதி கர்மங்கட்கு நேராகவே முக்தியின் சாதனத்தன்மை சம்பவிக்கின்றது. ஆதலால் அக்கர்மங்களே விவிதிஷைக்கு ஏதுவெனக் கூறுதல் அசங்கதம்.

சமாதானம்:—அவித்தையின் நிவிர்த்தி அல்லது பிரஹ்மபாவத்தின் பிராப்தி முக்தி எனப்படும். அம்முக்தி கேவலம் ஆத்ம ஞானத்தினுனே சம்பவிக்கின்றது; கர்மத்தால் அம்முக்தி சம்பவியாது. ஏனெனின், இரஜத பிரமத்திற்குக் காரணமாகிய சுக்தியினது அஞ்ஞானத்தின் நிவிர்த்தி அச்சுக்தியாகிய அதிஷ்டானத்தின் சாட்சாத்காரத்தினுனே யுண்டாகின்றது; வேறெவ்வுபாயத்தானும் உண்டாகாது. பிரஹ்மாத்மபாவமாகிய மோட்சமோ அநாதியாகலின், அம்மோட்சமும் கர்மத்தாற் சாத்தியமென்பது சம்பவியாது. இவ்வார்த்தை வேறு சாஸ்திரங்களிலுங் கூறப்பட்டுளது சுலோகம். ஜ்ஞாநேந வ்யதீதஃ ஸம்ஸாரோ விவேகாநந்தமுக்திஹிஃ। ந ரஜ்ஜுரோபிதஃ ஸர்ப்பஃ கண்டா மோக்ஷாந்நிவர்த்ததே (இ - ள்) எங்ஙனம் இரச்சுவிற் பிராந்தியால் ஆரோபிக்கப்

பட்ட சர்ப்பம் அவ்விரச்சுவாகிய அதிஷ்டானத்தின் ஞானத்தினுனே நீங்குகின்றதன்றிக் கண்டாமணிகோஷம்,மந்திரம்முதலியவற்ருல் நீங்குவதில்லேயோ,அங்ஙனமே ஆத்மாவின்கண் பிராந்தியால் ஆரோபிக்கப்பட்ட சம்சாரம் அவ்வதிஷ்டான ஆத்மாவின் சாட்சாத்காரமாகிய விவேகத்தினுனே நிவிர்த்தியாகின்றது; கர்மங்களால் அச்சம்சாரம் நிவிர்த்தியாகாது. அன்றியும் நகூடீணா நவுஜயா நயநெந த்யாமெ நெகெz ஶ்ருதகவ ஊநஶ: । நாஹ்ய க்ருத: க்ருதெந (கர்மத்தாலாவது சந்தானத்தாலாவது தனத்தாலாவது வீடு பெற மாட்டார், இவற்றின் தியாகத்தானேயே பெறுவார். சித்தமாயிருப்பது கர்மத்தால் நிகழ்வதில்லே) இது முதலிய சுருதிகளால் கர்மங்கட்குச் சாட்சாத்தாக மோட்சத்தின் சாதனத்தன்மை நிஷேதிக்கப்பட்டுளது. அன்றியும் ஜூாநாதெவது கெவஜ்ய‌ம் । நாந்ய: வஂயா விஜ்யதெ ட யநாய (ஞானமொன்றினுனேயே மோட்சம்.இதைவிட வேறு மார்க்கமில்லே.)என்றற்ருெடக்கத்துச்சுருதிகள் ஆத்மஞானத்தையே சாட்சாத்தாக மோட்சத்திற்குச் சாதனமெனக் கூறியுள்ளன. இக்காரணத்தானும் அக்கர்மங்கள் மோட்சத்திற்கு நேர் சாதனமெனல் பொருந்தாது. ஆனுல், முற்கூறிய முறைப்படி அக்கர்மங்கள் அந்தக்கரண சுத்திவாயிலாக விவிதிஷைக்கு ஏதுவாகுமென்பதே பொருந்தும்.

சங்கை:—முற்கூறிய சுருதியிற் கூறப்பட்ட வேள்வியாதி கர்மங்கள் அவ்விவிதிஷைக்கு ஏதுவாயின் ஆகுக. ஆயினும் அக்கர்மங்கள் நித்தியம், நைமித்திகம், காமியம், பிராயச்சித்தம் என்னும் பேதத்தால் நான்குவிதம். அந்நால்வகைப்பட்ட வேள்வியாதி கர்மங்கள் அவ்விவிதிஷைக்கு ஏதுவாகின்றனவா? அல்லது, நித்திய கர்மமாத்திரமே அவ்விவிதிஷைக்கு ஏதுவாகின்றதா?

சமாதானம்:—சில நூலாசிரியர்கள் இங்ஙனங் கூறுகின்றனர். மேற்கூறிய சுருதி விவிதிஷைக்கு ஏதுவாக வேள்வி தானுதிகர்மங்களே மாத்திரங் கூறினதேயன்றி அக்கர்மங்களுள் நித்தியம் அல்லது நைமித்திக முதலியவைகளே அது கூறவில்லே. ஆதலால் பலேச்சையின்றிச் செய்யப்பட்ட நித்தியம், நைமித்திகம், காமியம், பிராயச்சித்தமாகிய வெல்லாக் கர்மங்களும் அந்தக்கரணசுத்தி வாயிலாக அவ்விவிதிஷைக்கு ஏதுக்களாகின்றன. சகுண பிரஹ்மோபாசனேயோ சித்தத்தின் ஏகாக்கிரகத் தன்மைக்கு ஏதுவாம்.

ஆசாரியரோ இங்ஙனங் கூறுகின்றனர். காம்யாநாஂ கூடீணாஂ ந்யாஸஂ ஸஂந்யாஸஂகவயொ விது: (காமியகர்மங்களே விடுதலே சந்நியாசமென மேலோர்கள் அறிகின்ருர்கள்)என்பது முதலிய ஸ்மிருதிகள் காமியாகர்மங்களின் அநுஷ்டானத்தை நிஷேதித்து, பலேச்சையின்றியே அக்நிஹோத்ர முதலிய நித்திய கர்மங்களின் அநுஷ்டானத்தை விதித்துள்ளன. ஆதலால் முற்கூறிய சுருதியானும் நிஷ்காமமாய்ச் செய்யப்பட்ட அக்நிஹோத்ர முதலிய நித்திய கர்மமே அவ்விவிதிஷைக்கு ஏதுவாக விதிக்கப்படுகின்றது. நைமித்திகம், காமியம், பிராயச்சித்தமாகிய கர்மங்கள் விதிக்கப்படவில்லே.

வேள்வியாதி கர்மங்கட்கு ஆத்மஞானத்தின் பகிரங்க சாதனத்தன்மை ஸ்ரீவியாச பகவானும் பிரஹ்ம சூத்திரத்திற் கூறியிருக்கின்றனர். சூத்திரம்.

ஸவடூா வெக்ஷாவ யஜாதி ஶ்ருதெ ரஶ்வவகூ (இ-ள்)பிரஹ்மவித்தைக்குத் தனது உற்பத்தியில் வேள்விதாளுதி சர்வ கர்மங்களின் அபேட்சையுளது. ஏனெனின்,முற்கூறிய சுருதி பிரஹ்மவித்தையின் உற்பத்தியில் அவ்வேள்வியாதி கர்மங்களைச் சாதனமெனக் கூறியுளது. ஆனுல், பிரஹ்மவித்தையானது மோட்சமாகிய பலோற்பத்தியில் வேள்வியாதி கர்மங்களை அபேட்சிக்கவில்லை.ஏனெனின், மோட்சமாகிய பலத்தில் அக்கர்மங்கட்குத் தகுதியின்று. எப்பதார்த்தத்திற்கு யாண்டு தகுதி யிருக்கின்றதோ, அப்பதார்த்தத்திற்கே ஆண்டு அபேட்சையுண்டு. அசுவத்திற்குக் கயிற்றை யிழுப்பதில் தகுதியில்லை; ஆனுல் இரதத்தை யிழுப்பதிலேயே தகுதியுண்டு. ஆதலால் அவ்வசுவம் எங்ஙனம் இரதத்திலேயே பூட்டப்படுகின்றதன்றி அக்கயிற்றிற் பூட்டப்படுவ தின்றே, அங்ஙனமே வேள்வியாதி கர்மங்கட்கும் மோட்சத்தின் உற்பத்தியைச் செய்யத் தகுதியின்று;ஆனுல் சித்தசுத்தி வாயிலாக விவிதிஷையை உண்டாக்கி, பிரஹ்ம வித்தையை உற்பத்தி செய்வதிலேயே தகுதி யுண்டு. இதனுல் அவ்வேள்விமுதலிய கர்மங்களை ஆத்மஞானத்திற்குப் பகிரங்கசாதனமெனல் பொருந்தும்.

இவ்வாறு அந்தரங்க பகிரங்கசாதனங்களால் சர்வப் பிரதிபந்தங்களின்றிய புருஷனது, மனன நிதித்தியாசனங்களாற் சம்ஸ்காரமடைந்த எச்சித்தமாகிய தர்ப்பணமுண்டோ, அச்சுத்த சித்தத்துடன் கூடி விசாரிக்கப்பட்ட தத்துவமசி மகாவாக்கியத்தினின்றும் உண்டான அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் தடையற்ற ஆத்ம சாட்சாத்காரத்தால் அதிகாரிக்கு அஞ்ஞானம் நாசமாய் விடுகின்றது. மேலும் முன் அநேக ஜன்மங்களிற் சம்பாதிக்கப்பட்ட புண்ணிய பாபமாகிய சஞ்சித கர்மமும் அவ்வாத்ம ஞானத்தால் நாசமாய் விடுகின்றது. அவ்வாத்ம ஞானத்திற்குப் பிறகு செய்யப்பட்ட ஆகாமி கர்மங்களோ அவ்வாத்மஞானத்தின் பிரபாவத்தால் இவ்வித்வானைப் பரிசிக்கவே மாட்டா. பிராரப்த கர்மப்படி கிடைத்த அந்நபானுதி விஷயங்களை அநுபவித்தவனுய் வித்வான் அகண்ட ஏகரச சச்சிதானந்த பிரஹ்மாத்ம வடிவமாக நிலைக்கின்ருன். ஆத்மஞானத்திற்கு மோட்சமாகிய பயன் இதுவேயாம்.

## ஞானியின் விஷயாநுபவத்திற் சங்கை சமாதானங்கள்.

சங்கை:—ஆத்மஞானத்தால் அஞ்ஞானம் நீங்கிய பின்னர், வித்வானுக்கு விஷயங்களின் அநுபவம் உண்டெடன நீவிர் கூறியது சம்பவியாது. ஏனெனின், அவ்விஷயாநுபவத்திற்குக் காரணமான தேகாபிமானம் அவ்வித்வானிடத்து இல்லை. தேகாபிமானமன்றியே பிராரப்த கர்மத்தின் வயத்தால் வித்வானுக்கு அவ்விஷயாநுபவம் சம்பவிக்குமெனின், அது பொருந்தாது. ஏனெனின், உலகத்தில் அத்தேகாபிமானமே உடன்பாட்டானும் எதிர்மறையானும் அவ்விஷயாநுபவத்தின் காரணமென்பது பெறப்படுகின்றது. ஜாக்கிர சொப்பனங்களில் அத்தேகாபிமான மிருப்பதனுல் விஷயாநுபவம் உண்டாகின்றது. சுழுப்தியவஸ்தையில் அத்தேகாபிமான மின்மையால் அவ்விஷயாநுபவம் உண்டாகின்றதில்லை. இவ்வாருகிய உடன்பாடு எதிர்மறைகளால் அத்தேகாபிமானமே விஷயாநுபவத்திற்குக் காரணமென்பது பெறப்படுகின்றது. தேகாபிமானமில்லையாகக் கேவலம் பிரார்ப்த கர்மவயத்தால் ஞானவானுக்கு விஷயாநுபூ

வம் சம்பவியாது. தாற்பரியமிஃதாம்:—பிராரப்த கர்மம் விஷயாநுபவத்திற்கு அதிருஷ்ட காரணமும், தேகாபிமானம் அவ்விஷயாநுபவத்திற்குத் திருஷ்ட காரணமுமாம். அதிருஷ்டகாரண சாமக்கிரி திருஷ்டகாரண சாமக்கிரியன்றி ஓர் காரியத்தையும் உற்பத்திசெய்ய வல்லதன்று. உற்பத்தி செய்வதாயின் மண், குலாலன் முதலிய திருஷ்ட சாமக்கிரியன்றியே அதிருஷ்ட சாமக்கிரியால் கடமுதலிய காரியங்கள் உண்டாதல் வேண்டும். ஆதலால் அத்தேகாபிமான மில்லையாகுங்கால் ஞானவானுக்குக் கேவல பிராரப்த கர்மத்தால் அவ்விஷயாநுபவம் சம்பவியாது.

அன்றியும், அத்தேகாபிமான மின்றியே ஞானவானுக்கு விஷயாநுபவ முதலிய வியவகாரங்கள் நிகழுமெனின், ஸ்ரீபாஷியக்காரர் 𑌤𑌮𑍇𑌤𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌰𑌿𑌤𑌰𑍇𑌤𑌰𑌾𑌧𑍍𑌯𑌾𑌸𑌂 𑌪𑌰𑍁𑌸𑍍𑌕𑍃𑌤𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣 𑌪𑍍𑌰𑌮𑍇𑌯 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌾 𑌲𑍌𑌕𑌿𑌕𑌾 𑌵𑍈𑌦𑌿𑌕𑌾𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌃 (அந்த இந்த அவித்தை என்னும் ஆன்ம அநான்மாக்களுக்கு ஒன்றுக்கொன்று அத்தியாசமாயிருக்கு மிதையே மூலமாய்க்கொண்டு எல்லாப் பிரமாண பிரமேயங்களான இலௌகிக வைதிகங்கள் வந்தன) என்னும் வசனத்தால் சர்வ லௌகிக வைதிக வியவகாரங்களின் பிரவிருத்தி அத்தியாச பூர்வகமென்று கூறியிருக்கின்றனர். இப் பாஷிய வசனத்திற்கும் விரோதமுண்டாகும். அன்றியும், 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌃 𑌅𑌧𑍍𑌯𑌾𑌸𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌃 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 (வியவகாரம் அத்தியாச பூர்வகம், வியவகாரத் தன்மையால்) என்னும் அநுமானத்தால் சர்வ வியவகாரங்களிலும் அத்தியாச பூர்வகத்தன்மை துணியப்பட்டது. இவ்வநுமானமும் பிறழ்ச்சியுடைய தேயாகும். எக்காரணத்தாலெனின், ஞானவானது வியவகாரத்தில் வியவகாரத் தன்மையாகிய ஏது உளதாயினும், அவ்வத்தியாச பூர்வகத் தன்மையாகிய சாத்தியமில்லை.

ஞானியினிடத்தும் பாதிதாநுவிருத்தியால் அத்தேகாபிமானம் இருக்கின்றதாகலின் ஞானியினது வியவகாரத்தில் அத்தியாச பூர்வகத்தன்மையாகிய சாத்தியம் இருக்க வியவகாரத்தன்மையாகிய ஏது பிறழ்ச்சியுடையதாகாது, மேலும் அப்பாஷிய வசனத்திற்கும் விரோதமுண்டாகாதெனக் கூறின்; நுமது கூற்றும் சம்பவியாது. ஏனெனின், சுக்தியின் சாட்சாத்காரத்தால் அச்சுக்தி அஞ்ஞானத்தின் நிவிர்த்தியோடு இரஜதபிரமம் நிவிர்த்தியாக மீண்டும் எங்ஙனம் அவ்விரஜத பிரமத்தின் அநுவிர்த்திகாணப்படுவதின்றோ, அங்ஙனமே ஆத்ம சாட்சாத்காரத்தால் அஞ்ஞான நிவிர்த்தியோடு தேகாபிமானமும் நிவிர்த்தியாக, மீண்டும் அத்தேகாபிமானத்தின் அநுவிருத்தியைக் கூறுதல் முற்றும் விருத்தம். ஓர்கால் ஆத்மஞானத்தால் பாதிக்கப்பட்ட தேகாபிமானத்திற்கும் மீண்டும் அநுவிருத்தியை யங்கீகரிக்கின்; சுக்திஞானத்தாற் பாதிக்கப்பட்ட இரஜத பிரமத்திற்கும் மீண்டும் அநுவிருத்தி யுண்டாதல் வேண்டும்.

எங்ஙனம் சோபாதிக பிரமஸ்தலத்தில் 𑌶𑍁𑌕𑍍𑌲𑌃 𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌃 (படிகம் வெண்மை) என்னும் அதிஷ்டானத்தின் சாட்சாத்கார மிருக்கினும், ஜபாகுசும முதலிய உபாதிகளின் சமீபத்தால் 𑌲𑍋𑌹𑌿𑌤𑌃 𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌃 (படிகம் செம்மை) என்

னும் அநுபவம் யாவருக்கும் பிரசித்தமாமோ, அங்ஙனமே ஈண்டும் அதிஷ்டான ஆத்மாவின் சாட்சாத்காரத்தால் அஞ்ஞானம் நீங்கிடினும் உபாதியுள்ளவரைக் கும் ஞானிக்கு அத்தேகாபிமானமும், அத்தேகாபிமான பூர்வகமாம் விஷயா நுபவமும் சம்பவிக்குமென்று கூறின்; அக்கூற்றும் அசங்கதம். ஏனெனின், ஜபாகுசுமத்தைப்போன்று ஈண்டு ஓர் உபாதியையுஞ் சொல்ல முடியாது. தாற் பரியமிதுவாம்:—அஞ்ஞானத்திற்காவது அதன் காரியத்திற்காவது உபாதி கூறுதல் வேண்டும். அவ்விரண்டும் ஆத்மஞானத்தால் நீங்கிவிட்டன. ஆத்ம ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கிவிட அவ்வஞ்ஞான காரியமும் நீங்கிவிட்டமை யால் ஞானிக்குப் பிராரப்த கர்மத்தின் வயத்தால் விஷயங்களின் அநுபவத் தைக் கூறுதல் முற்றும் அசங்கதம்.

சமாதானம்:—'அஹம்பிரஹ்மாஸ்மி' என்னும் ஆத்மஞானத்தால் அஞ் ஞானம் நீங்கிவிட்ட ஞானிக்கும் பிராரப்த கர்மவயத்தால் அவ்விஷயாநுபவம் சம்பவிக்கும். அவ்விஷயாநுபவத்திற்குக் காரணமான தேகாபிமானமும் ஞா னியினிடத்துப் பாதிதாநுவிருத்தியால் நிகழ்கின்றது.

சங்கை:—தேகாபிமானத்திற்குக் காரணமான அஞ்ஞானம் ஆத்மஞானத் தால் நிவிர்த்தியாய் விட்டது. உபாதானகாரணம் நாசமானபிறகு காரியத் தின் அநுவிருத்தியை (பின்தோற்றுதல்) எங்குங் கண்டிலம். ஆகலின் ஞானி யினிடத்துத் தேகாபிமானத்தைக் கூறுதல் அசங்கதம்.

சமாதானம்:—உபாதானகாரணம் கெடினும் காரியத்தின் அநுவிருத்தி நிகழக் கண்டிருக்கின்றோம். எங்ஙனம் நையாயிகர்களது மதத்தில் தந்து முத லிய உபாதான காரணங்களின் நாசத்திற்குப் பிறகு ஓர் கணங்காறும் படமுத லிய காரியங்களின் அநுவிருத்தியை யங்கிகரித்திருக்கின்றனரோ, அங்ஙனம் சித்தாந்தத்திலும் அஞ்ஞானமாகிய உபாதானகாரண மழிந்த பின்னர், தேகாபி மான முதலியவான காரியத்தின் அநுவிருத்தி சம்பவிக்கின்றது.

சங்கை:—நையாயிக சித்தாந்தமோ சுருதி ஸ்மிருதியாதிய பிரமாணங்க ளில்லாதது. அந்தச் சித்தாந்தத்தை நீவிர் அங்கிகரிக்கின் உமது சித்தாந்தத் திற்கும் அப்பிரமாணத்தன்மை யடையப்படும்.

சமாதானம்:—அஞ்ஞான நிவிர்த்தியின் பின்னரும் ஞானியினிடத்துப் பாதி தாநுவிருத்தியால் தேகாபிமான முதலியவைகள் உள்ளன வென்னும் அர்த்தத் தைக் கேவலம் நையாயிக சித்தாந்த மாத்திரத்தினுற்றுனே யாம் துணியவில்லை; ஆனுல் எமது சித்தாந்தத்திற்குச் சாதகமாகிய சுருதி, ஸ்மிருதி, யுக்தி, அநு பவமுதலிய பல பிரமாணங்கள் உள்ளனவாகலின், நையாயிகர்களது மதத் தைப்போன்று எமது சித்தாந்தத்தில் அப்பிரமாணத்தன்மை அடையப்பட மாட்டாது.

சங்கை:—எப்பதார்த்தம் உபாதானகாரணத்தை நிவிர்த்திப்பிக்கின்றதோ, அப்பதார்த்தம் அதன் காரியத்தையும் நிவிர்த்திசெய்கின்றது. அக்கியானது நூலாகிய உபாதானகாரணத்தை நிவிர்த்திப்பதாய் அதன் ஆடையாகிய காரி யத்தையும் எப்படி நிவிர்த்தி செய்கின்றதோ, அப்படி ஆத்மஞானமும் அஞ்

ஞானமாகிய உபாதானகாரணத்தை நிவிர்த்திப்பதாய் அவ்வஞ்ஞானத்தின் கார்யத்தையும் அவசியம் நிவிர்த்தி செய்கின்றது. தேகாபிமானமும் அவ்வஞ்ஞானத்தின் கார்யமாகலின் அத்தேகாபிமானம் நிவிர்த்தியாக ஞானிக்கு விஷயாநுபவம் சம்பவியாது.

சமாதானம்—ஆத்மஞானம் அஞ்ஞானத்தையும் அதன் காரியத்தையும் நிவிர்த்தி செய்வதாயினும், வில்லினின்றும் விடப்பட்ட அம்புபோன்று தனது பயனை அளிப்பதிற்றலைப்பட்ட பிராரப்தகர்மம் ஞானத்தைவிடப் பிரபலமாகின்றது. ஆதலால் அந்தப் பிராரப்தமானது அஞ்ஞானத்தின் காரியத்தை நீக்குவதிற் பிரதிபந்தகமாகின்றது.

சங்கை—அந்தப் பிராரப்த கர்மம் ஆத்மஞானத்தைவிடப்பிரபலமென்றங்கீகரிக்கின்; பிரபல பிராரப்த கர்மமாகிய பிரதிபந்த மிருக்குங்கால் அவ்வாத்மஞானத்தால் அஞ்ஞானமும் நிவிர்த்தியாதல் கூடாது.

சமாதானம்:—ஆத்மஞானத்தில் அஞ்ஞானத்தை நிவிர்த்திக்குந்தன்மை அம்சம் ஒன்று, அஞ்ஞான காரியத்தை நிவிர்த்திக்குந்தன்மை அம்சம் பிறிதொன்று. அஞ்ஞானமன்றியிலும் ஞானிக்குப் பிராரப்த கர்மத்தின் பலபோகங்கூடும். ஆதலால் அவ்வாத்ம ஞானத்திலுள்ள அஞ்ஞானத்தை நிவிர்த்திக்குந்தன்மை அம்சத்திற்கு அந்தப்பிராரப்த கர்மம் பிரதிபந்தகமாகாது. அவ்வஞ்ஞான காரியமாகிய தேகேந்திரியாதிகளன்றிப் புருஷனுக்குப் பிராரப்த கர்மத்தின் போகம் சம்பவியாது. ஆதலால் ஆத்மஞானத்திலுள்ள அஞ்ஞான காரியத்தை நிவிர்த்திக்குந்தன்மை அம்சத்திற்கு அந்தப்பிராரப்தகர்மம் பிரதிபந்தகமாகின்றது. அஃதாவது பிராரப்த கர்மம் தனது பலத்தைத் தருதற்பொருட்டு அத்தேகேந்திரியாதிய கார்யத்தை நிவிர்த்தியாக விடுவதில்லை. ஆகவே ஆத்மஞானத்தால் அஞ்ஞானம் நீங்கிடினும், ஞானிக்குப் பாதிதாநு விருத்தியால் அத்தேகாபிமானமுளதாகப் பிராரப்த கர்மத்தாலடையப்பட்ட விஷயாநுபவம் நிகழும்.

இவ்வார்த்தை ஸ்ரீவியாசபகவானும் பிரஹ்ம சூத்திரத்திற் கூறியிருக்கின்றனர். சூத்திரம் ஹொமெந க்ஷிதரெக்ஷ வயிக்ஷா ஸംவஷ்யெதெ (இ-ள்) ஆத்மஞானத்தால் சஞ்சித கர்மங்கள் நாசமாகவும், ஆத்மஞானத்திற்குப் பிறகுசெய்யப்பட்ட ஆகாமி கர்மங்களின் ஸ்பர்சமில்லையாகவும், எஞ்சிநின்ற பிராரப்த கர்மங்கள் போகத்தால் நிவிர்த்தியாகவும், ஞானி நிர்விசேஷ பிரஹ்மத்தை அதாவது விதேக கைவல்யமோட்சத்தைப் பெறுகின்ருன். அன்றியும் இவ்வர்த்தத்தினையே ஸ்ரீவார்த்திகக்காரருங் கூறியிருக்கின்றனர். சுலோகம். ஶாஸ்ரயாஜ்ஞ ஸவ்லாவக்ஷாநுக்திஃ ஸ்யாத்தாவதா விதெ। ஶாமாஷயஃ ஸஞ்சகாமெ நதஜ்ஞ வொzவஶாயுதெ (இ-ள்.) வேதாந்த சாஸ்திரத்தின் அர்த்தமாகிய ஜீவப்பிரஹ்மத்தின் ஏகத்தன்மைச் சாட்சாத்காரத்தினுனே புருஷனுக்கு முக்தி பிராரப்தமாகின்றது. அப்படிப்பட்ட ஞானியினிடத்து இராகத் துவேஷமுதலியவைகள் பாதிதாநு விருத்தியால் இருக்குக; அவ்விராகத்துவேஷாதிக

ளிருந்தாலும் ஞானிக்கு முக்தியில் இறையளவும் ஹானியில்லை. அன்றியும் இவ் வர்த்தத்தினையே சர்வவேதாந்த இரகசிய முணர்ந்தவராகிய ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகளும் கூறியிருக்கின்றார். சுலோகம். [illegible] ॥ (இ-ள்) சைதன்யவாத்மாவை அகங் காராதிகட்கு வேறாகவும், அவ்வகங்காராதிகளைச் சைதன்னியவாத்மாவிற்கு வேறாகவும்எவன் அறிகின்றானோ, அந்தஞானி ஓர்கால் கோடி வஸ்துக்களை இச் சித்தவனாயினும், அத்தியாசமாகிய கிரந்தியைப் போழ்தலால் அவனுக்குச் சிறிது மாத்திரமும் ஹானியுண்டாகாது. அத்தியாசமாகிய கிரந்தி நீங்கிடினும் ஞானியினிடத்துப் பிராரப்த தோஷத்தால் இச்சை சம்பவிக்கின்றது. அகங் காராதிகளினும் ஆத்மாவை வேறாகவறிந்தும், நுமக்குப் பாபகர்மத்தின் பாகுள் யத்தால் (அதிகத்தால்) சந்தோஷமின்மை யுண்டாவதைப்போலும் என்க. இதனால் ஞானிக்கும் பிராரப்த கர்மத்தின் பயனை நுகரும் பொருட்டுப் பாதி தாநுவிருத்தியால் தேகாபிமானமும் இராகத்துவேஷ முதலியவைகளும் நிகழ் கின்றன.

சங்கை:—அவ்வித்தியாரணிய சுவாமிகள்முதலிய ஆசாரியர்களேசிலவிடத் தில் ஞானியினிடத்து இராகாதிகளின் நிஷேதமுங் கூறியிருக்கின்றனர். சுலோகம். [illegible] ॥ (இ-ள்.) இவனது சித்தத்தினிடத்துள்ள விஷயங்களின் இராகமே இவனது அஞ்ஞானத்தைக் காட்டுங் குறியாம். அதா வது அந்த இராகமாகிய இலிங்கத்தினனே இவனது அஞ்ஞானம் அநுமிக் கற்பாலதாம். மேலும் இவனிடத்துள்ள அபிமானமே அசுரபாவத்தை விளை விக்கின்றது. ஆதலால் வித்வானுக்கு அத்தியாத்ம அபிமானமும் உண்டாகாது. ஓர்கால் அவ்வபிமானத்தால் வித்வானிடத்தும் அவ்வசுரபாவம் உண்டாயிடின் பிரஹ்மசாட்சாத்காரமே நிஷ்பலனாகும். இவை முதலிய வசனங்களால் ஞானி யினிடத்து இராகாதிகளும், தேகாபிமானமும் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றன. ஆகலின் ஞானியினிடத்து இராக முதலியன சம்பவியா.

சமாதானம்:—முற்கூறிய வசனங்களால் ஆசாரியர்கள் ஞானவானிடத்து எந்த ராக முதலியவற்றை நிஷேதித்திருக்கின்றனரோ, அது திட அத்தியாச பூர்வகமான இராகமுதலியவற்றை நிஷேதித்திருக்கின்றனர். அஃதாவது அஞ் ஞானியினிடத்து ஆத்மா அஹங்கார முதலியவைகளின் திட அத்தியாச பூர் வகமாய் எப்படி இராகமுதலியவைகளுண்டாகின்றனவோ, அப்படி ஞானியி னிடத்துத் திட அத்தியாச பூர்வகமாய் அந்த இராக முதலியவைகள் உண் டாகா. ஓர்கால் இவ்வசனங்கட்கு அவ்வாறாய அபிப்பிராயத்தை அங்கீகரியா விடின், ஞானியினிடத்து இராகமுதலியவைகளைக் கூறுவனவாகிய முன் வச னங்களோடு இவ்வசனங்கட்கு முரணுண்டாகும். அன்றியும் [illegible]

மாநோऽபி ந ஸ பூ⁴யோऽபி⁴ஜாயதே (எவ்வாறு உள்ளவனாயினும் ஞானவான் மறுபடியும் பிறக்கமாட்டான்) என்னும் வசனத்தால் ஸ்ரீபகவான், எவ்வகையாயுள்ளவனாயினும் ஞானிக்கு ஜன்மாபாவத்தைக் கூறியிருக்கின்றனர். அப்பகவானது வசனத்திற்கும் விரோதம் பிராப்தமாகும். அதை நீக்குதற்கு அவ்விராக நிஷேத வசனங்கட்குத் திட அத்தியாச பூர்வகமான இராகாதிகளின் நிஷேதத்தின்கண்ணேயே தாற்பரியங்கோடல் வேண்டும்.

சங்கை:—ஞானியினிடத்து இராகாதிகளை நீவிர் அங்கீகரிக்கின்றபோது ஞானியினிடத்து யதேஷ்டாசரணமும் (இஷ்டப்படி நடத்தலும்) அங்கீகரிக்க வேண்டும். சாஸ்திர மரியாதையை உல்லங்கனஞ் செய்து நிஷித்த விஷயங்களிலொழுகுதல் யதேஷ்டாசரணமெனப்படும்.

சமாதானம்:—யாம்ஞானிக்கு யதேஷ்டாசரணம் அங்கீகரிப்பதில்லை. ஆனால் பிராரப்த கர்மத்தின் பலபோகத்திற்குஅநுகூலமான ஆபாசமாத்திரஇராகத்துவேஷாதிகளின் அநுவிருத்தியை யாம் ஞானவானிடத்து அங்கீகரிக்கின்றாம். ஆபாசமாத்திர இராகத் துவேஷாதிகளின் அநுவிருத்தி ஆத்மஞானத்திற்கு விரோதியாகாது. ஓர்கால் ஆபாசமாத்திர இராகத்துவேஷாதிகளின் அநுவிருத்தியும் அவ்வாத்ம ஞானத்திற்கு விரோதியாயின் ஒருவனுக்கும் அவ்வாத்ம ஞானம் உண்டாகலாகாது. இவ்வார்த்தை வேறு நூற்களிலுங் கூறப்பட்டுளது. சுலோகம். காதா³சித்கம் ராக³லேஶம் விநிவர்த்ய ஶக்நுவந் । யோ ப்³ரஹ்மநிஷ்டா²ம் ஸம்த்³வேஷ்டி ந ஜாத்வாத்மநிஶ்சய: (இ-ள்) சித்தத்தின்கண் ஓர்கால் உண்டான இலேசமாத்திர இராகத்தை நிவிர்த்தி செய்வதில் ஆற்றலற்றவனாய் எவன் பிரஹ்ம நிஷ்டையைத் துவேஷிக்கின்றானோ, அவனுக்கு எக்காலத்தும் ஆத்மாவின் நிச்சயமுண்டாகாது. ஆதலால், பிராரப்த கர்மமுடிவுவரையும் ஞானியினிடத்துத் தேகாபிமானமும் இராகத் துவேஷாதிகளும் பாதிதாநுவிருத்தியால் இருக்கின்றன வெனல் அமையும்.

சங்கை:—ஞானிக்குப் பாதிக்கப்பட்ட தேகாபிமானத்தின் அநுவிருத்தியுண்டெனின்; சுக்தி சாட்சாத்காரமுடையோனுக்குப் பாதிக்கப்பட்ட இரஜத பிரமமும் மீண்டு முண்டாதல் வேண்டும்.

சமாதானம்:—சுக்தியில் இரஜத பிரமம் நிருபாதிக பிரமமாகலின் சுக்தி ஞானத்திற்கு அவ்விரஜத பிரமத்தை நிவிர்த்தி செய்வதில் ஓர் பிரதிபந்தகமுமின்று. ஆதலால் அச்சுக்தி ஞானத்தால் நிவிர்த்தியாய்விட்ட இரஜத பிரமம் மீண்டும் உண்டாகாது. இத்தேகாபிமான முதலியவைகளோ சோபாதிக பிரமமாம். ஆண்டுப் பிராரப்தகர்மமே உபாதி வடிவமாம். ஆகவே ஆத்மஞானத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியாயினும் பிராரப்த கர்மமாகிய உபாதியுள்ளவரையும் ஞானியினிடத்துப் பாதிதாநுவிருத்தியால் அத்தேகாபிமான முதலியவைகள் நிகழக்கூடும்.

அல்லது இவ்வாறு கொள்க. ஆத்மஞானத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியாயினும் அஞ்ஞானத்தின் லேசமாத்திரம் அதாவது லேசாவித்தைஎஞ்சியுளது. அவ்வஞ்ஞானலேசத்தின் அநுவிருத்தியினானே ஞானிக்குப் பிராரப்தபோக

முண்டாகின்றது. இவ்வார்த்தை வேறு நூற்களிலும் கூறப்பட்டுளது. சுலோகம்
த்வைதஸ்ய ரக்ஷணாயாஸ்திலேஶ: க்லிஷ்டநேஷு ஸாநாஹோதி: வ்ராணஃ
(இ - ள்) ஆத்மஞானத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியானாலும் ஆபாசமாத்திர துவைதத்தை இரட்சித்தற் பொருட்டு அஞ்ஞானலேசம் எஞ்சியுளது. இப்பொருளில் தனது அநுபவமே பிரமாணமாம.

சங்கை:—ஆத்மஞானத்தால் நிவிர்த்தியாய்விட்ட அஞ்ஞானத்தின் இலேசம் எஞ்சியுளதென நீவிர் முற்கூறியவிடத்து, அவ்வஞ்ஞானலேசம் யாது? அஃதாவது அஞ்ஞானத்தின் ஓர் அவயவம் இலேசமா? அல்லது, அவ்வஞ்ஞானத்தின் சக்தி இலேசமா? முதற்பட்சம் சம்பவியாது. ஏனெனின், சித்தாந்தத்தில் அஞ்ஞானத்தை நிரவயவம், சாவயவமென்றங்கீகரிக்கப்படவில்லை; ஆனால் அவ்விரண்டிற்கும் விலட்சணமான அநிர்வசனீயமென்றங்கீகரிக்கப்பட்டுளது. அவ்வஞ்ஞானம் சாவயவமெனக் கொண்டு, அவ்வஞ்ஞானத்தின் அவயவத்தை இலேசமெனக் கொள்ளினும், ஆத்மஞானத்தால் அவ்வஞ்ஞானமாகிய அவயவம் நிவிர்த்தியான பின்னர், அவ்வவயவத்தின் அநுவிருத்தி பொருந்தாது. மேலும், அஞ்ஞானத்தின் சக்தி இலேசமாமென்னும் இரண்டாவது பட்சத்தை அங்கீகரிக்கின், அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், ஆத்மஞானத்தால் அச்சக்தியுடைய அஞ்ஞானம் நாசமான பின்னர், அவ்வஞ்ஞானமாகிய ஆசிரயமன்றி அச்சக்தியின் ஸ்திதியே சம்பவியாது. ஆகவே அஞ்ஞானலேசத்தின் அநுவிருத்தியால் ஞானிக்குப் பிராரப்த கர்மத்தின் போகம் நிகழுமெனல் பொருந்தாது.

சமாதானம்:—ஆத்மஞானத்தால் ஆவரண சக்தியும், தாதான்மிய அத்தியாசமுமாகிய விரண்டும் நீங்கிவிட்டன. ஆனால், விட்சேப சக்தியுடைய அஞ்ஞானம் அவ்வாத்ம ஞானத்தின் பின்னருமிருக்கின்றது. அவ்விட்சேப சக்தியுடைய அஞ்ஞானத்தையே லேசமென்பர். ஆவரண சக்திக்கு ஆத்ம ஞானத்தோடு விரோதமிருக்கின்றதைப் போன்று, அவ்விட்சேபசக்திக்கு ஆத்மஞானத்தோடு விரோதமின்று. ஆதலால் அவ்விட்சேப சக்தியுடைய அஞ்ஞானத்தின் அநுவிருத்தியால் ஞானிக்குப் பிராரப்த கர்மத்தின் போகம் நிகழ்கின்றது.

சங்கை:—அவ்விட்சேப சக்தியுடைய அஞ்ஞானத்தால் ஞானிக்கு எவ்வாறு பிராரப்த கர்மத்தின் போகம் பிராப்தமாகின்றதோ, அவ்வாறே ஜன்மாந்தரத்தின் பிராப்தியு முண்டாகுமே?

சமாதானம்:—ஞானியினது ஜன்மாந்தரத்தின் பிராப்திக்கு யாதொரு நிமித்தமுமில்லை. ஏனெனின், அவ்வஞ்ஞானம் தனது சொரூபத்தானே ஜன்மத்திற்கு ஏதுவாகாது. ஆனால், தர்மம் அதர்மமென்னும் இரண்டுமே ஜன்மத்திற்கு ஏதுக்களாகின்றன. அத்தர்மா தர்மமும் சஞ்சித வடிவமாகவே ஜன்மத்திற்கு ஏதுக்களாகின்றன. சஞ்சிதமான அத்தர்மா தர்மங்களின் ஸ்திதிக்கு ஏது, ஆவரண சக்தியுடைய அஞ்ஞானமாம். அவ்வஞ்ஞானம் ஆத்மஞானத்தால் நீங்கிவிடவே சஞ்சித கர்மமும் நாசமாய் விடுகின்றது. ஆத்மஞானத்தின் பின்னர் செய்யப்பட்ட ஆகாமி கர்மங்கள் ஞானியைப் பற்றமாட்டா. பிராரப்த

கர்மம் போகத்தால் நாசமாகின்றது. இவ்வாறு சரீரத்தை ஆரம்பிக்கும் காரண மின்மையால் ஞானிக்கு ஜன்மாந்தரப் பிராப்தி சம்பவியாது. ஆனால், எங்ஙனம் அக்நியால் வறுக்கப்பட்ட நெல் யவம் முதலிய விதைகள் திருப்திக்கு ஏதுவாயி னும் முளைக்க ஏதுவாவதின்றோ, அங்ஙனமே விட்சேபசக்தியுடைய அஞ்ஞா னம் ஞானிக்குப் பிராரப்த கர்மத்தின் பயன் நுகர்ச்சியில் உபயோகமுள்ள விஷயக்காட்சிக்கு ஏதுவாயினும், வேறு ஜன்மத்திற்கு ஏதுவாவதில்லை. ஆத்மஞானத்தால் அவ்வாவரண சக்தியுடைய அஞ்ஞானம் நீங்கியகாலத்தில், எந்தப்பிராரப்த கர்மத்தால் தனதுபலபோகத்தைத் தருதற்பொருட்டு விட் சேபசக்தியுடைய அஞ்ஞானலேசம் காக்கப்பட்டிருந்ததோ, அந்தப்பிராரப்தகர் மமாகிய பிரதிபந்தம் நிவிர்த்தியான பின்னர் அவ்வஞ்ஞானலேசம் தானே நிவி ர்த்தியாய் விடுகின்றது. அவ்வஞ்ஞானலேச நிவிர்த்தியின் பொருட்டு மீட்டும் ஆத்மஞானத்தின் அபேட்சை யுண்டாகாது. எக்காரணத்தாலெனின், அஞ் ஞான லேசத்தினது ஸ்திதிக்குக் காரணமாகிய ஆவரண சக்தியுடைய அஞ்ஞா னம் முன்னரே ஆத்மஞானத்தால் நிவிர்த்தியாய் விட்டது. ஆகவே ஆத்மஞா னத்தால் அஞ்ஞானம் நீங்கினும் முற்கூறிய அஞ்ஞான லேசத்தின் அநுவிரு த்தியால் ஞானிக்குப் பிராரப்த கர்மத்தின்போகம் சம்பவமாம்.

அல்லது, ஈண்டு இவ்வியவஸ்தையைக் கொள்ளுக:—ஆத்மாவின் ஆவரண மும், அகங்காராதிகளோடு ஆத்மாவின் தாதான்மிய அத்தியாசமுமாகிய விர ண்டும் கேவலம் அஞ்ஞானத்தினின்றே ஆக்கப்பட்டன. இக்காரணம் பற்றியே ஆத்மஞானோற்பத்தியால் அவை யிரண்டும் நாசமாய் விடுகின்றன. அதாவது நிருபாதிக பிரமவடிவமேயாதலின் அதிஷ்டான ஆத்மாவின் சாட்சாத்காரத் தால் அவை இரண்டின் நிவிர்த்தி சம்பவிக்கின்றது. விட்சேபமோ கர்ம சகித அவித்தையாற் செய்யப்பட்டதாகலின் பிரஹ்மவித்தையால் அவித்தை நிவிர் த்தியாயினும், பிராரப்த கர்மம நசிக்கும் வரைக்கும் அவ்விட்சேபம் நாசமாகாது. அவ்விட்சேபம் சோபாதிக பிரமவடிவமாவதால். ஆண்டுக் கர்மத்தோடுங்கூடிய விட்சேப சக்தியுடைய அஞ்ஞானமே உபாதியாம். எக்காலத்தில் பலபோகத் தால் அந்தப்பிராரப்த கர்மம் நாசமாகின்றதோ, அக்காலத்தில் அவ்விட் சேபசக்தியுடைய அஞ்ஞானம் தானே நாசமாய் விடுகின்றது. அதன் நிவிர் த்தியின் பொருட்டு ஞானத்தினதாவது, யோகத்தினதாவது அபேட்சையில்லை. எண்ணெய் வர்த்திகட்கு நாசமுண்டான பின்னர் விளக்கு தானே அணைந்து விடுவதுபோல ஆத்மஞானத்தால் ஆவரண சக்தியுடைய அஞ்ஞானமும்; சஞ் சித கர்மங்களும், பலபோகத்தாற் பிராரப்த கர்மமும், நிவிர்த்தியாகவே விட்சேப சக்தியுடைய அஞ்ஞானம் தானே நிவிர்த்தியாய் விடுகின்றது. இவ் வர்த்தம் வேறு நூற்களிலும் கூறப்பட்டுளது. சுலோகம். அவித்யாவ்ருதி தாதாத்ம்யே வித்யயைவ விநச்யத: । விக்ஷேபஸ்ய ஸ்வரூபந்து ப்ராரப்தக்ஷய வீக்ஷதே (இ-ள்) அவித்தையாற் செய்யப்பட்ட ஆவரணமும், அகங்கார முதலிய வைகளோடு ஆத்மாவின் தாதான்மிய அத்தியாசமுமாகிய விரண்டுமோ, அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் வித்தையினனே நாசமாகின்றன. விட்சேபத்தின் சொ ரூபமோ பிராரப்த கர்மத்தின் நாசத்தை நோக்குகின்றது. அதாவது பிரா

ரப்த கர்மத்தின் நாசத்திற்குமுன் அவ்விட்சேபத்தின் சொரூபம் நாசமாகாது; பிராரப்த கர்மநாசத்தின் பின்னரே நாசமாகின்றது. இதனாற் பெறப்பட்டதாவது:—ஞானிக்குள்ள விஷயங்களின் அநுபவம் படிகத்துற்ற செம்மைப்பிரமம் போன்று சோபாதிக பிரமமேயாம். ஆகலின் அவ்விஷயாநுபவம் ஆத்மசாட்சாத்காரத்திற்கு விரோதியன்று. ஆகவே ஆத்மஞானத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியான பின்னர், பிராரப்த கர்மத்தாற் கிட்டிய அநுபானுதிவிஷயங்களை அநுபவிப்பவனாயினும் ஞானி அகண்ட ஏகரச சச்சிதானந்த பிரஹ்ம வடிவமாக நிலைக்கின்றான். முற்கூறிய ஆத்மஞானத்தின் பயன் சம்பவிக்கின்றது. இப்பயன் சாரீரகமீமாஞ்சா சாஸ்திரம் நான்காவது அத்தியாயத்தின் படனத்தாற் பெறப்படும்.

ஆண்டுச் சாரீரகமீமாஞ்சா சாஸ்திரத்தின் முதல் அத்தியாயத்தின் படிப்பாற் சிரவணமும், இரண்டாவது அத்தியாயத்தின் படிப்பால் மனனமும், மூன்றுவது அத்தியாயத்தின் படிப்பால் நிதித்தியாசனமும், நான்காவது அத்தியாயத்தின் படிப்பால் ஆத்ம சாட்சாத்காரமாகிய பயனும் சித்தியாகின்றனவென்று சாம்பிரதாயமுள்ள ஆசாரியர்கள் அங்கீகரித்திருக்கின்றனர். சில நூலாசிரியர்களோ, சுரோத்திரிய பிரஹ்மநிஷ்ட குருவின் முகத்தினின்றும் நான்கு அத்தியாயமாகிய சாரீரகமீமாஞ்சா சாத்திரமுழுவதும் படித்தல் சிரவணமென்றும், படித்த சாஸ்திரார்த்தத்தை யுக்திகளோடு சிந்தித்தல் மனனமென்றும், மனனஞ் செய்யப்பட்ட அர்த்தத்தை மீட்டும் மீட்டும் சித்தத்திற்றிருப்புதல் நிதித்தியாசனமென்றும், அச்சிரவண மனன நிதித்தியாசனத்தின் பின்னர், புருஷனுக்கு அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் சாட்சாத்கார முண்டாகின்றதென்றுங் கூறுவர்.

**சங்கை:**—பூணுநூல் சம்ஸ்காரமின்மையால் அவ்வேதாந்த சாஸ்திரத்தின் அத்தியயனத்தில் அதிகாரிகளாகாத மைத்திரேயிமுதலிய ஸ்திரீகட்கும், விதுரர் முதலிய சூத்திரர்கட்கும் சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களில் ஆத்மஞானத்தின் உற்பத்தி கூறப்பட்டுளது. அவ்வேதாந்த சாஸ்திரத்திற்கு அதிகாரிகளாகிய ஜனகர், ஜடபரதர் முதலியவர்கட்கும் அச்சாரீரக மீமாஞ்சா சாஸ்திரத்தின் சிரவணாதிகளன்றியிற் கேவலம் சித்தசுத்திகளின் சிரவண மாத்திரத்தினாலே ஆத்மஞானத்தின் உற்பத்தி கூறப்பட்டுளது. ஆதலால் சாரீரக மீமாஞ்சா சாஸ்திரமுற்றும் படித்தலாற் சிரவணங் கூடுமென்னும் முற்கூறிய நியமம் சம்பவியாது.

**சமாதானம்:**—சுத்த அந்தக்கரணமுடைய விற்பன்னஅல்லது அவிற்பன்ன முக்கிய அதிகாரிகட்கோ ஜீவப்பிரஹ்மத்தின் ஏகத்துவத்தைப் போதிப்பதாகிய ஓர் சுலோக மாத்திரத்தினாலேனும், அல்லதுஅரைச்சுலோக மாத்திரத்தினாலேனும் பிரஹ்மசாட்சாத்காரம் உண்டாம். இப்பதத்திற்கு இவ்வர்த்தத்திற் சக்தியுளது, இப்பதத்திற்கு இவ்வர்த்தத்தில் இலக்கணையுளது என்று எவருக்குப் பதபதார்த்தங்களின் சக்தி லட்சணைகளாகிய சங்கதியின் ஞானம் உண்டோ, அவர் விற்பன்னரெனப்படுவார். எவர் அப்பத பதார்த்தங்களின் சங்கதி ஞானமின்றியவரோ அவர் அவிற்பன்னரெனப்படுவார். எவர்கள் சகுண

பிரஹ்ம சாட்சாத்கார பரியந்தம் உபாசனையைச் செய்துள்ளாரோ, அத்தகைய கிருதோபாசகர்கள் முக்கியாதிகாரிகளெனப்படுவார். அல்லது, முற்பிறப்பில் சிரவணமனனுதி சாமக்கிரிகளோடு கூடியவராயினும் எவர்கள் யாதாமோர் பிரதிபந்தகத்தின் வயத்தால் மறித்தும் மனித சரீரத்தை யடைந்துள்ளாரோ, அவர்கள் முக்கியாதிகாரிகளெனப்படுவார். அங்ஙனமாய விற்பன்ன முக்கியாதிகாரிகட்கும், விற்பன்னமின்றிய முக்கியாதிகாரிகட்கும் ஆத்மஞானேற்பத்தியில் சாஸ்திரமுழுவதின் சிரவணுதிகளில் அபேட்சையின்று. ஆனுல், வாக்கிய மாத்திரத்தின்சிரவணத்தினுனே அவர்கட்கு ஆத்மசாட்சாத்காரம் உண்டாகின்றது.

சங்கை:—முற்கூறிய முறையாக விற்பன்ன முக்கியாதிகாரிகட்கு அவ்வாக்கிய மாத்திரத்தால் பிரஹ்மசாட்சாத்காரம் உற்பத்தியாமேல் ஆகுக; ஆனுல் விற்பன்னமின்றிய முக்கியாதிகாரிகட்கு அவ்வாக்கிய மாத்திரத்தால் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் உற்பத்தி சம்பவியாது.

சமாதானம்:—சப்தத்திற்குச் சிந்திக்கக்கூடாத சக்தியுளதாகலின் அவிற்பன்ன முக்கியாதிகாரிகட்கும் அவ்வாக்கியமாத்திர சிரவணத்தால் பிரஹ்மசாட்சாத்காரத்தின் உற்பத்தி கூடும். எப்படி நித்திரையில் துயின்றவனுக்கு ஆண்டு சங்கதியின் ஞானமில்லையாயினும், அந்நியனது வாக்கிய மாத்திரத்தைக் கேட்டலால்விழிப்புண்டாகின்றதோ, அப்படி அவிற்பன்ன முக்கியாதிகாரிகட்கும் அவ்வாக்கியமாத்திர சிரவணத்தால் பிரஹ்மசாட்சாத்காரத்தின் உற்பத்தியில் ஓர் பாதகமுமின்று. ஈண்டுத் தாற்பரிய மிதுவாம்:—எங்ஙனம் நித்திரையினின்றும் விழித்தெழுந்தவனுக்குக் கடமுதலியவைகளோடு சட்சு முதலிய இந்திரியங்கட்குச் சம்பந்தமுண்டான உடனே 'இதுகடம்' என்னும் சாட்சுஷ சாட்சாத்காரம் உண்டாகின்றதோ, அங்ஙனம் சென்ற பல பிறவிகளிற்செய்த புண்ணிய கர்மத்தின் பரிபாகவயத்தால் பரமேசுவர அநுக்கிரகமுடையவனும், சுத்தாந்தக்கரணமுடையவனுமாகியபுருஷனுக்கு ஒருசுலோகமாத்திர சிரவணத்தாலாவது, அரைச்சுலோக மாத்திர சிரவணத்தாலாவது, வாக்கியமாத்திர சிரவணத்தாலாவது பிரஹ்ம சாட்சாத்காரம் அவசியம் உண்டாகின்றது. ஆனுல், கலங்கிய சித்தமுடைய உன்மத்தர்கட்குக் கடமுதலிய பொருள்களோடு சட்சு முதலிய இந்திரியங்களின் சம்பந்தமுண்டாயினும் எப்படி அக்கடமுதலியவைகளில் விபரீத வியவகாரமே காணப்படுகின்றதோ, அப்படி, கலக்கமில்லாத சித்தமுடையவர்கட்கும் இந்திரிய அர்த்தத்தினது சம்பந்தத்தின் பின்னர் அவ்விபரீதவியவகாரமே நிகழவேண்டுமென்னுங் கற்பனை கூறப்படாது. இவ்வாறு விஷயங்களை யடையுமிச்சையுடையவரும், இராஜச தாமச விருத்திகளாற்றால சித்தமுடையவருமாகிய சிலபண்டிதர்களுக்குப்பிரஹ்மசாட்சாத்காரோற்பத்தியின் அபாவத்தைக் கண்ணுற்று, அம்முக்கியாதிகாரிகளுக்கும் வாக்கிய மாத்திர சிரவணத்தால் பிரஹ்ம சாட்சாத்காரோற்பத்தியில் அசம்பாவனை கூறப்படாது. ஆகவே முற்கூறிய முக்கியாதிகாரிகளுக்கு அவ்வாக்கிய மாத்திரத்தின் சிரவணத்தால் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் உற்பத்தியில் ஓர் பாதகமுமின்று.

சங்கை:—எப்போது முற்கூறியவாறு முக்கியாதிகாரிகட்கு வாக்கிய மாத்திரத்தின் சிரவணத்தினுனே பிரஹ்ம சாட்சாத்கார முண்டாய்விட்டதோ

அப்போது அச்சாரீரக மீமாஞ்சாதி சாஸ்திரங்கள் உபயோகமில்லாமற் போதலால் அவற்றின் ஆரம்பம் நிஷ்பலமாகுமே?

சமாதானம்:—முற்கூறிய முக்கியாதிகாரிகளைக் காட்டிலும் வேறான அமுக்கியாதிகாரிகளின் போதத்தின் பொருட்டே அச்சாரீரக மீமாஞ்சாதி சாஸ்திரங்கள் ஆரம்பிக்கப்படுகின்றன. அஃதாவது அவ்வமுக்கியாதிகாரிகட்கு அவ்வாக்கியமாத்திரத்தைக் கேட்டலாற் பிரஹ்மசாட்சாத்காரம் உண்டாகாது. ஆனால், அச்சாரீரக மீமாஞ்சாதி சாஸ்திரங்களைப் படித்தலானே பிரஹ்ம சாட்சாத்கார முண்டாகின்றது. ஆதலால் அமுக்கியாதிகாரிகளின் பொருட்டு அச்சாரீரக மீமாஞ்சாதி சாஸ்திரங்களின் ஆரம்பமும் சபலமேயாம். முக்கியாதிகாரிகட்கு ஒரு சுலோகத்தாலாவது அரைச்சுலோகத்தாலாவது பிரஹ்ம சாட்சாத்கார முண்டாமென்னும் வார்த்தை மகாபாரதத்தில் ஸ்ரீவியாசபகவானுங் கூறியிருக்கின்றனர். சுலோகம். ஶ்லோகேநவிஂஶதெயஸ்து ஸவஜ்ஞாந்தைகமாஹா ஶயந் । ஶ்லோகேநயதி வாஸேஂந க்ஷீணஂதஸ்யப்ரயோஜநம் (இ-ள்) தேசகால வஸ்து பரிச்சேதங்களற்றதும், சர்வ பூதங்களின் புத்திகட்குச் சாட்சியுமாகிய சச்சிதானந்த சொரூப ஆத்மாவை எவ்வதிகாரி ஓர் சுலோகத்தாலாவது அல்லது அரைச்சுலோகத்தாலாவது அஹம்பிரஹ்மாஸ்மி என்று சாட்சாத்கரிக்கின்றானோ, அந்த ஞானிக்கு எல்லாப் பிரயோசனங்களும் க்ஷீணமாம். அதாவது மனிதலோக முதல் பிரஹ்மலோகமீறாயுள்ள எவ்வளவு ஆனந்தம் உலகவருக்குப் பிரயோசனமாகப் பிரசித்தமாமோ, அவ்வெல்லா ஆனந்தங்களும் பிரஹ்மானந்தத்தில் அடங்கியனவே; அந்தப் பிரஹ்மானந்தம் அடையப்படவே ஞானிக்கு எவ்வுலக ஆனந்தத்திலும் இச்சையுண்டாகாது என்பதாம். மேலும் கூறிய இவ்வர்த்தத்தினையே நைஷ்கர்மியசித்தி என்னும் நூலில் ஆசாரியர் வாக்யஶ்ரவண மாத்ரேண பிஶாசவதவா ப்நுயாத் (வாக்கியத்தைக்கேட்ட மாத்திரத்தில் பிசாசம்போல் அடைவான்) என்னுந் தொடக்கத்து வசனங்களால் எடுத்தாண்டனர். எனவே அம்முக்கியாதிகாரிகட்கு வாக்கியத்தைக்கேட்ட வளவானே பிரஹ்மசாட்சாத்கார முண்டாகு மெனல் சம்பவிக்கின்றது.

சங்கை:—முற்கூறிய விற்பன்ன அவிற்பன்னராகிய விருதிறத்து முக்கியாதிகாரிகட்கும் வாக்கிய மாத்திரத்தின் சிரவணத்தாலுண்டான பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குப் பிறகு செய்யவேண்டுவதொன்றுண்டோ? இன்றோ?

சமாதானம்:—அவ்விருவகை முக்கியாதிகாரிகளுள் அவிற்பன்ன முக்யாதிகாரிகட்கோ பிரஹ்மசாட்சாத்காரத்திற்குப் பிறகும் பிரஹ்மாகார விருத்திகளின் வெள்ளமாகிய தியானநிஷ்டை அபேட்சிக்கப்படுகின்றது. ஏனெனின், அவ்வவிற்பன்ன முக்கியாதிகாரிகளின் புத்தியானது சாஸ்திரத்திற் கூர்மையுடையதாகாமல் மற்றையோர்களது உபதேசத்தைச் சார்ந்துளது. ஆகலின் அவ்வவிற்பன்னர்கட்கு வாக்கியமாத்திரக் கேள்வியால் பிரஹ்மசாட்சாத்காரம் உண்டாயினும், பேதவாதிகளின் கூட்டுறவுக் குற்றத்தாற்றோன்றும் அசம்பாவனை விபரீதபாவனைகளால் தடைப்பட்டதாகின்றது. தடைப்பட்ட ஞானத்

தால் அஞ்ஞான நிவிர்த்தியும் பரம புருஷார்த்தப் பிராப்தியு முண்டாகா. அவ்வவிற்பன்ன முக்கியாதிகாரி எப்போது அத்தியான நிஷ்டையில் இருக்கின்றானோ, அப்போது அவனுக்குப் பேதவாதிகளோடு சங்கமுண்டாகாது. அச்சங்கம் நீங்கின வழி அவனுக்கு அசம்பாவனை விபரீதபாவனைகள் உண்டாகா. ஆகலின் தடையின்றிய பிரஹ்மசாட்சாத்காரத்தால் அவ்வவிற்பன்ன முக்கியாதிகாரிகளுக்கு அஞ்ஞான நிவிர்த்தியும், பரமபுருஷார்த்தப் பிராப்தியும் அவசியமுண்டாகின்றன.ஆகவே அவ்வவிற்பன்ன முக்கியாதிகாரிகளுக்குப் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பின்னர் அத்தியான நிஷ்டை அவசியம் அபேட்சிக்கப்படுவதாம். இவ்வர்த்தத்தைக் கீதையில் ஸ்ரீபகவானும் அருளியிருக்கின்றனர். சுலோகம். அந்யெத்வெவமஜாநந்தঃ ஶ்ருத்வாந்யேப்ய உபாஸதெ । தெபிசாதிதரந்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதி பராயணாঃ (இ-ள்.) எவர்கள் சாஸ்திர விசாரணை செய்வதில் தாம் ஆற்றலற்றவராயினும் எப்போது வேறு சுரோத்திரிய பிரஹ்மநிஷ்ட குருக்களின் முகங்களினின்றும் பிரஹ்ம சொரூபத்தைச் சிரவணஞ் செய்து அந்தப் பிரஹ்மத்தை நிரந்தரம் தியானஞ்செய்கின்றனரோ, அப்போதே அச்சிரவணத்தின்கண் ஞெருப்பாட்டுடையவர்களும் பிரஹ்ம சாட்சாத்காரத்தால் அஞ்ஞானத்தை நாசஞ்செய்கின்றார்கள். அன்றியும் இப்பொருளையே ஸ்ரீவித்யாரணிய சுவாமிகளும் தியானதீபத்திற் கூறியிருக்கின்றனர். சுலோகம். அத்யந்தபுத்திமாந்த்யாத்வா ஸாமக்ர்யாவாப்யஸம்பவாத் । யோவிசாரம் நலபதெ ப்ரஹ்மோபாஸீத ஸோऽநிஶம் ॥ அவணெப்ரஹ்மொகெவா தக்வம் ஜாகவாவிசெஷ்யெதெ (இ-ள்) புத்தியின் மிக்க மந்தத்தாலாவது விசாரசாமக்கிரி சேரிடாமையாலாவது பிரஹ்ம விசாரத்தை எவன் அடைவதில்லையோ, அவன் நிர்க்குண பிரஹ்மத்தை நிரந்தரம்தியானஞ்செய்தல்வேண்டும்.அவ்வண்ணம்தியானஞ்செய்பவன்மரணகாலத்திலாவது பிரஹ்மலோகத்திலாவது அந்தநிர்க்குண பிரஹ்மத்தின் சொரூபத்தைச் சாட்சாத்கரித்து மோட்சத்தை அடைகின்றான். அன்றியும் இவ்வர்த்தத்தினையே பதஞ்சலி பகவானும் யோகசூத்திரத்தில் எடுத்துரைத்தனர். சூத்திரம் ததঃ ப்ரத்யக் சேதநாதிகமோऽப்யந்தராயாபாவஶ்ச (இ-ள்) அப்பரமாத்மாவின் தியானத்தால் இப்புருஷனுக்குப் பிரத்தியக் ஆத்மாவின் சாட்சாத்காரம் உண்டாகின்றது. அவ்வாத்ம சாட்சாத்காரத்தின் உற்பத்தியில் எத்துணைப் பிரதிபந்தங்களுளவோ, அவ்வெல்லாப் பிரதிபந்தங்களும் அத்தியானத்தினானே நிவிர்த்தியாகின்றன—இவைகளால் அவ்வவிற்பன்ன முக்கியாதிகாரிகட்குப் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பின்னர் அத்தியான நிஷ்டையினபேட்சை இன்றியமையாமையெனல் பெற்றாம்.

சங்கை:—முற்கூறியவகைப்படி அவிற்பன்ன முக்கியாதிகாரிகட்குப் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பின்னர் அத்தியான நிஷ்டை வேண்டியதாயின் ஆகுக; ஆனால் எவ்வதிகாரிகள் சாஸ்திரத்தில் விற்பன்னரோ அன்னோருக்கு அத்தியான நிஷ்டை வேண்டியதாகாதே?

சமாதானம்:—விற்பன்ன அதிகாரிகளனைவர்க்கும் அத்தியான நிஷ்டை வேண்டியதில்லை யெனக் கூறுகின்றீரா? அல்லது, யாதாமொரு விற்பன்ன

அதிகாரிக்கு அத்தியான நிஷ்டை வேண்டியதில்லையெனக் கூறுகின்றீரா? இரண்டாவது பட்சம் அங்கீகரிக்கின் அது எமக்கு முடம்பாடு. முதற்பட்சம் அங்கீகரிக்கின் அது பொருந்தாது. ஏனெனின், நியாயம் மீமாஞ்சை முதலிய நாநாசாஸ்திரங்களின் விசாரத்தாலும், கீழ்ச்சென்ற ஜன்மங்களின் பாப கர்மவசத்தாலும் எப்பண்டிதர்கள் சம்சய விபரீதபாவனைகளால் விழுங்கப்பட்டவரோ, அவ்விற்பன்ன பண்டிதர்கட்கு வேதாந்தவிசாரத்தால் பிரஹ்ம சாட்சாத்கார முண்டானாலும், அப்பிராமாணிய சங்கையால் அது தூஷிக்கப் பட்டதேயாகின்றது. இக்காரணம் பற்றி அந்தப் பிரஹ்ம சாட்சாத்காரம் அஞ்ஞானத்தை நிவிர்த்தி செய்வதிற் சாமர்த்தியமுடையதாகாது. அப்படிப் பட்ட விற்பன்ன பண்டிதர்கட்கோ அச்சம்சய விபரீதபாவனைகளாகிய ஊறுபாடுகளை விலக்கும் பொருட்டு அத்தியான நிஷ்டை அவசியம் வேண்டப் படுகின்றது. அத்தியான நிஷ்டையால் அச்சம்சய விபரீத பாவனைகளாகிய இடையூறுகள் நீங்குங்கால், இடையீடில்லாத பிரஹ்மசாட்சாத்காரத்தால் அவ்விற்பன்ன பண்டிதர்கட்கும் மோட்சமாகிய பரமபுருஷார்த்தம் பிராப்தமாகின்றது. ஆனால் எவ்விற்பன்ன அதிகாரிகள் பரமேசுவரனது அருளால் அவ்வசம்பாவனை விபரீதபாவனைகளின்றியவரோ, அவர்கட்குப் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குப் பிறகு அத்தியான நிஷ்டை வேண்டியதில்லை. அன்றியும் தியானம் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்கு ஏதுவென்று ஸ்ரீவியாசபகவானும் பிரஹ்ம சூத்திரத்திற் கூறியிருக்கின்றனர். சூத்திரம். ஸுவிஸம்ராயநே ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம் (இ-ள்) இவ்வதிகாரி தியானகாலத்தில் ஒருவழிப்பட்ட மனத்தால் தனது ஆத்ம வடிவமாகப் பிரஹ்மத்தைச் சாட்சாத்கரிக்கின்றான். சுருதியாலும் ஸ்மிருதியாலும் அத்தியானத்தினாற்றான் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பிராப்தி கூறப்பட்டிருக்கின்றதாகலின். சுருதி. ஜ்ஞாந ப்ரஸாதேந விஶுத்த ஸத்வஸ்ததஸ்துதம் பஶ்யதி நிஷ்கலம் த்யாயமாந:। ஸூக்ஷ்ம: ப்ரத்யகாத்மா ந சேக்ஷுஷாவ்ருதவக்ஷு ஈக்ஷதேத்யர்த்தி (இ-ள்) ஞானப்பிரசாதத்தால் சுத்த அந்தக்கரண முடையவன் நிர்க்குண பிரஹ்மத்தைத்தியானிப்பவனாய் அந்நிர்க்குண பிரஹ்மத்தைச் சாட்சாத்கரிக்கின்றான். பாகியவுருவ முதலிய விஷயங்களினின்றும் நீங்கிய விழிமுதலிய இந்திரியங்களுடையவனான தியான நிஷ்டன் ஒருவன் மோட்ச இச்சையுடையவனாய்ப் பிரத்தியக் ஆத்மாவைச் சாட்சாத்கரிக்கின்றான். ஸ்மிருதி. யம்விநித்ராஜிதஶ்வாஸா: ஸந்துஷ்டா: ஸம்ஜிதேந்த்ரியா:। ஜ்யோதி:பஶ்யந்தி யுஞ்ஜாநாஸ்தஸ்மை யோகாத்மநே நம: (இ-ள்) நித்திரையின்றியவரும், பிராணாயாமத்தால் சுவாசத்தை அடக்கியவரும், கிட்டிய மட்டில் திருப்தி யுடையவரும், கண் முதலிய இந்திரியங்களை வென்றவருமாகிய வர்கள் தியானயோகஞ்செய்து, எந்தப் பரமாத்மஜோதியைச் சாட்சாத்கரிக்கின்றனரோ, அந்த யோகவடிவான பரமாத்மாவை நமஸ்கரிக்கின்றேன். அன்றியும் கூறிய இவ்வர்த்தமே பிறநூற்களிலும் கூறப்பட்டுளது சுலோகம். ஸஹஸ்ரவ்யாகுலசித்தாநாம் விசாராத்ஸமயீ நநு வேத்ய। யோமோ ஆஸத்புஷதஸ்தேஷாம் தீவம்ஸ்தேந பஶ்யதி (இ-ள்) மிக்கவியாகூல சித்தமுடையவர்கட்கு, விசாரத்தால் ஓர்கால் ஆத்மஞானம் உண்டாகாவிடின், அவர்களது புத்தியிலுள்ள

ஐயந் திரிபு முதலிய தோஷங்கள் அத்தியானத்தினுனே நிவிர்த்தியாகின்றன வாகலின், அவர்கட்கு அத்தியானயோகமே முக்கிய சாதனமாம்.

சங்கை:—மேற்கூறியவாறு சம்சய விபரீதபாவனைகளுடையவரோ அவை நீங்கும் பொருட்டு அத்தியானத்தைச் செய்குக; ஆனுல் அச்சம்சய விபரீத பாவனைகளின்றிய ஞானவான் பண்டிதர்கள் தியானஞ் செய்பவராய்க் காணப் படுகின்ருர்கள். அவர்கள் யாது கருதித் தியானஞ் செய்கின்ருர்களோ?

சமாதானம்:—சம்சய விபரீதபாவனைகளின்றிய ஞானவான் பண்டிதர்கள் எப்போது அஹம்பிரஹ்மாஸ்மி என்று விருத்திகளின் வெள்ளமாகிய தியானத்தைச் செய்கின்றனரோ,அப்போது அவர்களுக்குப் பாகியவிட்சேபத்தின் நிவிர்த்தியால் பிரஹ்மானந்தமாகிய திருஷ்டசுகம் விசேஷமாயுண்டாகின்றது. அத்திருஷ்ட சுகத்தைக் கருதியே ஞானிகள் தியானத்தைச் செய்கின்ருர்கள். அத்தியானத்திற்குப் பிறிதோர் பயனில்லை. ஏனெனின்,சம்சய விபரீத பாவனைகளாகிய பிரதிபந்தங்களின் நிவிர்த்தியும், ஆத்ம சாட்சாத்காரமுமாகிய விரண்டும் அவ்வித்வான்கட்கு முன்னரே பிராப்தமாயிருக்கின்றன. பரிசேஷத்தால் அத்தியானத்திற்கு அத்திருஷ்ட சுகமே பயனுகின்றது. இவ்வார்த்தை ஸ்ரீபகவானும் கீதையிற் கூறியுள்ளார். சுலோகம். அநந்யா ஶ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே । தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் (இ-ள்) யானுகிய பரமேசுவரனினும் வேருன மாயிகப் பொருள்களில் ஆசையில்லாதவர் அநன்யரெனப்படுவார். அத்தகைய அநன்யராகி,பிரத்தியகபின்ன பரமாத்மாவாகிய வென்னைச்சிந்தை செய்பவராய் எந்தச் சாதன சதுஷ்டய சம்பன்ன அதிகாரிகள் யானுகிய நிர்க்குண பரமாத்மாவை நிரந்தரம் தியானஞ் செய்கின்ருர்களோ,அஃதாவது விஜாதீய விருத்திகளை விட்டு, சஜாதீய விருத்திகளின் வெள்ளமாகிய தியானத்தைச் செய்கின்ருர்களோ, அப்படிப்பட்ட எனது தியானத்தில் ஒருப்பட்டவரான தத்துவவேத்தாக்களின் யோகத்தையும் க்ஷேமத்தையும் நான் பரமேசுவரன் வகிக்கின்றேன்.அடையப்படாத பொருளை அடைதல் யோகமும், அடையப்பட்ட பொருளைக் காத்தல் க்ஷேமமுமாம்.

சங்கை:—அகண்ட ஏகரச இன்ப வடிவ பிரஹ்மாத்மாவில் நிஷ்டையையுடைய ஞானிகட்கு அடையப்படாத ஆனந்தமொன்றில்லை. ஏனெனின், மாநுடலோகமுதல் பிரஹ்மலோக முடிவாயுள்ள எல்லா ஆனந்தங்களும் எந்தப் பிரஹ்மானந்தத்தில் அடங்கியுள்ளனவோ, அந்தப் பிரஹ்மானந்தம் ஞானிகட்குத் தமது ஆத்மவடிவமாக எப்போது மடையப்பட்டதே. உற்பத்தி நாசங்களற்றதால் அந்தப் பிரஹ்மானந்தத்தைக் காத்தலும் பொருந்தாது. அநித்தவஸ்துவிற்கே காத்தல் கூடும். ஆகவே ஞானிகளின் யோக க்ஷேமங்களை நான் பரமேச்சுரன் வகிக்கின்றேன் என்னும் பகவானுடைய வசனம் அசங்கதம்.

சமாதானம்:—ஞானிகட்கு அப்பிராப்த அம்சம் ஒன்றுமில்லை. பிரஹ்மானந்தம் அவர்கட்கு நித்தப்பிராப்தமே. ஆதலால் அவர்களுக்கு யாதோர் யோக க்ஷேமமுமில்லை; என்ருலும், ஈண்டு யோகம் க்ஷேமம் என்னும் சப்தங்களால்

இவ்வர்த்தம் கிரகித்தல் வேண்டும்:—தேக முதலிய சர்வ அநர்த்ம பதார்த்தங்களில் ஆத்மத் தன்மைப்புத்தி நீங்கி ஞானிக்குள்ள பிரஹ்மானந்த வடிவான ஸ்திதி யாதோ அது யோகமெனப்படும். பிரபல பிராரப்தத்தின் கூட்டுறவால் பிரஹ்ம நிஷ்டையினின்றும் நழுவாதிருத்தல் யாதுண்டோ அது க்ஷேமமெனப்படும். இவ்வாருன யோகக்ஷேமங்கள் ஞானியினிடத்தும் பொருந்தும். ஆதலால் யோகக்ஷேமம் வஹாம்யஹம் (யான் யோகக்ஷேமங்களை வகிக்கின்றேன்) என்னும் வசனத்தால்ஸ்ரீபகவான் இவ்வாருகிய யோகக்ஷேமங்களையே கூறியுள்ளார். ஆகவே தியான நிஷ்டர்களான ஞானிகட்கு எப்போதும் திருஷ்டசுகமே பிராரப்தமாகின்றதென்னும் அர்த்தம் கூறிய கீதா வசனத்தாற் பெறப்படுகின்றது. இஃதே அர்த்தத்தை ஸ்ரீபகவான் மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த: பரஸ்பரம் । கதயந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச (என்னிடத்துச் சித்தத்தையுடையவர்களும் என்னிடத்துப் பிராணனையுடையவர்களுமாய் ஒருவரோடொருவர் போதித்துக்கொண்டும் என்னையே எப்பொழுதும் சொல்லிக்கொண்டும் சந்தோஷிக்கின்றூர்கள். இரமிக்கின்றூர்கள்) என்னும் சுலோகத்திலும் கூறியிருக்கின்றனர். இக்கீதா சுலோகங்களின் அர்த்தங்களைக் கீதா கூடார்த்த தீபிகை எனப்பெயரிய உரையின்கண் யாம் விரிவாய்க் கூறியிருக்கின்றோம். வேட்கையுள்ளார் ஆண்டு அறிக.

## ஞானிக்குத் தியானத்திற் கர்த்தவ்ய மின்றேன்பதிற் சங்கை சமாதானங்கள்.

**சங்கை:**—எப்படி முமூட்சுக்களுக்குச் சிரவணுதிகளின் கர்த்தவ்யம் அவசியமெனப்போதிக்கும் விதியுண்டோ, அப்படிச்சம்சயவிபரீதபாவனைகளின்றிய ஞானிகளுக்கு அத்தியானத்தின் கர்த்தவ்யம் அவசியமென ஏன் விதிக்கவில்லை? அஃதாவது, ஞானிகளாலும் அத்தியானம் அவசியஞ் செய்யப்படவேண்டுமென்று வேதத்தின் ஆஞ்ஞை ஏனில்லை? ஞானிக்குத் தியானத்தை விதிக்குபோர் வேத வாக்கியமுமின்றூகலின் ஞானிக்கு அத்தியானத்தின்விதி இன்றுமெனக் கூறின்; அக்கூற்றுஞ் சம்பவியாது. தமேவ தீரோ விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்ராஹ்மண: (இ-ள்) ‘தைரியமுடைய அந்தணனே! அப்பரமாத்வைச் சாட்சாத்கரித்துப் பிறகு அப்பரமாத்மாவைத் தியானஞ் செய்குக’ என்னுஞ் சுருதி ஞானிக்கும் தியானத்தின் விதியைக் கூறியுளது. உண்டான ஆத்ம சாட்சாத்காரத்தினுனே ஞானிக்கு மோக்ஷமாகிய பரம புருஷார்த்தம் பிராப்தமாகின்றதாகலின் அவ்வாத்மஞானத்திற்குப் பிறகு தியானஞ் செய்தல் நிஷ்பலமாமே எனின்; அது இயலாது. ஏனெனின், இக்காலத்தில் பிரஹ்மசாட்சாத்கார மிருந்தும் அத்தியான மில்லாதவருக்குப் பூர்வ அஞ்ஞான அவஸ்தையைப் போன்று சுக துக்க முதலியவான சம்சாரம் தோற்றுகின்றது. ஆகலின் பிரஹ்ம சாட்சாத்கார மாத்திரத்தால் புருஷனுக்கு அம்மோக்ஷமாகிய புருஷார்த்தம் பிராப்தமாகாது. ஆனுல், பிரஹ்மவேத்தா குருவின் சமீபத்திற்சென்று சிரவணுதிகளால் பிரஹ்மத்தைச் சாட்சாத்கரித்து இப்புருஷன் பிழைத்துள்ள வரைக்கும் பிரஹ்ம தியானத்தை எப்போது அப்பியாசிக்கின்றனனே அப்போது தான் இவ

னுக்கு மோக்ஷம் பிராப்தமாகின்றது. ஆகையால் அம்மோக்ஷப் பிராப்தியின் பொருட்டு ஞானிக்கும் ஜீவிதகாலபர்யந்தம் அத்தியானஞ் செய்யவேண்டுமெனல் கடப்பாடேயாம். ஓர்கால் ஞானி தியானத்தில் ஈடு படானுயின் இஷ்டப்படி நடக்க நேருமாதலால் நிரயத்தையே அடைவான். இவ்வார்த்தை பிறநூற்களிலுங் கூறப்பட்டுளது. निःसङ्गता मुक्तिपदं यतीनां सङ्गादशेषाः प्रभवन्ति दोषाः। आरूढयोगोऽपि निपात्यतेऽधः सङ्गेन योगी किमुताल्पसिद्धिः॥ (இ-ள்) விஷயப்பற்றுடைய பகிர்முக ஜனங்களின் சங்கத்தை விடுதல் நிஸ்ஸங்கதை எனப்படும். அந்த நிஸ்ஸங்கத்தன்மையே துறவிகள் முக்தியையடைய மார்க்கமாம். ஏனெனின், அச்சங்கத்தால் இப்புருஷனுக்குக் காமாதி அநேக தீங்குகள் விளைகின்றன. அத்தீங்குகளின் விளைவால் ஞானியும் கீழ்விழுதலையே யடைவானுயின் முமூட்சுக்கட்குக் கூறவும் வேண்டுமோ? ஆதலால் இஷ்டப்படி யொழுகுவதை நீக்கவேண்டிச் சம்சய விபரீதபாவனைக ளற்ற ஞானிகட்கும் உய்ததுள்ளகாலம் வரைக்கும் அந்தப்பிரஹ்மத்தின் தியானம் அவசியஞ் செய்யத்தக்கதாம்.

சமாதானம்:—சம்சய விபரீதபாவனைகளின்றிய ஞானிக்குத் தியானஞ் செய்வதில் விதி கிடையாது. ஏனெனின், எவருக்குத் திட அத்தியாச பூர்வகமாய்த் தேகாபிமான மிருக்கின்றதோ, அவருக்கே தமது ஆத்மாவில் கர்த்திருத்வ புத்தியுண்டாகின்றது. அவ்வாத்மாவின்கண் கர்த்திருத்வ புத்தியுடையவரே அஞ்ஞானிகள் போன்று சாஸ்திரத்தின் விதி விலக்குகட்கு அதிகாரிகளாகின்றார்கள். ஆனுல், ஞானிக்கு அத்தேகாபிமான மின்மையால், கர்த்திருத்வபுத்தியின்றாம். இன்றாகவே ஞானி சாஸ்திரத்தின் விதிவிலக்குகளுக்கு அதிகாரியாகான். தாற்பரியமிதுவாம்:—அத்தேகாபிமானம் இருவிதம். ஒன்று கர்மஜன்யம், மற்றொன்று பிராந்தி ஜன்யம். ஆண்டுக் கர்மஜன்ய தேகாபிமானமோ அக்கர்ம நாச அநந்தரமே நிவிர்த்தியாகின்றது. இரண்டாவது பிராந்தி ஜன்ய தேகாபிமானமோ அஞ்ஞான காலத்திருக்கின்றது. ஆத்மஞானத்தால் எப்போது அஞ்ஞானம் நிவிர்த்தியாகப் பிராந்தி நிவிர்த்தியாகின்றதோ, அப்போதே பிராந்தி ஜன்ய தேகாபிமானமும் நிவிர்த்தியாய் விடுகின்றது. அங்ஙனமான தேகாபிமான மின்றியதால் கர்த்திருத்வ புத்தியின்றிய ஞானிக்குச்சாஸ்திரத்திற் கூறிய அதிகாரங்களனைத்துமில்லை யாகுங்கால் அத்தியானவிதி யாங்ஙன் சம்பவிக்கும்? ஆனுல் சம்பவியாதாகும். இவ்வபிப்பிராயங் கொண்டே ஸ்ரீவித்யாரண்ய சுவாமிகள் பஞ்சதசி என்னும் நூலில் ஞானிகளின் அநுபவத்தைக்கூறியிருக்கின்றனர். சுலோகம். व्याचक्षतां ते शास्त्राणि वेदानध्यापयन्तु वा। येऽत्राधिकारिणो मे तु नाधिकारोऽक्रियत्वतः॥ शृणोत्वज्ञाततत्त्वोऽसौ जानन् कस्माच्छृणोम्यहम्। मन्यतां संशयापन्नो न मन्येऽहमसंशयः॥ विपर्यस्तो निदिध्यासेत् किं ध्यानमविपर्यये (இ-ள்) எவர்கள் கர்த்திருத்வ புத்தியுண்மையால் அதிகாரிகளோ அவர்களே சாஸ்திரங்களை வியாக்கியானஞ் செய்வதற்கும் வேதங்களைப் படிப்பித்தற்கும் உரியர்; யானோ அக்கிரியன் ஆகலின் எனக்கு ஓர் அதிகாரமுமில்லை.

எவர்கள் பிரத்தியக் அபின்ன பிரஹ்மத்தை அறியவில்லேயோ அவர்கள் வேதாந்த சாஸ்திர சிரவணஞ் செய்யக்கடவர். யானே பிரத்தியக் அபின்ன பிரஹ்மத்தை அபரோக்ஷமாக அறிகின்றேனாகலின், யான் எதன்பொருட்டுச் சிரவணத்தைச் செய்யக்கடவது. எவர்கள் ஆத்மாவினிடத்துச் சம்சயமுடையவர்களோ அவர்கள் அச்சம்சய நிவிர்த்தியின்பொருட்டு மனனஞ் செய்யக்கடவர்; யானே சர்வசம்சயமு மின்றியவனாகலின் யான் எதன் பொருட்டு மனனத்தைச் செய்வது. எவர்கள் விபரீதபாவனையுடையாரோ அவர்கள் அவ்விபரீதபாவனையின் நிவிர்த்தியின் பொருட்டு நிதித்தியாசனஞ் செய்யக்கடவர்; யானே அவ்விபரீத பாவனையின்றியவனாகலின் அத்தியானஞ் செய்வதால் எனக்கு யாது பயன் உளது.

**சங்கை:—**ஞானிக்கு அத்தியானம் கர்த்தவ்யமென்றங்கீகரியாவிடின்; ஆத்மஞான அநந்தரம் அத்தியானத்தை விதித்துள்ள தமேவ்யீரோ விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்ராஹ்மணஃ (ஓ தீரனான வேதியனே! பரமாத்வை யறிந்து அப் பரமாத்மாவைத் தியானிப்பாயாக) என முற்கூறிய சுருதி அப்பிரமாணமாகும்.

**சமாதானம்:—**அச்சுருதி ஆத்மாவின் அபரோட்ச ஞானத்திற்குப் பின்னர் அத்தியானத்தை விதித்ததன்று. ஆனல், வேதாந்த சிரவண மாத்திரத்தாலுண்டான பிரஹ்மத்தின் பரோட்ச ஞானத்திற்குப் பின்னரே பிரஹ்மத்தின் அபரோட்ச ஞானமடையும் பொருட்டு நிதித்தியாசன வடிவான தியானத்தை விதித்துளது. ஆகலின் அச்சுருதிக்கும் அப்பிரமாணத் தன்மை யுண்டாகாது.

**சங்கை:—**பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பின்னர் ஞானிக்குத் தியானம் கர்த்தவ்யமென் றங்கீகரியாவிடின்; ஞானிக்குச் சித்தத்தின் பகிர்முகத் தன்மையால் இஷ்டப்படி நடக்கவரும்.

**சமாதானம்:—**ஞானி பிராந்தி ஜன்ய தேகாபிமான மின்றியவனாகலின் இஷ்டப்படி நடப்பதிற் பிரவிருத்திக்க மாட்டான். அத்தேகாபிமானமுடையவரே இஷ்டப்படி நடப்பதிற் பிரவிருத்திப்பார்கள். இதன் தாற்பரியமாவது:— எவர்கள் முமூட்சுதசையிலும் அகக்கரண தண்டம் புறக்கரண தண்டம் முதலியவற்றால் இஷ்டப்படி யொழுகுவதினின்றும் விலகியவரோ, அவர்கள் ஞானதசையில் இஷ்டப்படி நடக்க என்னணம் பிரவிருத்திப்பார்கள்? ஆனல் பிரவிருத்திக்க மாட்டார்கள். நிஃஸங்கதா முக்திபதம் யதீநாம் (யதிகளுக்குச் சங்கமற்றிருத்தலே முக்திபதம்) என முற்கூறிய வசனமோ ஆத்மஞான மின்றிய சாதகர்களைக் குறித்ததாம்; தத்துவமுணர்ந்த சாத்தியர்களைக் குறித்ததன்று. ஆகலின் அவ்வசனத்தால் தியானரகித ஞானிக்கு அதஃபதனம் சித்தமாகாது.

அன்றியும், ஞானிக்குத் தியானவிதியின்றென்னும் அர்த்தத்தை ஸ்ரீவியாசபகவானும் பிரஹ்மசூத்திரத்திற் கூறியிருக்கின்றனர். சூத்திரம். அநுஜ்ஞா பரிஹாரௌ தேஹ ஸம்பந்தாஜ்ஜ்யோதிராதிவத் (இ - ள்) இக்காரியம் அவசியஞ்செய்யத் தக்கதாம் என்றிவ்வாறு சாஸ்திரத்திற் செய்துள்ளவிதி அநுஞ்ஞை எனப்படும். இக்காரியம் செய்யத்தக்கதன்று என்றிவ்வாறு சாஸ்திரத்திற் செய்துள்ள

நிஷேதம் பரிஹாரமெனப்படும். அவ்வநுஞ்ஞா பரிஹாரங்களாகிய விதிநிஷேதங்கள் இப்புருஷனுக்கு ஆத்மஞானத்திற்கு முன் தேகாபிமானத்தால் நேரிட்டன. ஆத்மஞான காலத்தில் அத்தேகாபிமானம் நிவிர்த்தியாகவே ஞானிக்கு அச்சாஸ்திரத்திற் கூறியுள்ள விதி நிஷேதங்கள் நேரிடா. எங்ஙனம் சுடலை அக்நி விலக்கப்பட்டு வேறு அக்நி கிரகிக்கப்படுகின்றதோ, மனித சரீரத்தின் மலமூத்திரங்கள் நீக்கப்பட்டுப் பசுசரீரத்தின் மல மூத்திரங்கள் கிரகிக்கப்படுகின்றனவோ, அங்ஙனமே தேகாபிமானமுள்ள அஞ்ஞானிகட்கு அச்சாஸ்திரத்திற் சொல்லியுள்ள விதி நிஷேதங்கள் உண்டாம்; அத்தேகாபிமானமின்றிய ஞானிகட்கு அவ்விதி நிஷேதங்கள் உண்டாகா.

அன்றியும், ஞானிக்குச் சிறிது மாத்திரமும் கர்த்தவ்யமின்றென்னும் அர்த்தத்தை ஸ்ரீபகவானுங் கீதையில் யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஶ்ச மாநவ:। ஆத்மந்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே ॥ நைவ தஸ்ய க்ருதேநார்தோ நாக்ருதேநேஹ கஶ்சந। ந சாஸ்ய ஸர்வபூதேஷு கஶ்சிதர்தவ்யபாஶ்ரய: (எந்த மனிதன் ஆன்மாவினிடம் மகிழ்வுற்றவனோ, ஆன்ம திருப்தனோ, ஆன்மாவினிடத்தேயே சந்தோஷித்தவனுமாவனோ, அவனுக்குச் செய்யவேண்டியது யாதுமில்லை. இங்குக்கர்மங்களைச் செய்ததனாலாவது செய்யாததனாலாவது அவனுக்கு ஓர் பயனுமில்லை. இவனுக்குச்சகல பூதங்களினிடத்தும் ஓர் பயனுக்காகச் சாரவேண்டியது ஒன்றும் இல்லை) என்னும் இரு சுலோகங்களால் அருளி யிருக்கின்றனர்.

அன்றியும், கூறியவிவ் வர்த்தம் புராணத்திலுங் கூறப்பட்டுளது. சுலோகம். ஜ்ஞாநாம்ருதேந த்ருப்தஸ்ய க்ருதக்ருத்யஸ்ய யோகிந:। நைவாஸ்தி கிஞ்சித் கர்தவ்யமஸ்தி சேந்ந ஸ தத்த்வவித் (இ-ள்) எப்புருஷன் அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் ஆத்மஞானமாகிய அமிருத பானத்தால் திருப்திபெற்ற காரணத்தினனேயே கிருத கிருத்யனுவனோ அஃதாவது சம்பாதிக்க வேண்டியதைச் சம்பாதித்துள்ளவனோ, அந்த ஞானிக்குச் செய்யவேண்டியது சிறிதளவுங் கிடையாது. சிறிதளவுஞ் செய்யவேண்டியதாக எவனுக்கு இருக்கின்றதோ அவன் உண்மையை யறிந்தவனன்று.

அன்றியும், கூறியவிவ் வர்த்தத்தை ஸ்ரீபகவான்பாஷியக்காரரும் அஹம் ப்ரஹ்மாஸ்மீத்யேதத்வஸாநா ஏவ ஸர்வே விதய: ஸர்வாணி ச ஶாஸ்த்ராணி விதிப்ரதிஷேதமோக்ஷபராணி என்னுந் தொடக்கத்து வசனங்களாற்காட்டியுள்ளார். இப்பாஷிய வசனத்திற்கு இது பொருள்:—ஒருவனுக்கு எது பரியந்தம் அஹம்பிரஹ்மாஸ்மி என்னும் சாட்சாத்கார முண்டாகவில்லையோ, அது பரியந்தமே அவன்மீது சர்வவிதிகளுமுள்ளன. விதி, நிஷேதம், மோக்ஷம் என்னும் மூன்றைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரங்களும் அது பரியந்தந்தான். ஆனல் பிரஹ்ம சாட்சாத்காரோற்பத்திக்குப் பின்னர் ஞானியின்மீது அவ்விதிகளுமில்லை, அச்சாஸ்திரங்களுமில்லை. ஏனெனின், தேகேந்திரிய முதலியவற்றில் யான் எனதென்னும் அபிமானமின்றிய ஞானிக்குப் பிரமாதாத்தன்மை சம்பவி

யாது. பிரமாதாவன்றிப் பிரமாணத்திற் பிரவிருத்தி யுண்டாகாது. ஆகலின் ஞானிக்கு இறையளவுங் கர்த்தவ்யமில்லை.

மேலும், இவ்வர்த்தத்தினைப் பிரஹ்மவித்துக்களான வித்வான்களுங் கூறியிருக்கின்றனர். சுலோகம் ளெணஜியுாதுமொ உஸகெவ வாஹநுதெஹாஜி ஸாயநாஸ । ததஜ ஹாஹ ஜஹீதி ஸலாவெ வொயெகாாவுஂகயஂஹவெஸ (இ-ள்)

கௌணாத்மா, மித்தியாத்மா, முக்கியாத்மாவென ஆத்மா மூவகைத்து. மனைவி மக்கள் முதலியோர் கௌணாத்மா. அந்நமயாதி ஐங்கோசங்கள் மித்தியாத்மா. அவ்வைங்கோசங்கட்கும் அதிஷ்டான வடிவான சச்சிதானந்த ஏகரச சாட்சியாத்மா முக்கியாத்மாவாம். கௌணாத்மா, மித்தியாத்மா வென்னுமிரண்டு ஆத்மாக்கள் மித்தையெனத் துணிந்த வழி, ஒருவனுக்கு அம்மனைவி மக்களிடத்தும், அந்நமயாதி ஐங்கோசங்களினிடத்தும் ஆத்மபுத்திநீங்கி விடுகின்றது. அதன் பின்னர் எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாகிய சச்சிதானந்த ஏகரச பிரஹ்மம் யான் என்னும் சாட்சாத்காரமுண்டாகின்றது. அச்சாட்சாத்காரம் உண்டாகவே ஞானிக்குச் சிறிதேனும் கர்த்தவ்யம் இருப்பதில்லை.

அன்றியும், இப்பொருளை ஷஷநிதெ்ா ஜஹிா ஸாஹணஸுநவஃமெ கஃணொநாகஃநீயாவ । ஷதஜ ஹுா ஸாஹிாநுா து தகஜு தமு ஹாரத (இந்த அழிவில்லாத மகிமை பிரஹ்மத்தை யறிந்தவனுக்கு உண்டு, அவன் கர்மத்தைச் செய்ததால் மேன்மை பெறுன்; செய்யாததால் கீழ்ப்பட்டவனுகான். பாரத! இப்பிரஹ்மான்ம தத்துவத்தை நான் என்று கண்டு இவன் புத்திமானும் கிருத கிருத்தியனுமாவன்) என்னுந் தொடக்கத்துப் பல சுருதி ஸ்மிருதிகளுங் கூறியிருக்கின்றனவாகலின் சம்சய விபரீத பாவனைகளற்ற ஞானிக்கு இறையளவும் தியான முதலியவைகளின் கர்த்தவ்யத்தன்மையில்லை. ஆனல் அந்த ஞானியும் எப்போது தியானத்திலொருப்பாடுடையவனுகின்றானே அப்போது அவனுக்குப் பிரஹ்மானந்தமாகிய திருஷ்ட சுகம் அதிகமாயுண்டாகின்றது. அத்தியானத்தி லொருப்பாடில்லையானபோது அவனுக்குப்பாகிய வியவகாரத்தின் மிகுதியால் கேவலம் திருஷ்டதுக்க மாத்திரமே யுண்டாகின்றது. யாதாமோர் சம்சய விபரீத பாவனைகளின் உற்பத்தியால் மோக்ஷத்திற்கு இடையீடுண்டாகாது. ஏனெனின், நெடுங்கால சிரவண மனன நிதித்தியாசனங்களால் பிரஹ்மாத்ம தத்துவத்தை நிச்சயஞ்செய்து அங்கை நெல்லிக்கனி போல் தனது அத்வயானந்த சொரூபத்தை அநுபவிக்கும் ஞானிக்குப் பிராரப்த கர்மத்தின் வயமாகச் சிறிதளவு பாகிய வியவகாரத்தால் அச்சம்சய விபரீதபாவனை முதலியன சம்பவியா. ஆகலின் பிராரப்த கர்மத்தின் வயப்படி அந்நபானதி வியவகாரங்களுண்டாயினும் ஞானிக்கு மோக்ஷம் அவசியம் பிராப்தமாம். அம்மோக்ஷத்திற்கு ஒன்றுந் தடை செய்யாது.

இவ்வார்த்தை ஸ்ரீவியாசபகவானும் பிரஹ்மசூத்திரத்திற் கூறியிருக்கின்றனர். சூத்திரம். தநிஷஸு மொகெஷாவஷெமாஸ (இ-ள்) பிரஹ்மாத்மாவினிடத்து நிஷ்டையுடைய ஞானிக்கே முத்திவருமென்று சுருதி ஸ்மிருதிகள் அறைந்துள்ளன. சுருதி தஸுதா வஷெவ விரஂ யாவநுவிமொகெஷ ஜ யுஸ

வதெ ) (இ-ள்) எதுவரைக்கும் போகத்தாற் பிராரப்த கர்மராகித்யமாகவில்லையோ அதுவரைக்குமே ஞானிக்கு விதேக மோக்ஷத்தில் தாமதமுண்டு. அந்தப் பிராரப்த கர்மம் நீங்கின பிறகு அவன் நிர்விசேஷ பிரஹ்மபாவமாகிய விதேக மோக்ஷத்தை அவசியம் பெறுகின்றான். ஸ்மிருதி. யவவம்வெத்தி... ...ஜா யதெ (இ-ள்) அர்ச்சுனா! எவன் தேசகாலவஸ்து பரிச்சேதமின்றிய ஆனந்த சொரூப பரமாத்வை யான் பிரஹ்மம் என்றிவ்வாறாகத் தனது ஆத்மவடிவமாகவும் சத்வ ரஜ தமமென்னும் முக்குணங்களுடன் கூடிய மாயையாகிய பிரகிருதியை மித்தையாகவு மறிகின்றானோ அவ்வித்வான் எவ்வகையாக விருப்பவனாயினும் அதாவது பிரபல பிராரப்த கர்மவசத்தால் ஓர்கால் இஷ்டப்படி யொழுகினாலும் அவன் மறுபிறப்பை யடையமாட்டான். தனது இதே அபிப்பிராயத்தை ஸ்ரீபகவான் பதினெட்டாவது அத்தியாயத்தின்கண் வெளியிடுகின்றார். சுலோகம். யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே । ஹத்வாபி ஸ இமாம்ல்லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே (இ-ள்) அர்ச்சுனா! எந்த ஞானிக்கு 'நான் கருமத்தைச் செய்கின்றேன்' என்னும் எண்ணமில்லையோ; மேலும் எந்த ஞானியின் புத்தி 'யான் இக்கர்மபலத்தைத் துய்ப்பேன்' என்று அக்கர்ம பலத்திற் பற்றுமில்லையோ அந்த ஞானி ஓர்கால் இவரனைவரையுங் கொல்லுகினும், அக்கொலைத் தொழிற்கு முதலும், அத்தொழிலாற்றானென்றும் அநிஷ்ட பல!நரகத்தோடு இயைபுடையவனு மாகான்.

அன்றியுங்கூறிய விப்பொருளையே சேஷபகவானு முரைத்திருக்கின்றனர். சுலோகம். ஹயமேதஸஹஸ்ராண்யத குருதே ப்ரஹ்மகாதலக்ஷாணி பரமார்த்தவிந்நபுண்யைர்ந ச பாபை: ஸ்ப்ருச்யதே விமல: (இ-ள்) யான் பிரஹ்மம் என்னும் சாட்சாத்காரமுடைய தத்துவ வேத்தாவானவன் ஓர்கால் நூறாயிரம் அசுவமேதயாகங்களைப் புரியினும், இலட்சம் பிராம்மணர்களைக் கொல்லுகினும், அவன் அவ்வசுவமேதங்களாலுண்டான புண்ணியங்களாலும், பிரஹ்ம ஹத்தியாலுண்டான பாபங்களாலும் பற்றுடையவனாகான், அத்தத்துவவேத்தா விமலனென்னுங் காரணத்தான். அஃதாவது அவன் அவித்தியாதி மலரகிதன் என்ப.

அன்றியும், கூறிய விவ்வர்த்தத்தினை ஸ்ரீவித்யாரணிய சுவாமிகளும் கூறியிருக்கின்றனர். சுலோகம். வைராக்யபோதோபரமா: ஸஹாயா: பரஸ்பரம் ப்ராயசஏவ ததா । ஸோபோக்ஷோ விநிவ்ருத்த: கிஞ்சித் த்ருஷ்டது:கம் ந நிவர்த்ததி (இ-ள்) வைராக்கியம், போதம், உபரதி என்னும் மூன்றனுள் எப்போது ஒருவனுக்கு ஆத்ம சாட்சாத்காரமாகிய போதம் பூர்ணமாகியும், யாதாமோர் பாப பிராரப்தத்தின் வசத்தால் வைராக்கியம் உபரதி என்னு மிரண்டிற்குந் தடையுண்டாமேல், அப்போது அவனுக்கு மோக்ஷமோ நிச்சயமாயுண்டாகும்; ஆனால் அவ்வைராக்கிய உபரதிகளில்லாமையால் அவனுக்குத் திருஷ்ட துக்கம் நீங்காது. ஈண்டுத் தாற்பரியமிதுவாம்:—வைராக்கியம், போதம், உபரதி என்னும் மூன்றும் ஒன்றுக்கொன்று சஹாயமிருத்தலின் பெரும்பான்மையும் ஒன்

றுகவே யிருக்கும். ஆனுல் சில விடத்தில் இம்மூன்றுக்கும் ஒன்றுக்கொன்று நீக்கமு முண்டாகின்றது. மகா தவத்தோடுங் கூடியவரும் பரமேசுவரனது திருவருளையுடையவருமாகிய உத்தமாதிகாரிகளினிடத்தோ அம்மூன்றும் ஒன்றுகவே நிகழ்கின்றன. மத்திமாதிகாரிகளினிடத்துச் சில பாப பிராரப்தத்தின் வலியால் அவற்றின் நீக்கமுமுண்டு. அந்நீக்கத்தின் கண்ணும் இத்துணைப்பேத முண்டு. எவனுக்கு வைராக்கியம், உபரதி என்னு மிரண்டும் பூரணமாகியும், ஆத்ம சாட்சாத்காரமாகிய போதத்திற்குத்தடை நேருகின்றதோ,அவனுக்குமோக்ஷப் பிராப்தி யுண்டாகாது. ஆனுல் அத்தவத்தின் வலியால் உத்தமலோகம் பிராப்தமாகின்றது. எவனுக்கு அப்போதம் பூரணமாகிச் சில பாப பிராரப்தத்தின் வசத்தால் வைராக்கியம் உபரதி என்னுமிரண்டும் தடைப்படுகின்றனவோ, அவனுக்கு மோக்ஷமோ அவசிய முண்டாகும்; ஆனுல் திருஷ்ட துக்கம் நீங்காது.

## வைராக்கியம், போதம், உபரதிகளின் சொரூபமுதலியன கூறுதல்.

இவ்வுலக பரலோக விஷயங்களில் சாதிசயம்,நிலையாமை முதலாய குற்றங்காண்டல் வைராக்கியத்திற்குச் சாதனமாம். இவ்வுலக பரலோக விஷயங்களைக் கழன்றிடுமிச்சை வைராக்கியத்தின் சொரூபமாம்.பிரயத்னமன்றியிற் பிராப்தமான போகங்களிலும் சித்தஞ் சாராமை வைராக்கியத்தின் பலமாம். எல்லாஉலகங்களிலும் மேம்பட்ட பிரஹ்மலோகத்தையும் துரும்பை நிகர்த்துத் துச்சமென மதித்தல் வைராக்கியத்தின் பூரணத்தன்மையாகிய அவதியாம் (வரம்பாம்).சிரவணம் மனனம் நிதித்தியாசனம் என்னும் மூன்றும் அப்போதத்திற்குச் சாதனங்களாம். மித்தையான தேகாதிகளினின்றும் பிரத்தியக் ஆத்மாவை வேறுக்குதலே போதத்தின் சொரூபமாம். அகங்கார முதலியவைகளோடு ஆத்மாவின் தாதான்மியாத்தியாசமாகிய கிரந்திமறித்தும்உதயமாகாமைபோதத்தின் பலமாம்.அஞ்ஞானிகட்குத் தேகத்தில் என்னணம் திட ஆத்மத்தன்மைப் புத்தி யுண்டோ, அன்னணம் பரமாத்மாவினுள்ள திட ஆத்மத்தன்மைப் புத்தி அப்போதத்தின் பூரணத்தன்மையாகிய அவதி(எல்லை)யாம். இயம நியமாதிகள் உபரதிக்குச் சாதனங்களாம். மனத்தினது சர்வ விருத்திகளு மொடுங்கல் உபரதியின் சொரூபமாம். இலௌகிக வைதிகமான வெல்லா வியவகாரங்களின் மயலறுதல் அவ்வுபரதியின் பலமாம். சுழுத்தியன்போற்பொருள்களனைத்தினையும் நினையாமை உபரதியின் பூரணத்தன்மையாகிய அவதியாம்.

ஆண்டு அசம்பாவனை விபரீதபாவனைகளில்லாமையே பிரஹ்ம சாட்சாத்காரமாகிய போதத்தின் பூரணத்தன்மையாகிய அவதியாம். அப்போதத்தின் பூரணமென்னும் அவதியை விஷ்ணு புராணத்தில் பராசர முநிவருங் கூறியிருக்கின்றனர். சுலோகம். [illegible] (இ-ள்)யானும் இவ்வெல்லா உலகும் பரமாத்ம வடிவமே,அப்பரமாத்மாவிற்கு வேறுக ஓர் காரண காரியமுமில்லை, என்றிவ்விதமான சர்வாத்ம புத்தி எவனுக்குண்டாயிருக்கின்றதோ அவனுக்கு மறித்தும் சம்சாரத்தாற்நேருன்றும்

சீதஉஷ்ணம், மான அவமானம் முதலிய துவந்துவமாகிய ரோகங்கள் உண்டாகா. அன்றியும், போதத்தினது பூரணமென்னும் அவதியை ஸ்கந்தபுராணத்திலுள்ள பிரஹ்மகீதையின்கண் பிரஹ்மாவிற்கு மஹாதேவர் அருளி யிருக்கின்றனர். சுலோகம் [Grantha verse] (இ-ள்.) நானே சர்வஜகத் வடிவன், என்னைவிடப் பிறிதோர் பொருளுங் கிடையாது; இவ்விதமாகிய சர்வாத்ம பாவமே எல்லாமறைகளின் மேலான கருத்து. எமக்கும் இதுவே அநுபவம். இச்சர்வாத்ம பாவத்தில் நீ ஓர்போதும் ஐயமுறவேண்டாம். மேலும், இப்போதத்தினது பூரணத்தன்மையின் அவதியை உபதேச ஸஹஸ்ரீ என்னும் நூலில் ஆசாரியரவர்களும் கூறியிருக்கின்றனர். சுலோகம். [Grantha verse] (இ-ள்) எப்படி அஞ்ஞானிகளுக்குத் தமது தேகத்தில் யான் மனிதன் என்னுந் திடஞான முண்டாகின்றதோ, அப்படி எவனுக்குப் பிரத்தியகாத்மாவில் யான் பிரஹ்மம் என்னும் சம்சய விபரீதபாவனைகளற்ற திடஞானம் உண்டாமோ; எந்தஞானம் அத்தேகாத்ம ஞானத்தை நாசஞ் செய்யுமோ, அப்படிப்பட்ட ஞானமுடையவன் மோக்ஷத்தை விரும்பானாயினும் அவன் அவசியம் மோக்ஷத்தைப் பெறுவான். இன்னும், இப்போதத்தின் பூரணமென்னும் அவதியை ஸ்ரீவித்யாரணிய சுவாமிகளும் திருப்திதீபத்திற் கூறியிருக்கின்றனர் சுலோகம். [Grantha verse] (இ-ள்) இளைகிகர்கட்குத் தமது தேகவடிவான ஆத்மாவினிடத்துச் சம்சய விபரீத பாவனைகளின்றி யான் மனிதன், யான் அந்தணன் என்னும் ஞானம் காணப்படுகின்றவாறுபோல இவ்வதிகாரியால் முத்தி சித்திக்கும் பொருட்டுப் பிரத்தியக் ஆத்மாவினிடத்துச் சம்சய விபரீதபாவனைகளின்றி 'யான் பிரஹ்மம்' என்னும் போதமே சம்பாதிக்கத்தக்கது. இவ்வாறு நிர்ணயித்தற் பொருட்டே சுருதியில் 'இந்த' என்னும் பதங் கூறப்பட்டுளது. அச்சுருதி மேற்கூறுதும். இத்தொடக்கத்துப் பல சுருதி ஸ்மிருதி ஆசாரிய வாக்கியமாகிய பிரமாணங்களால் அப்போதத்தினது பூரணத்தன்மையாகிய அவதி பெறப்படுகின்றது. ஆகவே முற்கூறிய விவேக முதலிய சதுஷ்டய சாதனங்கள் நிரம்பினவனுக்குச் சிரவண மனன நிதித்தியாசனங்களால் யான் பிரஹ்மம் என்னும் சாட்சாத்கார முண்டாகின்றது, அச்சாட்சாத்காரத்தால் அவித்தையின் நிவிர்த்தியும் பிரஹ்ம பாவமாகிய முத்திப்பேறு முண்டாமெனல் பெற்றும்.

சங்கை:—பிரஹ்ம சாட்சாத்காரத்தால் இப்புருஷனுக்கு அவித்தியா நிவிருத்தியும், பிரஹ்மபாவமாகிய முத்திப்பேறுமுண்டா மென்பதிற் பிரமாணங்கள் யாவையோ?

சமாதானம்:—இப்பொருளிற் சாட்சாத்வேதசுருதியும் ஸ்மிருதியும் பிரமாணங்கள். சுருதி. [Grantha verse]

ஸ்தாயபரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே। ஸஉத்தமஃ புருஷஃ। ஞாத்வாதேவம்முச்யதே ஸர்வபாசைஃ க்ஷீணைஃ க்லேசைர்ஜந்மம்ருத்யுப்ரஹாணிஃ। யஸ்யாநுவித்தஃ ப்ரதிபுத்த ஆத்மா ஸ ஏவ ப்ரஹ்ம க்ருத க்ருத்யோ பவதி (இ-ள்) இவ்வதிகாரி அப்பரமாத்மாவை யான் பிரஹ்மம் என்று சாட்சாத்கரித்துச் சம்சார (சனனமரண) த்திற்குக்காரணபூதமான அஜ்ஞானமென்னும் மிருத்யுவை நாசஞ்செய்கின்றான். ஆத்மாவை யுணர்ந்தவன் சோகத்தைக் கடக்கின்றான். அஃதாவது சம்சாரத்திற்குக் காரணமாகிய அஜ்ஞானத்தை நாசஞ்செய்கின்றான். பிரஹ்ம சாட்சாத்காரமுள்ளவன் பிரஹ்ம வடிவனேயாகின்றான். இச் சம்பிரசாத னெனப் பெயரிய ஜீவன் விசாரத்தாற்றால சூட்சும சரீரங்களின் அபிமானத்தை நீத்து யான் பிரஹ்மம் என்று பரப்பிரஹ்மத்தைத் தனது ஆத்ம வடிவமாக வுணர்ந்து அப்பரப் பிரஹ்ம வடிவனே யாகின்றான். எவ்வதிகாரி பிரஹ்ம சாட்சாத்காரத்தாற் பிரஹ்ம வடிவனாகின்றனனோ, அவ்வதிகாரி உத்தமனும் புருஷனுமாவான். ஆண்டுப் பிரஹ்ம சாட்சாத்காரத்தால் அஞ்ஞானமாகிய தமசு நீங்கி விட்டவன் உத்தமனும், யாண்டும் நிறைந்தவன் புருஷனுமாவன். நித்திய அபரோட்ச வடிவமாயும் சர்வசாட்சி வடிவமாயுமுள்ள பரமாத்மாவை யான் என எப்போது ஒருவன் பிரத்தியக் ஆத்மாவைச் சாட்சாத்கரிக்கின்றானோ, அப்போதே அந்த ஞானி எதை இச்சித்தவனாய் எதன் பொருட்டுச் சரீரத்தைப் பின் பற்றித் தாபமடைவான்; ஆனால் தாபமடையான். அபரிச்சின்ன ஆனந்த வடிவமாயும், ஏகமாயும், போதவடிவாயுமுள்ள பிரஹ்மம் எதுவோ, அந்தப் பிரஹ்மத்தை யான் என்றுணர்ந்தவன் கிருத கிருத்யனேயாகின்றான்.

அன்றியும், இவ்வர்த்தத்தினைக் கீதையின்கண் ஸ்ரீகிருஷ்ணபகவானும் அருளியிருக்கின்றனர். சுலோகம். ஏதத்புத்த்வா புத்திமாந்ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்ச பாரத। ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம் (இ-ள்) அர்ச்சுனா! இந்தப் பிரஹ்மாத்ம தத்துவத்தை யான் பிரஹ்மம் என்று சாட்சாத்கரித்து இப்புருஷன் புத்திமானும், கிருதகிருத்யனுமாவன். அன்றியும், ஞானி பரமேசுவரனாகிய வென் ஆத்மவடிவனாகவே இருக்கின்றான் என்பது எனது கொள்கை. இதுவன்றி இவ்வர்த்தத்தைச் சேஷ பகவானுங் கூறியிருக்கின்றனர். சுலோகம். வ்ருக்ஷாக்ராச்ச்யுதபாதோ யத்யப்யநிச்சந் நரஃ க்ஷிதௌ பததி தத்வத்குணவாந் மோக்ஷம் ஜ்ஞாநீ அநிச்சந்நபி கேவலீ பவதி (இ-ள்) எங்ஙனம் விருட்சத்தின் மீதிருந்து பிறழ்ந்தவன் பூமியில்விழ இச்சியானாயினும் அப்பூமியில் அவசியம் விழுகின்றானோ, அங்ஙனமே ஆத்ம சாட்சாத்காரமுடையவன் மோக்ஷத்தை இச்சியானாயினும் அவசியம் மோக்ஷத்தை அடைகின்றான்--என்னுந் தொடக்கத்துப் பல சுருதி ஸ்மிருதி வசனங்கள் பிரஹ்ம சாட்சாத்காரத்தால் அவித்தையின்

நிவிர்த்தியும், பிரஹ்ம வடிவப்ப்பிராப்தியுங் கூறி யிருக்கின்றன. ஆகவே தத்துவமசி முதலிய மகா வாக்கிய விசாரத்தால் உண்டான அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் சாட்சாத்காரத்தால் இத்தத்துவவேத்தாவுக்கு நித்திய நிரதிசய அகண்ட ஏகரச ஆனந்த பிரஹ்ம பாவ வடிவ முக்தி பிராப்தமாம் என்பது பெறப்பட்டது.

இஃது ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ உத்தவானந்தகிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யனான
சித்கனானந்தகிரி சுவாமியாற் செய்யப்பட்ட
பிராகிருத தத்துவாநுசந்தானத்தின்
மூன்றாவது பரிச்சேதம் முற்றிற்று.

---

ஸ்ரீகணேசாயநமஃ ஸ்ரீகுருப்யோநமஃ

ஸ்ரீகாசீவிசுவேசுவராப்யாம் நமஃ ஸ்ரீசங்கராசார்யேப்யோ நமஃ

# தத்துவாநுசந்தானம்

## நான்காவது பரிச்சேதம்.

முன்னே மூன்ருவது பரிச்சேதத்தின் ஈற்றில், பிரஹ்ம சாட்சாத்காரத்தி ஞல் முக்தியின் பிராப்தி கூறப்பட்டது. ஜீவன் முக்தி விதேக முக்தி என்னும் வேறுபாட்டால் அம்முக்தி இருவகைத்து. சில நூலாசிரியர்கள் ஜீவன் முக்தி யை யங்கீகரிப்பதின்றி விதேகமுக்தி யொன்றையே யங்கீகரிக்கின்றனர். அவர்க ளுடைய மதத்தைக் கண்டித்தற் பொருட்டு முதற்கண் அவர்களது மதத்தை நுவல்வாம்.

பிரஹ்ம சாட்சாத்காரத்தால் வித்வானுக்கு விதேக முக்தியொன்றே யுண் டாகின்றது; ஜீவன் முக்தியுண்டாகின்றதில்லை. ஏனெனின், ஜீவன் முக்தியினி டத்துப் பிரமாணம், இலட்சணம், சாதனம், அதிகாரி பயன் இவைகளொன் றும் சம்பவியா. ஆனல், வஸ்துவின் சித்தி இலட்சணம் பிரமாணம் முதலிவற் றிஞனேயே பெறப்படுகின்றது. அந்த லட்சண பிரமாண முதலியன வின்மை யால் அச்சீவன்முக்தி யங்கீகரிக்கத் தக்கதன்று.

### ஜீவன் முக்தியிற் பிரமாணம் இலட்சணம் அதிகாரி பயன் இவைகளில்லை யெனல்.

**சங்கை:**—விமுக்தஶ்ச விமுச்யதே। ஸஜீவந்முக்த உச்யதே। ஸ்தித ப்ரஜ்ஞஸ்ததோச்யதே (முக்தன்விடுபடுகின்ருன். அவன் ஜீவன் முக்தன் எனப்படுகின் ருன். அப்போது ஸ்தித பிரஜ்ஞன் எனப்படுகின்ருன்) என்னுந் தொடக்கத் துச் சுருதி ஸ்மிருதி வசனங்கள் அச்சிவன் முக்தியிற் பிரமாணங்களாக விருக்க அதன்கண் பிரமாணமில்லையெனக் கூறுதல் அசங்கதமாமே?

**சமாதானம்:**—அச்சுருதி ஸ்மிருதி வசனங்களுக்குப் பிரஹ்ம வித்தையைப் போற்றுவ்தனுற் பிரஹ்மத்தின்கண் தாற்பரியமே யன்றி, அச்சீவன் முக்தியில் தாற்பரியமன்று. ஆகவே அவ்வசனங்களால் ஜீவன் முக்தியின் பெறுதியுண்டா காது.

அஜ்ஞான நிவிர்த்தி ஜீவன் முக்தியா? அல்லது, பிரஹ்மபாவம் ஜீவன் முக்தியா? அல்லது, ஜீவித அவஸ்தையில் கர்த்ருத்வ போக்த்ருத்வ முதலிய பந்த நிவிர்த்தி ஜீவன் முக்தியா? முதலாவது அல்லது இரண்டாவது இலக் கணத்தை யங்கீகரிக்கின், அது பொருந்தாது. ஏனெனின்; விதேக முக்தியி

னும் அஜ்ஞான நிவிர்த்தியும், பிரஹ்மபாவமும் உள்ளனவே. ஆகலின் அதன் கண் அவ்விரு லட்சணங்களுக்கு அதிவியாப்தி யுண்டாகும். அதிவியாப்திக் குற்றமுடைய இலக்கணம் தனது இலக்கியப்பொருளின் பெறுதியைச் செய்யவேலாது. ஆகவே அம்முதலாவது இரண்டாவது இலக்கணங்களால் ஜீவன் முக்தி சித்தியாது. மூன்றாவது இலக்கணத்தை அங்கிகரிக்கினும் அதுவும் பொருந்தாது. ஏனெனின், ஜீவித அவஸ்தையில் போகத்தைப் பயப்பதாகிய பிராரப்த கர்மம் உளதாகக் கர்த்ருத்வ முதலிய பந்தத்தின் நிவிர்த்தியே நிகழாது. ஆகவே அம்மூன்றாவது இலக்கணம் அசம்பவக் குற்றமுடையதால் அதனானும் ஜீவன் முக்தி சித்தியாது.

அல்லது, ஜீவித அவஸ்தையில் அக் கர்த்ருத்வ முதலிய பந்தம் சாட்சி சைதன்யத்தால் நீங்குகின்றதா? அல்லது, அகங்காரத்தால் நீங்குகின்றதா? முதற்பட்சம் பொருந்தாது. ஏனெனின், சாட்சி சைதன்யத்தின்கண் வாஸ்தவமாய்ப் பந்தமில்லை. ஆனால், அந்தக்கரணத்தின் தாதான்மிய அத்தியாசத்தால் அப்பந்தம் தோற்றுகின்றது. எப்போது ஆத்ம சாட்சாத்காரத்தால் அத் தாதான்மிய அத்தியாசம் நீங்குகின்றதோ, அப்போதே ஆரோபிக்கப்பட்ட அப்பந்தமும் நீங்குகின்றது. ஆகவே அச்சாட்சியால் பந்த நீக்கத்தின் பொருட்டுச் ஜீவன் முக்தியைச் சம்பாதிப்பது வீணையாகும். இரண்டாவது பட்சத்தை அங்கிகரிக்கின், அதுவும் பொருந்தாது. ஏனெனின், போகத்தைத் தருவதாகிய பிராரப்த கர்மம் நிற்குங்கால், அகங்காரத்தில் இயல்பாய்ப் பெறப்பட்ட பந்தத்தின் நீக்கம் சம்பவியாது. தாற்பரிய மிஃதாம்:—எத்தர்மிக்கு எது இயல்பான தர்மமாமோ, அவ்வியல்பான தர்மம் அத்தர்மி உளதாக நீங்குவதில்லை. எங்ஙனம் அக்நியின் வெம்மைத்தர்மமும், ஜலத்தின் நெகிழ்ச்சித் தர்மமும், அக்நி ஜலமாகிய தர்மிகள் உள்ளனவாக நீங்குவதில்லையோ, அங்ஙனமே அகங்காரத்தின் இயல்பான தர்மமாகிய கர்த்ருத்வ முதலிய பந்தங்களும் அவ்வகங்காரமாகிய தர்மி உளதாக நீங்கா.

சங்கை:—அகங்காரத்துற்ற கர்த்ருத்தன்மை முதலியவற்றின் அழிவு சொரூபமாக உண்டாகாதாயினும் யோகப்பழக்கத்தால், அப்பந்தத்தின் அழிவு உண்டாகின்றதே?

சமாதானம்:—எவ்வாறு ஆத்ம ஞானத்தைக் காட்டிலும் பிராரப்த கர்மம் பிரபலமாகின்றதோ, அவ்வாறே யோகப்பழக்கத்தைக் காட்டிலும் பிராரப்த கர்மம் பிரபலமாகின்றது. மேலும், அந்தப் பிராரப்த கர்மத்தின் பயனைத் துய்த்தல் கர்த்ருத்தன்மை முதலியவற்றின் அபிமானமன்றிச் சம்பவியாது. ஆகையால் அந்தப் பிரபல பிராரப்த கர்மம் நிற்குங் காலத்து, அந்த யோகப் பழக்கம் அக்கர்த்ருத் தன்மையாகிய பந்தத்தின் அழிவுபாட்டை உண்டாக்காது. ஆகவே ஜீவித காலத்தில் கர்த்ருத்தன்மை முதலிய பந்தநீக்கம் ஜீவன் முக்தியாமென்னும் ஜீவன் முக்தியின் இலக்கணம் பொருந்தாது.

ஜீவன் முக்தியை யங்கிகரிப்பவனைக் கேட்க வேண்டியதாவது:—ஜீவன் முக்திக்குச் சாதனம் ஆத்மஞானமா? அல்லது, யோகமா? முதற்பட்சம் பொ

ருந்தாது. ஏனெனின், அவ்வாத்ம ஞானம் விதேக முக்திக்குச் சாதனமாமே யன்றி ஜீவன் முக்திக்குச் சாதனமாகாது. ஜ்ஞாநாதேவது கைவல்யம் (ஞான மொன்றினுனேயே மோட்சம்) என்பது முதலிய சுருதிகள் ஆத்மஞானத்தால் முக்திப்பேறு கூறியிருக்கின்றன. ஜீவன் முக்திப்பேற்றை யாதும் கூறிற்றில்லை. ஆகையால் ஆத்மஞானம் விதேக முக்திக்கே சாதனமாயிருக்கின்றது. அது போலவே இரண்டாவது பட்சமும் பொருந்தாது. ஏனெனின், சிரவண முதலியன எங்ஙனம் ஆத்ம ஞானத்திற்குச் சாதனங்களாமோ, அங்ஙனமே அந்த யோகமும் ஆத்ம ஞானத்திற்கே சாதனமாம். ஆகவே யோகமும் ஜீவன் முக்திச் சாதனமாகுமெனல் பொருந்தாது.

ஜீவன் முக்திக்கு முமூட்சுவை அதிகாரியாகக் கூறுதல்கூடாது. ஆனுல், ஞானியையே அதற்கு அதிகாரியாகக் கூறலாகுமெனின்; அது பொருந்தாது. ஏனெனின், ஜ்ஞாநாம்ருதேந த்ருப்தஸ்ய க்ருதக்ருத்யஸ்ய யோகிந:। நைவாஸ்தி கிஞ்சித் கர்த்தவ்யம் அஸ்தி சேந்ந ஸ தத்வவித்॥ தஸ்ய கார்யம் ந வித்யதே (ஞானமிருதத்தினுல் திருப்தியடைந்தும் கிருத கிருத்யனுயுமிருக்கும் யோகிக்குச் செய்யவேண்டுவது சிறிதுமில்லை, அங்ஙனஞ்செய்ய வேண்டியது இருக்குமாயின் அவன் தத்துவத்தை அறிந்தவனல்ல. அவனுக்குக் கார்யமொன்று மில்லை) இத்தொடக்கத்து வசனங்கள் ஞானிக்குக் கர்த்தவ்யத் தன்மையை விலக்கியுள்ளன. ஞானியை ஜீவன் முக்திக்கு அதிகாரி யென்றங்கீகரிக்கின் சீவன் முக்திக்கான சாதனங்களின் கர்த்தவ்யம் அவனுக்கு அவசியமுண்டாகும். அதனுல் மேற்கூறிய வசனங்களுக்கு முரண்வரும். மேலும் தேகாபிமான முள்ளவனே கர்த்தாவாவன். ஞானி அத்தேகாபிமான மில்லாதவனுகலின், அவன் கர்த்தாத்தன்மையில்லாதவனுகின்ருன். அந்தக் கர்த்தாத்தன்மையில்லையாகவே ஞானிக்கு அச்சீவன் முக்தி சாதனங்களில் ஊக்கஞ் செல்லாது. ஆகவே ஞானிக்கு அச்சீவன் முக்தியின்கண் அதிகாரமும், அதிகாரமில்லாமல் அதன் சாதனங்களைப் பழகுதலுஞ் சம்பவியா.

ஜீவன் முக்தியை அங்கீகரிக்கும் வாதியை இது கேட்டல் வேண்டும். ஜீவன் முக்தியின் பயன் யாது? அதாவது பயனைக் கருதுவதன்றி மந்தனுக்கும் முயற்சி நிகழாதாயின், புத்திமானுக்குப் பயனின்றி முயற்சி எவ்வாறு நிகழும். ஆகலின் அச்சீவன் முக்தியைச் சம்பாதித்தலிற் புருஷனது முயற்சியின் பொருட்டு அச்சீவன் முக்திக்கு யாதாமோர் பயன் கூறுதல் வேண்டும். உண்டான ஆத்மஞானத்தைக் காத்தல் அச்சீவன் முக்திக்குப் பயனு? அல்லது, துக்க நாசம் பயனு? அல்லது, சொரூபசுகத்தின் ஆவிர்ப்பாவம் பயனு? முதற்பட்சம் பொருந்தாது. ஏனெனின், தத்துவமசி முதலிய பிரமாணங்களாற் றேன்றியதும், அஜ்ஞானத்தை நிவிர்த்தி செய்வதில் வலுவுடையதுமான ஆத்மஞானத்திற்கு யாதொன்றும் பாதகமாகாது. பாதகமிருந்தாலன்றே காத்தல் வேண்டும். பாதகமிலதால் ஞானத்தைக் காத்தலென்பதே கூடாது. இவ்வாறே துக்கநாசமும், சுகாவிர்ப்பாவமுமாகிய விரண்டும் ஜீவன் முக்திக்குப் பயன்களாகா. ஏனெனின், அவை யிரண்டும் ஆத்ம ஞானத்தினுனேயே அடையப்படுகின்றன. எவ்வஸ்து எச்சாதனத்தால் அடையப்படுமோ, அவ்

வஸ்து அச்சாதனத்தினதே பயனாகின்றது; வேறு சாதனத்தின் பயனாகின்ற தில்லை. ஆகலின் துக்கநாசமும் சுகத்தின் ஆவிர்ப்பாவமுமாகிய விரண்டும் ஆத்ம ஞானத்தினதே பயன்களாம்; ஜீவன் முக்தியின் பயன்களாகா.

இவ்வாற்றால் பிரமாணம், சொரூபவிலக்கணம், சாதனம், அதிகாரி, பயன் ஆகிய விவையைந்து மின்மையால் ஜீவன் முக்தியின் அங்கீகாரம் பொருளில்லாதது. ஆகவே ஆத்மஞானத்தினால் விதேகமுக்தி யொன்றே யுண்டாகின்றது; ஜீவன்முக்தி யுண்டாகாது. இவ்வகையாகச் சில நூலாசிரியர்கள் ஜீவன் முக்தியைக் கண்டித்து விதேக முக்தி யொன்றையே அங்கீகரித்திருக்கின்றனர். அவர்களின் மதத்தைக் கண்டித்தற்பொருட்டு இப்போது அம் முக்தியின் பிரிவைக் கூறுதும்.

## முக்தியின் பிரிவைக் கூறுதல்.

மேற்கூறிய முக்தி இருவிதம். விதேக முக்தியொன்று, ஜீவன் முக்தி மற்றொன்று, ஜீவன் முக்திக்குப் பிறகு விதேக முக்தி யுண்டாவதால் அச்சீவன் முக்தியை முதலில் நிரூபிப்பது உசிதமாயினும் ஜீவன் முக்தி விவாதத்தால் விழுங்கப்பட்டிருக்கின்றமையால் அதன் நிரூபணம் மிக விரிவுடைத்து. விதேக முக்தியில் எவருக்கும் விவாதமிலதாதல் பற்றி அதன் நிரூபணம் சிறிதேயாம். ஆகலின் * சூசிகடாஹ நியாயம் போன்று முதற்கண் விதேகமுக்தி நிரூபிப்பாம்.

## விதேஹமுக்தியின் நிரூபணம்.

'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் மெய்யறிவுள்ளவனுக்குப் போகத்தாற் பிராரப்த கர்மந் தேய, எடுத்த உடல் நாசமாதலை விதேக முக்தி எனப்படும். இவ்விதேக முக்தியைப்பற்றி ஸ்ரீவியாச (மறைகளை வகுத்துத் திரட்டிய) பகவானும் பிரஹ்ம சூத்திரத்திற் கூறியிருக்கின்றனர். சூத்திரம் ஹொமெநகவி தரெ கூ வயிகவா ஸஂவஜ்யெத (இ-ள்) ஞானிக்கு இன்ப துன்ப நுகர்ச்சியாற் புண்ணிய பாபமாகிய பிராரப்த கர்மந் தொலையவே, சரீரநாசத்தின் பின்னர், அவன் மீட்டும் பிறவாமே அகண்ட ஏகரச ஆனந்த பிரஹ்மாத்ம வடிவமாக நிலைக்கின்றான். ஏனெனின், ஞானிக்கு ஆத்மஞானத்தால் அஜ்ஞானமும், சஞ்சித கர்மமும் நாசமாய் விட்டன. ஆத்ம ஞானத்தின் பெருமையால் ஞானிக்கு ஆகாமி புண்ணியபாப கர்மத்தின் பரிசமே உண்டாகாது. அன்றியும், இடையீடாகிய பிராரப்த கர்மம் போகத்தால் நாசமடைந்தவுடன், வாசனையோடுங்கூடிய விட்சேப சக்தியுடைய அஜ்ஞானமும் நாசமாய் விடுகின்றது. ஆகவே பிறப்பை யடைவிப்பதாகிய சஞ்சித கர்மமுதலிய காரணங்களில்லையாக, ஞானிக்கு மறித்தும் பிறவியுண்டாதலில்லை. ஆனால், இவ்வர்த்தமான சரீர நாசத்தின் பின்னர்,

---

* சூசி-ஊசி, கடாஹம்-பெருங்கொப்பரை, நியாயம்-திருஷ்டாந்தம். இருப்பு ஊசியையும் இருப்புக் கொப்பரையையும் ஒரு கொல்லனிடம் செய்யச் சொல்ல, அவன் சிறிதான ஊசியை முன்னே செய்துவிட்டுப் பிறகு பெரிதான கொப்பரையைச் செய்தல் போலவாம்.

ஞானி நிர்விசேஷ பிரஹ்ம வடிவமேயாகின்றான். விதேக முக்தியின் சொருபத்தினை தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யேऽத ஸம்பத்ஸ்யே (எதுவரையிலும் அவன் மோட்சத்தை யடைகின்றதில்லையோ, அதுவரையிலுமே அவனுக்கு அதிகார முண்டு, பிறகு அவன் மோட்சத்தைப் பெறுகின்றான்) என்னும் மறையும் எடுத்தாண்டது. ஆகவே அவ்விதேக முக்தி சுருதி சூத்திரங்களாற் பெறப்பட்டது.

சங்கை:—எவனுக்குப் பல பிறவிகளைத் தருவதாகிய பிராரப்த கர்மம் இருக்கின்றதோ, அவனுக்கு முதற்பிறப்பில் ஆத்மஞானம் உண்டாக மறுபிறப்பு உண்டாகின்றதா? அல்லது, உண்டாகின்றதில்லையா? முதற்பட்ச மங்கீகரிக்கின் ஞானத்திற்கு ஓரவாரமுண்டாகும். அதாவது ஆத்மஞானம் நியமமாகப் பிறவி நிவிர்த்திக்குக் காரணமாதல் கூடாததாகும். மறுபட்ச மங்கீகரிக்கின் நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி (வினை கற்பகோடி நூறுயினும் அநுபவியாமல் வீயாது) என்னும் வசனத்திற்கும் விரோதம் வரும்.

சமாதானம்:—யாவததிகாரமவஸ்திதிராதிகாரிகாணாம் (அதிகாரமுள்ள வரையிலும் அதிகாரத்தைப் பெற்றவர்களுக்கு முக்தியில்லை)என்னும் சூத்திரத்தில் ஸ்ரீவாதராயணரும் ஸ்ரீசங்கர பகவத் பாதரும் இப்பொருளை நிரூபித்திருக்கின்றனர். படைப்பின் ஆதிகாலத்தில் ஜகத்தின் வியவகாரம் நடக்கும் பொருட்டு, பரமேசுவரர் ஸ்தாபித்துள்ள தேவர் முதலிய வதிகாரிகளுக்கு எவ்வளவு காலம்வரையிலும் அவ்வதிகாரமுண்டோ, அவ்வளவு காலம்வரையிலும் அவர்களுக்கு ஸ்திதியுண்டு. இடையில் யாதாமொரு சாபாநுக்கிரக வயத்தால் அவர்களுக்கு மறுபிறவி வந்தாலும் ஆத்மஞானத்திற்குப் பாதமுண்டாகின்றதில்லை. அதிகாரமுடிவில் அவர்களுக்கு மோட்சமும் அவசிய முண்டாகின்றது. இவ்வாறு எவனுடைய பிராரப்த கர்மம் பல பிறவிகளைத் தருவதாகின்றதோ, அவனுக்கு முதற்பிறப்பில் தத்துவமசி முதலிய மகாவாக்கியப்பிரமாணவன்மையால் ஆத்ம சாட்சாத்காரமுண்டான பின்னர்,அந்தப் பிரபலபிராரப்த கர்மவயப்படி மறுபிறவி வந்தாலும் அந்த ஞானத்திற்குப் பாதமுண்டாகாது. அந்தப் பிராரப்த கர்மத்தின் பயன் ஆத்ம ஞானத்திற்கு விரோதியாதலில்லையாகலின். ஓர்கால் அந்தப் பிராரப்த கர்மத்தின் பயன் அவ்வாத்ம ஞானத்திற்கு விரோதியாமேல், தேவர் முதலிய அதிகாரிகளின் ஆத்மஞானமும் அந்தப் பிராரப்த கர்மத்தின் வன்மையாற் பாதமாதல் வேண்டும். ஆனால், அவர்களுக்குப் பிரஹ்மாத்ம சாட்சாத்காரத்தால் பிரஹ்ம பாவமாகிய மோட்சமோ அவசியம் பிராப்தமாகின்றது. ஆகவே, ஆத்மஞானத்திற்கு ஓரவாரமுமுண்டாகாது. மேலும் நாபுக்தம் க்ஷீயதே கர்ம (வினை அநுபவியாது வீயாது)என்னும் வசனத்திற்கும் விரோதம் வராது. இவ்வாறு சில நூலாசிரியர்கள் கூறுகின்றனர்.

மற்றுஞ் சில நூலாசிரியரோ இவ்வாறியம்புகின்றனர் யஸ்து விஜ்ஞாநவாந் பவத்யமநஸ்க: ஸதாऽஶுசி:। ஸ து தத்பதமாப்நோதி யஸ்மாத் பூயோ ந ஜாயதே॥ யதைவம் வேத்தி வாராணஸம் ப்ராக்ருதிம்வ ராஸ்மெண: ஸஹ। ஸவப்யாவத்து

ஶாநொவி நஸ ஹ—ுயொ<ஹிஜாயதெ (அமநஸ்கனும் எப்பொழுதுஞ் சுசியாயும் நின்று எவன் விஞ்ஞானத்தை யுடையவனுவனே அவன் மீண்டுந் திரும்புதலில்லாதபதத்தைப் பெறுகின்ருன். புருஷனையும் பிரகிருதியையும் குணங்களோடு எவன் இவ்வண்ணம் உணருகின்ருனே, அவன் எவ்வாறிருந்தாலும் மீளவும் பிறப்பதில்லை) என்னுந் தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதிகள் ஞானவானுக்குப் பிறவியை விலக்கி யுள்ளன. ஆகவே எவனுக்கு அந்தப் பிராரப்த வினை பல பிறவிகளுக்குக் காரணமாகின்றதோ, அவனுக்கு முதற்பிறப்பில், கேட்டல் முதலியவைகளால் ஆத்மஞானம் உண்டாவதில்லை. ஆனல், முடிந்த பிறவியிலேயே அவ்வாத்மஞானம் உண்டாகின்றது. இவ்வார்த்தைஸ்ரீவசிஷ்ட பகவானும் அறைந்திருக்கின்றனர். சுலோகம். யஸ்யெஃஜநூவாஶூாத்யம் தஶாஸ்வெவஹாஶ தெ।விஶஂதிவிஷ்யாவிஶயா ஶுக்தாவெணுஜீவொத்தஃ(இ-ள்) மகா மதியையுடைய ராமா? எந்தப் புருடனுக்கு இது இறுதிப் பிறப்பாகின்றதோ, அந்தப் புருடனிடத்தேயே இந்த நிர்மலமான பிரஹ்மவித்தை பிரவேசமாகின்றது. அது, உத்தம ஜாதியையுடைய மூங்கிலில் முத்து பிரவேசிப்பதைப் போலும்— ஆகவே முற்கூறிய இரண்டு பட்சங்களில் போகத்தாற் பிராரப்த கர்மம் நாசமாகவும் தேகம் விழவும், ஞானி பிரஹ்மாத்ம வடிவாக நிலைக்கின்ருன் என்னும் பொருள் பெற்ரும்.

வேறு சில நூற்காரர்கள் விதேக முக்திக்கு உரைக்கும் சொரூபமாவது:-- மேலொரு சரீரத்தை ஆரம்பிக்காத் தன்மை யாதோ, அதுவே விதேக முத்தியாம். அவ்விதேக முக்தி ஞானேற்பத்திக்குச் சமகாலமேயாகின்றது. அதாவது இப்புருஷனுக்கு எக்காலத்தில் ஆன்மஞானம் உண்டாகின்றதோ, அக்காலத்திலேயே அவ்விதேகமுக்தி யுண்டாகின்றது ஏனெனின், ஆத்மஞானத்தால் அஜ்ஞானம் நீங்கிடச் சஞ்சித கர்மம் நாசமாய் விடுகின்றது. அச்சஞ்சித கர்மமே வரக்கடவதான சரீரத்தை ஆரம்பிப்பதாயிருக்கின்றது. ஆகவே இப்புருடனுக்கு ஆத்மஞானத்தின் உற்பத்தி காலத்தில் இனிவருஞ் சரீரத்தை ஆரம்பிக்காத் தன்மையான விதேகமுக்தி கூடும்.

இவ்வார்த்தை வேறு நூற்களிலும் கூறப்பட்டுளது.சுலோகம். தீயெஃவஸவை வஶ்யெஹவாநஷ்ஷ்ஸ ரதிரவிதஜநைஹஃ। ஜ்ஞாந ஸஶொய ஶுக்தஃ கைவல்யம் யாதிஹதஶொகஃ (இ-ள்)ஸ்ரீகாசி முதலிய தீர்த்தங்களிலாவது சண்டாளனது வீட்டிலாவது சரீரத்தை விட்டாலும், சந்நிபாத முதலிய தோஷங்களின் வயப்பட்டுப் பிரஹ்மாத்ம ஸ்மிருதியினின்றும் விலகினும் ஞானி கைவல்ய மோட்சத்தை அடைகின்ருன். எக்காரணத்தாலெனின்,தத்துவமுணர்ந்தோன் ஆத்மஞானத்தின் சமகாலத்திலேயே விடுபட்டவனும், சோகங்களனைத்தும் நீத்தவனுமாவன். இதுவரையினும் விதேகமுக்தி நிரூபிக்கப்பட்டது.

## ஜீவன் முக்தி நிரூபணம்.

சிரவண முதலியவற்றுல் உண்டான பிரஹ்ம சாட்சாத்காரமுடைய வித்வத் சந்யாசிக்கு ஜீவித அவஸ்தையில் கர்த்திருத்தன்மை போக்த்ருத்தன்மை

முதலிய வெல்லாப் பந்தத்தோற்றத்தின் நீக்கம் எதுவோ, அது ஜீவன் முக்தி யெனப்படும்.

சங்கை:—ஜீவன் முக்திக்கு இவ்விலக்கணம் பொருந்தாது. ஏனெனின், போகத்தைப் பயப்பதாகிய பிராரப்த வினை யிருக்குங்கால், ஞானிக்கும் அக் கர்த்ருத் தன்மை முதலிய பந்தத்தின் தோற்றம் அவசிய முண்டாகும். ஏனெனின், 'நான் செய்கின்றேன், நான் அநுபவிக்கின்றேன்' என்னும் புத்தியன்றிப் பிராரப்த வினையின் பயனை நுகர்தல் கூடாது. நான் செய்கின்றேன் என்பது முதலிய பந்தம் சாட்சி ஆத்மாவின் ஞானத்தினுனே நீங்கிவிட்டதாயினும் நீரிலுள்ள நெகிழ்ச்சித் தர்மத்தைப்போலவும், அங்கியினுள்ள வெம்மைத் தர்மத்தைப்போலவும், அந்தக்கரணத்தின் இயற்கைத் தர்மமான கர்த்ருத் தன்மை முதலிய பந்தம் அவ்வந்தக்கரணத்தினின்றும் நீங்க முடியாது. ஆகவே நான் செய்கின்றேன் என்பது முதலிய பந்தத்தோற்றத்தின் நீக்கம் ஜீவன் முக்தியா மென்னும் இலக்கணம் பொருந்தாது.

சமாதானம்:—தத்துவஞானத்தைவிடப் பிராரப்த வினை எங்ஙனம் பிரபலமாகின்றதோ, அங்ஙனமே பிராரப்த வினையை விடவும் யோகப்பயிற்சி பிரபலமாகின்றது. ஆகலின் யோகாப்யாசத்தாற் பிராரப்த போகத்திற்கு அநுகூலமான கர்த்ருத்தன்மை முதலிய பந்தத்தின் தோற்றம் முற்றும் நீங்கிடாதாயினும், யோகப்பழக்கத்தாற் கர்த்ருத்தன்மை முதலிய பந்தத்தோற்றத்தின் அபிபவம் (அமிழ்த்தல்) அவசிய முண்டாகின்றது. ஆகவே முற்கூறிய ஜீவன் முக்தியின் இலக்கணம் சம்பவமாம் ஒருகால் பிராரப்த வினையைவிட யோகாப்யாசம் பிரபலமெனக் கொள்ளாவிடின், புருடப்பிரயத்னமே வீணுகும். வீணுயின் சிகிச்சைநூன்முதல் மோட்சநூலீறுன வெல்லாநூற்களின் ஆரம்பமே பயனில்லாமற்போம்.

சங்கை:—யோகப்பழக்கத்தாற் பிராரப்த வினைக்கு ஊறுபாடு உண்டெனவொப்பிடின் நாஹுக்தம் க்ஷீயதெ கமெ கல்பகொடி ஶதெரவி (கற்பகோடி நூறுயினும் வினை அநுபவியாது வீயாது)என்னும் மொழிக்கு விரோதம்வரும்.

சமாதானம்:—அந்தப் பிராரப்த வினைக்கு விரோதியான யோகப்பழக்க முதலியவைகளில்லையாகுங்கால் மேற்கூறிய மொழிபொருளுடையதாகும். அதாவது எந்தப் பிராரப்த வினைக்கு யோகப்பழக்க முதலிய எத்தடைகளு மில்லையோ, அந்தப் பிராரப்தவினை அநுபவியாது தேயாது என்பதாம். ஓர்கால் எவ்வுபாயத்தானும் அந்தப் பிராரப்த வினைக்குத் தடையுண்டாகாதெனின், பிராரப்த வினையினிடத்தே மிகுந்த அன்புள்ள வாதிக்கும், சாஸ்திர வசனங்களுக்கும் விரோதம் வரும். அவ்வசனமாவது:— ஜந்நாந்தரக்ருதம்பாபம் வ்யாதிரூபேண பாததே। தச்சாந்திரௌஷதைர்தாநைர் ஜபஹோமார்சநாதிபி: (இ-ள்) ஒருவனுல் முற்பிறப்பிற் செய்யப்பட்ட தீவினைகள் எவையோ அவைகள் அவனுக்கு ஜ்வர முதலியநோய் வடிவாகத் துன்பை விளைவிக்கின்றன. அவற்றின் சாந்தி ஔஷதங்களாலும், ஈகையாலும், ஜபம் ஓமம் அர்ச்சனை முதலியவைகளாலும் உண்டாகின்றது. இத்தொடக்கத்து வசனங்கள்

36

பிராரப்தத்தீவினைச் சாந்தியின்பொருட்டு ஔஷத முதலிய உபாயங்களைக் கூறியுள்ளன. அவ்வெல்லா வசனங்களுக்கும் விரோதம் நேரும். ஆகவே யோகப் பழக்கத்தாற் பிராரப்த வினையின் அபிபவம் சம்பவமாம்.

மேலும் பிராரப்த வினையைநோக்க யோகப்பழக்க முதலிய சாஸ்திரீய பிரயத்னம் பிரபலமென்று ஸ்ரீவசிஷ்ட பகவானு மியம்பினர். ஶுபா⁴ஶுப⁴ஸம்ஹிதை: ஶாஸ்த்ர ஸத்ஸங்க³ஸங்கேதிபி⁴: । பௌருஷேண ப்ரயத்நேந ... ஸம்ப்ராப்யதே ஹிதம் (இ-ள்) புருஷப் பிரயத்னம் இருவிதம். ஒன்று அசாஸ்திரீயம், மற்றொன்று சாஸ்திரீயம். சுருதி ஸ்மிருதியாகிய சாஸ்திரங்களால் விலக்கப்பட்ட பிரயத்னம் அசாஸ்திரீய பிரயத்னம் எனப்படும். அவை, களவு கொலை முதலியவைகளின் பிரயத்னம் போலும். சுருதி ஸ்மிருதியாகிய சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட பிரயத்னம் சாஸ்திரீய பிரயத்னமெனப்படும். அவை தீயோம்புதல் கொடை முதலியவைகளின் பிரயத்னம் போலும். புருஷன் அசாஸ்திரீய பிரயத்னத்தானே நிரயத்தையே யடைகின்றான். இளம்பருவமுதல் ஆத்மாவைப்பற்றிய நூல்கள், நல்லோரிணக்கம், மனோநிக்கிரகம், ஐம்பொறி யடக்கம் இவை முதலிய நற்குணங்களுடன் கூடிப் பழகிவரும் இரண்டாவது சாஸ்திரீய பிரயத்னத்தினாற் புருஷன், புருடார்த்தங்களிற் சிறந்ததாகிய மோட்சப்பேற்றைப் பெறுகின்றான்.

இப்பொருளையே உச்சாஸ்த்ரம் ஶாஸ்த்ரிதம் சேதி பௌருஷம் த்³விவித⁴ம் ஸ்ம்ருதம் । தத்ரோச்சாஸ்த்ரமனர்தா²ய பரமார்தா²ய ஶாஸ்த்ரிதம் ॥ (உச்சாஸ்திரிதம் [சாஸ்திரத்தை மீறியது] சாஸ்திரிதம் [சாஸ்திரத்தில் அடங்கியது] எனப் புருஷப் பிரயத்னம் இருவிதம். ஆண்டு உச்சாஸ்திரிதம் அநர்த்தத்தின் பொருட்டும், சாஸ்திரிதம் பரமார்த்தத்தின் பொருட்டுமாம்) என்னுஞ் சுலோகத்தாலுங் கூறப்பட்டிருக்கின்றது. இதனால் யோகப்பழக்கமாகிய சாஸ்திரீய பிரயத்னத்தாற் பிராரப்த வினையின் அபிபவம் பெறப்படும். ஆகவே மேற்கூறிய கர்த்ருத்வ (நான் செய்கின்றேன்) முதலிய பந்தத்தோற்றத்தின் நீக்கம் ஜீவன் முக்தியாமென்னும் இலக்கணம் நிர்தோஷமாம்.

## ஜீவன் முக்தியின் அதிகாரி நிரூபணம்.

கேட்டல் சிந்தித்தல் தெளிதல்களாலுண்டான பிரஹ்ம சாட்சாத்கார முடையவனும், சித்த விசிராந்தியில் விருப்பமுடையவனுமான வித்வத் சந்நியாசி எவனோ, அவனே ஜீவன் முக்திக்கு அதிகாரியாவன். அதாவது ஜீவன் முக்தியைப் பெறும்பொருட்டு அதற்குச் சாதனமாகிய மனோநாச வாசனாக்ஷயங்களைச் செய்பவன் என்க.

சங்கை:—பிரஹ்ம சாட்சாத்காரத்தால் அஞ்ஞானமும், தேகாபிமானமும் நீங்கப்பெற்ற வித்வத் சந்நியாசியை யாதாமொரு காரியத்திற்குக் கர்த்தா வெனலே ஏலாது. கர்த்தா வென்பதின்றி அவ்வித்வத் சந்நியாசியைச் சீவன் முக்திக்கு அதிகாரி யெனல் என்னனம்?

**சமாதானம்:**—ஆத்ம ஞானத்தினல் ஆவரண சக்தியையுடைய அஞ்ஞானம் அழிவுறினும், பிராரப்த வினைவயத்தால் விட்சேப சக்தியையுடைய அஞ்ஞான லேசத்தின் ஸ்திதி யுண்டென்பது நூற்காரர்களனைவருக்கும் உடம்பாடேயாம். இவ்வார்த்தை மூன்றும் பரிச்சேதத்தில் கண் விரிவா யாராயப்பட்டது. ஆகவே வித்வானுக்கும் பாதிதாநு விர்த்தியால் தேகாபிமானமும் கர்த்தாத்தன்மையும் நிகழும், அதனுல் அவ்வித்வானே ஜீவன் முக்திக்கு அதிகாரியெனல் கூடும்.

**சங்கை:**—ஜ்ஞாநாம்ருதேந த்ருப்தஸ்ய க்ருதக்ருத்யஸ்ய யோகிந:। நைவாஸ்தி கிஞ்சித்கர்தவ்ய மஸ்தி சேந்நஸதத்த்வவித்॥ தஸ்ய கார்யம் நவித்யதே (ஞானமிருதத்தினுல் திருப்தி யடைந்தவனும் கிருத கிருத்யனுகியு மிருக்கும் யோகிக்குச் செய்யவேண்டுவ தொன்றுமில்லை; இருக்குமேல் அவன் மெய்யை யறிந்தவனல்லன். அவனுக்கு ஓர் கார்யமுமில்லை) என்னுந் தொடக்கத்து முற்கூறிய ஸ்மிருதி வசனங்களால் செய்யவேண்டியதைச் செய்து முடித்தவனுகிய ஞானிக்குச் செயற்பாலதாகியவனைத்தும் விலக்கப்பட்டிருக்கின்றன. எப்போது ஞானியும் ஜீவன் முக்தியின் பொருட்டு மனோநாச வாசனுக்ஷயங்களாகிய சாதனங்களைச் செய்யவேண்டு மென்று கொள்ளப்படுமோ, அப்போதே அவ்வசனங்களுக்கு விரோதம் அடையப்படும்.

**சமாதானம்:**—ஞானி இருதிறத்தினன். ஒருவன் கிருதோபாஸ்தி, மற்றொருவன் அகிருதோபாஸ்தி. ஆத்ம சாட்சாத்காரத்திற்கு முன்னே சகுண பிரஹ்மத்தின் சாட்சாத்காரபர்யந்தம் வழிபாட்டை எவன் செய்துள்ளானே, அந்த ஞானவான் கிருதோபாஸ்தி யெனப்படுவான். அவ்வழிபாட்டை எவன் செய்யாதவனே, அந்த ஞானவான் அகிருதோபாஸ்தி எனப்படுவான். கிருதோபாஸ்தி ஞானவானுக்கோ ஞானத்திற்குப் பின்னர் ஜீவன் முக்தியின் பொருட்டுச் செய்யவேண்டுவது எம்மாத்திரமுமில்லை. ஏனெனின், அவனுக்கு மனோநாசமும், வாசனுக்ஷயமும் முன்னமே சித்தித்திருக்கின்றன. ஆகலின் ஆத்மஞானம் பூத்த காலத்திலேயே கிருதோபாஸ்தி புருஷன் ஜீவன் முக்தியைப் பெறுகின்றான்.

ஞானிக்குச் செய்யவேண்டுவதை விலக்கியுள்ள சுருதி ஸ்மிருதி வசனங்கள் மேற் கூறப்பட்டன. அவ்வசனங்கள் இந்தக் கிருதோபாஸ்தி ஞானியைக் குறித்தே செய்யவேண்டுவவனைத்தும் விலக்கியுள்ளன. ஆனல், இலௌகிக வைதிக வியாபாரங்களாற் சித்த விசிராந்தி யில்லாத அகிருதோபாஸ்தி ஞானிக்கோ ஞானத்தின் பின்னர், ஜீவன் முக்தியின் பொருட்டு மனோநாசவாசனுக்ஷயங்களைச் செய்யவேண்டுவ திருத்தலின், செய்யவேண்டியதைச் செய்து முடித்தது தடையற்றதாகவில்லை. ஆகவே அகிருதோபாஸ்தி ஞானவானுக்கு ஜீவன் முக்தியின் பொருட்டு மனோநாச வாசனுக்ஷயங்களைச் செய்யவேண்டு மெனல் அவசியமாம்.

**சங்கை:**—அப்படிப்பட்ட சித்த விசிராந்தியில்லாத அகிருதோபாஸ்தி புருஷனுக்கு ஆத்மஞானமே உண்டாகலாகாதே?

சமாதானம்:—ஞானமோ, பிரமாணம் வஸ்து வென்னு மிரண்டைச் சார்ந் திருக்கின்றதென்பது பொதுவாய் யாவருக்கு முண்டாகின்றது. எவ்வாறு கட முதலிய வஸ்துக்களோடு நேத்திர முதலிய பிரமாணங்களுக்கு இயை புண்டாக எவருக்கும் 'இதுகடம்' என்னும் ஞானம் சமானமாகவே யுண் டாமோ, அவ்வாறே தத்துவமசி முதலிய மகா வாக்கியங்களைக் கேட்ட லால் 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் ஞானம் கிருதோபாஸ்தி அகிருதோ பா ஸ்தி எனப்படும் இருதிறவதிகாரிகட்கும் சமானமாகவே யுண்டாகின்றது. ஓர் கால் அவ்வாறங்கீகரியாவிடின் யாங்ஞவர்க்கியர், கஹோலர், ஜனகர், அஜாத சத்ரு முதலிய வில்லறத்தாருக்கு அவ்வாத்மஞானம் உண்டாகாதாக வேண் டும். இப்பொருளில் இஷ்டமுளதேல்; அந்த யாங்ஞ வர்க்கியர் முதலியோர்க ளுடைய திருஷ்டாந்தத்தினுல் நம்மனோர்களின் விஷயத்தில் எவருக்கும் சிர வண முதலிய ஞான சாதனங்களின் ஊக்கமுண்டாகாதாகும். அதாவது யாங் ஞ வர்க்கியராதி மஹான்களுக்கும் சிரவண முதலியவற்றால் ஆத்மஞான முண் டாகவில்லை யென்புழி, நம் போலியவர்களுக்கு அந்த ஞானத்தின் உற்பத்தி எங்ஙனம் கூடும்? என்னு மசம்பாவனையால் ஒருவனுக்கும் சிரவணுதிகளில் ஊக் கம் பிறவாது. இதனுற் பெற்றதென்னெனின்:—சிரவண முதலியவற்றுலுண் டான பிரஹ்ம சாட்சாத்காரமும், சித்த விசிராந்தியின் விருப்பமும் உள்ள வன் எவனே, அந்த வித்வத் சந்நியாசியே ஜீவன் முக்திக்கு அதிகாரியாவன். எனவே அதிகாரி யில்லாமையால் ஜீவன் முக்தியில்லை யெனல் பொய்யாம்.

## ஜீவன் முக்தியின் பிரமாண நிருபணம்.

ஜீவன் முக்தியில் சுருதி, ஸ்மிருதி, இதிகாசம், புராணம் என்னும் இவை நான்கும் பிரமாணங்களாம். அவைகளை முறைப்படி காட்டுதும். சுருதி. விமுக்த ஶ்ச விமுச்யதே (இ-ள்) இப்புருஷன் ஆத்ம ஞானத்திற்கு முன்னர் முமுட்சுத் தசையிலேயே காமம் வெகுளி முதலியவற்றினின்றும் விடுபட்டவனும். ஏனெ னின், ஶாந்தோ தா³ந்த: (சாந்தி தாந்தி) என்னுந் தொடக்கத்துச் சுருதிகள் அகக்கரணதண்டம் புறக்கரணதண்டம் முதலிய சாதனங்களோடுங் கூடிய வனையே சிரவணுதிகளுக்கு அதிகாரி யென்றறைந்துள்ளன, ஆயினும் ஆத்ம ஞானத்திற்கு முன் விருப்பு வெறுப்புகளினின்றும் விடுதல் முயற்சியால் சாதிக் கப்படுகின்றது. ஆத்ம ஞானத்திற்குப் பிறகோ யோகப் பழக்கத்தால் வாசனு க்ஷய மனோநாசமிரண்டும் மிகத்திடமாகின்றமையால் ஞானியினிடத்துப்போலி வடிவான விருப்பு வெறுப்பு முதலியனவும் நிகழா. ஆகவே ஞானகாலத்தில் அவற்றினின்றும் விடுதல் தானுகவே பெறப்படுகின்றது. இக்கருத்து பற்றியே சுருதி, ஜீவன் முக்தனை விமுக்தன் (விடுபட்டோன்) எனக் கூறியுளது. அத் தகைய விமுக்தனுன ஜீவன் முக்தன், போகத்தாற் பிராரப்த வினைவீய இவ்வுட லழிந்த பின்னர் வரக்கடவதான கட்டினின்றும் விசேஷமாக விடுபட்டோனு கின்றுன். இச்சுருதி தத்துவஞானத்திற்குப் பிறகு விதேகமுக்தியினும் வே ருன ஜீவன் முக்தியை எடுத்துரைத்தது.

அன்றியும், தத்³யதா² ஹிநிர்வ்லயநீ வல்மீகே ம்ருதா ப்ரத்யஸ்தா ஶயீத ஏவமேவேத³ம் ஶரீரம் ஶேதே அதா²யம் அஶரீரோ(அ)ம்ருத: ப்ராணோ ப்³ரஹ்மை

வ தெஜ வவ (புற்றிற் கிடக்கும் அரவின் சட்டையானது உடல்போற்றோன்றி னும், அதனால் முன் தன்னுடலாயிருக்கும்போது எங்ஙனம் உடற்பாவனை செய்யப்பட்டதோ, அங்ஙனம் உரித்த பிறகு உடற்பாவனை செயப்படுவதில்லை. அதுபோல ஞானிகள் ஞானத்திற்குமுன் சரீரத்தில் ஆன்மபாவனை செய்தவாறு ஞானத்திற்குப் பிறகு செய்யார்; மற்றோ அமிருதமயமான பிரஹ்மதேசசாக வே விளங்குவார்கள்) என்னுந் தெர்டக்கத்துச் சுருதிகளும் ஜீவன் முக்தியைக் கூறுகின்றன. ஆகவே அச்சீவன் முக்தி மேற்கூறிய சுருதி யளவையாலும் பெறப்படுகின்றது.

மேலும் வசிட்ட பகவானும் இச்சீவன் முக்தியைப்பற்றி அறைந்திருக்கின் றனர். சுலோகம். யொஜாமதி-ஷுஹ-ஷ-வி-ஷொ। யஹ்யஜாமரா-நுவிஷ்யதெ யஹ்ய நிவஷாஹநொவொயஃ ஸஜீவநுக்த உவ்யதெ (இ - ள்) பிரஹ்மத்தையுண ர்ந்தவன் இந்திரியங்கள் இலயமாகாமலே விழிக்கின்றான். அதாவது ஜாக்கிரா வஸ்தையை யநுபவிக்கின்றான். ஜாக்கிராவஸ்தையிலும் கண் முதலிய இந்திரி யங்களால் உருவ முதலிய விஷயங்களைக் கவராமையால், அவன் அதே ஜாக் கிராவஸ்தையிலுள்ளவனே யானாலும், சுழுப்தியிலுள்ளவனேயாவன். ஆதலி னன்றே, இந்திரியங்களைக் கொண்டு பொருள்களை யறிவதாகிய ஜாக்கிரம் இல் லாதவனும், அளவற்ற ஏகரச இன்பாநுவ முடையவனும், நன்மை தீமையாகி வெல்லா வாசனைகளில்லாதவனுமாகிய பிரஹ்மவேத்தா எவனோ, அவன் ஜீவன் முக்தன் எனப்படுகின்றான். மேலும் கீதையின் இரண்டாம் அத்தியாயத்தில் ஸ்ரீபகவானும் ஜீவன் முக்தனை ஸ்திதப்பிரஜ்ஞன் என்றருளியிருக்கின்றார். சுலோகம். ஹஜஹாதி யதா காமாநு ஸவ-ாநுவாய-ஜநொமதாநு। ஆத்நெ்ய வாத்நாத-ஷஃ ஸ்ரீத ஹஜஸ்து ஷொவ்யதெ (இ - ள்) அர்ச்சுனா! எப்பொழுது வித்வான். மனதிலுற்ற கர்மங்களனைத்தையும் விடுத்தவனும், அகண்ட ஏகரச இன்பவடிவான பிரத்தியகாத்மாவின்கண் யோகப்பயிற்சியானே வசம்பண்ணப் பட்ட மனத்தால் தனது சொரூபானந்தத்தை அநுபவித்தவனாய் மகிழ்வை யுடையவனுமாவனோ, அப்பொழுது அந்த வித்வான் ஸ்திதப் பிரஜ்ஞன் எனப் படுகின்றான். சலித்தலில்லாத அஹம்பிரஹ்மாஸ்மி என்னும் பிரஜ்ஞை எவனுக் கோ, அவன் ஸ்திதப் பிரஜ்ஞனும்.

ஈண்டுக் கருத்தென்னவெனின்:—பிரஜ்ஞை இருவகைத்து. ஒன்று ஸ்தி தப் பிரஜ்ஞை, மற்றொன்று அஸ்திதப் பிரஜ்ஞை. ஜன்மாந்தரத்திற் செய்யப் பட்ட நல்வினைக் கூட்டத்தின் முதிர்ச்சியால் வானினின்றும் விழுந்த கனியைப் போல, தத்துவமசிமுதலிய மகா வாக்கியங்களைக் கேட்ட வளவில் புருஷனுக்கு ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவத்தை விஷயிக்கும் அஹம் பிரஹ்மாஸ்மி என்று தோன்றிய ஞானம் எதுவோ, அது வியவகாரத்தின் மிகுதியாலும், விஷயப் பற்றினாலும் மறக்கப்படுகின்றது. ஆகலின் அது அஸ்திதப் பிரஜ்ஞை யெனப் படும். யோகப்பயிற்சியால் வசம்பண்ணப்பட்ட சித்தமுடைவனது புத்தி எப் பொழுது பரபுருஷனிடத்து ஆசக்தியையுடைய ஸ்திரீயின் புத்தியைப்போல நிரந்தரம் பிரஹ்மாத்ம தத்துவத்தையே சிந்திப்பதாயும், பிறபொருளைச் சிந்திக்

காததாயு 'மிருக்கின்றதோ, அப்பொழுது அந்தப் புத்தி ஸ்திதப் பிரஜ்ஞை யெனப்படும்.

இதே கருத்தால் ஸ்ரீவசிஷ்ட பகவானுங் கூறியிருக்கின்றனர். வரவ்யஸ நிநீநாரீ வ்யகரா விமஹகஜிணி॥ தஷெவாஸ்வாஷயதந்ஷ: வரஸங்ரஸாயநழ॥ ஹவம் தக்வெவவரெஸ ஜீரோவிஸ்ராதிராமத:॥ தஷெவாஸ்வாஷயத்வம் தவ ஹிவ்யவஹாரந்வி (இ - ள்) பரபுருஷனிடத்து ஆசக்தியையுடைய நாரி வெளியிலே வீட்டின் வேலைகள் எல்லாவற்றையுஞ்செய்து கொண்டிருந்தாலும், சித்தத்தினுள்ளே அப்பர புருஷனது புணர்ச்சியாலுண்டான சுகத்தையே எண்ணுகின்றாள். இவ்வாறு எந்தஞானி சுத்த பரமாத்ம தத்துவத்தில் விசிராந்தியை யடைந்தவனோ, அந்த ஞானி வெளியிலே இலௌகிக வைதிக வியவகாரங்களைச் செய்தாலும், சித்தத்தினுள்ளே அப்பரமாத்ம தத்துவத்தையே நிரந்தரம் சிந்திக்கின்றான். மேலும் கூறிய விச்சீவன் முக்தனையே கீதையின் பன்னிரண்டாம் அத்தியாயத்தில் ஸ்ரீபகவான் பகவத்பக்தனாக அருளியிருக்கின்றனர். சுலோகம். அத்வேஷ்டா ஸர்வபூதாநாம் மைத்ர: கருண ஏவ ச। நிர்மமோ நிரஹங்கார: ஸமது:கஸுக: க்ஷமீ॥ ஸந்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிஶ்சய:। மய்யர்பிதமநோபுத்திர்யோ மத்பக்த: ஸ மே ப்ரிய:॥ (இ - ள்) எல்லாப் பூதங்களினிடத்தும் துவேஷமில்லாதவனும், நட்பு தயையுடையவனும், யான் எனது என்னும் அபிமானமில்லாதவனும், சுகதுக்கங்களிற் சமானனும், பொறுமையுடையவனும், எப்பொழுதும் சந்துஷ்டனும், மனோநிக்கிரகமும் உறுதியான நிச்சயமும் உடையவனும், பரமாத்மாவாகிய வென்னிடத்து அர்ப்பணஞ் செய்யப்பட்ட மனோபுத்திகளையுடையவனுமான என் பக்தன் எவனோ, அவன் பரமேசுவரனாகிய வெனக்கு மிகப் பிரியன்.

சங்கை:—இக்கீதா வசனத்தில் ஸ்ரீபகவானாற் கூறப்பட்ட துவேஷ மில்லாமை முதலிய குணங்களோ சாதகமுமூட்சுவினிடத்தும் இருக்கின்றனவென்று ஶாந்தோ தாந்த: (அகக்கரண புறக்கரணதண்ட முடையவன்) என்னுந் தொடக்கத்துச் சுருதிப் பிரமாணங்களாற் பெறப்படுகின்றன. ஆகலின் அச்சாதக முமூட்சுவை விட ஜீவன் முக்தனிடத்து ஓர் விசேஷமும் பெறப்படுகின்றதில்லையே?

சமாதானம்:—சாதக முமூட்சுவினிடத்து அத்துவேஷமில்லாமை முதலாய குணங்கள் பிரயத்ன சாத்தியமாயிருக்கின்றன. ஆனால், ஜீவன் முக்தனிடத்து அக்குணங்கள் சுவபாவசித்தமாயிருக்கின்றன. ஆகலின் அச்சாதகமுமூட்சுவை விட ஜீவன் முக்தனிடத்து விசேஷத்தன்மை சம்பவிக்கின்றது. இவ்வார்த்தை பிறநூற்களிலும் கூறப்பட்டுளது. சுலோகம். உத்பந்நாத்மாவபோதஸ்ய ஹ்யத்வேஷ்ட்ருத்வாதயோ குணா:। அயத்நதோ பவந்த்யஸ்ய ந து ஸாதநரூபிண:॥ (இ-ள்.) அஹம்பிரஹ்மாஸ்மி என்னும் போதம் எவனுக்கு உண்டாயிருக்கின்றதோ, அவ்வித்வானுக்குத் துவேஷமில்லாமை முதலிய குணங்கள் பிரயத்னமல்லாமலும் உண்டாகின்றன. முமூட்சுவுக்குப் போன்று சாதனவடிவமாயில்லை.

மேலும் கூறிய விச்சீவன் முக்தனையே ஸ்ரீபகவான் கீதையின் பதினான்காம் அத்தியாயத்தில்,

ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ ।
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந நிவ்ருத்தானி காங்க்ஷதி ॥

(பாண்டவ! சத்துவகுண கார்யமாகிய விளக்கத்தையும், ரஜோகுண கார்யமாகிய முயற்சியையும், தமோகுண கார்யமாகிய மயக்கத்தையும் அவன் வெறுப்பதில்லை; போனவற்றை விரும்புவதில்லை.

உதாஸீநவதாஸீநோ குணைர்யோ ந விசால்யதே ।
குணா வர்தந்த இத்யேவ யோऽவதிஷ்டதி நேங்கதே ॥

எவன் உதாசீனனைப்போல வீற்றிருப்பவனாய்ச் சத்துவ முதலிய குணங்களாற் சலிக்கப்படாதவனோ, 'அக்குணங்களே வர்த்திக்கின்றன' என்றே உறுதியாக நிற்கின்றவனோ, அசைவுறானோ,

ஸமது:கஸுக: ஸ்வஸ்த: ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந: ।
துல்யப்ரியாப்ரியோ தீரஸ்துல்யநிந்தாத்மஸம்ஸ்துதி: ॥

எவன் இன்ப துன்பங்களைச் சமமாகக் கொண்டவனோ, மண்ணாங்கட்டியையும் கல்லையும் பொன்னையும் ஒக்க நோக்குபவனோ, வேண்டுதல் வேண்டாமைகளிடத்தும் பொதுவாயிருப்பவனோ, தீரனோ, தனது இகழ்ச்சிப் புகழ்ச்சிகளில் துல்யனா யிருப்பவனோ,

மாநாபமாநயோஸ்துல்யஸ்துல்யோ மித்ராரிபக்ஷயோ: ।
ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீத: ஸ உச்யதே ॥

மானவமானங்களில் ஒப்பநிற்பவனாய் நண்பர்பக்கலிலும் பகைவர் பக்கலிலும் சரியாயிருப்பவனோ, எல்லா முயற்சிகளையும் விட்டவனோ, அவன் குணங்களைக் கடந்தவன் எனப்படுகின்றான்.)

இந்நான்கு சுலோகங்களினால் குணாதீதனைக அருளி யிருக்கின்றார். இக்கீதா சுலோகங்களின் பொருள்களைக் கீதா கூடார்த்த தீபிகையில் விரிவாய்க் கூறியுள்ளோம். அவற்றை ஆண்டு அறிந்து கொள்க.

மேலும் முற்கூறிய ஜீவன் முக்தனையே மகாபாரதத்தில் ஸ்ரீ வியாசபகவானும் பிராஹ்மணனென்று கூறியிருக்கின்றார். சுலோகம். நிராஶிஷமநாரம்பம் நிர்நமஸ்காரமஸ்துதிம்। அக்ஷீணம்க்ஷீணகர்மாணம் தம்தேவா ப்ராஹ்மணம்விது: (இ-ள்) இஷ்டவஸ்துவைப் போற்றாதவனும், ஆரம்பங்களனைத்து மொழித்தவனும், வந்திப்பில்லாதவனும், தனது பிறரது துதி நிந்தைகளில்லாதவனும், முயற்சியன்றியிற்கிடைத்த பொருளிலும் தீனத்தன்மை யில்லாதவனும், சர்வ லௌகிக வைதிக கர்மங்கள் நீங்கியவனுமானவன் எவனோ, அந்தத் தத்துவமுணர்ந்த ஞானியைத் தெய்வத்தன்மை பொருந்திய பிராஹ்மணன் என்றறிதி.

அன்றியும் இச்சீவன் முக்தனையே ஸ்காந்தபுராணத்தில் அதிவர்ணாச்சிரமியாகக் கூறப்பட்டுளது. சுலோகம் யதாஸ்வப்நப்ரபஞ்சோऽயம் மயிமாயா விஜ்ரும்பித:। ததஞ் ஜாக்ரத் ப்ரபஞ்சோऽபி மயிமாயா விஜ்ரும்பித:॥ இதியோவேதவேதாந்தை: ஸோऽதிவர்ணாச்ரமீ பவேத் (இ-ள்) பிரத்தியகாத்மாவாகிய வென்னிடத்தில் சொப்பன பிரபஞ்சம் மாயையால் எவ்வாறு கற்பிதமாமோ, அவ்வாறே இச்சாக்கிர பிரபஞ்சமும் என்னிடத்தில் மாயையாற் கற்பிதமாம். இவ்வண்ணம் எந்தப்புருஷன் வேதாந்த வசனங்களினுற் கற்பித பிரபஞ்சமனைத்திற்கும் அதிஷ்டானமாகிய ஆத்மாவைச் சாட்சாத்கரிக்கின்றானே, அந்தத் தத்துவமுணர்ந்த புருஷன் அதிவர்ணாச்சிரமி எனப்படுகின்றான். இவ்வாறு அச்சீவன் முக்தியில் சுருதி, ஸ்மிருதி, இதிகாசம், புராணம் என்னும் நான்கின் பல வசனங்கள் பிரமாணங்களாம். ஆகவே அவ்விதேக முக்தியைப்போன்று ஜீவன் முக்தியையும் அங்கிகரிக்க வேண்டியது கடப்பாடேயாம்.

## ஜீவன் முக்தியின் சாதனநிரூபணம்.

மேற்கூறிய ஜீவன் முக்தி தத்துவஞானம், வாசனக்ஷயம்,மனோநாசம் என்னும் மூன்றினப்பியாசங்களாற் பெறப்படுகின்றது. ஆகையால் அவை மூன்றும் ஜீவன் முக்திக்குச் சாதனங்களாம். அத்தத்துவ ஞான முதலிய மூன்றையும் மிக்க முயற்சியோடு மறுபடியும் மறுபடியுந் திருப்புதலே அம்மூன்றின் அப்பியாசமாம். அத்தத்துவ ஞான முதலிய மூன்றின் அப்பியாசமும் ஒரே காலத்திற் செய்வதாயின் அவைகள் ஜீவன் முக்திக்கே ஏதுக்களாகின்றன. ஏனெனின், உடன்பாடெதிர்மறைகளால் அவை மூன்றுக்கும் ஒன்றுக்கொன்று கார்ய காரண வடிவம் பெறப்படுகின்றது.

அவற்றுள் முதற்கண் தத்துவஞானம் வாசனக்ஷயமென்னுமிரண்டும் ஒன்றுக்கொன்று கார்யகாரணமெனல் காட்டுதும். சுட்டியறியப்பட்ட இப்பிரபஞ்சம் மித்தை; அத்துவிதீய ஆத்மா பாரமார்த்திகம், ஆகையால் ஆத்மாவே அனைத்துமாம். ஆத்மாவிற்கு வேறாக யாதொரு வஸ்துவுமில்லை. இவ்விதமான தத்துவஞான முண்டாக, விஷயமில்லாமையால் இராகத்துவேஷ முதலிய வாசனைகள் க்ஷயமாய் விடுகின்றன. அத்தத்துவஞான மில்லையாயின், விஷயங்களில் சத்தியத்தன்மை நீங்காது. அதனுல் பின்பின் ராகத்துவேஷ முதலிய வாசனைகளின் தொடர்ச்சி உண்டாகின்றது. இவ்வாறான உடன்பாடெதிர்மறைகளால் தத்துவஞானம் வாசனக்ஷயத்திற்குக் காரணமெனல் சித்திக்கின்றது.

இவ்வாறே வாசனக்ஷயமும் தத்துவஞானத்திற்குக் காரணமெனல்கூடும். பகுத்தறிவினுலும், குற்றங்காண்டலினுலும்;மைத்திரி கருணை முதலிய விரோதி வாசனைகளினுலும் எப்போது ஒருவனுக்கு இராகத்துவேஷ முதலிய வாசனைகள் க்ஷயமாகின்றனவோ, அப்போதே சுருதி ஆசார்யர்களின் அருளால் அவனது தூய்மையான மனத்தில் அத்தத்துவஞானம் உண்டாகின்றது. அவ்வாசனக்ஷய மில்லையாயின் அம்மனது இராகத்துவேஷ முதலியவற்றால் தூஷிக்

கப்பட்டதாகின்றது. தூஷிக்கப்பட்ட அம்மனத்தை யுடையவனுக்குச் சமம் தமம் முதலிய சாதன சம்பத்தியில்லாமையால் சிரவணுதிகள் சம்பவியா. அதனுல் தத்துவஞானம் உண்டாகாது. இவ்வாருகிய உடன்பாடெதிர்மறைகளால் அவ்வாசனுக்ஷயம் தத்துவ ஞானத்திற்குக் காரணமெனல் சித்திக்கின்றது.

இனி தத்துவஞானம் மனோநாசமென்னும் இரண்டும் ஒன்றுக்கொன்று கார்ய காரணமெனல் காட்டுதும். தத்துவஞான முண்டாக ஒருவனுக்குப் பிரபஞ்சம் மித்தை யென்னும் நிச்சயமுண்டாகின்றது. அந்நிச்சயத்தால் இப்பி வெள்ளிபோலப் பிரபஞ்சம் பாதிக்கப்படுகின்றது. பாதிக்கப்பட்ட பிரபஞ்சத்தில் அம்மனது செல்லமாட்டாது. அன்றியும் சத்தியமாக நிச்சயிக்கப்பட்ட ஆத்மா அம்மனதிற்கு விஷயமன்று. ஆகையால் அவ்வாத்மாவினும் அம்மனம் செல்லச் சக்தியற்றதாகின்றது. இவ்வாறு அகத்தும் புறத்துஞ் செல்லுவதற்ற அம்மனம் விறகில்லாத தீயைப்போலத் தானே லயமாய் விடுகின்றது. சுருதி. யதா நிரிந்தநோ வஹ்நி: ஸ்வயோநா வுபசாம்யதி। ததா வ்ருத்திக்ஷயாச் சித்தம் ஸ்வயோநா வுபசாம்யதி॥ (இ-ள்) வந்நியானது இந்தனமில்லையாகுங்கால், தனது சாமான்ய தேஜஸாகிய காரணத்தில் லயமாகின்றவாறுபோல, அகப்புற விருத்திகளனைத்தும் நாசமுறுங்கால் சித்தமும் தனது அதிஷ்டான வடிவகாரணத்தில் லயமாகின்றது. இதுவே அம்மனத்தின் நாசமாம். ஆனுல், அத்தத்துவ ஞானம் இல்லையாயின் பிரபஞ்சத்தின்கண் சத்தியத்தன்மை தொலைவதில்லை. அதனுற் பொருள்களி னுகாரமான விருத்திகளோடு பெருக்கத்தை யடைந்த மனது மிகத்தூலமாகின்றது. அங்ஙனந் தூலத்தை யடைந்த மனத்திற்கு நாச முண்டாகின்றதில்லை. இவ்வாருகிய உடன்பாடெதிர்மறைகளால் அத்தத்துவ ஞானம் அம்மனோநாசத்திற்குக் காரணமெனல் சித்திக்கின்றது.

இவ்வண்ணமே அம்மனோநாசமும் தத்துவஞானத்திற்குக் காரணமெனல் கூடும். மனது நாசமாகும் வழி சர்வ துவித விருத்திகளும் நாசமாவதால் எல்லா உபாதிகளும் நீங்கிய புருஷனுக்குச் சுருதி ஆசார்யர்களின் பிரசாதத்தாற் பிரஹ்ம சாட்சாத்கார முண்டாகின்றது. ஆனுல், அம்மனோநாச மில்லையாயின், கலங்கிய சித்தமுடைய அவனுக்குப் பிரஹ்ம சாட்சாத்கார முண்டாகின்றதில்லை. இவ்வாருகிய உடன்பாடெதிர்மறைகளால் மனோநாசம் தத்துவஞானத்திற்குக் காரணமெனல் சித்திக்கின்றது.

இனி வாசனுக்ஷய மனோநாசமா மிரண்டும் ஒன்றுக்கொன்று கார்யகாரணமெனல் காட்டுதும். வாசனுக்ஷய மில்லையாயின் இராகத் துவேஷங்களினுல் தூலவடிவத்தை யடைந்த சித்தம் விஷயங்களின் நேராகி அவ்வவ் விஷயாகார பரிணமங்களை யடைகின்றது. அவ்விஷயாகார மடைந்த மனத்திற்கு ஒருபோதும் நாசமுண்டாகின்றதில்லை. வாசனை க்ஷயமானுல் விருத்திகள் உற்பத்தியாகா. ஏனெனின், அவ்வாசனையே விருத்திகளின் உற்பத்திக்குப் பீஜமாயிருக்கின்றது. பீஜம் நாசமானுல் அங்குரம் உற்பத்தியாகாது. ஆகவே மனத்தின் நாசமுண்டாகின்றது. இவ்வாருகிய உடன்பாடெதிர்மறைகளால் அவ்வாசனுக்ஷயம் மனோநாசத்திற்குக் காரணமெனல் சித்திக்கின்றது.

இந்தப் பிரகாரமே அம்மனோநாசமும் வாசனாக்ஷயத்திற்குக்காரணமெனல் கூடும். மனது நாசமாயின் ஒருவித விருத்தியும் உண்டாகாது. ஆகவே எல்லா வாசனைகளும் க்ஷயமாகின்றன. ஆனால், அம்மனோநாச மில்லையாயின் பிராரப்த வினையின் வயப்பட்டு விஷயபோகத்திற் சித்தம் செல்லுங்கால் அதனிடத்து ஆசை முதலிய வநேக வாசனைகள் உண்டாகின்றன. அதாவது நெய் முதலிய அவிசுகளினால் அக்கி விருத்தியடையுமாறுபோல விஷயபோகத்தினால் ஆசை முதலிய வாசனைகளும் விருத்தி யடைகின்றன. இவ்வாறாகிய உடன்பாடெதிர் மறைகளால் அம்மனோநாசம் வாசனாக்ஷயத்திற்குக் காரணமென்பது சித்திக்கின்றது.

இவ்வாறு தத்துவஞானம், வாசனாக்ஷயம், மனோநாசம் என்னும் மூன்றிற்கும் ஒன்றுக்கொன்று கார்ய காரணபாவ மிருத்தலின் அம்மூன்றினையும் ஒரே காலத்தில் அப்பியாசித்தல் நலமாம். அவ்வப்பியாசத்தாற் புருஷனுக்கு ஜீவன் முக்தி பிராப்தமாகின்றது. இவ்வார்த்தை ஸ்ரீவசிஷ்ட பகவானுங் கூறியிருக்கின்றனர். சுலோகம். வாஸநாக்ஷய விஜ்ஞாநமநோநாஶா மஹாமதே । ஸமகாலம் சிராப்யஸ்தா பவந்தி பலதாயிந:॥ (இ - ள்) மகாமதியையுடைய ராமா! வாசனாக்ஷயம், தத்துவஞானம், மனோநாசம் என்னும் மூன்றையும் ஒருங்கே அநேக காலம் வரைக்கும் பழகும் புருஷன் ஜீவன் முக்தியாகிய பயனை அடைகின்றான்.

சங்கை:—விவேக முதலிய நாற்சாதனங்களை யடைந்த பிறகு தத்துவ ஞானத்தை யடையும்பொருட்டு, விவிதிஷா சந்நியாசம் பூண்டு சிரவண மனன நிதித்தியாசனங்களைச் செய்கின்றவனுக்கு அத்தத்துவஞான முண்டாகின்றது. அத்தத்துவ ஞானமுண்டான பின்னர் ஜீவன் முக்தியையடையும் பொருட்டு வித்வத் சந்நியாசத்தைப் பெற்று, தத்துவஞானம், வாசனாக்ஷயம், மனோநாசமென்னும் மூன்றையும் அப்பியாசிக்கின்றவனுக்கு அச்சீவன்முக்தி பிராப்தமாகின்றதென்னும் அர்த்தம் மேற்கூறியதனாற் சித்திக்கின்றது. ஆண்டுச் சிரவண மனன முதலியவற்றிற்குப் பிறகு தத்துவமசி முதலிய பிரமாணங்களாற்றோன்றுந் தத்துவஞானத்தின் அப்பியாசம் என்னனமுண்டாகும்? முதலில் ஞானவானுக்கு அத்தத்துவ ஞானத்தின் கர்த்தவ்ய முண்டென்பதே பொருந்தாது. ஏனெனின், அத்தத்துவ ஞானம் மகா வாக்கியமாகிய பிரமாணத்திற்குப் பயனாகுமாற்றால் முற்பெறப்பட்டதே. பெறாத வஸ்துவிற்கன்றோ கர்த்தவ்யமிருத்தல் கூடும். பெற்ற வஸ்துவிற்குக் கர்த்தவ்ய மிருத்தல் கூடாதே? மேலும் அந்த ஞானம், விஷயமான வஸ்துவின் அதீனமாயிருத்தலின், அதைச் செய்வதற்காவது, செய்யாததற்காவது, வேறு வகையாகச் செய்வதற்காவது ஆகாது. ஆகவே அந்த ஞானத்திற்குக் கர்த்தவ்ய முண்டெனல் பொருந்தாது. இவ்வாற்றால் ஞானவானுக்கு ஞான சாதனமான சிரவணாதிகளினிடத்துக் கர்த்தவ்ய மிருத்தல் தகுதியன்று. ஏனெனின் பயனாகிய ஞானமிருக்க அச்சிரவணாதிகளை அநுஷ்டித்தல் வீணேயாம். எனவே உண்டான தத்துவ ஞானத்தின் அப்பியாசம் சொல்லொணாததாம்.

சமாதானம்:—சிரவணாதிகளால் உண்டான அஹம் பிரஹ்மாஸ்மி எனப்படுந் தத்துவ ஞானத்தின் அப்பியாசமாவது:—எவ்வாற்றானுயினும் அந்தப்பிரஹ்

மாத்ம தத்துவத்தை அடிக்கடி சிந்திக்க வேண்டும். அஃதாவது வேதாந்த நூற்களைக் கேட்டலாலாவது, சொல்லுவதாலாவது, புத்தகத்தைப் பார்ப்பதாலாவது, படித்தல் படிப்பித்தல்களாலாவது அந்தப் பிரஹ்மாத்ம தத்துவத்தைமீட்டும் மீட்டும் அநுசந்தானஞ் செய்தல் வேண்டும். இதனையே தத்துவஞானத்தின் அப்பியாசமாக வறிக. தத்துவஞானப்பழக்கத்தின் சொரூபம் வேறுநூற்களினுமுரைக்கப் பட்டிருக்கின்றது. சுலோகம் தச்சிந்தநம் தத்கதநம் அந்யோந்யம் தத்ப்ரபோதநம் । ஏததேகபரத்வஞ்ச ப்ரஹ்மாப்யாஸம் விதுர்புதா: (இ - ள்) ஜீவப் பிரஹ்மத்தின் ஏகத் தன்மையாகிய தத்துவஞானத்தின் அடிக்கடி சிந்தனமும், அதிகாரிகளான முமுட்சுக்களுக்கு அத்தத்துவத்தைக் கூறுவதும், தனக்குச் சமானமான வித்வான்களுடன் கலந்து ஒருவருக்கொருவர் போதித்துக்கொள்ளுவதுமாகிய விவை முதலான எந்தப் பிரகாரத்தாலும் ஏக பிரஹ்மாத்ம தத்துவ சிந்தனத்தின் ஒருப்பாட்டை வித்வான்கள் பிரஹ்மாப்பியாசம் என்று கூறுகின்றார்கள்.

சங்கை:—எவ்வகையாகவாவது பிரஹ்மாத்ம தத்துவத்தின் சிந்தனையைப் பிரஹ்மாப்பியாசமெனக் கூறின், அதிகாரிகளல்லாதவர்களை நோக்கிச் செய்யும் பிரஹ்மாத்ம தத்துவ உபதேசமும் பிரஹ்மாப்பியாசமாதல் வேண்டுமே?

## பிரஹ்மவித்தைக்கு அதிகாரியையும் அநதிகாரியையுங் கூறல்.

சமாதானம்:—எவன் விவேகமுதலிய சதுட்ட சாதனங்கள் நிரம்பியவனும், வணக்கமுடையவனும், சிஷ்யவடிவத்தோடுங் கூடியவனும், குரு ஈசுவரர்களிடத்துப் பக்தியுடையவனும், குரு வேதாந்த வாக்கியங்களில் விசுவாசமுடையவனுமாவனோ, அவனே பிரஹ்மவித்தைக்கு அதிகாரி யாகின்றான். அத்தகைய அதிகாரிக்கே தத்துவமுணர்ந்தோன் பிரஹ்ம வித்தையை உபதேசிக்கக் கடவன். அப்படிப்பட்ட அதிகாரியே அந்தப் பிரஹ்ம வித்தையின் கேள்வி முதலியவற்றால் ஆத்ம ஞானத்தையும் மோட்சத்தையும் பெறுகின்றான். இப்பொருளையே தஸ்மை ஸ வித்வாநுபஸந்நாய ஸம்யக் ப்ரஶாந்தசித்தாய ஶமாந்விதாய । யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்த்வதோ ப்ரஹ்மவித்யாம் ॥ தஸ்மை ம்ருதிதகஷாயாய தமஸ: பாரம் தர்ஶயதி பகவாந் ஸநத்குமார: (நன்றாய்ச் சாந்திபெற்ற சித்தத்தோடுங் கூடினவனும், சாதனங்களையுடையவனும், புகலடைந்தவனுமானவன் பொருட்டு எந்தத் தத்துவவித்தையினால் பரப்பிரஹ்மமானது அறியத்தகுந்ததோ, அந்தத்தத்துவ வித்தையை உள்ளவாறு அந்த வித்வான் உபதேசித்தார். குற்றம் நீங்கியவனான அவன் பொருட்டுப் பகவானாகிய சநற்குமாரர் தமஸினது எல்லையைக்காட்டினார்) என்னுந் தொடக்கத்துச் சுருதிகளும், ய இமம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி । பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்ஶய: ॥ ந ச தஸ்மாந்மநுஷ்யேஷு கஶ்சிந்மே ப்ரியக்ருத்தம: । பவிதா ந ச மே தஸ்மாதந்ய: ப்ரியதரோ புவி ॥ (எவனொருவன் என்னிடத்தில் மிகுந்த அன்போடு இப்பரமரகசியமான தத்துவத்தை என் பக்தர்களிடம் அளிக்கின்றானோ, அவன் என்னையே யடைவான் ஐயமில்லை. அவனினும் எனக்குப் பிரியத்தைச் செய்கிற மனிதன் உலகிலில்லை, ஆதலால் அவனைக்காட்

டினும் வேறான வொருவனும் எனக்குப் பிரியனல்லன்) என்னுந் தொடக்கத்துக் கீதா வசனங்களுங் கூறியுள்ளன.

எவன் மேற்கூறிய அதிகாரி லட்சணங்களில்லாதவனோ அவன் அநதிகாரி எனப்படுகின்றான். அப்படிப்பட்ட அநதிகாரிகளுக்குத் தத்துவமுணர்ந்தவன் பிரஹ்ம வித்தையை உபதேசிப்பது கூடாது. அந்த அநதிகாரிகள் பிரஹ்மவித்தையைக் கேட்டாலும் ஆத்ம ஞானத்தையும் மோட்சத்தையும் பெறமாட்டார்கள். இவ்வர்த்தமும் வேதாந்தே பரமம் குஹ்யம் புராகல்பே ப்ரசோதிதம். நாப்ரசாந்தாய தாதவ்யம் நாபுத்ராயா ஶிஷ்யாய வை புந: (வேதாந்தத்தில் மிக்க ரகசியமானது முன் கற்பத்திற் கூறப்பட்டது. சாந்தி பெறாதவனுக்கும்,மகனல்லாதவனுக்கும்,சீடனல்லாதவனுக்கும் உபதேசிக்கலாகாது)என்னுந் தொடக்கத்துச்சுருதி வசனங்களாலும் இதம் தே நா தபஸ்காய நாபக்தாய கதாசந। நசாஶுஶ்ரூஷவே வாச்யம் நசமாம் யோऽப்யஸூயதி॥ (இது தவமற்றவனுக்கும், பக்தியில்லாதவனுக்கும்,பணிவிடை செய்யாதவனுக்கும், என்னிடத்தில் துவேஷமுடையவனுக்கும் ஒரு சமயமும் சொல்லக்கூடாது) என்னுந் தொடக்கத்துக் கீதா வசனங்களாலும் சித்தமாம். இன்னும், வேறு ஸ்மிருதிகளிலும் கூறப்பட்டுளது. சுலோகம். அஶிஷ்யாயா விரக்தாய யத்கிஞ்சிதுபதிஶ்யதே। தத்யாத்யபவித்ரத்வம் மோக்ஷீரம் ஶ்வத்ருதௌயதா (இ-ள்) சீடவடிவமும்,வைராக்கியமுமில்லாத அநதிகாரிக்குச்செய்யப்பட்டசொற்பஉபதேசமும் நாயினால்நக்கப்பட்ட பசுவின்பால் அபவித்ரமடையுமாறு போல, அபவித்திரத்தையடைகின்றது. மற்றுமொரு ஸ்மிருதி. நாப்ருஷ்ட: கஸ்யசித்ப்ரூயாந்நசாந்யாயேந ப்ருச்சத:। ஜாநந்நபிஹி மேதாவீ ஜடவல்லோக ஆசரேத்॥ (இ-ள்) வித்வான் வினவுதலன்றி எவருக்கும் உபதேசிப்பதில்லை. நியாயமின்றிக் கேட்பவனுக்கும் உபதேசிப்பதில்லை. ஆனால், எல்லா அர்த்தங்களை உணர்ந்தவனாயினும் வித்வான் உலகத்தில் ஜடத்தைப்போலத் திரிகின்றான்) ஆகவே அதிகாரிகளைக் குறித்த பிரஹ்மாத்ம தத்துவத்தின் உபதேசமே பிரஹ்மாப்பியாச மெனப்படும்; அநதிகாரிகளைக் குறித்த பிரஹ்மாத்ம தத்துவத்தின் உபதேசம் பிரஹ்மாப்பியாச மெனப்படுவதில்லை யெனப் பெற்றாம்.

சங்கை:—தத்துவஞானத்திற்கு முன் முமூட்சுக்களுக்கு வாசனாக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் வேண்டப்படும். எனெனின், எவனுடைய சித்தம் விஷயப்பற்றுள்ளதாயும், சமதமாதிகளின்றியதாயும், ஒருவழிப் படுவதில்லாததாயு முள்ளதோ, அவனுக்கு அத்தத்துவ ஞான முண்டாகின்றதில்லையாகையால் தத்துவஞானத்திற்கு முன் அவ்வாசனாக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் அவசியஞ் செய்யத்தக்கது. எப்போது ஆத்மஞானத்திற்கு முன்னமே அவ்வாசனாக்ஷய மனோநாசங்கள் பெறப்படுகின்றனவோ,அப்போது ஆத்மஞானத்திற்குப் பிறகு ஜீவன் முக்தியின் பொருட்டு அவற்றை அப்பியாசஞ் செய்வதிற் சிறிதும் பயனில்லை. ஆனால், முன் பெறப்பட்ட வாசனாக்ஷய மனோ நாசங்களின் அப்பியாசத்தாற்றானே தத்துவமுணர்ந்தோனுக்கு ஜீவன் முக்தி பிராப்தமாகின்றது.

சமாதானம்:—தத்துவஞானத்திற்கு முன் அத்தத்துவ ஞானத்தை யடையும் பொருட்டு அவ்வாசனுக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் வேண்டப்படுவதானாலும் தத்துவ ஞானத்திற்கு முன் விவிதிஷைச் சந்நியாசிக்கு அவ்வாசனுக்ஷய மனோநாசங்களின் அப்பியாசமோ கௌணமும், சிரவண மனனாதிகளின் அப்பியாசம் முக்கியமுமாம். ஏனெனின், சிரவண மனன நிதித்தியாசனங்களாகிய மூன்றுமோ தத்துவமசி முதலிய வேதாந்த வாக்கியங்களின் விசாரமாவதால் ஆத்மஞானத்திற்கு அந்தரங்க சாதனங்களா யிருக்கின்றன. ஆனால், வாசனுக்ஷய மனோநாசங்களோ அந்தக்கரணத்தைச் சோதிப்பனவாதலால் அச்சிரவண முதலியவற்றிற்குச் சககாரிகளா யிருக்கின்றன. ஆகையால் தத்துவ ஞானத்திற்கு முன் ஏதோ சொற்ப வாசனுக்ஷய மனோநாசங்களின் அப்பியாசத்தால் நிரந்தரம் சிரவண மனனாதிகளைச் செய்யும் விவிதிஷைச் சந்நியாசிக்கு ஆத்மஞானம் உண்டாகின்றது. வித்வத் சந்நியாசிக்கோ தத்துவஞானத்தின் அப்பியாசம் கௌணமும், வாசனுக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் முக்கியமுமாம். ஏனெனின், தத்துவ ஞானோற்பத்திக்கு முன் வேதாந்த சிரவண முதலியவற்றின் அப்பியாசத்திற்குப் பிரயோசன மிருக்கின்றது. தத்துவஞானத்திற்குப் பிறகு அச்சிரவண முதலியவற்றின் அப்பியாசத்திற்கு ஒருபிரயோசனமுமில்லை. ஆனால், பிராரப்த கர்மத்திற் கிடாகவரும் விஷயங்களை நுகருங் காலத்திலே வாசனையை நாசஞ் செய்தற்பொருட்டுச் சிறிதளவு சிரவணாதிகளின் அப்பியாசம் விரும்பப்படுகின்றது. ஆதலால் வித்வத் சந்நியாசிக்கு அத்தத்துவ ஞானத்தின் அப்பியாசம் கௌணமாம். அவ்வித்வத் சந்நியாசி தத்துவ ஞானத்திற்கு முன் வாசனுக்ஷய மனோநாசங்களைத் திடமாக அப்பியாசஞ்செய்யாததனால் அவனது சித்தத்தில் விசிராந்தி உண்டாகின்றதில்லை. சித்த விசிராந்தியன்றித் திருஷ்ட துக்கம் நீங்காது. ஆதலால் சித்த விசிராந்தியின் பொருட்டு வித்வத் சந்நியாசிக்கு ஆத்மஞான அநந்தரம் அவ்வாசனுக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் அவசியம் வேண்டும். ஆகவே வித்வத் சந்நியாசிக்கு வாசனுக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் முக்கியமாம். அவ்வப்பியாசத்தாற்றான் வித்வத் சந்நியாசிக்கு ஜீவன் முக்தி பிராப்தமாகின்றது.

சங்கை:—சதுட்ட சாதனங்கள் நிரம்பின அதிகாரிக்குச் சிரவணமனனாதிகளால் ஐயந்திரிபுகளாகிய தடைகள் நீங்கிடத் தத்துவமசி முதலிய மகா வாக்கியங்களினின்றும் 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் அபரோட்ச ஞானமுண்டாகின்றது. அவ்வபரோட்ச ஞானத்தால் அஜ்ஞானத்தாலாக்கப்பட்ட ஆவரணம் நிவிர்த்தியாகிப் பிரஹ்மானந்தமான பரம புருஷார்த்தம் அடையப்படுகின்றது. அப்பரம புருஷார்த்தப் பிராப்தியைவிட வேறு கர்த்தவ்யம் எஞ்சி நிற்பதில்லை. தஸ்ய காயம் ந வித்யதே (அவனுக்கு ஒரு கார்யமுமில்லை) என்னுந் தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்களும் ஞானவானுக்குக் கர்த்தவ்யத் தன்மையை விலக்கியுள்ளன.

சித்த விசிராந்தியின் பொருட்டுத் தத்துவவேத்தாவுக்கும் வாசனுக்ஷயமனோநாசங்களின் அப்பியாசமாகிய கிருவைக்கர்த்தவ்ய மிருக்கின்றதெனக் கூறின்; அது பொருந்தாது. ஏனெனின், மகா வாக்கியத்தாற்றோன்றும் அபரோட்ச

உணர்ச்சிக்கு விஷயமாகிய நித்திய நிரதிசய பிரஹ்மானந்தத்தில் மூழ்கியமனத்திற்கு வேறு துச்சவிஷயங்களில் முயலுதல் செல்லாது. ஆகவே ஞானவானுக்கு அச்சித்தத்தின் விசிராந்தி இயல்பாகவே சித்தித்திருக்கின்றது. தாற்பரியமிதுவாம்:—பூமி முழுவதும் ஆளும் அரசியல் இன்பத்தை அநுபவிக்கும் சக்ரவர்த்தியாகிய இறைவனொருவன் எங்ஙனம் ஒரு கிராமத்திற்கு அதிபதியாகும் கீழ்மையின்பத்தை இச்சிப்பதில்லையோ, அங்ஙனமே அகண்ட ஏகரச பிரஹ்மாநந்தத்தை அநுபவிக்கும் ஞானவானுடைய சித்தம் கீழ்மையான விஷய வின்பத்தை இச்சிப்பதில்லை. ஆகவே ஞானவானுக்கு அச்சித்தத்தின் விசிராந்தி இயல்பாகவே சித்தித்திருக்கின்றது. அச்சித்த விசிராந்தியை வேண்டி ஞானவானுக்குச் சிறிதளவுங் கர்த்தவ்யமில்லை. ஆதலால் தத்துவஞானத்தின் பின்னர் வாசனக்ஷய மனோநாசங்களின் அப்பியாசத்தின் கர்த்தவ்ய முண்டென நியமித்தல் வீணாம்.

சமாதானம்:—வேதாந்த சாஸ்திரத்திற்கு அதிகாரிகள் இருவர். முக்கியாதிகாரி ஒருவர், அமுக்கியாதிகாரி மற்றொருவர். எவர்கள் சகுணபிரஹ்மத்தின் சாட்சாத்காரம் வரைக்கும் வழிபாட்டைச்செய்து, பரமேசுவரனது திருவருளால் விஷயங்களில் தீமையைக்கண்டு, விவேகம் வைராக்யம் முதலிய சாதனங்கள் நிறைந்தவராகிச் சிரவண முதலியவற்றில் முயல்கின்றார்களோ, அவர்கள் முக்கியாதிகாரிக ளெனப்படுவார். அத்தகைய முக்கியாதிகாரிகளுக்கோ ஒருமுறை செய்த சிரவண முதலியவற்றால் ஜீவன்முக்தியின்கண் முடிவையுடைய தத்துவ ஞானம் உண்டாகின்றது. அதாவது அம்முக்கியாதி காரிகளுக்குத் தத்துவ ஞானத்திற்குச் சமகாலத்திலேயே ஜீவன்முக்தியுண்டாகின்றது. ஏனெனின், முக்கியாதிகாரிகளுக்குத் தத்துவஞானத்திற்கு முன்னமே அவ்வழிபாட்டால் சித்தம் ஒருவழிப்படுவதாகிய சித்த விசிராந்தி சித்தித்திருக்கின்றது. அந்தக் கிருதோபாஸ்தி முக்கியாதிகாரிகளுக்குத் தத்துவ ஞானத்திற்குப் பிறகு வாசனக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் வேண்டியதில்லை. மேற்கூறிய சுருதி ஸ்மிருதி வசனங்களும் அத்தகைய முக்கியாதிகாரிகளுக்கே தத்துவ ஞானத்திற்குப் பிறகு கர்த்தவ்யத்தை விலக்கியுள்ளன. சகுண பிரஹ்மத்தின் வழிபாடில்லாத இக்காலத்தைய எந்தப் புருஷர்கள் விவேக முதலிய சாதன சம்பன்னராகிப் பிரஹ்மத்தை யறியவேண்டுமென்னும் விருப்பால் சிரவணமுதலியவற்றில் முயல்கின்றனரோ, அந்த அகிருதோபாஸ்தி புருஷர்கள் அமுக்கியாதிகாரிகளெனப் படுவார். அப்படிப்பட்ட அமுக்கியாதிகாரிகளுக்குச் சிரவணாதிகளினால் தத்துவ சாட்சாத்காரமோ அவசியம் உண்டாகின்றது. ஆனால், ஞானத்திற்கு முன் அவர்கள் வாசனக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் வலுவாகச்செய்தவரன்று. ஆதலால் அவர்களுக்குச் சித்த விசிராந்தி யுண்டாகின்றதில்லை.

மேலும், அவ்வமுக்கியாதிகாரிகளுக்குச் சிரவணமுதலியவற்றாலுண்டான பிரஹ்மசாட்சாத்காரம் மகாவாக்கியமாகிய பிரமாணத்தாற் றோன்றுவதாலும், பிரஹ்மாத்ம விஷயம் பாதிக்கப்படுவதல்லாமையாலும், பிரமை வடிவமாயும், அஞ்ஞானத்தைப் போக்கடிக்கத்தக்கதாயும் இருக்கின்றது. ஆனால், காற்றுள்ள விடத்தில் வைக்கப்பட்ட தீபத்தைப்போல, பிராரப்த வினையால் தேடப்பட்ட

போக வாசனையினுல் அசைக்கப்படுவதாய், அச்சாட்சாத்காரம் ஒருபோது ஐயந்திரிவுகளாகிய இடையூறுகள் நேருவதனுல் அஜ்ஞானத்தைப் போக்கடிப் பதில் வல்லமையற்றதாகின்றது. ஆகவே அகிருதோபாஸ்திகரான அமுக்கியாதி காரிகளுக்கு நேர்ந்த இடையூறுகளைத் தவிர்க்க வேண்டித் தத்துவஞானத்திற் குப் பிறகு வாசனுக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் கட்டாயஞ் செய்யத் தக்கதாம்.

இக்கருத்து பற்றியே ஸ்ரீவியாசபகவானும் பிரஹ்ம சூத்திரத்தில் சூவ்ரு திரஸகூஜ-உவஷெமாக। சூவ்ராயணாத்தூராவிஹிஷ்ஷூ॥ (பிரஹ்மத்தைவிட யிக்கும் கேட்டல் சிந்தித்தல் தெளிதல்களைப் பன்முறை பழகுதல் வேண்டும், சுழுப்தி மரணங்கள் வரையில் வேதாந்த எண்ணத்தாற் காலங்கழித்தல் வேண் டும் என்னுந் தொடக்கத்து ஸ்மிருதிகளில் எப்பொழுதும் பிரஹ்ம விசாரஞ் செய்ய வேண்டுமென்று உபதேசித்திருத்தலால்—மரணம்வரையிலும் தியானம் கர்த்தவ்யம்;முடிவிலே எதெதை நினைந்து யாக்கையை விடுகின்ருனே;அததைப் பற்றிய பாவனையை எப்பொழுதும் பாவித்தவனுய் அததையே அடைகின் ருன் என்னுந் தொடக்கத்து ஸ்மிருதிகளில் தியானம் இறுதிக்காலத்திற் கூறி யிருத்தலின்) என்னுஞ் சூத்திரங்களால் அமுக்கியாதிகாரிகளின் பொருட்டு அப்பியாசத்தின் ஆவிருத்தியைக் கூறியிருக்கின்றனர். இதனுற் பெறப்பட்ட தென்னை யெனின்:—முக்கியாதிகாரிகளுக்குத் தத்துவஞானத்தின் பிறகு வாச னுக்ஷய மனோநாசங்களின் பழக்கம் வேண்டியதாகா விட்டாலும், அவ்வமுக்கி யாதிகாரிகளுக்குத் தத்துவஞானத்தின் பிறகு சித்த வமைதியின் பொருட்டு அவ்வாசனுக்ஷய மனோநாசங்களின் பழக்கம் கட்டாயம் வேண்டியதாம்.

சங்கை:—ஒருவனுக்கு வாசனையின் சொரூபம் இன்னதென உணர்ந்த போதன்ருே, அவ்வாசனையை க்ஷயஞ் செய்வதில் முயற்சி யுண்டாகும். அஃ தன்றி அவ்வாசனையைத் தொலைப்பதில் முயற்சியுண்டாகாதே?

## வாசனையின் போது சிறப்பு இலக்கணங்கள் முதலியன கூறல்.

சமாதானம்:—அவ்வாசனையின் பொதுவிலக்கணம், பிரிவு,பயன், சிறப்பிலக் கணம் இவைகளைப்பற்றி ஸ்ரீவசிஷ்டபகவான் அறைந்திருக்கின்றனர். அவையா வும் அவ்வசிஷ்ட பகவானது வசனங்களைக்கொண்டே ஈண்டுக் காட்டுதும். அவற் றுள் முதலில் அவ்வாசனையின் பொதுவிலக்கணமாவது:—சுலோகம். ஒூஹாவ நயாத்ருக வ-விவ-ஊவாா விவாரணு। யஊாஊா-நம வஊாய-உஸ்ருவாஸநா ஸாவ கீதிஊத(இ-ள்) திடபாவனையோடு முன் பின் ஆராயாமல் விஷயங்களைக் கொள் ளுவது, அதாவது நமது பாஷை எல்லாப்பாஷைகளிலும் நன்ருனது, நமது தேசம் சர்வதேசங்களிலும் மேலானது, நமது குலம் குலங்களெல்லாவற்றிலுஞ் சிறந்தது, நமது மக்கள் அனைவரினும் மேற்பட்டவர்கள் என்னும் இவை முத லான அபிமானம் எதுவோ, அதை வித்வான்கள் வாசனை என்று கூறுகின்ற னர்.

வாசனையின் பிரிவும் பயனுமாவன:—சுலோகம் வாஸநா திவியாவெ்ராகூா ஶுஊாவஊீநாதயா। ஊீநாஜநூநொ ஹெதுஃ ஶுஊாஜநூ விநாஶிநீ (இ-ள்)

கூறிய அவ்வாசனை இருவகைத்து. ஒன்று சுத்தவாசனை, மற்றொன்றுமலின வாசனை. மலினவாசனையோ ஒருவனது பிறப்பிற்குக் காரணமாகின்றது. சுத்த வாசனை பிறவி நிவிர்த்திக்குக் காரணமாகின்றது. அம்மலினவாசனையின் சொரூப விலக்கணமாவது சுலோகம். அஜ்ஞாந ஸுகநாகாரகநாஹங்காரஶாலிநீ । புநர்ஜந்மகரீ ப்ரோக்தா அஶுத்தா வாஸநா புதை: (இ - ள்) பிரஹ்மத்தின் சொரூபத்தை மறைத்துள்ள அஜ்ஞானத்தினல் திரண்டதான ஆகாரமுடைய கந வகங்காரத்தோடுங் கூடிய வாசனையை வித்வான்கள் மலினவாசனை என்பர். இம்மலின வாசனையே ஒருவனுக்கு மறுபிறவியைத்தருகின்றது. இங்கு மயக்க உணர்வின் பரம்பரை எதுவோ, அதுவே அவ்வகங்காரத்தின் திரண்டதான வாகாரமாம். அவ்வகங்காரத்தின் திரட்சித் தன்மையை ஸ்ரீபகவான் கீதையில் பதினறுவது அத்தியாயத்தில் அசுரசம்பத்தின் நிருபணப் பிரசங்கத்தில்,

இதமத்ய மயா லப்தமிமம் ப்ராப்ஸ்யே மநோரதம்
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புநர்தநம்

(இப்பொழுது இதுஎன்னல் அடையப்பட்டது. இந்தக் கோரிக்கையைச் சீக்கிரம் பெறுவேன், இவ்வளவு எனக்கிருக்கின்றது. இனி இவ்வளவு தனம் எனக்குச் சேரப்போகின்றது.

அஸௌ மயா ஹத: ஶத்ரு: ஹநிஷ்யே சாபராநபி
ஈஶ்வரோऽஹமஹம் போகீ ஸித்தோऽஹம் பலவாந்ஸுகீ

இப்பகைவன் என்னுற் கொல்லப்பட்டான். மற்றவர்களையுங் கொன்றுபோடுவேன், நான் ஈசுரன், நான் போகி, நான் சித்தன், வல்லவனும் இன்பமுடையவனும் நானே.

ஆட்யோऽபிஜநவாநஸ்மி கோऽந்யோऽஸ்தி ஸத்ருஶோ மயா
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்யஜ்ஞாந விமோஹிதா:

நான் செல்வப் பெருக்குடையவன், மிக்க ஜனங்களை யுடையவன், எனக்கு இணையாக எவனுளன், யாகஞ்செய்வேன், தானஞ்செய்வேன், களிக்கின்றேன் என ஆசுரத்தன்மையர் அறிவின்மையால் பலவாறு மயங்கி நின்றார்கள்.)

என்னும் மூன்று சுலோகங்களால் அருளியிருக்கின்றனர். சுத்தவாசனையின் சொரூப விலக்கணமாவது:— சுலோகம். புநர்ஜந்மாங்குரம் த்யக்த்வா ஸ்திதா ஸம்ப்ருஷ்டபீஜவத் தேஹார்தம் த்ரியதே ஜ்ஞாதஜ்ஞேயா ஶுத்தேதி சோச்யதே (இ-ள்) எவ்வாசனை மறுபிறவியின் மூலத்தை நசிப்பித்து வறுத்த விதையைப் போலத் தேகஸ்திதியின் பொருட்டு நிற்பதாமோ, மேலும், எவ்வாசனையினல் அளவு கடந்த ஏகரச இன்பவஸ்துவானது அறியப்படுமோ, அவ்வாசனை சுத்த வாசனை யெனப்படும்.

இனி முற்கூறிய மலினவாசனையின் பிரிவு கூறுதும். பிறப்பை யடைவிக்கும் அம்மலின வாசனை எண்ணிறந்ததாயினும் ஸ்மிருதியில் சுருக்கமாய் மூன்று வகையாகக் கூறப்பட்டுளது. சுலோகம். லோகவாஸநயா ஜந்தோ: ஶாஸ்த்ரவா

ஸ.நயாவிஶாஸ்த்ரவாஸநயா ஜா.நம்யமாவ்நெவஜாயதெ (இ-ள்) முற்கூறிய
அம்மலினவாசனை லோகவாசனை, சாஸ்திரவாசனை,தேகவாசனை என்னும் வேறு
பாட்டால் மூவகைத்து. அம்மூன்று வாசனைகளுள் யாதாமோர் வாசனை எவ
னுக்குண்டா யிருக்கின்றதோ, அவனுக்கு அவ்வாசனையாகிய இடையூற்றின்
வசத்தால் ஆத்மாவின் மெய்யுணர்வு உண்டாகின்றதில்லை.

## லோகவாசனு நிரூபணம்.

எவ்வாறு நடந்து கொண்டால் அனைவரும் நம்மைத் துதிசெய்வாரோ; ஒரு
வரும் நம்மை நிந்திக்க மாட்டாரோ, அவ்வாறு நடக்கவேண்டும் என்னுந் துர
பிமானம் உலகவாசனையாம். அவ்வுலக வாசனை நூறுகோடி ஜன்மங்களாலுந்
தேடற்கரியது. ஏனெனின், நிந்தைகளனைத்து மில்லாதவரும், எல்லா நற்
குணங்களோடுங் கூடியவரும், நமஸ்காரம் ஸ்மரணம் முதலியவைகளால் எல்
லாப் புருஷார்த்தங்களையும் அளிப்பவருமான ஸ்ரீராமகிருஷ்ணுதி ஈசுவரர்களை
யும் அனைவருந் துதிப்பதில்லை. ஆனற் சில மேலோர்களே துதிசெய்கின்றார்
கள். சில கீழ்மக்கள் நிந்தையுஞ்செய்கின்றார்கள். இராம கிருஷ்ணுதி ஈசுவரர்
களையே யாவருந்துதியாதபோது, நம்போலிய ஜீவர்களை எவரும் என்னணம்
துதிப்பார்கள் ? ஆனல் துதியார்கள். ஆதலால் அவ்வுலகவாசனை தேடற்கரிய
தாம். ஆகவே அதிகாரிகள் உலகவாசனையை யொழித்துத் தமக்கு உறுதிபயப்
பதையே தேடவேண்டும்.

இவ்வார்த்தை வேறு நூற்களிலுங் கூறப்பட்டுளது. சுலோகம். விஷ்ணுதெ
நவஜு கஶிஷ்டுவாயஃ ஸவ்லொக வஶிதொக்ஷ கரொயஃ। ஸவ்யாஸ ஹி
தாவாரணீயம் கிம்கரிஷ்யதிஜநொ பஹுஜஃ (இ-ள்.) எவ்வுபாயத்தால்
உலகமுழுவதுந் துதிக்குமோ, அவ்வுபாயம் உலகசாஸ்திரத்திற் கிடையாது.
ஆதலால் அதிகாரி உலகவாசனையை விட்டு அனைத்தாலும் தனக்கு உறுதிபயப்
பதையே தேடவேண்டும். மனதுக்குத்தோற்றினவாறு யெல்லாங்கூறும் ஜனங்
களின் துதி நிந்தைகளைக் கவனிக்கப்படாது. ஏனெனின், அவர்களது துதி நிந்
தைகளால் யாதொரு ஆனியும் இலாபமு முண்டாக மாட்டா. இன்னும் இப்
பொருளையே பர்த்திருஹரியு முரைத்திருக்கின்றனர். சுலோகம். நிந்தந்து நீதி
நிபுணாய திவாஸ்துவந்து லக்ஷ்மீஃ ஸமாவிஶது கச்சது வாயயெஷ்டம்। அத்யைவ
வா மரணமஸ்து யுகாந்தரெவா ந்யாய்யாத்பதஃ ப்ரவிசலந்தி பதம் நதீராஃ
(இ-ள்.) நீதியில்வல்லவர்கள் நிந்தை அல்லது துதியைச்செய்யினும், இலக்குமி
வருகினும் அல்லது ஏகினும், இன்று தினத்தில் அல்லது யுகாந்தரத்தில் மர
ணம் நேரினும், தைரியமுடைவர்களான விவேகிகள் சாஸ்திர விகிதமான மார்க்
கத்தினின்றும் ஒரு அடிமாத்திரையும் பெயருவதில்லை. அதாவது உலகவர் செ
ய்யுந் துதிநிந்தைகளை அசட்டை பண்ணி விவேகிகள் தமக்கு உறுதி பயப்பதை
யே நாடுகின்றார்கள்.

அன்றியும், உலகவாசனையின்கண் அபிமானமுடையவனுக்கு ஆத்மஞா
னம் உண்டாகாதென்னும் வார்த்தை மற்ற சாஸ்திரத்திலுங் கூறப்பட்டுளது.

சுலோகம். நலோகசித்தக்ரஹணே ரதஸ்ய நபோஜநாச்சாதந தத்பரஸ்ய। நசப்தசாஸ்த்ராபிரதஸ்ய மோக்ஷோ நசாபிரம்யாவஸதப்ரியஸ்ய (இ - ள்) எவன் எல்லாவகையாலும் யாவருடைய சித்தத்தை இரஞ்சிக்கச் செய்வதிற் பிரீதியுள்ளவனும், ஊண் உடைகளிற்றற்பரனும், இலக்கண முதலிய அநாத்ம நூற்களில் மிக்க உருசியுள்ளவனும், அதிரம்மியமான வீட்டினிடை வைகப் பிரியமுள்ளவனுமாவனோ, அவன் மோட்சத்தைப் பெறான். ஆகவே மோட்ச இச்சையுடையவர்கள் உலகவாசனையை எவ்வாற்றானும் விடல் வேண்டும்.

## சாஸ்திரவாசனா நிரூபணம்.

சாஸ்திரத்தின் கருத்தை யறியாமல் அச்சாஸ்திரங்களை யோதுவது முதலிய வாசனைகள் சாஸ்திரவாசனை யெனப்படும். பாடவாசனை, அர்த்தவாசனை, அநுஷ்டானவாசனை யென்னும் வேறுபாட்டால் அஃது மூவகைத்தாம். ஆயுள் முழுவதும் வேதசாஸ்திர பாடங்களை அவைகளின் தாற்பரிய மறியாமல் அத்தியயனஞ் செய்தல் பாடவாசனையாம். அப்பாடவாசனை பரத்வாஜருக்குண்டாயிருந்தது.

பரத்வாஜ ரென்னுமோர் இருடி தனது ஆயுளின் மூன்றுபாகம்வரையும், அதாவது எழுபத்தைந்து வருடங்காறும் வேதங்களின் பாடத்தை அத்தியயனம் பண்ணி மிகவுந் தளர்ந்த மூப்புப் பருவத்தை யடைந்தனர். இத்தறுவாயில் அப்பரத்வாஜரைப் பார்த்து வானவர் கோனாகிய இந்திரன் அவர் அருகிற் போந்து, பரத்வாஜரே! ஒருகால் நான் உமக்கு ஆயுளின் நான்காவது பாகத்தைத் தருவேனாயின், அதைக்கொண்டு நீவிர் எது தேடவல்லீர்? என்றான். அவ்வண்ணம் புகன்ற ஆகண்டலனது வசனத்தைக் கேட்டு அவ்விருடி அந்நான்காவது ஆயுள்பாகத்திலும் வேதங்களின் பாடங்களையே ஓதுவேன், என்று கூறினர். உடனே சசிமணாளன் கருணைகூர்ந்து அவ்விருடியை அப்பாடவாசனையினின்றும் விலக்கும் பொருட்டு வேதங்களை மலைவடிவமாகக் காட்டி அவ்வேத வடிவான மலையினின்றும் ஓரோர்பிடியை யெடுத்து ஐயன்மின்! வேதவடிவான மலையினிடத்து இதுவரைக்கும் நீவிர் ஒரு பிடியளவான வேதத்தை யோதினீர், இன்னும் மலைவடிவான வேதம் ஓதுவதற்கு எஞ்சி நிற்கின்றது எனக் கூறினனாக. அதுகேட்ட அவ்விருடி அப்பாடவாசனையினின்றும் விலகினார். அதன் பிறகு புருகூதன் அப்பரத்வாஜருக்குப் பிரஹ்ம வித்தையை உபதேசித்தான். இக்கதை தைத்திரீய சுருதியின் பரத்வாஜ உபாக்கியானத்திற் பிரசித்தமாயுளது.

வேதசாஸ்திரங்களின் தாற்பரியத்தை யறியாமல் வாழ்நாள் முழுமையும் அவ்வேத சாஸ்திரங்களின் அர்த்தத்தை அத்தியயனம் பண்ணுதல் அர்த்தவாசனை யெனப்படும். அவ்வர்த்த வாசனையும் பாடவாசனையைப்போன்று தேடத்தக்கதன்றாகலின் மலினவாசனையேயாம். ஆதலினன்றே வித்வான்களுங் கூறுவதாவது:—சுலோகம். அநந்தசாஸ்த்ரம் பஹுவேதிதவ்யம் அல்பஶ்ச காலோ பஹவஶ்ச விக்நா:। யத்ஸாரபூதம் ததுபாஸிதவ்யம் ஹம்ஸோ யதாக்ஷீர மிவாம்பு

திருஷ்டி (இ-ள்) சாஸ்திரங்களும் அச்சாஸ்திரங்களி லுறைந்துள்ள பொருள்களும் அளவிறந்தன. அப்பொருள்களைச் சொற்பகாலங் கொண்டறிய முடியாது. புருஷனது வாழ்நாளோ மிகச் சொற்பம், அச்சொற்பவாழ்நாளிலும் நோய் முதலிய இடையூறுகள் பல உள. அவ்விடையூறுகளோடுங் கூடிச் சொற்ப வாழ்நாளைக் கொண்டு அவ்வெல்லாச் சாஸ்திரங்களின் அர்த்தங்களை அறியமுடியாது. ஆகவே ஹம்சப்புள்ளானது நீர் கலந்த பாலில் பால்மாத்திரையையே கொள்ளுமாறுபோல, அதிகாரிகளும் சர்வ சாஸ்திரங்களுக்கும் சாரமான பிரஹ்மாத்ம வடிவ அர்த்தம் எதுவோ, அதுவே கொள்ளத்தக்கதாம்—எவர்கள் நான்கு மறைகளின் பொருள்களையும், பல அறநூற்களின் பொருள்களையும், ஓதியும் 'நான் பிரஹ்மம்' என்று பிரஹ்மத்தை யறிகிலரோ, அவர்கள் சட்டுவத்திற்குச் சமானர்கள். அதாவது சட்டுவமானது அநேகவியஞ்சனங் (கறி) களிற்றிரிந்தும் அவற்றின் உருசியை யறியாதது போலவாம்.

சுருதி ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட கர்மங்கள் எவையோ, அக்கர்மங்களை அநுஷ்டித்துக் கொண்டே வாழ்நாள் முழுவதுங்கழித்தல் அநுஷ்டானவாசனை யெனப்படும். அவ்வநுஷ்டான வாசனை நிதாகருக்குண்டாயிருந்தது. அந்நிதாகர் றிபுவென்னுமோ ரிருடியினாலே அடிக்கடி பிரஹ்மாத்ம தத்துவ முபதேசிக்கப்பட்டும் அநுஷ்டான வாசனையினால் அதை உணர்ந்திலர். மூன்றாம் முறை றிபுவின் உபதேசத்தால் மிகக் கிலேசமான எல்லா அநுஷ்டானங்களையும் நீக்கிவிட்டுப் பிரஹ்மாத்ம தத்துவத்தைச் சாட்சாத்கரித்தனர். இவ்வார்த்தை விஷ்ணுபுராணத்தில் விரிவாய்க்கூறப்பட்டுளது. ஆகவே மேற்கூறிய மூவகைவாசனைகளும் ஆத்ம ஞானத்திற்குத் தடைகளேயாம்.

## தேகவாசனா நிரூபணம்.

பூதங்களின் கலப்பான இத்தூல சரீரத்திலுள்ள அபிமானம் தேகவாசனை யெனப்படும். அஃது இருவகைத்தாம். ஒன்று தேகத்தை விஷயப்படுத்துவது, மற்றொன்று தேக சம்பந்தியான குணங்களை விஷயப்படுத்துவது. நான் மனிதன், நான்மறையோன் என்றிவ்வாறான வாசனை தேகத்தை விஷயப்படுத்தும் வாசனையாம். சாஸ்திரீயம், லௌகிகம் என்னும் வேறுபாட்டால் இரண்டாவது தேக சம்பந்தியான வாசனையும் இருவகைப்படும். அவற்றுள், முதற் சாஸ்திரீய வாசனையும் இருவகைத்து. ஒன்று குணத்தைச் சம்பாதிப்பது, மற்றொன்று தோஷத்தைப் போக்குவது. சாஸ்திர விகிதமாகக் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நாநம் பண்ணுவதும், தேகத்தில் சற்குணங்களை மேற்கொள்ளுவதுமாயுள்ள வாசனை குணத்தைச் சம்பாதிக்கும் வாசனையாம். சௌசம் ஆசமனம் முதலியவற்றால் தேகத்தின் அழுக்குகளை நீக்கும் வாசனை தோஷத்தைப் போக்கும் வாசனையாம்.

இவ்வாறே லௌகிக வாசனையும் இருவகைத்து. எண்ணெய் குடித்தல் மிளகைத்தின்னுதல் முதலியவற்றால் தேகத்தில் சௌந்தர்ய முதலியவைகளைப் பண்ணிக்கொள்ளும் வாசனை முதலாவது. மலநிவிர்த்தியைச் செய்யும் ஔஷதங்களாலும், நீராலும் தேகத்தின் மலங்களைக் கழிக்கும் வாசனை இரண்டா

வது. இவ்வெல்லாத் தேகவாசனைகளும் ஞானத்திற்குத் தடையாவதாலும், மறுபிறப்பிற்குக் காரணமாவதாலும் மலினவாசனையேயாம்.

அன்றியும் லோகவாசனை, சாஸ்திரவாசனை, தேகவாசனை என்னும்மூன்று வாசனைகளுக்கு வேறாய் ஞானத்திற்குத் தடையாயுள்ள மலினவாசனையைக் கீதையின் பதினாறுவது அத்தியாயத்தில் ஸ்ரீபகவான் [illegible] (தற்புகழ்ச்சி செருக்கு அபிமானம் வெகுளி கொடுமையாய்ப்பேசுதல் இவைகளும்) என்னுந் தொடக்கத்து வசனங்களால் தற்புகழ்ச்சி செருக்கு முதலியவற்றை அசுர சம்பத்தாகக் கூறியருளினர். இவ்வாறு மனைவி மக்கள் முதலியோரிடத்துள்ள காதலும் மலினவாசனையேயாம். அவ்வெல்லா மலினவாசனைகளும் ஞானத்தடைகளாகின்றமையால் முமூட்சுக்கள் தள்ளத் தக்கனவாம்.

சங்கை:—அம்மலின வாசனைகளை நீக்கும் உபாயங்கள் யாவையோ?

## மலினவாசனையை நீக்கும் உபாயங்கூறல்.

சமாதானம்:—அம்மலினவாசனை மேற்கூறியவாறு பலவகைத்தாகலின் வசிஷ்டாதி முனிவர்கள் அவற்றை நீக்கு முபாயங்களும் பலவாறாகக்கூறியிருக்கின்றனர். அவற்றுள் நித்திய அநித்தியவஸ்துக்களின் விவேகமும், விஷயங்களில்தீமையைக்காண்டலும், மஹாத்மாக்களின் சற்சங்கமும், விஷயிகளின் சங்க நீக்கமும், நட்பு தயை முதலிய விரோதி வாசனைகளின் உற்பத்தியுமாகிய விவைமுதலிய உபாயங்களால் அம்மலினவாசனை நீங்கிவிடுகின்றது. ஆகவே அவ்விவேக முதலிய உபாயங்களால் தனது அந்தக்கரணத்தில் அம்மலினவாசனைகள் உண்டாதற்கு இடங்கொடா திருப்பது எதுவோ, அதுவே அவ்வாசனாக்ஷயத்தின் அப்பியாசமாம். சுலோகம். [illegible] (இ-ள்) சுட்டியறியப்படும் இவ்வுலக முழுவதும் அதிஷ்டான ஆத்மாவினும் வேறாக வாஸ்தவமாயில்லை என்னுந் திருசியப் பிரபஞ்சத்தின் அசம்பவ ஞானத்தால் பிரபஞ்சமாகிய விஷயமின்மையோடு விருப்பு வெறுப்பு முதலிய வாசனைகள் நீங்குங்கால் புருஷனுக்குத் தனது சொரூபவின்ப வநுபவத்தில் எந்தத் திடப்பிரிய முண்டாகின்றதோ, அதனை வித்வான்கள் வாசனாக்ஷயத்தின் அப்பியாசமென்பர்.

இனி வேறுவகையாக அம்மலினவாசனையை நீக்கும் உபாயத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்களைக் கூறுதும். சுலோகம். [illegible] (இ-ள்) 'நான் அசங்கன்' என்னும் விருத்திகளின் வெள்ளமாகிய வியவகாரத்தை நிரந்தரஞ் செய்தலாலும், உலகநினைவை யொழித்தலாலும், எப்பொழுதுந் தனது சரீரத்தின் மரணத்தைக் காண்டலாலும், ஆசைமுதலிய வேறு வாசனைகளுண்டாகா. தனது மரணக்காட்சியால் ஆசை முதலிய வாசனைகளுண்டாகா வென்னும் வார்த்தை பிறநூற்களினுங் கூறப்பட்டுளது. சுலோகம். [illegible] (இ-ள்)

ஒருவன் தனது மத்தகத்தின் மீதுள்ள மிருத்யுவை ஒருபொழுது பார்ப்பானா யின் அவனுக்குப் போஜனத்திலும் பிரிய முண்டாகின்றதில்லையானால் ஏனைய செல்வங்களில் எவ்வாறு பிரியமுண்டாகும்? ஆனல் உண்டாகாது.

சம்சாரத்தின் தீங்கைக்கூறும் வசனமாவது:—சுலோகம். दुःखं जन्म जरा दुःखं दुःखं मृत्युः पुनः पुनः । संसारमण्डलं दुःखं पच्यन्ते यत्र जन्तवः (இ-ள்) பிறத்தலுந் துன்பவடிவம், மூப்புந் துன்பவடிவம், அடிக் கடி சாதலும் துன்பவடிவம் எனின், இங்கு அதிகங்கூற வேண்டுமோ? எச்சம் சார மண்டலமிசை அறிவில்லாத உயிர்களெல்லாம் அடிக்கடி பிறப்பிறப்புக் களை அடைகின்றனவோ, அச்சம்சார மண்டலமுழுவதும் துன்பவடிவந்தான். இவ்வாறு ஆத்மாவினும் வேறான சர்வ ஜகத்தையும் துன்பவடிவமாகச் சிந்திக் கும் புருஷனுக்கு விருப்பு வெறுப்பு முதலியவெல்லா மலினவாசனைகளும் நீங்கி விடுகின்றன.

விஷயத்திற் சிக்கியவர்களின் கூட்டுறவை விடுவதும் மலின வாசனையை நீக்குதல் மூலமாகப் புருஷனுக்கு மோட்ச சாதனமாகின்றதென்னும் வார்த்தை விஷ்ணுபுராணத்திற் கூறப்பட்டுளது. சுலோகம். निःसङ्गता मुक्तिपदं यतीनां सङ्गादशेषाः प्रभवन्ति दोषाः। आरूढयोगोऽपि निपात्यतेऽधः सङ्गेन योगी किमुताल्पसिद्धिः (இ-ள்) விஷயப்பற்றுள்ளவர் களின் சங்கத்தை விடுவதாகிய நிஸ்ஸங்கத்தன்மையே துறவிகள் முக்தியை யடைய மார்க்கமாம். ஏனெனின், அவ்விஷயப் பற்றுடையவர்களின் சேர்க்கை யால்ஒருவனுக்கு ராகம் துவேஷம் மோகம் முதலியவெல்லாத் தீங்குகளும் விளை கின்றன. அம்மலினவாசனையாகிய தீங்குகள் யோகமேறியவனையுங் கீழே தள்ளு மானல் யோக மேறுவதற்கு விரும்பியவனைக் கீழ்த்தள்ளாதோ?

தத்துவத்தை யறிந்தவர்கள் அனைத்தானும் விஷயிகளின் கூட்டுறவின்றி யவராதல் வேண்டுமென ஏனைய நூற்களிலுங் கூறப்பட்டுளது. சுலோகம். तथा चरेत वै योगी सतां धर्ममदूषयन् । जना यथावमन्येरन् गच्छेयुर्नैव सङ्गतिम् (இ-ள்) ஆகையால் தத்துவமுணர்ந்தோன் மேலோர்களின் தர்மங்களைத் தூஷிக்காமல் உலகில் நடக்குக. விஷயாசக்தர்கள் அவமானஞ் செய்தாலும் சங்கதியை யடையார்கள் போலும். மேலும் இவ்வார்த்தை பாரதத்திலுங் கூறியுளது. சுலோகம். अहेरिव गणाद्भीतः सन्मानान्नरकादिव । कुणपादिव च स्त्रीभ्यस्तं देवा ब्राह्मणं विदुः (இ-ள்) தேக விழை வுள்ளவர்கள் பாம்பைக்கண்டு பயப்படுமாறுபோலஎவன்ஜனங்களின்கூட் டத்தைக் கண்டுபயப்படுகின்றானோ;எல்லாரும்நரகத்திற்குப் பயபடுமாறுபோல. எவன் சன்மானத்திற்குப் பயப்படுகின்றானோ, யாவரும் பிணத்தைக்கண்டு பயப் படுமாறுபோல எவன் மகளிரைக்கண்டு பயப்படுகின்றானோ, அவ்வித்வானைத் தெய்வத்தன்மையுள்ள பிராஹ்மணன் அதாவது ஜீவன் முக்தன் என்று அறிதி. இப்பொருளை ஸ்ரீ பாகவதத்திற் கூறப்பட்டுளது. சுலோகம். सङ्गं त्यजेत मिथुनव्रतिनां मुमुक्षुः सर्वात्मना न विसृजेद्बहिरिन्द्रियाणि । व

கஸ்மாத் ஸஹவி விதேநஸம்ஸர்கோ யோஜிதஸ்த்ரிஷு ஸாயகேஷ்வ ப்ரஸம்ஶ:॥ ஸ்த்ரீணாம் ஸ்த்ரீஸங்கிநாம் ஸங்கம் த்யக்த்வா தூரத ஆத்மவான் க்ஷேமே விவிக்த ஆஸீநஶ்சிந்தயேந்மாமதந்த்ரித: (இ-ள்) விஷயப்பற்றுள்ள ஆடவர் மகளிர்களின் சேர்க்கையை அறவிடுக. கண் முதலிய பதினொரு இந்திரியங்களைப் புற உருவ முதலிய விஷயங்களிற் செல்லவிடற்க. ஏனெனின், இந்திரியங்களை விஷயங்களிற் செல்லவிடுதலால் மநுபகவானும் அகுர்வந் விஹிதம் கர்ம நிந்திதஞ்ச ஸமாசரந் । ப்ரஸஜ்ஜம்ஶ்சேந்த்ரியார்த்தேஷு நர: பதனம்ருச்சதி (விதித்த கர்மங்களைப் புரியாமல் பழிப்பனவற்றைச் செவ்வனே செய்து இந்திரியங்களை விஷயங்களிற் செலுத்தும் மனிதன் அல்லற்படுவான்) என்னும் வசனத்தால் நிரயம்வருமெனக் கூறியுள்ளார்.—ஆனால், முமுட்சுக்கள் தனியிடமடைந்து தனித்து நின்றவராய் முடிவில்லாத ஈசனிடத்துச் சித்தத்தைப் பொருத்துக. அதாவது எப்பொழுதும் பிரஹ்மதியானஞ் செய்குக. ஓர்கால் அச்சித்தம் தனது சஞ்சல வியல்பால் அப்பரப்பிரஹ்மத்தினிடத்து நிற்காவிடின், அப்பரப்பிரஹ்மத்தினிடத்து அன்பையுடைய மஹாத்மாக்களின் சங்கத்தை மேவுக. அல்லது, முமுட்சுக்கள், பெண்களுடையவும் அப்பெண்களின் மீது காதலுள்ள புருடர்களுடையவுஞ் சேர்க்கையைத் தூரத்தள்ளித்தனியிடத்துள்ளவர்களாய்ப் பரமேசுரனாகிய வென்னை 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்று தியானஞ்செய்குக.

அத்தியானத்தின் பயன் ஸ்மிருதியினு முரைக்கப்பட்டுளது. சுலோகம். அஹமேவ பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்யமவ்யயம் । இதி யஸ்ய ஸ்திரா புத்தி: ஸ முக்தோ நாத்ர ஸம்ஶய: (இ-ள்) வாசுதேவரென்னும் பெருடைய உற்பத்தி நாசங்களற்ற பரப்பிரஹ்மம் எதுவோ, அது நான் என்னும் ஸ்திரபுத்தியையுடையவன் முக்தனே; இதிற் சிறிதளவும் ஐயமில்லை. மேலும், இத்தியானத்தின் பயனை இயமராஜனும் மிருத்யுவை நோக்கிச் செப்பியுள்ளார். சுலோகம். ஸகலமிதமஹஞ்ச வாஸுதேவ: பரமபுமாந் பரமேஶ்வர: ஸ ஏக:। இதி மதிரமலா பவத்யநந்தே ஹ்ருதயகதே வ்ரஜ தாந்விஹாய தூராத் (இ-ள்) இவ்வெல்லாவுலகமும, நானும் வாசுதேவ வடிவங்களே. அவ்வாசுதேவர், பரமபுருஷர், பரமேசுவரர், ஏக அத்துவிதீயர் என்றிவ்வகையாக எவர்களுக்கு இருதய தேசத்தினுள்ள பரமாத்மாவினிடத்து அசைவற்ற புத்தியுண்டாமோ, ஏமிருத்யுவே! நீ அவர்களுக்குத் தூரமாக விலகிச்செல். அதாவது பரப்பிரஹ்ம தியானத்தில் ஈடுபடுபவர்களுக்கு மீட்டுங்காலன் வரமாட்டான் என்பதாம். ஆகவே எவர்கள் விஷயப்பற்றுள்ள ஸ்திரீபுமான்களின் சேர்க்கையை விட்டுப் பிரஹ்மத்தைச் சிந்திக்கின்றார்களோ, அவர்களுக்கு அவ்வெல்லா மலினவாசனைகளும் நீங்கி விடுகின்றன வென்பது பெற்றாம்.

சற்கங்கம் வாசனையைப் போக்கும் வாயிலாக மோட்சத்திற்குச் சாதனமென்பதைக் கூறும் வசனங்களாவன:—சுலோகம். மஹத்ஸேவாம் த்வாரமாஹுர் விமுக்தேஸ்தமோத்வாரம் யோஷிதாம் ஸங்கிஸங்கம் । மஹாந்தஸ்தே ஸமசித்தா: ப்ரஶாந்தா விமந்யவ: ஸுஹ்ருத: ஸாதவோ யே (இ-ள்) வித்வான்கள் பெரி

யோர்களின் சேவையை முக்திச் சாதன மெனவும், மகளிரோடுங்கூடிய ஆட வர்களின் சேர்க்கையை நரகத்திற்குச் சாதனமெனவுங் கூறுவர். இங்குச் சம மெனப்படும் பிரஹ்மத்தினிடத்துச் சித்தத்தை யுடையவரும், அல்லது நண்பர் பகைவர்களிடத்திற் சமசித்த முடையவரும், வியப்பான சாந்தவியல்புடைய வரும், சினமற்றவரும், நல்லவிருதய முள்ளவரும் அதாவது உதவிசெய்யாத வனுக்கும் உதவிபுரிபவரும், சாது அதாவது மனஅடக்கம் இந்திரியவடக்கங் களோடு நிறைந்தவருமான குணங்களுடையவர் எவர்களோ, அவர்களே பெரி யோர்களெனப்படுவார். அத்தகைய பெரியோர்களின் சேர்க்கையும் அம்மலின வாசனையைப் போக்குதல்வாயிலாக மோட்சத்திற்கே சாதனமாம்.

மேலும், மாதர் சேர்க்கையோடுங் கூடியவர்களின் சேர்க்கையும் நரகத்திற் குச் சாதனமென்று சாஸ்திரஞ்செப்பியுளது. சுலோகம். யொஷிஹிரண்யா ஹரணாம் ஸராதிஷு த்ரவ்யேஷு மாயாரவிதேஷு உஹிஸ: । ப்ரலொஹிதாத்மா ஹ்யுபஹொமஸம்ஜ்ஞா பதம்ம வந்நஸ்யதி நஷ்டத்ருஷ்டி: (இ-ள்.) மாதர், பொன், ஆடை, அணிகலன் என்னும் இன்னோரன்ன மாயையாற் பண்ணப்பட்ட பொ ருள்களில் ஆசையையடைந்த மனமுள்ள பேதையன், விவேகநோக்கில்லாத காரணத்தால் அப்பொருள்களில் போகபுத்திகொண்டு விட்டிலைப்போல அழிவு றுகின்றான்.

## மைத்திரியாதி சுபவாசனைகளைக் கூறல்.

மைத்திரி கருணை முதலிய விரோதிவாசனைகளால் அம்மலின வாசனைகள் நீங்கிவிடும். இவைகளைப்பற்றிப் பதஞ்சலிபகவானும் யோக சூத்திரத்திலியம்பி யுள்ளார். சூத்திரம் மைத்ரீ கருணா முதிதோ பேக்ஷாணாம் ஸுகது:க புண்யாபுண்ய விஷயாணாம் பாவநாதஸ்சித்த ப்ரஸாதநம் ॥ (இ-ள்.) மை த்திரி, கருணை, முதிதை, உபேட்சை என்னும் நான்கினும் சுபவாசனைகளுண் டாம். சுகிபிராணிகளிடத்தில் இவரனைவரும் நமரே என்னும் பாவனை மைத்திரி யாம் (சிநேகம்). துக்கிபிராணிகளிடத்தில் நமக்குத் துன்பம் உண்டாகக்கூடாதெ ன்பதைப்போல இவர்களுக்கும் துன்பம் உண்டாகக்கூடாதென்னும் பாவனை கருணை (தயை) யாம். நல்வினையுடையோர்களைப் பார்த்து முகமலர்தல் முதி தை (உவகை) யாம். தீயோரிடத்து விருப்பு வெறுப்பின்மை உபேட்சையாம் (நொதுமல்). இவ்வாறான மைத்திரி முதலிய நான்கு பாவனைகளையுடையவனு க்கு ராகம், துவேஷம், அசூயை, மதம், மற்சரம் முதலான வெல்லா மலினவாச னைகளும் நீங்கிப்போம்; அதனாற் புருஷனது சித்தந்தூய்மையாம். இவ்வண்ணம் கீதையின் பதினாறாவது அத்தியாயத்தில் ஸ்ரீ பகவான்,

அபயம் ஸத்வஸம்ஸுத்தி ஜ்ஞாநயோகவ்யவஸ்திதி: ।
தாநம் தமஸ்ச யஜ்ஞஸ்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் ॥

(பயமில்லாதிருத்தல், மனத்தூய்மை, ஞானயோகங்களிலூன்றி நிற்றல், ஈகை, புறவிந்திரியங்களை அடக்குதல், வேள்வி புரிதல், மறைகளை யோதுதல் தவங்கிடத்தல், நேர்மை,

𑌅𑌹𑌿𑌂𑌸𑌾𑌸𑌤𑍍𑌯 𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌪𑍈𑌶𑍁𑌨𑌮𑍍 ।
𑌦𑌯𑌾𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌲𑍋𑌲𑍁𑌪𑍍𑌤𑍍𑌵𑌂 । 𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌂𑌹𑍍𑌰𑍀𑌰𑌚𑌾𑌪𑌲𑌮𑍍 ॥

உயிர்களை வருத்தாமை, சத்தியம், சினமின்மை, துறவு, ஓய்வு, பிறரிடத்துக்குற்றங் கூறாமை, உயிர்களினிடத்துக்கருணை, விஷயங்கள் கிடைத்தும் போகத்திற் சாமர்த்திய மிருந்தும் இந்திரிய விகாரமில்லாமை, கொடூர சுபாவமின்மை, நாணம், சபலமில்லாமை;

𑌤𑍇𑌜𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾𑌧𑍃𑌤𑌿𑌃 𑌶𑍌𑌚𑌮𑌦𑍍𑌰𑍋𑌹𑍋𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾 ।
𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌂𑌪𑌦𑌂 𑌦𑍈𑌵𑍀𑌮𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤 ॥

ஒளி, பொறுமை, தைரியம், பரிசுத்தம், பிறர்க்குத்துரோகஞ் செய்யாமை, செருக்கின்மை—பாரத! இச்சத்வகுணமயமான வாசனைகள் தேவாமிசத்திற் பிறவியெடுத்த மனிதனுக்கு நிகழ்கின்றன.

என்னும் முச்சுலோகங்களால் தெய்வ ஸம்பத்தை அருளினர்.

## ஞான சாதனங்களைக் கூறல்.

அத்தெய்வ ஸம்பத்வடிவான விரோதிவாசனைகளின் பழக்கத்தால் தம்பம் தர்ப்பம் முதலிய அசுர ஸம்பத்வடிவான மலினவாசனைகள் நீங்கிவிடுகின்றனவென்று அக்கீதையின் பதின்மூன்ருவது அத்தியாயத்தில் ஸ்ரீ பகவான்,

𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌮𑌦𑌮𑍍𑌭𑌿𑌤𑍍𑌵𑌮𑌹𑌿𑌂𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌂 𑌶𑍌𑌚𑌂 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥

* அமானித்தன்மை, அதம்பித்தன்மை, அஹிம்சை, க்ஷாந்தி, ஆர்ஜவம், ஆசார்ய உபாசனை, சௌசம், ஸ்தைர்யம், ஆத்ம நிக்கிரகம்.

---

* தன்னிடத்து உள்ளனவும் இல்லனவுமான குணங்களால் தன்னைப்புகழ்தல் மானித்தன்மை (தற்புகழ்ச்சி), அஃதில்லாமை அமானித்தன்மை (தற்புகழ்ச்சியின்மை) இலாபம் பூசை கீர்த்தி முதலியவைகளுக்காக யாவரின் முன்பாகத் தன் தர்மங்களை வெளியிடுதல் தம்பித்தன்மை (தற்பெருமை), அஃதில்லாமை அதம்பித்தன்மை (தற்பெருமையின்மை). மனோவாக்குக்காயங்களாகிய திரிகரணங்களாலும் பிராணிகளை அலக்கணுறுத்தல் ஹிம்சை, அஃதில்லாமை அஹிம்சை. சித்தத்திற் கோபமுதலிய விகாரங்கள் பிறப்பதற்குக்காரணமான, பிறர் இழைக்கும் அபராதம் வந்தவழியும் நிர்விகாரசித்தனுயிருந்து அவ்வபராதத்தைச் சகித்துக்கொளல் க்ஷாந்தி (பொறை). கோணலின்றித் தன்மனத்திலுள்ளவாறு வெளிவியவகாரத்தைப் புரிதலாகிய கபடமின்மை அதாவது பிறரைவஞ்சியாமை ஆர்ஜவம் (நேர்மை) பிரஹ்மவித்தையை யுபதேசித்தருளும் ஆசார்யனைச் சிரத்தாபக்தி பூர்வகமாகப் பூசை நமஸ்காரமுதலியன செய்துதொழுதல் ஆசார்ய உபாசனை (தேசிகன்வழிபாடு). சௌசம் எனல் பரிசுத்தத்திற்காம். அஃது இருவகைத்து. ஒன்று புறப்பரிசுத்தம், மற்றொன்று அகப்பரிசுத்தம், உடம்பின் அழுக்குகளை நீரினுலும் மண்ணினுலும் கழுவுதல் புறப்பரிசுத்தம் உருவம் முதலிய விஷயங்களிலுள்ள குற்றங்களை உற்றுநோக்குதலாகிய விரோதிவாசனையால் மனத்தின் அழுக்குகளாகிய ஆசை முதலியவைகளைப்போக்குதல் அகப்பரிசுத்தம். மோக்ஷசாதனங்களில் முயன்றவனுக்கு இடையூறுகள் பலவரினும் அம்முயற்சியை விடாமல் மீட்டும் மீட்டும் மிகப்பிரயத்னஞ்செய்தல் ஸ்தைர்யம் (விடாமுயற்சி). ஆத்மாவாகிய தன்னை ஈடேறுவதற்கு உதவிபுரிவதனுல் தானென ஆத்மாவென்று வழங்குதற்குரிய தேகேந்திரியச்

இந்த்ரியார்த்தேஷு வைராக்யம் அநஹங்கார ஏவ ச ।
ஜந்மம்ருத்யுஜராவ்யாதிதுஃக்கதோஷாநுதர்சநம் ॥

† இந்திரிய விஷயங்களில் வைராக்யம், அநஹங்காரம், ஜன்மம் மிருத்யு ஜரை வியாதி துக்கம் தோஷம் என்பவற்றின் அநுதர்சனம்.

---

சேர்க்கைகள் மோக்ஷத்திற்குப் பிரதிகூலமான வழியில் இயற்கையாகவே செல்லுகின்றன. அப்படிச் செல்லவொட்டாமல் அவைகளைத்தடுத்து மோக்ஷசாதனங்களிலே நிறுவுதல் ஆத்ம நிக்கிரகம் (தன்னடக்கம்).

† செவிமுதலிய இந்திரியங்களின் விஷயங்களான ஓசைமுதலிய விஷயங்களிலாவது இம்மை மறுமை விஷயபோகங்களிலாவது இராக விரோதியாகிய அஸ்புருஹை (அவாவின்மை) எனப்படும் சித்த விருத்தி விசேஷம் வைராக்கியமாம். உலகத்தில் தன்னைச்சிலாகித்துக்கொள்ளுதல் இல்லையாயினும் 'நான் அனைவரினும் மேலானவன்' என்றிவ்வாறு மனத்திலுதிக்கும் கர்வம் அஹங்காரம் (செருக்கு). அஃதில்லாமை அநஹங்காரம்(செருக்கின்மை).

அன்னைவயிற்றில் ஒன்பான்மாதம் வரையிலும் வாழ்ந்து யோநிவழியாக வெளியேவருதல் ஜன்மம் (பிறப்பு). பிராணன்கள் எழும்புங்காலத்தே எல்லாமர்ம ஸ்தானங்கள் அறுதல் மிருத்யு (இறப்பு). அறிவுமழுங்குதலும், சர்வாங்கங்களில் வலிமைகுன்றுதலும், இனத்தவராதியோர் ஏளனம் செய்தலுமாகியவைகள் எவ்வவஸ்தையில் வரப்பெறுமோ அவ்வவஸ்தை ஜரை (மூப்பு). சுரம் அதிசாரம் முதலிய நோய்கள் வியாதி (பிணி). அத்தியான்மம் (தன்னைப்பற்றியும்) அதிபூதம் (பிறஉயிர்களைப்பற்றியும்) அதிதெய்வம் (தெய்வத்தைப்பற்றியும்) ஆகிய மூன்று தொந்தரைகளை நிமித்தமாகவுடைய, இஷ்டவஸ்துவின் நீக்கமும், அநிஷ்டவஸ்துவின் கூட்டுறவுமாகிய சித்தத்தின் பரிதாபவடிவான பரிணாம விசேஷம் துக்கமாம் (இடும்பை). இச்சரீரம் வாதபித்த சிலேஷ்ம மலமூத்திர முதலிய வற்றோடு நிறைந்திருப்பதனால் நிந்திக்கத்தக்கது எனல் தோஷமாம் (குற்றம்).

பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி, இடும்பை, குற்றம் இவற்றின் அநுதர்சனம் (அடுத்தடுத்து விசாரித்துப்பார்த்தல்), அல்லது பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி, இடும்பை என்னுமைந்தில் அடுத்தடுத்துக் குற்றங்காண்டல் (ஆலோசித்தறிதல்),அல்லது பிறப்பு, இறப்பு,மூப்பு, பிணி என்னும் நான்கில் இடும்பையாகிய குற்றத்தை அடுத்தடுத்துக்காண்டல், அல்லது பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி என்னும் நான்கில் இடும்பையையும் குற்றத்தையும் அடுத்தடுத்துக் காண்டல் எனநான்கு வகையாக உரைக்கவுங்கூடும்.

ஈண்டு, தாயின் உதரத்தில் ஒன்பது மாதங்காறும் மிகவுஞ்சுருங்கி நிற்றலும், தாயின் மலத்திற் கிடக்கும் புழுக்களாற் கடிப்புண்டலும், தாயின் ஜாடராக்கினியாற் கொளுத்தப்படலும், கருப்பையாகிய தோலால் மூடப்படலும், ஜன்மகாலத்திற் பிரசவவாய்வால் குப்புறத்தள்ளப்படலும், மிகவுஞ்சிறியதான யோநி எந்திரத்தினின்றும் வெளிவருதலும், மலமூத்திரங்களிற் கிடத்தலும் எனல் முதலான பல்வகைப்பட்ட துன்பங்களும் குற்றங்களும் பிறப்பின்கண் ணுள்ளவைகளாம். எல்லாநாடிகளும் முறுக்குதலும், மர்மஸ்தானங்கள் அறுதலும், பிராணன்கள் அடங்குதலும், மேல் சுவாசமும், மிக்க இடுக்கணால் மலமூத்திரங்களை வெளியில் விடலும் என்பன முதலான அநேகவகையான துன்பங்களும் தோஷங்களும் மரணத்தின்கண் ணுள்ளவைகளாம். எல்லா உறுப்புகளும் தளர்தலும், செவிமுதலிய இந்திரியங்களில் ஒளிமழுங்குதலும், சரீரத்தில் நடுக்கமுண்டாதலும், காசஸ்வாசமும், எழுந்தாற் கீழே விழுதலும் (தடுமாற்றம்), தனது இனத்தவரால் நிராதரவைப்பெறுதலும், சரீரதுவாரங்களிலிருந்து மலம் மூத்திரம் ஈளை முதலியன சொரிதலும் என்பன முதலான அநேக பிரகாரமான இடும்பையும் குற்றமும் மூப்பவஸ்தையிலுள்ளவைகளாம். ஜ்வரமுதலிய நோய்களால் சரீரம் துர்பலப்படுதலும், குளிர்க்காய்ச்சலின் வேகத்தாற் பரிதவித்தலும், மிகவும்

அஸக்திரநபிஷ்வங்க: புத்ரதார க்ருஹாதிஷு ।
நித்யம்ச ஸமசித்தத்வம் இஷ்டாநிஷ்டோபபத்திஷு ॥

‡ மக்கள் மனைவி வீடு முதலானவர் மீது அசக்தி அநபிஷ்வங்கங்களின்மை, வேண்டுதல் வேண்டாமைகள் வருங்கால் அவற்றில் எப்பொழுதும் சமசித்தமாயிருத்தல்.

மயிசாநந்யயோகேந பக்திரவ்யபிசாரிணீ ।
விவிக்ததேசஸேவித்வமரதிர்ஜநஸம்ஸதி ॥

¶ அநந்ய யோகத்தால் பரமேசுவரனாகிய என்னிடத்துப் பிறழாப் பக்தி, விவிக்த தேசசேவனம், விஷயிஜனங்களின் கூட்டத்தில் அருவருப்பு.

---

கைப்பும் துவர்ப்புமான மருந்துகளைத்தின்னுதலும், தேகத்திற் றுர்நாற்றம் வீசுதலும், வியர்வை முதலியன வெளிப்படுதலும், என்னுந்தொடக்கத்துப் பலவிதமான துன்பமும் தோஷமும் பிணியின்கண் ணுள்ளவைகளாம்.

இவ்வாறு துக்கத்தையும் தோஷத்தையும் காண்டல் விஷயங்களில் வைராக்யம் பிறத்தற்கு ஏதுவாதல் பற்றி ஆத்மஞானத்திற்கு உபகாரியாயிருக்கின்றது. ஆகவே அதிகாரிகள் துக்கத்தையும் தோஷத்தையும் உற்றுப்பார்த்தலாகிய பார்வையை அவசியம் சம்பாதிக்க வேண்டும்.

‡ 'இப்பொருள்கள் எனது' என்னும் அபிமான மாத்திரத்தால் அப்பொருள்களின் மீதுள்ள பிரியம் சக்தி (ஆசை), அஃதில்லாமை அசக்தி (ஆசையின்மை), 'இப்பொருள்கள் நானே' என்று அபேதமாகப் பாவித்து அப்பொருள்களின் மீதுவைக்கும் பிரீதி அதிசயம் அதாவது அப்பொருள்கள் இன்பத்தையேனும் துன்பத்தையேனும் அடையுங்கால் 'நானே இன்புறுகின்றேன், நானே துன்புறுகின்றேன்' என்று கருதும் அத்யந்த அபிநிவேசம் அபிஷ்வங்கமாம் (ஆசைப்பெருக்கு). இவையிரண்டும் மக்கள் மனைவி வீடு முதலியவற்றில் விடத்தக்கனவாம். இங்குமுதலான எனலால் இவைகளுக்குவேறான மற்றைய நட்புக்கு விஷயமான தனம் வேலையாள்முதலிய எத்துணைப்பொருள்கள் உள்ளனவோ அவையனைத்தையுங் கொள்ளவேண்டும். ஆகவே நட்புக்கு விஷயமான எல்லாப்பொருள்களிலும் ஆசையும் ஆசைப்பெருக்கு மின்றி நிற்றல் என்பதாம்.

வேண்டுதல் வேண்டாமைகள் வருவதில் எப்பொழுதும் சமசித்தனாயிருத்தல் அதாவது பிரியமானபொருள்கள் கிடைக்கு மளவில் களிப்பையடைதலும் அப்ரியமான பொருள்கள் வரும்பொழுது வாட்டத்தையடைதலும் இல்லாமல் ஒரே மனத்தினனாய் நிற்றல்.

¶ பகவான் வாசுதேவ பரமேசுவரனாகிய என்னிடத்துள்ள பக்தி அதாவது இப்பரமேசுவரர் எல்லாரினும் மேம்பட்டவர் என்று சர்வோத்க்ருஷ்ட பூர்வகமாக என்னிடத்துவைக்கும் நிரதிசய பிரீதி—அது எத்தன்மையதெனின், அநந்யயோகத்தால் பிறழாத பக்தி—ஈண்டு 'இப்பகவான் வாசுதேவரைக்காட்டிலும் உயர்ந்தோர் வேறொருவரில்லையாகையால் அவரே நமக்குக்கதி,' என்னும் நிச்சயம் அநந்யயோகமாம். பிரதிகூலமான பிறிதொரு ஏதுவினால் அசைக்கமுடியாத பக்தி எதுவோ, அதுவே பிறழாத பக்தியாம். இதுவும் ஞானத்திற்கு ஏதுவாம். எந்த இடம் சுவபாவமாகவாவது அல்லது சம்ஸ்காரங்களாலாவது சுத்தஞ்செய்யப்பட்டதாயும், துர்நாற்றம், பாம்புபுலி முதலிய துஷ்ட ஜந்துக்களில்லாததாயும், மனமகிழ்ச்சியைச் செய்வதாயுமுள்ளதோ அந்த இடம் விவிக்ததேசமாம். அத்தகையது நதிதீரம், மலைக்குகை முதலியவிடங்களாம். அப்படிப்பட்ட தனித்த விடத்தைச் சார்தல் விவிக்ததேச

அத்யாத்ம ஜ்ஞாநநித்யத்வம் தத்வஜ்ஞாநார்த்த தர்ஶநம் ।
ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தம் அஜ்ஞாநம் யததோऽந்யதா ॥

§ அத்யான்ம ஞானத்தில் எப்பொழுதும் நிற்றல், மெய்யறிவின் பயனை நோக்குதல் ஆகிய வெல்லாம் ஞானமெனப்படும்; இவற்றினும் வேறானவை அஜ்ஞான மெனப்படும்.

என்னும் ஐந்து சுலோகங்களாற் றிருவாய் மலர்ந்தனர்.

தற்புகழ்ச்சியின்மை, தன்தர்மத்தை வெளியிடாமை முதலான ஞான சாதனங்களின் பழக்கத்தால், அவைகளுக்கு எதிரிடையாய் மருளுணர்விற்குச் சாதனங்களான தற்புகழ்ச்சி, தன் தர்மத்தை வெளியிடுதல் முதலியவைகள் நீங்கி விடுகின்றன.

---

சேவனமாம். ஆத்மஞான விமுகர்களும் விஷய போகங்களிற் சிக்கியவர்களுமானவர்களுக்கு உபதேசிக்கும்விஷய வெளிநாட்ட முடையரான விஷயி ஜனங்களின் கூட்டம் மெய்யுணர்விற்கு மிகப் பிரதிகூலமாம், ஆதலால் அக்கூட்டத்தில் அருவருப்புறல் வேண்டும். ஆனால், மெய்யுணர்விற்கு அநுகூலமான மஹாத்மாக்களின் கூட்டத்தில் அதிகாரிகள் அவசியம் பிரீதி வைக்கவேண்டும். சுலோகம். ஸங்க: ஸர்வாத்மநா ஹேய: ஸ சேத் த்யக்தும் ந ஶக்யதே । ஸ ஸத்பி: ஸஹ கர்த்தவ்ய: ஸதாம் ஸங்கோ ஹி பேஷஜம் (இ-ள்.) அதிகாரிகள் எவ்வாற்றானும் சங்கத்தை விடல்வேண்டும். ஒருகால் அவர்கள் அச்சங்கத்தை விடாதொழியினும் விஷயி பகிர்முகர்களின் சங்கத்தை ஒருபோதும் செய்வதடாது. ஆனால், மகாத்மாக்களோடு சங்கஞ்செய்யவேண்டும். ஏனெனில், அம்மஹாத்மாக்களின் சங்கம் இச்சனன மரண ரூபமாகிய சம்சார ரோகத்தைப் போக்கடிக்க மருந்தாம்.

§ ஆத்ம அநாத்மாக்களை உள்ளவாறு பகுத்துணரும் விவேகம் அத்யாத்ம ஞானமெனப்படும். அதன்கண் எப்போதும் நிலைத்து நிற்றல் அத்யாத்மஞான நித்யத்வமாம். ஏனெனின், அவ்விவேக ஞானத்தில் நின்றவனே மகாவாக்கியப் பொருளுணர்ச்சியில் வல்லவனாவன். இக்காரணம் பற்றியே அதிகாரி அவ்வத்யான்ம ஞானத்தில் நிற்றல் அவசியஞ் செய்ய வேண்டும்.

அஹம் பிரஹ்மாஸ்மி, தத்துவமசி என்னுந்தொடக்கத்து வேதாந்த வாக்கியங்களுக்குக் காரணமானதும், அமானித்தன்மை முதலிய சாதனங்களின் பரிபாகத்திற்குப் பயனானதுமான நான் பிரஹ்மம் என்னும் சாட்சாத்காரம் மெய்யறிவாம். அதற்குப் பயன் சர்வாநர்த்தங்களின் நிவிர்த்தியும் பரமானந்தப் பிராப்தியுமாகிய மோக்ஷமாம். அதன்கண் தர்சனம் அதாவது மீட்டும் மீட்டும் விசாரித்தலாகிய திருஷ்டிவைத்தல். அதை அதிகாரிகள் அவசியஞ் செய்யவேண்டும். ஏனெனில், அம்மெய்யறிவின் பயனை நோக்கிய பின்னரே அச்சாதனங்களில் ஊக்கம் பிறக்கும்; பயனை அறிவதின்றி அச்சாதனங்களில் ஊக்கம் பிறவாது.

இவ்வாறு தற்புகழ்ச்சியின்மை முதல் மெய்யறிவின் பயனை நோக்குதல் ஈறாயுள்ள மேற்கூறிய இருபது சாதனங்களும் ஆத்ம ஞானத்தைப் பயப்பதற்கு ஏதுவாதல் பற்றி அவைகள் ஞானமென்று வழங்கப் பெற்றன. இவற்றிற்கு விபரீதமான தற்புகழ்ச்சி, தம்பம், ஹிம்சை, பொறையின்மை, நேர்மையின்மை முதலியன ஆத்ம ஞானத்திற்கு விரோதியாய்ச் சம்சாரத்திற்கு ஏதுக்களாகுமாற்றால் அவை அஞ்ஞான மெனப்பட்டன.

ஆகவே அதிகாரிகள் அஞ்ஞான மென்னும் தற்புகழ்ச்சி முதலியவற்றைத் தவிர்த்து ஞானமென்னும் தற்புகழ்ச்சியின்மை முதலிய இருபது சாதனங்களையும் அவசியம் கைக்கொளல் வேண்டும்.

இவ்வண்ணமாக அவ்வித்வத் ஸந்யாசி எப்பொழுது சங்கற்ப பூர்வகமாய் அம்மைத்திரி முதலாய சுபவாசனைகளையும், தெய்வ ஸம்பத்தையும், தற்புகழ்ச்சியின்மை முதலான தர்மங்களையும் பழக்கத்தாற் சம்பாதிக்கின்றானோ, அப்பொழுதே அவனுக்குக் கதிரவன் உதயமாக இருள் நீங்கினாற்போல மேற்கூறியவெல்லா மலினவாசனைகளும் நீங்கி விடுகின்றன.

## அஜிஹ்வ முதலியன கூறல்.

அதற்குப் பிறகு அவ்வித்வத் ஸந்யாசி அஜிஹ்வத்வ முதலிய ஆறு தர்மங்களையும் பழக்கத்தாற் சம்பாதிக்க வேண்டும். அவைகளைப்பற்றி ஸ்மிருதியுங் கூறியுளது. சுலோகம். ஃஜிஹ்வஃ ஷண்ஃகஃ வஂ஗ுரஂயொ ஸயிரவணவ । ஃமுஹ்ய ஃவ்யுதெஜிக்ஷுஃ ஷஜ்ஜிரெ தைநாூ ஸஂஶயஃ (இ - ள்) அஜிஹ்வ (நாவின்மை), ஷண்டக (அலி), பங்கு (முடம்), அந்த (குருடு), பதிர (செவிடு), முக்த (ஊமை) என்னும் ஆறு அறங்களின் சேவையால் துறவி ஜீவன் முக்தியைப் பெறுகின்றான், சம்சயமில்லை. ஆகலின் துறவி அவையாறு அறங்களைச் சம்பாதிக்க வேண்டியது இன்றியமையாமையேயாம்.

அவற்றின் இலக்கணங்களை முறையாகச் சாஸ்திரவளவைகளோடு கூறுதும். சுலோகம். ஊஃஶிஷூஶிஂநெதி யொஶூநு விநஸஜதெ । ஹிதஂஸத்யஂ ஶிதஂவக்தி ஃஜிஹ்வஂ ப்ரவக்ஷ்யதெ ॥ (இ-ள்) எத்துறவி அந்ந முதலியவைகளைப் புசித்தாலும், இது சுவையுள்ளது, இது சுவையில்லது என்று செப்பாமல் இனிமையாயும் உண்மையாயும் அளவுள்ளதாயுமுள்ள மொழிகளைச் செப்புவனோ, அத்துறவி அஜிஹ்வ (நாவில்லாதவ) னும்.

ஃஷ்ஜாதாஂயதாநாஶிஂ ததாஷொஶவஷிூகீஂ । ஶதவஷூஂவ யொஂவூஷூா நிவிூகாரஃ ஸஷஂஃகஃ (இ-ள்) இன்று பிறந்த இளம்பெண் குழந்தையினிடத்தும் நூறு வயதுள்ள கிழவியினிடத்தும் எங்ஙனம் காமவிகாரமுண்டாகாதோ, அங்ஙனமே எத்துறவிக்குப் பதினாறு வயதுள்ள யௌவனஸ்திரியைப் பார்த்தும் காமவிகாரமுண்டாகாதோ, அத்துறவி ஷண்டகன் (அலி) ஆம்.

ஸிக்ஷாயமூஂடநஂயஸ்ய விண்ஹுத்ர காரணாயவ । யொஜநாநு வரஂயாதி ஸவூயாவஂகுரெவஸஃ॥ (இ-ள்) எத்துறவி பிச்சையின் பொருட்டும் மலமூத்திரங்களைக் கழிக்கும் பொருட்டும் செல்லுவதன்றி வேறோர் பயனைக் கருதியும், ஒரு யோசனை மார்க்கத்திற்கு அதிகமாகவும் செல்லாதவனோ, அத்துறவி பங்கு (முடம்) ஆம்.

திஷதொவ்ர ஜதொவாவி யஸ்யவக்ஷூநாூ ஃஷ்ரஂமஂ । வதூயூாஂ ஹுவஂத்யூஂ வரிவ்ராட் ஸொஂயஂ உஷ்யதெ॥ (இ-ள்) எந்தத் துறவியினது விழி இந்திரியம் கிடந்தாலும், நடந்தாலும் சதுர்யுக வளவுள்ள விடத்திற்கு அப்பாற் செல்லுவதில்லையோ, அந்தத் துறவி அந்தனும் (குருடு). இங்குஒருயுகம் நான்கு முழவளவாகச் சதுர்யுகமென்பது பதினாறு முழவள விற்காம்.

ஹிதாஹிதம்ஃனொாராம் வவஃஶொகாவஹம்வயக। ஶ்ருத்வாவி நஶ்ரு ணொதியொ ஬யிரஃ ஸவ்ருகீத்துதஃ (இ-ள்) எந்தத் துறவி சந்தோஷத்தை யுண்டுபண்ணும் அநுகூலமொழிகளையும், மயலையுண்டுபண்ணும் பிரதிகூல மொழிகளையும் கேட்டாலும் அவற்றைக் கேட்டவனல்லனோ, அதாவது எவனுக்கு மகிழ்வு சோர்வுகளுண்டாகின்றதில்லையோ, அந்தத் துறவி பதிரனும் (செவிடு).

ஸாந்நித்யெவிஷயாணாம்வ ஸமெதொ்ஃ விகலெம்த்ரியஃ। ஸுப்தவவத்ததெ நித்யம் ஸஹிக்ஷுஃம்ஃஜ உவ்யதெ (இ-ள்) விஷயங்களைச் சமீபித்தபோது அவைகளை அநுபவிக்கத் தனக்கு வல்லமையும், இந்திரியங்களெல்லாம் செவ்வையாயும் இருந்தக்காலும் எந்தத் துறவி அவ்விஷயங்களிற் செல்லுவதின்றிச் சுழுப்தியை யடைந்தவனைப்போல எப்பொழுதும் ஒழிவடைந்திருக்கின்றானோ, அந்தத் துறவி மூக்தனும் (ஊமை). இவ்வாறு அஜிஹ்வ முதலிய ஆறு அறங்களையும்பழகின பின்னர் அவன் சிந்மாத்ரவாசனையை அப்பியாசித்தல் வேண்டும்.

## சிந்மாத்ரவாசன நிரூபணம்.

இந்த நாமரூபவடிவான சர்வஜகத்தும் சைதன்யத்திற் கற்பிதமாதலால் தனது சத்தா (இருத்தல்) ஸ்புரணம் (விளங்குதல்) இன்றி நிற்கின்றது. ஆகலின் அவ்வதிஷ்டான சைதன்யத்தின் சத்தாஸ்புரண பூர்வகமாகவே ஜகத்தின் இருத்தல் விளங்குதல் நிகழ்கின்றன. இவ்வாறு ஜகத்தில் நாமரூபமாகிய விரண்டு அம்சங்களின் மித்தியாத்தன்மை நிச்சயத்தால் நொதுமல் பண்ணி எங்கும் பரிபூரணமான 'அஸ்தி (சத்து), பாதி (சித்து), பிரியம் (ஆனந்தம்) ஆகிய அதிஷ்டான சைதன்யம் நான்' என்றிவ்வாறு எப்பொழுதும் பாவித்தல் எதுவோ, அது சிந்மாத்ர வாசனையாம்.

அச்சிந்மாத்ர வாசனையும் இருவகைத்து. ஒன்று கர்த்தா (செய்வோன்), கர்மம் (செயப்படுபொருள்), கரணம் (செய்கை) என்னுந்திரிபுடியின் ஸ்மரண பூர்வகமான சிந்மாத்ர வாசனையாம். மற்றொன்று, அத் திரிபுடியின் ஸ்மரணமின்றிய கேவல சிந்மாத்ர வாசனையாம். 'நான் இச்சர்வ பிரபஞ்சத்தையும் எனது மனத்தினாற் சிந்மாத்ர வடிவாக வறிகின்றேன்' என்றிவ்விதமாய்ச் செய்யப்பட்ட பாவனையோ முதலாவதாகிய திரிபுடிபூர்வக சிந்மாத்ர வாசனையாம். இச் சிந்மாத்ர வாசனைக்குச் சம்ப்ரஜ்ஞாத சமாதியின் வரிசையில் அடக்கமுண்டு. அதாவது முதலாவதாகிய இச்சிந்மாத்ர வாசனையையோ யோகசாத்திர முடையார் சம்ப்ரஜ்ஞாத சமாதியென்பர். 'கர்த்தா, கர்மம், கரணம் என்னுந்திரிபுடியின் ஸ்மரண மின்றிய சிந்மாத்ரன் நான்' என்னும் பாவனை கேவல சிந்மாத்ர வாசனையாம். இந்தக்கேவல சிந்மாத்ர வாசனைக்கு அசம்ப்ரஜ்ஞாத சமாதியின் வரிசையில் அடக்கமுண்டு. அதாவது இந்தக்கேவல சிந்மாத்ர வாசனையை யோகசாத்திர முடையார் அசம்ப்ரஜ்ஞாத சமாதியென்பர்.

சர்வ ஜகத்தும் சிந்மாத்ர வடிவென்று சுக்ரபகவான் பலிக்குக் கூறியிருக்கின்றனர். சுலோகம். விதிஹாஸ்திஹவிந்நாத்ரம் ஸவம் விந்மயமெவதக। விதம்விஹஸெதவ லொகாஃஸிதிஸம்ருஹஃ (இ-ள்.) இறைவனே! இச்சர்வஜகத்

தின்கண் சைதன்யமே அதிஷ்டான வடிவமாக நிறைந்துளதாகலின், இவ்வுலக முழுவதும் சைதன்ய மாத்திரமே. நீயுஞ்சைதன்ய வடிவம், நானுஞ்சைதன்ய வடிவம், இவரனைவருஞ் சைதன்ய வடிவரே. இவ்வாறு சின்மாத்ர வாசனையைத் திடமாய்ப்பழக மேற்கூறிய வெல்லா மலின வாசனைகளும் நீங்கிவிடுகின்றன. இதுவே வாசனாக்ஷயத்தின் அப்பியாசமாம்.

## மனத்தின் சொரூபங்கூறல்.

இனி மனோநாசங் கூறும்பொருட்டு முதலில் மனத்தின் சொரூபங்கூறுதும். அரக்கு பொன் முதலியவைகளைப்போல அவயவமுடையதும், காமமுதலிய விருத்திகளாகப்பரிணமிப்பதுமான அந்தக்கரணமே மனனவடிவமாவதால் மனமென்று சொல்லப்படும். அம்மனம் சத்வ ரஜ தமமென்னும்முக்குணங்களின் வடிவமாம். ஏனெனின், சத்வ ரஜ தமமென்னும் மூன்று குணங்களுக்கும் முறையாகச் சுகம் துக்கம் மோகமாகிய மூன்று தர்மங்களுண்டு. அம்மூன்று தர்மங்களும் அம்மனத்தை யிடமாய்க்கொண்டே புலப்படுகின்றன. ஆகலின் அம்மனத்தில் சத்வமுதலிய முக்குணவடிவத் தன்மையே சித்திக்கின்றது. அம்மனம் இராஜச தாமச விருத்திகளாற் பெருக்கத்தையடைந்து மிகத்தூலமாகின்றது அத்தூலமனம் ஆத்மாவைச் சாட்சாத்கரிக்க யோக்யமாயில்லை. ஏனெனின், அறிதற்கரிய தாதலால் ஆத்மா மிகச்சூட்சுமமாம். அப்படிப்பட்ட சூட்சும ஆத்மாவைத் தூலமனத்தாற் சாட்சாத்கரிக்க முடியாது. பெரிய கடப்பாரையினால் மெல்லிய வஸ்திரம் தைக்கப்படுவதின்றிச் சிறிய ஊசியினாலேயே எங்ஙனம் தைக்கப்படுமோ, அங்ஙனமே சூட்சுமமனத்தினாலேயே அச்சூட்சும ஆத்மா சாட்சாத்கரிக்கப்படும்.

மேலும், 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌤𑍍𑌵𑌗𑍍𑌰𑍍𑌯𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌯𑌾 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑌿𑌃 (ஆத்மாவானது சூட்சும தர்சிகளாற் சிறந்ததும் நுண்ணியதுமான புத்தியைக் கொண்டு பார்க்கப்படுகின்றது) என்னும் மறையும் மிகவும் நுண்மையான புத்தியினானே ஆத்மாவின் சாட்சாத்கார முண்டாமெனக் கூறுகின்றது. ஆகலின் ஆத்மாவைச் சாட்சாத்கரிக்கும் பொருட்டு மனத்தின் சூக்குமத்தன்மை அவசியம் விரும்பப்படும். அம்மனத்தின் சூக்குமத்தன்மை ராஜச தாமச விருத்திகளைத் தடுப்பதனாற் பெறப்படும். ஆகவே அவ்விருத்திகளைத் தகைத்து மனத்தின் சூக்குமத்தன்மையைச் சம்பாதிப்பது எதுவோ, அதுவே மனோநாசமாம்.

இங்குத்தாற்பரிய மென்னையெனின்:—அரூபநாசம், சொரூபநாசம் என்னும் வேற்றுமையால் அம்மனோநாசம் இருவகைப்படும். அம்மனம் மீட்டும் எழுதலில்லாமல் சொரூபத்தோடு நாசமாதல் அரூபநாசமாம். சொரூபத்தோடு அம்மனமிருந்தாலும் உபாயத்தால் அம்மனத்தின் விருத்திகளை நாசஞ்செய்தல் சொரூபநாசமாம். மனத்தினது அரூபநாசத்தினானே தத்துவமுணர்ந்தோனுக்கு விதேக முத்தியும், சொரூபநாசத்தானே ஜீவன் முத்தியுங்கிடைக்கும். ஆகலின் இங்கு மனோநாசம் எனலால் அச்சொரூப நாசத்தையே கொள்ளவேண்டும்.

## விருத்திகளின் நிரோதங்கூறல்.

**சங்கை:**—இராஜச தாமச விருத்திகளை நிரோதஞ்செய்து மனத்தின் சூக்குமத்தன்மையைச் சம்பாதித்தலே நீவிர் மனோநாசமென்றீர். அவ்விருத்திகளின் நிரோதம் எவ்வுபாயத்தானுண்டாமோ?

**சமாதானம்:**—அவ்விருத்திகளைத் தடுக்கும் உபாயங்களை ஸ்ரீவசிஷ்ட பகவான் நான்குவகையாக நவின்றிருக்கின்றனர். சுலோகம். அத்யாத்ம வித்யாதிகம: ஸாதுஸங்கம ஏவ ச । வாஸநாஸம்பரித்யாக: ப்ராணஸ்பந்த நிரோதநம் ॥ ஏதாஸ்தா யுக்தய: புஷ்டா: ஸந்தி சித்தஜயே கில (இ-ள்.) அத்யாத்ம வித்யாதிகமம், சாதுசங்கம், வாசனா சம்பரித்தியாகம், பிராண ஸ்பந்த நிரோதனம் என்னும் நால்வகைத்தான உபாயங்கள் சித்தத்தை ஜயஞ்செய்வதிற் பிரபலகாரணங்களாம்.

பிரத்தியகாத்மாவைப் பிரஹ்ம வடிவாகக்கூறும் வித்தை எதுவோ, அது அத்யாத்ம வித்தையாம். அவ்வத்யாத்ம வித்தையை யடைதல் அத்யாத்ம வித்யாதிகமமாம். இதுவும் சித்த ஜயத்திற்குச் சாதனமாம். ஏனெனின், நாமரூபவடிவாகிய விவ்வெல்லாவுலகும் மித்தையே; நானே எங்கும் நிறைந்தவன், பரமானந்தன், ஏகரசன்; என்னைவிடப் பிறிதோர் காரணகார்யங்களில்லை, அனைத்துருவமும் நானே என்றிவ்வாறான அத்யாத்ம வித்தையை யடையுங்கால் தத்துவமுணர்ந்தவன் திருசியப் பிரபஞ்சமுழுவதையும் மித்தையென் றறிகின்றான். ஆகலின் அவ்வித்வானது மனம் அத்திருசியப் பிரபஞ்சத்தின்கண் செல்லாது. ஆத்மாவோ மனோவாக்குகளுக் கெட்டாதது. ஆகலின் அவ்வாத்மாவினிடத்தும் அம்மனம் செல்லாது. இவ்வாறு அகத்தும் புறத்துஞ் செல்லுவதொழிந்த அம்மனம், எல்லா விருத்திகளு முதயமாகாமையால் விறகில்லாத தீயைப்போலத் தனது அதிஷ்டானவடிவ காரணத்தில்லயமாகின்றது. ஆகவே அவ்வத்யாத்ம வித்தையினடைவு அம்மனோ நாசத்திற்கு முக்கியகாரணமாம்.

புத்தியின் மந்தத்தன்மையால் அவ்வத்யாத்ம வித்தையைச் சம்பாதிக்குந் திறமில்லாதவன் எவனோ, அவனுக்கு இரண்டாவதான சாது சங்கம் உபாயமாம். ஏனெனின், அம்மகாத்மாக்கள் இவ்வதிகாரிக்குப் பிரத்யகாத்மா பிரஹ்மமென்பதையும், ஜகத்து மித்தையென்பதையும் அடுத்தடுத்து நினைப்பூட்டுகின்றார்கள், அறிவுறுத்துகின்றார்கள். அதனால் இவ்வதிகாரிக்கு அத்யாத்ம வித்தை பிராப்தமாகி அம்மனோநாசமுண்டாகின்றது. ஆகவே அச்சாது சங்கமும் அவ்வத்யாத்ம வித்தையின் பிராப்தி வாயிலாக அம்மனோநாசத்திற்கு உபாயமாம்.

அல்லது எவன் வித்யாமதம், தனமதம், குலமதம், ஆசாரமதம் எனல் முதலிய மதங்களோடுங்கூடினவனாகி அச்சாது சங்கத்தையுஞ் செய்யச்சக்தியற்றவனோ, அவனுக்கு அம்மனத்தை யடக்க வாசனாசம்பரித்யாகம் உபாயமாம். இங்கு வாசனா சம்பரித்யாகமெனல், பகுத்தறிவால் அம்மதங்களாகிய மலினவாசனைகளைப் போக்குதற்காம்.

## வித்யாமத முதலியனவும் அவற்றைநீக்கும் விவேகமுங் கூறல்.

இப்பூவுலகில் நானொருவனே பண்டிதன். என்னைத் தவிர வேறோர் பண்டிதன் கிடையாது. எவன் பண்டிதனென்பவனோ, அவன் ஒன்றையு மறிந்தவனல்லன். இவ்வகையான மானச அபிமானம் வித்யாமதம் (கல்விச்செருக்கு)எனப்படும். அக்கல்விச் செருக்கு இங்ஙனமான விவேகத்தால் நீங்கிவிடும். அதாவது புலவன் நானே என்னும் புலமைப் பற்றுடைய சாகல்யனென்னுஞ் சிறுவனுக்கும் மற்றையோர்க்கும் அஜாதசத்ரு யாஙக்யவர்க்கியர் முதலிய வித்வான்களால் தோல்வியுண்டாயிற்று. மனிதர் முதல் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஈறாய் ஏற்றத்தாழ்வாகக் கல்வியின் மேன்மை காணப்படுகின்றது. எவர்க்கும் முதற்குருவாம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியாகிய சதாசிவனிடத்தேயே ஏற்றக்குறைவின்றி ஒரேபடித்தான கல்வியின் வெற்றிப்பாடுண்டு. ஏனைய புலவர்களிடத்தோ ஏற்றக்குறைவோடுங்கூடிய கல்வியின் மேன்மையுண்டு. ஆகவே நமக்கும் மேலான சில புலவர்களால் தோல்வியுண்டென்று எப்பொழுதும் எண்ணுவதால் அக்கல்விச் செருக்கு நீங்கிப்போம்.

நானே பணக்காரர்; எனக்குச் சரியாக வெவர்பண முள்ளார் என்றிவ்வகையாகிய மானச அபிமானம் தனமதம் (பணச்செருக்கு) எனப்படும். அப்பணச் செருக்கும் இவ்வகையான விவேகத்தால் நீங்கிவிடும். அதாவது லட்சபதியாற் செய்யப்பட்ட செயல்கள் அலட்சபதியாற் செய்யமுடியாது. ஆகலின் லட்சபதியால் அலட்சபதிக்குத் தோல்வியுண்டு. இவ்வாறே கோடிபதியால் லட்சபதிக்குந் தோல்வியுண்டெனில் எனது எம்மட்டு! என்னைவிட வதிகமாகக் குபேரனுக்குச் சமானமான தனவான்கள் எண்ணிறந்தாருளர் என்றிவ்வாறு இடைவிடாமற் சிந்திப்பதால் அச்செல்வச் செருக்கு நீங்கிப்போம்.

இவ்வாறே எனது குலம் எல்லாக் குலங்களினுஞ் சிறந்தது, என்னு மிவ்விதமான குலமதமும், எனது ஆசாரம் ஏனையோர் ஆசாரங்களினும் மேற்பட்டதென்னு மிவ்விதமான ஆசாரமதமுமாகிய விரண்டு செருக்குகளும் அததற்குத் தக்கதான விவேகத்தால் நீங்கிப்போம். இவ்வித விவேகத்தினால் எவன் கல்விச் செருக்கு முதலிய மலினவாசனைகளைத் தொலைக்கின்றானோ, அவனுக்குச் சாது சங்கமுதலியவற்றின் பிராப்தியால் அம்மனோநாச முண்டாம். ஆகவே அவ்வாசனா சம்பரித்தியாகமும் மனோநாசத்திற்கு உபாயமாம்.

அல்லது, அம்மலின வாசனைகளின் மிகப் பிரபலத் தன்மையால் எவன் மேற்கூறிய விவேகப்படி அவ்வாசனைகளைப் போக்குவதிலாற்ற லற்றவனோ, அவனுக்குச் சாஸ்திரங்கள் பிராணஸ்பந்த நிரோதமாகிய உபாயத்தை நவின்றுள்ளன. அதாவது அவன் பிராண நிரோதம் பண்ணி மனோநாசத்தைப் பெற வேண்டும்.

### பிராண நிரோத உபாயங்கூறல்.

சுலோகம். ப்ராணாயாம த்ருடாப்யாஸை ர்யுக்த்யா ச குருதத்தயா। ஆஸநாஸந யோகேந ப்ராணஸ்பந்தோ நிருத்யதே॥ (இ-ள்) யோகம் பயிலுங் குரவ

னருளிய யுக்தியோடு பண்ணும் பிராணுயாமத்தின் திடப்பழக்கத்தாலும், ஆச னயோகத்தாலும், அசனயோகத்தாலும் பிராணன்களின் கதி நிரோதமாகின் றது.

இனி இச்சுலோகத்தின் பொருளை விரிவாய்க்கூறத் தொடங்கி முதற்கண் பிராணுயாமத்தின் பிரிவைக் கூறுதும். பூரகம்,ரேசகம்,கும்பகம் என்னும் வேறு பாட்டால் பிராணுயாமம் மூவகைப்படும். இடது நாசியால் வெளியிலுள்ள வாயுவை உள்ளே பூரித்தல் பூரக மெனப்படும். வலது நாசியால் உள்வாயுவை வெளியே விடுதல் ரேசக மெனப்படும். பிராணவாயுவைத் தடுத்தல் கும்பக மெனப்படும்.

அக்கும்பகமும் ஆந்தரம் பாகியம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்து. பூரித்த வாயுவை இருதயதேசத்தில் தடுத்தலே ஆந்தரகும்பக மெனப்படும். இரேசித்த பிராணவாயுவைச் சரீரத்திற்குப் புறம்பேதடுத்தலைப் பாகியகும்பகமெனப்படும். பதினறு மாத்திரையினற் பூரிக்கவேண்டும். முப்பத்திரண்டு மாத்திரையினல் ரேசிக்கவேண்டும். அறுபத்து நான்கு மாத்திரையினற் கும்பிக்கவேண்டும். அதாவது பூரகத்தைவிட இரண்டுபங்கு ரேசிக்கவேண்டும். இரேசகத்தைவிட இரண்டுபங்கு கும்பிக்கவேண்டும். இங்கு மாத்திரையென்பது காலவளவிற்காம். இதை ஆத்ம புராணம் பதினேராவது அத்தியாயத்தில் விரிவாய்க் கூறியிருக்கின்றேம். இவ்வகையாகப் பிராணுயாமத்தைப் பழகுதலால் பிராணனது கதி நிரோதமாகின்றது. அப்பிராண நிரோதத்தால் மனேநாச முண்டாகின்றது.

மேலும், பிராணுயாமம் பிராண நிரோத வாயிலாக மனேநாசத்திற்கு உபாயமென்று சுருதியும் அறைந்துளது. அதைக்காட்டுதும். யோகிகள் இரு திறத்தினர். தெய்வ ஸம்பத்தான சுபவாசனையையுடைய யோகி ஒருவன், அத்தெய்வஸம்பத்தின்றி அசுர ஸம்பத்தான மலினவாசனையையுடைய யோகி மற்றெருவன். முதல் யோகியைப் பற்றியோ சுருதி முந்திய மந்திரத்தால் இடைவிடாப் பிரஹ்மசிந்தனையாகிய ராஜயோகத்தை உபதேசித்துளது. அம் முந்திய மந்திரமிதுவாம். 𑌤𑍍𑌰𑌿𑌰𑍁𑌨𑍍𑌨𑌤𑌂 𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯 𑌸𑌮𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌹𑍃𑌦𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑍇𑌶𑍍𑌯 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌡𑍁𑌪𑍇𑌨 𑌪𑍍𑌰𑌤𑌰𑍇𑌤 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌸𑍍𑌰𑍋𑌤𑌾𑌂𑌸𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑌯𑌾𑌵𑌹𑌾𑌨𑌿 (இ-ள்.) வித்வானுனயோகி தனியிடத்தில் தூய்மையான ஆசனத்தின்மேல் தனது உடம்பை இடை கழுத்து முதலிய விடங்களுடன் நேராக நிறுவியும், தனது இருதயத்தில் மனத்தோடுங்கூடிய வெல்லா விந்திரியங்களையுந் தடுத்தும் 'அஹம்பிரஹ்மாஸ்மி' என்று எப்பொழுதுஞ் சிந்திக்கவேண்டும். அந்தப்பிரஹ்ம சிந்தனையாகிய புணையால் அவ்வித்வானுன யோகி பயத்தைப் பெறுவிக்கும் மாயையாகிய ஆற்றுவெள்ளத்தைக் கடக்கவேண்டும்.

மற்றெரு யோகியைக் குறித்தோ சுருதி பிந்திய மந்திரத்தால் பிராண நிரோதத்திற்கு உபாயமான ஹடயோகத்தை உபதேசித்துளது. அப்பிந்திய மந்திரமிதுவாம். 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌪𑍀𑌡𑍍𑌯𑍇𑌹 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌚𑍇𑌷𑍍𑌟𑌃 𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇 𑌨𑌾𑌸𑌿

கயொஹவஸீத । ஊஷாஸ்யாக்ஷிவவாஹஹெநம் விஆநுஹெநாயாஸயெடிவு ஊதூ: (இ - ள்.) தக்கதான ஊண் திரிச்சல்முதலிய செயல்களையுடைய யோகி முற்சொல்லிய பூரக ரேசக கும்பகங்களை முறையாகப் பிராணுயாமம் பண்ணிப் பிராணன்களது கதியைத்தடுக்குக. அதன்பிறகு தவறலின்றிய சாரதி கெட்ட குதிரைகள் பூட்டிய தேரைப் பலவற்காரமாக நன்மார்க்கத்தில் செலுத்து மாறுபோல, தவறலின்றிய அவ்வித்வானுனயோகி துஷ்ட இந்திரியங்களோடுங் கூடியமனத்தை விஷயங்களினின்றும் விலக்கி இன்ப ஏகரச பிரஹ்மத்தினிடத்து நிலைபெறுத்துக. அதாவது பிரஹ்மத்தினிடத்து சித்தத்தை ஒருவழிப் படுத்துக.

## ஆசன யோகம்.

ஆசனயோகத்தின் சொரூபம், சாதனம், பயன் என்னும் மூன்றையும் பதஞ்சலிபகவான் முறையாக ஸ்திரஸுவ ஊஸநஂ ॥ வூயதூஶெஶயிலூாநஜ ஸஊவதிஹூா॥ தஹொஂஆநஹிவாதஃ॥ என்னும் முச்சூத்திரங்களால் நவின்றிருக்கின்றனர். அவற்றின் பொருள்களிவையாம்:—அசைவின்றியதும் சுகத்தைத் தருவதுமான ஆசனம் எதுவோ, அதுவே யோகத்திற்கு அங்கமாகிய ஆசனம் எனப்படும். அவ்வாசனம் பிரயத்னசைதில்யம், அநந்தசமாபத்தி என்னுமிரண்டு சாதனங்களாற் பெறப்படும். இலௌகிக வைதிக கர்மங்களை விடுவது பிரயத்னசைதில்யமாம். எவன் இலௌகிக வைதிக கர்மங்களில் ஊக்கமுடையவனோ, அவனுக்கு அவ்வசைவின்றிய ஆசனமுண்டாகாது. ஆகலின் அக்கர்மங்களை விடுவதே அவ்வாசனத்திற்குச் சாதனமாம். இத்தரையைத்தனது ஆயிரம் பணைகளின்மேல் தாங்கிநிற்கும் அநந்தக்கடவுள் (ஆதிசேடன்) எவரோ, அவரே நான் என்னுஞ்சிந்தனை அநந்தசமாபத்தியாம். இவ்வநந்தசமாபத்தியால் ஆசனத்திற்குத் தடைகளான பாபங்கள் நீங்குகின்றன. அவ்வாசனத்தைச் சயஞ்செய்வதால் யோகிக்குக் குளிர்வெப்ப முதலிய துவந்த்வங்களின் மோதலுண்டாகாது. அதாவது குளிர்வெப்ப முதலிய துவந்த்வங்களின் நிவிர்த்தியே அவ்வாசனத்திற்குப்பயன் என்க.

## அசன யோகம்.

சுலோகம். அஙஹாமஙவஹிரயெடி ஹெநஜஹெஹெநகஂ வூவஹிரயெசு ஊாரதஸூவூவாரஹாஂ வதாஹஊவெஶஷயெசு (இ-ள்) யோகம் பயிலுபவன் தனது வயிற்றை இரண்டு பங்கு அந்நத்தாலும் ஒருபங்கு நீராலும் நிரப்புக. ஆனுற் பிராணவாயுவானது எளிதாகச் சஞ்சரிக்கும் பொருட்டு ஒருபங்கை வாளா வைக்குக. இவ்வாறு பிராணுயாமம், ஆசனயோகம், அசன யோகம் என்னும் மூன்றாற் பிராணனது கதி தடுக்கப்படுகின்றது. அது தடுக்கப்படவே சித்தவிருத்திகளினுதயம் பிராணனது கதியின் உரித்தாக விருக்கின்றமையால், அவ்வெல்லாச் சித்தவிருத்திகளுந் தடையாகின்றன. இங்குத்தாற்பரிய மென்னவெனின், எப்பதார்த்தம் எவ்வஸ்துவின் உரித்தாக விருக்கின்றதோ, அவ்வஸ்து தடுக்கப்படவே அப்பதார்த்தம் தடையாகின்றது. எங்ஙனம் ஆடையானது நூற்களின் உரித்தாகின்றமையால், அந்நூற்கள் தடுக்கப்படின்

அவ்வாடையும் தடையாகின்றதோ, எங்ஙனம் புறவிந்திரியங்கள் சித்தத்தின் உரித்தாகின்றமையால் அச்சித்தம் தடுக்கப்படின் அவ்விந்திரியங்களுந்தடையாகின்றனவோ, அங்ஙனமே சித்தவிருத்திகள் பிராணகதிக்கு உரித்தாகின்றமையால் அப்பிராணன் தடுக்கப்படின் அவ்விருத்திகளுந் தடையாகின்றன. அதன்பின்னர் இயல்பாகவே ஆத்மா அநாத்மாகாரங்களாகும் அந்தக்கரணமானது, அநாத்மாகார விருத்திகள் தடுக்கப்படின் ஆத்மாகாரமொன்றேயாகின்றது. இவ்வாற்றால் சித்தவிருத்திகளைத்தடுத்தல் யாதுண்டோ; அதுவே மனோநாசமெனப்படும். அத்தகைய மனோநாசமடையுங்கால் வித்வானுக்கு அவ்வாத்மாகாரமொன்றேயான மனத்தால் இன்ப ஏகரச அபரிச்சின்னமாகிய பிரத்தியகாத்மாவின் அநுபவமுண்டாகின்றது. இப்பொருளையே முன்னிருந்த முதியோர்களும் ஸூத்ராநாத்ராகாரம் ஸ்வாவஸொதஸ்வஸிதம் ஸதாவிதம்ஸூலெதுகாகாரதயாதி ரஸ்ரதா நாத்யஜ்ஷம் விதயீத (இயல்பாகவே எப்பொழுதும் ஆத்மாகார அநாத்மாகாரங்களாகும் சித்தத்தை ஆத்மாகாரமொன்ருகவே நிறுத்தி, அநாத்ம திருஷ்டியை விலகச்செய்) என்னும் சுலோகத்தாற் கூறியுள்ளார்.

மேலும், விருத்திகளைத் தடுப்பதைப் பாதஞ்சல சாத்திரமுடையார் யோகமென்று கூறுகின்றனர். ஆண்டுப் பதஞ்சலி சூத்திரம். யொமஸ்சித்தவ்ருத்தி நிரோயஃ (இ-ள்) சித்தத்தின் விருத்திகளனைத்தையுந் தடுத்தல் யோகமெனப்படும். சித்தவிருத்திகள் பிரமாணம், விபர்யயம், விகற்பம், நித்திரை, ஸ்மிருதி என்னும் வேறுபாட்டால் ஐவகைப்படுகின்றன. பிரமாணத்தாற்றேன்றும் பிரமைஞானம் எதுவோ, அது பிரமைவிருத்தியாம். யோகசாத்திரத்திற் பிரத்தியட்சம், அநுமானம், சப்தம் என்னும் மூன்றே பிரமாணங்கள் கொள்ளப்பட்டிருக்கின்றமையால் அவர்மதத்தில் அந்தப் பிரமைவிருத்தியும் மூவகைத்தேயாம். ஆனல், வேதாந்த சித்தாந்தத்தில் பிரத்தியட்சம், அநுமானம், உவமானம், சப்தம், அர்த்தாபத்தி, அநுபலப்தி என்னும் வேற்றுமையால் அந்தப்பிரமாணம் அறுவகைத்தாகக் கொள்ளப்பட்டிருக்கின்றமையால், வேதாந்த சித்தாந்தத்தில் அந்தப்பிரமை விருத்தியும் அறுவகைத்தேயாம். இவ்வறுவகைப் பிரமை விருத்திகளையும் இரண்டாவது பரிச்சேதத்தில் விரிவாயாராய்ந்துள்ளோம். மித்தியாஞானமென்பது விபர்யயத்தையாம். சம்சயமெனல் விகற்பத்திற்காம். சம்ஸ்காரத்தாற்றேன்று முணர்வு ஸ்மிருதியாம். இம்மூன்றன்சொரூபங்களைப்பற்றி முன் மூன்ருவது பரிச்சேதத்தில் விரிவாய் நிரூபித்தோம். தாமச விருத்தியை நித்திரையெனப்படும். இவ்வைவகை விருத்திகளையுந் தடுத்தல் யோகமாம். அல்லது மேற்கூறிய மைத்திரி கருணை முதலிய தெய்வவிருத்திகளும், தற்புகழ்ச்சி, தன்தர்மத்தை விளம்பல் முதலிய அசுரவிருத்திகளுமாகிய வெல்லா விருத்திகளையுந் தடுத்தல் யோகமாம்.

சங்கை:—அவ்விருத்திகளைத் தடுப்பதற்குச் சாதனங்கள் யாவையோ?

சமாதானம்:—பதஞ்சலி பகவான் அப்யாஸவைராக்யாப்யாந்தந்நிரோயஃ (அதனை அடக்குதல் அப்பியாசத்தாலும் வைராக்யத்தாலுமாம்) என்னுஞ் சூத்திரத்தினுல் அப்பியாசம் வைராக்யம் என்னு மிரண்டினையே அவ்விருத்திகளை

அடக்குவதற்குச் சாதனமென்று நவின்றனர். அதுபோலவே, ஸ்ரீபகவானுருங் கீதையில் அஸம்ஶயம் மஹாபாஹோ மநோ து³ர்நிக்³ரஹம் சலம் । அப்⁴யாஸேந து கௌந்தேய வைராக்³யேண ச க்³ருஹ்யதே ॥ (உயர்தோள! மனது அடக்குந் தரமன்று, சஞ்சலமானது என்பதில் ஐயமில்லை. ஆனால், குந்திமைந்த! அதைப் பழக்கத்தாலும் வைராக்யத்தாலும் அடக்கமுடியும்) என்னும் சுலோகத்தால் அப்பியாச வைராக்யங்களையே மனதை யடக்குவதற்குச் சாதனமென்றருளியிருக்கின்றனர். எப்பொருளினிடத்துத் தீமையைக் காண்டலாகிய உவர்ப்புண்டாகின்றதோ, அப்பொருளினிடத்து மனஞ் செல்லாது. ஆகவே அவ்வுவர்ப்பெனப்படும் வைராக்யம் மனத்தை யடக்குவதற்குச் சாதனமெனல் கூடும். அவ்வைராக்யத்தின் வடிவத்தினை இரண்டாம் பரிச்சேதத்தில் விரிவாய்க் கூறினுமாகலின் ஈண்டு மீண்டுங் கூறாது விட்டனம்.

## சித்தவிருத்திகளை யடக்குதலான யோக நிரூபணம்.

அப்பியாசமோ யோகத்திற்கு அந்தரங்க சாதனமாம். அவ்வந்தரங்க சாதனம் பகிரங்கசாதனமன்றிச் சித்தியாது. ஆகலின் உபாயத்தோடு அப்பகிரங்க சாதனங்களைக்கூறி அவ்வப்பியாசத்தைக் கூறவேண்டி முதற்கண் பயன்வடிவ விருத்திகளைத் தடுத்தலின் பிரிவு கூறுதும். அச்சித்த விருத்திகளை யடக்குதல் வடிவான யோகம் இருவகைத்தாம். ஒன்று சம்ப்ரஜ்ஞாத வடிவான அடக்கம், மற்றொன்று அசம்ப்ரஜ்ஞாத வடிவான அடக்கம். கர்த்தா, கர்மம், கரணம் என்னுந் திரிபுடியின் அநுசந்தானமின்றி இலட்சியப் பொருளொன்றினை விஷயப்படுத்துவதான சஜாதீய விருத்திகளின் வெள்ளம் சம்ப்ரஜ்ஞாத சமாதியாம். இச்சம்ப்ரஜ்ஞாத சமாதிக்கு அங்கமாகிய சமாதியின்கண் அத்திரிபுடியின் அநுசந்தான பூர்வகமான சஜாதீய விருத்திகளின் வெள்ளம் நிகழ்கின்றது. ஆகலின் அவ்வங்க சமாதியின்கண் இச்சம்ப்ரஜ்ஞாத சமாதியின் இலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது. அது நீக்குதற்கு இங்குத் திரிபுடியின் அநுசந்தானமின்றியதெனக் கூறியவாறு. இச்சம்ப்ரஜ்ஞாதசமாதியின் சொரூபம் பிறநூற்களிலுங் கூறப்பட்டுளது. சுலோகம். சிதா³வ்ருʼதிக்ருʼதிம் க்ருʼத்ஸ்நாம் ஸம்ஹ்ருʼத்ய க்ரமஶ꞉ । அவஶிஷ்டந்து சிந்மாத்ரம் ஸதா³நந்த³ம் விசிந்தயேத் ॥ (இ-ள்) சேதனத்தின்கண் கற்பிதமான அஜ்ஞானத்தையும் அவ்வஜ்ஞான கார்யமாகிய வெல்லாப் பிரபஞ்சத்தையும் உற்பத்திக் கிரமத்திற்கு எதிரிடைக் கிரமமாக ஸ்தூல சூட்சும க்ரமப்படிச் சிதான்மாவில் லயஞ் செய்க. அதாவது அச்சிதான்மாவினும் இப்பிரபஞ்சம் பின்னமன்று என்று நிச்சயித்து எஞ்சி நிற்கும் சதானந்த வடிவான சிந்மாத்ரத்தைக் குரவன் உபதேசித்தருளிய மகா வாக்கியத்தால் அபேதரூபமாக அதாவது 'நான் சச்சிதானந்த பிரஹ்ம வடிவனே' என்று சிந்தனை செய்க.

ப்³ரஹ்மாகார மநோவ்ருʼத்தி ப்ரவாஹோ(அ)ஹங்க்ருʼதிம் விநா । ஸம்ப்ரஜ்ஞாத꞉ ஸமாதி꞉ ஸ்யாத்³த்⁴யாநாப்⁴யாஸ ப்ரகர்ஷஜ꞉ (இ-ள்) திரிபுடியின் அநுசந்தான வடிவான அகங்கிருதியன்றி நிற்கும் 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் மனோ

விருத்திகளின் வெள்ளம் எதுவோ, அது சம்ப்ரஜ்ஞாத சமாதியாம். அச்சம்ப்ரஜ்ஞாதசமாதி தியானப் பழக்கத்தின் மேன்மையாலுண்டாகின்றது.

## இயமமுதலிய அஷ்டாங்கங்களைக் கூறல்.

இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் இவ்வெட்டும் யோகசாஸ்திர முறைப்படி சம்ப்ரஜ்ஞாத சமாதிக்கு அங்கங்களாம். அவற்றுள் இயம முதலாய ஐந்தும் அச்சம்ப்ரஜ்ஞாத சமாதிக்குப் பகிரங்க (தூர) சாதனங்களும்,தாரணை முதலாய மூன்றும் அந்தரங்க (சமீப) சாதனங்களுமாம்.

இனி இயமவர்ணனம். அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரஹ்மசர்யம், அபரிக்ரஹம் என்னும் வேறுபாட்டால் இயமம் ஐவகைப்படும். மனோ வாக்கு காயங்களாகிய மூன்ருல் ஒருபிராணியையும் துன்புறுத்தாமை அஹிம்சை. மெய்மையுரைத்தல் சத்தியம். பலவற்காரமாகவாவது, சூதுவாதுகளாலாவது பிறர்செல்வ முதலியவற்றைத் திருடாமை அஸ்தேயம். சரீரயாத்திரைக்கு உபயோகியான பொருள்களினும் மிகுதியான பொருள்களைச் சேர்க்காமை அபரிக்ரஹம். அஷ்டாங்க மைதுனமின்றி நிற்றல் பிரஹ்மசர்யமாம்.

அவ்வஷ்டாங்க மைதுனங்களின் சொரூபம் சாஸ்திரத்தில் இவ்வாறு கூறப்பட்டுளது. சுலோகம். ஸ்மரணங்கீர்த்தநங்கேளி: ப்ரேக்ஷணம் குஹ்யபாஷணம் । ஸங்கல்போऽத்யவஸாயஶ்ச க்ரியாநிர்வ்ருத்திரேவச ॥ ஏதந்மைதுநமஷ்டாங்கம் ப்ரவதந்தி மநீஷிண: । விபரீதம் ப்ரஹ்மசர்யமேததேவாஷ்டலக்ஷணம் ॥ ஸத்யம் ஸாந்நித்யமஶோஷ ஏதத் வ்ருதம் ஸநாதநம் (இ-ள்.) ஸ்மரணம், கீர்த்தனம், கேளி, பிரேட்சணம், குஹ்யபாஷணம், சங்கற்பம், அத்யவசாயம், கிரியாநிர்விருத்தி என்னுமெட்டும் அஷ்டாங்க மைதுனமாம். போக்ய புத்தியோடு மடவாரை மனத்தே நினைத்தல் ஸ்மரணம். வாக்கினல் அம்மடந்தையரின் குணங்களைக்கூறல் கீர்த்தனம். அம்மாதரோடு சூதுமுதலியன விளையாடுதல் கேளி. மயக்க புத்திகொண்டு அச்சுந்தரிகளைப் பார்த்தல் பிரேட்சணம். தனியிடத்தே அவ்வரிவையருடன் பேசுதல் குஹ்ய பாஷணம். அத்தெரிவையரைக் கட்டியணைக்கவிச்சித்தல் சங்கற்பம். அந்நாரியரைத்தழுவ நிச்சயித்தல் அத்யவசாயம். அக்காரிகைகளைப் புணர்தல் கிரியா நிர்விருத்தி. இவ்வெட்டினையும் ஆய்ந்தோர் அஷ்டாங்க மைதுனமென்பர். இவ்வெட்டுவித மைதுனங்கள் நீங்கி நிற்றல் எதுவோ அது பிரஹ்மசர்யமாம் (மாணித்தன்மையாம்). அந்தப் பிரஹ்மசர்யத்தை வீட்டுவேட்கையாளர் தேடவேண்டியது இன்றியமையாமையேயாம். எற்றுக்கெனின், யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யஞ்சரந்தி ஸத்யேந லப்யஸ்தபஸா ஹ்யேஷ ஆத்மா । ஸம்யக்ஜ்ஞாநேந ப்ரஹ்மசர்யேண நித்யம் அந்த: ஶரீரே ஜ்யோதிர்மயோ ஹி ஶுப்ரோ யம் பஶ்யந்தி யதய: க்ஷீணதோஷா: (எதைவிரும்பினராய்ப் பிரஹ்மசர்யத்தை அநுஷ்டிக்கின்றனரோ—சரீரத்துள் சோதிமயனும், சுத்தனுமிருக்கும் ஆன்மா எவனே, அந்த நித்தியனைக் கட்டுரையாலும், விரதத்தாலும், பிரம்மசர்யத்தாலும் குற்றம் நீங்கிய யதிகள் செவ்வைஞானத்தாற் பார்க்கின்றனர்) என்னுந்தொடக்கத்து மறைகள் பிரஹ்

மசர்யத்தையே ஆத்ம ஞானத்திற்கும் மோட்சத்திற்கும் சாதனமாகக் கூறியுள்ளன.

சற்சங்கத்தாலும், விஷயப்பற்றுள்ள ஆடவர் மகளிர்களின் முன்னிலையை விட்டொழிவதாலும், உடம்பின் குற்றங்களைக்காணுவதாலும் அந்தப்பிரஹ்மசர்யம் சித்திக்கின்றது. சற்சங்கம்பிரஹ்மசர்யத்திற்குச்சாதனமென்றுஆசார்யரவர்களும் கா தே காந்தா தநகதசிந்தா வாதுல கிம் தவ நாஸ்தி நியந்தா। த்ரிஜகதி ஸஜ்ஜநஸங்கதிரேகா பவதி பவார்ணவதரணே நௌகா (உனக்கு மங்கை தனம் இவைகளைப்பற்றிய கவலையென்? துருத்தியே! மூவுலகங்களிலும் நின்னை ஆளுபவன் இலனென்ன? சான்றோர்களின் இணக்கம் ஒன்றே பிறப்பென்னுங்கடலைக்கடப்பதற்குத்தோணியாகும்) என்னும் வசனத்தாற் கூறியிருக்கின்றனர். ஆகலின் சற்சங்கம் பிரஹ்மசர்யத்திற்குச் சாதனமாதல் கூடும். உடம்பின் குற்றங்களைக் காணுதல் பிரஹ்லாதரு மியம்பியிருக்கின்றனர். சுலோகம். த்வங்மாம்ஸருதிரஸ்நாயுமஜ்ஜாஸ்தி ஸம்ஹதௌ। தேஹே சேத் ப்ரீதிமாந் மூடோ பவிதா நரகேऽபி ஸ: (இ-ள்) தசை, குருதி, சீழ், மலம், மூத்திரம், நரம்பு, மூளை, என்பு இன்னோரன்ன மலினப்பொருள்களின் கூட்டமாய இவ்வுடம்பிற் பிரீதியையுடைய மூடன் நரகத்திலும் பிரீதையை யுடையவனுகலாம். மேலும், இப்பொருளைப் பகவானும் திருவாய் மலர்ந்திருக்கின்றனர். சுலோகம். ஸ்வதேஹாசுசிகந்தேந ந விரஜ்யேத ய: புமாந்। வைராக்யகாரணம் தஸ்ய கிமந்யதுபதிஶ்யதே (இ-ள்) எவன் தன்னுடம்பின் துர்கந்தத்தால் அருவருப்புக் கொள்வதில்லையோ, அவனுக்கு வெறுப்பு வருவதற்கு வேறுகாரணம் உபதேசிக்கவேண்டுமோ ? இப்படித்தன் உடம்பிலும் ஸ்திரீயின் உடம்பிலும் தீமையையெண்ணும் புருஷனுக்கு அவ்வுடம்பின்கண் ஆசையுண்டாகாது. ஆகலின் குற்றங்காணுதல் பிரஹ்மசர்யத்திற்குக் காரணமாதல் கூடும். இவ்வாறே விஷயலோலர்களான ஆடவர் மகளிர்களின் முன்னிலையை விட்டொழிவதும் பிரஹ்மசர்யத்திற்குச் சாதனமாம். இதுபற்றியே அறநூல் முமூட்சு ஜனங்களைக் குறித்து மடந்தையருடன் பேசுதல் முதலியவற்றையும் விலக்கியுளது. சுலோகம். ந ஸம்பாஷேத் ஸ்த்ரியம் காஞ்சித் பூர்வத்ருஷ்டாம் ச ந ஸ்மரேத்। கதாம் ச வர்ஜயேத் தாஸாம் ந பஶ்யேல்லிகிதாமபி (இ-ள்) முமூட்சுக்கள் எந்த ஸ்திரீயோடும் பேசக்கூடாது. முன்பார்த்த ஸ்திரீயைச் சித்தத்தில் நினைப்பதுங் கூடாது. ஸ்திரீகளின் கதைகளையும் விடவேண்டியது. ஓவியத்தில் வரைந்துள்ள ஸ்திரீயையும் பார்த்தல் கூடாது.

இனி நியமவர்ணனம். சௌசம், சந்தோஷம், தவம், ஸ்வாத்யாயம், ஈசுவரப் பிரணிதானம் என்னும் வேறுபாட்டால் நியமம் ஐவகைப்படும். அவற்றுள் அகம், புறம் எனச் சௌசம் (தூய்மை) இருவிதம். நட்பு தயை முதலியவற்றால் மனத்தைக் காமம் வெகுளி முதலியவைகளிலதாகச் செய்தல் அகச்சௌசம். நீர் மண் முதலியன கொண்டு உடற்சுத்தி செய்தல் புறச்சௌசம். கிட்டியமட்டிற் றிருப்தி யடைவது சந்தோஷம். இதமாயும் மிதமாயும் பவித்

திரமாயுமுள்ள அந்நத்தை யுண்ணுதல் தவம். பிரணவ முதலிய புநிதமான மந்திரங்களை ஜபித்தல் ஸ்வாத்யாயம். அநுஷ்டித்து வருகின்ற நித்திய முதலிய கர்மங்களைப் பரமேசுவரனிடத்துச் சமர்ப்பித்தல் ஈசுவரப் பிரணிதானம்.

இனி ஆசனவர்ணனம். ஆசனத்தின் சொரூபம், சாதனம், பயன் இவைகளை முன் நவின்ரும். அவற்றை இங்கணுமறிக. சாரீரகம்,பாகியம் என்று அவ்வாசனம் இருவிதம். பத்மம் (இருதொடை மேலும் இரண்டுள்ளங் காலையு மாறித் தோன்றவைத்தல்), ஸ்வஸ்திகம் (தொடைக்கும் முழங்காற்கும் நடுவே யிரண்டுள்ளங் காலையுஞ் செலுத்தி யிறுமாந்து கிடத்தல்), பத்ரம் (பீஜத்தின் கீழ் ஜீவனியிடத்திருகாற் பரட்டையும் வைத்து அவ்விருபதத்தையும் இருகையா லிறுகப்பிடித் தசையாதிருத்தல்) என்பன முதலான ஆசனங்கள் சாரீரக ஆசனமெனப்படும். இவ்வாசனங்களின் சொரூபத்தை ஆத்மபுராணம் எட்டாம் அத்தியாயத்திற் கூறி யிருத்தலின் ஆண்டறிக. எல்லா உபத்ரவங்களும் நீங்கித் தனியிடத்திலுள்ள தருப்பை, விலங்கின்தோல், வஸ்திரமுதலிய ஆசனங்கள் பாகிய ஆசன மெனப்படும்.

பூரகம், ரேசகம், கும்பகம் என்னும் வேறுபாட்டால் பிராணுயாமம் இருவகைத்து. இவற்றை முற்கூறினும். அவற்றை இங்கேயு மறிந்துகொள்க. நேத்திர முதலிய விந்திரியங்களை உருவ முதலிய விஷயங்களினின்றுந் திருப்புதல் பிரத்யாஹாரம். இந்த இயம முதலியவைந்து பகிரங்க சாதனங்களுங் கைகூடிய பிறகு அதிகாரி அச்சம்ப்ரஜ்ஞாத சமாதியின் தாரணை தியானம் சமாதி என்னும் மூன்று அந்தரங்க சாதனங்களில் முயலுதல்வேண்டும். இங்குப்பகிரங்க சாதனங்களைச் சம்பாதிக்கும் மூலமாய் அந்தரங்க சாதனங்களைச் சம்பாதிக்கவேண்டுமென்று சாஸ்திரத்திற் கூறிய முறைமை சித்தஜய மில்லாதவர்களின் பொருட்டாம். ஆனல், முற்பிறப்பின் நல்வினைப் பக்குவத்தின் வயத்தால் மனந்தூய்மையானவழி முதலிலேயே அத்தாரணை முதலிய அந்தரங்க சாதனங்கள் எவனுக்குக் கிடைத்திருக்கின்றனவோ, அவன் அந்த இயமமுதலியவைந்து பகிரங்க சாதனங்களில் மீட்டும் முயலவேண்டியதில்லை.

இனி தாரணை வர்ணனம். மூலாதாரம், மணிபூரகம், சுவாதிஷ்டானம், அநாகதம், ஆஜ்ஞை,விசுத்தம் என்னும் ஆறுசக்ரங்களுள் ஏதாவதொரு சக்ரத்தில் சித்தத்தைப் பதியவைத்தல் அல்லது பிரத்யகாத்மாவின்கண் சிந்தை வைத்தல் அதாவது பிரத்யகாத்மாவின் ஸ்மரணம் தாரணை எனப்படும். இவ்வறுவகைச் சக்ரங்களின் சொரூபம் ஆத்ம புராணம் பதினோராம் அத்தியாயத்தில் விரிவாய்க்கூறியுள்ளோம். ஆண்டறிந்துகொள்க.

இனி தியானவர்ணனம், சைதன்யவடிவ லட்சிய வஸ்துவின்கண் சஜாதீய விருத்திகளை வெள்ளமாகச்செய்தல் தியானமாம். அச்சஜாதீய விருத்திகளின் வெள்ளமும் இருவகைத்து. ஒன்று விஜாதீய விருத்திகளினல் விச்சின்னமாவது (வேருக்கப்பட்டது). மற்றொன்று விஜாதீய விருத்திகளினல விச்சின்னமாகாதது. முதல் வெள்ளம் தியானமும், இரண்டாவது வெள்ளம் சமாதியுமாம். அச்சமாதி இருவகைத்தாம். ஒன்று கர்த்தா கர்மம் கரணம் என்

னுந்திரிபுடியின் அநுசந்தான பூர்வகமாம். மற்றொன்று அத்திரிபுடியின் அநுசந்தான மின்றியதாம். முந்திய சமாதி அங்கமும், பிந்திய சமாதி அங்கிவடிவ சமாதியுமாம். இங்கு அங்கமெனல் சாதனமும், அங்கியெனல் பயனுமாம்.

## சமாதியின் விக்னங்களைக்கூறல்.

சம்ப்ரஜ்ஞாத சமாதியினுற்பத்தியில் லயம், விட்சேபம், கஷாயம், ரசாஸ்வாதம் எனநான்கு விக்னங்கள் உள. அவ்விக்னங்களிருக்கின் சம்ப்ரஜ்ஞாத சமாதி நிகழாது. நித்திரையை லயமெனப்படும். விஷயங்களை மீட்டும் மீட்டும் நினைத்தல் விட்சேபமெனப்படும். ஆசை வெறுப்பு முதலியவற்றாற் சித்தத்தின் ஸ்தப்தீ வடிவம் கஷாயமெனப்படும். சமாதியின் துவக்க காலத்தில் விகற்பத்துடன் கூடியுண்டாகும் ஆநந்தத்தின் ஆஸ்வாதனம் (அநுபவம்) ரஸாஸ்வாதமாம்.

## சமாதி விக்னங்களைப் போக்கும் உபாயங்கூறல்,

ஸ்ரீகௌடபாதாசார்யரருளிய வசனங்களோடு அவ்விலய முதலிய விக்னங்களைத் தவிர்க்கும் உபாயம் நவில்வாம். சுலோகம். லயெஸம்போயயெச்சித்தம் விக்ஷிப்தம் ஸமயெத்புநஃ । ஸகஷாயம் விஜாநீயாத் ஸமப்ராப்தம் நசாலயெத்॥ நாஸ்வாதயெ த்ஸுகம் தத்ர நிஃஸங்கஃ ப்ரஜ்ஞயாபவெத் (இ-ள்) யோகம் பயிலுங் காலத்தே புருஷனது சித்தம் எப்பொழுது நித்திரையாகிய லயத்திற்கு நேராகின்றதோ, அப்பொழுது அப்பழக்கமுடைய புருஷன் பிராணாயாமம் பண்ணியும்;நித்திரைச் சேடத்தை யொழித்தும்,சொற்ப உணவு முதலிய வற்றைச்செய்தும் அச்சித்தத்தை நித்திரையினின்றும் நனவாக்கவேண்டும். விட்சேபமடைந்த சித்தத்தை விஷயங்களிற்றீமை காண்டல், பிரஹ்ம சிந்தனை, சற்சங்கம், ஈசுவரவழிபாடு முதலிய உபாயங்களால் ஒருவழிப் படுத்தவேண்டும். அஃதாவது அவ்விஷய சிந்தனை வடிவான விட்சேபத்தினின்றும் நீங்கி நிற்கவேண்டும் என்பதாம்.

பிரஹ்ம சிந்தனையாற் சித்தம் விட்சேபமின்றி நிற்குமென ஸ்ரீபகவானும் அருளியிருக்கின்றனர். சுலோகம். விஷயாந்த்யாயதஸ்சித்தம் விஷயெஷுவிஷஜ்ஜதெ மாமநுஸ்மரதஸ்சித்தம் மய்யெவ ப்ரவிலீயதெ (இ-ள்) விஷயங்களைச் சிந்திப்பவனது சித்தம் அவ்விஷயங்களினிடத்தே சம்பந்தமுடையதாகும். ஆனால், பரமேசுவரனாகிய வென்னை ஸ்மரிக்கும் புருஷனது சித்தம் பரமேசுவரனாகிய வென்னிடத்தேயே லயமாகின்றது. மேலும், சற்சங்கம் விட்சேப நிவிர்த்திக்குக் காரணமெனல் ஸ்ரீவசிஷ்ட பகவானு முரைத்திருக்கின்றனர். சுலோகம். ஸந்தஃஸதைவ மந்தவ்யாஃ யத்யப்யுபதிஸந்திந யாஹிஸ்வைர கதாஸ்தேஷாமுபதெஸா பவந்திதாஃ (இ-ள்) மோட்சம் விரும்புவோன் மஹாத்மாக்களின் சமீபம் எப்பொழுதும் போதல் வேண்டும். அம்மஹாத்மாக்கள் அவனுக்கு நேராக உபதேசிக்கா விட்டாலும் அவர்களின் இயல்பான கதைகள் எவையோ, அவைகளே அவனுக்கு உபதேச வடிவங்களாகின்றன. மற்றும் ஆசார்யரவர்களும் ஸங்கஃஸத்ஸுவிதீயதாம் । பகவதொ பக்திர்த்ருடாதீயதாம் (சத்துக்களுடன் சங்கஞ் செய்யவேண்டும். பகவானது பக்தி திடமாய்ச் செய்யவேண்

டும்)என்னுந் தொடக்கத்து மொழிகளாற் சற்சங்கஞ் செய்யவேண்டியதென்று கூறியுள்ளார்.

இவ்வகையாக விட்சேபத்தைத் தவிர்த்துப் பிறகு கஷாயத்தோடுங்கூடிய சித்தத்தை அறிந்து அக்கஷாயத்தையுந் தவிர்க்கவேண்டும். ஆனற் சமமெனப்படும் பிரஹ்மத்தை யடைந்த சித்தத்தை அந்தப் பிரஹ்மத்தினின்றும் சலிக்கச் செய்யலாகாது. சமாதியின் தொடக்கக் காலத்தில் வரும் சவிகற்ப ஆனந்தத்தை ஆஸ்வாதனஞ் செய்வது கூடாது. ஆனல் உதாசின பிரஹ்ம பிரஜ்ஞையோடு கூட வேண்டும். இவ்வாறன உபாயங்களினல் எப்பொழுது அவ்விலய முதலிய விக்னங்கள் நீங்குகின்றனவோ, அப்பொழுது அச்சம்ப்ரஜ்ஞாத சமாதி உண்டாகின்றது.

இங்ஙனமான சம்ப்ரஜ்ஞாத சமாதியின் பழக்கத்தால் எப்பொழுது மனது பிரத்தியகாத்மாவின்கண் ஒருவழிப்படுகின்றதோ, அப்பொழுது அம்மனத்தின்கண்ணே ருதம்பரையென்னுமொரு பிரஜ்ஞை உற்பத்தியாகின்றது. சென்றதும், வருவதும், தூரத்ததும், மறைந்ததும், நுண்ணியதுமான வெல்லாப் பொருள்களையும் விஷயப்படுத்தும் யோகியின் பிரத்தியட்சம் எதுவோ அது ருதம்பரப்பிரஜ்ஞையாம். அத்தகைய ருதம்பரப்பிரஜ்ஞையில் நின்றயோகிக்கு நிர்விகற்ப சமாதிவருவதில்லை. ஆகவின் அந்த ருதம்பரப் பிரஜ்ஞையையுந்தள்ளி அச்சம்ப்ரஜ்ஞாத சமாதியைப் பழகும் யோகிக்கு ஆத்ம சாட்சாத்காரம் (தன்னைத்தான் காண்டல்) பிராப்தமாகிப் பரவைராக்ய முண்டாகின்றது. அப்பரவைராக்யத்தின் சொரூபம் முன் இரண்டாவது பரிச்சேதத்திற் கூறினும். அந்தப் பரவைராக்யத்திற்குப் பிறகும் புருஷனுக்குப் பழகத்தக்கதுண்டு. இங்கு 'எவ்வுபாயத்தாலாவது நான் சர்வ விருத்திகளின் நிரோதவடிவான அசம்ப்ரஜ்ஞாத சமாதியின்கண் நிலைக்கவேண்டும்' என்னும் உற்சாகமாகிய பிரயத்னம் பழக்கமாம். இதே பழக்கத்தின் இலக்கணத்தைப் பதஞ்சலிபகவான் யோக சூத்திரங்களுள் தத்ர ஸ்திதௌ யத்நோऽப்யாஸः (அங்கு நின்று செய்யும் முயற்சியானது பழக்கமாம்) என்னுஞ் சூத்திரத்தினற் கூறியிருக்கின்றனர். அவ்வுற்சாகமாகிய பிரயத்னமும் நிரோதமாகச் சர்வ விருத்திகளும் நிரோதமாகின்றன. அச்சர்வ விருத்திகளின் நிரோதமே அசம்ப்ரஜ்ஞாத சமாதியெனப்படும்.

சங்கை:—அவ்வுற்சாகமாகிய பிரயத்னநிரோதத்தின்கண் வேறோர் சாதன முண்டா? இல்லையா? முதற்பட்சமங்கீகரிக்கின் அநவஸ்தைக்குற்றம்வரும். ஏனெனின், உற்சாகமாகிய பிரயத்னத்தினது நிரோதத்தின் பொருட்டு அங்கீகரிக்கப்பட்ட இரண்டாவது சாதனமிருக்க அவ்வசம்ப்ரஜ்ஞாத சமாதியுண்டாகாது. ஆகலின் அச்சாதன நிரோதத்தின் பொருட்டு வேறு மூன்றாவது சாதனத்தை யங்கீகரிக்கவேண்டும். அம்மூன்றாவது சாதன நிரோதத்தின் பொருட்டு வேறு நான்காவது சாதனத்தை யங்கீகரிக்கவேண்டும். இவ்வாறு பின் பின் சாதனங்களின் தாரையை யொப்புவதில் அநவஸ்த்தைக் குற்றம் பிராப்தமாகும். அந்தப் பிரயத்னத்தின் நிரோதத்திற்கு ஓர் சாதனமுமில்லை என்னும் இரண்டா

வது பட்சத்தை யங்கீகரிக்கின், சாதனமன்றிப் பிரயத்னத்தின் நிரோதமே சம்பவியாது. அந்தப் பிரயத்னமுந்தானே தனக்கு நிரோதகமாகின்றதெனின், அதுவும் பொருந்தாது. ஏனெனின், தன்னால் தனக்கு நிரோதம் முற்றும் விருத்தம். உலகத்திலும் அவ்வாறு காணப்படுவதில்லை.

சமாதானம்:—அவ்வுற்சாகமாகிய பிரயத்னம் சர்வ விருத்திகளை நிரோதஞ் செய்வதாய்த் தனது நிரோதத்தையும் தானே செய்கின்றது. எங்ஙனம் தேத்தாங்கொட்டைப் பொடிகள் ஜலத்தின் அழுக்கைப் போக்கித்தாமும்தாமாகவே நீங்கி விடுகின்றனவோ; அத்தேத்தாங் கொட்டைப் பொடிகளை நீக்கும் பொருட்டு வேறோர் சாதனம் வேண்டியதில்லையோ, அங்ஙனமே அவ்வுற்சாகமாகிய பிரயத்னத்தை நீக்கும் பொருட்டு வேறோர் சாதனம் வேண்டியதில்லை. ஆகவே அநவஸ்தைக் குற்றமும், காண்டனுக்கு விரோதம் வருமென்னுங் குற்றமும் பிராப்தமாகா.

அல்லது;கூறிய இவ்வசம்ப்ரஜ்ஞாத சமாதியின்சொரூபம் பிறசாஸ்திரத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது. சுலோகம். உநஷொவ்ருத்திஸஂஹ்ருத்ய ப்ரஹ்மாகாரதயாஸ்திதி:। ஸஂப்ரஜ்ஞாதநாமாஸௌ ஸமாதிரபிதீயதே॥ ப்ரஶாஶ்வத்ருத்திகம் சித்தம் பரமாநந்ததீபகம்। அஸஂப்ரஜ்ஞாதநாமாஸௌ ஸமாதிர்யோகிநாம் ப்ரிய: (இ-ள்) எல்லா விருத்திகளும் சூன்யமான மனத்தின் பிரஹ்மாகார ஸ்திதியாதோ, அதனையே யோகசாஸ்திர முணர்ந்தவர்கள் அசம்ப்ரஜ்ஞாத சமாதியென்று கூறுவர். அல்லது, மேற்கூறிய பழக்கத்தால் எல்லா விருத்திகளும் நிவிர்த்தியாகிப் பரமானந்தத்தைப் பிரகாசிப்பிக்கும் சித்தம் யாதோ, அதுவே யோகிகட்குப் பிரியமான அசம்ப்ரஜ்ஞாத சமாதியாம்.

இனி அவ்வசம்ப்ரஜ்ஞாத சமாதியின் வேறு சாதனங் கூறுதும். அவ்வசம்ப்ரஜ்ஞாத சமாதி மேற்கூறியபடி கேவலம் பரவைராக்யத்தானே அடையப்படுவதன்றி, ஈசுவரப்பிரணிதானத்தானும் அடையப்படுகின்றது. யோகசூத்திரம். ஈஶ்வரப்ரணிதாநாத்வா (இ - ள்) அவ்வசம்ப்ரஜ்ஞாத சமாதி மேற்கூறிய முறையானும் ஈசுவரப்பிரணிதானத்தானும் பிராப்தமாகின்றது.

## ஈசுவர சொரூபங்கூறல்.

இனி ஈசுவரனது பிரணிதானத்தின் சொரூபத்தைக் கூறும்பொருட்டு முதலில் ஈசுவரனது சொரூபங் கூறுதும். யோகசூத்திரம். க்லேஶகர்மவிபாகாஶயைரபராம்ருஷ்ட: புருஷவிஶேஷ ஈஶ்வர: (இ - ள்) கிலேசம், கர்மம், விபாகம், ஆசயம் என்னும் நான்கோடும் சம்பந்தமில்லாத புருஷ விசேஷம் ஈசுவரனும். முதற்கிலேசம் அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபிநிவேசம் என்னும் வேறுபாட்டால் ஐவகைப்படும். அவ்வைவகைக் கிலேசங்களையும் முதற்பரிச்சேதத்திற் கூறிவந்துள்ளேம். கர்மமோ சுக்லம், க்ருஷ்ணம், மிசிரம் என்னும் பேதத்தால் மூவகைத்து. சாஸ்த்ர விகிதமான புண்ணிய கர்மம் சுக்ல கர்மமாம். சாஸ்த்ர விலக்கான பாபகர்மம் க்ருஷ்ண கர்ம

மாம். புண்ணிய பாபமிரண்டும் மிசிர கர்மமாம். இம் மூவகைக்கர்மங்களோ யோகியல்லாதவர்களுக் குண்டாகின்றன. யோகிகளுக்கு அசுக்ல க்ருஷ்ண மென்னும் நான்காவது கர்மமுண்டாகின்றது.

கூறிய விவ்வர்த்தத்தைப் பதஞ்சலி பகவான். 𑌕𑌰𑍍𑌮𑌾𑌶𑍁𑌕𑍍𑌲𑌾𑌕𑍃𑌷𑍍𑌣𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌮𑌿𑌤𑌰𑍇𑌷𑌾𑌮𑍍 (அசுக்ல க்ருஷ்ண கர்மம் யோகிகளுக்காம். மற்றவர்களுக்குக்கர்மம் மூவகையாம்) என்னும் சூத்திரத்தினாற் கூறியிருக்கின்றார். கர்மத்தின்பயன் விபாகமெனப்படும். அவ்விபாகம் ஜாதி, ஆயுள், போகம் என்னும் வேற்றுமையால் மூவகைத்து. அக்கர்ம பலத்தின் போகத்தாற்றோன்றிய சம்ஸ்காரமாகிய வாசனைகளை ஆசயமெனப்படும். அக்கிலேசம், கர்மம், விபாகம், ஆசயம் என்னும் நான்கினோடு சம்பந்தமுடையவர்கள் ஜீவர்கள். ஈசுவரனோ அந்நான்கின் சம்பந்த மில்லாதவனும் முற்றறிவனும் எல்லாம் வல்லவனுமாவன்.

இனி ஈசுவரனது பிரணிதானத்தின் சொரூபங்கூறுதும். யோக சூத்திரம். 𑌤𑌸𑍍𑌯 𑌵𑌾𑌚𑌕𑌃 𑌪𑍍𑌰𑌣𑌵𑌃 । 𑌤𑌜𑍍𑌜𑌪𑌸𑍍𑌤𑌦𑌰𑍍𑌥𑌭𑌾𑌵𑌨𑌂 (இ-ள்) மேற்கூறிய ஈசுவரனது வாசகம் பிரணவ சப்தமாம். அவ்வோங்காரமாகிய பிரணவத்தின் ஜபமும், மாண்டூக்ய உபநிஷத்தின் பஞ்சீகரண வார்த்திகத்திற் கூறியபடி அப்பிரணவ அர்த்தத்தின் சிந்தனமும் ஈசுவரப் பிரணிதானமெனப்படும். அப்பிரணவ அர்த்தத்தினது சிந்தனவகை முன் முதற் பரிச்சேதத்தில் நிரூபிக்கப்பட்டது.

இனி வேறுவகையாகத் திருஷ்டாந்தத்தோடு அப்பிரணவ சப்தத்தின் அர்த்தத்தைக் கூறுதும். 𑌯𑍋𑌽𑌹𑌂 𑌸𑍋𑌽𑌸𑍌 𑌯𑍋𑌽𑌸𑍌 𑌸𑍋𑌽𑌹𑌂 (நானே அவன் அவனே இவன் இவனே நான்) என்னுஞ் சுருதியில் ஸ: (அவன் என்னுஞ் சப்தத்தால் பரமாத்மாவும், அஹம் (நான்) என்னுஞ் சப்தத்தால் பிரத்ய காத்மாவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. ஸ: அஹம் என்னும் இரண்டு சப்தங்களுக்கும் ஒன்றுக்கொன்று சாமானாதிகரண்ய முண்டு. ஆகலின் அவ்விரண்டு சப்தங்கள் பிரஹ்மாத்மாக்களின் ஏகத்தன்மையையே கூறுகின்றன. ஆகவே 'ஸோஹம்' என்னும் வாக்கியத்திற்கு எங்ஙனம் 'பரமாத்மா நான்' என்னும் ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்தன்மை அர்த்தமாமோ; அங்ஙனமே அவ்வோங்காரமாகிய பிரணவத்திற்கும் ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்தன்மையே அர்த்தமாம். அது காட்டுதும்:—ஸோஹம் என்னும் வாக்கியத்தில் இலக்கணரீதியாக ஸகார ஹகாரமென்னு மிரண்டு எழுத்துக்கள் கெட,ஓ அம் என்னும் வாக்கியம் எஞ்சிநிற்கின்றது. அதன்கண்ணும் இலக்கண முறையாகப் பூர்வ ரூபமென்னும் புணர்ச்சிப்படி அகரங்கெட ஓம் என்னும் சப்தம் பெறப்படுகின்றது இவ்வார்த்தை மற்ற சாஸ்திரத்திலுங் கூறப்பட்டுளது. சுலோகம். 𑌸𑌕𑌾𑌰𑌂 𑌚 𑌹𑌕𑌾𑌰𑌂 𑌚 𑌲𑍋𑌪𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌯𑍇𑌤𑍍 । 𑌸𑌨𑍍𑌧𑌿𑌂 𑌚 𑌪𑍂𑌰𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌖𑍍𑌯𑌂 𑌤𑌤𑍋𑌽𑌸𑍌 𑌪𑍍𑌰𑌣𑌵𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍 (இ-ள்) ஸோஹம் என்னும் வாக்கியத்திலுள்ள ஸகாரமும் ஹகாரமும்கெட அதன் பிறகு பூர்வரூபமென்னும் புணர்ச்சியைச்செய்ய அந்த ஸோஹம் சப்தத்தால் ஓம் என்னும் பிரணவம் சித்தமாகின்றது. ஆகவே ஸோஹம் சப்தத்தைப்போல ஓம் எனும் பிரணவ சப்தத்திற்கும் 'பரமாத்மா நான்' என்

னும் அர்த்தம் சித்திக்கின்றது. இந்தப்பிரகாரம் ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத் தன்மையாகிய பிரணவ அர்த்தத்தின் சிந்தனம் ஈசுவரப் பிரணிதானம் எனப்படும். இவ்வகையாகிய ஈசுவரப் பிரணிதானத்தால் அதிகாரியின் மீது ஈசுவரனது அநுக்கிரகம் உண்டாகின்றது. அவ்வீசுவராநுக் கிரகத்தால் புருஷனுக்கு அசம்ப்ரஜ்ஞாத சமாதியின் பிராப்தி அவசியம் உண்டாகின்றது. இதனால் பர வைராக்கியத்தைப்போல ஈசுவரப் பிரணிதானமும் அசம்ப்ரஜ்ஞாத சமாதிக்குச் சாதனமாயிருக்கின்றது.

அல்லது, அதிகாரி புருஷன் பூமிகைகளைக் கிரமமாக ஜயித்து அச்சமாதியை அப்பியாசித்தல் வேண்டும். பூமிகைகளினது ஜயத்தின் கிரமம் சுருதியிற் கூறப்பட்டுளது. சுருதி. யச்சேத்வாங்மனஸீ ப்ராஜ்ஞஸ்தத்யச்சேஜ்ஞாநஆத்மநி। ஜ்ஞாநமாத்மநிமஹதி நியச்சேத்தத்யச்சேச்சாந்தஆத்மநி (இ-ள்) இலௌகிக வைதிகமாகிய வெல்லாச்சப்தங்களின் உச்சாரணத்திற்கு ஏதுவாகிய வாக்கிந்திரியத்தை அதிகாரி மனதினிடத்து லயஞ்செய்தல் வேண்டும். அஃதாவது வாக்குமுதலிய இந்திரியங்களின் சர்வ வியாபாரங்களையும் பரித்தியாகஞ்செய்து கேவலம் மனோ வியாபாரமாத்திரமாக நிலைக்கவேண்டும். ஆயினும் அதிகாரி சமாதியின் உற்பத்திகாலம் வரையினும் பிரணவ மந்திரத்தின் ஜபத்தைத் தியாகம் செய்யக்கூடாது. ஆனால், அப்பிரணவ ஜபத்திற்கு வேறான வியாபார மின்றியவனாதல் வேண்டும். இந்தப் பிரகாரம் பசு எருமை முதலியவைகளைப்போன்று வாக்கின் நன்றான நிரோதம் முதற்பூமிகை எனப்படும். அம்முதற்பூமிகை ஜயமானபிறகு மனோநிரோதமாகிய இரண்டாவது பூமிகையில் பிரயத்னஞ்செய்தல் வேண்டும். அதாவது சங்கற்பவிகற்ப வடிவான மனத்தை ஞானாத்மாவில் லயஞ்செய்யவேண்டும். 'நான் மனிதன், நான்மறையோன்' என்பன முதலிய விசேஷ அகங்காரத்தினை ஞானாத்மா வெனப்படும். அந்த ஞானாத்மா மாத்திரமாக நிலைக்கவேண்டும் இவ்வாறு சர்வசங்கற்பவிகற்பங்களை விடுவதனால் பாலர் ஊமர்கள் முதலியவர்களைப் போன்றுள்ள நிர்மனஸ்தை இரண்டாவது பூமிகை எனப்படும். அவ்விரண்டாவது பூமிகை ஜயமானபிறகு இவ்வதிகாரி அவ்விசேஷ அகங்காரத்தின் நிரோதமாகியமூன்றாவது பூமிகையிற் பிரயத்னஞ்செய்தல் வேண்டும். அதாவது விசேஷ அகங்காரத்தை மஹத் ஆத்மாவில் லயஞ்செய்யவேண்டும். அதாவது 'நான் மனிதன், நான் பிராஹ்மணன்' என்பன முதலிய விசேஷ அகங்காரத்தை விடுவதனால் அஸ்மிதை மாத்திரம் எஞ்சியிருக்கின்றது. ஆண்டு அஹங்காரத்தின் சூட்சுமாவஸ்தையை அஸ்மிதை எனப்படும். இவ்வஸ்மிதையை மஹதத்வமென்றும், சூட்சும அகங்காரமென்றுங்கூறுவர். இவ்வகையாக ஆலசியர் உதாசீனர்களைப் போல விசேஷ அகங்காரமின்றிய தன்மை எதுவோ அதுமூன்றாவது பூமிகை என்றுசொல்லப்படும். அம்மூன்றாவது பூமிகைஜயமான பின்னர் அதிகாரிஅவ்வஸ்மிதையின் நிரோதமாகிய நான்காவது பூமிகையிற் பிரயத்னஞ்செய்யவேண்டும். அதாவது அஸ்மிதை வடிவான மஹத் ஆத்மாவை ஏகரசசைதன்யமாகிய சாந்த ஆத்மாவில் லயஞ்செய்தல்வேண்டும். அதாவது அவ்வஸ்மிதையை விடுவதனால் கேவலசைதன்ய மாத்திரம் எஞ்சியிருக்கின்றது. வேறுசுருதியில் மஹதத்துவத்தைக் காட்டினும் அவ்வியக்தம் பரமென்றும், அவ்வவ்வியக்தத்தைக் காட்

டிலும் சைதன்ய புருஷன் பரமென்றும் கூறியிருக்கின்றதாகலின், ஈண்டும் மஹதத்துவத்திற்கு அவ்வியக்தத்தினிடத்தே லயங்கூறுதல் உசிதமாயினும் காரணத்தில் நிருத்தமான கார்யம் லயத்தையே அடைகின்றது. ஆகலின் அவ்வியக்தமாகிய காரணத்தில் மஹதத்துவமாகிய கார்யத்தை லயஞ்செய்வதாற் புருஷனுக்கு நித்திரையே பிராப்தமாகின்றது; நிரோதசமாதி பிராப்தமாகின்றதில்லை. இக்காரணம்பற்றி அவ்வியக்தத்தை விட்டு மஹதத்துவம் சைதன்ய ஆத்மாவில் லயமாகின்றதென்று சொல்லப்பட்டது. இந்தப்படி சைதன்ய ஆத்மாவில் அச்சித்தத்தின்நிரோதம் எல்லாவிதத்தாலுமுண்டாகின்றது. அந்த நிரோதமே அசம்பிரஜ்ஞாத சமாதியாகிய நான்காவது பூமிகை என்று சொல்லப்படும். இவ்வண்ணங்கூறிய நான்கு பூமிகைகளில் முன் முன் பூமிகைகளின் ஜயமுண்டான பிறகு பின் பின் பூமிகைகளின் ஜயக்கிரமப்படி எந்தச் சமாதியினது அப்பியாசம் உண்டோ, அதனுனும் அசம்பிரஜ்ஞாத சமாதி பிராப்தியாகின்றது. முற்சொன்ன சமாதியின் அப்பியாசவகைகளில் எந்தவித சமாதி அப்பியாசத்தினாலாவது அந்தக்கரணத்தினது அதிசூட்சுமத் தன்மையைச் சம்பாதித்தல் மனோநாசமென்று சொல்லப்படும். அச்சூட்சும மனதினால் அதிகாரிக்கு முதலில் துவம்பதத்தின் லட்சியார்த்தமாகிய பிரத்தியக் ஆத்மாவின் சாட்சாத்காரம் உண்டாகின்றது. அதன் பின்னர் தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களால் 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்று பிரத்தியக் ஆத்மாவினது பிரஹ்மவடிவத்தன்மையின் சாட்சாத்காரம் உண்டாகின்றது. இந்தப்பிரகாரம் அச்சமாதி அப்பியாசத்திற்கும் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் சாதனத்தன்மை யிருக்கின்றது.

சங்கை:—ஸ்ரீவியாசபகவான் பிரஹ்மசூத்திரங்களில் ஏதேந யோக: ப்ரத்யுக்த: (இதனுனே யோகமானது தள்ளப்பட்டது.) என்னுஞ் சூத்திரத்தினால் சாங்கிய சாஸ்திரத்தைப்போல யோகசாஸ்திரத்தையுங் கண்டனஞ்செய்திருக்கின்றார். முற்சொல்லிய சமாதியின் அப்பியாசம் யோகசாஸ்திரத்திலே சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் அச்சமாதியின் அப்பியாசம் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குச் சாதனமென்றங்கிகரிப்பதில் அவ்வியாச சூத்திரத்திற்கு விரோதமுண்டாகுமே?

சமாதானம்:—சாங்கிய சாஸ்திரத்தினைப்போன்று யோகசாஸ்திரமுடையாரும் அசேதனப் பிரதானத்தினையே மஹதத்துவ முதலிய கிரமமாக ஜகத்திற்குக் காரணமென்று அங்கிகரித்திருக்கின்றனர். அந்தப்பிரதான காரணவாதம் சித்தாந்தத்தில் அங்கிகரிக்கப்படவில்லை. ஆகலின் அந்தப்பிரதான காரணவாதத்தைக் கண்டிக்கும் அபிப்பிராயமாகவே சூத்திரக்காரர் யோகசாத்திரத்தைக் கண்டித்துள்ளார். நிரோத சமாதியாகிய யோகமொன்றையுங் கண்டிக்கும் அபிப்பிராயமாக அந்த யோகசாஸ்திரத்தைக் கண்டித்தார் அல்லர். ஏனெனின், சித்தாந்தத்திலும் சித்த நிரோத மில்லாத விக்ஷிப்த புருஷனுக்குப் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் உற்பத்தி சம்பவிக்கின்றதில்லை. ஆகலின் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் பொருட்டு அச்சித்த நிரோதம் அவசியம் அபேட்சிக்கப்படுகின்றது.

அல்லது, ஸமாயுஹா வாது । ஈவிஸமாயநெவ தூக்ஷாநா ஊநாஹாழு। நிஷிழுாவிதவுஃ । விஜ்ஞாயவஜ்ஞாம் கூவீத । யூாநெநாதநிவஸுஹி। யூா நயொமெநஸம் வஸுநாதநுா தாநாதநா (சமாதி அபாவத்தாலும்—பிரத்தியட்ச அநுமானங்களால் சாதிக்கத்தகுந்தது—நிதித்தியாசனம் பண்ணத்தகுந்தது—அறிந்து ஆன்மஞானியாய்விடு—தியானத்தால் ஆத்மாவினிடம் பார்க்கின்றார்கள்—தியானயோகத்தினால் தன்னிடத்தில் தன்னால் தன்னைப்பார்த்து) என்னுந்தொடக்கத்துச் சூத்திரம், சுருதி, ஸ்மிருதி வசனங்களினாலும் நிரோத வடிவ யோகம் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குச் சாதனமென்று சித்திக்கின்றது, ஆகையால் மஹாவாக்கிய ஜன்னிய பிரஹ்ம சாட்சாத்காரத்தின் உற்பத்தியில் அச்சமாதியின் அப்பியாசம் அவசியம் அபேட்சிக்கப்படுகின்றது.

சங்கை:—சமாதியைப் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குச் சாதனமென அங்கீகரிக்கின், அச்சமாதியின்றியவர்கட்கு அந்தப் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகலாகாது. வாசிஷ்டம் முதலிய நூற்களில் ஜனகர் முதலியோருக்கு அச்சமாதியன்றியிலேயே கேவலம் சித்தகீதையின் சிரவணமாத்திரத்தால் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் உற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. அவை முழுவதும் அசங்கதமாய் விடுமே?.

சமாதானம்:—கேவலம் சமாதியினாலேயே பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகின்றதென்னும் நியமமில்லை. ஆனால், விவேகத்தினாலும் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகின்றது. அந்தக்கரணத்தையும் அந்தக்கரண விருத்திகளையும் பிரகாசஞ்செய்கின்ற துவம்பத லட்சியார்த்தமாகிய பிரத்தியக் சாட்சியாத்மாவை அன்னமயாதி ஐங்கோசங்களினும் வேறு என்று நிச்சயித்தல் விவேகமாம். அவ்விவேகத்தினால் அதிகாரிக்குத் தத்துவமசியாதி மகாவாக்கியங்களினின்றும் 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் பிரஹ்ம சாட்சாத்காரம் அவசியம் உண்டாகின்றது. ஆதலால் அச்சமாதியைப்போல விசாரமாகிய விவேகமும் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்கு ஏதுவாயிருக்கின்றது. இங்கு இதுதாற்பரியமாம். பிரஹ்ம சாட்சாத்காரத்திற்கு அதிகாரிகள் இருதிறத்தோர். ஒருவர் மிக்கவியாகூல சித்தமுடையார். வியாகூலமில்லாத சித்தமுடையார் மற்றொருவர். முதல் அதிகாரிகளுக்கோ அந்நிரோத சமாதியின் அப்பியாசத்தாற்றான் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகின்றது. இரண்டாவது அதிகாரிகளுக்கோ சமாதியின் அப்பியாசமின்றியே கேவலம் விசாரமாத்திரத்தினால் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகின்றது.

இவ்வார்த்தை வேறு நூற்களிலும் கூறப்பட்டுளது. சுலோகம். ஈவுாகூலயியாம் ஜொஹாமெதுணாவுாஷிதாதநாழு। ஸாம்வுநாவிவாரொzயம் ஊவெுா ஙுடிதிவிஜிஃ (இ-ள்) எவர்களது புத்தி வியாகூலமில்லாததாயும், அஜ்ஞான மாத்திரத்தினால் ஆத்மா ஆவிருதமாயுமுள்ளதோ, அவர்களுக்குச் சாங்கியமென்னும் விசாரமே பிரஹ்ம சாட்சாத்காரத்திற்கு முக்கிய சாதனமாயிருக்கின்றது. எக்காரணத்தாலெனின், அச்சாங்கிய மென்னும் விசாரம் அதிகாரிக்குச் சமாதி அப்பியாசத்தின் அபேட்சையினும் சீக்கிரமாகவே

பிரஹ்ம சாட்சாத்காரத்தைப் பிராப்தி செய்கின்றது. இந்தப் பிரகாரம் சமாதிக்கும், விசார வடிவ விவேகத்திற்கும் அதிகாரி பேதப்படி பொருளுண்மையால் விகற்பமாக அவைகட்குப் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் சாதனத்தன்மையுண்டு. ஆதலால் சமாதியன்றியில் கேவலம் விசாரமாத்திரத்தினுல் பிரஹ்ம சாட்சாத்காரப் பிராப்தியைச் சொல்லும் வசனங்களுக்கும், சமாதியினுல் பிரஹ்ம சாட்சாத்காரப் பிராப்தியைச் சொல்லும் வசனங்களுக்கும் ஒன்றுக்கொன்று விரோதம் உண்டாகிறதில்லை. ஆனுல், சொல்லிய அதிகாரிபேதத்தால் அவ்விருவகை வசனங்களும் பொருளுடையவைகளா யிருக்கின்றன.

அல்லது, சொல்லிய இவ்வர்த்தத்தையே வசிஷ்ட பகவானும் சொல்லியிருக்கின்றுர். சுலோகம். 𑌦𑍍𑌵𑍌 𑌕𑍍𑌰𑌮𑍌 𑌚𑌿𑌤𑍍𑌤𑌨𑌾𑌶𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚 𑌰𑌾𑌘𑌵 । 𑌯𑍋𑌗𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌨𑌿𑌰𑍋𑌧𑍋 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌮𑍍𑌯𑌗𑌵𑍇𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 ॥ 𑌅𑌸𑌾𑌧𑍍𑌯𑌃 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌦𑍍𑌯𑍋𑌗𑌃 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍌 𑌦𑍍𑌵𑍌 𑌤𑌤𑍋 𑌦𑍇𑌵𑍋 𑌜𑌗𑌾𑌦 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃

(இ-ள்) இராகவ ! பிரஹ்ம சாட்சாத்காரத்தில் உபயோகியான சித்தத்தினது சூட்சுமத்தன்மையைச் சம்பாதிக்கும் வடிவான சித்த நாசத்திற்கு இரண்டுகாரணங்களுண்டு. ஒன்றுயோக காரணம், மற்றொன்று விவேககாரணம். சித்தத்தினது சர்வவிருத்திகளின் நிரோதம் யோகமெனப்படும். அந்நமய முதலிய பஞ்சகோசங்களினும் பிரத்தியக் ஆத்மாவை வேருகப்பார்த்தல் விவேகமெனப்படும். அவ்விரு உபாயங்களுள் சில அதிகாரிகளுக்கு யோகம் கடினமாகின்றது, விவேகம் எளிதாகின்றது. ஆனுற், சில அதிகாரிகளுக்கு விவேகம் கடினமாகின்றது, யோகம் எளிதாகின்றது. இக்காரணத்தால் கீதையில் ஸ்ரீபகவான் அதிகாரி பேதத்தால் இரண்டுவகை கூறினர். கீதையின் மூன்ருவது அத்தியாயத்தில் 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌪𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 (இந்திரியங்கள் சிறந்தவை என்பர்) என்னும் வசனமுதல் 𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑌂 𑌦𑍁𑌰𑌾𑌸𑌦𑌮𑍍 (வெல்லுதற்கு அரிதானது காமம்) என்னும் வசனம் வரையிலும் ஸ்ரீபகவான் விவேகமாகிய உபாயத்தை அருளியிருக்கின்றுர். அன்றியும் கீதையின் ஆருவது அத்தியாயத்தில் அந்தயோகமாகிய உபாயத்தை அருளியிருக்கின்றுர். கீதையின் ஐந்தாவது அத்தியாயத்தில் 𑌯𑌤𑍍𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 (விசாரத்தால் அடையப்படும் ஸ்தானம் எதுவோ, அது யோகத்தாலும் அடையப்படுகின்றது) என்பது முதலிய வசனங்களினுல் விவேகமாகிய சாங்கிய விசாரத்திற்கும், யோகத்திற்கும் ஒரேபலத்தின் சாதனத்தன்மை அருளியிருக்கின்றுர்.

சங்கை:—அவ்யோகாப்பியாசத்தினுற் சாத்தியமான மனோநாசத்தைப் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்கு ஏதுவென்றெப்பிடின், அம்மனோநாசத்தால் பிரஹ்ம சாட்சாத்காரத்தின் உற்பத்திக்குப்பின்னர் வித்வானுக்குச் சர்வபந்தமும் நிவிர்த்தியாகிக் கிருதகிருத்தியத்தன்மையே உண்டாகும். அவ்வித்வானுக்கு மீண்டும் வாசனுக்ஷய முதலியவைகளை அப்பியாசிப்பதற்கு ஒரு பிரயோசனமுமில்லையே?

சமாதானம்:—எவ்வதிகாரிக்கு யோகாப்பியாச பூர்வகமாகமகாவாக்கியத்தினின்றும் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாயிற்றோ, அந்தத் தத்துவவேத்தா

வானபுருஷனுக்கோ பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குப் பிறகு தத்துவஞான வாசனக்ஷய மனோநாசங்களின் அப்பியாசத்தின் அபேட்சையில்லை. ஆனால், எவ்வதிகாரிக்கு விவேகபூர்வகமாக மகாவாக்கியத்தினின்றும் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாயிற்றோ, அப்புருஷனுக்குப் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குப் பிறகு பிராரப்தபோகத்தினாற் சம்பாதிக்கப்பட்ட கர்த்ருத்வபோக்த்ருத்வ முதலியவான பந்தம் பிரதீதியாகின்றது. அப்பந்தப் பிரதீதியை நிவிர்த்திக்கும் பொருட்டுத் தத்துவஞான வாசனக்ஷய மனோநாசங்களின் அப்பியாசம் அவசியம் அபேட்சிக்கப்படும். அம்மூன்றின் அப்பியாசத்தினாலே புருஷனுக்குச் சீவன் முத்தி சித்திக்கின்றது. ஆகையால் தத்துவஞானம், வாசனக்ஷயம், மனோநாசம் ஆகிய மூன்றும் அச்சீவன் முக்திக்குச் சாதனங்களெனச் சித்திக்கின்றன. இவ்வளவு கூறியதால் சாதனங்களில்லாமையால் ஜீவன் முக்தியில்லையென்று சொன்னவாதியைக் கண்டிக்கப்பட்டதானது.

## ஜீவன் முக்தியின் பயன் வர்ணனம்.

ஜீவன் முக்திக்கு ஞானரட்சை, தவம், விசம்வாதாபாவம், துக்கநிவிர்த்தி, சுகாவிற்பாவம் என்னும் ஐந்தும் பயன்களாம். பிரஹ்ம சாட்சாத்காரமுடைய தத்துவவேத்தாவுக்கு மீண்டும் சம்சய விபர்யயங்களுண்டாகாமை ஞான ரட்சை எனப்படும். அந்த ஞானரட்சை ஜீவன் முக்தியின் அப்பியாசத்தாலே சித்திக்கின்றது. ஆகலின் அந்த ஞானரட்சை ஜீவன் முக்திக்குப் பிரயோசனமெனல் சம்பவிக்கின்றது.

சங்கை:—எவனுக்கு வேதாந்த சாஸ்திரமாகிய பிரமாணத்தினாற் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாயிற்றோ, அவனுக்கு அச்சாட்சாத்காரத்திற்குப் பிறகு சம்சய விபர்யயங்கள் பிராப்தமாகின்றதில்லை. பிராப்தமான வஸ்துவிற்கே நிஷேதமுண்டாகின்றது; பிராப்தமாகாத வஸ்துவிற்கு நிஷேதமுண்டாகின்றதில்லை. ஆகையால் ஞானரட்சை ஜீவன் முக்திக்குப் பிரயோசனமெனல் பொருந்தாது.

சமாதானம்:—சாஸ்திரப் பிரமாணத்தில் வல்லவராகிய முக்கிய அதிகாரிகளுக்குப் பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குப் பிறகு சம்சய விபர்யயங்கள் சம்பவியா; எனினும், மற்றைய அதிகாரிகளுக்கு நிமித்தத்தின் வசத்தால் அச்சம்சய விபர்யயங்கள் சம்பவிக்கின்றன. ஆண்டுப் பிராந்தியுடையவர்களது வசனமே அச்சம்சய விபர்யயங்களில் நிமித்தமாம். அதனைக்காட்டுதும். சில பிராந்தர்களோ இது கூறுகின்றனர்:—எவன் தன்னைப் பிரஹ்மஞானி என்று மதிக்கின்றானோ, அவனிடத்திலும் அஞ்ஞானிகளைப்போல 'நான் மனிதன், நான் பிராம்மணன்' என்னும் வியவகாரமும், ராகத்துவேஷமுதலியவைகளும் காணப்படுகின்றன. ஓர்கால் இவனுக்கு வேதாந்த சிரவணாதிகளினாற் பிரஹ்மத்தின் அபரோட்ச சாட்சாத்காரம் உண்டானாலும் அந்தராகத்துவேஷ முதலியவைகள்போகிறதில்லை. ஆகையால் இப்புருஷனுக்கு அச்சிரவணாதிகளினால் ஆபாதஞானமே யுண்டாகின்றது. இவ்விதமாகப் பிராந்தர்களது வசனங்களைக்

கேட்கிறதினுல் விற்பன்னமில்லாத அதிகாரிக்கு, உண்டான சாட்சாத்காரத்தி லும் சம்சய விபர்யயங்கள் நிகழ்கின்றன.

இன்னும் சில மருளர்கள் கூறுவதாவது:—மரணபரியந்தம் வேதாந்த சிரவணுதிகளினுலும் புருஷனுக்குப் பிரஹ்மத்தின் அபரோட்ச ஞானமுண் டாகின்றதில்லை. ஆனல், அவ்வேதாந்த வாக்கியங்களால் புருஷனுக்குப் பரோ ட்சஞானமே யுண்டாகின்றது. எக்காரணத்தாலெனின், அப்புருஷர்களினிட த்துப் பரோட்ச ஞானத்தின் அடையாளமே காணப்படுகின்றது; அபரோட்ச ஞானத்தின் யாதொரு அடையாளமுங் காணப்படுகிறதில்லை. அல்லது,ஓர்கால் புருஷனுக்கு இக்காலத்திலும் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாவதாயின், அச் சாட்சாத்காரத்தினுல் ஆவரணத்தோடுங்கூடிய அஜ்ஞானம் நிவிர்த்தியாக ஞானவானுக்கு ஈசுவரனைப்போல முற்றறிவுடைமை முதலியவைகள் உண்டா தல்வேண்டும். ஏனெனின், சுகர் ஜனகர் முதலிய பண்டை ஞானிகளினிடத்து ஈசுவரனைப்போல முற்றறிவுடைமையாதிய தர்மங்கள் இருந்தனவாகச் சாஸ் திரங்களால் அறியப்படுகின்றன. 'அம்முற்றறிவுடைமையாதிய தர்மங்கள் தவத்தின் அல்லது யோகத்தின் பயன்களாம்; ஞானத்தின் பயன்களன்று. சுகஜனகாதி ஞானிகள் தவயோகிகளானதால் அவர்களுக்கு முற்றறிவு முத லியவைகள் உண்டாயிருந்தன. இக்காலத்தைய ஞானவான்கள் அத்தவயோக மில்லாதவர்களாதலால் அவர்களிடத்தில் அம்முற்றறிவு முதலியவைகளில்லை' என்றுசிலவர்கூறின்;அக்கூற்றும் பொருந்தாது.ஏனெனின்,அத்தவயோகமுடை யவர்களுக்கே ஆத்மஞானம் உண்டாகின்றது. தவயோகமில்லாதவர்கட்கு அவ் வாத்மஞானமே உண்டாகின்றதில்லை. ஆகையால் இக்காலத்தில் சிரவணுதிகளி னுல் உண்டான ஞானம் ஆபாதவடிவமேயாம். அஜ்ஞானத்தை நிவிர்த்திசெய் வதில் ஆற்றலில்லாத ஞானம் ஆபாதஞான மெனப்படும். இந்தப்படி பிராந்தர் மூர்க்கர்களது வசனங்களைக்கேட்பதால் விற்பன்ன மின்றிய அதிகாரிக்கு, உண் டான சாட்சாத்காரத்திலும் சம்சய விபர்யயங்கள் நிகழ்கின்றன. ஆனல், அதிகாரி எப்போது பிரஹ்ம சாட்சாத்காரத்திற்குப் பிறகு முன்சொன்னபடி ஜீவன் முக்தியை அப்பியாசிக்கின்ருனே, அப்போதே அவ்வதிகாரிக்குப் பிராந் தர்களின் கலப்பே உண்டாகின்றதில்லை யாதலால் அச்சம்சய விபர்யயங்கள் உண்டாகா. இதுவே ஞானரட்சையாம். இதனுல் அந்த ஞானரட்சைக்கு ஜீவன் முக்தியின் பயன் சம்பவிக்கின்றது.

அல்லது, எம்போலிய அகிருதோபாஸ்தி புருஷர்களுக்குப் பிரஹ்ம சாட் சாத்காரத்தின் பின்னர், கூறிய நிமித்தத்தாற் சம்சயாதிகள் உண்டாகுமென் னும் வார்த்தையில் வியப்பொன்று மில்லை. ஆனற் பூர்வ சுகர், இராகவர், நிதாகர், பகீரதர் முதலியோருக்கும் அவ்வபரோட்ச ஞானத்திற்குப் பிறகு சம்சய முதலியன உண்டாயிருந்தன. சுகதேவருக்கு முதலில் தனது விவே கத்தினுலேயே பிரஹ்மசாட்சாத்காரம் உண்டானது. பின்னர் அந்த ஞானத் தில் சம்சயத்தை யடைந்து அச்சுகதேவர் தனது பிதாவாகிய வியாசரது சமீ பத்திற் சென்று வினவினர். அச்சுகதேவருக்கு வியாசபகவான் தத்துவ உப

தேசத்தைச் செய்தார். அப்போதும் அச்சுகதேவருக்குச் சம்சயம் நிவிர்த்தியாகவில்லை. அதன் பிறகு வியாசபகவான் சுகதேவரை ஜனகராஜாவினது சமீபத்தில் அனுப்பினர். ஜனகரது உபதேசத்தால் சுகதேவர் சம்சயம் நீங்கி, நிர்விகற்ப சமாதியைப் பெற்று முக்தியை யடைந்தார். இக்கதை வாசிட்டராமாயணத்திற் பிரசித்தம். இவ்வாறே நிதாகர்முதலியோர்களின் கதைகளும் புராணுதிகளிற் பிரசித்தமாயிருக்கின்றன.

சங்கை:—ஞானவானுக்குச் சம்சய விபர்யயங்களுளவாயின் ஆகுக; அதனுல் அவனுக்கு ஆனி என்ன?

சமாதானம்:—அஜ்ஞானம் எப்படி மோட்சத்திற்குப் பிரதிபந்தகமோ, அப்படியே சம்சய விபர்யயங்களும் மோட்சத்திற்குப் பிரதிபந்தகங்களே யாகின்றன. இவ்வார்த்தை ஸ்ரீபகவானும் கீதையில் அஜ்ஞஶ்சாஶ்ரத்ததாநஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி (அறிவில்லாதவனும் சிரத்தையில்லாதவனும் சம்சயமுடையோனும் நசிக்கின்ருன்) என்னும் வசனத்தால் அருளியிருக்கின்ருர். ஆகையால் வித்வான்கள் ஜீவன் முக்தியின் அப்பியாசத்தினுல் அச்சம்சய விபர்யயங்களின் நிவிர்த்தியை அவசியஞ் செய்யவேண்டும்.

சங்கை:—எவ்வதிகாரிக்குச் சம்சயவிபரீத பாவனைகளில்லாமல் ஆத்மாவின் திட அபரோட்ச ஞானம் உண்டானதோ, ஆனல், வியவகார மிகுதியால் முற்சொன்ன ஜீவன் முக்தியின் அப்பியாசம் உண்டாகவில்லையோ, அவ்வதிகாரிக்கு மோட்சம் உண்டாகின்றதா? இல்லையா? அவனுக்கு மோட்சம் உண்டாகும் என்னும் முதற்பட்சம் அங்கிகரிக்கின், ஜீவன் முக்தியின் அப்பியாசம் வியர்த்தமாகும். ஏனெனின், மோட்சத்தைவிட அதிகமான பதார்த்தம் யாதுமில்லை. அந்த மோட்சமோ ஆத்மஞானத்தினுலேயே பிராப்தமாகின்றது. ஆகையால் ஜீவன் முக்தியின் அப்பியாசம் வியர்த்தமேயாம். திட அபரோட்ச ஞானமுடையவனுக்கு மோட்ச முண்டாகவில்லை என்னும் இரண்டாவது பட்சத்தை அங்கிகரிக்கின், ஆத்மஞானத்தால் மோட்சத்தின் பிராப்தியைக் கூறுவனவாகிய ஜ்ஞாநாதேவ து கைவல்யம் (ஞானத்தானேயே மோட்சம்) என்னுந் தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதியாகிய சாஸ்திரங்களுக்கு விரோதமுண்டாகும்.

சமாதானம்:—திட அபரோட்ச ஞானிக்கு மோட்சப்பிராப்தி அவசியம் உண்டாகின்றது, என்ருலும், ஜீவன் முக்தியின் அப்பியாசமன்றியில் திருஷ்ட சுகத்தின் பிராப்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் அத்திருஷ்ட சுகத்தையடையும்பொருட்டு ஞானவானுக்கும் ஜீவன்முக்தியின் அப்பியாசம் சம்பவிக்கின்றது. அதாவது திருஷ்ட சுகமே அச்சீவன் முக்தியின் அப்பியாசத்திற்குப் பயனும். ஜீவன் முக்தர்களுக்கும் பூமிகையின் தாரதம்மியத்தினுல் திருஷ்ட சுகத்தின் தாரதம்மியமே உண்டாகின்றது. சுருதி. ஆத்மக்ரீட ஆத்மரதி: க்ரியாவாநேஷ ப்ரஹ்மவிதாம்வரிஷ்ட: (இ-ள்.) ஆத்மாவில் அபரோட்சாநுபவமாகிய கிரீடையையுடையவன் ஆத்மகிரீடன். அதாவது அஹம்பிரஹ்மாஸ்மி என்னும் அபரோ

ட்ச ஞானமுடைய வித்வான் ஆத்மகிரீடனும். இப்படிப்பட்ட ஆத்ம கிரீட வித்வானைச் சாஸ்திரத்தில் பிரஹ்மவித் என்னும் பெயராற் கூறப்பட்டிருக்கின்றது. ஆத்மாவிலுள்ள விஜாதீய விருத்திகளின் திரஸ்கார பூர்வகமான சாட்சாத்கார வடிவ ரதியையுடையவன் எவனோ, அவன் ஆத்மரதினெனப் படுகின்றான். அதாவது ஆத்மாவின் ஆனந்தத்தை நிரந்தரம் அபரோட்சமாய் அநுபவிப்பவனுக்கு ஆத்மரதி என்று பெயர். இப்படிப்பட்ட ஆத்மரதி வித்வானைச் சாஸ்திரத்தில் பிரஹ்மவித்வரன் என்னும் பெயராற் சொல்லப்பட்டிருக்கின்றது. பிரஹ்மத் தியானத்தைக் கிரியை எனப்படும். அந்தப் பிரஹ்மத்தியானம் எவனுக்குப் பிராப்தமாயிற்றோ, அவனைக் கிரியாவானெனப்படும். அதாவது பிரஹ்மாத்ம ஏகத்துவத்தில் சமாதியையுடைய புருஷனுக்குக் கிரியாவான் என்று பெயர். இந்தக் கிரியாவானாகிய வித்வானைச் சாஸ்திரத்தில் பிரஹ்ம வித்வரீயான் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தப் பிரஹ்ம வித்வரீயான் தானாகவே சமாதியினின்றும் வெளிப்படுகிறதில்லை; ஆனால் மற்றையோரால் வெளிப்படுகின்றான். எந்த வித்வான் தன்னாலாவது பிறராலாவது எழுதலையடைகின்றதில்லையோ, அந்த வித்வான் பிரஹ்ம வித்வரிஷ்டன் என்று சொல்லப்படுகின்றான்.

ஆண்டுப் பிரஹ்மவித், பிரஹ்மவித்வரன், பிரஹ்மவித்வரீயான், பிரஹ்ம வித்வரிஷ்டன் என்று சுருதி கூறிய இந்நான்கு வித்வான்களைப் பற்றி வசிஷ்டபகவான் ஞானத்தின் ஏழு பூமிகைகளில் நான்காவது பூமிகைமுதல் கிரமமாகக் கூறியிருக்கின்றார். அவ்வேழு பூமிகைகள் இவையாம். சுலோகம். ஜ்ஞாநபூமி: ஶுபேச்சாக்யா ப்ரதமா ஸமுதாஹ்ருதா। விசாரணா த்விதீயா ஸ்யாத் த்ருதீயா தநுமாநஸா॥ ஸத்வாபத்திஶ்சதுர்தீ ஸ்யாத் ததோऽஸம்ஸக்திநாமிகா। பதார்தாபாவநீ ஷஷ்டீ ஸப்தமீ துர்யகா ஸ்ம்ருதா॥ (இ-ள்) சுபேச்சை, விசாரணை, தநுமானசி, சத்வாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவினி, துரியம் இவை ஏழுஞான பூமிகைகளாம். அவ்வேழு பூமிகைகளுள் முதற் சுபேச்சையோ சிரவண வடிவமாம். இரண்டாவது விசாரணை மனன வடிவமாம். மூன்றாவது தநுமானசி நிதித்தியாசன வடிவமாம். சிரவண மனன நிதித்தியாசனங்களின் சொரூபம் முன் இரண்டாவது பரிச்சேதத்திற் சொல்லப்பட்டன. ஆகையால் அம்மூன்று பூமிகைகளும் சாதனவடிவங்களாம். சத்வாபத்தியெனப் பெயரிய நான்காவது பூமிகையில் புருஷனுக்குப் பிரஹ்மசாட்சாத்காரம் உண்டாகின்றது. இக்காரணத்தினாலேயே அந்நான்காவது பூமிகையிலுள்ள புருஷனைப் பிரஹ்மவித் என்பர். ஐந்தாவது முதலிய பூமிகைகளிலுள்ள ஞானவான்களுக்கும் சித்தத்தினது விசிராந்தியின் தாரதம்மியத்தினால் திருஷ்ட சுகமும் தாரதம்மியமாகவே யிருக்கின்றது. ஆகையால் ஐந்தாவது பூமிகையுடையவனைப் பிரஹ்மவித்வரன் என்பர். ஆறாவது பூமிகையுடையவனைப் பிரஹ்மவித்வரீயான் என்பர். ஏழாவது பூமிகையுடையவனைப் பிரஹ்மவித்வரிஷ்டன் என்பர். பிரஹ்மவித்வரன், பிரஹ்மவித்வரீயான், பிரஹ்மவித்வரிஷ்டன் ஆகிய விம்மூவரும் ஜீவன் முக்தர்கள் என்று சொல்லப்படுகின்றார்கள்.

ஹ-ஷயஸ்வாஞெவிஸ்வஊயாநிவ்ருத்தி:॥ஜ்ஞாநெநதுதஜ்ஞாநம்யெஷாம் நாஸிதமாத்மந:॥ (மறுபடியும் முடிவில் அஜ்ஞானமனைத்தின் நிவிர்த்திஉண்டு—ஞானத்தினல் அவ்வஜ்ஞானமானது எவர்களுக்குநசித்ததோ) என்பது முதலிய சுருதி ஸ்மிருதி வசனங்கள் அஹம் பிரஹ்மாஸ்மியாகிய பிரஹ்மஞானத்தினுல் அஜ்ஞானத்தின் நிவிர்த்தியைச் சொல்லியிருக்கின்றன. மேலும் ப்ரஹ்மவெதப்ரஹ்மைவஹவதி। ப்ரஹ்மவிதாப்நொதிவரம்। ஜ்ஞாநீத்வாத்மைவமெமதம் (பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமமே யாகின்றுன்—பிரஹ்மவித் உயர்வை யடைகின்றுன்—ஞானி என் வடிவமே என்பது என் கருத்து) என்னுந்தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்கள் பிரஹ்மஞானத்தால் பிரஹ்மவடிவத்தின் பிராப்தியைச் சொல்லி யிருக்கின்றன. அஜ்ஞானத்தின் நிவிர்த்தி பூர்வகமான பிரஹ்மவடிவத்தின் பிராப்திக்கு மோட்சமென்று பெயர். அம்மோட்சம் பிரஹ்மவித், பிரஹ்மவித்வரன், பிரஹ்மவித்வரீயான், பிரஹ்மவித்வரிஷ்டன் இந்நால்வர்களுக்கும் சமானமேயாம்; அம்மோட்சத்தில் சிறிது மாத்திரமும் விலட்சணத்தன்மையில்லை. ஆனுல், அத்திருஷ்டசுகம் தாரதம்மியமா யிருக்கின்றது. இவ்வார்த்தை பிறநூற்களிலும் கூறப்பட்டுளது. சுலோகம். தாரதம்யெநஸவெஷாம்வதுணாம்ஸுவமுத்தம்। துருயாவதுணாம் முக்தி: ஸ்யாதுல்யஸ்ஸவ்யம்விஶிஷ்யதெ (இ-ள்) பிரஹ்மவித் முதலிய நால்வர்களுக்குத் தாரதம்மியமான சுகமிருக்கின்றது. முக்தியோ நால்வர்களுக்கும் சமானம். அம்முக்தியில் சிறிதளவும் விசேஷத்தன்மை யுண்டாகின்றதில்லை. ஆனுல், திருஷ்ட சுகத்திற்றுன் விசேஷத்தன்மை யிருக்கின்றது.

## ஜீவன்முக்திக்கு இரண்டாவது பிரயோசனமாகிய தவத்தின் நிருபணம்.

சித்த ஏகாக்கிரத்திற்குத் தவமென்று பெயர். இத்தவத்தின் சொரூபம் ஸ்மிருதியினும் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். மநஸஶ்சேந்த்ரியாணாம்ச ஹ்யைகாக்ர்யம்பரமம்தப:। ஸஜ்யாயஸ்ஸவதர்மெப்ய: ஸபர்ம:பர உச்யதெ (இ-ள்) மனதினுடையவும், கண்முதலிய இந்திரியங்களினுடையவும் ஏகாக்கிரத்தன்மையே பரமதவமாம். யோகத்தை யறிந்தவர்களும் அச்சித்த ஏகாக்கிரத்தன்மையாகிய தர்மத்தையே அக்கினிஹோத்ர முதலிய சர்வ தர்மங்களுக்கும் மேம்பட்டதாகக் கூறி யிருக்கின்றனர். இந்த ஏகாக்கிரதையாகிய யோகத்தைக் கீதையில் ஸ்ரீபகவான் தபஸ்விப்யோऽதிகோயோகீ ஜ்ஞாநிப்யோऽபிமதோऽதிக:। கர்மிப்யஶ்சாதிகோயோகீ தஸ்மாத்யோகீபவார்ஜுந (அர்ச்சுன! தத்துவவேத்தாவான யோகி தவசிகளை விடவும், பரோட்ச ஞானிகளை விடவும், கர்மயோகிகளை விடவும் அதிகமென்பது எனக்குச் சம்மதம். அதுபற்றி நீ அத்தகையயோகியாகுதி) என்னும் வசனத்தால் எல்லாத் தர்மங்களினும் அதிகமாக அருளியிருக்கின்றனர்.

சங்கை:—பிராரப்த கர்ம போகத்தினுல் விட்சிப்த சித்தத்தையுடைய ஞானவானுக்கு அச்சித்த ஏகாக்கிரத்தன்மையாகிய தவம் எப்படியுண்டாகும்?

**சமாதானம்:**—நான்காவது பூமிகையையுடைய ஞானவானுக்கும் பிரபஞ்சத்தினது மித்தியாத்தன்மை நிச்சயத்தினுலும், சைதன்ய ஆத்மாவின் சத்தியத்தன்மை நிச்சயத்தினுலும், அச்சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை யிருக்கின்றதெனினும், அந்த ஞானவானுக்குப் பிராரப்த கர்மத்தின் போககாலத்தில் பாதிதானு விருத்தியினுல் (பொய்யெனத் துணிந்த பின்னருந் தோற்றுதல், கானற்புனல் போலும்) நாமரூபவடிவப் பிரபஞ்சத்தின் பிரதீதியிருக்கின்றது. ஆகையால் அந்த ஞானவானுக்கு இடையீடின்றிய சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை சம்பவிக்கிறதில்லை. ஆனுல் ஜீவன் முக்தஞானவானுக்கோ யோகப்பழக்கத்தால் மனது நஷ்டமாய் விட்டது. ஆகையால் அச்சீவன் முக்தனுக்கு எல்லா விருத்திகளு முண்டாகாமையால் அந்த இடையீடின்றிய சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை சம்பவிக்கின்றது. அத்தகைய சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையான தவமே அச்சீவன் முக்திக்குப் பிரயோசனமாம்.

**சங்கை:**—அச்சீவன் முக்தர்களது தவம் எதனிடத்து உபயோகியாயிருக்கின்றது?

**சமாதானம்:**—அச்சீவன் முக்தர்களது தவம் உலக சங்கிரகத்தின் பொருட்டாம். தான் சதாசாரப் பிரவிருத்தனுகி யாவரையும் அச்சதாசாரப் பிரவிருத்தர்களாகச் செய்தல் உலக சங்கிரகம் என்று சொல்லப்படும். வித்வானது தவமுதலியவைகள் அவ்வுலக சங்கிரகத்தின் பொருட்டேயாகின்றன. இவ்வார்த்தை கீதையில் ஸ்ரீபகவானும் லொகஸங்ஹஹமெவாவிஸம்வஶ்யநு கூதுஂமஹஂஸி (நீ உலகத்தை நல்வழியில் நடக்கச்செய்தலை நன்கு ஆலோசித்தாகிலும் கர்மயோகத்தைச் செய்யத் தகுந்தவனே ஆகின்ருய்) என்னும் வசனத்தினுல் அருளி யிருக்கின்ருர். அச்சங்கிரகத்தின் அதிகாரிகள் சிஷ்யன், பக்தன், தடஸ்தன் ஆகிய இப்பேதத்தால் மூன்றுவிதமாவர். சாஸ்திரத்திற் சொல்லிய சன்மார்க்கத்தில் நடக்கின்றவன் சிஷ்யனுவன். அச்சிஷ்யனே பிரஹ்மவேத்தாவாகிய குரு உபதேசித்த மார்க்கப்படி வேதாந்த சாஸ்திரத்தின் சிரவணுதிகளினுல் பிரத்தியகபின்ன பிரஹ்மத்தைச் சாட்சாத்கரித்து முக்தியையே அடைகின்ருன். சுருதி. ஆவாயவாநுஂஂஷொவெஷ। தஸ்யதாவ ஷெவிரஂ யாவநுவிமொக்ஷ்ய z யஸஂவஸெ்ஸ்ய (இ-ள்) பிரஹ்மத்தையுணர்ந்த ஆசாரியரது சரணத்தை அடைந்த சிஷ்யனே பிரஹ்மத்தைச் சாட்சாத்கரிக்கின்ருன். ஞானவான் எது பரியந்தம் போகத்தினுற் பிராரப்த கர்மரகிதனுகின்றதில்லையோ அது பரியந்தமே விதேகமோட்சத்தில் விலம்பமுண்டு; அப்பிராரப்தகர்ம நிவிர்த்தியின் பிறகு ஞானவான் விதேகமோட்சத்தை அடைகின்ருன். ஜீவன் முக்தஞானியினது பக்தனும் அந்த ஞானவானது பூசை அர்ச்சனைகளினுலும், அந்ந பான வஸ்திராதி பதார்த்தங்களைத் தருவதினுலும் மனதில் விரும்பிய பதார்த்தங்களை அடைகின்ருன். சுருதி. யஂயஂலொகஂமநஸாஸஂவிஹதி ,விஶுஂஸத்வஃ காமயதெயாஂஶ்சகாமாநு। தஂலொகஂ ஜயதெதாஂஶ்சகாமாநு தஸ்மாதாத்மஜ்ஞஂஹ்யவயெதூதிகாமஃ (இ-ள்) சிரத்தை பக்திபூர்வகமாகச் சுத்த அந்தக்கரணத்தோடு ஞானவானைப் பூசிக்கும் பக்தர்கள்

எவ்வெவ்வுலகங்களை அடையவும் எவ்வெப் பதார்த்தங்களைப் பெறவும் இச்சிக்கின்றார்களோ, அவ்வவ் வுலகங்களையும் அவ்வப் பதார்த்தங்களையும் அடைகின்றார்கள். ஆகையால் சம்பத்தை இச்சிப்பவர்கள்சிரத்தைபக்திகளோடு பிரஹ்மவேத்தாவிற்கே பூஜை முதலியன செய்யவேண்டும். இவ்வார்த்தை ஸ்மிருதியிலும் சொல்லப் பட்டிருக்கின்றது. சுலோகம். யஸ்யகொவ்ஹ விஜ்ஞம் க்ஷே ஜமதவபு யதெஸவிஜ மஹாஹ ஹவிஷெஷயம் யஜ்ஜவிவஹாகிம் வந (இ-ள்) எவனுடைய வீட்டில் பிரஹ்மவேத்தா ஒருவரானுலும் எப்போது போஜனஞ்செய்கின்றனரோ, அப்போதே சர்வஜகத்தும் திருப்தியாகின்றது. அஃதாவது சர்வஜகத்தைத் திருப்திசெய்வதால் எந்தப்புண்ணியம் உண்டாகுமோ, அந்தப்புண்ணியம் ஒரு பிரஹ்ம வேத்தாவுக்குப் போஜனஞ் செய்விப்பதால் உண்டாகின்றது. ஆகையால் புருஷனிடத்தில் ஏதாவது அந்நவஸ்திர முதலிய பிரிய வஸ்துக்கள் இருந்தால் அவ்வஸ்துக்கள் பிரஹ்மவேத்தாவுக்குக் கொடுக்கத் தக்கனவாம். இவ்வார்த்தை வேறு ஸ்மிருதியிலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். யதலும்லஹதெஉதுஃ கொடிவ்ஹாஹணஹொஜநெஃ தத்லம்ஸவோவொதி ஜாநிநம்யஹு ஹொஜயெசு ॥ ஜாநிஹெஜீயதெயவ தகொடிமாணிதம் ஹவெசு (இ-ள்) கோடி பிராஹ்மணர்களுக்குப்போஜனஞ் செய்விப்பதனுல் எந்தப்பயனை ஜீவன் அடைகின்றானே, அந்தப்பயனை இப்புருஷன் ஒரு ஞானவானுக்குப் போஜனஞ் செய்விப்பதால் அடைகின்றான். ஞானவான் பொருட்டுக்கொடுக்கப்பட்ட வஸ்து கோடி பங்கு அதிகமாகின்றது. இது முதலிய அநேக சுருதி ஸ்மிருதி வசனங்கள் ஞானவானது சேவையினுல் மனவாசைப்பட்ட பதார்த்தங்களின் பிராப்தியைக் கூறியிருக்கின்றன.

தடஸ்த புருஷர்கள் இருவிதம். ஒருவன் சத்மார்க்கத்தில் நடப்பவன், மற்றொருவன் அசத்மார்க்கத்தில் நடப்பவன். சத்மார்க்கத்திலுள்ள தடஸ்தனே, ஜீவன் முக்தன் சதாசாரத்திற் பிரவிருத்தித்தலைப் பார்த்துத் தானும் அச்சதாசாரத்திற் பிரவிருத்திக்கின்றான். இவ்வார்த்தை கீதையில் ஸ்ரீபகவானும் யஜ்ஜாவாதி ஶ்ரெஷ்ஹதெ வெதரொஜநஃ । ஸயதுமாணம்கூாதெலொக ஹதநவத்தெ (மேலானவன் எதெதைச் செய்கின்றானே, அததையே மற்றை ஜனங்கள் செய்கின்றார்கள். அவன் எதனை ப்ரமாணமாகக் கொள்கின்றானே அதனை உலகம் அநுசரிக்கின்றது) என்னும் சுலோகத்தால் அருளியிருக்கின்றார். இரண்டாவது அசத்மார்க்கத்திலுள்ள தடஸ்தனே ஜீவன் முக்தனது விழிபடச் சர்வபாபங்களினின்றும் விடுபடுகின்றான். ஸ்மிருதி. யஹ்ஜா ஹவவயஞாவஜிவஹதெவவதுதெ। தஜ ஷிமொவாாஃ ஸவெடுஹவஜெ ஸவபுகிவிஷெஃ (இ-ள்) அஹம் பிரஹ்மாஸ்மியாகிய அபரோட்ச அநுபவ பரியந்தம்எவனுடைய புத்தி பிரத்தியக் தத்துவத்திற் பிரவிருத்தியையுடையதோ, அந்த ஞானவானது திருஷ்டிக்கு விஷயமாகும் புருஷர்களெல்லாம் சர்வபாபங்களினின்றும் விடுபடுகின்றார்கள். ஜீவன் முக்தனை எந்தத் துஷ்டர்கள் துவேஷிக்கின்றாரோ, நிந்திக்கின்றாரோ அவர்கள் அந்த ஞானவானது

பாபத்தைக் கிரகிக்கின்றார்கள். சுருதி. தஸ்ய புத்ரா தாயமுபயந்தி ஸுஹ்ருத: ஸாதுக்ருத்யாம் த்விஷந்த: பாபக்ருத்யாம் (இ-ள்.) ஞானவானது தனமுதலிய பதார்த்தங்களைப் புத்திரர்கள் கொண்டுபோகின்றார்கள். புண்ணிய கர்மத்தைச் சேவைசெய்யும் நல்ல இருதயமுடையவர்கள் கொண்டுபோகின்றார்கள். பாபகர்மத்தைத் துவேஷிக்கும் நிந்தகர்கள் கொண்டுபோகின்றார்கள். இவ்வகையாக அச்சீவன்முக்தனது தவம் உலக சங்கிரகத்தின்(உலகத்தை நல்லவழியில் நடக்கச்செய்தலின்) பொருட்டாம். அத்தவம் ஜீவன் முக்தியின் இரண்டாவது பயனாயிருக்கின்றது.

## ஜீவன் முக்தியின் விசம்வாதாபாவமாகிய மூன்றாவது பிரயோசனத்தின் நிருபணம்.

ஜீவன் முக்தன் விழித்த காலத்தில் துஷ்டர்கள் செய்கின்ற நிந்தையைக் கேட்டாலும், பாகண்டிகள் (வீண்வார்த்தை பேசுகிறவர்), குரூரர், நிஷ்டூரர் முதலானவர்களைப் பார்த்தாலும் ஜீவன்முக்தனுக்கு ராகத்துவேஷ முதலிய விருத்திகள் உண்டாகிறதில்லை. ஆகையால் ஜீவன் முக்தனுக்கு நிந்தகர் துஷ்டர்களோடு கலகமாகிய விசம்வாதம் உண்டாகின்றதில்லை. எவன் ஜீவன்முக்தியின் பழக்கமில்லாதவனோ, அவனுக்குத் துஷ்டஜனங்களுடன் எப்பொழுதும் கலகமான விசம்வாதம் உண்டாய்க்கொண்டே இருக்கும். ஆகவே விசம்வாதாபாவத்தில் ஜீவன் முக்தியின் பிரயோசனத்தன்மை சம்பவிக்கின்றது. இவ்வார்த்தை முது ஆசாரியர்களும் கூறியிருக்கின்றனர். சுலோகம். ஜ்ஞாத்வா ஸதா தத்த்வநிஷ்டாந் ஸந்தோஷமேவயம் அநுமோதாமஹே வாந்யாந் ந த்வேஷ்யாமஹே (இ-ள்) எப்பொழுதும் தத்துவ நிஷ்டையில் நிலைத்தவர்களைப் பார்த்து நாம் ஆனந்தமடைகின்றோம். தத்துவ நிஷ்டையில்லாதவர்களைப் பார்த்து நாம் சோர்வடைகின்றோம். ஆனால், பிராந்தர்களோடு நாம்விவாதஞ்செய்கின்றதில்லை. இந்தவிசம்வாதாபாவம் ஜீவன் முக்திக்கு மூன்றாவது பிரயோசனமாம்.

## ஜீவன் முக்தியின் துக்க நிவிர்த்தியாகிய நான்காவது பிரயோசனத்தின் வர்ணனம்.

அத்துக்க நிவிர்த்தி இரண்டுவிதம். ஒன்று இவ்வுலக துக்கநிவிர்த்தி, மற்றொன்று பரலோக துக்கநிவிர்த்தி. ஆத்மஞானத்தினால் பிராந்தி நிவிர்த்தியாவதினாலும், யோகப்பழக்கத்தினால் சர்வ விருத்திகளின் நிரோதமுண்டாவதினாலும் ஜீவன் முக்தனது சித்தம் கேவலம் ஆத்மாகாரமே ஆகின்றது;வேற்றாகாரம் ஆகின்றதில்லை.ஆகையால் பிராரப்தபோகம் இருந்தக்காலும் ஜீவன் முக்தனுக்குத் துக்கம் பிரதீதியாகின்றதில்லை. ஆனால், சர்வதுக்கங்களின் நிவிர்த்தியுண்டாகின்றது. இதனையே இவ்வுலகத்தைய துக்கநிவிர்த்தி எனப்படும். இவ்வுலக 'துக்கநிவிர்த்தியினையே ஸூதம் வெளிஜாநீயாத்யயஸ்ரீதி வசிஷ்ட: । நித்யாபரோக்ஷரூபாய ஸர்வஸாக்ஷிணே ஸ்வாத்மனே (நித்திய அபரோட்ச வடிவமாயும், சர்வசாட்சி வடிவமாயுமுள்ள பரமாத்மாவை யான் என எப்பொ

முது ஒருவன் பிரத்தியக் ஆத்மாவைச் சாட்சாத்கரிக்கின்ருனே, அப்பொழுதே அந்த ஞானி எதை இச்சித்தவனய் எதன் பொருட்டுச் சரீரத்தைப் பின்பற்றித் தாபமடைவன்; ஆனல் தாபமடையான்) என்னும் சுருதியில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆத்ம ஞானத்தினல் அஜ்ஞானம் நீங்கிவிடவே சஞ்சித கர்மங்களெல்லாம் நாசமாய் விடுகின்றன. ஆத்ம ஞானத்தின் பிரபாவத்தினல் ஞானிக்கு ஆகாமி கர்மங்களின் ஸ்பரிசமே உண்டாகாது. அவ்வஜ்ஞான சகித சஞ்சித கர்மமே பரலோக துக்கத்திற்கு ஏதுவாயிருக்கின்றது. அதின் நாசத்தால் ஜீவன் முக்தனுக்குப் பரலோகத்தின் சர்வதுக்கங்கள் நிவிர்த்தியாகின்றன. சுருதி. ஏதம் ஹவாவ ந தபதி கிமஹம் ஸாது நாகரவம் கிமஹம் பாபமகரவம் (இ-ள்) 'நான் புண்ணிய கர்மத்தை எதற்காகச் செய்யவில்லை; நான் பாபகர்மத்தை எதற்காகச் செய்தேன்' என்னும் வியாகூலமாகிய அக்நி எப்படி அஜ்ஞானியைத் தபிக்கச்செய்கின்றதோ, அப்படி ஜீவன்முக்தனைவியாகூலமாகிய அவ்வக்நி தபிக்கச்செய்கின்றதில்லை. நான்காவது பூமிகையையுடைய ஞானிக்கும் அத்துக்க நிவிர்த்தி உண்டாகின்றது; ஆயினும், ஞானிக்குப் பிராரப்த போககாலத்தில் பாதிதாநு விருத்தியினல் 'நான் சுகி, நான் துக்கி' என்பனமுதலிய அநுபவங்கள் உண்டாகின்றன. ஆகையால் ஞானிக்கு அத்துக்க நிவிர்த்தி சுரட்சிதமன்று; ஆனல் ஜீவன் முக்தனுக்கு யோகப்பழக்கத்தினல் சர்வவிருத்திகளின் நிரோதம் உண்டாகின்றதாகையால் அவனுக்கு அத்துக்க நிவிர்த்தி சுரட்சிதமாம். அதாவது ஜீவன் முக்தனுக்கு எக்காலத்திலும் துக்கம் தோற்றுவதில்லை. ஆகவே அத்துக்க நிவிர்த்தியில் ஜீவன் முக்தியின் பிரயோசனத்தன்மை சம்பவிக்கின்றது. இத்துக்கநிவிர்த்தி ஜீவன் முக்தியின் நான்காவது பிரயோசனமாம்.

## ஜீவன் முக்தியின் சுகாவிற்பாவமாகிய ஐந்தாவது பிரயோசனத்தின் நிருபணம்.

பிரஹ்ம சாட்சாத்காரத்தினலும், யோகப்பழக்கத்தினலும் ஜீவன் முக்தனுக்கு அஜ்ஞானமும், அஜ்ஞானத்தாற் செய்யப்பட்ட ஆவரணமும், வியவகாரமாகிய விட்சேபமும் நிவிர்த்தியாய் விட்டன. அஜ்ஞானத்தாற் செய்யப்பட்ட ஆவரணமும் விட்சேபமுமே பிரஹ்மானந்த அநுபவத்தில் பிரதிபந்தங்களாயிருக்கின்றன. அந்தப் பிரதிபந்தங்கள் நிவிர்த்தியாக ஜீவன் முக்தனுக்கு எந்தப்பரிபூரண பிரஹ்மானந்தத்தின் அநுபவம் நிரந்தரம் உண்டாகின்றதோ, அதனையே சுகாவிற்பாவம் என்று சொல்லப்படும். சுருதி. ஸமாதிநிர்தூதமலஸ்ய சேதஸோ நிவேசிதஸ்யாத்மநி யத்ஸுகம் பவேத் । ந சக்யதே வர்ணயிதும் கிரா ததா ஸ்வயம் ததந்தக்கரணேந க்ருஹ்யதே (இ-ள்) சமாதியினல் இராகத்துவேஷ முதலிய மலங்கள் நீங்கினதும், கேவல ஆத்மாவில் நிலைத்ததுமான சித்தத்திற்கு அச்சமாதி காலத்தில் எச்சொருப சுகம் அடையப்படுகின்றதோ, அச்சுகம் வாக்கினல் சொல்லமுடியாது. ஆனல், அச்சுகம் அவ்வந்தக்கரணத்தால் தானகவே கிரகிக்கப்படுகின்றது. இச்சுகத்தின் ஆவிற்பாவம் ஜீவன் முக்திக்கு ஐந்தாவது பிரயோசனமாம். இவ்

வாறு அச்சீவன் முக்தியில் ஐந்து பிரயோசனங்கள் பெறப்படுவதால், பிரயோசனமில்லாமையால் ஜீவன் முக்தியில்லை எனக்கூறியதுமித்தையேயாம். ஆகவே சொருபலட்சணம், பிரமாணம், சாதனம், அதிகாரி, பயன் ஆகிய இவ்வைந்தைச் சொல்வதோடு இந்நான்காவது பரிச்சேதத்தில் விதேகமுக்தி, ஜீவன் முக்தி ஆகிய இருவகை முக்திகளும் சொல்லப்பட்டன. அதனால் இவ்வர்த்தம் சித்தித்தது:—பிரஹ்ம வேத்தாவாகிய ஜீவன்முக்தன் போகத்தினாற் பிராப்த கர்மம் நாசமான பிறகு, இவ்வர்த்தமான சரீரம் நாசமாக அகண்ட ஏகரச பிரஹ்மானந்த வடிவமாக நிலைக்கின்றான். அந்தப்பிரஹ்ம வேத்தாவாகிய புருஷனுக்குப் புநருத்தானம் (மீட்டும் பிறத்தல்) கிடையாது. சுருதி. ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி அத்ரைவ ஸமவலீயந்தே । ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மாப்யேதி । ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி (இ-ள்.) ஞானவானது பிராணன் எனப்படும் இலிங்க சரீரம் மரண காலத்தில் இச்சரீரத்தினின்றும் வெளிப்படுகிறதில்லை. ஆனால், பிரத்தியக் ஆத்மாவிலேயே இலயத்தை அடைகின்றது. இதுதாற்பரியமாம்:—இச்சரீரம் நாசமான பிறகு எங்ஙனம் அஜ்ஞானியினது இலிங்க சரீரம், கர்மபலபோகத்தின் பொருட்டுப் பரலோகத்திற்குச் செல்லுகின்றதோ, அங்ஙனம் ஞானவானது இலிங்க சரீரம் பரலோகத்திற்குச் செல்லுகின்றதில்லை. ஏனெனின், ஞானவானது பிராரப்த கர்மமோ போகத்தினால் நஷ்டமானது. சஞ்சிதகர்மம் ஞானத்தினால் நஷ்டமாய் விட்டது. ஆகாமி கர்மம் ஞானத்தின் பிரபாவத்தினாற் பற்றுகிறதில்லை. அஜ்ஞானமும் ஆத்ம ஞானத்தால் நாசமாய் விட்டது. அஜ்ஞான சஞ்சித கர்மமுதலியனவே மறு பிறப்பிற்குக் காரணங்களாம். அக்காரணங்கள் நாசமாக ஞானியினுடைய இலிங்க சரீரம் மறுபிறப்பையடையும் பொருட்டு இச்சரீரத்தினின்றும் வெளிப்படுகின்றதின்றி, பிரத்தியக் ஆத்மாவிலேயே இலயத்தை அடைகின்றது. ஞானி ஜீவித அவத்தையிலேயே பிரஹ்ம சாட்சாத்காரத்தினால் அஜ்ஞானம் நிவிர்த்தியாகப் பிரஹ்ம வடிவனாகியும், பிராரப்த கர்ம நிவிர்த்திக்குப் பிறகே பிரஹ்ம வடிவமாக நிலைக்கின்றான். பிரஹ்மத்தை யுணர்ந்தவன் பிரஹ்ம வடிவனே யாகின்றான்.

மேலும், ஆத்மஞானத்திற்கு மோட்சமாகிய பயன் விஷ்ணுபுராணத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. சுலோகம். விபேதஜநகே ஜ்ஞாநே நாசமாத்யந்திகம் கதே। ஆத்மநோ ப்ரஹ்மணோ பேதமஸந்தம் க꞉ கரிஷ்யதி॥ தத்பாவபாவமாபந்நஸ்ததாஸௌ பரமாத்மந꞉ । பவத்யபேதீ பேதஶ்ச தஸ்யாஜ்ஞாநக்ருதோ பவேத்॥ (இ-ள்) ஜீவப் பிரஹ்மங்களின் பேதத்தைத் தோற்றுவிப்பதாகிய அஜ்ஞானம் பிரஹ்ம சாட்சாத்காரத்தால் முற்றும் நாசமாக ஜீவாத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் பொய்ப்பேதத்தை எவர் செய்ய முடியும்; ஒருவருஞ் செய்யார். பிரஹ்ம சாட்சாத்காரத்தினால் பிரஹ்மவடிவத்தை அடைந்த ஜீவாத்மா பிரஹ்மத்தோடு அபின்னமே யாகின்றது. இச்சீவாத்மாவிற்குப் பிரஹ்மத்தோடு எப்பேதப் பிரதீதி யுண்டானதோ, அப்பேதம் அஜ்ஞானத்தாற் செய்யப்பட்டதாம். அவ்வஜ்ஞானம் நாசமாகவே அப்பேதமும் நீங்கி விடுகின்றது. ஆகவே ஞானி அகண்ட ஏகரச பிரஹ்மவடிவமாக நிலைக்கின்றான்.

மேலும்,கூறிய இப்பயனை ஸ்ரீவியாசபகவானும் பிரஹ்மசூத்திரத்திற் சொல்லியிருக்கின்றார். சூத்திரம். ஃஹிநஸுவதஜெூாமஂஶாஹி (இ-ள்) பிரஹ்மவேத்தா புருஷனுக்குப் பிரஹ்மத்தினிடத்து அபேதமே யுண்டாகின்றது. இவ்வர்த்தத்தைச் சுருதி சொல்லுகின்றது. சுருதி. யஃாஹெூவெஷவண தஹிநஃூஶெ ூzநாதெூzமிஶாகெூzநியநெzஹயஂவுதிஷாஂவிநுதெ sயவொzஹயஂமதொஹவதி(இ-ள்)சாதன சதுஷ்டய சம்பன்ன அதிகாரி எக்காலத்தில் ஸ்தூல சூட்சும சரீரங்களினும் விலட்சணமும் நித்திய அபரோட்சமுமான பிரத்தியக் ஆத்மாவில் அபயப் பிரதிஷ்டையை யடைகின்றானோ, அக்காலத்தில் அவ்வதிகாரி அகண்ட ஏகரச பிரஹ்மவடிவத்தை அடைகின்றான். இதனாற் சித்திக்கின்றதாவது:—அஹம்பிரஹ்மாஸ்மி, தத்துவமசி என்பன முதலிய மஹாவாக்கிய ஜன்னிய அபரோட்ச ஞானத்தினால் அஜ்ஞான நிவிர்த்தி பூர்வகமான பிரஹ்ம வடிவமாகிய மோட்சம் அடையப்படுகின்றது. அம்முக்தன் புநராவிருத்தியையடைகிறதில்லை.அதாவது மறுபிறவியை அடைவது கிடையாது. சுருதி. நஸவுநராவதூதெ (இ-ள்) அம்முக்தன் மறுபிறப்பை அடைவதில்லை. இவ்வார்த்தை கீதையில் ஸ்ரீபகவானும் அருளியிருக்கின்றார். சுலோகம். தஃஃயஹஃாதாநஸநிஷாஸதாயணாஃ। மஹஂதுவாநராவூதிஂ ஜூாநநியூதகவூஷாஃ (இ-ள்) பரமாத்மாவினிடத்தே புத்தியும்,மனமும்,நிஷ்டையும் பொருந்தியவரும், அப்பரமாத்மாவே பரமஸ்தானமாக உடையவரும்,ஆத்ம ஞானத்தினால் சர்வபாபரூபமான கல்மஷம் நீங்கின வருமான ஞானிகள் அபுநராவிருத்தியையே அடைகின்றார்கள், அதாவது மறு பிறப்பையடைகின்றதில்லை.

மேலும், கூறிய இப்பொருள் ஸ்ரீவியாசபகவானாலும் பிரஹ்ம சூத்திரத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. சூத்திரம். ஃநாவூதிஃ ஶஜாஃநாவூதிஃஶஜாஃ (இ-ள்) தத்துவவேத்தாக்கட்குச் சுருதி ஸ்மிருதியாகிய சாத்திரங்களும் இவ்வர்த்தத்தையே சொல்லுகின்றனவென்னுங் காரணத்தால் புநர்ஜன்மமரணங்களின் நிவிர்த்தியாகிய அநாவிருத்தியேயுண்டு. இதன் தாற்பரியமாவது:—எவனுக்கு இம்மனித சரீரத்தில் சிரவணாதிகளினாற் பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாயிற்றோ, அவனுக்கோ இம்மனித சரீரத்தில் அந்தப் பிரஹ்மவடிவமாகிய மோட்சம் உண்டாகின்றது. இவ்வர்த்தத்தை யஃாஸவெூவூகாஃமாயெsஸூஹூதிஹிதாஃ। ஃயமெதூzமூதொஹவதூதூஜூஹஸஶுநூதெ (எப்பொழுது மனிதனது மனதின்கண்ணுள்ள காமங்களெல்லாம் தொலைகின்றனவோ, அப்பொழுது அவன் சாதலிலனாகி ஈண்டுப் பிரஹ்மத்தை அடைகின்றான்) என்னுஞ் சுருதி சொல்லியிருக்கின்றது. எந்த நிட்காமர்கள் அகங்கிரக உபாசனையினாற் பிரஹ்மலோகத்திற்குப் போகின்றாரோ, அவ்வுபாசகர்களுக்கும் பிரஹ்மலோகத்திலேயே பிரஹ்ம சாட்சாத்காரம் உண்டாகிப் பிரஹ்மாவுடன் மோட்சமுண்டாகின்றது. இவ்வர்த்தத்தினையும் ஜஹணாஸஹெத ஸவெூஸஂ ஜாவெூதிஸஂவரெ வரஸூதெகுதாதாநஃ ஜவிஶஜிவாஂவஃழ (அவ்வுபாசகர்கள் அனைவரும் பிரஹ்மலோகத்திற்குச் சென்று, ஆண்டுப் பிரஹ்மாவுக்குப் பிரளய முண்டாகும்

போது தத்துவ சாட்சாத்காரமுடையவராய் அந்தப் பிரஹ்மா நாசமடைந்த பிறகு அவருடனே விதேக முக்தியையடைகின்றார்கள்) என்பது முதலிய ஸ்மிருதி வசனங்களும் சொல்லுகின்றன. அன்றியும் எச்சகாமர்கள் பஞ்சாக்கினிவித்தை முதலியவைகளினால் பிரஹ்மலோகத்திற்குச் செல்லுகின்றாரோ, அச்சகாமர்களுக்கு அந்தப் பிரஹ்மலோகத்தில் பிரஹ்ம சாட்சாத்காரமுண்டாகின்றதில்லை. இக்காரணத்தினாலேயே அச்சகாமர்களுக்கு அந்தப் பிரஹ்மலோகத்தினின்றுந் திரும்பி வருதலுண்டாகின்றது. இவ்வர்த்தத்தையே ஈஶ்வராநவஸேவத்யும் ஸேவத்யதே । ஆப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்த்திநோऽர்ஜுந (இம்மனிதர்கள் ஈசுவரோபாசனையின்றி பஞ்சாக்கினிவித்தை, அசுவமேதம், உறுதியான பிரஹ்மசர்யம் முதலிய சாதனங்களால் இக்கற்பத்திற் பிரஹ்மலோகத்திற்குச் சென்று தத்துவஞான மில்லாமையால் மறு கற்பத்திற் றிரும்பி வருகின்றார்கள். அர்ச்சுனா! பிரஹ்மலோகம் முதலாக எல்லா உலகங்களும் மறுபடியும் திரும்பிவருந் தன்மையனவாம்) என்னுந்தொடக்கத்துச் சுருதி ஸ்மிருதி வசனங்கள் கூறுகின்றன. அனைத்தானும் பிரஹ்ம சாட்சாத்காரமுடைய புருஷன் திரும்பிவருதலின்றிய பிரஹ்மப்பேறாகிய மோட்சத்தையே அடைகின்றான்.

இது ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகா சார்ய ஸ்ரீ உத்தவானந்தகிரி
சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யனான சித்கனானந்தகிரி சுவாமி
இயற்றிய பிராகிருத தத்துவாநுசந்தானத்தின்
நான்காவது பரிச்சேதம் முற்றிற்று.

---

**தத்துவாநுசந்தானம் முற்றிற்று.**

---

ஸ்ரீ குருப்யோ நம: ஸ்ரீ சங்கராசார்யேப்யோ நம:
ஸ்ரீ காசீவிசுவேசுவராப்யாம் நம:

---

# இருபதாம் நூற்றாண்டு

# தமிழ்ப் பெயரகராதி.

---

இதன்கண், பழைய அகராதிகளிற் காணப்படும் பதங்களுக்கு மேல் பதினாயிரத்து முன்னூற்று நாற்பத்தொரு புதிய பதங்கள் சேர்க்கப்பட்டிருப்பதோடு பெரும்பாலும் பெருக்கியும் புதுக்கியும் விளக்கியும் இருநூற்றுப் பதினைந்து ராயல் பாரங்கள் கொண்டதும் ஆயிரத்து எழுநூற்று இருபது பக்கங்களடங்கியதுமான புத்தகமாய் உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டு அதி உசிதமான அரைத்தோற் கட்டடத்தில் சிறந்த புத்தகமாய் இயற்றப்பட்டிருப்பதால், இஃது எவ்வாற்றானும் மற்றைய அகராதிகளினும் பன்மடங்கு சிறந்ததென்பது வெளிப்படை. இவ்வரிய அகராதி ஒவ்வொரு கலாசாலைப் புத்தகசாலையிலும் அவசியமிருக்கவேண்டியது. இதை வித்தியா தலைவர், ஆசிரியர், பிரபுக்கள், துரைமக்கள், பாதிரிமார் தமிழ்ப் பாஷாபிமானிகள் ஆகிய எத்திறத்தவரும் நன்கு மதித்துப் பரிபாலித்தல் வேண்டுமென்பதே எம்கோரிக்கை.

இப் புத்தகம் **1**-க்கு, விலை ரூபாய். **6 0 0**

| | ரூபா | அ. |
|---|---|---|
| வேதாந்த மநந சிந்தாமணி | 4 | 0 |
| ஞான ஸாதக ஸஹாயம் | 0 | 12 |
| இராமலிங்கப்பிள்ளை திருஅருட்பா 6-திருமுறை அடங்கியது | 3 | 8 |
| ஞானவாசிட்டம் மூலமும் உரையும் | 3 | 0 |
| மேற்படி வசனம் | 1 | 8 |
| சாதகாலங்காரம் மூலமும் உரையும் | 1 | 8 |
| கணிதமுருக சேகரம் முதல் வால்யம் | 1 | 0 |
| கைவல்லிய நவநீத மூலமும் உரையும் | 1 | 8 |
| தாயுமானவர்பாடல்மூலம் உரையுடன் | 3 | 8 |
| மங்களேஸ்வரியம் | 1 | 8 |
| ஞானபப்பிரகாச தீபிகை | 4 | 0 |
| ஆத்திசூடி பாகிய ஆந்தரார்த்தம் | 0 | 6 |

தபாற் செலவு பிரத்தியேகம்.

எமது விலாசம்.

**டி. கோபால் அண்டு கோ.**

**கோள்டன் பிரஸ், மதருஸ் என். சி.**